ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்





கம்பநாட்டாழ்வார்திருவடிகளேசரணம்.

ஸ்ரீமத்

# கம்பராமாயணம்

ஐந்தாவது

## சுந்தரகாண்டம்

மூலமும் உரையும்

முதலாவது

## கடல்தாவுபடலம்

காப்பு

அலங்கலிற்றோன்றும்பொய்ம்மையரவெனப்பூதமைந்தும்
விலங்கியவிகாரப்பாட்டின்வேறுபாடுற்றவீக்கம்
கலங்குவதெவரைக்கண்டாலவரென்பர்கைவிலேந்தி
இலங்கையிற்பொருதாரன்றேமறைகளுக்கிறுதியாவார்.

(இதனது பதப்பொருள்.) அலங்கலில் — மாலையிலே, தோன்றும்-உண்டாகின்ற, பொய்ம்மை அரவென — பொய்ப்பாம்புபோல, பூதமைந்தும்-

ஐம்பூதங்களும் — விலங்கிய (தந்நிலையினின்றும்) பௌதிகமென்று விலகுதலான, விகாரப்பாட்டின் —*அறுவகை விகாரப்படுநிலையுடைய, வேறுபாடு-(தேவமனுஷ்ய திரியக்ஸ்தாவரமென) வேறுபாட்டை, உற்ற — உறுதலான, வீக்கம் - பிறப்பின் மிகுதி—கலங்குவது-அஞ்சித்தீர்வது, எவரைக்கண்டால்- யாரைக்கண்டால், எனவே (மறைகளுக் கிறுதியாவாரைக்கண்டால் வேறுபாடுற்றவீக்கம் கலங்குமென்றபடி) மறைகளுக்கு - வேதங்களுக்கு, இறுதியாவார் — முடிவுபொருளானவர், கை - இடக்கையிலே, வில்லேந்தி - வில்லைக் கொண்டு, இலங்கையில் - இலங்காபுரியிலே, பொருதாரன்றே — யுத்தஞ் செய்தவரல்லவோ, அவர் — அவரை, என்பர் - வான்மீகிமுதலியோர், எழுவாய் - அவரை, மறைகளுக் கிறுதியாவாரென்று சொல்லுவர் — பயனிலை.

அலங்கலில் – (காற்றுற்பழுதை) அசைதலினாலே சர்ப்பப்பிராந்தியுண்டாமெனவுமாம்—மாலை — பழுதைபோல்வன — பூதங்கள் - ஈஸ்வரச்செய்கையாலே பௌதிக சரீரங்களாய்த் தேவமனுஷ்யவேறுபாடு – சர்ப்பப்பிராந்தி, இந்தப் பிராந்திதெளிவது மறைகளுக் கிறுதியாவாரைச் சாக்ஷாத்கரித்தால் என்றபடி ' உணர்ந்துணர்ந்திழிந்தகன் றுயர்ந்துருவியந்த விந்நிலைமை- உணர்ந்துணர்ந்துணரிலுமிறை நிலை யுணர்வரிதுயிர்காள் — உணர்ந்துணர்ந்துரைத் துரைத் தரியயனரனென்னு மிவரை - உணர்ந்துணர்ந் துரைத்துரைத் திறைஞ்சுமின் மனப்பட்டதொன்றே'' என்கிறபடியே தத்துவதரிசனஞ்செய்தால் வேறுபாடுற்ற பிறப்பறுமென்கிறது.

| | |
|---|---|
| ஊறுபடவொன்றிலேபிறத்தல் | 1 |
| பிறந்துளவாதல் | 2 |
| வேறுபடவளர்தல் | 3 |
| வளர்ந்தயலொன்றாய்விளைந்தமைதல் | 4 |
| மாறுபடத்தேய்தல் | 5 |
| அறமாய்தல் | 6 |

இனிவருஞ் செய்யுள்முதல்-38-செய்யுளும் மயேந்திரகிரியினின்று ஸ்ரீ ஆஞ்சனேயர் கடல்தாண்டுவதையே சொல்லும். 1

நூல்.

ஆண்டகையாண்டவ்வானோர் துறக்கநாடருகர் கண்டான்
ஈண்டிதுதான்கொல்வேலையிலங்கையென்றையமெய்தா
வேண்டருவின்றொடென்னுமெய்ம்மைகண்டுள்ளமீட்டான்
காண்டகுசீதைகையும்பரில்லெனக்கருத்துட்கொண்டான்.

இ-ள். ஆண்டகை - ஆண்மையிற் சிறந்தவரான, ஸ்ரீ (ஆஞ்சனேயர்)- எழு ஆண்டு — அந்த மயேந்திரகிரியினின்று, அவ்வானோர் — அந்தத் தேவர்களுடைய, துறக்கநாடு - சுவர்க்கலோகத்தை, அருகர் — சமீபமாக, கண்டான் — கண்ட அளவிலே, ஈண்டு — இங்கே தோன்றுகின்ற, இதுதான் கொல் — இதுதானோ, வேலை — கடலுக்குள்ளான, இலங்கையென்று — இலங்

மாபுரியென்று, ஐயமெய்தா - சந்தேகங்கொண்டு பின்பு, வேண்டு — (எல்லாரும் அடைய) வேண்டுகிற, அரு — (பார்த்தற்கு) அருமையான, விண்ணூடு - தேவருலகம், என்னும் — என்பதான, மெய்மை - உண்மையை, கண்டு - (தேவர்கள் சஞ்சரிப்பதனாலே) தெரிந்து, உள்ளம் — தமதுமனத்தை, மீட்டான் - (சந்தேகத்தினின்றும்) திருப்பினவராய், காண்தகு — தாம்கண்டு பேசத்தக்க, தோகை — (மயிற்சாயலையுடைய) சீதாபிராட்டி, உம்பர் - அந்தத் தேவருலகிலே, இல்லெனா - இல்லையென்று, கருத்துள் - மனத்திலே, கொண்டான் - தெளிவுகொண்டார் பயனிலை—எ-று.

இப்பாட்டால் தேவருலகளவு உயரமும் அவ்வுலகுமுழுதும் பார்க்கும் பார்வையு முடையாரானார் சிறியதிருவடி என்க—சிறியதிருவடியெனினும் ஆஞ்சனேயரெனினும் அனுமாரெனினும் ஒக்கும். 2

கண்டனனிலங்கைமூதூர்க்கடிபொழிற்கனகநாஞ்சில்
மண்டலமதிலுங்கொற்றவாயிலுமணியிற்செய்த
வெண்டளக்கனகமாடவீதியும்பிறவுமெல்லாம்
அண்டமுந்திசைகளெட்டுநடுங்கத்தோள்கொட்டியார்த்தான்.

இ-ள். இலங்கைமூதூர் - இலங்காபுரியென்னும் பழையவூரைச்சூழ்ந்த, கடிபொழில் - மணத்தைக் கொண்டசோலையையும், கனகநாஞ்சில் - சுவர்ணகசிதமான மதிலுறுப்புகளையும்கொண்ட, மண்டலம் — வட்டமான, மதிலும் — மதிலையும், கொற்றம் - வெற்றியுள்ளதான, வாயிலும் - கோட்டைவாசலையும், மணியிற்செய்த — முத்துச் சுண்ணம்பினாலேபண்ணின, வெண் - வெண்மையான, தளம் - சாந்து பூசினவாக, கனகம் - (மற்றும்) சுவர்ணகசிதமான, மாடம் — உபரிகைகளையுடைய, வீதியும் - தெருக்களையும், பிறவும் - மற்றுமுள்ளவைகளையும், எல்லாம் - முழுதும், கண்டனன் — (இந்த டலையினின்றே,) பார்த்தான் — பார்த்த அளவிலே, அண்டமும் - ஆகாயமும், திசைகளெட்டும் - எட்டுத்திக்கும், நடுங்க - அஞ்ச, தோள்கொட்டி - புஜத்தைத்தட்டி, ஆர்த்தான் — கர்ச்சித்தார்—எ-று. தாம் காணப்போகிறவூரை அந்தமலையினின்றே கண்டதனாலே சந்தோஷித்துக் கர்ச்சித்தாரென்க. 3

வன்றந்தவரிகொணாகம்வயங்கனலுமிழும்வாய
பொன்றந்தமுழைகடோறும்புறத்துராய்ப்புரண்டுபோவ
நின்றந்தமில்லானூன்றநெரிந்துகீழுழுந்திசீலக்
குன்றந்தன்வயிறுகிறிப்பிதுங்கினகுடர்கண்மான.

இ-ள். வன்தந்தம் - வலியபற்களை யுடையனவாய், வரிகொள் — வரிகளைக்கொண்ட, நாகம் - பாம்புகள் எழு, வயங்கு — விளங்குகின்ற, அனல் - ஜ்வாலாக்கினியை, உமிழும் - கக்குகின்ற, வாய - வாய்களையுடையனவாய், பொன் — பொன்மணலை, தந்த - தருதலான, முழைகள்தோறும் - குகைகளெல்லாவற்றிலுமின்று, புறத்து - வெளியிடங்களில், உராய் - உரசிக்கொண்டு, புரண்டு — நெளிந்து, நின்று - அந்தமலைமேனின்று, அந்தமில்லான் - அளவு

படாத சிறியதிருவடி, ஊன்ற — அழுத்த, நெறிந்து — நெரிதலாகி, கீழ்-மண்ணிலே, அழுந்தி — பதிந்து, நீலக்குன்றம் — அந்தக் கறுத்தமலையாகிய, தன் வயிறு — அதனுதரம், கீறி - கிழிந்து, பிதுங்கின — சரிந்துவீழுகிற,குடர்கள் குடல்களை, மான — ஒப்பாக, போவ — செல்லலாயின பயனிலை எ-று. முழைகள் அந்தமலையிலுள்ள பிலத்துவாரங்கள்.

புகலருமுழையுட்டுஞ்சும்பொங்குளைச்சீயம்பொன்றி
உகலருங்குருதிகக்கியுள்ளுறநெரிந்தலூழின்
அகலிரும்பரவைநாணவாற்றுறுகுரலவாகிப்
பகலொலிகரப்பவானைமறைத்தனபறவையெல்லாம்.

இ-ள். புகல் அரும் — நுழைதற்கரிய, முழையுள் — குகைகளிலே, துஞ்சும் — தூங்குகின்ற, பொங்கு — மிகுந்த, உளை-உரோமங்களையுடைய, சீயம் எழுசிங்கங்கள், பொன்றி — இறந்து, உகல் அரும் — சிந்துதலில்லாத குருதி - இரத்தத்தை, கக்கி - சிந்தி, உள்ளுற — அந்தக் குகைகளுக்குள்ளே தானே, நெரிந்த — நசுங்கின பய, ஊழின்-குகைவரிசைகளெல்லாம், அகல் அகன்ற, இரும் — பெரியதான, பரவை - கடலும், நாண — வெட்க, அரற்றுறு - கத்துகின்ற, குரலவாகி — சத்தங்களையுடையனவாய், பகல் ஒளி-சூரியப்பிரகாசம், கரப்ப — மறைய, வானை — ஆகாயத்தையெல்லாம், மறைத்தன — மூடலாயின பய, பறவை — அந்தமலையிலுள்ள, பக்ஷிசாலங்கள் — எழுவாய்— எ.று. 5

மொய்யுறுசெவிகடாவிமுதுகுறமுறைகாறள்ள
மையுறுவிசும்பினூடுநிமிர்ந்தவாலதியமஞ்சின்
மெய்யுறத்தழீஇயமெல்லென்பிடியொடும்வெருவலோடும்
கையுறமரங்கள்சுற்றிப்பிளிறினகளிநல்யானை.

இ-ள். மொய்யுறு (துவாரத்தருகே) உரோமங்கள் மொய்த்திருக்கிற செவி — காதுகளை, கடாவி — வீசி, முதுகுற - முதுகளவுஞ்செல்ல, முறை (வீசுந்தோறும்) கிரமகிரமமாக, கால் - காற்று, தள்ள — நேரேமோதவும் மையுறு — மேகங்களுலாவுவதான, விசும்பினூடு - ஆகாயத்தளவும், நிமிர்ந்த- நீண்டுள்ள, வாலதிய - வால்களையுடையனவாய், மஞ்சின் - கருமேகம் போன்ற, மெய்யுற — தம் உடம்பைப்பொருந்த, தழீஇய-அணைத்துநிற்கிற, மெல்லென் — (தம்மில் அதிக) மிருதுஸ்வபாவ முடையதென்பதான, பிடியொடு — பெண்யானையுடனே, வெருவலோடு — பயத்துடனேகூடி, கையுற- துதிக்கையிலேசேர, மரங்கள் — (பெரிய) மரங்களை, சுற்றி — சூழ்ந்துபற்றிகொண்டு, பிளிறின — குமுறலாயின பய, களி - மதமயக்கமாகிற, நல்தையுடைய, யானை — ஆண்யானைகள், எழு—எ-று. நலம் சுகம்.

பொன்பிறழ்சிமயக்கோடுபொடியுறப்பொறியுஞ்சிந்த
மின்பிறழ்குடுமிக்குன்றம்வெரிநுறவிரியும்வேலை

புன்புறமயிரும்பூவாக்கட்புலம்புறத்துநாறு
வன்பறழ்வாயிற்கவ்விவல்லியமிரிந்தமாதோ.

இ-ள். பொன் — பொன்னொளி, பிறழ் — விளங்குகின்ற, சிமையம்-உச்சியையுடைய, கோடு — அந்தமலைச்சிகரம், பொடியுற — தூளாகவும், பொறியும் — (கற்றூளாகலால்) நெருப்புப்பொறிகளும், சிந்த — பறக்க, மின்-(அதனாலே எங்கும்) மின்னுதல். பிறழ் — தோன்றுதலான, குடுமி — உச்சியையுடைய, குன்றம் — அந்தமலையானது, வெரிநுற — முதுகின்புறமாக, விரியும் வேலை — நகழும்போது, புன் - மிகவு நுண்ணிதான, புறமயிரும் - மேலுரோமங்களும், பூவா - முளையாமல் மயிர்முளையாத, கட்புலம் — கண்ணொளியும். புறத்து — வெளியே, நாறு — தோன்றாத கண்திறவாத, வன்பறழ் — வலிய குட்டிகளை, வாயிற்கவ்வி — வாயிலே கவ்விக்கொண்டு, வல்லியம் — புலிகள் எழு, இரிந்த — ஓடின பய, மாதுஓ அசைகள் — விரிதல் அகலுதலாய் நகழுதலாயிற்று—எ-று. இரிதலென்று லோடலென்றும் — அந்தமலையின்முதுகு பிளக்கும் போதென்னவுமாம். 7

தேக்குறுசிகரக்குன்றந்திரிந்துமெய்ந்நெரிந்துசிந்தத்
தூக்குறுதோலர்வாளர்துரிதத்தினெழுந்ததோற்றம்
தாக்குறுசெருவிேனாரார்தாளறவீசத்தாவி
மேக்குறவிசைத்தாரென்னப்பொலிந்தனர்விஞ்சைவேந்தர்.

இ-ள். தேக்குறு — தேக்கமரங்கள்பொருந்தின, சிகரக்குன்றம் - சிகரத்தையுடைய அந்தமலை, திரிந்து — சுழன்று, மெய் — அதனுருவமெல்லாம், நெரிந்து — தகர்தலாய், சிந்த - சிதறுதலாக அப்போது, தூக்குறு-கைகளிலே தூக்கிக்கொண்ட - தோலர் — கேடகத்தையுடையாரயும், வாளர் — கத்தியையுடையாரயும், துரிதத்தின் — மிக்கவேகத்துடனே, எழுந்த — மேலெழுந்து செல்லுகிற, தோற்றம் — காக்ஷி எப்படியென்னில், தாக்குறு-மோதுவதான, செருவில் - யுத்தத்திலே, னோரர் — சத்துருக்கள், தாளற — கால்களறும்படி, வீச — வெட்டிவிட, தாவி — அப்போ துதைந்தெழுந்து, மேக்குற - மேலாக, விசைத்தார் — வேகங்கொண்டு செல்லுகிறார்கள், என்ன — என்பதாக, பொலிந்தனர் — (ஆகாயமெல்லாம்) நிறைந்தார்கள் பய, விஞ்சைவேந்தர்- அந்தமலைமேலே வாசஞ்செய்கிற வித்தியாதரர்கள், எழு—எ-று. 8

தாரகைசுடர்கண்மேகமென்றிவைதவிரத்தாழ்ந்து
பாரிடையழுந்துகின்றபடர்நெடும்பனிமாக்குன்றம்
கூருகிர்க்குவவுத்தோளான்கூம்பெனக்குமிழிபொங்க
ஆர்கலிபழுவத்தாழுங்கலமெனலாயிற்றன்றே.

இ-ள். தாரகை — (மேலேதவழுகிற) நக்ஷத்திரங்கள், சுடர்கள் — சந்திரசூரியர்கள், மேகம் — மேகங்கள், என்று — என்று சொல்வனவான, இவை- வைகளெல்லாம், தவிர — நீங்கலாக, தாழ்ந்து — உயர்வு குறைதலாய், பாரிடை — பூமியிலே, அழுந்துகின்ற — பதிவதாகிற, படர் — பரவுதலுள்ள,

நெடும் - நீள மாகிய, பனி - குளிர்ச்சியையுடைய, மா - பெரிதான, குன்றம் - அந்தமலையானது எழு, கூர் - கூரிய, உகிர்-நகத்தைக்கொண்ட, குலவு-உருண்டதோளான் — தோள்களையுடைய சிறியதிருவடி, கூம்பென பாய்மரமென்னவும், குமிழி - குமிழிகள், பொங்க - மேலேகிளர, ஆர்கலி — கடலின், அழுவத்து — சேற்றிலே, ஆழும் - அழுந்துகின்ற, கலம் - கப்பல், எனலாயிற்று - என்றுசொல்லலாயிற்று, பய—எ-று. ஏ — அசைகள். 9

தாதுகுநறுமென்சந்தங்குங்குமங்குலிகந்தண்ணென்
போதுகுபொலனறுதென்றித்தொடக்கத்தயாவும்பூசி
மீதுறுசுனைநீராடியருவியோடுலகின்வீழ்வ
ஓதியகுன்றங்கீண்டுகுருதிநீர்சொரிந்தாலொத்த.

இ-ள். தாதுஉகு — உகுகின்றதாது, நறு — வாசனையையுடைய, மென்-மென்மையாகிய, சந்தம் — சந்தனமரத்தினின்றும் உகுகின்றதாதும், குங்குமம் — குங்குமமரத்தினின்றும் உதிர்கின்றதாதும், குலிகம் - சாதிலிங்கத்தினதுதாதும், தண்ணென் - குளிர்ச்சியென்கின்ற, போது - புட்பங்களினின்றும், உகு - உதிர்கிற, பொலன் - பொன்னிறமான, தாது — பராகங்களும், என்று - என்று சொல்வதான, இத்தொடக்கத்த - இவைபோல்வன, யாவும் — எல்லாம், பூசி - (மலைகுலுங்குதலாலே) அளவதாய், மீதுறு-(அந்தமலை) மேலுள்ள, சுனைநீர் - சுனைகளினீரானவை எழு, ஆடி - அலம்பி, அருவியோடு - அருவிகளுடனேகூடி, உலகின் - அந்தமலையினடிவாரத்திலே, வீழ்வ - விழுவன் எப்படியென்னில், ஓதிய - முன்னே மயேந்திரமென்றுசொன்ன, குன்றம் - மலையானது, கீண்டு - வயிறுகிழிந்து, குருதிநீர் - ரக்தஜலத்தை, சொரிந்தால் ஒத்த - சிந்தினாற்போலாயின, பய—எ-று. தாதுபராகம் என்பன. தாள் — என்று இத்தொடக்கத்த என்பது என்று தொடங்குதல் எனமுடியும். 10

கடலுறுமத்திதென்னக்கருவரைதிரியுங்காலை
மிடலுறுபுலன்கள்வென்றமெய்த்தவர்விசும்பினுற்றார்
திடலுறுகிரியிற்றாந்தஞ்செய்வினைமுற்றிமுற்றா
துடலுறுபாசம்வீசாதும்பர்செல்வாருமொத்தார்.

இ-ள். கடல் - பாற்கடலிலே, உறு - பொருந்தின, மத்து - மந்தரகிரியென்னுமத்து, இதென்ன - இதுவேயென்னும்படி, கருவரை - அந்தக்கருத்தமலையானது, திரியுங்காலை - சுழலும்போது, மிடல் உறு - வலியால்மிக்க, புலன்கள் — விடயவாசனைகளை, வென்ற - ஜயித்த, மெய் - மெய்யான, தவர் - தவயோகிகள் எழு, விசும்பின் - ஆகாயத்திலே, உற்றார்-(பயந்து) செல்லலானார்கள், திடல் உறு — மேடாகவுறுகின்ற, கிரியில்-(அந்த) மலையிலே, தாம் - தாங்கள், தம்செய்வினை - தம்முடைய செய்யுங்கிரியைகளை, முற்றுமுற்றாது — முடித்துப்போகாமல், உடல் உறு - உடம்பாகவிருக்கிற, பாசம் - அன்பை(நேயமுள்ளதை), வீசாது — கீழேகிடக்கச்

செய்யாமல், உம்பர் – மேலுலகத்துக்கு, செல்வாரும் – செல்லுகிறவர்களை யும், ஒத்தார் – ஒப்பாயினார்கள், பய—எ–று. செய்வினைமுற்றிச்செல்லு தல் உடம்பை விட்டுச்செல்லுதல். செல்வாருமென்றதிலும்மை உடம் பொடு செல்லுதலருமை யென்பதைக் குறிக்கின்றது. 11

வெயிலியற்குன்றங்கீண்டுவெடித்தலுநடுக்கமெய்தி
மயிலியற்றேவிமார்கடழீஇக்கொளப்பொலிந்தவானோர்
அயிலெயிற்றரக்கனள்ளததிரிந்தநாளணங்குபுல்லக்
கயிலையினிருந்ததேவைத்தனித்தனிக்கடுத்தல்செய்தார்.

இ-ள். வெயிலியல் – சூரியகிரணம்படுதலான, குன்றம் — அந்த மலை யானது, கீண்டு – வயிறுகிழிந்து, வெடித்தலும் – உச்சிபிளக்குமளவில், நடுக் கம் எய்தி – நடுங்குதலாகி, மயிலியல் — மயிற்சாயலையுடைய, தேவிமார்கள்- மனைவிகள், தழீஇக்கொள – அணைப்பதாக, பொலிந்த – விளங்குகின்ற, வானோர் – (அந்தமலையிலுள்ள), தேவர்கள் – எழு, அயில் எயிற்று – கூறிய பற்களையுடைய, அரக்கன் - (இராவணனை), ராக்ஷதன் அள்ள – அசைத் துப்பிடுங்க அதனாலே, திரிந்தநாள் – (வெள்ளிமலை) சுழன்றபோது, அண ங்கு - பார்வதிதேவி, புல்ல — (பயந்து) அணைக்க, கயிலையில் – அந்தவெள்ளி மலையிலே, இருந்ததேவை - அசையாதிருந்த கடவுளை, தனித்தனி - ஒவ் வொருவரும், கடுத்தல்செய்தார் – ஒப்பதானார்கள், பயனிலை—எ-று. 12

ஊறியநறவுமுற்றகுற்றமுமுணர்வையுண்ணச்
சீறியமனத்தர்தெய்வமடந்தையருடறீர்வுற்ற
ருறினரஞ்சுகின்றாரன்பரைத்தழிவியும்பர்
ஏறினரிட்டுநீத்தபைங்கிளிக்கிரங்குகின்றார்.

இ-ள். ஊறிய – பாலைமுதலியவற்றிலூறுகின்ற, நறவும் - கள்ளும், உற்ற - (புருஷனுலான), குற்றமும் — குற்றத்தையும், உணர்வை — தங்க ளறிவை, உண்ண – மழுக்க கெடுக்க அதனாலே, சீறிய - வெறுப்புண்டான, மனத்தர் – மனத்தையுடையரான, தெய்வமடந்தையர் — தெய்வப்பெண் கள் எழு, ஊடல் - அந்த வெறுப்பு, தீர்வுற்று – நீங்குதலாய், ஆறினர்- சாந்தகுணத்தினர்களாய், அஞ்சுகின்றார் — பயந்தவர்களுமாகி, அன்பரை- நாயகர்களை, தழுவி - அணைத்துக்கொண்டு, உம்பர் – ஆகாயகதியிலே, ஏறி னர் – சென்றார்கள் (செல்லச்செய்தே), இட்டு – கூட்டிலேவைத்து, நீத்த- (எடுத்துவராமல்) விட்டுவந்த, பைங்கிளிக்கு – பச்சைக்கிளிக்கு, இரங்கு கின்றார் – அழுகிறதானார்கள், பயனிலை—எ-று. 13

இத்திறநிகழும்வேலையிமையவர்முனிவர்மற்றை
முத்திறத்துலகத்தாருமுறைமுறைவிரைவின்மொய்த்தார்
தொத்துறுமலருஞ்சாந்துஞ்சுண்ணமுமணியுந்தூவி
வித்தகசேறியென்றார்வீரனும்விரைவதானான்.

இ-ள். இத்திறம் – இவ்வகைச் செய்கைகள், நிகழும்வேலை - நடக்கும் போது, இமையவர் முனிவர் – தேவரும் ருஷிகளும்; மற்றை - (இந்த மலை) அல்லாத, முத்திறத்து உலகத்தாரும் – மூவகை பிரமருத்திரேந்திராதி உலகங்களிலுள்ளவர்களும், முறைமுறை - வரிசைவரிசையாக, விரைவில்- அதிசீக்கிரத்திலே, மொய்த்தார் – கூடிநெருங்கினவர்களாய், கொத்து- கொத்துகளிலேயுள்ள, மலரும் – புட்பங்களையும், சாந்தும் – சந்தனங்களை யும், சுண்ணமும் – கந்தபொடிகளையும், மணியும் – முத்தகஷதைகளையும், தூவி – திருவடிமேலேசிந்தி, வித்தக - வியாகரண பண்டிதரே, சேறி- செல்லக்கடவை, ,என்றார் – என்றார்கள், வீரனும் – சிறியதிருவடியும், விரைவதானான் – மிகவும் வேகங்கொண்டார்—எ-று. 14

குறுமுனிகுடித்தவேலைகுப்புறுங்கொள்கைத்தாதல்
வெறுவிதுவிசயம்வைகும்விலங்கற்றோளலங்கல்வீர
சிறிதிதென்றிகழற்பாலையல்லைநீசேறியென்று [பான்.
உறுவலித்துணைவர்சொன்னாரொருப்பட்டான்பொருப்பையொப்

இ-ள். குறுமுனி – அகத்தியர், குடித்த - பானம்பண்ணின, வேலை- கடலை (நீர்போகிறகாரியம்), குப்புறும் - தாண்டுவதான, கொள்கைத்து- துணிவையுடையது, ஆதல் - ஆகுதல் ஆகியகடலைத்தாண்டுவது, வெறுவிது – வியர்த்தமாக, விசையம் – சாமர்த்தியம், வைகும் – தங்குவனவாய், விலங்கல் – பருபதாகிருதிகளான [1]தோள் புஜங்களும், அலங்கல் – வெற்றி மாலையுமுள்ள, வீர – வீரனே, இதுசிறிதென்று – இதை அல்பமென்று, இகழற்பாலை – இகழத்தக்கவன், அல்லைநீ – அல்லன்நீ நீஇகழாதவனு சேறியென்று – செல்லக்கடவையென்று, உறுவலி - மிகவும் பலாட்டியர் ளான, துணைவர் – சகாயரான வானராதிபர்கள், சொன்னார் – விடைதந் தார்கள், பொருப்பை – (அந்தமலைக்குமேலொரு) மலையை, ஒப்பான் - ஒத்த திருவடி, ஒருப்பட்டான் - உத்தியோகித்தார், சம்மதங்கொண்டெழலானார்- செல்லுகையிலொருமித்தார்—எ-று. 15

இலங்கையினளவிற்றன்றாலிவ்வுருவெடுத்ததோற்றம்
விலங்கவுமுளதன்றென்றுவிண்ணவர்வியந்துநோக்க
அலங்கலுழ்மார்பன்முன்றாழ்ந்தடித்துணையமுத்தலோடும்
பொலன்கெழுமலையுந்தாளும்பூதலம்புக்கமாதோ.

இ-ள். இலங்கையின் – இலங்காபுரிக்கே, அளவிற்று – செல்லுமளவுள் ளது, அன்று – அல்லதாம், இவ்வுரு - இந்தமஹாவடிவு, எடுத்ததோற்றம்- கொண்டகொள்கையைக் குறித்தால், விலங்கவும் - அப்பாற்செல்லவும், உளது - உள்ளதாயிருக்கின்றது போதுமானதாயிருக்கிறது என்றும், அன்று என்று – இலங்கைக்கேசெல்லக்கொண்டதென்றும், விண்ணவர் - தேவர் கள், வியந்து - அதிசயித்து, நோக்க – பார்க்க, அலங்கல் – வெற்றிமாலை, தாழ் – தங்குவதான, மார்பன் - மார்பையுடைய திருவடி, முன் – எதிர்

முகமாக, தாழ்ந்து - சாய்ந்து, அடித்துணை — கால்களிரண்டையும், அழுத்த லோடும் — அழுத்துமளவில், பொலன்கெழு - பொன்னிறம்பொருந்தின, மலையும் — அந்தமலையும், தாளும் (திருவடி) கால்களும் — எழு, பூதலம்-பூமிக்குள்ளே, புக்க - புதைந்துபோயின, பயனிலை—எ-று. ஆல் - அதிசயக் குறிப்பு மாது. ஓ அசைகள் இலங்கையின் என்பதில் இன்சாரியை. 16

வால்விசைத்தெடுத்துவன்றாண்மடக்கிமார்பொடுக்கிமானத்
தோல்விசைத்துணைகள்பொங்கக்கழுத்தினைச்சுருக்கித்தூண்டும்
கால்விசைத்தடக்கைநீட்டிக்கட்புலன் கதுவாவண்ணம்
மேல்விசைத்தெழுந்தானுச்சிவிரிஞ்சனுடுரிஞ்சவீரன்.

இ-ள். வால் - வாலை, விசைத்து — வேகங்கொண்டுதறி, எடுத்து — மேலேநிமிர்த்து, வன்தாள் - வலியகால்களை, மடக்கி - மேலேமடக்கிக்கொண்டு, மார்பு — மார்பை, ஒடுக்கி - ஒடுங்குவதாக்கி, மானத்தோல் - இலச்சையைச் செய்கிறதோல்களான, விசை — வேகமுடைய, துணைகள் — இரண்டுருக் களும், பொங்க (அடியிலே) பருமிதங்காட்ட பீசங்களிரண்டுந்தோன்ற, கழுத்தினை — கழுத்தை, சுருக்கி — குறுகலாக்கி, தூண்டும் — செலுத்துகின்ற, கால்விசை — வாயுவேகத்தையுடைய, தடக்கை — நீண்டகைகளை, நீட்டி-முன்னே நீளக்கொண்டு, கட்புலம் — பிறர்கண்ணறிவுக்கு, கதுவாவண்ணம்-தோன்றாதபடி, மேல் - (கடலுக்கு) மேலே, விசைத்து — வேகங்கொண்டு, எழுந்தான் — எழுந்துசென்றான் பயனிலை, உச்சி — தலையிலே, விரிஞ்சனுடு-பிரமலோகம், உரிஞ்ச — உரசும்படி, வீரன் — மகாவீரனான அனுமன், எழு வாய்—எ-று. மானத்தோலென்று பாடமானால் பெரியதோள்களென்க-தோளுக்குவேகமாவது தோல்வடிவாகிய இரண்டும் அசைந்தாடுதல். 17

ஆயவனெழுதலோடுமரும்பணைமரங்கடாமும்
வேயுயர்குன்றும்வென்றிவேழமும்பிறவுமெல்லாம்
நாயகன்பணியிதென்றுநளிர்கடலிலங்கைதாமும்
பாய்வனவென்னவானம்படர்ந்தனவெழுவமான.

இ-ள். ஆயவன் — அந்தமலையினின்றும் அந்த அனுமன், எழுதலோடும் — மேலே கிளம்பினவளவில், அரும் — எட்டுதற்கரிய, பணை — கிளைகளையுடைய, மரங்களும் — விருக்ஷங்களும், வேய் - மூங்கில்களுடனே, உயர்-உயர்ந்த, குன்றும் — மலையும் — வென்றிவேழமும் அதிலுள்ள ஜயம்பொருந் தின யானைகளும், பிறவும் — மற்றவைகளும், எல்லாம் — முழுதும் எழு, நாயகன் - சர்வலோக சரணியனுடைய, பணி - காரியம், இதென்று-இதுவென்று, நளிர் - பெரிதான, கடல் — கடல்சூழ்ந்த, இலங்கை — இலங்கா புரிக்குச்செல்ல, தாமும் - தாங்களும், பாய்வனவென்ன — கடல்தாவுமவைக ளென்ன, வானம் — ஆகாயத்திலே, படர்ந்தன — பயபரவினவாய், எழுவ-எழுந்து செல்லுமவற்றை, மான - ஒப்பாகத்தொடர—எ-று. எல்லாம் தொடர - தாம் சாரியை. 18

இசையுடையண்ணல்சென்றவேகத்தாலெழுந்தகுன்றும்
பசையுடைமரனுமாவும்பல்லுயிர்க்குலமும்வல்லே
திசையுறச்சென்றுசென்றுசெறிகடலிலங்கைசேரும்
விசையிலவாகத்தள்ளிவீழ்ந்தனவென்னவீழ்ந்த.

இ-ள். இசையுடை - கீர்த்தியையுடைய, அண்ணல் - பெருமை கொண்ட திருவடியானவர், சென்ற - கிளர்ந்தெழுந்த, வேகத்தால் - வேகத்தினாலே, எழுந்த - கூடவேகிளம்பின, குன்றும் - அந்தமலையும், பசையுடை - ஈரமுள்ள, மரனும் - மரங்களும், மாவும் - மிருகங்களும், பல் - பலவகைகளான, உயிர்க்குலமும் - ஜீவகூட்டமும் எழு, வல்லே - விரைவிலே, திசை - தென்றிசைக்கு, உற - போவனவாக, சென்று சென்று - (போமளவும்) போய்ப்போய், செறி - (அலைகை) ணெருங்கின, கடல் - கடலுக்குள்ளான, இலங்கை - இலங்காபுரிக்கு, சேரும் - (சென்று) சேரத்தக்க, விசையிலவாக - வேகம்போதாவாக, தள்ளி - தடுமாறி, வீழ்வனவென்ன - விழுவனபோல, (வீழ்ந்தகடலில்) விழுந்தன, பய—எ-று. 19

மாவொடுமரனுங்கல்லும்வல்லியும்யாவுமற்றும்
போவதுபுரிந்தவீரன்விசையினாற்புணரிபொங்கத்
தூவினகீழுமேலுந்தூர்த்தனசுருதியன்ன
சேவகன்சீறுமுன்னஞ்சேதுவுந்தெரிந்தமாதோ.

இ-ள். மாவொடு - மிருகங்களுடனே, மரனும் - விருக்ஷங்களும், கல்லும் - மலைகளும் கற்களும், வல்லியும் - கொடிகளும், யாவும் மற்றும் - மற்றுமுள்ளன எல்லாமும், போவது புரிந்த - (இலங்கைக்குப்) போவதாகச் செய்த, வீரன் - அனுமாருடைய, விசையினால் - வேகத்தினாலே, புணரி- அந்தக்கடல், பொங்க - நிரம்ப, தூவின - சிந்துதலாயின, கீழும் - (கடலுக்குக்) கீழும், மேலும் - கடலுக்குமேலும், தூர்த்தன - மேடாகத்தூர்க்கப்பட்டன ஆகையினாலே, சுருதியன்ன - வேதவிரிவையொத்த, சேவகன் - வீரத்தனமையையுடைய சுருதி செய்யாமொழியான பொய்யா மொழியாகலால் அதுபோற் பொய்யாத வீரமெனவுமாம், சேவகன் - ஸ்ரீராமன்வந்து, சீறு- கோபியாமல், முன்னம் - முன்னேதானே, சேதுவும் - கரையும், தெரிந்த- தாமே தோன்றலாயின—எ-று. மாது ஓ அசைகள். 20

கீண்டதுவேலைநன்னீர்கீழுறக்கிடந்தநாகர்
வேண்டியவுலகமெங்கும்வெளிப்படமணிகண்மின்ன
ஆண்டகையதனைநோக்கியரவினுககரசர்வாழ்வும்
காண்டகுதவத்தனானன்யானெனக்கருத்துட்கொண்டான்.

இ-ள். வேலை நன்னீர் - கடலினது நல்லஸ்பாவமானது, கீழுற கீண்டது - அடித்தறைதோன்றக் கிழிதலாயிற்று, கீழுறக்கிடந்த - (அந்த அடித்தறையின்) கிழாகக்கிடந்து கொண்டிராநின்ற, நாகர்-நாகலோகத்தார் பாதாளவாசிகள், வேண்டிய - விரும்புவதான, உலகமெங்கும் - இடமுழுதும்,

வெளிப்பட - பிரசித்தமாகதெரிய அவ்வழி, மணிகள் — அந்தநாகருடைய சிரோரத்நங்கள், மின்ன - பளீரெனத்தோன்ற, ஆண்டகை - வீரசிரேஷ்டரானதிருவடி, எழு - அதனை அவ்வொளியை, நோக்கி — பார்த்து, அரவினுக்கு அரசர் — நாகாதிபர்கள், வாழ்வும் - வாழுமிடமும், காண்டகு — காணத்தக்க, தவத்தனேனென் - தவஞ்செய்தேனேனென், யானென — நானென்று, கருத்துட்கொண்டான் — மனோரதித்தான், பய—எ-று. கடலுக்கு நன்னீர்மையாவது ஆறுபோல் வற்றாதிருத்தல். 21

வெய்தின்வான்சிறையினுனீர்வேலையைக்கிழியவீசி
நொய்தினாரமுதங்கொண்டநோன்மையேநுவலுநாகர்
உய்துநாமென்பதென்னையுறுவலிக்கலுழனூழின்
எய்தினனாமென்றஞ்சிமறுக்கமுற்றிரியல்போனார்.

இ-ள். வெய்தின் (வேக) — வெம்மையுடனே, வான் — பெரிய, சிறையினால் - இறகுகளினாலே, நீர் வேலையை — ஜலரூபமானகடலை, கிழிய-இருபிளவாக, வீசி — மோதி, நொய்தின் — (அதிக) விரைவிலே, ஆர் அமுதம்-அரிதான அமிர்தத்தை, கொண்ட - கொண்டுவந்த, நோன்மையே-சாமர்த்தியத்தையே, நுவலும் — மெய்ச்சிக் கொண்டிருக்கிற, நாகர் — அந்தப்பாம்புகள் இப்போது, உய்தும் நாம் என்பது-நாம்தப்பிப் பிழைப்போமென்கிறது, என் ஏ — எவ்வகையாலே ஏவிது, உறுவலி — மிக்கபலத்தையுடைய கலுழன் (அமுதங்கொண்ட) கருடன், ஊழின் — முன்முறைமையே, எய்தினன் — வந்தான் இதற்கு, ஆமென்று — சந்தேகமில்லையென்று, அஞ்சி — பயந்து, மறுக்கம் உற்று — மயக்கங்கொண்டு இரியல்போனார்-ஓடிப்போனார்கள், பயணிலை எ-று. நாகர் எழுவாய். 22

துள்ளியமகரமீன்கடுடிப்பறச்சுறவுதூங்க
ஒள்ளியபனைமீன்றுஞ்சுந்திவலையவூழிக்காலின்
வள்ளுகிர்வீரன்செல்லும்விசைபொருமறுகிவாரி
தள்ளியதிரைகண்முந்துற்றிலங்கைமேற்றவழ்ந்தமாதோ.

இ-ள். துள்ளிய — (முன்பு) துள்ளுதற்குரிய, மகரமீன்கள் — மகரமச்சியங்கள், துடிப்பு — அத்துள்ளுதல், அற - இல்லையாகவும், சுறவு — சுறுமீன்கள், தூங்க - ஒரு நிலையிலே நிற்கவும், ஒள்ளிய - ஒளியையுடைய, பனைமீன் — பனைமீன்களும், துஞ்சும் — தூங்குவதான மூச்சினாலே, திவலை-சிதறுந்துளிகளையுடைய, வாரி - கடலானது, ஊழிக்காலின் — பிரசண்டமாருதம்போல உகாந்தக் காற்றைப்போல. வள் - கூரிய, உகிர்-நகங்களையுடைய, வீரன் — சிறியதிருவடி, செல்லும் — போகிற, விசை — வேகத்தை, பொரு-தாங்கமாட்டாமல், மறுகி — கலங்கி, (வாரியானது) தள்ளிய — வீசின எறிந்த, திரைகள் — அலைகளானவை எழு, முந்துற்று — திருவடிக்குமுன்னே போய், இலங்கைமேல் — இலங்கை மதிளின்மேலே, தவழ்ந்த - பரவலாயின, பய—எ-று. 23

இடுக்குறுபொருள்களென்றுமெண்டிசைசுமந்தயானை
நடுக்குறவிசையிற்செல்லுநாயகன்றூதனாகம்
எடுக்குறுகாலவன்காற்றிடியொடுமொடியவந்நாள்
முடுக்குறக்கடலிற்செல்லுமுத்தலைக்கிரியுமொத்தான்.

இ-ள். இடுக்குறு — திக்குகளினிடைகளிலேயுள்ள, பொருள்கள்-சராசரவஸ்துகள், என் ஆம்-என்னபாடுபடும் அவைசொல்லிமுடியா, எண்டிசை-எட்டுத்திக்குகளையும், சுமந்த - தாங்குகின்ற, யானை — யானைகளெல்லாம், நடுக்குற — நடுங்குவனவாக, விசையில் - வேகங்கொண்டு, செல்லும் — போவதான, நாயகன் - சக்கிரவர்த்தித் திருமகனாருடைய, தூதன் — தூதனானதிருவடி, நாகம் — மலையை ஆதிசேடன்தலையை, எடுக்குறு — கிளப்பத்தக்கதான, காலம் - உகாந்த காலத்திலே, வன்காற்று-பிரபலமாகிறவாயு, இடியொடும்-தன்மோதுதலினாலே, ஒடிய — ஒடிவனவாக்கி, அந்நாள் - அப்பொழுதே, முடுக்குற — மேருமலையினின்றுந்தூரத்திவிட, கடலில் — (அந்தவாயுவேகத்தினாலே) கடல்மேலே, செல்லும் — போகின்ற, முத்தலை — மூன்றுசிகரத்திலொன்றான, கிரியும் — மலையையும், ஒத்தான் — ஒப்பானான் — எ-று. முத்தலைக்கிரி — திருவடிதோள்களிரண்டும் தலை ஒன்றுங்கூட மூன்று சிகரத்தையுடைய ஒருமலையையும் ஒத்தானெனவுமாம். 24

கொட்புறுபுரவித்தெய்வக்கூர்நுதிக்குலிசத்தார்க்கும்
கட்புலங்கதுவலாகாவேகத்தாற்கடலுமண்ணும்
உட்பதங்கூட்டியண்டமுறவுளசெலவினொற்றைப்
புட்பகவிமானந்தானவ்விலங்கைமேற்போவதொத்த.

இ-ள். கடலுமண்ணும் — கடற்பரப்பும் மண்பரப்பும், கொட்புறு — சுழன்றுவருவதான, புரவித்தெய்வம் — தெய்வ அசுவமான உச்சைச்சிரவத்தையுடையவனாய், கூர்நுதி — கூர்ம்பல்லென்கிற கூரிய நுனியையுடைய, குலிசத்தார்க்கும் — வச்சிராயுதபாணியான இந்திரனுக்கும். கட்புலம்-அவன் கண்களுக்கு விஷயமாக, கதுவலாகா - தோன்றுதலில்லாத, வேகத்தால்-வேகத்துடனே, உட்பதம் கூட்டி — உள்ளங்கால்களை ஒருசேரக்கொண்டு, அண்டம் உற — ஆகாயத்தை அளாவுவதாய், உள — உள்ள, செலவின் — செல்லுகையினாலே, ஒற்றை — குபேரனுக்கும் இராவணனுக்கும் ஒன்றேயான புட்பகவிமானம், தான் — தானே, அவ் இலங்கைமேல் - அந்த இலங்காபுரியைக்குறித்து, போவது — செல்லுவதை, ஒத்த — ஒத்தது, துவ்விகுதி கடைக்குறையாயிருக்கிறது. கடலேனும் மண்ணேனும் தன் உட்புறத்தேகொண்டு ஆகாயத்தை அளாவிச்செல்லுகை புட்பகவிமானத்துக் குண்மைகருதிகடலு மண்ணுஞ் சுழன்றுவருவதான வேகமுள்ள குதிரைமேலேறிப் பறக்கும் வரையிற் கரியுஞ்சவுரியவானான இந்திரன் கண்களாயிரத்தாலுங் காணப்படாத வேகமென்றும் அண்டமுறவென்றுங் கூறினார் — எ-று. 25

விண்ணவரேத்தவேதமுனிவரர்வியந்துவாழ்த்த
மண்ணவரிறைஞ்சச்செல்லுமாருதிமறமுட்கூர
அண்ணல்வாளரக்கன்றன்னையமுக்குவாமின்னமென்னுக்
கண்ணுதலொழியச்செல்லுங்கைலையங்கிரியுமொத்தான்.

இ-ள். விண்ணவர் - தேவர்கள், எத்த - துதிக்கவும், வேதம் - வேதா த்தங்களை, முனிவரர் - மனனம்பண்ணுவதில்சிரேஷ்டரானவர்கள், வியந்து அதிசயித்து, வாழ்த்த — ஆசீர்வதிக்கவும், மண்ணவர் - மண்ணுலகிலுள் வானராதிபர்கள், இறைஞ்ச - வணங்கவும், செல்லும் — போகின்ற, மாருதி அனுமார் எழு, மறம் - கோபம், உள்கூர — உள்ளேமிகுவதாகி, அண்ண (தன்னைத்தூக்கின) பெருமைகொண்ட, வாள் - வாளாயுதமுடைய, அர கன்றன்னை — ராவணராக்ஷஸனை, அமுக்குவாம் இன்னம் — (முன்போல் இன்னமும் அமிழ்த்தக்கடவோம், என்று — என்றுகொண்டு, கண்ணுத ஒழிய - (சிவன்) இல்லையாகவிடுத்து, செல்லும்-போகிற, கைலையங்கிரியும் வெள்ளிமலையையும், ஒத்தான் - ஒப்பாயினர், பய—எ-று. வெள்ளிமலை நிறத்தாலொப்பு. 2

மாணியாம்வேடந்தாங்கிமலரயற்கறிவுமாண்டோர்
ஆணியாயுலகுக்கெல்லாமறம்பொருணிரப்புமண்ணல்
சேணுயர்நெடுநாடீர்ந்ததிரிதலைச்சிறுவன்றன்னைக்
காணியவிரைவிற்செல்லுங்கனகமால்வரையுமொத்தான்.

இ-ள். மாணியாம் — பிரமசாரியான, வேடம்தாங்கி-கோலங்கொண் மலர் — உந்திக் கமலத்திற்றோன்றின, அயற்கு — பிரமனைக் காட்டினுலு அறிவுமாண்டு — ஞானவிசேஷராய், உலகுக்கெல்லாம் — எல்லாவுலகங்களு கும், ஓராணியாய் — ஒரு ஆதார பூதருமான, அறம்பொருள் — தர்மார்த்த களை, நிரப்பும் — நிரம்பச்செய்கிற, அண்ணல் — பெருமையிற் சிறந்த, சிறி திருவடி - எழு, சேண் உயர் — மிகவும் உயர்கின்ற, நெடுநாள் — நெடுங்கால தீர்ந்த — பிரிந்திருக்கிற, திரிதலை - முத்தலையுடைய, சிறுவன்றன்னை-ஒ புத்திரனை, காணிய - காணுதற்கு, விரைவில் — சீக்கிரங்கொண்டு, செல்லு போவதான, கனகமால்வரையும் — சுவர்ணமயமாய்ப் பெரிதானமேரு யும், ஒத்தான் — விசுவரூபத்தாலே ஒப்பதானுர், பய—எ-று. சுவாமி கா யஞ்செய்யவல்ல ரானவரென்பதுதோன்ற உலகுக்கெல்லாம் ஆணியெ றும், இராவணனாலே தர்மார்த்தங்கள் நிரம்பாதிருத்தலி னிரப்புமென்று கூறினர். 3

மழைகிழித்துதிரமீன்கண்மறிகடல்பாயவானம்
குழைவுறத்திசைகள்கீறமேருவுக்குலுங்கக்கோட்டின்
முழையுடைக்கிரிகண்முற்றமுடுக்குவான்முடிவுக்காலத்
தழிவுறக்கடுக்கும்வேகத்தாதையுமனையனுனுன்.

இ-ள். மழை - மேகங்களை, கிழித்து — பொத்துக்கொண்டு, மீன்கள்-நக்ஷத்திரங்கள், உதிர — உதிரவும், மறி - (அலைகள்) மடங்குகின்ற, கடல்-கடலானது, பாய - மேலேதாவவும் அதனாலே, வானம் - ஆகாயமெல்லாம் மேலுலகங்களெல்லாம், குழைவுற — நோவுபடவும், திசைகள் - திக்குகள், கீற-பிளக்கவும், மேருவும் - மேருமலையும், குலுங்க - நடுங்கவும், கோட்டின் — சிகரங்களிலே, முழையுடை - குகைகளைக்கொண்ட, கிரிகள்முற்ற - மலைகளடங்க, முடிக்குவான் - ஒட்டுதற்கு, முடிவுகாலத்து—யுகமுடிவிலே, அழிவுற-(எல்லாம்) அழிவனவாக, கடுக்கும் — விரையச்செய்கிற, வேகம்-வேகமுள்ள, தாதையும் — தனது பிதாவானவாயுவையும், அனையன்-ஒத்தவன், ஆனான்-ஆயினான்—எ-று. திருவடி - எழு, ஆனான் - பய. 28

தடக்கைநாலைந்துபத்துத்தலைகளுமுடையான்றானே
அடக்கிஐம்புலன்கள்வென்றதவப்பயனறுதலோடும்
கெடக்குறியாகமாகங்கிழக்கெழுவழக்குநீங்கி
வடக்கெழுந்திலங்கைசெல்லும்பரிதிவானவனுமொத்தான்.

இ-ள். தடக்கை - நீண்டகைகளோ, நாலைந்து - இருபதும், பத்துத்தலைகளும் உடையான்தானே - உடையவனானராவணன், அடக்கி ஐம்புலன்கள் - ஐந்துவிஷயவாசனைகளையும் அடங்கக்கொண்டு, வென்ற - இந்திரிய நிக்கிரகம்பண்ணியிருந்த, தவப்பயம் — தபோபலம், அறுதலோடும் - முடிவுறுதலைக்கண்டு, கெட — அவன் அழிகிறதற்கு, குறியாக - உற்பாதமாக, மாகம்-ஆகாயத்திலே, கிழக்கு - கீழ்த்திக்கில், எழு-உதயமாகிற, வழக்குநீங்கி-வழக்கத்தைவிட்டு, வடக்கு - வடதிசையில், எழுந்து — உதயமாகி, இலங்கைசெல்லும் - இலங்கைக்குச்செல்லுகின்ற, பரிதிவானவனும் — சூரியபகவானையும், ஒத்தான் — திருவடி ஒப்பாயினர்—எ-று- 29

புறத்துறைவஞ்சிவேறோரரணம்புக்குறைதல்போக்கி
மறத்தொழிலரக்கர்வாழுமாநகர்மனுவின்வந்த
திறத்தகையிராமனென்னுஞ்சேவகற்பற்றிச்செல்லும்
அறத்தகையரசன்திண்போராழியுமனையனானான்.

இ-ள். புறத்து உறை - ஸ்ரீராமன் பக்கத்தேயிருக்கிற, வஞ்சி — கொடிபோன்ற சீதாபிராட்டி, வேறோர் — வேறான ஒரு, அரணம் - இலங்கைக் கோட்டைக்குள்ளே, புக்குறைதல் - போயிருத்தலுக்கு தெரியாமல், போக்கி-விடுத்தல்செய்து, மறத்தொழில் - பாபச்செய்கைகளையுடைய, அரக்கர் வாழும் - ராக்ஷஸர்கள்வர்த்திக்கிற, மாநகர் — பெரியஊருக்குச்செல்லுவதாக, மனுவின்வந்த - மனுகுலத்திலே பிறந்த, திறத்தகை - தகுதியான திறத்தையுடைய, இராமனென்னும் சேவகன் பற்றிச்செல்லும் - சக்கிரவர்த்தித்திருமகனைப் பற்றிச்செல்லுவதான அவனுக்காகச் செல்லுவதான, அறத்தகை-தருமபரிபாலனத்தே தகுதியுள்ள, அரசன்-அந்தத்தசரத மகாராஜனுடைய, திண்போர் — மிக்கவலிகொண்ட, ஆழியும் — ஆக்ஞா சக்கரத்தையும், அனை

யன் – ஒத்தவன், ஆனன் – திருவடி ஆயினர்—எ-று. புறத்துறலஞ்சியெ ன்றுபாடமானால் சேவகனைத்தொடர்ந்து பக்கத்தே நிற்கிறதற்கு ஆழியஞ்சி எனவும் வேறோராணம்புக் குறைதலுக்குப் பிராட்டியைப்போக விட்டென் றுங் கூறுக, போகவிடுதலும் அஞ்சுதலும் ஆழியின்செய்கை. 30

கேழுலாமுழுநிலாவிற்கிளரொளியிருளைக்கீறப்
பாழிமாமேருநாணவிசும்புறப்படர்ந்ததோளான்
ஆழிசூழுலகமெல்லாமருங்கனன்முருங்கவுண்ணும்
ஊழிநாள்வடபாற்றோன்றுமுவாமுழுமதியுமொத்தான்.

இ-ள். கேழ் உலா—ஒளி நிரம்பின, முழு நிலாவில் – பூரணச்சந்திரன் போல், கிளர் – விளங்குகிற, ஒளி—தமதுடம்பின் ஒளியானது, இருளை-(செல்லுந்திசையிலுள்ள) இருட்டை, கீற – பிளந்தோட்டவும், பாழிமா-மிகப்பெரிதான, மேரு – மேருமலையும், நாண - தலைகுனியவும், விசும்பு ஆகாயமெல்லாம், உற—பொருந்துவதாக, படர்ந்த-விசாலித்த, தோளான்-புஜங்களையுடைய, திருவடியானவர்-எழு, ஆழிசூழ்-கடல்சூழ்ந்த, உலகமெல் லாம்-உலகமுழுதும், அரு – சொல்லுதற்கரிதான, கனல் – நெருப்பானது, முருங்கஅழிவதாக, உண்ணும்—எரிக்கப்படுகிற, ஊழிநாள்—ஊழிக்காலத்தி லே, வடபால்—வடதிசையில், தோன்றும்—உதயமாகிற, உவா - பருவகால த்து, முழுமதியும் – பூரணசந்திரனையும், ஒத்தான் – நிறத்தால் ஒப்பதானர், பய- எ-று. உலகமெல்லா முருங்கவெனக் கூட்டுக. 31

அடலெலாந்திகிரிமாயற்கமைந்தனனாற்றல்காட்டக்
குடலெலாமவுணர்சிந்தக்குன்றெனக்குறித்துநின்ற
திடலெலாந்தொடர்ந்துசெல்லச்சேண்விசும்பொதுங்கத்தெய்வக்
கடலெலாங்கலங்கத்தாவுங்கலுழனுமனையனானன்.

இ-ள். அடல் எலாம் - எல்லாப்பொருள்களையும், அடுதலில்வல்ல-கொல்லவல்ல, திகிரி – சக்கரத்தையுடைய, மாயற்கு — திருமாலுக்கு, அமைந்தனன் – வாகனமாயமைந்த தனது, ஆற்றல் – சாமர்த்தியத்தை, காட்ட – (எல்லாருக்கும்) தெரிவிப்பதாக, குடலெலாம் அவுணர் — அசுரர் கள் தங்கள் குடலெல்லாம், சிந்த – பிதுங்கவும், குன்றென – மலைகளென் னும்படி, குறித்து - ஒவ்வொருபெயர்களைக்கொண்டு, நின்ற – நிற்பனவான, திடலெலாம் – மேடுகளெல்லாம், தொடர்ந்து — வேர்பறிந்து பின்பற்றி, செல்ல – செல்லவும், சேண் — நீளமுள்ள, விசும்பு – ஆகாயத்தில் மேகங்கள், ஒதுங்க — குலைந்துபோகவும், தெய்வம் – தெய்வத்தன்மையுள்ள, கடலெ லாம் – கடல்முழுதும், கலங்க – குழம்பவும், தாவும் — தாண்டின, கலுழனும்-கருடனை . பெரியதிருவடியையும், அனையன் – ஒப்பானவர், ஆனன்-(சிறியதிருவடி) ஆயினர்—எ-று. அடலெலாம் தனது சாமர்த்தியமுழுதும் மாயற்கமைந்தனனாகி ஆற்றல் செய்தலை எனவுமாம். 32

நாலினோடுலகமூன்றுநடுக்குறவடுக்கிநாகர்
மேலின்மேனின்றகாறுஞ்சென்றகூலத்தின்விண்டு
காலினாலளந்தவானமுகட்டையுங்கடக்ககால
வாலினாலளந்தானென்றுவானவர்மருளச்சென்றான்.

இ-ள். நாலினோடு மூன்றும் — நாலுடனே மூன்று கூட்ட எழென்னலான, உலகம் — உலகங்களெல்லாம், நடுக்குற — அஞ்சுவதாக, அடுக்கி - (அப்படி எழுவகையாக) அடுக்கப்பட்டு, நாகர் — தேவர்களுடைய, மேலின்மேல்-மேலுலகங்களென்பவைகளுக்குமேலே, நின்றகாறும் — உள்ள ஆகாயவரையும், சென்ற — நீண்டுபோயிருக்கிற, கூலத்தின் — வாலினாலே (கண்டதேவர்கள்), விண்டு — திருமால், காலினால் — பாதத்தாலே, அளந்த — அளவிட்ட, வானமுகட்டையும் - ஆகாயமுகட்டையும், கடக்க — கடந்துசெல்லுவதாக, காலவாலினால்-காலபாசத்தையொத்த வாலினாலே, அளந்தானென்று - அளவிட்டானென்று, வானவர் — கண்டதேவர்கள், மருள-மயங்கும்படி, சென்றான் — செல்லலானார் பய, திருவடி — எழு—எ-று. காலபாசத்தைக் காலனென்றதாகுபெயர், கூலத்தினாலே வானவர்மருள எனக. 33

விளித்துப்பின்வேலைதாவும்வீரன்வால்வேதமெய்க்கும்
அளித்துப்பினநுமனென்னுமறந்துணைபெற்றதாயும்
களித்துப்புன்றொழின்மேனின்றவரக்கர்கண்ணுறுவராமென்
றொளித்துப்பின்செல்லுங்காலபாசத்தையொத்ததன்றே.

இ-ள். விளித்து — (தோள்கொட்டி) ஆர்த்து, பின் — பின்பு, வேலை-கடலை, தாவும் — தாண்டுகிற, வீரன் — அனுமாருடைய, வால் — வாலானது எழு, வேதம் — வேதங்களெல்லாம், மெய்க்கும்-மெய்யேபுகழுவதான, அளி-ஸ்ரீராமன தனுக்கிரகமாகிய, துப்பின் — பலத்தையுடைய, அநுமனென்னும் — சிறிய திருவடியென்கிற, அறம் - தருமத்தையே, துணை-(தனக்குத்) துணையாக, பெற்றதாயும் — கொண்டதாயிருந்தும், களித்து — கள்ளுண்டு, புன்றொழில்மேல் - ஈனமான செய்கைகளிலேயே, நின்ற - நிலைகொண்டுள்ள, அரக்கர் - ராக்ஷஸர்கள், கண்ணுறுவர் என்று — கண்டுகொள்ளுவார்களென்று, ஒளித்து — மறைந்து, பின் — திருவடிக்குப் பின்னே, செல்லும்-போவதான, காலபாசத்தை ஒத்தது - ஒப்பாயிற்று, பய—எ-று. ஆம்—சாரியை. 34

மேருவைமுழுதுஞ்சூழ்ந்துமீதுற்றவேகநாகம்
கார்நிறத்தண்ணலேவக்கலுழன்வந்துற்றகாலை
சோர்வுறுமனத்ததாகிச்சுற்றியசுற்றுநீங்கிப்
பேர்வுறுகின்றவாறுமொத்ததம்பிறங்குபேர்வால்.

இ-ள். மேருவை — மேருமலையை, முழுதுஞ் சூழ்ந்து — முழுதுஞ் சுற்றிக்கொண்டு, மீதுற்ற — மேலான அதிகமான, வேகம் — வேகத்தையுடைய, நாகம் — ஆதிசேடனாகிய பாம்பு, கார்நிறத்து — மேகவண்ணத்தையுடைய,

அண்ணல் – எப்பொருட்கும் இறைவனான திருமால், ஏவ – அனுப்ப, கலுழன் — கருடபகவான், வந்துற்றகாலை — அங்குவந்து கூடினபோது, சோர்வுறும் – தளர்ச்சியுற்ற, மனத்தது ஆகி – மனத்தையுடையதுவாய், சுற்றிய- அந்தமேருவைச் சூழ்ந்திருந்த, சுற்று நீங்கி – சூழ்வையிட்டு, பேர்வுறுகின்ற ஆறும் — பெயர்ந்து போகிறபடியையும், ஒத்தது – ஒப்பாயிற்று பய, அ - அந்த, பிறங்கு – நீண்டுதோற்றுகிற, பேர்வால் - பெரியவால், எ-று.

குன்றொடுகுணிக்குங்கொற்றக்குவவுத்தோட்குரக்குச்சீயம்
சென்றுறுவேகத்திண்காலெறிதரத்தேவர்வைகும்
மின்றொடர்வானத்தானவிமானங்கள்விசையிற்றம்மின்
ஒன்றொடொன்றுடையத்தாக்கிமாக்கடலுற்றமாதோ.

இ-ள். குன்றொடு – மலைகளுடனே, குணிக்கும் – ஒப்பளவுள்ள, கொற்றம் — வெற்றிபொருந்தின, குவவு - உருண்ட, தோள் – புஜங்களையுடைய, குரக்குச்சீயம் - வானரசிரேஷ்டரானவர், சென்றுறு – செல்லுதலாலுண்டான, வேகம் – வேகத்தையுடைய, திண்கால் – பலமுள்ளகாற்று, எறிதர- வீச, தேவர்வைகும் - தேவர்கள் தங்குகின்ற, மின்தொடர் - மின்னுதலைக் கொண்ட, வானத்து ஆன – ஆகாயத்திலே செல்லுவனவாகிய, விமானங்கள் – பல்லக்கு முதலியவைகள் எழு, விசையில் – (தாங்கள்செல்லும்)வேகத்தினாலே, தம்மில் — தங்களிலே, ஒன்றொடொன்று – ஒன்றுடனேமற்றொன்று, உடைய – தகர்வனவாக, தாக்கி-மோதிக்கொண்டு, மாக்கடல்-பெரிய கடலில், உற்ற – விழுதலாயின, பய—எ-று. 30

வலங்கையின்வயிரவேதிவைத்தவன்வைகுநாடும்
கலங்குவதேகுவான்றன்கருத்தென்கொலென்னுங்கற்பால்
விலங்கயிலெயிற்றுவீரன்முடுக்கியவேகம்வெய்யோர்
இலங்கையினளவன்றென்னவிம்பர்நாடிரிந்ததிப்பால்.

இ-ள். வலங்கையின் — வலக்கையிலே, வயிரம் – வச்சிரமான, எதி-ஆயுதத்தை, வைத்தவன் - கொண்டவனான இந்திரனுடைய, வைகும் – தங்குவதான, நாடும் – விண்ணுலகமும், கலங்குவது – கலங்குத லாயிருக்கிறது என்னென்றால், ஏகுவான்றன் — செல்லுகிற அனுமாருடைய, கருத்து – நினைவு, என்கொல் — எப்படியோ, என்னும் – என்பதான, கற்பு ஆல்-தெளிவினாலே, விலங்கு — நீண்டு வளைந்த கூர்மையுள்ள, எயிற்று - பற்களையுடைய, வீரன்— அனுமார், முடுக்கிய – விரைவுசெய்கிற, வேகம் - வேகமானது, வெய்யோர்- வெவ்விய அரக்கர்களுடைய, இலங்கையின் — இலங்காபுரியினது, அளவு- தூர அளவுக்குமாத்திரம், அன்று – அல்ல, என்ன – இலங்கைக்கப்பாலுஞ் செல்லுகிறதா யிருக்கிறதென்று, இம்பர் நாடு — இலங்கைக் கப்பாலுள்ள, நாடுகளெல்லாம் எழு, இப்பால் இரிந்தது – தங்கள் நாட்டுக்கப்பால் ஓடலாயிற்று, பய—எ-று. 37

ஓசனையுலப்பிலாதவுடம்பமைந்துடையவென்னத்
தேசமுநூலுஞ்சொல்லுந்திமிங்கிலகிலங்களோடும்
ஆசையையுற்றவேலைகலங்கவன்றண்ணல்யாக்கை
வீசியகாலின்வீந்துமிதந்தனமீன்களெல்லாம்.

இ-ள். உலப்பிலாத ஓசனை - அளவில்லாத யோசனைதூரம், உடம்பு-சரீரங்களை, அமைந்து உடைய என்ன — கொண்டுள்ளவைகளென்று, தேசமும் - உலகங்களும், நூலும் — சாஸ்திரங்களும், சொல்லும் — சொல்லப்படுவனவாகிய, திமிங்கிலம் — மீனுனதிமிங்கிலமும் அதிற்பெரிய, கிலங்களோடு-திமிங்கில கிலத்துடனேகூட, ஆசையை - வடகடலெல்லையை, உற்ற — பயந்துபோய்ச்சேர்ந்தன பய, வேலைகலங்க - அப்படிக் கடல்கலங்கும்படி, அன்று — அப்போது, அண்ணல் (அனுமாருடைய) பெரிதான, யாக்கை-சரீரத்தினின்றும், வீசிய — வீசப்படுகிற, காற்றின் — காற்றினுலே, வீந்து-இறந்து, மீன்களெல்லாம் - எழு மிதந்தன, பய—எ-று. 38

பொருவருமுருவத்தன்னுன்போகின்றபொழுதுவேகம்
தருவனதடக்கைதள்ளாநிமிர்ச்சியதம்முளொப்ப
ஒருவருங்குணத்துவள்ளலோருயிர்த்தம்பியோடும்
இருவருமுன்னர்ச்சென்றாலொத்தவவ்விரண்டுபாலும்.

இ-ள். பொருவரும் - ஒப்பரிதான, உருவத்து — சரீரத்தையுடைய, அன்னுன் — அந்த அனுமார், போகின்றபொழுது — போகிறபோது, வேகம்-விரைவை, தருவன — கொடுப்பனவாகிய, தடக்கை - நீண்டகைகள், தள்ளா-தளராத, நிமிர்ச்சிய — நிமிர்தலுடையனவாய், தம்முள் — தாமிரண்டும், ஒப்ப-சரியாய்ச்செல்லுகின்றன, எழு - அடியாரை, ஒருவு அரு — விடுதலில்லாத, குணத்து — சுவாமித்த குணத்தையுடைய, வள்ளல் — பரமோதாரரானபெருமாள், ஓர் — ஒப்பற்ற, உயிர் — தம்முயிரையொத்த, தம்பியோடும் — இளையபெருமாளோடுகூட, இருவரும் - அவ்விருவரும், முன்னர் — திருவடிக்கு முன்னே, சென்றால் ஒத்த — செல்லுவதானுல் அதை ஒப்பாயிருந்தன் பய, அவ்விரண்டுபாலும் — அனுமாரிரு புறத்திலும்—எ-று. 39

இனிவருஞ்செய்யுள்முதல் 12-செய்யுளும் மைந்நாகமலை
கடலிலிருந் தெழுந்ததைச் சொல்லும்.

வேறு.

இந்நாகமன்னுனெறிகாலெனவேகும்வேலை
திந்நாகமாவிற்செறிகீட்டிசைக்காவல்செய்யும்
மைந்நாகமந்நாள்கடல்வந்தெதொர்காட்சிதோன்ற
மைந்நாகமென்னுமலைவானுறவந்ததன்றே.

இ-ள். இந்நாகம் அன்னுன் - இந்த மலைபோன்ற திருவடி, எறிகால் என — மோதுகிறவாயுப்போல, ஏகும்வேலை — போகும்போது, திந்நாகமா

வில் – திக்கஜங்களில், செறி – கனம்பொருந்தின, கீட்டிசை – கீழைத் திக்கை, காவல்செய்யும் – சுமந்து நிற்பதான பாலனஞ்செய்வதான, கைந் நாகம் – துதிக்கையையுடைய ஐராவதமானது, அந்நாள் – கடைந்த அப் போது, கடல் – கடலிலிருந்து, வந்தது – எழுந்ததான, ஓர்காட்சி – ஒரு தோற்றம், தோன்ற – அனுமாருக்குத்தெரிய, மைந்நாகமென்னுமலை எழு, வான் உற – ஆகாயத்தைத் தொடுவதாக, வந்தது – கிளர்ந்தது எழுந்தது, பய—எ-று. அரிமா ஆண்சிங்கம் – நாகமா ஆண்யானை – திக்குநாகம் திந்நா கம் எனக் கடைக்குறையாய் மரீஇயது தொகுத்த லெனவுமாம். 40

மீயோங்குசெம்பொன்முடியாயிரமின்னிமைப்ப
ஓயாவருவித்திரளுத்தரியத்தையொத்த
தீயோருளராகியதாலவர்தீமைதீர்ப்பான்
மாயோன்மகரக்கடனின்றெழுமாண்பதாகி.

இ-ள். மீ ஓங்கு – மேலே உயர்ந்த, செம்பொன்முடி – சிவந்த பொன் னிறச் சிகரங்கள், ஆயிரம் – பத்துநூறும், மின் இமைப்ப – ஒளிகொண் டொளிர, ஓயா – விடாதொழுகுகிற, அருவித்திரள் – அருவியினதுதிரட்சி, எழு—உத்தரீயத்தை பீதாம்பரமான அங்கவத்திரத்தை, ஒத்த – ஒப்பாயின, பய – தீயோர் – கொடியவர்கள், உளர் ஆகியதால் – உண்டாயிருத்தலாலே, அவர் – அந்தக் கொடியவர்களுடைய, தீமை – கொடுமையை, தீர்ப்பான்- தொலைப்பதற்காக, மாயோன்-ஆச்சரியகுண சேஷ்டிதனான எம்பெருமான், மகரம் – மகர மீன்களையுடைய, கடல் நின்று – கடலிலிருந்து, எழு – ஆயி ரந்தலைகளுடனே எழுந்த, மாண்பது ஆகி – பெருமையுள்ளதுவாய் மைந்நாக மென்னு மலை வான் உறவந்தது—எ-று. 41

நூலேந்துகேள்விநுகராப்புலனோக்கலுற்றார்
போலேந்திநின்றவனியாண்மெய்பொறாதுநீங்கக்
காலாழ்ந்தழுந்திக்கடல்புக்குழிக்கச்சமாகி
மாலேந்தவோங்குநெடுமந்தரமேயுமான.

இ-ள். நூலேந்து – ஞான நூல்கள்கொண்ட, கேள்வி – பொருட் கேள்விகளை, நுகரா – அநுபவியாமல் கேளாமல், புலன் – விஷயங்களை வேடிக்கைகளை, நோக்கலுற்றார்போல் – பார்க்கப்போகிற சிறுபிள்ளைகளைப் போல், ஏந்தி நின்று – முன்னேதாங்கி நின்றபின், அவனியாள்-பூமிதேவி யானவள், மெய்பொறாது – உடம்புதாங்க மாட்டாமல், நீங்க-விலகிப்போக அவ்வளவில், கால் – (சந்திரனாகிய) தூணும், ஆழ்ந்து – அமிழ்ந்து, அழுந்தி- (மத்தாகியமலையும்) அமிழ்ந்து, கடல் – கடலும், புக்குழி – கீழேபோன போது, கச்சம் ஆகி – ஆண்மைவடிவுகொண்டு, மால் – திருமாலானவர், ஏந்த – கீழேசென்றுதாங்க, ஓங்கு – அப்போதுயர்ந்த, நெடு – நீண்ட, மந்தர மேயும் – மந்தர கிரியைச்சொன்னாலும், மான – ஒப்பாக வானுறதந்தது— எ-று. கச்சபம் - கச்சமெனத தொகுத்து நிற்கிறது. 42

தள்ளற்கருநற்சிறைமாடுதழைப்பொடோங்க
எள்ளற்கருநன்னிறமெல்லையிலாதபுல்ல
வள்ளற்கடலைக்கெடநீக்கிமருந்துவவ்வி
உள்ளூற்றெழுமோருவணத்தரசேயுமொத்த.

இ-ள். தள்ளற்கு அரு – (இந்திரனாலே) வெட்டுதற்குக்கூடாத, நற்சிறை- நல்ல சிறகுகள், மாடு – இருபுறத்திலும், தழைப்பொடு – அடிக்கொள்ளுத லுடனே, ஓங்க – உயர்ந்துதோற்ற, எள்ளற்கு அரு – பழித்தற்குக் கூடாத, நன்னிறம் - நல்ல நிறமானவை, எல்லையிலாத – அளவில்லாதவை, புல்ல- பொருந்த, வள்ளல் – கொடுத்தலையுடைய, கடலை – சமுத்திராஜனை, கெட நீக்கி – தோற்கச்செய்துபின்பு, மருந்து – அமுதகலசத்தை, வவ்வி – எடுத் துக்கொண்டு, உள்ளூற்று – கடலுள்ளிருந்து, எழும் – எழுவதான, ஓர் – ஒப் பில்லாத, உவணத்து – பக்ஷிகளுக்கு, அரசேயும் – அரசனை கருடனைச் சொன்னாலும், ஒத்தது – மலையெழுந்தது ஒத்ததாயிற்று—எ-று. 43

ஆன்றுநெடுநீரிடையாதியோடந்தமாகித்
தோன்றுதுநின்றனருடோன்றிடமுந்துதோன்று
மூன்றுமுலகத்திடைமுற்றுயிராயமற்றும்
ஈன்றனையீன்றசுவணத்தனியண்டமென்ன.

இ-ள். ஆன்று ஆம் – அகன்றிருப்பதாகிய, நெடுநீரிடை - கடலிலே, ஆதியோடு – முதலாதலுடனே, அந்தமாகி — முடிவுமாகி, தோன்றுது- கண்ணுக்குத் தோற்றாமல், நின்றான்-இருப்பவனான திருமாலினது, அருள் தோன்றிட – காருண்ணியமுண்டாக, முந்துதோன்றி – (எல்லாருக்கு) முன் னேபிறந்து, மூன்றும் - மூவகையான, உலகத்திடை-உலகத்திலே, முற்று- முழுதும், உயிராய — உயிராகியவைகளையும், மற்றும் - உயிரில்லாதவைகளை யும், ஈன்றனை — பெற்றநான்முகனை, ஈன்ற – பெற்ற, சுவணத்தனி அண்ட மென்ன - இரணிய கருப்பமான ஒப்பில்லாத அண்டம்போலவும் வானுற வந்தது—எ-று. 44

இந்நீரினென்னைத்தருமெந்தையையெய்தியன்றிச்
செய்ந்நீர்மைசெய்யேனெனச்சிந்தனைசெய்துநொய்தின்
அந்நீரில்வந்துமுதலந்தணனாதிநாளம்
முந்நீரின்மூழ்கித்தவமுற்றிமுளைத்தவாபோல்.

இ-ள். இந்நீரில் — இந்த மகோததியிலே, என்னைத்தரும் - என்னைத்தரு வதானபெற்ற, எந்தையை - எனதுதந்தையை, எய்தியன்றி — யான்கண்டா லல்லது, செய்ந்நீர்மை - செய்யுங்காரியங்களை, செய்யேனென – செய்ய மாட்டேனென்று, சிந்தனைசெய்து – பகவானைத் தியானித்துக்கொண்டு, நொய்தில் – விரைவில், அந்நீரில் — அந்த மகார்ணவத்திலே, வந்து-புகுந்து, முதலந்தணன் – ஆதிவேதியனான நான்முகன், ஆதிநாள் – உலகந்தோன்

றுங் காலத்திலே, அ - அந்த, முந்நீரில் — கடலிலே முழுகி, தவமுற்றி - தவத்தைமுடித்து, முளைத்தவாபோல் - மேலே கிளர்ந்தாற்போலவும் வந்தது, எ-று. செந்நீர்மை என்றால் - செவ்வையான குணச்செய்கைகளையென்க. அந்நீரில் - தானினைத்த அப்படியே என்றுமாம். 45

பூவாலிடையூறுபுகுந்துபொறுதநெஞ்சின்
கோவாமுனிசீறிடவாரிகுளித்தவெல்லாம்
மூவாமுதனாயகன்மீளமுயன்றவந்நாள்
தேவாசுரர்வேலையில்வந்தெழுதிங்களென்ன.

இ-ள். பூவால் - லட்சுமிதேவி யணிந்திருந்த பூமாலையாலே, இடை-இந்திரன்பவனிவரும்போது, ஊறுபுகுந்து - துன்பந்தோன்றி, பொறுத-அது பொறுக்காத, நெஞ்சின் - மனத்துடனே, கோவாமுனி-சிரேஷ்டரானதுருவாசமுனிவர், சீறிட - கோபங்கொண்டு சபிக்க அதனாலே, வாரி-கடலிலே, குளித்தவெல்லாம் — போனபொருள்களெல்லாம், மூவா — அழியாத, முதல் நாயகன் - முதற் கடவுளானதிருமால், மீள - திரும்பும்படி, முயன்ற — முயற்சிபண்ணின, அந்நாள் — அப்பொழுது, தேவாசுரர் — தேவர்களும் அசுரர்களும் கூடி நிற்கிற, வேலையில் - கடலிலே, வந்தெழு - வந்தெழுந்த, திங்களென்ன — சந்திரன்போலவும்வந்தது, கோவாமுனி - தேவருடனேசேராதமுனி கூடாதமுனி எனவுமாம்—எ-று. 46

நிறங்குங்குமமொப்பனநீனிறம்வாய்த்தநீர்தன்
இறங்கும்பவளக்கொடிசுற்றினசெம்பொனேய்ந்த
பிறங்குஞ்சிகரப்படர்முன்றிறொறும்பிணைவோ
டுறங்கும்மகரங்களுயிர்ப்பொடுணர்ந்துலாவ.

இ-ள். நிறம் — நிறமானது ஒரு புறத்திலே, குங்குமம் - குங்குமத்தை, ஒப்பன - ஒப்பனவாகியும், நீலநிறம்-ஒருபுறத்திலே கரியநிறத்தை, வாய்த்த-பொருந்தினவாகியும், நீரில் - ஜலத்திலே, இறங்கும்-வேர்வீழ்த்தியிருக்கிற, பவளக்கொடி - ஒருபுறம் பவளக்கொடிகள், சுற்றின - சூழ்ந்தனவாகியும், செம்பொன் - ஒருபுறம் சிவந்தபொன்னிறத்தை, ஏய்ந்த - பொருந்தினவாகியும், பிறங்கும் - விளங்குகின்ற, சிகரம் - அந்த மலைச்சிகரங்களான, படர்-பரவுதலாகிய, முன்றில்தொறும் - வெறு நிலங்களெல்லாம், பிணைவொடு-பெண்மீன்களுடனே, உறங்கும் - தூங்குவனவான, மகரங்கள்-மகரமீன்கள், உயிர்ப்பொடு - சுவாசம் விடுதலுடனே, உணர்ந்து - நித்திரைதெளிந்து, உலாவ - மேலெல்லாஞ் சஞ்சரிக்க வானுறவந்தது—எ-று. 47

கூன்சூன்முதிரிப்பிகுரைக்கதிரைத்தபாசி
வான்சூழ்மழையொப்பவயங்குபளிங்குமுன்றி
றான்சூலநாணிற்றகைமுத்தமுயிர்த்தசங்கம்
மீன்சூழ்வருமம்முழுவெண்மதிவீறுகிற.

இ-ள். கூன் – வளைவானவைகளாய், சூல் முதிர் — கருப்பமுதிர்வை யுடைய, இப்பி - இப்பிகள், குரைக்க — ஒலிக்க, நிரைத்த – அவைகள் பதித லான, பாசி - பாசிகள், வான்சூழ் - ஆகாயத்திலே சஞ்சரிக்கிற, மழை மேகங்களை, ஒப்ப — நிகராக, வயங்கு — விளங்குகின்ற, பளிங்கு - பளிங்குப் பாறையான, முன்றில் - வெறு நிலங்களிலே, சூல-கருப்பத்தைப்பெறுகிற, நாளில் - காலத்திலே, தகை – பெருமைகொண்ட, முத்தம் – முத்துக்களை, உயிர்த்த – பெற்ற, சங்கம் தான் — சங்கானது, மீன்சூழ்வரும் — நக்ஷத்திரங் கள் சூழ்வதாகவருகிற, அ — அந்த, முழுவெண்மதி – வெள்ளிய பூரணச் சந் திரனது, வீறுகிற — பெருமையைக் குலைக்கவும் வந்தது—எ-று. இப்பிகுரை த்தலே மேக கர்ச்சிதமாகவும் பாசியே மேகமாகவும் பளிங்குப்பாறையே நிலாப்பரவின ஆகாயமாகவும், முத்துகளே – நக்ஷத்திரங்களாகவும், சங்கே- பூரணச்சந்திரனாகவும், சுக்கிலபக்ஷத்தாகாயம்போல் மலைவந்ததென்க. 48

பல்லாயிரமாயிரங்காசினம்பாடிமைக்கும்
கல்லார்சிமயத்தடங்கைத்தலநீண்டுகாட்டத்
தொல்லார்கலியுட்புகமூழ்கிவயங்குதோற்றத்
தெல்லாமணியீட்டமுகந்தெழுகின்றதென்ன.

இ-ள். பல்லாயிரமாயிரம் – அசங்கியேயங்களான, காசினம் – ரத்நவ கைகள், பாடு — பக்கங்களெல்லாம், இமைக்கும் – மின்னுகின்ற, கல் ஆர்- அந்தமலையினது, சிமையம் – சிகரமாகிய, தடம் – நெடிய, கைத்தலம்-கையா னது, நீண்டுகாட்ட – நீண்டுதோன்ற, தொல் — பழையதான, ஆர்கலியுள்- கடலிலே, புகமூழ்கி — அழுந்த முழுகி, வயங்கு — அங்கே விளங்குகின்ற, தோற்றத்து - ஒளியையுடைய, எல்லாமணி யீட்டம் - மணியீட்டமெல்லாம் நவரத்ந வகைகளெல்லாம், முகந்து – வாரிக்கொண்டு, எழுகின்றதென்ன- முத்துக்குளித் தெடுக்கமுழுகினவன் எழுகிறதுபோலவும் வந்தது—எ-று. மலைச்சிகரமே முழுகி எழுகிறவன் நீட்டுங்கையாகவும், சிகரத்திலுள்ள ரத் நங்களே அவன்வாரிவருகிற ரத்நங்களாகவும், அம்மலையே முழுகினவனாக வுங்கொள்க. 49

மனையிற்பொலிமாகநெடுங்கொடிமாலையேய்ப்ப
வினையிற்றிரள்வெள்ளருவித்திரடூங்கிவீழ
நினைவிற்கடலூடெழலோடுமுணர்ந்துநீங்காச்
சுனையிற்பனைமீன்றிமிலோடுதொடர்ந்துள்ள.

இ-ள். மனையில் – வீடுகளிலே, பொலி — நிரம்ப நிற்கிற, மாகம் - ஆகா யத்தளவும், நெடும் — நீண்டுதொங்குகிற, கொடிமாலை – கொடிவரிசைகளை, ஏய்ப்ப – ஒப்பாக, வினையில் – புண்ணியச் செய்கைபோல், திரள் – திரண்டு விழுகிற, வெள் - வெண்மையான, அருவித்திரள் - அருவிமாலைகள், தூங்கி- நிலைகொண்டு, வீழ – இறங்கவும், நினைவில் – திருவடியைக் காணவேணு மென்கிற நினைவுகொண்டு, கடலூடு — கடலுக்குள்ளிருந்து, எழலோடும்-அம்

மலை எழுமளவில், உணர்ந்தும் - நித்திரை தெளிந்தும், நீங்கா — அந்தமலையினின்று நீங்காமல், சுனையில் — அந்தமலையிலுள்ள சுனைகளிலே, பனைமீன்-பனைமீன்கள், திமியோடு — திமியென்னு மீன்களுடனே, தொடர்ந்து-கூடி, துள்ள - புரண்டுவிழவும் வந்தது—எ-று. 50

கொடிநாலொடிரண்டுகுலப்பகைகுற்றமூன்றும்
சுடுஞானம்வெளிப்படவுய்த்ததுயக்கிலார்போல்
விடநாகமுழைத்தலைவிம்மலுழன்றுநீங்க
நெடுநாள்பொறையுற்றவுயிர்ப்புநிமிர்ந்துநிற்ப.

இ-ள். கொடு — கொடுமைசெய்கிற, நாலொடிரண்டுகுலம் — ஷட்வர்க்கங்களானகாமாதி, பகை — விரோதங்களையும், குற்றமூன்றும் — ஆணவகாமியமாயைகளானமும்மலங்களையும், சுடு — தகிப்பதான,ஞானம்-மெய்யறிவு, வெளிப்பட — தோன்ற, உய்த்த — முன்னேகொண்டிருந்த, துயக்கு — சந்தேகம், இலார்போல் — தீர்ந்தவர்களைப்போல், விடம் - நஞ்சையுடைய, நாகம்-பாம்புகள், முழைத்தலை — புற்றிலேகிடந்து, விம்மல் — நெருக்கத்தினாலே, உழன்று — வருந்தி, நீங்க — அவை தீர்ந்துசொல்வனவாக, நெடுநாள்-நெடுங்காலமும், பொறையுற்ற — பொறுத்திருந்த, உயிர்ப்பு — சுவாசம், நிமிர்ந்து-நீளவிடுதலாகி, நிற்ப — திருவடிக்குமுன்னே வானுற வெழுந்துநிற்க—எ-று. பகையாவன, காமக்குரோத லோபமோக மதமாச்சரியங்கள். குற்றமாவன-ஐயந்திரிபு அறியாமை எனவுமாம். 51

எழுந்தோங்கிவிண்ணோடுமண்ணொக்கவிலங்குமாடி
உழுந்தோடுகாலத்திடையும்பரினிம்பரெங்கும்
கொழுந்தோடிநின்றகொழுங்குன்றைவியந்துநோக்கி
அழுங்காமனத்தண்ணலிதென்கொலெனுவயித்தான்.

இ-ள். எழுந்து — அப்படிநிமிர்ந்து, ஓங்கி — உயர்ந்து, விண்ணோடு-ஆகாயமும், மண் — பூமியும், ஒக்க — ஒருசரியாக, இலங்கும் — விளங்குவதான, ஆடி — கண்ணாடியிலே, உழுந்து — இட்டவுழுந்து, ஓடுகாலத்திடை — உருண்டு நிற்குமளவில், உம்பரின் — மேலும், இம்பர் — கீழும், எங்கும் — நாலுபக்கமும், கொழுந்து — முடிக்கொழுந்தும் வேர்க்கொழுந்தும், ஓடி — நீண்டு — நிற்கிற, கொழும் — செழுமையான, குன்றை — மைந்நாகமலையை, வியந்து — அதிசயித்து, நோக்கி — பார்த்து, அழுங்கா — எதற்கும் சலியாத, மனத்து — மனத்தையுடைய, அண்ணல் — அனுமார், இது என்கொலெனு — இதுயாதோ என்று, அயிர்த்தான் — சந்தேகித்தார்—எ-று. 52

நீர்மேற்படாநெடுங்குன்றுநிமிர்ந்துநிற்றல்
சீர்மேற்படாதெனச்சிந்தையுணர்ந்துசெல்வான்
வேர்மேற்படவன்றலைகீழ்ப்படநூக்கிவிண்ணோர்
ஊர்மேற்படாக்கடிதும்பரின்மீதுயர்ந்தான்.

இ-ள். செல்வான் — நீர்மேற்செல்லுகின்ற அனுமார், நீர்மேல் – இந்த ஜலத்தின்மேல், படர்ஆ — நான்செல்லாமல், நெடுங்குன்று — இந்த நெடிய மலை, நிமிர்ந்து – உயர்ந்து, நிற்றல் — நிற்கிறதினாலே, மேல்-இனி, சீர்-நமது செல்லுஞ்செய்கை, படாது என - செல்லாதென்று, சிந்தை – மனத்திலே, உணர்ந்து – தெரிந்து, வேர் - அந்த மலையினடியானது, மேற்பட – மேலாகவும், வன்தலை – அதனது வலியமுடியானது, கீழ்ப்பட – கீழாகவும், நூக்கி-புரளத்தள்ளி, விண்ணோர் - தேவர்களுடைய, ஊர்மேல் - சுவர்க்க லோகத்துக்குமேலே, படர — செல்வதாக, கடிது – விரைவிலே, உம்பரின்மீது-ஆகாயத்தின்மேல், உயர்ந்தான் — கிளம்பினார்—எ-று. பய 53

உந்தாமுனுலைந்துயர்வேலையொளித்தகுன்றம்
சிந்தாகுலமுற்றதுபின்னருந்தீர்விலன்பால்
வந்தோங்கியாண்டோர்சிறுமானிடவேடமாகி
எந்தாயிதுகேளெனவின்னவிசைத்ததன்றே.

இ-ள். உந்தாமுன் – அப்படித் தள்ளுமுன்னே, உலைந்து - வருந்தி, உயர்வு உலைந்து - தன் உயர்ச்சி குறைந்து, உயர்வேலை – அலைகளுயருகிற கடலிலே, ஒளித்த – நெடுங்காலம் ஒளிந்திருந்த, குன்றம் – மலையானது, சிந்தாகுலம் – மனோதுக்கம், உற்றது – உள்ளதாகி, பின்னரும்-பின்னும், தீர்வு இல் — விடுதலில்லாத, அன்பால் —பிரீதி யிருத்தலாலே, வந்து - எழுந்து, ஓங்கி — (அனுமார் செல்லுமுயரத்தளவும்) உயர்ந்து, ஆண்டு – அவ்விடத்தே, ஓர் – ஒரு, சிறுமானிடவேடமாகி — சிறியமனிதவடிவுகொண்டு, எந்தாய்-என் அப்பனே, இது - இந்தவார்த்தையை, கேளென - கேட்டியென்று, இன்ன – இனிச் சொல்லுமவைகளை, இசைத்தது-சொல்லிற்று, பய-எ-று. குன்று – எழு. 54

வேற்றுப்புலத்தோனெனலையவிலங்கலெல்லாம்
மாற்றுச்சிறையென்றரிவச்சிரமாணவோச்ச
வீற்றுப்படநூறியவேலையின்வேலையுய்த்துக்
காற்றுக்கிறைவனெனைக்காத்தனனன்புகாக்க.

இ-ள். ஐய – அப்பனே, வேற்றுப்புலத்தோன் —என்னை சத்துருவைச் சேர்ந்தவன், எனல் – என்றுகொள்ளாதி, விலங்கலெல்லாம் — மலைகளையெல்லாம், சிறைமாற்று என்று – சிறகுவெட்டென்று தேவர்சொல்ல, அரி-இந்திரனானவன், வச்சிரம் – தன்வச்சிராயுதத்தை, மாண - தனதுபெருமை தோன்ற, ஓச்ச – வெட்டுமளவில், வீற்றுப்பட – இறகுகள் வேறுவேறாக நூறியவேலையில் – வெட்டுகிறபோது, எனைவேலை உய்த்து – என்னை இந்தக் கடலிலே கொண்டுவந்துதள்ளி, காற்றுக்கு இறைவன் - வாயுபகவான் எழு, காத்தனன் – ரக்ஷித்தான் பய, அன்புகாக்க – அவனிடத்தில் நான் விசுவசித்திருக்க—எ-று. 55

அன்னனருங்காதலனுதலினன்புதூண்ட
என்னனுனக்கிண்டுசெயற்கரிதாயதின்மை
பொன்னூர்சிகரத்திடையாறிபோதியேனும்
உன்னலுயர்ந்தேனுயர்விற்குமுயர்ந்ததோளாய்.

இ-ள். அன்னன் – அந்த வாயுபகவானுக்கு, அரும் காதலன் – அருமைக்குமாரன், ஆதலின் – நீர் ஆகையாலே, அன்பு தூண்ட – அந்தப் பிரீதி நிரம்பி நீள, என்னால் உனக்கு – என்னாலே உமக்கு, ஈண்டு - இவ்விடத்திருந்து, செயற்கரிதாயது – செய்தற்கு அருமையான உபசாரம், இன்மையேனும் – இல்லை ஆனாலும், பொன் ஆர் – பொன்னொளி நிரம்பின, சிகரத்திடை – எனது தலைமேலே நின்று, ஆறினை-இளைப்புத் தீர்ந்தீராகி. போதிபோம் – போவீரென்று, உன்னல் – உமது நிமித்தமாகவே, உயர்ந்தேன்- மேலெழுந்தேன், உயர்விற்கும் – என் உயர்வைக்காட்டிலும், உயர்ந்த-உயர்தலான, தோளாய் – புஜங்களையுடையவரே, உன்ன வுயர்ந்தேனென்றும் பாடம் நினைத்துவந்தேன் என்க—எ-று. இச்செய்யுள்போல்வன எல்லாம் தொடர் நிலைகள் – பயனிலைகளை ஆங்காங்குக் காண்க. 56

கார்மேகவண்ணன்பணிபூண்டருங்காலின்மைந்தன்
தேர்வான்வருகின்றதுசீதைபைத்தேவருய்யப்
பேர்வானயல்சேறியிதிற்பெறும்பேறிலென்ன
நீர்வேலையுமென்னையுரைத்தது நீதிநின்றாய்.

இ-ள். கார்மேகவண்ணன் - நீலமேகவண்ணனான ஸ்ரீராமனுடைய, பணி பூண்டு – உத்தரவினாலே, அரும் – அரிதான வருத்தங்கொண்டு, காதலின் மைந்தன் – வாயுபுத்திரன், வருகின்றது - வருகிறகாரியம், சீதையை – சீதை இருக்குமிடம், தேர்வான் - தெரிகிறதற்கு, தேவர் உய்ய- அக்காரியமோ தேவர்கள் உஜ்ஜீவிக்க, பேர்வான் – செல்லுகிற, அனுமாருக்கு அயல் – இளைப்புத்தீரும் இடமாக நேரே, சேறி – செல்லு, இதில்- இதை அன்றி, பெறும்பேறு – பெறுவதாகிய பலன், இல்லென்ன - வேறில்லையென்று, நீர் – ஜலரூபமான, வேலையும் - கடற்றெய்வமும், என்னை- எனக்கு, உரைத்தது – சொல்லிற்று, நீதி-நல்ல நீதிநூல்வழியிலே, நின்றாய்- நிலைகொண்டுள்ளவரே—எ-று. 57

நற்றாயினுநல்லனெனக்கிவனென்றுநாடி
இற்றேயிறையெய்தினையேய்ந்ததுகோடியென்னால்
பொற்றாரகன்மார்பதம்மில்லுழைவந்தபோதே
உற்றார்செயன்மற்றுமுண்டோவெனவுற்றுரைத்தான்.

இ-ள். இவன் – இப்படிச் சொல்லுகிறவன், எனக்கு — செல்லுகிற நமக்கு, நற்றாயினும் – நல்ல தாயைப்பார்க்கிலும், நல்லன் என்று நாடி – நல்லவனென்றுகொண்டு, இற்றே – இப்படியே, இறை எய்தினை – கொஞ்சம் வந்திருந்து, என்னாலேய்ந்து – என்னாலே செய்யத்தக்கதை, கோடி – அங்கீ

கரியும், பொன்தார்—பொன்மாலை யணிவதான, அகல்—அகன்ற, மார்பு-மார்பையுடையவரே, தம்—தமக்குரியதான. இல்லுழை—வீட்டிற்கு ஒருவர், வந்தபோதே - வந்தால், உற்றார் - அவருக்குறவானவர், செயல் - செய்யத்தக்கது, உபசாரமும்—விருந்தும் அல்லாமல், மற்றும்உண்டோ - வேறுவகைகளும் உளவோ, என - என்று, உற்று - நெருங்கிநின்று, உரைத்தான்-சொன்னான் மைந்நாகன்—எ-று. 58

உரைத்தானுரையாலிவனூறிலனென்பதுன்னி
விரைத்தாமரைவாண்முகம்விட்டுவிளங்குவீரன்
சிரித்தானளவேசிரித்தத்திசைசெல்லநோக்க
வரைத்தாணெடும்பொற்குடுமித்தலைமாடுகண்டான்.

இ-ள். உரைத்தானுரையால்—அப்படிச் சொன்னவன் சொற்களாலே, இவன் - இப்படிச்சொல்லுகிறவன், ஊறிலன் - தோஷமில்லாதவன், என்பதுன்னி - என்பதுதெரிந்து, விரை - மணம்பொருந்தின, தாமரை - கமலமலர்போன்ற, வாள் - ஒளிபொருந்தின, முகம் - தமதுமுகமானது, விட்டு-விகசிதமாய், விளங்குவீரன் - விளங்குகிற அனுமார், சிரித்தான் அளவே-சந்தோஷித்தவராய் அப்போதே, சிரித்து—மந்தகாசத்துடனே, அத்திசை செல்வ—அவன்சொன்ன இடத்திற்குப்போக, நோக்க - உத்தேசிக்க அப்போது, வரைதாள்—அடிக்கொண்டு நிற்கிற அந்தமலையினது, நெடும்-நீண்ட, பொன் - பொன்மயமான, குடுமி—சிகரமாகிய, தலை—முடியை, மாடு - தமதுபக்கந்தோன்ற, கண்டான் - பார்த்தார் - பய—எ-று. 59

வருந்தேனதுவென்றுணைவானவன்வைத்தகாதல்
அருந்தேனினியாதுமென்னுசைநிரப்பினல்லால்
பெருந்தேன்பொழிசாரனின்னன்புபிணித்தபோதே
இருந்தேனுகர்ந்தேனிதினூஉங்கினியீவதுண்டே.

இ-ள். வருந்தேன்—நான் எப்போதும் வருத்தமடையேன், அது-அப்படி நான் வருந்ாதிருப்பது, என் துணை - எனக்குத்துணையான, வானவன்-தெய்வமாகிய, ஸ்ரீராமன் வைத்த—என்னிடத்துச் செய்துவைத்திருக்கிற, காதல்— தயவினாலே, இனி— இனிமேல், என் ஆசை-எனதுவேண்டுகோளை, நிரப்பின அல்லால் - அத்தெய்வம் முடித்தாலல்லாது, யாதும் அருந்தேன்-எதையும் புசியேன், பெருந்தேன் - மிகுதியாகத்தேனை, பொழி - சிந்துகின்ற, சாரல் - பக்கங்களையுடைய, நின் அன்பு-உம்முடைய பிரீதியினாலே, பிணித்தபோதே - என்னைப் பற்றிக்கொண்டபோதே, இருந்தேன் - இதோ உம்மிடத்தேதங்கினேன், நுகர்ந்தேன் - விருந்துபுசித்தேன், இதின் ஊங்கு-இந்த அன்பின்மிக்கதாய், இனி—இன்னமும், ஈவது - கொடுப்பதும் செய்வதும், உண்டே—உண்டா—எ-று. 60

முன்பிற்சிறந்தாரிடையுள்ளவர்காதன்முற்றப்
பின்பிற்சிறந்தார்குணநன்றிதுபெற்றயாக்கைக்

கென்பிற்சிறந்தாயதோரூற்றமுண்டென்னலாமே
அன்பிற்சிறந்தாயதொர்பூசனையார்கணுண்டே.

இ-ள். காதல்முற்ற – ஆசை நிரம்ப கொடுப்பதில், முன்பில் – முற்காலத்திலே, சிறந்தார் — சிறந்த முதல்வள்ளல்களும், இடை உள்ளவர்-நடுவிலுள்ள நடுவெள்ளல்களும், பின்பிற்சிறந்தார் – பின்புள்ள கடைவள்ளல்களும், குணம் – கொண்டகுணமே, நன்று – மிகவு நல்லது, இதுபெற்ற – இக்குணத்தைக்கொண்ட, யாக்கைக்கு – உடம்புக்கு, என்பில் – ததீசி மகாமுனி கொடுத்த முதுகெலும்பிலும், சிறந்தாயது – சிறந்துள்ளவான, ஓர் ஊற்றம் – ஒருறுதிப்பொருள், உண்டு – உளது, என்னலாமே-என்றுசொல்லக்கூடுமா, அன்பில் – அப்படி எலும்பைக்கொடுப்பதும் அன்பினாலே ஆதலால், சிறந்தாயது – சிறந்துள்ளதான அவ்வன்பிலும், ஓர் பூசனை – ஒரு உபசாரம், யார் கண் உண்டு – யாரிடத்தே உள்ளதாம்—எ-று. ஏ – அசை, இல்லையென்றுமற்கொடுப்பவர் – முதல்வள்ளல்கள், வேண்டக் கொடுப்பவர் இடைவள்ளல்கள், புகழக்கொடுப்பவர் – கடைவள்ளல்கள், ஆதலால் உமதன்மை அல்லது மற்றொன்றும் வேண்டியதில்லையென்று கருத்து. 61.

ஈண்டியான்கடிதேகியிலங்கைவிலங்கலெய்தி
ஆண்டானடிமைத்தொழிலாற்றலினுற்றலுண்டேல்
மீண்டியானுகர்வென்னல்விருந்தெனவேண்டிமெய்ம்மை
பூண்டானவன்கட்புலம்பிற்படமுந்துபோனான்.

இ-ள். ஈண்டு — இங்குநின்றும், யான – நான், கடிது – விரைவிலே, ஏகி-சென்று, இலங்கை – இலங்காபுரியாகிய, விலங்கல் — மலைக்கு, எய்தி-போய், ஆண்டான் — ஸ்ரீராமனாகிய ஆண்டவனுக்கு, அடிமைத்தொழில்-அடிமையானசெய்கையை, ஆற்றலின் — செய்வதிலே, ஆற்றல் — சக்தி, உண்டேல் — மெய்யே உள்ளதானால், மீண்டு — திரும்பிவந்து, யான் — நான், நுகர்வென் – புசிப்பேன், நல்விருந்தென — நீர்செய்யுநல்லவிருந்தையென்று, வேண்டி – தம்மைவிரும்பி, மெய்ம்மை – மெய்யான அன்பு, பூண்டான்-கொண்டவனான, அவன் – அந்தமைந்நாகனுடைய, கட்புலம் — கண்ணறிவு, பிற்பட – பின்னேதொடர, முந்து – முன்னேநோக்கி, போனான் – சென்றார் அனுமார்—எ-று. 62.

செவ்வான்கதிருங்குளிர்திங்களுந்தேவர்வைகும்
வெவ்வேறுவிமானமுமீனொடுமேகமற்றும்
எவ்வாயுலகத்தவுமீண்டியிருந்ததம்மின்
ஒவ்வாதனவொத்திடவூழிவெங்காலுமொத்தான்.

இ-ள். செவ்வான்கதிரும்-சிவந்தபெரிதானசூரியனும், குளிர்திங்களும் — குளிர்ந்தசந்திரனும், தேவர் — தேவர்கள், வைகும் – தங்குவதான, வெவ்வேறு – பல வேறுவகையான, விமானமும் – விமானங்களும், மீனொடு-நக்ஷத்திரங்களும், மேகம் – மேகங்களும், மற்றும் – இன்னமுள்ளவைகளும்,

எவ்வாய் — எந்தஎந்த இடங்களிலுள்ள, உலகத்தவும் — உலகங்களிலுண்டான யாவும், ஈண்டியிருந்த — கூடியிருந்தவைகள், தம்மின் — தம்முள்ளே, ஒவ்வாதன — ஒன்றோடொன்று சேராதவைகளெல்லாம். ஒத்திட — ஒருசேர்க்கையாகும்படி, வெம் — வெவ்விதான, ஊழிக்காலும் — ஊழிக்காற்றையும், ஒத்தான் — ஒப்பதானார்திருவடி—எ-று. ஈண்டியிருத்தலாவது — தனித்தனியே ஓரிடத்திற்கூடியிருத்தல், முன் சூரியனுக்கோரிடம் — சந்திரனுக்கோரிடம் — மற்றைக்கிரகங்களுக்கும் வெவ்வேறிடம், இப்போது எல்லாம் ஓரிடத்தைச்சேர்தலாயின அனுமார்செல்லும்வேகத்தால் என்க. 63

நீர்மாக்கடன்மேனிமிர்கின் றநிமிர்ச்சிநோக்காப்
பார்மேற்றவழ்சேவடிபாய்நடவாப்பதத்தே
தேர்மேற்குதிகொண்டவனித்திறன்சிந்தைசெய்தான்
ஆர்மேற்கொலென்றெண்ணியருக்கனுமையமுற்றான்.

இ-ள். நீர் - மூவகைநீரையுடைய, மாக்கடல்மேல் — அந்தப் பெரிய கடலுக்குமேலே, நிமிர்கின்ற — உயர்ந்துசெல்லுகின்ற, நிமிர்ச்சி — உயர்வை, நோக்கா — பார்த்து, பார்மேல் — மண்மேல், தவழ் — செல்லுவனவான, சேவடி — சிவந்தகால்கள், பாய்நடவா — பரவிநடக்கப்படாத, பதத்தே — இடமான ஆகாயத்திலே செல்லுகிற, தேர்மேல் — தேரின்மேலே, குதிகொண்டவன் — நிலைகொண்டிருப்பவனான அருணன் நடவாதவாசல்களுடனே தேர்மேற்குதிகொண்டவன், இத்திறன் — இந்தவேகவலியை, சிந்தைசெய்தான் - ஆலோசித்தான், ஆர்மேல் என்று — யார்மேலேசெல்லுகிறதென்று சிந்தைசெய்தான், எண்ணி — அப்படியேநினைத்து, அருக்கனும் — சூரியனும், ஐயமுற்றான் — சந்தேகங்கொண்டான்—எ-று. கொல் — அசை, அருணனும் சூரியனும் ஓரிடத்தேயில்லாது செல்லுகிறவர்களாகையால்ஐயமுற்றாரென்க. ஊற்றுநீர் — ஆற்றுநீர் — மேகநீர் — ஆகமுந்நீர் என்க. 64

வாளொத்தொளிர்வாலெயிறூழின் மருங்கிமைப்ப
நீளொத்துயர்வாலின்விசும்புநிரம்புமெய்யன்
கோளொத்தவன்மேனிவிசும்பிருகூறுசெய்த
நாளொத்ததுமேலொளிகீழிருளுற்றஞாலம்.

இ-ள். வாள் — வாளாயுதத்தை, ஒத்து — ஒப்பாய், ஒளிர் — விளங்குகின்ற, வால்எயிறு — வெள்ளைப்பற்கள், ஊழின்-வரிசையாக,மருங்கு-வாயிருபுறத்திலும், இமைப்ப — விளங்க, அதனாலே — மேலெல்லாம் வெளிச்சமாயிருந்தன, நீள்-சூரியமண்டலத்தளவுநீளம், ஒத்து — சரியாய்,உயர் — உயர்ந்த, வாலின் — வாலாலே இராகுபோல, விசும்பு — ஆகாயமெல்லாம், நிரம்பு-நிறையும் ஒளியுள்ள, மெய்யன்-மண்டலாகிருதியானசூரியனை,கோள்ஒத்து-விழுங்கப்போதலை ஒப்பாய், அவன்-அந்த அனுமாருடைய, மேனி — சரீரநீளத்தாலும் பருமனாலும் நடுவேமறைவாதலால், விசும்பு — ஆகாயத்தை, இருகூறுசெய்த — இரண்டுபிரிவுபண்ணின, நாள்ஒத்தது-காலத்தை ஒப்பாயிற்று அதனாலே கீழெல்லாம் இருண்டிருந்தன, ஞாலமேல்-உலகத்துக்கு

மேலே, ஒளியுற்ற — பற்களாலொளிவிளங்கின, ஞாலக்கீழ் — உலகின்கீழ் சரீரமறைவாலே, இருளுற்ற — இருண்டிருந்தன—எ-று. 65

மூன்றுற்றதலத்திடைமுற்றியதுன்பம்வீப்பான்
என்றுற்றுவந்தான்வலிமெய்ம்மையுணர்த்துநீயென்
றூன்றுற்றவானோர்குறைநேரவரக்கியாகித்
தோன்றுற்றுநின்றாள்சுரசைப்பெயர்ச்சிந்தைதூயாள்.

இ-ள். மூன்றுற்ற — மூவகையாயிருக்கிற, தலத்திடை-உலகத்தில், முற்றிய — நிரம்புதலான, துன்பம் — துன்பங்களை, வீய்ப்பான் — போக்குதற்காக, என்றுற்று — உடன்பாடாகி, வந்தான் — வந்த அனுமாருடைய, வலிமெய்ம்மை — மெய்யானசக்தியை, நீ — நீபோய், உணர்த்தென்று — தெரியச்செய்கென்று, ஊன்றுற்ற-ஆகாயத்தில்கூடிநிற்கிறவானோர் — தேவர்கள், குறை-(தங்களுக்குள்ள) குறைவைச்சொல்லி, நேர — வேண்ட அவர்களுக்காக, அரக்கியாகி — ராக்ஷஸியாகி,தோன்றுற்று — (அனுமாருக்குமுன்னே) தெரிவதாகி, நின்றாள்-நிற்றலானாள், பய, சுரசை—சுரசையென்கிற, பெயர் — பெயரைக்கொண்டு, சிந்தை — மனசும், தூயாள் — பரிசுத்தையானவள்—எ-று. 66

பேழ்வாயொரரக்கியுருக்கொடுபெட்பினோங்கிக்
கோழ்வாயரியின்குலத்தாய்கொடுங்கூற்றுமுட்க
வாழ்வாயெனக்காமுணவாய்வருவாய்கொலென்னு
நீழ்வாய்விசும்பிற்றனதுச்சிநெருங்கிநின்றாள்.

இ-ள். பேழ்வாய் — அகன்ற வாயையுடைய, ஓரரக்கி — ஒருராக்ஷஸி, உருக்கொடு — வடிவைக்கொண்டு, பெட்பின் — (அனுமாரைத்தின்ன) ஆசையுடனே, ஓங்கி — உயர்ந்து, கோழ்வாய் — கொழுப்புக்கொண்ட, அரியின் குலத்தாய் — வானரகுலத்தையுடையவனே, கொடுங்கூற்றும் — கொடியயமனும், உட்க — அஞ்சும்படி, வாழ்வாய் — வாழுமவனே, எனக்கு ஆமுணவாய் — நல்லதான உண்டியாக, வருவாய்கொல்-(என்வாய்க்குள்) வருவாயோ, என்னு — என்று, நீள்வாய் — நெடுமைகொண்ட, விசும்பில் — ஆகாயத்திலே, தனது உச்சி — தன்தலையானது, நெருங்கி — நெருங்குவதாகி, நின்றாள்-எ-று. ஆமிடமாயென்று பாடமானாலும்பொருள் அதுவே, உணவையிடமென்ப திலக்கணை எனக்கு உணவாதற்கிடமாயென்க. நீள் - நீழ், என்பதினவெதுகை. 67

தீயேயெனலாயபசிபசிப்பிணிதீர்த்தல்செய்வாய்
ஆயேவிரைவுற்றெனையண்மினைவண்மையாளா
நீயேயினிவந்தெனிணங்கொள்பிணங்கெயிற்றின்
வாயேபுகுவாய்வழிமற்றிலைவாணியெனன்றாள்.

இ-ள். தீயேயெனலாய — உதராக்கினியென்பதான, பசிப்பிணி-எனது பசிநோயை, தீர்த்தல் — நீக்குதல், செய்வாயாயே - செய்யுமவனாகியே,

விரைவுற்று - அதிகவிரைவுகொண்டு, எனை அண்மினை - என்னைக்கிட்டினை, வண்மையாள - ஓ கொடையாளியே, நீயே இனி - இனி நீதானே வந்து- என் - எனது, நிணங்கொள் - மாமிசம்புகுந்துகொண்டிருக்கிற, பிணங்கு- வளைவுள்ள, எயிற்றின் - பற்களையுடைய, வாயே - வாய்க்குள்ளேபுகுவாய் நுழைவாயாக. மற்றுவழியிலை - வேறேவழியில்லை, வானில் - ஆகாயத்தில், என்றாள் - என்றுசொன்னாள் - எ-று. அதற்கு அனுமார் சொல்லுகிறது வருங்கவி. 68

பெண்பாலொருநீபசிப்பீழையொறுக்கநொந்தாய்
உண்பாயெனதாக்கையையானுதவற்குநேர்வல்
விண்பாலவர்நாயகனேவலிழைத்துமீண்டால்
நண்பாலெனச்சொல்லியநல்லறிவாளனக்கான்.

இ-ள். பெண்பால்ஒருநீ-ஒருபெண்ணுருவாகியநீ, பசிப்பீழை-பசியென் கிறதுன்பம், ஒறுக்க - உன்னைவருத்த அதனாலே, நொந்தாய் - வருந்தினாய் சரியே, எனதாக்கையை - என்சரீரத்தை, உண்பாய் - உண்ணக்கடவை, யான் - நான், உதவற்கு - (உனக்குக்) கொடுத்தற்கே, நேர்வல் - சம்மதிப் பேன், விண்பாலவர் - ஆகாயவாசிகளுக்கெல்லாம், நாயகன் - சுவாமியான ஸ்ரீராமன்,' ஏவல் - அனுப்பினகாரியத்தை, இழைத்து - செய்துமுடித்து, மீண்டால் - திரும்பினேனேயானால், நண்பால் - உனக்குவிகிதமாகவே உத வற்குநேர்வேன், எனச்சொல்லிய - என்றுசொன்ன, நல்லறிவாளன் - நன் ஞானமுள்ளசிறியதிருவடி, நக்கான் - சிரித்தார் - எ-று. அதற்குச் சுரசை சொல்லுகிறது வருங்கவியில். 69

காய்ந்தேழுலகங்களுங்காணநின்யாக்கைதன்னை
ஆய்ந்தேபசிதீர்வெனின்னாணையென்றன்னள்சொன்னாள்
ஓர்ந்தானுமிகழ்ந்தொருவேனினதூழில்பேழ்வாய்
சேர்ந்தேகுகின்றேன்வலையாமெனிற்றின்னியென்றான்.

இ-ள். காய்ந்து - உன்னைக் கொன்று, எழுலகங்களும் - இந்தச் சப்த லோகங்களும், காண - பார்க்க, நின்யாக்கைதன்னை - உன்சரீரத்தைத் தின்று, ஆய்ந்தே - ருசிபார்த்தே, பசிதீர்வன் - எனதுபசிதணிவேன் இதற்கு, நின் ஆணையென்று, உன் - உத்தரவுதான்வேணுமென்று, அன்னள் - அந் தச்சுரசையென்பவள், சொன்னாள் - விகடமாகச்சொன்னாள் அதற்கு, ஓர்ந் தானும் - அவள்கருத்துணர்ந்த இவர், இகழ்ந்து ஒருவேன் - உன்னை அவ மதித்துச்சொல்லேன் இதோ, நினது - உன்னுடைய, ஊழில் - கிரமமில் லாத கோரமான என்றபடி, பேழ்வாய் - அகன்றவாய்க்குள்ளே, சேர்ந்து- புகுந்து, ஏகுகின்றேன் - போகிறேன், வலையாமெனில் - நீவல்லவளானால், தின்னியென்றான் - தின்என்றுசொன்னார் அனுமார் - எ-று. ஆம்சாரியை.

அக்காலையரக்கியுமண்டமனந்தமாகப்
புக்காளிறையாதபுழைப்பெருவாய்திறந்து

விக்காதுவிழுங்கநின்றாளதுநோக்கிவீரன்
திக்காரவள்வாய்சிறிதாம்வகைசேணினீண்டான்.

இ-ள். அக்காலை - அப்போது, அரக்கியும் - அந்தராக்ஷஸியானவள், அண்டம் - இந்த அண்டம், அனந்தம் ஆக - அநேகங்கள் ஒருசேர, புக்கால்- புகுந்தாலும், நிறையாத - நிரம்பலாகாத, புழை - குகைபோன்ற, பெருவாய்- பெரிய வாயைதிறந்து ஆ என்று, விக்காது - விக்காமல் தடையில்லாமல், விழுங்க - விழுங்குவதாக, நின்றாள் - அது அதை, நோக்கி - பார்த்து, வீரன் - அனுமாரானவர் எழு, திக்கு - தாம்செல்லுந்திசைமுழுதும், ஆர்- நிரம்புதலாய் நிற்கிற, அவள் - அந்தச்சுரசையினுடைய, வாய் - வாயானது சிறிதாம்வகை - தம்முருவுக்குச் சிறிதாகும்படி, சேணில் - அகலத்துடனே, நீண்டான் - நீண்டுவளர்ந்தார்—எ-று. பயனிலை. 71

நீண்டானுடனேசுருங்காநிமிர்வாள்வயிற்றின்
ஊண்டாமெனவுற்றொருயிர்ப்புயிராதமுன்னர்
மீண்டானதுகண்டனர்விண்ணுறைவோர்களெம்மை
ஆண்டான்வலனென்றலர்தூஉய்நெடிதாசிசொன்னார்.

இ-ள். நீண்டான் - அப்படிநீண்டுவளர்ந்தவர், உடனே - அப்போதே, சுருங்கா - உடலைச்சுருக்காமல், நிமிர்வாள் - உயர்ந்துநிற்கிறவள், வயிற்றின்- வயிற்றுக்கு, ஊண்தாமென - உணவே என்னும்படி, உற்று - புகுந்து, ஒரு யிர்ப்பு - ஒருசுவாசம், உயிராதமுன்னர் - விடாத அளவுக்கு முன்னே விடு முன்னே யென்றபடி, மீண்டான் — (அவள்மார்பைபிளந்துகொண்டு) வெளியேவந்தார், அதுகண்டனர் - அதைப்பார்த்தார்கள், விண் உறை யோர்கள் — ஆகாயவாசிகள் - எழு, எம்மை - எங்களை, ஆண்டான் — அடிமை கொண்டவரான அனுமார், வலன்என்று - சமர்த்தரென்று, அலர் - புட்பங் களை, தூய் - தூவி, நெடிது - அதிகமான, ஆசிர் - ஆசீர்வாதங்களை, சொன் னார் - சொல்லித்துதித்தார்கள், பய - எ-று. சுருங்கா என்பதனுனே அவள் வயிற்றுள்ளிருந்து பருத்தபோது இவருக்கு இடம்போதாமல் அவள்நெஞ்ச ளவும் வயிறுகிழிந்து வெளியேவந்தாரெனக் கொள்க. 72

மின்மேற்படர்நோன்மையனுடல்வீங்கிநீங்கத்
தன்மேனியளாயவடாயினுமன்புதாழ
என்மேன்முடியாதனவென்றினிமேதத்திநின்றாள்
பொன்மேனியனுநெடிதாசிபுனைந்துபோனான்.

இ-ள். மேல்படர்மின் - மேகத்தின்மேலேபடருகிறமின்போலும், நோ ன்மையனாய் — சக்தியுள்ளவனாய், உடல்வீங்கி — உடம்பானது அவள் வயிற் றுள்ளேபருத்து, நீங்க (அவள்மார்பே மேகமாகதாம்மின்போல்) வெளிப்படு மளவில், தன்மேனியளாய் - (அப்போது)தன்வடிவுகொண்டவளாகி, அவள்- அந்தச்சுரசை, தாயினும் - தாயைப்பார்க்கிலும், அன்புதாழ - அன்புதங்கி நின்று, மேல் - இனி(உமக்கு), முடியாதன - முடியாதகாரியங்கள், என்

என்று - யாவுள என்று ஒன்றுமில்லையென்று, இனிது - சந்தோஷமாக, ஏத்தி - துதித்துக்கொண்டு, நின்றாள் — நிற்பதானாள், பொன்மேனியனும்- அழகானவடிவுள்ள அநுமாரும், எழு நெடிது - மிகவும், ஆசி-அவள் ஆசிர் வதித்தலை, புனைந்து - கொண்டு, போனான் - சென்றார், பய—எ - று. 73

கீதங்களிசைத்தனர்கின்னரர்கீதநின்ற
பேதங்களியம்பினர்பேதையராடல்பின்னர்ப்
பூதங்கடொடர்ந்துபுகழ்ந்தனபூசுரேசர்
வேதங்களியம்பினர்தென்றல்விருந்துசெய்த.

இ-ள். கீதங்கள் - பாட்டுகளை, கின்னரர் இசைத்தனர் - கின்னரர்கள் பாடினார்கள், கீதம்நின்ற - அப்பாட்டுகளுக்குள்ள, பேதங்கள் - இங்கித வேறுபாடுகளை, பேதையர் — தெய்வரம்பைகள், ஆடல் — ஆடுதலுடனே, இயம்பினர் — குறிப்பித்தார்கள், பின்னர் — பின்னும், பூதங்கள் - சகலபிராணி களும், தொடர்ந்து - பாடுகிறவரோடுகூடி, புகழ்ந்தன - கொண்டாடலா யின, பூசுரேசர் - பிராமணோத்தமர்கள், வேதங்கள் - வேதங்களை, இயம்பி னர் - சொன்னார்கள், தென்றல் - தென்றற்காற்று, விருந்துசெய்த-புதுமை யைவிளைத்தன, புதுமைசெய்தலாவது, இப்படிப்பட்டகாற்றை நாம் எக் காலத்திலும் கண்டதில்லை யென்னும்படி அநுமாருக்கு வீசுதலாயின-எ-று.

மந்தாரமுந்துமகரந்தமணந்தவாடை
செந்தாமரைவாண்முகத்திற்செறிவேர்சிதைப்பத்
தந்தாமுலகத்திடைவிஞ்சையர்பாணிதள்ளும்
கந்தாரவீணைக்களிசெஞ்செவிக்காதுநுங்க.

இ-ள். மந்தாரம் - மந்தாரப்பூமணத்தை, உந்து - வீசுவதான, மகரந் தம் — பராகங்கள், மணந்த - கூடின, வாடை — வடகாற்றானது, செந்தா மரை - சிவந்த தாமரைமலர்போலும், வாள் - ஒளிபொருந்தின, முகத்தில்- திருமுகத்திலே, செறி - பொருந்தின, வேர் - வேர்வையை, சிதைப்ப- போக்கவும், தந்தாம் - தங்கள் தங்கள், உலகத்திடை - உலகங்களிலிருந்து, விஞ்சையர் - வித்தியாதரர்கள், பாணிதள்ளும் - கைவிரல்களாலே தள்ளிக் கொண்டு வருவதான, வீணைக்கந்தாரம் - வீணையினிசைப்பாட்டாகிய, களி- தேன் குழம்பை, செஞ் செவி — செவ்வையான அழகுள்ள, காது - அநு மார்காதுகள், நுங்க - பருகவும் செல்லுமளவில்—எ-று. 75

வேறு

வெங்கார்நிறப்புணரிவேறேயுமொன்றைப்
பொங்கார்கலிப்புனறரப்பொலிவதேபோல்
இங்கார்கடத்திரெனையென்றுவெழுந்தாள்
அங்காரதாரைபெரிதாலாலமன்னாள்.

இ-ள். பொங்கு - அலைகள்கிளருகின்ற, ஆர்கலிப்புனல் - சமுத்திர ஜலமானது, வேறேயும் - தனக்கு வேருகவும், வெம் - வெவ்விதான, கார்நிறம்-கறுத்தநிறமுள்ள, புணரி ஒன்றை — ஒருகடலை, தர - பெற்றுவிட, பொலிவதேபோல் - அக்கடலுக்குமேலே ஒருகடல் தோன்றுகிறதுபோல், இங்கு-இக்கடல்மேலே, ஆர் - யாவர், எனைக்கடத்திரென்று - என்னைக்கடந்து செல்லுகிரீர்களென்று, எழுந்தாள் - எழுந்து நின்ருள் பய, அங்காரதாரை-இந்தப்பெயரையுடையவளான, பெரிது - மிகவும், ஆலாலம் - விடத்தை, அன்னுள் —ஒத்தவள் எழு—எ-று. கடத்திர் என என்றுபாடமானுல் என என்னகாரணத்தினுலே கடத்திரென்று கடந்துசெல்லுகிரீர்களென்றெழுந் தாளென்க. 76

காதக்கடுங்குறிகணக்கிறுதிகண்ணுள்
பாதச்சிலம்பினெலிவேலையொலிபம்ப
வேதக்கொழுஞ்சுடரைநாடிநெறிமேனுள்
ஓதத்தின்மேவுமதுகைடவரையொத்தாள்.

இ-ள். காதம் — காதவழி, கடுமை வேகம் — தூரத்தை, குறிதெரிகின்ற-தெரிந்தறிகிற, கணக்கு - அளவே, இறுதி - முடிவாகப்பெற்ற, கண்ணுள்-கண்களையுடைய, அங்காரதாரை - எழு, பாதம் - காலிலணிந்த, சிலம்பினெலி - சிலம்போசையும், வேலையொலி - கடலோசையும் சிலம்போசை போற் கடலோசை, பம்ப - ஒலிக்க, வேதம் - வேதத்தால் விளங்குகின்ற, கொழுஞ்சுடரை-பரஞ்சோதியான திருமாலைக்காண, நெறிநாடி - வழிதேடி, மேனுள் - முன்னுளிலே, ஓதத்தில் - கடல் மேலே, மேவும் - செல்லுகின்ற, மதுகைடவரை — மதுவையும் கைடவனையும், ஒத்தாள் - நிகராளுள், பய-எ-று. மதுவையும் ஒப்பாள்கைடவனையும் ஒப்பாள் என்க. காதவழி தூரத்துள்ள எப்பொருளாயினும் அப்பொருளினிழலையிழுக்கும் அளவுமுடிவுள்ள கண்ணுளென்பதனுலே சாயாக்கிராஹி — நிழலையிழுக்கிறவள் என்றும் அவளுக்கொருபெயரென்க. 77

துண்டப்பிறைத்துணையெனச்சுடரெயிற்ருள்
கண்டத்திடைக்கறையுடைக்கடவுள்கைம்மா
முண்டத்துரித்தவுரியாண்முளரிவந்தான்
அண்டத்தினுக்குறையமைத்தபிலவாயாள்.

இ-ள். துணைப்பிறைத்துண்டம் என — இரண்டுசந்திரதுண்டம்போல், சுடர் - விளங்குகின்ற, எயிற்ருள் - பற்களையுடையவள் வக்கிரதந்தங்களுள்ளவள், கண்டத்திடை — கழுத்திலே, கறையுடை - விஷத்தையுடைய, கடவுள்-பரமசிவன்போல், கைமா - துதிக்கையையுடையயானையினது, முண்டத்து-தலையிலிருந்து, உரித்த - உரித்துப்போர்த்தின, உரியாள் - தோலையுடையவள், முளரிவந்தான் - திருவுந்திமலரில்வந்தவன்தந்த, அண்டத்தினுக்கு-பிரமாண்டத்துக்கு, உரை - உறையாகியபையை, அமைத்த - அமைத்து

வைத்தாற்போலும் அகலமும், பிலம் - குகைபோலு நீளமுமுள்ள, வாயாள்-வாயையுடையவள்—எ-று. 78

நின்றாணிமிர்ந்தலைநெடுங்கடலினீர்தன்
வன்றாளலம்பமுடிவான்முகடுவவ்வ
அன்றாய்திறத்தவனறத்தையருளோடும்
தின்றாளொருத்தியிவளென்பதுதெரிந்தான்.

இ-ள். நிமிர்ந்து நின்றாள்—அந்த மைநாக மலைபோலவே முன்னே உயர்ந்து நின்றாள், அலைநெடுங்கடலினீர் - சலிக்கின்ற நெடுமையுள்ள கடலில்நீரானது, தன்வன்தாள் — தனதுவலியகால்களிலே,அலம்ப —மோதநின்றாள், முடி - அவள் தலையானது, வான்முகடு - ஆகாயமுகட்டை, வவ்வ-அளாவ நிமிர்ந்துநின்றாள், அன்று - அப்போது, ஆய்திறத்தவன் - ஆராய்ந்தறியும்சக்தியுள்ள சிறியதிருவடியாளவர்,அறத்தை - தருமத்தை, அருளோடும் இரக்கத்துடனேகூட்டி இரண்டையும், தின்றாள் - கெடுத்தவள் உண்டவளான,ஒருத்தி இவள் — இவளும் ஒருபெண்மகளே, என்பது —என்பதை, தெரிந்தான்-அறிந்தார், பய - எ-று. 79

பேழ்வாயகத்தலதுபேருலகமூடும்
நீழ்வானகத்தினிடையேகுநெறிநேரா
வாழ்வானணுக்கனவளாழ்பிலவயிற்றைப்
போழ்வானினைத்தினையவாய்மொழிபுகன்றான்.

இ-ள். பேழ்வாய் அகத்து - (அவருடைய) அகன்றவாய்க்குள்ளே சென்றால், அலது - அல்லாமல், பேருலகை - பெரியவுலகத்தை, மூடும்-மூடுவதான நீள்வானத்தின் இடை, நீண்ட - ஆகாயமார்க்கத்திலே, ஏகு நெறி - போகும்வழி, நேரா - காணுமல், ஆழ்வான் - அழுந்தினவராய் கீழே தாழ்ந்தவராகி, அணுக்கன் - வருத்தம் உற்றவருமாய், அவள் - அந்தராக்ஷஸியினுடைய, ஆழ் - ஆழமான, பிலம் - குகைபோன்ற, வயிற்றை - உதரத்தை, போழ்வான் — பிளத்தற்கு, நினைத்து - எண்ணி, அனையவாய்மொழி - இந்த வார்த்தைகளை, புகன்றான் - சொன்னார், அணுக்கன் என்பதனாலே கடல் மேலேசெல்லுகிறவரைத்தன்கண்களாலேநோக்கி, அவர் நிழலோடவரை யிழுத்தாள் அதனால் அவள்சமீபத்தில் அணுகினவரெனவுமாம்—எ-று. 80

சாயாவரந்தழுவினுய்தழியபின்னும்
ஓயாதுவந்தவிசைகண்டுணாகில்லாய்
வாயாலளந்துநெடுவான்வழியடைத்தாய்
நீயாரையென்னையிவணின்றநிலையென்றான்.

இ-ள். சாயா (ஏடி சாயாக்கிராஹி நீபெற்ற) வரம் - அழியாதவரத்தினாலே, தழுவினாய் - என்னை உன் அணுகனைச்செய்தாய் உன்அருகுவரச் செய்தாய், தழியபின்னும் — அருகுவரச்செய்தபின்வைது, யொக - நான்

ஒப்பில்லாமல், வந்த - வரலான, விசைகண்டு - வேகத்தைக்கண்டு ஏதோ செல்வதவசரகாரிய மென்று, உணரகில்லாய் - நீயேதெரிந்துகொள்கிலை, வாயால் — உன் வாயினாலே, அளந்து - நெடுவான், நீண்ட - ஆகாயத்தை அளவுசெய்து, வழி அடைத்தாய் - செல்லவழியில்லாதுசெய்தாய் ஆதலால், நீயாரை - நீ ஆர், இவண் - இங்கே, நின்றநிலை — நிற்கிறகாரியம், என்ன என்றான் — யாதுவேண்டியென்றார் — எ-று. வானை அளத்தலாவது ஆகாய மெவ்வளவோ அவ்வளவும் வாயைத்திறந்துகொண்டு நிற்றல். 81

பெண்பாலெனக்கருதுபெற்றியொழியுற்றால்
விண்பாலவர்க்குமுயிர்வீடுறுதன்மெய்யே
கண்பாலடுத்தவுயிர்காலன்வருமேனும்
உண்பானருத்தியிதொழிப்பரியதென்றாள்.

இ-ள். பெண்பாலென - என்னைப்பெண்மகளென்று, கருதுபெற்றி - நினைக்குநினைவை, ஒழி - விட்டுவிடு, உற்றால் — என் அருகேவந்தால், விண்பாலவர்க்கும் - விண்ணுலகத்தாருக்கும், உயிர் வீடுறுதல் - உயிர் விடும்படியாகுதல்சாதல், மெய்யே - சத்தியமே, கண்பால் - என் கண் முன்னே, அடுத்த உயிர் - கிட்டின ஜீவர்களில், காலன் - யமனேனும், வரும் ஏனும் - வருவானேயானாலும், உண்பான் - நான் சாப்பிடுதற்கே, அருத்தி - மிகவும் பிரியம், இது - இப்படிநான்சாப்பிடுகிறது, ஒழிப்பு அரியது - யாராலும் தடுக்கப்படாதது, என்றாள் - என்றுசொன்னாள் — எ-று. இவள் இராவணனுக்குக் கடலரணிலே ஓர் காவலாயிருக்கிறவள் இவளிருக்கிற இடத்துக்குச் சுற்றும் ஒருகாதவழிதூரத்துக்குள் ஒருவரும் வரக்கூடாது என்றுணர்க. 82

திறந்தாளெயிற்றையவளண்ணலிடைசென்றான்
அறந்தானரற்றியதயர்த்தமரரெய்த்தார்
இறந்தானெனக்கொடொரிமைப்பதனின்முன்னம்
பிறந்தானெனப்பெரியகோளரிபெயர்ந்தான்.

இ-ள். அவள் — இப்படிச் சொன்னவள், எயிற்றை — பற்களுள்ள வாயைத், திறந்தாள் - திறந்துகொண்டுநின்றாள், அண்ணல் - அனுமார், இடை - அந்தவாயினிடத்தே, சென்றான் — புகுந்தார் அப்போது, இறந்தானெனக்கொடு - இறந்து போவாரென்றுநினைத்து, அறந்தான் - தருமதேவதைதானே, அரற்றியது - பிரலாபிக்கலாயது, அயர்த்து - அயர்ந்து சோர்ந்து, அமரர் - தேவர்கள், எய்த்தார் - இளைத்தார், ஒரிமைப்பதனின் முன்னம் - ஒரு இமைப்பொழுதிற்கு முன்னே, பிறந்தானென - அவள் வயிற்றிலிருந்து அப்போதுதான் பிறந்தாரென்னும்படி, பெரிய - பெரிதான, கோளரி - நரசிங்கம்போல் பெயர்ந்தான் வெளியாயினார் — எ — று.

கள்வாயரக்கிகதறக்குடர்கணத்தில்
கொள்வார்தடக்கையின்விசும்பையிசைகொண்டான்

முள்வாழ்பொருப்பின்முழைபெய்திமிகநொய்தின்
உள்வாளரக்கொடெழுதிண்கலுழனொத்தான்.

இ-ள். கள் — கள்ஒழுகுகின்ற, வாய் — வாயையுடைய, அரக்கி — அந்த ராக்ஷஸியானவள், கதற — கத்த, கணத்தில் - ஒருக்ஷண அளவிலே, குடர் கொள்-அவள் குடலைப்பிடுங்கிக்கொண்ட, வார்-நீண்ட, தடம் - பருமனுன, கையின் - கையுடனே, விசும்பைமிசை — ஆகாயத்தின்மேலே இது உருபு மயக்கம், கொண்டான் — செல்வதானுர், முள்வாழ் — முட்கள் மிகவுமுள்ள முட்செடிகள் முளைத்திருக்கிற, பொருப்பின்முழை — மலைக்குகைக்குள்ளே, எய்தி — போய் என்றால் அவளுடைய பற்களுள்ள வாய் வழியே புகுந்து, மிகநொய்தின் - மிக்கவிரைவிலே, உள்வாழ் — அக்குகைக்குள்ளேவாழ்கின்ற, அரக்கொடு — பாம்பைக்கொண்டு அவள்குடலைப்பிடுங்கிக்கொண்டு, எழு- மெலெழுந்துசெல்லுகிற, திண்கலுழன் — திடமுள்ளகருடனை, ஒத்தான்- ஒப்பதானுர்—எ-று. கள்வாய் — கள்ளை ஒழுகவிடுகிற வாய் என உருபும் முடிக்குஞ்சொல்லும் தொக்கதொகை, இல்வாறுள்ள பிரதிபதங்களையெல் லாம் அமைத்துக்கொள்க. 84

சாகாவரத்தலைவரிற்றிலகமன்னுன்
ஏகாவரக்கிகுடர்கொண்டுடனெழுந்தான்
மாகாலசைப்பவடமண்ணினுறவாலோ
டாகாயமுற்றகதலிக்குவமையானுன்.

இ-ள். சாகா — சாவாத, வரம் — வரம்பெற்ற, தலைவரில் — சிரஞ்சீவி களிலே, திலகம் — அவர்களுக்கு நெற்றித்திலதத்தை, அன்னுன் — ஒத்தஅனு மார் - எழுஏகா அவள் வாய்க்குள்ளேபோய், அரக்கி குடர் — அந்தராக்ஷஸி குடலை. கொண்டுஉடன் — பிடுங்கிக்கொண்டு அப்போதே, எழுந்தான் — மே லெழுந்துசெல்லலானுர் செல்லும்போது, மாகால் — பிரசண்டவாயு, அசை ப்ப — வீச, வடம் — கயிறு, மண்ணினுற — மண்ணிலிருந்து மேலு நீள, வாலோடு — வாலுடனே, ஆகாயம் - ஆகாயத்திலே, உற்ற — பறக்கிற, கதலிக்கு — பட்டத்துக்கு காற்றாடிக்கு, உவமையானுன் — ஒப்பானுர், பய- எ-று. அவள்வயிற்றிலிருந்து குடலைக்கொண்டெழுவதேகயிற்றுடனே பட் டம் பறக்கிறதாகவும் அவர்வாலே பட்டத்துக்குள்ள வாலாகவுங் கொள்க.

ஆர்த்தனர்கள்வானவர்கடானவரழுங்கா
வேர்த்தனர்விரிஞ்சனும்வியந்துமலர்வெள்ளம்
தூர்த்தனனகன்கைலையிற்றிருலைவிலோனும்
பார்த்தனன்முனித்தலைவராகிகள்பகர்ந்தார்.

இ-ள். வானவர்கள் — தேவர்கள் அப்போது, ஆர்த்தனர்கள் — கர்ச்சித் தார்கள், தானவர் - அசுரரெல்லாம், அழுங்கா — வருந்திபயந்து, வேர்த் தனர் — உடம்பு புழுங்கினுர்கள், விரிஞ்சனும் — பிரமாவும், வியந்து — அதி

சயித்து, மலர் வெள்ளம் - புஷ்பமாரியை, தூர்த்தனன் - கொட்டினன், அகன் - அகன்ற, கயிலையில் - வெள்ளிமலையிலிருக்கிற, தொலைவு இல்லோனும் - அழிவு இல்லாத பரமசிவனும், பார்த்தனன் - வியந்துபார்த்தான், முனித்தலைவர் - ருஷிசிரேஷ்டர்கள், ஆசிகள் - ஆசீர்வாதங்களை, பகர்ந்தார்-சொன்னார்கள்—எ-று. 86

மாண்டாளரக்கியவள்வாய்வயிறுகாறும்
கீண்டானிமைப்பினிடைமேருகிரிகீழா
நீண்டாண்வயக்கதிநினைப்பினெடிதென்னப்
பூண்டானருக்கனுயர்வானின்வழிபோனான்.

இ-ள். அரக்கி - அந்தராக்ஷஸி, மாண்டாள் - இறந்தாள், அவள் - அவளுடைய, வாய் - வாயிலிருந்து, வயிறுகாறும் — வயிறுவரையிலும், கீண்டான் — கிழித்த அனுமார், இமைப்பினிடை - ஒரு இமையளவில், மேருகிரி — மேருமலையும், கீழா - கீழாக, நீண்டான் - உயர்ந்தார் அவரது, வயக்கதி - வெற்றிகொண்டவேகம், நினைப்பில் - மனோவேகத்திலும், நெடிதென்ன — பெரிதென்று, பூண்டான் அருக்கன் - சூரியன் எண்ணினன், உயர் - உயர்ந்த, வானின் வழி - ஆகாயமார்க்கத்தே, போனான் — சென்றார் அனுமார், பூணல் - அவரது புகழைத்தனக்கு ஆபரணமாகச் சூரியன்கொள்ளுதல்—எ-று. 87

சொற்றார்கள்சொற்றதொகையல்லதுணையொன்றோ
முற்றாமுடிந்தகெடுவானினிடைமுந்நீர்
இற்றாவியெற்றெனினும்யானினியிலங்கை
உற்றால்விலங்குமிடையூறெனவுணர்ந்தான்.

இ-ள். சொற்றார்கள் - (கடலுக்களவு) சொன்னவர்கள், சொற்ற-சொன்ன, தொகை — அளவு, அல்ல - உள்ளதன்று அளவு அதிகமாயிருக்குமென்றபடி, துணை - ஆனால் அளவு, ஒன்றோ - ஒருவகையோபல்வகையோ, முற்றா - ஓரளவில் முடிவுறாமல் முடிந்த எவ்வளவாகவோ முடிவுகொண்ட, நெடு — நீண்ட, வானினிடை - ஆகாயமார்க்கத்திலே செல்லும்போது, முந்நீர் - கடலிலே, இற்று — இத்தன்மையா யிருக்கின்றது, ஆவி - பிராணி சரீரம், எற்று - இன்னம் எத்தன்மையுள்ளது, எனினும் — என்றாலும், யான்-நான், இனி - இலங்கையுற்றால் இலங்கைபோய்ச்சேர்ந்தால், விலங்கும் இடையூறு - துன்பந்தீரும், எனவுணர்ந்தான் — என்றெண்ணினார், துணை ஒன்றோ — என்பதனால் இடையே, தடைகள் உளவாகலாலே கடல் இன்னம் எவ்வளவோ என்றும், இந்த ராக்ஷஸிபோலின்னம் எத்தனைபேருண்டோ என்று நினைக்கலானார்—எ-று. 88

ஊறுகடிதூறுவனவூறிலறமுன்னாத்
தேறிலியரக்கர்புரிதீமையவைதீர

வேறுவகையாண்டையவிராமனெனவெல்லாம்
மாறுமதின்மாறுபிறிதில்லெனவலித்தான்.

இ-ள். ஊறுகடிது – கடுமையான துன்பங்கள், ஊறுவன – இடையே உண்டாகுகின்றன ஆதலால், ஊறு இல் – கெடுதலில்லாத, அறம் – தருமத்தை, உன்னு நினையாததேறிலி – தெளிவில்லாமையால், அரக்கர் – ராக்ஷஸர்கள், புரி – செய்கிற, தீமை – தீயவைகளான, அவை – அவையெல்லாம், தீர – போக, வேறுவகை – வேறே ஒருவகை உபாயம், யாண்டுள – எங்குண்டாகும் வேறே உபாயமில்லை, இராமன் என – ஸ்ரீராமனேயென்று நினைத்தால், எல்லாம் – எவ்வகையிடையூறும், மாறும்-தீர்ந்துபோம், அதின்-அந்த ராம பஜனையையல்லது, மாறுபிறிது – வேறே ஒரு துன்பத்துக்குவிரோதி, இல்லென – இல்லையென்று, மதித்தான் – ராம நாம ஸ்மரணம்பண்ணினார்-எ-று. துன்பத்துக்குவிரோதி ராமபஜனையே என்பதாம். 89

வேறு

தசும்புடைக்கனகநாஞ்சிற்கடிமதிற்றரித்துநோக்கான்
அசும்புடைப்பிரசத்தெய்வக்கற்பகநாட்டையண்மி
விசும்பிடைச்செல்லும்வீரன்விலங்கிவேறிலங்கைமூதூர்ப்
பசுஞ்சுடர்ச்சோலைத்தாங்கோர்பவளமால்வரையிற்பாய்ந்தான்.

இ-ள். கனகத் தசும்பு – சுவர்ணக்குடங்களும், கனகநாஞ்சில் – சுவர்ணமயமான பிறவுறுப்புகளும், உடை – உடையதாய், கடி – காவலாயிருக்கிற, மதில் – இலங்கை மதில்மேலேபோய், தரித்து – தங்கி, நோக்கான் – பாராதவனாய், அசும்பு உடை – ஊறுதலையுடைய, பிரசம் – தேன்பொருந்தின, தெய்வம் – தெய்வத்தன்மையுள்ள, கற்பகம் – கற்பக விருட்சத்தையுடையதான, நாட்டை – தேவருலகத்தை, அண்மி – அடுத்து, விசும்பிடை-ஆகாயமார்க்கத்திலே, செல்லும் – போவதான, வீரன் – சாமார்த்தியமுடைய அனுமார் எழு, இலங்கைமூதூர் – இலங்காபுரியை, விலங்கி – விட்டு, வேறு-வேறே, பசுஞ்சுடர் – பசிய காந்தியையுடைய, சோலைத்து – சோலைகளைக்கொண்டுள்ள, ஆங்கு – அவ்விடத்தில், ஓர் – ஒரு, பவளமால்வரையில்-பவளமால்வரைமேலே, பாய்ந்தான் – போய்க்குதித்தார்—எ-று. பயனிலை. 90

மேக்குறச்செல்வோன்பாயவிலங்கிநீரிலங்கைவெற்பு
நூக்குறத்தங்குமிங்குந்தள்ளுறநுடங்குநோன்மை
போக்கினுக்கிடையூராகப்புயலொடுபொதிந்தவாடை
தாக்குறத்தளர்ந்துசிந்துங்கலமெனத்தகைதன்றே.

இ-ள். மேக்குற – மேலாக, செல்வோன்விலங்கி – போகிற அனுமார் விலகி, பாய – தாவிக்குதிக்க அதனாலே, நீர் – கடனீர்சூழ்ந்த, இலங்கை-இலங்கையைச்சேர்ந்த, வெற்பு – அந்தப்பவளமால்வரையானது, எழுநூக்குறத்து – அசைவுண்டாகி, அங்கும் இங்கும் – அவ்விடத்தும்இவ்விடத்தும் அப்படியும் இப்படியுமாக, தள்ளுற – தள்ளாடிதளர்தலாகி, நுடங்கும்-அசை

ந்து ஆடுகிற, நோன்மை பொறுமை - அவரைத் தாங்குதல் எப்படியிருக்கிற தென்னில், போக்கினுக்கு - பாய்மரத்துடனே நீர்மேற் செல்லுதலுக்கு, இடையூறாக - விக்கினமாக, புயலொடு-மழையுடனே, பொதிந்த—கலந்த, வாடை-வடகாற்றானது, தாக்குற-விசைகொண்டுமோத அதனாலே, தளர்ந்து (பொருத்துகளெல்லாம்) கலைதலாய், சிந்தும் - (குலுங்கித் தன்னிடத்துள்ள பொருள்களையுஞ்)சிதறுவதான, கலம் - கப்பல், எனத்தக்கது-என்றுசொல் லத்தக்கதாயிற்றுபயனிலை,அவரைத்தாங்குதலுடனே நடுங்குகிற,வெற்பெ னக்கூட்டுக—எ-று. அம்மலையிலுள்ள பொருள்களும் சிந்துதலாயின என்க.

மண்ணடியுற்றுமீதுவானுறவரம்பின்றன்மை
எண்ணடியுற்றகுன்றத்தலத்துநின்றெய்தநோக்கி
விண்ணிடையுலகமென்னுமெல்லியன்மேனிநோக்கக்
கண்ணடிவைத்ததன்னவிலங்கையைத்தெரியக்கண்டான்.

இ-ள். மண் — கீழே மண்ணுள்ள அளவும், அடியுற்று - வேரூன்றி, மீது - மேலே, வான் — ஆகாயத்தினது, வரம்பின்றன்மை - அளவின்படியை, உற - தெரிவதாக, எண் - எண்ணுகின்ற எண்ணிநீண்டிருக்கிற, குன்றத்தலத்து - அந்தமலையினிடத்திலே, அடியுற்ற — இலங்கைக்கு முன்னடியிலுள்ள, குன்றத்தலத்து - மலையினிடத்திலே, நின்று - இருந்து, எய்த- ஊர்க்குள்ளேபோக, நோக்கி - உத்தேசித்து, விண்ணிடை — ஆகாயத்துள்ள, உலகமென்னும் - உலகமென்கிற,மெல்லியல் - மிருதுஸ்வபாவமுள்ளபெண், மேனி — தன்வடிவழகை, நோக்க - பார்க்க, கண்ணடி — நிலைக்கண்ணாடி, வைத்ததன்ன - வைத்தாற்போலிருக்கிற, இலங்கையை - இலங்காபுரியை, தெரிய - அதன்வகையெல்லாந்தோன்ற, கண்டான் - பார்த்தார் அனுமார், எ-று. எண் - வினைத்தொகை அடியுற்ற பெயரெச்சம் ஆக இவ்விரண்டும் அடுக்குகுன்றமென்னும் ஒருபெயர் முடிபுகொண்டன தேவருலகமான ஒரு பெண் தனது பிரதிபிம்பத்தைக் காண்பதான கண்ணாடிபோல் விளங்குகிற திலங்கையென்க. 92

நன்னகரதனைநோக்கிநளினக்கைமறித்துநாகர்
பொன்னகரிதனையொக்குமென்பதுபுல்லிதம்மா
அந்நகரிதனினன்றேயண்டத்தைமுழுதுமாள்வான்
இந்நகரிருந்துவாழ்வானிதுவதற்கேதுவென்றான்.

இ-ள். நல் நகரதனை - நல்ல ஊரான அதை, நோக்கி - பார்த்து, நளினம் - தாமரை மலர்போன்ற, கை - கையாலே, மறித்து - தடுத்து, நாகர்- தேவருடைய, பொன்னகர் — பொன்மயமானஊர், இதனை — இவ்வூரை, ஒக்குமென்பது - நிகராமென்கிறது, புல்லிது - புல்லறிவாண்மையேயவ்வா தென்றுகைமறித்து, அந்நகர் - அந்தத்தேவரூர், இதனில் — இவ்வூரிலும், நன்றே - அழகுள்ளதா அன்று, அண்டத்தை — பிரமாண்டத்தை, முழுதும் முழுதும்தானே, ஆள்வான் — ஆளவல்ல ராவணன், இந்நகர் இருந்து - இவ்

ஊரிலேநிலைகொண்டு, வாழ்வான் — வாழ்வானாயினான், இது இவ்வூரிலே அவனிருக்கிறதே, அதற்கு — அவ்வூர் நிகராகாதென்பதற்கு, ஏது — காரணம், என்றான் — என்றுநினைத்தார்—எ-று. இவ்வூரிலும் அவ்வூர் நல்ல தானால் அவ்வூர்க்கேபோய் அரசாள்வான் என்பதுகருத்து அம்மா அசை அம்மா அதிசயக்குறிப்பு ஆவதோரிடைச்சொல். 93

மாண்டதோர்நலத்திற்றாமென் றுணர்த்துதல்வாய்மைத்தன்றால்
வேண்டியவேண்டினெய்திவெறுப்பின்றிவிழைந்ததுய்க்கும்
ஈண்டரும்போகவின்பமீறிலதியாண்டுக்கண்டாம்
ஆண்டதுதுறக்கமஃதேயருமறைத்துணிவுமம்மா.

இ-ள். மாண்டது (சுவர்க்கலோகம்) மிகப்பெரிதான, ஓர் — ஒப்பில்லாத, நலத்திற்று — நன்மைகளையுடையது, ஆமென்று — ஆகுமென்று, உணர்த்துதல் — சொல்லுகிறது, வாய்மைத்து — நிஜமானது, அன்றுவேண்டிய-வேண்டத்தக்கவைகளை, வேண்டின் — வேண்டினால், எய்தி — அடைந்து, வெறுப்பு இன்றி — போதும்என்பதில்லாமல், விழைந்த — விரும்பியவைகளையெல்லாம், துய்க்கும் — அனுபவிப்பதான, ஈண்ட அரும் - கிடைக்கஅரிதான, போக இன்பம்-போகசுகம், ஈறுஇலது — அழிவில்லதாக, யாண்டு - எவ்விடத்தே, கண்டாம் — நாம்கண்டோம் எனவே இவ்வூரிலேதான் கண்டோமென்றாயிற்று, ஆண்டு — அப்படிப்பட்ட போகஇன்பமுள்ள அவ்வூராகிய, அது- அவ்விடமே, துறக்கம் - சுவர்க்கலோகம், அரு — பொருளறிதற்கருமையான, மறைத்துணிவும் — வேதநிச்சயமும், அஃதே — ஈறிலதானபோக இன்பமுள்ளஇடமே சுவர்க்கமென்பதாம், ஆகையாலிவ்வூரே — சுவர்க்கமென்று நினைத்தார்—எ-று. ஈண்ட — என்பது தொகுத்தலாம், ஈண்டுஎன்றால் - முதனிலைத்தொழிற்பெயர், ஈண்டுதல் — கிட்டுதல். 94

உட்புலனெழுநூறென்பர்யோசனையுலகமூன்றில்
தெட்புறுபொருள்களெல்லாமிதனுழைச்செறிந்தவென்றால்
நுட்புலனுணங்குகேள்விநுழைவிலரெனினுநோக்கும்
கட்புலன்வரம்பிற்றேகாட்சியுங்கரையிற்றே.

இ-ள். உட்புலன் (இந்தஇலங்கையின்) உள்ளிடத்தளவு, யோசனைஎழுநூறு — எழுநூறுயோசனை, என்பர் - என்றுசொல்லுவர்புலவர்கள், உலகமூன்றில் — மூன்றுலகத்திலும், தெட்புறு — முதிர்ச்சியுற்றஉயர்ந்த, பொருள்களெல்லாம் — வஸ்துகளெல்லாம், இதன்உழை — இவ்வூரில், செறிந்த — பொருந்தியிருக்கின்றன, என்றால் — என்று எழுநூறுயோசனை யென்பவர்களே சொல்லலானால், நுட்புலன் — தங்கள் நுண்ணறிவினாலே, நுணங்கு — துவளுவதான, கேள்வி — கேள்விஅறிவே, அன்றி நுழைவு — இவ்வூருட்புகுந்து பார்த்துச் சொல்லுகிறது, இலர் — இல்லையானவர்களென்னல்வேண்டும், எனினும் — கேள்வி அறிவுடனேபுகுந்துகண்ட அறிவும் உளரானாலும் நோக்கும், இவ்வூர்முழுவதும் - பார்க்கத்தக்க, கட்புலன் — கண்ணறிவுதான்,

வரம்பிற்று - ஓரளவுடையது, ஆமே – ஆகுமாஆகாது, காட்சியும்—காணும் பொருள்களும், கரையிற்று—ஓரளவுடையது, ஆமே ஆகுமாஆகாது, என்றால் இவ்வூரளவு காணுதற்குக்கண்கள் அநேகம்வேணும் அக்கண்களாற் காணப்படுகிற பொருள்களுக்கோ ரளவில்லையாயிருக்கிறதினுலே எழுநூறி யோசனை யென்றொருவர் சொல்லக்கேட்டுச் சொல்லுகிறதேயல்லது முழுதுங்கண்டுசொல்வோரில்லையென்று கருத்தாகலால் காட்சிக்கு அளவின்மையினுலே ஊரளவிற்கும் எழுநூறியோசனை யென்பது சரியானதன்றென்று நினைத்தாரென்க—எ-று. 95

கடல்தாவுபடலம் முற்றிற்று

ஆ. திருவிருத்தம் - 95

கம்பநாட்டாழ்வார் திருவடிகளே சரணம்

இரண்டாவது

## ஊர்தேடுபடலம்

வேறு

பொன்கொண்டிழைத்துமணியைக்கொடுபொதிந்த
மின்கொண்டமைத்தவெயிலைக்கொடிசமைத்த
என்கொண்டியற்றியவெனத்தெரிகிலாத
வன்கொண்டல்விட்டுமதிமுட்டுவனமாடம்.

இ-ள். வன் - வலிதான, கொண்டல் - மேகமண்டலத்தை, விட்டு-கடந்து, மதி - சந்திரமண்டலத்தை, முட்டுவன - தொடுவனவான, மாடம்-(அவ்வூரிலுள்ள) வீடுகள், எழுமின்கொண்டு - மின்னலைக்கொண்டு, அமைத்த — செய்தாற்போல், பொன்கொண்டு - சுவர்ணத்தைக்கொண்டு, இழைத்து — செய்து, வெயிலைக்கொடு — (உதயகாலத்துச் சூரிய) பிம்பத்தைக் கொண்டு, சமைத்த - செய்தாற்போல், மணியைக்கொண்டு-மாணிக்கங்களைக் கொண்டு, பொதிந்த - (அப்பொன்மேல்) அழுத்தியிருக்கின்றன, (என்பதன்றி) கொண்டு — வீடுகள் அமைவனவாகக்கொண்டு, இயற்றிய - செய்த பொருள்கள், என் - யாவை, என — என்று நினைக்கும்படி, தெரிகிலாத (மின்னும் வெயிலுமாகத் தோன்றுவனவேயன்றிப்), பொன்னுமணியுமென்று சொல்லத் தெரியாதவைகளாயிருக்கின்றன, பய—எ-று. என்றனன். 1

நாகாலயங்களொடுநாகருலகுந்தம்
பாகார்மருங்குதுயில்வென்னவுயர்பண்ப
ஆகாயமஞ்சவகன்மேருவையனுக்கும்
மாகால்வழங்குசிறுதென்றல்வரநின்ற.

இ-ள். நாகாலயங்களொடு - தேவர்கள்கோயில்களுடனே, நாகருலகும்-தேவருலகமும், தம்-தமது அவ்வீடுகளின், பாகு — ஒருபங்காக, ஆர்-பொருந்தின, மருங்கு - இடத்திலே, துயில்வு - தூங்கத்தக்கவைகள், என்ன-என்று சொல்லும்படி வீடுகள், உயர் - உயர்ந்த நாகருலகுக்குமேலான, பண்ப-தன்மையையுடையன ஆனல், ஆகாயம் - ஆகாயத்தின் உயர்வளவு, அஞ்ச-அஞ்சுவதாக, அகல் - உயர்ந்துசெல்கிற, மேருவை - மேருமலையையும், அனுக்கும் - வருந்தச்செய்வதான, மாகால் - பெருங்காற்று, வழங்கு — இனிதாக வழங்குகிற, சிறுதென்றல்வர - மெதுவான தென்றற்காற்றுப் போல்வதாக வரும்படி, நின்ற - சலிப்பின்றி நிலைகொண்டிருக்கின்றன என்றனன், பய-எ-று. பாகு - ஆர்மருங்கு — சுண்ணச்சாந்தின் குழம்பால் நிரம்பின மருங்கெனவுமாம், மூன்றடுக்கு ஐந்தடுக்கு மெத்தைகளில் கீழுள்ள ஓரடுக்கென்பதற்கு பாகார்மருங்கென்றூர் அது ஓரடுக்கிற்குள்ள நிலாமுற்றமென்க. 2

மாகாரிமின்கொடிமடக்கினரடுக்கி
மீகாரமெங்கணுநறுந்துகள்விளக்கி
ஆகாயகங்கையினையங்கையினினள்ளிப்
பாகாயசெஞ்சொலவர்வீசுபடுகாரம்.

இ-ள். மா - கறுத்த, காரின் — மேகங்களிலுள்ள, மின்கொடி - கொடி போன்றமின்னல்களை, மடக்கினர் அடுக்கி — ஒடித்தொடித்துச்சேர்த்துத் தொடைப்பமாகக்கொண்டு, மீகாரம் — மேலிடங்களான, எங்கணும் — எவ்விடங்களிலும், நறுந்துகள் — கந்தபொடிகளை, விளக்கி - கூட்டி ஒதுக்கி, ஆகாய கங்கையினை - வான்யாற்று நீரை, அங்கையினின் — தங்களழகியகைகளாலே, அள்ளி — முகந்து, பாகு — சக்கரைக் குழம்புக்கு, ஆய - ஒப்பான, செஞ்சொலவர் — செவ்வையான சொற்களையுடைய சிலதிகள், வீசு-தெளிக்கிற, படுகார் — தெளிநீர் என்றனன், மீ ஆகாரம் — காரம் எனத் தலைக்குறையாகவும் தொடையல் என்பதில் வருமொழி நோக்காது அல் என்னும் சாரியை புணர்ந்தாற்போல் - படுகார் என்பதில் அம்முச்சாரியை-புணர்ந்த தென்றுங்கொண்டு-42-ம் பாட்டில் என்றனன் என்கிறதை-41-பாட்டுக்கும் கூட்டிக்கொள்க, இன்னும் அம் என்னும் பண்புப்பெயரில் இகரச்சாரியையும் துவ்விகுதியுங் கூட்டி படுகார் தெளிநீர் அழகிது எனவுமாம் — எ-று. 3

வேறு.

பஞ்சியூட்டியபாட்டிசைக்கிண்கிணிப்பதுமச்
செஞ்செவிச்செழும்பவளத்தின்கொழுஞ்சுடர்சிதறி
மஞ்சினஞ்சனநிறமறைத்தரக்கியர்வடித்த
அஞ்சிலோதியோடுவமையவவர்க்குறுமுவமை.

இ-ள். பஞ்சி - செம்பஞ்சுக்குழம்பு, ஊட்டிய - பூசின, பாட்டு இசை- இசைப்பாட்டுக்குத்தக்க, கிண்கிணி — சதங்கைகளணிந்த, பதுமம் — தாமரைமலரினது, செஞ்செவி - செவ்வையான அழகையுடைய, செழும்பவளத்தின் - செம்பவள நிறத்தைக் கொண்டகால்களின், கொழுஞ்சுடர் - செழிப்புள்ள காந்தியானது, சிதறி — மேலேசிதறுதலாகி, மஞ்சின்-மேகங்களினது, அஞ்சனநிறம் — கரிய நிறத்தை, மறைத்து — போக்கிமறைக்கப்பட்டு, அரக்கியர் — அப்படிப்பட்ட கால்களையுடைய ராக்ஷஸிகளினதுவடித்தசீவிவிட்ட, அம் — அழகிதான, சில் — சடைப்பில்லைத்தரித்த, ஓதியோடு - செம்மயிருடனே, உவமைய — ஒப்பாயின, பய அவர்க்கு — அந்த ராக்ஷஸிகள்மேனிக்கு, உறும் — பொருந்துவனவான, உவமை - ஒப்பமைந்தமேகங்கள், எழு — என்றனன் — எ-று. மேகங்கள் கறுத்திருக்கிறபோது அவர்கள் நிறத்துக்கொப்பாய் அவர்கள்காலின் செம்பஞ்சுக் குழம்பாலே சிவந்து செம்மயிருக்கொப்பாயின என்க. 4

நானநாண்மலர்க்கற்பகநறுவிரைநாறப்
பானம்வாயுறவெறுத்ததாளாறுடைப்பறவை

தேனவாவிரைச்செழுங்கழுநீர்த்துயில்செய்ய
வானயாறுதம்மரமியத்தலந்தொறுமடுத்த.

இ-ள். நானம் – கஸ்தூரிவாசமுள்ள, நாள் – தினம்மலர்தலையுடைய, மலர் – புட்பங்களைக்கொண்ட, கற்பகம் – கற்பகத்தினது, நறுவிரை – நல்ல பரிமளம், நாற – பரிமளிக்கவும், பானம் – குடித்தகற்பகத்தேனும், வாயுற – வாயிலே ஒழுகுவதாக, வெறுத்த – (அந்தத்தேனிலே) வெறுப்புண்டாகிய, தாள் ஆறுடை – ஆறுகால்களையுடைய, பறவை – பக்ஷியானவண்டு, தேன் - நீர்ப் பூவிற்றேனிலுள்ள, அவா – ஆசையாலே, விரை – வாசனையுள்ள, செழுங்கழுநீர் – செங்கழுநீர்ப் பூவிலேபோய், துயில்செய்ய – (தேனைப்பருகி அம்மயக்கத்தினாலே) நித்திரைசெய்துகொண்டிருக்க, வானயாறு – அம்மலரைப் பூத்திருக்கிற ஆகாயகங்கையானது, தம் – தங்களுடைய, அரமியத்தலந் தொறும் – நிலாமுற்றங்களெல்லாம், மடுத்த—எ-று. பாய்ந்துக்கொண்டிருக்கின்றன என்றனன். 5

குழலும்வீணையும்யாழுமென்றினையனகுழைய
மழலைமென்மொழிகிளிக்கிருந்தளிக்கின்றமகளிர்
சுழலுநன்னெடுந்தடமணிச்சுவர்தொறுந்துவன்றும்
நிழலுந்தம்மையுமெய்ம்மைகண்டறிவருநிலைய.

இ-ள். குழலும் – பொல்லாங்குழலும், வீணையும் – மகரவீணையும், யாழும் – தம்புரும், என்று – என்றுசொல்லப்படுகிற, இனையன – இவைகள், குழைய – தோற்க, மழலை – இளமையான, மென்மொழி – மிருதுவான சொற்களை, கிளிக்கு – கிளிப்பிள்ளைக்கு, இருந்து – (அதனருகி)லிருந்து, அளிக்கின்ற – கற்றுக்கொடுக்கிற, மகளிர் – பெண்களுடைய, சுழலும் - சூழ்ந்துள்ளதான, நல் – நல்ல, நெடும்தடம் – நீண்ட விசாலமுள்ள, மணி - பளிங்கினாற்செய்த, சுவர்தொறும் – சுவர்களெல்லாம், துவன்றும் – பதிந்து தோன்றுகிற, நிழலும் – பிரதிபிம்பத்தையும், தம்மையும் – அப்பெண்களையும், மெய்ம்மை – நிஜம், கண்டு – தெரிந்து பார்த்து, அறிவு – அறிதற்கு, அரு – அரிதான, நிலைய – நிலையையுடையன, பளிங்குமாடங்கள் எழுநிலைய, பய என்றனன்—எ-று. 6

இனையமாடங்களிந்திரற்கமைவரவெடுத்த
மனையின்மாட்சியவென்னினச்சொல்லுமாசுண்ணும்
அனையதாமெனினரக்கர்தந்திருவுக்குமளவை
நினையலாமன்றியுவமையுமன்னதாநிற்கும்.

இ-ள். இனைய – இப்படிப்பட்ட, மாடங்கள் – வீடுகள், இந்திரற்கு - தேவராஜனுக்கு, அமைவர – பொருந்துவதாக, எடுத்த – உயர்த்துகட்டின, மனையின் – வீடுபோல, மாட்சிய – பெருமையையுடையன, என்னில் - என்று சொல்லலானல், அச்சொல்லும் – அப்படிச்சொல்லுகிறசொல்லும், மாசுண்ணும் - குற்றப்படும், அனையது - அப்படிச்சொல்லுகிறது, ஆமெனில் -

சரிதானென்றால், அரக்கர்தம் - ராக்ஷஸர்களுடைய, திருவுக்கும் — செல்வத்துக்கும், அளவை — ஓரளவை, நினையலாம் — எண்ணலாகும், அன்றி — திருவுக்கு அளவுநினையலாவதேயல்லாமல். உவமையும் — ஒப்புச்சொன்னதும், அன்னதாய் — அத்தன்மையாகவே, நிற்கும் — நிலைபெறுவதாம் என்றால், அரக்கர்தந்திருவுக்கு அளவின்மையாலே, அவர்கள்வீட்டிற்கும் ஒப்பில்லையென்றாயிற்று, தோஷமில்லாத சொற்களைத் தோஷமுள்ளபொருள்மேலாரோபிக்கலாகாதென்பார் சொல்லுமாகுண்ணமென்றார்—எ-று. 7

மணிகளெத்துணைபெரியவுமாறிருமார்பின்
அணியுங்காசினுக்ககன்றனவுளவெனலரிதால்
திணியுநன்னகர்த்திருமனைதெய்வமாத்தச்சன்
துணிவின்வந்தனன்றொட்டழகிழைத்தவத்தொழில்கள்.

இ-ள். மணிகள் எத்துணை பெரியவும் - எவ்வளவு பெரிய ரத்நங்களும், மால் - திருமாலுடைய, திருமார்பில் — திருமார்பிலே, அணியும் — தரிப்பதான, காசினுக்கு — பதுமராக ரத்நத்துக்கு, அகன்றன் — அதிகமானவைகளாக, உள — சில உள்ளன, எனல் - என்றுசொல்லுதல், அரிது — இல்லை திணியும் நன்னகர் — இந்த நல்லவூரிலே நெருங்குவனவான, திருமனை - சிறந்த வீடுகளுக்கு, தெய்வமாத் தச்சன் - தெய்வத் தன்மையான பெருமையையுடைய தச்சனானவன், துணிவின் (விசேஷமாய்ச் செய்யவேணுமென்கிற) துணிவுகொண்டு, வந்தனன் — வந்தானாய், தொட்டு — (தன்கையாலே) தொட்டு, அழகு இழைத்த - அழகுபண்ணின, அத்தொழில்கள் — அந்த விசித்திரவேலைகளாலே, மால் — திருமார்பின்மணிக்கும் அகன்றன உள வெனலாயிருக்கின்றன என்பது போதா அரிதென்றார் இதனாலே தொழிலினருமை விளங்குகிறது என்றனன்—எ-று. 8

வாழுமன்னுயிர்யாவையுமொருவழிவாழ
ஊழிநாயகன்றிருவயிறொத்துளதிவ்வூர்
ஆழியண்டத்தினருக்கன்றனலங்குதேர்ப்புரவி
ஏழுமல்லனவீண்டுளகுதிரையுமெல்லாம்.

இ-ள். மன்னுயிர்யாவையும் — (உலகத்திலே) நிலைபெறுதலையுடைய சகல பிராணிகளும், ஒருவழி வாழும் — இந்த ஓரிடத்திலேதானே அடங்கி வாழ்வையடையும், வாழ — இப்படி வாழ்தற்கிடமாதலாலே, இவ்வூர் — இந்த ஊரானது, ஊழிநாயகன் - அழியாமுதல்வனான திருமால், திருவயிறு - திருவயிற்றை, ஒத்துளது — ஒத்திருக்கின்றது, ஆழி - சக்கராகிருதியான, அண்டத்தின - ஆகாயத்திலே, அருக்கன்றன் - சூரியனுடைய, அலங்கு - அசைதலைக்கொண்ட, தேர்ப்புரவி - தேர்க்குதிரைகள், ஏழும் அல்லன - ஏழும் அல்லவாயிருக்கின்றன, ஈண்டுள - இங்கேயிருக்கிற, குதிரையுமெல்லாம் - எல்லாக்குதிரைகளும், என்றால் - சூரியன் குதிரைகளோ என்று

நினைத்து ஆகாயத்திலே சூரியன் செல்லுதலாலே அவைகளல்ல என்றன்ன எல்லாஞ் சூரியன் குதிரைகள்போல்வன என்பது கருத்து—எ-று. 9

மரமடங்கலுங்கற்பகமனையெலாங்கனகம்
அரமடந்தையர்சிலதியரரக்கியர்க்கமரர்
உரமடங்கிவந்துழைபராயுழல்பவரொருவர்
தரமடங்குவதன்றிது தவஞ்செய்ததவமால்.

இ-ள். மரமடங்கலும் - மரங்களெல்லாம், கற்பகம் - அவர்களெண்ணின படி தருதலாலே கற்பகவிருக்ஷங்களேயாம், மனையெலாம் - வீடுகளெல்லாம், கனகம் - சுவர்ணமேயாம், அரக்கியர்க்கு - ராக்ஷஸிகளுக்கு, அரமடந்தையர் - தேவரம்பைகளெல்லாம், சிலதியர் - ஊழியகாரிகள், உரம் - தங்கள் சக்திகளெல்லாம், அடங்கி வந்து - அடங்குதலாய்வந்து, உழையராய் உழல்பவர் - ஊழியகாரராய் வருந்துகிறவர்கள், அமரர் - தேவர்கள் ஆகையால், ஒருவர் தரம் - ஒருவர்வசவாக இவ்வளவும், அடங்குவது - கூடியிருப்பது, அன்று - அல்ல, இது - இப்படிப்பட்ட ஐசுவரியம் உளதானது, தவஞ்செய்த - தவமானது பண்ணின, தவம் - தவப்பலனாலேயாம் என்றனன்—எ-று. 10

போரியைந்தனதோற்றவென்றிகழ்தலிற்புறம்போய்
நேரியன்றவன்றிசைதொறுநின்றமாநிற்க
ஆரியந்தனியைங்கரக்களிறுமோராழிச்
சூரியன்றனித்தேருமேயிந்நகர்தொகாத.

இ-ள். போர் — சண்டைக்கு, இயன்றன - முன்னே உடம்பாடாயின வைகளாய், தோற்ற என்று - பின்பு தோற்றன என்று, இகழ்தலில் - இராவணன் இகழ்ந்துவிட்டதனாலே, புறம்போய் - தூரத்தேபோய், நேர்இயன்ற - தங்களுக்குச்சரியாயமைந்த, வன் - பலமுள்ள, திசைதொறும் - எட்டுத் திக்கிலும், நின்றமா - நின்றயானைகள், நிற்க - அப்படியே நிற்பனவாக, ஆரியம் - அழகும், தனி — ஒப்பின்மையுமுள்ள, ஐங்கரக்களிறும் - கணபதியாகிய ஐந்துகைகளுள்ள யானையும், ஓராழி - ஒற்றை உருளையையுடைய, தனி - ஒப்பில்லாத, சூரியன் தேருமே - சூரியன் இரதமொன்றுமே, இந்நகர் - இவ்வூரில், தொகாத - சேராதவைகள் என்றனன், என்றால் - மற்ற எல்லாருடைய யானைகளும் தேர்களும் அரக்கராலே கொள்ளப்பட்டிருக்கின்றன.

தேவரென்பவர்யாருமித்திருநகர்க்கிறைவற்
கேவல்செய்கிலாரேவரேயெண்வகையுருவின்
மூவர்தம்மினுமதிகனென்றலவன்முயலும்
தாவின்மாதவமல்லதுபிறிதொன்றுதருமோ.

இ-ள். தேவரென்பவர்யாரும் - தேவரென்றுசொல்லப்படுகிறவர்கள் எல்லாரும், இத்திருநகர்க்கு - இந்தச்சிறப்புள்ளவூருக்கு, இறைவற்கு - தலைவனைராவணனுக்கு, ஏவல் - ஏவல்செய்கிறவர்களே, செய்கிலார் - ஊழி

யஞ் செய்யாதவர்கள், எவர் - யாவர், எண்வகை உருவின் - எட்டுவகையான வடிவுள்ள, மூவர்தம்மினும் - மும்மூர்த்திகளிலும், அதிகன் - இராவணன் சிறந்தவன், என்றால் - என்றுசொல்லலாகுல், அவன் - அந்தராவணன், முயலும் - செய்வதான, தா - கெடுதல், இல் - இல்லாத, மா - பெரிய, தவம் - தவத்தை, அல்லது - அல்லாமல், பிறிதொன்று - வேறொன்று, தருமோ - ஏவல்கொள்ளத்தக்க சக்தியைத் தாவல்லதாமோ, இதனால் இராவணன் செய்ததவமே தவமென்றதாயிற்று என்றனன்—எ-று. மூவரும் தேவரை யேவல்கொள்வாராயினும் இவன்போ னலியாரென்பது தோன்ற அதிகனென்றது. 12

தழங்குபேரியினார்கலிதகைநெடுங்களிறு
முழங்குமோதையுமூரிநீர்முழக்கொடுமுழங்கும்
கொழுங்குழற்புதுக்குதலையர்நூபுரக்குரலின்
வழங்குமப்பெருந்துழனிகள்வயின்றொறுமறையும்.

இ-ள். தழங்கு - (எப்போதும்) ஒலிக்கின்ற, பேரியின் - டம்மானையில், ஆர் - நிரம்புதலான, கலி - சத்தமானது, மூரிநீர்முழக்கொடு - முழங்கும் அதுவேயன்றி, தகை - பெருமையும், நெடு - உயர்வுமுள்ள, களிறு - யானைகள், முழங்கும் - முழங்குகின்ற, ஓதையும் - சத்தமும், மூரிநீர் - கடலினது, முழக்கொடு - சத்தத்துடனே முரணி, முழங்கும் - ஒலிக்கும், கொழும் - செழுமையான, குழல் - பொல்லாங்குழலிசைபோல், புது - புதுமையைச் செய்கிற, குதலையர் - மழலைச்சொற்களை யுடையவர்களுடைய, நூபுரக்குரலின் - சிலம்போசையினாலே, வழங்கும் - கீழேசொல்லுவனவான, அ - அந்தயானைகளின், பெருந்துழனிகள் - பெரிய ஓசைகள், வயின்றொறும் - இடங்க ளெல்லாம், மறையும் - அடங்கிப்போம்—எ-று. என்றனன். 13

மரகதத்தினுமற்றுளமணியினும்வனைந்த
குரகதத்தடந்தேரினமவைபயில்கொட்டில்
இரவிவெள்கநின்றிமைக்கின்றவியற்கையவென்றால்
நரகமொக்குமானனெடுந்துறக்கமிந்நகர்க்கு.

இ-ள். மரகதத்தினும் - மரகத ரத்நங்களாலும், மற்றுள - இன்னுமுண்டான, மணியினும் - ரத்நங்களாலும், வனைந்த - செய்திருக்கிற, குரகதம் - குதிரைகள் - கட்டுவனவான, தடம் - பெரிய, தேரினம் - தேர்க்கூட்டங்களாகிய, அவை - அவைகளெல்லாம், பயில் - பொருந்துகின்ற, கொட்டில் - சாலைகள் காடிகாறு, இரவி - சூரியன், வெள்க - நாண, நின்று - நிலைகொண்டு, இமைக்கின்ற - விளங்குகிற, இயற்கைய - ஸ்வபாவத்தையுடையன, என்றால் - என்றுசொல்லலாகுல், இந்நகர்க்கு - இந்த ஊருக்கு, நல் - நல்லசுகம், நெடு - நீளுவதான, துறக்கம் - சுவர்க்கலோகமானது, நரகம் - நரகலோகத்தை, ஒக்கும் - நேராகும் என்றால், இவ்வூரே சுவர்க்கம்போல்வதாம்—எ-று. 14

திருகுறுஞ்சினத்தரக்கருங்கருநிறந்தீர்ந்தார்
அருகுபோகின்றதிங்களுமறுவற்றதழகைப்
பருகுமிந்நகர்த்துன்னொளிபாய்தலிற்பசும்பொன்
உருகுகின்றதுபோன்றுளதுலகுசூழுவரி.

இ-ள். இந்நகர்த்துன்னொளிபாய்தலில் திருகுறும் - கோணுதலான, சினத்து - கோபத்தையுடைய, அரக்கரும் – ராக்ஷஸர்களும், கருநிறம் - தங்கள் கரியநிறம், தீர்ந்தார் - நீங்குதலாயிருக்கிறார்கள், அருகு - சமீபத்திலே, போகின்ற - செல்லுகிற, திங்களும் - சந்திரனும், மறுஅற்றது - களங்கநீங்கியிருக்கின்றது, அழகை - இவ்வூரழகை, பருகும் - அனுபவிக்கிறதுமாகிறான் சந்திரன், இந்நகர் – இந்தஊரில், துன் - பொருந்தின, ஒளிபாய்தலில்-ஒளிபடிதலாலே, பசும்பொன் - கிளிச்சிறைப்பொன், உருகுகின்றது-உருகுகிறதை, போன்றுளது - ஒத்திருக்கின்றது, உலகுசூழ் - இவ்வூரைச்சூழ்ந்த, உவரி - உவர்க்கடல், என்றனன்—எ-று. 15

அண்டமுற்றவும்வீங்கிருளகற்றுநின்றலரி
கண்டவாற்றினிக்கடிநகர்நெடுமனைக்கதிர்கள்
உண்டவாற்றினொன்றுரைப்பரிதொப்பிடிற்றன்முன்
விண்டவாய்ச்சிறுமின்மினியென்னவும்விளங்கா.

இ-ள். அண்டமுற்றவும் - ஆகாயமுழுதும் எங்கும், வீங்கு - நிரம்புதலாகிற, இருள் - இருளை, அகற்றும் - ஒதுங்கச்செய்வான், நின்று - எங்குந்தோன்றி, அலரி - சூரியன் இருளகற்றும், கண்ட ஆற்றின் - அப்படிச்சூரியன் செய்கிறமுறையை, இக்கடிநகர் - இக்காவல்பெற்ற ஊரிலுள்ள, நெடுமனை - நீண்ட உயர்ந்த வீடுகளின், கதிர்கள் - ஒளிகள், உண்ட ஆற்றின் - இருளை உண்டுபோகச்செய்கிற முறையில், ஒன்று - ஒருபடியாகவும், உரைப்பு - சொல்லுதற்கு, அரிது - கூடாது, ஒப்பு இடில் - சரிசொல்வதானல், தன்முன் - சூரியனாகிய தனக்குமுன்னே, விண்ட - ஒளியைவிடுவதான, வாய் - வாயையுடைய, சிறுமின்மினி - சிறியமின்மினி, என்னவும்-என்றுசொல்லவும், விளங்கா - இவ்வூரினொளிக்குச் சூரியனொளிவிளங்குதலில்லை, இவ்வூர் சூரியன் - சூரியன் மின்மினி, என ஒப்பிட்டாலும் சரிபோதா என்றனன்—எ-று. 16

தேனுஞ்சாந்தமுமான்மதஞ்செறிநறுஞ்சேறும்
வானநாண்மலர்க்கற்பகமலர்களும்வயமாத்
தானவாரிநீரொடுமடுத்தலிற்றழீஇய
மீனுந்தானுமோர்வெறிமணங்கமழுமாம்வேலே.

இ-ள். தேனும் - அத்தரும், சாந்தமும் - சந்தனமும், மான்மதம் - கத்தூரியினதுசெறி களிப்புள்ள, நறுஞ்சேறும் - நல்லகுழம்பும், வானம் - ஆகாயத்துள்ள, நாண்மலர் - நாட்பூக்களையுடைய கற்பகமலர்களும், வயமா-ஜயமுள்ள யானைகளின், தானவாரியும் - மதவெள்ளமும், நீரோடு - ஜல

தாரை நீரோடுகூடி, மடுத்தலில் - பாய்தலாலே, தழீஇய - தன்னிலே பிறந்துள்ள, மீனும் - மீன்களும், தானும் - அம்மீன்களைப்பெற்ற தானும், வேலை ஆம் - கடலினீர், ஓர் - ஒப்பில்லாத, வெறிமணம் - பரிமளகந்தம், கமழும் - நாறுவதாம், என்றனன்—எ-று. 17

தெய்வத்தச்சனைபுகழ்துமோசெங்கண்வாளரக்கன்
மெய்யொத்தாற்றியதவத்தையேவியத்துமோவிரிஞ்சன்
ஐயப்பாடிலாவரத்தையேமதித்துமோவறியாத்
தொய்யற்சிந்தையாம்யாவரையாதென்றுதுதிப்பாம்.

இ-ள். தெய்வத்தச்சனை - தெய்வப் புலமையுள்ளயமனை, புகழ்துமோ - புகழ்ந்துசொல்லலாமா, செங்கண் - சிவந்தகண்களையுடைய, வாளரக்கன் - வாள்வல்லவனுனராவணன், மெய் ஒத்து - உண்மைசரியாய், ஆற்றிய - செய்த, தவத்தையே — தவச்சிறப்பையே, வியத்துமோ - வியந்துசொல்லுவோமோ, விரிஞ்சன் - பிரமன்கொடுத்த, ஐயப்பாடு - சந்தேகப்படுதல், இலா — இல்லாத, வரத்தையே - வரபலத்தையே, மதித்துமோ - கொண்டாடுவோமா, அறியா — விவேகமில்லாத, தொய்யல் — நைதலை உடைய, சிந்தை — மனசைக்கொண்ட, யாம் — நாம், யாவரை — தச்சன் இராவணன் பிரமன் ஆகியமூவரில், எவரை, யாதொன்று — எந்த உவமையைக்கொண்டு, துதிப்பாம் — துத்தியஞ்செய்வாம், என்றனன்—எ-று. 18

வேறு

வானுந்நிலனும்பெறுமாறினிமற்றுமுண்டோ
கானும்பொழிலும்மிவைசெங்கனகத்தினாலும்
ஏனம்மணியாலுமியற்றியவேனும்யாவும்
தேனும்மலருங்கனியுந்தரச்செய்தசெய்கை.

இ-ள். வானும் - சுவர்க்கலோகமும், நிலனும் — பூலோகமும் ராவணன் போல், பெறும் ஆறு — ஒருவன்பெறும்படியாகிறது, இனி - இனி ஒருகாலத்திலே, மற்றும் உண்டோ - வேறோர் வகை உளதாகுமோ இல்லை ஆனாலும், கானும் - காடுகளும், பொழிலும் - சோலைகளும் ஆகிய, இவை-இவைகளை, செங்கனகத்தினாலும் — செம்பொன்னாலும், ஏனை - பொன்னல்லாத, மணியாலும் - ரத்நங்களாலும், இயற்றிய — இவ்வூரில் அமைக்கப்பட்டிருக்கின்றன, ஏனும் - (இனியொருகாலத்திலிப்படி) அமைக்கப்படுமே ஆனாலும், யாவும் - கானிலும் பொழிலிலுமுள்ள மரங்களெல்லாம், தேனும்-தேனையும், மலரும் - புட்பங்களையும், கனியும் - பலங்களையும், தர - தருவனவாக, செய்தசெய்கை - அமைத்திருக்கிறவிசித்திரம், உண்டோ - உளதாகுமோ உளதாகா, இனி இந்தராவணன்போல் தவத்தாற்சிறந்த ஒருவன் உண்டாகி அவனுக்காக மரங்களெல்லாம் பொன்னாலும் ரத்நங்களாலும் அமைந்தாலும் அம்மரங்கள் தேன் மலர் கனிகளைத் தருவனவாகா இவனுக்குத் தருவனவாயிருக்கின்றன என்றபடி ஆகலால் மற்றும் உண்டோ என்றனன்—எ-று.

வேறு

நீரும்வையமுநெருப்புமேனிமிர்நெடுங்காலும்
வாரிவானமும்வழங்கலவாகுந்தம்வளர்ச்சி
ஊரினிந்நெடுங்கோபுரத்துயர்ச்சிகண்டுணர்ந்தால்
மேருவெங்ஙனம்விளர்க்குமோமுழுமுற்றும்வெள்கி.

இ-ள். நீரும் - அப்பும், வையமும் - பிருதிவும், நெருப்பும் - தேயுவும், மேல் - மேலே, நிமிர் - உலாவுகிற, நெடுங்காலும் - நெடிதானவாயுவும், வாரி - இந்த நான்கு பூதங்களும் வருதற்கிடமான, வானமும் - ஆகாயமும், தம்வளர்ச்சி - தந்தம் உயர்வுகள், வழங்கல் ஆகும் - பிரசித்தப்படுவன அல்ல வாயிருக்கின்றன ஆகலால் இப் பூதங்கள் கோபுரத்துக் கொப்பாகா, ஊரில்- இவ்வூரிலுள்ள, இந்நெடுங்கோபுரத்துயர்ச்சி — இந்த நீண்டகோபுரத்தின் உயர்வை, கண்டு - பார்த்து அதன் உயர்வையும், உணர்ந்தால் - தன் உயர் வையும் யோசித்தால், மேரு - மேருமலையானது, எங்ஙனம்-எப்படி, விளர் க்குமோ-வெளுத்துப்போமோ தெரியவில்லை முழுமுற்றும்வெள்கி-நாணித் தன் உடம்பெல்லாம் எங்ஙனம் விளர்க்குமோ என்றனன்—எ-று. ஒருவரு க்கு நாணமுண்டானால் உடம்பெல்லாம் விளக்குமென்பதுகொள்க. 20

முன்னம்யாவருமிராவணன்முனியுமென்றெண்ணிப்
பொன்னின்மானகர்மீச்செலான்கதிரெனப்புகல்வார்
கன்னியாரையினொளியினிற்கண்வழுக்குறுதல்
உன்னிநாடொறும்விலங்கினன்போதலையுணரா.

இ-ள். கன்னி — அழியாத, ஆரையின் - இவ்வூர்மதிலின், ஒளியினில்- ஒளியினாலே, கண்வழுக்குறுதல் - கண்கூசுதலை, உன்னி - நினைத்து, நாள் தொறும் - தினந்தோறும், விலங்கினஅ - விலகினவனாகி, போதலை - போகு தலை, உணரா - தெரியாமல், முன்னம் - முற்காலந்தொடங்கி, யாவரும்- எல்லாரும், இராவணன் - தசக்கிரீவன், முனியுமென்று - கோபிப்பா னென்று, எண்ணி - நினைத்து, பொன்னின் - பொன்னாலாகிய, மா - பெரி தான, நகர்மீ - இவ்வூரின்மேலே, கதிர் - சூரியன், செலானென - போகா னென்று, புகல்வார் - சொல்லுவார்கள், என்றனன் - உணர்ந்தவர் மதிலி னொளிக்குக் கண்கூசி விலகிப்போகிறான் சூரியன் என்பாரென்பதினாலே மதிலினொளியை விசேடித்ததாயிற்று—எ-று. 21

தீயசெய்குநர்தேவராலனையவர்சேரும்
வாயிலல்லதோர்வரம்பமைக்குவனெனமதியாக்
காயமென்னுமக்கணக்கறுபதத்தையுங்கடக்க
ஏயுநன்மதிலிட்டனன்கைலையையெடுத்தான்.

இ-ள். தீய — தீமையானவைகளை, செய்குநர் - தனக்குச் செய்கிறவர் கள், தேவர் ஆல் - தேவர்களாகையாலே, அனையவர் - அந்தத்தேவர்கள்,

சேரும் - வருவதான, வாயில் - கோட்டைவாயிலை, அல்லது - அல்லாமல் வேறுவழியில்லாமல், ஓர்வரம்பு - ஒரு அளவை, அமைக்குவனென - செய்கிறேனென்று, மதியா - ஆலோசித்து, காயமென்னும் - ஆகாயமென்கிற, அ - அந்த, கணக்கு அறு - அளவற்ற, பதத்தையும் - இடத்தையும், கடக்க - கடந்துமேலாக, எயும் - பொருந்துவதான, நன்மதில் - நல்லமதிலை, இட்டனன் செய்துகொண்டிருக்கிறான், கைலையை-வெள்ளிமலையை, எடுத்தான் - அசைத்துப் பிடுங்கினராவணன்—எ-று. என்றனன் தேவர்கள் ஆகாயவாசிகளானாலும் அவர்களுலகத்துக்குமேலே கணக்கற்ற தூரம் உயர்ந்திருக்கின்றது மதில் எனக்கொள்க. அத்தேவர்களும் கோட்டைவாயில் வழிதான் வரவேணும் என்பது கருத்து. 22

கறங்குகால்புகாகதிரவனொளிபுகாமறலி
மறம்புகா தினிவானவர்புகாரென்கைவம்பே
திறம்புகாலத்துள்யாவையுஞ்சிதையினுஞ்சிதையா
அறம்புகா திந்தவணிமதிட்கிடக்கைநின் றகத்தின்.

இ-ள். கறங்குகால் - சுழல்காற்றும், புகா - நுழையாது, கதிரவன்-சூரியனுடைய, ஒளி - வெயிலும், புகா - செல்லாது, மறலி - யமனுடைய, மறம் - வீரச்செய்கையும், புகாது - அவ்வூரிற்செல்லாது என்றால், இனி - இன்னமும், வானவர் - தேவர்களும், புகாரென்கை - செல்லாரென்னுதல், வம்பே - வியர்த்தமே, திறம்பு காலத்துள் - அழியுங்காலத்தில், யாவையும் - எல்லாம், சிதையினும் - அழிந்தாலும், சிதையா - அழியாத, அறம் - தருமமும், புகாது - செல்லாது, இந்த அணி - அழகிதான, மதிட்கிடக்கைநின்று - மதிலிருப்பினின்றும், அகத்தில் - உள்ளே, அறம்புகாதிருத்தலால் - இனி இவ்வூரழிந்துபோம் என்றனன்—எ-று. 23

கொண்டவான்றிரைக்குரைகடலிடையதாய்க்குடுமி
எண்டவாவிசும்பெட்டநிற்றிமைக்கின்றவெழிலால்
பண்டைநாகணைப்பள்ளியானுந்தியிற்பயந்த
அண்டமேபுமொத்திருந்த திவ்வகனகரமைதி.

இ-ள். கொண்டவான் திரை - பெரிதான அலைகளைக்கொண்ட, குரைகடல் - சத்தியாநிற்கிற கடலின், இடையதாய் - நடுவே உள்ளதாகி, குடுமி - இவ்வூர்ச்சிகரம், எண்டவா - அளவுகள் அடங்காத, விசும்பு - ஆகாயத்தை, எட்டநின்று - தொடுவதாகநின்று, இமைக்கின்ற - பிரகாசிக்கின்ற, இயல்பால் - இலக்கணத்தினாலே, பண்டை - முன்னே, நாகணை - சர்ப்ப சயனத்திலே, பள்ளியான் - நித்திரை செய்கிறவன் தனது, உந்தியில் - திரு உந்தியினாலே, பயந்த - பெறுவதான, அண்டமேயும் - பிரமாண்டமேயென்றாலும், ஒத்திருந்தது - சரியாகவேயிருக்கின்றது, இ - இந்த, அகல் - அகன்ற, நகரமைதி - ஊரினமைவு என்றனன்—எ-று. பிரமாண்டமுங் கடலினடுவே தோன்றி உயர்ந்திருக்கின்றது இவ்வூருங்கடலினடுவே தோன்றுதலாய் உயர்ந்திருக்கிறது ஆதலால் ஒத்திருந்தது என்பதாயிற்று. 24

பாடுவார்பலரென்னின் மற்றவரினும்பலரால்
ஆடுவார்கண்மற்றவரினும்பலருளரமைதி
கூடுவாரிடையின்னியங்கொட்டுவார்முட்டில்
வீடுகாண்குறுந்தேவரால்விழுநடங்காண்பார்.

இ-ள். பாடுவார் - பாடகர்களோ, பலர் - அனேகர், என்னில் - என்றால், மற்றவரினும் - பாடுகிற அவர்களினும், பலர் - அநேகர், ஆடுவார்கள்- ஆடுகிறவர்கள், மற்றவரினும் - ஆடுகிற அவர்களிலும், அமைதி - சமையமுண்டாகி, கூடுவாரிடை - கூடினவர்கள்நடுவே, இன் இயம் - இனியவாத்தியங்கள், கொட்டுவார் - சேவிக்கிறவர்கள், பலருளர் - அநேகராயிருக்கிறார்கள், முட்டில் - குறைவில்லாத, வீடுகாண்குறும் - வீடுதலைப்பெற்றிருக்கிற, தேவர் ஆல் - தேவர்களேவியந்தவர்களாய், விழு - சிறந்த, நடம்-நடனத்தை, காண்பார் - பார்க்கிறவர்கள், என்றனன் என்றால், பாடல் ஆடல் இயங்கொட்டல் ஆகிய இவற்றில் வல்லவர்கள் அரக்கர்களே இவைகளெல்லாம் வியந்துபார்க்கிறவர்கள் தேவர்களே என்பது கருத்து, அமைதிகூடலாவது- கல்யாணம் உற்சவங்கள் முதலானவை நடக்கிற இடங்களில் ஒருசேரக் கூடுதல் ராஜகாரியங்களைவிட்டுத் தாங்கள் சந்தோஷிக்க நேரிடுகிறகாலத்தை அமைதி என்றார். ராக்ஷதர்களுக்கு ஊழியஞ்செய்கிறதைவிடுதல் வேண்டின தேவர்கள் முட்டில் வீடு ஆவது ஊழியஞ்செய்தலில் எவ்வளவுங்குறைதலில்லாமற் செய்துவிடுதல் என்க. எனவே அவ்வரக்கர்களுடைய பாடலாடல் கொட்டல்கள் தேவர்கள் அதிசயிக்கத்தக்கன என்பது கருத்து—எ-று. 25

வானமாதரோடிகலுவர்விஞ்சையர்மகளிர்
ஆனமாதரோடாடுவரியக்கியரவரைச்
சோனைவார்குழலரக்கியர்தொடர்குவர்தொடர்ந்தால்
ஏனைநாடியரருநடக்கிரியையாய்ந்திருப்பார்.

இ-ள். வனமாதரோடு - தெய்வப்பெண்களுடனே, இகலுவர் - விரோதித்தாடுவார்கள், விஞ்சையர்மகளிர் - வித்தியாதரப்பெண்கள், ஆனமாதரோடு - அப்படியாடலான பெண்களுடனே, ஆடுவர் - இகலி ஆடுவார்கள், இயக்கியர் - யக்ஷகன்னிகள், அவரை - அந்தயக்ஷகன்னிகளுடைய, சோனை - மேகம்போன்ற, வார் - நீண்ட, குழல்தொடர்குவர் - கூந்தலைப்பற்றி ஆடத்தொடருவார்கள், அரக்கியர் - ராக்ஷதப்பெண்கள், தொடர்ந்தால் - இந்த ராக்ஷதப்பெண்களே வல்லவராய்த்தொடர்வதானால், ஏனைநாடியர் - எந்த நாட்டுப்பெண்கள், அரு - அருமையான, நடக்கிரியை - நடன உல்லாசமான செய்கைகளை, ஆய்ந்திருப்பார் - பார்த்துமதித்து மகிழுமவர்கள், என்றால் - ஊழியஞ்செய்தற்குரிய தெய்வப்பெண்களே பார்த்து மகிழுமவர்களென்றாயிற்று, ஏனை என்பது வினாப்பொருளைக் கருதியதாகக்கொள்க என்றனன்—எ-று. 26

இழையுமாலையுமாடையுஞ்சாந் தமுமேந்தி
உழையரென்னநின் றுதவுவநிதியங்களொருவர்
விழையும்போகமேயிங்கிதுவாய்கொண்டுவிளம்பிற்
குழையுநெஞ்சினுனினையினுமாசென் றுகொள்ளும்.

இ-ள். இழையும் – ஆபரணங்களும், மாலையும் - பூமாலைகளும், ஆடையும் - வத்திரங்களும், சாந்தமும் - சந்தனமும், ஏந்தி - தம்கைகளிலே கொண்டு, உழையரென்ன நின்று - அருகிலுள்ள பரிசாரகர்போலநின்று, நிதியங்கள் உதவுவ - நவநிதிகளுமே கொடுக்கலாயின ஆனுல், ஒருவர் - யாரேனுமொருவர், விழையும் – வேண்டுவதான, போகமே - சுகமா அன்று தவத்தாற்சிறந் தனுபவிக்கிற போகத்தை அத்தவமில்லாதார் வேண்டினுல் கிடைப்பதொன்றோ என்பது கருத்து, இங்கு - இவ்வூரிலுள்ள, இது – இவ்வகையான போகங்களை, வாய்கொண்டு - வாயால், விளம்பில் - சொன்னுல், குழையும் - அந்த வாய் குழைந்துபோம், நெஞ்சினுல் – மனத்தால், நினையினும் - நினைத்தாலும், மாசு என்று - அந்த நெஞ்சுதனக்குத் தோஷம் உண்டாமென்று, கொள்ளும் - கொள்ளுதலாகும் என்றனன்—எ-று. வாய் குழையலாவது பலகாற் சொல்லியு முடிவுபெருது குழைதல் மனத்துக்கும் அப்படியே என்க. 27

பொன்னின்மால்வரைமேன் மணிபொழிந்தனன்பொருத்தி
உன்னுநான்முகத்தொருவனின் றூழ்முறையுரைக்கப்
பன்னிநாள்பலபணியுழன் றரிதினிற்படைத்தான்
சொன்னவானவர்தச்சனுமின்னகர்துதிப்பான்.

இ-ள். பொன்னின்மால்வரைமேல் - பொன்னுலாகிய உயர்ந்த ஒரு மலைமேலே, மணி - மாணிக்கங்களை, பொழிந்தனன் - கொட்டினவனுகி, பொருத்தி – அம்மணிகளைப் பொருந்தப் பதித்து, உன்னும் - இன்னபடி அமையவேணுமென்று நினைக்கிற, நான்முகத்து - நான்குமுகங்களையுடைய, ஒருவன் - ஒப்பில்லாத பிரமன், நின்று - அருகிலேநின்று, ஊழ்முறை- வரிசைக்கிரமங்களை, உரைக்க - சொல்லிக்கொண்டுவர, பன்னி - இராவணனுலே சொல்லுதலாகி ஏவுதலாய், நாள்பல - அநேககாலம், பணி - இந்த வேலைகளிலே, உழன்று - வருந்துவதாய், அரிதினில் - அருமைதோன்றுதலாலே, நாம் - நாமெல்லாம், இந்நகர் - இந்த ஊரை, துதிப்பான் - புகழும்படி, சொன்ன - வேலையிற் சிறந்தவனென்று சொல்லலான, வானவர் தச்சன் - தேவர்களுடைய தச்சனே, படைத்தான் - உளதாகச்செய்தான் என்றனன்—எ-று. 28

மகரவீணையின் மந்திரகீதத்தின்மறைந்த
சகரவேலையினர்கவிதிசைமுகன் றடவும்
சிகரமாளிகைத்தலந்தொறுந்தெரிவையர்நிவந்த
அகருதூபத்தினமுந்தினமுகிற்குலமனைத்தும்.

இ-ள். சகரவேலையின் - சகரர்தோண்டின கடலினது, ஆர் - நிரம்பிய, கலி - ஓசையானது, மகரவீணையின் - மகரவீணையினொலியாலும், மந்திர கீதத்தின் - வேதகானங்களாலும், மறைந்தது-அடங்கலானது, திசைமுகன்-பிரமனுலகத்தை, தடவும் - அளாவுவனவான, சிகரம் - சிகரங்களையுடைய, மாளிகைத்தலந்தொறும் - வீடுகளிலெல்லாமுள்ள, தெரிவையர் நிவந்த-பெண்களாலுயருகிற, அகரு தூபத்தின் - அகிற்புகைகளிலே, முகிற்குலம் அனைத்தும் - மேக கூட்டங்களெல்லாம், அழுந்தின - அமிழ்தலாயின, என்றனன்—எ-று. 29

பளிக்குமாளிகைத்தலந்தொறுமிடந்தொறும்பசுந்தேன்
துளிக்குங்கற்பகத்தண்ணறுஞ்சோலைகடோறும்
அளிக்குந்தேறலுண்டாடுநர்பாடுநராகிக்
களிக்கின்றாலாற்கவல்கின்றாரொருவரைக்காணேன்.

இ-ள். பளிங்கு - பளிங்குக் கல்லாற்செய்த, மாளிகைத்தலந்தொறும் இடந்தொறும் - மற்ற இடங்களிலும், பசுந்தேன் - பசியதேனை, துளிக்கும்-சிந்துவனவான, தண் - குளிர்ந்த, நறும் - மணம்வீசுகிற, கற்பகச்சோலைகள்தோறும் - கற்பகச்சோலைகளிலும், அளிக்கும் - உமையர்கொடுப்பதான, தேறல் - கள்ளை, உண்டு - குடித்து, ஆடுநர் - ஆடுகிறவர்களும், பாடுநர்-பாடுகிறவர்களும், ஆகி - ஆக, களிக்கின்றார் - சந்தோஷிக்கின்றவர்களே, அலால் - அல்லாமல், கவல்கின்றார் - விசனப்படுகிறவர்கள், ஒருவரை-ஒருவரையும், காணேன் - காணக்கிடையேன், என்றனன்—எ-று. 30

தேறன்மாந்தினர்தேனிசைமாந்தினர்செவ்வாய்
ஊறன்மாந்தினரின்னுரைமாந்தினரூடல்
கூறன்மாந்தினரனையவர்தொழுதெழுகோபத்
தாறன்மாந்தினரரக்கியர்க்குயிரன்னவரக்கர்.

இ-ள். தேறல் - கள்ளை, மாந்தினர் - குடித்தார்கள், தேன் — தேன் போன்ற, இசை — இசைப்பாட்டையும், மாந்தினர் - கேட்டார்கள், செவ்வாய் ஊறல் - அரக்கியரது சிவந்த அதரபானத்தையும், மாந்தினர் - உண்டார்கள், இன் உரை - அப்பெண்களதின்சொல்லையும், மாந்தினர் - கேட்டார்கள், ஊடல் கூறல் - அப்பெண்கள் பிணங்குதலாலே பேசுகிறதையும், மாந்தினர் - கேட்டார்கள், அனையவர் - அப்பெண்களை, தொழுது - ஊடல்தீரவணங்கி, எழு - அவருக்கு எழுகின்ற, கோபத்து-கோபத்தினது, ஆறல்-ஆறுதலையும், மாந்தினர் - அனுபவித்தார்கள், அரக்கியர்க்கு - அந்தராக்ஷஸிகளுக்கு, உயிர் அன்ன - உயிர்போன்ற, அரக்கர் - ராக்ஷதர்கள், என்றனன்.

எறித்தகுங்குமத்திளமுலையெழுதியதொழில்கள்
கறுத்தமேனியிற்பொலிந்தனரூடலிற்கனன்று
மறித்துநோக்கியர்மலரடிமஞ்சுளப்பஞ்சி
குறித்தகோலங்கள்பொலிந்தனவரக்கர்தங்குஞ்சி.

இ-ள். எறித்த - சிவந்துதோற்றுகிற, குங்குமத்து - குங்குமங்களாலே, இளமுலை - இளமையுள்ள கொங்கைகளிலே, எழுதிய - எழுதின, தொழில்கள் - சித்திரங்கள், கறுத்தகறுப்பான - அரக்கர்தங்கள், மேனியில்-தேகத்திலேமார்பிலே, பொலிந்தனர் - நிறைவுறுதலானூர்கள் பதிதலானூர்கள், ஊடலில் - அதுகண்டு பிணங்குதலாலே, கனன்று - கோபித்து, மறித்து-வேறுபாடாய், நோக்கியர் - பார்க்கிறவர்களுடைய, மலர் - தாமரைமலர்போன்ற, அடி - கால்களிற் பூசியிருக்கிற, மஞ்சளம் - அழகான, பஞ்சி - செம்பஞ்சுக் குழம்பு, குறித்த - பட்ட, கோலங்கள் - குறிகள், பொலிந்தன - விளங்கலாயின, அரக்கர்தம் - அந்த ராக்ஷதர்களுடைய, குஞ்சி - தலையிலுள்ளரோமங்கள், என்றனன்—எ-று. மறித்து மான்போல்வனவான கண்களெனவுமாம். 32

விளரிச்சொல்லியர்வாயினல்வேலையுண்மிடைந்த
பவளக்காடெனப்பொலிந்ததுபடைநெடுங்கண்ணாற்
குவளைக்கோட்டகங்கடுத்ததுகுளிர்முகக்குழுவான்
முளரிக்கானமுமானதுமுழங்குநீரிலங்கை.

இ-ள். விளரி - விளரிப்பண்போலும், சொல்லியர் - சொல்லையுடைய பெண்கள், வாயினல்-வாய்ச்செவப்புகளாலே, வேலையுள்-கடலிலே, மிடைந்த - நெருங்கலான, பவளக்காடென - பவளக்காடுகள்போலவும், பொலிந்தது - இலங்கைவிளங்கலாயிற்று, படை - வாளாயுதம்போன்ற, நெடுங்கண்ணால் - நீண்டகண்களின் கறுப்புகளாலே, குவளைக்கோட்டகம் - நீலோற்பலம் பூத்தகுளத்தை, கடுத்தது-ஒப்பாயிற்று இலங்கை, குளிர் - குளிர்ந்த, முகக்குழுவால் - அப்பெண்கள் முகராசிகளாலே, முளரிக்கானமும் - தாமரைக்காடும், ஆனது - ஆயிற்று, முழங்கு - சத்தியாநின்ற, நீர்-நீர் சூழ்ந்த, இலங்கை - இலங்காபுரி என்றனன்—எ-று. 33

வேறு

எழுந்தனர்திரிந்துவைகுமிடத்ததாயின்றுகாறும்
கிழிந்திலதண்டமென்னுமிதனையேகிளப்பதல்லால்
அழுந்திநின்றுவதென்னேயலருளோனாதியாக
ஒழிந்தபேருயிர்களெல்லாமரக்கருக்குறையும்போதா.

இ-ள். எழுந்தனர் - எழுந்தவர்களாய், திரிந்து-உலாவி, வைகும்-தங்குவதுமான, இடத்ததாய் - இடமானதுமாய், இன்றுகாறும் - இன்றளவும், கிழிந்திலது - உடைந்து தகராதிருக்கின்றது, அண்டம் - வானுலகம், என்னும் - என்பதான, இதனையே - இந்த வலியுடைமையையே, கிளப்பது-சொல்லுகிறதை, அல்லால் - அல்லாமல், அழுந்தி நின்று - அழுந்துதலாகி நின்று ஆலோசிப்பதனாலே, ஆவது - உண்டாகிறது, என்னே - யாதாம் ஒருபயனுமில்லை, அலருளோன் - பிரமனே, ஆதியாக - முதலாக, ஒழிந்த-

மற்ற, பேர் - பெரியனவான உயிர்களெல்லாம், அரக்கருக்கு - இந்த ராக்ஷத ரளவுக்கு; உறையும் - உறைமிடவும், போதா - பற்று என்றனன்—எ-று.

காயத்தாற்பெரியர்வீரங்கணக்கிலருலகங்கல்லும்
ஆயத்தார்வரத்தின்றன்மையளவற்றாறிதலேதற்றும்
மாயத்தார்நகர்க்கெங்கேனும்வரம்புமுண்டாமேமற்றோர்
தேயத்தார்தேயஞ்சேறல்தெருவிலோர்தெருவின்சேறல்.

இ-ள். காயத்தால் - தேகத்தாலும், பெரியர் - பெருமையுள்ளவர்களே, வீரம் - இவர்கள் வீரத்தினலும், கணக்கிலர் - அளவில்லாதவர்களே, உலகம் - உலகமெல்லாம், கல்லும் - தோண்டியெடுப்பதான, ஆயத்தார் - நீளத்தையுடையவர்களே உயர்வையுடையவர்களே, வரத்தின்றன்மை - வரபலத்தின் விசேஷத்தினலும், அளவற்றார் - அளவில்லாதவர்களே, அறிதல் தேற்று - எவருந் தெரிந்துகொள்ளக் கூடாத, மாயத்தார் - மாயைகற்றவர்களே, நகர்க்கு - இப்படிப்பட்ட இவர்களுநக்கு, எங்கேனும் - எவ்வகையாலாயினும், வரம்பும் - அளவும், உண்டாமே - உண்டாவதுண்டோ ஆனல், ஓர்தெருவின்சேறல் - இவ்வூரிலொரு தெருவுமுழுதும்போய் வருதலுக்களவு, மற்றோர்தேயத்தார் - வேறொரு தேசத்துள்ளவர்கள், தேயம் - மற்றொருதேசத்துக்கு, சேறல் - செல்லுதலாகிய அளவேயாம் என்றனன். 35

கழலிலாக்காலுங்காலவயிலிலாக்கையுங்காந்தும்
அழலிலாக்கண்ணுமில்லாவாடவரில்லையன்னார்
குழலுலாங்களிவண்டார்க்குங்குஞ்சியாற்பஞ்சிகுன்றா
மழலையாழ்க்குதலைச்செவ்வாய்மாதருமில்லைமாதோ.

இ-ள். கழலிலா-வீரக்கழல்கள் அணியாத, காலும்-கால்களும், காலன்-யமனுக்கொப்பான, அயில் இலா - வேலாயுதம்பிடியாத, கையும்-கைகளும், காந்தும் - கொதிப்பதான, அழல் இலா - நெருப்பில்லாத, கண்ணும் - கண்களும், இல்லா-இல்லாத, ஆடவர் இல்லை - புருஷர்களில்லை, அன்னார் - அந்தப்பெண்களுடைய, குழல் - கூந்தலிலே, உலாம் - மொய்த்துத்திரிவனவான, களிவண்டு - களிப்பையுடையவண்டுகள், ஆர்க்கும் - சத்திப்பதான, குஞ்சியால் - சிகைகளாலே, பஞ்சி - காலிற்செம்பஞ்சுக்குழம்பு, குன்றா - குலைவாகாத, மழலை - மென்மையான, யாழ்-வீணகானம்போலவும், குதலை-மழலைச்சொற்போலவும் வசனங்களையுடைய, செவ்வாய் - சிவந்தவாயினரானமாதரும், இல்லை - பெண்களுமில்லை என்றனன்—எ-று. 36

கள்ளுறக்கனிந்தபங்கியரக்கரைக்கடுத்தகாதல்
புள்ளுறத்தொடர்வமேனிபுலாலுறக்கடிதுபோவ
வெள்ளுறப்பெயிற்றசெய்யதலையனகரியமெய்ய
உள்ளுறக்கரித்தகுன்றினுபர்ச்சிபவோடையானே.

இ-ள். கள் உற — தேன் ஒழுகுவதாக, கனிந்த — சிவந்த, பங்கி — உரோமங்களையுடைய, அரக்கரை — அந்த ராக்ஷதர்களையே, கடுத்த — ஒப்பாயின, பயகாதல் — மதமுண்கிற ஆசையையுடைய, புள் — வண்டுகள், உற — மிகவும், தொடர்வ — தொடர்தலையுடையன, மேனி — உடம்பெல்லாம், புலால் உற — மதநாற்றம்வீச, கடிது — விரைவிலே, போவ — சொல்லுதலையுடையன, வெள் — வெண்மைபொருந்திய, உறுப்பு — நீட்சியுள்ள, எயிற்ற — தந்தங்களையுடையன, செய்ய — சிவந்த, தலையன — தலையையுமுடையன, கரிய — கறுத்த, மெய்ய — சரீரத்தையுமுடையன, உள் உற — மனத்துள்ளே மிகவும், களித்த — மயங்கியிருத்தலையுமுடையன, குன்றின் — மலைபோலும், உயர்ச்சிய — உயர்வையுமுடையன, ஓடை — முகபடாங்கொண்ட, யானை — யானைகள் என்றனன், எ—று. அரக்கர்களிடத்து — காதற்புள் தலைவி ஆசையைச்சொல்லச்செல்லுகிற கிளி முதலிய பக்ஷிகள் உடம்பெல்லாம் புலால்நாற விரைந்து செல்லுதல் வெண்மையான வளைந்தபற்கள் செம்மயிர் கறுத்த உடம்பு மதுபானம்பண்ணிக் கறுத்த மலைபோலுயர்ந்திருத்தல் நெற்றிப்பட்டமுடையராயிருத்தல்பற்றி யானைகள் அரக்கரையே ஒப்பாயின என்க. 37

வள்ளிநுண்மருங்குலன்னவானவர்மகளிருள்ளம்
தள்ளுறப்பாணிதள்ளாநடம்புரிதடங்கண்மாதர்
வெள்ளிவெண்முறுவறோன்றமடந்தையர்வெள்குகின்றார்
கள்ளிசையரக்கர்மாதர்களியிடுகுரவைகாண்பார்

இ-ள். வள்ளி — கொடிபோலும், நுண் — நுண்ணிதான, மருங்குல் அன்ன — இடைபோல, வானவர்மகளிர் — தெய்வப்பெண்கள் எழு, உள்ளம் — மனம், தள்ளுற — அவளுதலாக, பாணி — இசைப்பாட்டுக்கு, தள்ளா — தவறுதலாகாமல், நடம் — ராக்ஷஸிகளாடுதலைப்பார்க்க, புரி — விரும்புகின்ற, தடங்கண் — விசாலமான கண்களும், மாதர் — அழகிதான, வெள்ளி — வெள்ளிபோல் வெண்மைபொருந்தின, முறுவல் — பல்வரிசைகளும், தோன்ற — தெரிய, மடந்தையர் — மூடத்தன்மை யுள்ளவர்களாய், வெள்குகின்றார் — நாணுகின்றவர்களுமாய், கள் — பொய்வார்த்தைகளை, இசை — சொல்லுகின்ற, அரக்கர் — ராக்ஷதர்களுடைய, மாதர் — பெண்கள், களி — களிப்பினாலே, இடு — செய்கின்ற, குரவை — கைகோத்தாடுதலையே, காண்பார் — பார்ப்பார்கள் பய, என்றனன்—எ-று. நாணமுண்டானால் கண்கூசுதலும் பல் தோன்றுதலுமாம், தாங்கள் ராக்ஷஸிகள்போல் குறவைக் கூத்தாடத் தெரியாமையால் மடந்தையராய் அவர்கள் குரவையையே பார்ப்பார்களென்பதாம், மடம் அறியாமை ஆகலால் மடந்தையரென்றது தற்குறிப்பு. 38

ஒருத்தலோரிற்கமற்றெம்முயர்படைக்கொருங்கிவ்வூர்வக்
திறுத்தலுமெளிதாமற்றும்யாவர்க்குமியக்கமுண்டே
கறுத்தவாளரக்கிமாருமரக்கருங்கழித்துவீசி
வெறுத்தபூண்வெறுக்கையாலேதூருமிவ்வீதியெல்லாம்.

இ-ள். ஒருத்தலோ (நாம் இவ்வரக்கரைச்) சொல்லுகிறதோ, ஈற்க-அரிதாகவேயிருக்க, மற்று — அச்சொல்லுதலை யல்லாமல், எம் — நம்முடைய, உயர் — அதிகமான, படைக்கு — சேனைகளுக்கு, ஒருங்கு — முழுதும், இவ்வூர் — இந்த ஊருக்குச் சமீபமாய், வந்து இறுத்தலும் - வந்து இறங்குதல்தானென்ன அரிதே, எளிதா — சுலபமா, மற்றும் — இன்னமும், யாவர்க்கும்- எப்படிப் பட்டவர்களுக்கானாலும், இயக்கம் — இங்குச் சஞ்சரித்தலாவது, உண்டே — உண்டா இல்லை, கறுத்த — கருநிறத்தையுடைய, வாள் — ஒளி பொருந்தின, அரக்கிமாரும் — ராக்ஷதப்பெண்களும், அரக்கரும் — ராக்ஷதர்களும், கழித்து — வேண்டாவென்று பூண்டுகழித்து, வீசி — எறிந்து, வெறுத்த — வெறுத்துவிட்ட, பூண் — ஆபரணங்கள்முதலான, வெறுக்கையாலே- சுவர்ணங்களாலே, தூரும் — குப்பையாய்க்கிடக்கிறது, இவ்வீதியெல்லாம்- இவ்வீதிகளெல்லாம், வெறுக்கையாலே தூரும் என்றனன் — வெறுக்கையாலே குப்பையாய்க்கிடக்கிற எந்த வீதிகளிலாவது யாவர்க்கு மியக்கம் உண்டே எனவுமாம்—எ-று. 39

வடங்களுங்குழையும்பூணுமாலையுஞ்சாந்தும்யானைக்
கடங்களுங்கலினமாவிலாழியுங்கணக்கிலாத
இடங்களுமிடங்கடோறும்யாற்றொடுமெடுத்தவெல்லாம்
அடங்கியதென்னிலென்னேயாழியினாழ்ந்ததுண்டோ.

இ-ள். வடங்களும் — வெறுத்து வீசின முத்துமாலை முதலியவைகளும், குழையும் — குண்டலங்களும், பூணும் - மற்றை ஆபரணங்களும், மாலையும் — பூமாலைகளும், சாந்தும் — சந்தனமும், யானைக்கடங்களும் — யானைமதங்களும், கலினம் — கடிவாளம் பூண்ட, மா — குதிரைகளின், விலாழியும் — வாய்நுரையும், கணக்கிலாத — அளவில்லாதவைகளாயிருக்கின்றன, பய இடங்களும் — எந்தவீதியினிடங்களும் கணக்கில்லாத என்க, இடங்கள்தோறும் — அப்படி எல்லா இடங்களிலும் உளவாகுகின்ற, யாற்றொடும் - யானைமதங்கலப்பதானயாற்றுடனே, எடுத்த எல்லாம் — அலைகள் கொண்டுபோன எல்லாப் பொருள்களும் கடலில், அடங்கியது — அடங்கியிருக்கின்றது, என்னில் — என்றுசொல்லலானால், என்னே — அப்படிச்சொல்லுதற்குக்குறை என்ன குறையில்லை, ஆழியின்- கடலிலும், ஆழ்ந்தது — பள்ளமானது, உண்டோ — வேறே உண்டா இல்லை ஆதலால் இவ்வூர்க் குப்பை கொட்டும் பள்ளம் கடலே என்றனன்—எ-று.

விற்படைபெரிதென்கோயான்வேற்படைமிகுமென்கோயான்
மற்படையுளதென்கோயான்வாட்படைவலிதென்கோயான்
கற்பணந்தண்டுபிண்டிபாலமென்றினையகாந்தும்
நற்படையுடைத்தென்கோயான்நாயகற்குரைக்குநாளில்.

இ-ள். விற்படை — வில்லாளிகளானசேனை, பெரிது — அதிகம், என்கோ — என்னவோ, யான் — நான், வேற்படை — வேல்வீரர்களானசேனை

கள், மிகும்—அதிலும் அதிகம், என்கோ - என்னவோ, யான் மற்படை-மல்லயுத்தஞ்செய்கிற சேனை மிகவுமிருக்கின்றது, என்கோ—என்னவோ, யான் வாள்படை—வாள்வீரரான சேனைகள், வலிது - வலிதாயிருக்கின்றது, என்கோ - என்னவோ, யான் - கற்பணம், தண்டு - பிண்டிபாலம், என்று—என்று சொல்லப்படுகிற, இனைய—இவ்வகை ஆயுதங்களுடனே, காந்தும் - கொதிப்பதான, நல்படை - பின்வாங்காத சேனையை, உடைத்து-இலங்கை யுடையதாயிருக்கின்றது, என்கோ - என்னவோ, யான்—நான் போய், நாயகற்கு—ஸ்ரீராமனுக்கு, உரைக்குநாளில்—சொல்லும்போது விற்படை பெரிதென்கோயா னென்று கூட்டுக—எ-று. நானொருவன் சொல்லப்போதாதென்பதுதோன்ற - நான்வந்ததென்க. 41

என்றனனிலங்கைநோக்கியினையன பலவுமெண்ணி
நின்றவாளரக்கர்வந்துநேரினுநேர்வரென்னாத்
தன்றகையனையமேனிசுருக்கியச்சாரலச்சாரல்
குன்றிடையிருந்தான்வெய்யோன்குரைகடல்குளிப்பதானன்.

இ-ள். என்றனன்—என்று நினைத்தவராய், இலங்கை—அந்த ஊரை, நோக்கி - பார்த்து, இனையன - இவைபோல்வது, பலவும்—பலவகைகளையும் பின்னும், எண்ணி - நினைத்து, நின்ற - இவ்வூரிலே நிலைகொண்டுள்ள, வாள் அரக்கர் - வாளாயுதங்களையுடைய ராக்ஷதர்கள், வந்து—தெரிந்து வந்து, நேரினும் — சண்டைசெய்தாலும், நேர்வர் என்னா - செய்வார்களென்று, தன் — தமது, தகை—பெருமைக்கு, அனைய - ஒப்பான, மேனி-உருவத்தை, சுருக்கி - ஒடுக்கிக்கொண்டு, அ - அந்த, சாரலம் - மரவரிசைகளையுடைய, சாரல் - பக்கங்களைக்கொண்ட, குன்றிடை - அந்தப் பவளமால்வரையிலே, இருந்தான் - மறைந்திருந்தார், வெய்யோன் — சூரியன், குரை - சத்தியாகின்ற, கடல் - மேலைக்கடலிலேபோய், குளிப்பதானன்—முழுகுகிறதாயினன்—எ-று. 42.

வேறு

எய்வினையிறுதியிற்செல்வமெய்தினன்
ஆய்வினைமனத்திலானறிஞர்சொற்கொளான்
வீவினைநினைக்கிலானொருவன்மெய்யிலான்
தீவினையெனவிருள்செறிந்ததெங்குமே.

இ-ள். எய்—தனக்குண்டான, வினை இறுதியில் - செய்கைக்கேட்டினாலே, செல்வம் எய்தினன்—ஐசுவரியத்தையடைந்தவன் ஆதலால், ஆய்வினை - ஆராயுஞ்செய்கையை, மனத்து - மனத்திலே, இலான்—இல்லாதவனாகி, அறிஞர் - (செய்யுஞ்செய்கை) தெரிந்தவர்கள், சொல்—சொல்லையும், கொளான் - கொள்ளாதவனாய், வீ வினை - (தனக்குவரும்) கெடுதலையும், நினைக்கிலான்—உன்னாதவனாய், ஒருவன் மெய்யிலான்—யதார்த்தஞானமுமில்லாத ஒருவனுடைய, தீவினையென - பாவஞ்செறிந்தாற்

போல், எங்கும் - எவ்விடத்தும், இருள் செறிந்தது — இருள் நெருங்குதலாயிற்று—எ-று. அனுமார் கண்ணுக்கு அவ்விருள் தோன்றுதல் ராவணன் பாவம்போலிருந்ததென்க, வினையிறுதியிற் செல்வமெய்துதல் அநியாயமாய்ப் பொருள் சம்பாதித்தல், இறுதி - கெடுதல். 43

கரித்தமூன்றெயிலுடைக்கணிச்சிவானவன்
எரித்தலையந்தணரிழைத்தயானையை
உரித்தபேருரிவையாலுலகுக்கோருறை
புரித்தனனுமெனப்பொலியும்பொற்பதே.

இ-ள். மூன்று எயில் - திரிபுரத்தை, கரித்த — தீய்த்த, உடை - சிரிப்பையுடைய, கணிச்சிவானவன் — சூலபாணியான பரமசிவன், எரித்தலை - வேள்வியினிடமாய், அந்தணர் - தாருகாவனத்து முனிவர்கள், இழைத்த யானையை - உண்டாக்கியனுப்பின யானையை, உரித்த - உரித்தல்செய்த, பேர் - பெரிதான, உரிவையால் - தோலாலே, உலகுக்கு - இந்த உலகத்துக்கெல்லாம், ஓர் உறை - ஒருபோர்வைப்பையை, புரிந்தனன் - பிரமன்செய்தான், ஆமென - போலுமென்ன, பொலியும் - (அவ்விருள் எங்கும்) நிறைவதான, பொற்பது — மிகுதியையுடையதாயிற்று, பய - இருள், எழு—எ-று. புரித்தல் என்பது வலித்தல் விகாரம். 44

அணங்கரவரசர்கோனளவிலாண்டெலாம்
பணங்களின்றலைதொறுமுயிர்த்தபாய்விடம்
உணங்கலிலுலகெலாமுறையினுண்டுவந்
திணங்கெரிபுகையொடுமெழுந்ததென்னவே.

இ-ள். அணங்கு — வருத்தத்தைச்செய்கின்ற, அரவு — பாம்புகளுக்கு, அரசர் - ராஜாக்களான அஷ்டமாநாகங்களும், கோன் - அரசனுன ஆதிசேடன், அளவில் - கணக்கில்லாத, ஆண்டெலாம் - வருஷகாலங்களெல்லாம், பணங்களின் - படங்களையுடைய, தலை தொறும் - ஆயிரந் தலைகளினின்றும், உயிர்த்த - பெறுதலான, பாய் — பரவுகின்ற, விடம் - நஞ்சானது, உணங்கலில் - அழிதலில்லாதிருக்கிற, உயிரெலாம் - உயிர்களையெல்லாம், முறையின் — கிரமகிரமமாய், உண்டு — சாப்பிட்டு, உவந்து - சந்தோஷித்து, இணங்கு — தன்னேடுகூடின, எரி - நெருப்பு, புகையொடும் புகையுடனே, எழுந்ததென்ன - எழுந்தாற்போல் இருள்செறிந்தது—எ-று. இங்கு எரியென்றது - செவ்வானத்தை விஷாக்கினியென்பதனுலே புகையுங் கூட்டினுர். எங்குஞ்செறிகிற இருளுக்கு புகையை உவமையாகச் சொன்னுர். 45

வண்மைநீங்காநெடுமரபின்வந்தவன்
பெண்மைநீங்காதகற்புடையபேதையைத்

திண்மைநீங்காதவன்சிறைவைத்தானெனும்
வெண்மைநீங்கியபுகழ்விரிந்ததென்னவே.

இ-ள். வெண்மை - ஔதாரியகுணம், நீங்கா — நீங்காதிருக்கிற, நெடுமரபில் - நெடிதான சூரியகுலத்திலே, வந்தவன் - அவதரித்த ஸ்ரீராமனுடைய, பெண்மை — பெண்மைக் குணங்களில், நீங்காத - தவறுதலில்லாத, கற்புடைய - கற்புள்ள, பேதையை — சீதாபிராட்டியை, திண்மை-வரபலன், நீங்காதவன் — தவறுதிருக்கிற ராவணன், சிறைவைத்தான்-காவலிலே யிருக்கச்செய்தான், எனும் — என்கிற, வெண்மைநீங்கிய — விளங்குதலில்லாத, புகழ் — பழி, விரிந்ததென்ன — விரிந்ததுபோலுமென்ன இருள் செறிந்தது—எ-று. கருமை நீங்காத பழி என்பதற்கு வெண்மை நீங்கிய புகழென்றூர் - இந்த நான்கு செய்யுளு மொருதொடர். 46

அவ்வழிபவ்விருள்பரந்தவாயிடை
எவ்வழிமருங்கினுமரக்கரேகினர்
செவ்வழிமந்திரத்திசையராயினும்
வெவ்வழியிருடரமிதித்துமீச்செல்வார்.

இ-ள். அவ்வழி — அவ்வூரிலே, அவ்விருள் — அப்படிப்பட்ட இருள், பரந்த — பரவுதலான, ஆயிடை - அப்போது, எவ்வழிமருங்கினும் — எந்தவழி மார்க்கங்களிலும், அரக்கர் — ராக்ஷதர்கள், ஏகினர் — சென்றூர்கள், செவ்வழி — செந்நெறி, மந்திரம் - மறைந்து செல்லத்தக்க, திசையர் — திக்குக்குமறைந்து செல்லுகிறவர்கள், ஆயினும் - எங்குச் (செல்லுகிறூர்களென்று) ஆய்ந்து நோக்கினுலும், வெவ்வழி - (அவர்கள் சொல்லுவது) வெவ்வியநெறியே, இருள்தர - (அதுவும்) இருண்டுபோக, மிதித்து - தங்கள் நிறத்தாலே இருளைவென்று, மீச்செல்வார் — ஆகாயமார்க்கமாகச் செல்லலானூர்கள்—எ-று. காலால் மிதித்தென்றூலும் இருளை வெல்லுதலேயாம், பாராதிருந்தாலும் அவர்கள் நிறக்கருமையால் தெரியாதிருத்தலால் உம்மை இழிவு சிறப்புவெவ்வழியாரும் நடவாத கொடிவழி - கொடியவழி என்க. 47

இந்திரன்வளநகர்க்கேகுவாரிகற்
சந்திரனுலகினைச்சார்குவார்கலித்
தந்தகனுறையுளையணுகுவாரியல்
வெங்தொழிலரக்கனமேதவன்மேயினர்.

இ-ள். இந்திரன் - தேவராஜனுடைய, வளம் — அழகிதான, நகர்க்கு-ஊருக்கு, ஏகுவார் — சிலர் செல்லுகிறூர்கள், இகல் — (தங்களுக்கு) விரோதியான, சந்திரன் — சந்திரனுடைய, உலகினை — உலகத்துக்கு, சார்குவார்-சிலர் சொல்லுவார்கள், கலித்து - கர்ச்சித்துக்கொண்டு, அந்தகன் - யமனுடைய, உறையுளை — உலகத்தை, அணுகுவார் — சிலர் சேருவார்கள், வெங்தொழிலியல் — கொடுஞ்செய்கைகளைச் செய்கிற, அரக்கனது - ராக்ஷதனுன

ராவணனுடைய, ஏவல்மேயினர் — ஏவுதலைக்கொண்டவர்கள் ஆகிய இவர்களிற் சிலர் இந்திரன் வளநகர்க் கேகுவாரென்று கூட்டுக—எ-று. 48

பொன்னகர்மடந்தையர்விஞ்சைப்பூவையர்
பன்னகவனிதையரியக்கர்பாவையர்
முன்னினபணிமுறைமாறமுந்துவார்
மின்னினமிடைந்தெனவிசும்பின்மீச்செல்வார்.

இ-ள். பொன்னகர் — தேவருலகிலுள்ள, மடந்தையர் - அரம்பாஸ்திரீகளும், விஞ்சைப்பூவையர் — வித்தியாதரப் பெண்களும், பன்னகவனிதையர் — நாககன்னிகளும், இயக்கர் பாவையர் — யக்ஷகன்னிகளும், முன்னின - தங்களுக்குநியமித்தலான, பணி — வேலைகளுக்குள்ள, முறைமாற - நியதியை மாறிச்செய்ய, முந்துவார் — ஒருவரில் ஒருவர் முந்திச் செல்லுகின்றார்கள், மின்னினம் - மின்னலினது கூட்டம், மிடைந்தென - நெருங்கினாற்போல், விசும்பின் மீ — ஆகாயத்தின்மேலே இலங்கைக்கு, செல்வார் — செல்லுவார்கள்—எ-று. 49

தேவருமவுணருஞ்செங்கணாகரும்
மேவருமியக்கரும்விஞ்சைவேந்தரும்
யாவரும்விசும்பிருளிரியவீண்டினார்
தாவரும்பணிமுறைதழுவுந்தன்மையார்.

இ-ள். தேவரும் - தேவர்களும், அவுணரும் — அசுரர்களும், செங்கண் - சிவந்த கண்களையுடைய, நாகரும் — உரகர்களும், மேவரும் (ஓரிடமும்) செல்லுதலரிதான, இயக்கரும் — யக்ஷர்களும், விஞ்சைவேந்தரும் — வித்தியாதரர்களும், யாவரும் (இவ்வகையான) எல்லாரும், விசும்பு - ஆகாயத்திலேயுள்ள, இருள் இரிய - (தங்கள் ஒளியாலே) இருள் ஓட, ஈண்டினார் - வந்து கூடுகின்றார்கள், தாஅரும் - கெடுதலில்லாத, பணி — வேலைகளை, முறை - முறைப்படி, தழுவு — மாற்றிக்கொண்டு செய்யும், தன்மையார் — சுவபாவத்தையுடையவர்கள் ஈண்டினரென்க—எ-று. 50

சித்திரப்பத்தியிற்றேவர்சென்றனர்
இத்துணைதாழ்ந்தனமுனியுமென்றுதம்
முத்திரைங்களுமுடியின்மாலையும்
உத்தரீயங்களுமிரியவோடுவார்.

இ-ள். சித்திரப்பத்தியில் — சித்திரவரிசைகள்போல், தேவர் சென்றனர் — செல்லலானவர்களான தேவர்கள், இத்துணை — இவ்வளவுநேரம், தாழ்ந்தனம் — தாமதமானோம், முனியும் என்று — (இராவணன்) கோபிப்பானென்று, தம் — தங்களுடைய, முத்திரைங்களும் - முத்துமாலைகளும், முடியில் - தலையிலணிந்த, மாலையும் - மாலைகளும், உத்தரீயங்களும் — அங்க

வஸ்திரங்களும், இரிய - கூடத்தொடர்ந்தவரா, ஓடுவார் - ஓடுகிறார்கள்— எ-று. கண் இமையாமையால் சித்திரப்பத்தி என்றார். 51

தீண்டருந்தீவினைதீக்கத்தீந்துபோம்
மாண்டறவுலர்ந்ததுமாருதிப்பெயர்
ஆண்டகைமாரிவந்தளிக்கவாயிடை
ஈண்டறமுளைத்தெனமுளைத்ததிந்துவே.

இ-ள். தீண்டரும் — தொடுதற்கரிதான, தீவினை - பாபராசிகள்கூடி, தீக்க — கரிவதாக, தீந்து - கரிந்து, போய் - போவதாகி, மாண்டு - அழிந்து, அற - மிகவும், உலர்ந்தது - காய்ந்ததான பயிர் ஆகிய, மாருதிப்பெயர்- வாயுபுத்திரனென்கிற பெயரையுடைய, ஆண்தகை - ஆண்மையிற் சிறந்த அனுமாராகிய, மாரிவந்து - மேகந்தோன்றி, அளிக்க - ரக்ஷிக்க, ஆயிடை- அவ்வூரிலே, ஈண்டு - நல்லோர்சேரத்தக்க, அறம் — தருமமானது, முளைத்தென - முளைத்தாற்போல், இந்து - சந்திரன், முளைத்தது - உதயமாயிற்று எ-று. பாவத்தையும் பழியையும் கறுப்பாகவும், புண்ணியத்தையும் புகழையும் வெண்மையாகவும் சொல்வதுலகவழக்கு. 52

வந்தனனிராகவன்றூதன்வாழ்ந்தனன்
எந்தையேயிந்திரனெனுமென்றேமுறு
அந்தமில்கீட்டிசைபளகவாணுதற்
சுந்தரிமுகமெனப்பொலிந்துதோன்றிற்றே.

இ-ள். இராகவன் தூதன் - ஸ்ரீராமதூதனான அனுமார், வந்தனன்- வந்தார், எந்தையே - எனது சுவாமியேயாகிய, இந்திரன் - தேவேந்திரன், வாழ்ந்தனன் ஆமென்று - வாழ்வைப்பெற்றவனுவானென்று, எமுறு - சந்தோஷமாகி, அந்தம் இல் - அழிதலில்லாத, கீட்டிசை - கிழக்குத்திசையாகிய, அளகம் - கரியகூந்தலும், வாள் நுதல் — ஒளிபொருந்திய நெற்றியுமுடைய, சுந்தரிமுகமென - இந்திராணி முகம்போல் அச்சந்திரன், எழு- பொலிந்து நிறைந்து, தோன்றிற்று - விளங்குதலாயிற்று—எ-று. 53

கற்றைவெண்கவரிபோற்கடலின்வெண்டிரை
சுற்றுநின்றலமரப்பொலிந்துதோன்றிற்றால்
இற்றதெம்பகையெனவெழுந்தவிந்திரன்
கொற்றவெண்குடையெனக்குளிர்வெண்டிங்களே.

இ-ள். கற்றை - திரட்சியான, வெண் கவரிபோல் - வெண்சாமரம் போல், கடலின் - சமுத்திரத்தினது, வெண்திரை - வெள்ளிய அலைகள், சுற்றும் நின்று - சுற்றிலுநின்று, அலமர — சுழன்றுவிழ, பொலிந்து — கிரணங்கள் நிறைதலாய், தோன்றிற்று - தோன்றலாயிற்று, இற்றது - முடிந்துபோயிற்று, எம்பகையென - எங்கள்பகையென்று, எழுந்த - சந்தோஷித்தெழுந்த, இந்திரன் — இந்திரனுடைய, கொற்றம் - வெற்றிபொருந்திய,

வெண்குடையென - வெள்ளைக் குடையைப்போல், குளிர் - குளிர்ந்த, வெண்திங்கள் - வெள்ளைச்சந்திரன் பொலிந்து தோன்றிற்றென்க — எ-று.

தெரிந்தொளிர் திங்கள்வெண்குடத்தினூற்றிரை
முரிந்துயர்பாற்கடன் முகந்துமூரிவான்
சொரிந்ததேயாமெனத் துள்ளிமீனொடும்
விரிந்ததுவெண்ணிலாமேலுங்கீழுமே.

இ-ள். தெரிந்து - எங்குந்தெரிவதாய், ஒளிர் — விளங்குகின்ற, திங்கள் - சந்திரனாகிய, வெண்குடத்தினால் - வெள்ளிக்குடத்தினாலே, திரைமுரிந்து - அலைகள் மடங்கி, உயர் — உயருகின்ற, பாற்கடல் - திருப்பாற்கடலிலே, முகந்து - பாலைமொண்டு, மூரிவான் - பெரிய ஆகாயமெல்லாம், சொரிந்ததே - சிந்தினதே, ஆமென - நிகரென்னும்படி, துள்ளி - சிந்தினவற்றிலே தங்கினதுளிகளாகிய, மீனொடும் - நக்ஷத்திரங்களுடனே, வெண்ணிலா - வெண்மையானசந்திரிகை, மேலும் - ஆகாசத்தின்மேலும், கீழும் - பூமியிலும், விரிந்தது - விரிதலாயிற்று, இராக்காலமான ஒருவன் சொரிந்ததே யாமென்பதேயன்றி ஆகாயமான ஒருவன் சொரிந்ததெனவுமாம்—எ-று.

அருந்தவன்சுரபியேயாதிவானமா
விரிந்தபேருதயமேமடிவெண்டிங்களா
வருந்தலின் முலைகதிர்வழங்குதாரையாச்
சொரிந்தபாலொத்ததுநிலவின்றோற்றமே.

இ-ள். அருந்தவன் — அருமையானதவத்தையுடையவசிட்டரது, சுரபியே-காமதேனுவே, ஆதிவானம்ஆ - முதலான ஆகாயமாகவும், விரிந்த-கிரணங்கள் விரிதலான, பேர் - பெரிய, உதயமே — உதயமான இடமே, மடி-அக்காமதேனுவின்பா லுள்ளமடியாகவும், வருந்தல் இல் - வருத்தப்பட்டுக் கறத்தல்வேண்டாத, முலை — பால்முலை, வெண்திங்களா — வெள்ளிய சந்திரனாகவும், கதிர் - அந்தச் சந்திரகிரணங்களே, வழங்கு — பாலைக்கொடுக்கிற, தாரையா - தாரையாகவும், சொரிந்த - பாத்திரத்திலே பெய்து நிரம்பின, பால் - பாலை, ஒத்தது - ஒப்பாயிற்று, நிலவின்றோற்றம் - அன்று சந்திரோதயமானது—எ-று. மேலுங்கீழு நிரம்பின சந்திரிகை பாத்திரத்தில் நிரம்பின பால்போலாயிற்றென்க. 56

எண்ணுடையனுமன்மேலிழிந்தபூமழை
மண்ணிடைவீழ்கிலமறித்தும்போகில
அண்ணல்வாளரக்கனையஞ்சியாய்கதிர்
விண்ணிடைத்தங்கினபோன்றமீனெலாம்.

இ-ள். எண்ணுடை - இப்படியாக இருளையும் நிலவையுங்கண்டு ஆலோசித்துக்கொண்டிருந்தலையுடைய, அனுமன்மேல் - அனுமார்மேலே, இழிந்த - தேவர்கள் சிந்த இறங்கின, பூமழை - புட்பமாரியானது, மண்

ணிடை – பூமியிலே, வீழ்கில - விழாதனவும் ஆகி, மறித்தும் – திரும்பவும், போகில – மேலேசெல்லாதனவுமாகி, அண்ணல் - பெருமைகொண்ட, வாள் - வாளாயுதத்தையுடைய, அரக்கனை – இராவணனுக்கு, அஞ்சி — பயந்து, ஆய்-எங்கும் பரவுதலாயிருக்கிற, கதிர் - சந்திரப்பிரபையைக்கொண்ட, விண்ணிடை — ஆகாயத்திலேதானே, தங்கினபோன்ற – நிற்பனபோலிருந்தன பய, மீனெல்லாம் – நக்ஷத்திரங்கள் எல்லாம், எ-று. கீழ்வீழ்கில மேற்போகிற ஆய்தங்கின போன்ற மீனெலாமென்க. 57

எல்லியினிமிரிருட்குறையுமவ்விருள்
கல்வியநிலவின்வெண்முறியுங்கள்வன
புல்லியபகையெனப்பொருவபோன்றன
மல்லிகைமலர்தொறும்பொதிந்தவண்டெலாம்.

இ-ள். எல்லியின் – அந்தராத்திரியிலே, நிமிர் – நிமிர்வனவான, இருட்குறையும் — இருளின் துண்டங்களும், அவ்விருள் – அந்த இருளை, கல்விய- போக்கின, நிலவின் — சந்திரனுடைய, வெண் — வெண்மைபொருந்தின, முறியும் - துண்டுகளும், கள்வன – திருட்டுருவு கொண்டன ஆகி, புல்லிய- தங்களுக்கு அடுத்த, பகையென – சத்துருவென்று, பொருவ – சண்டை பண்ணுகிறதை, போன்றன – ஒப்பாயிருந்தன, மல்லிகைமலர் – மல்லிகைப் பூக்கள், தொறும் – எல்லாம், பொதிந்த – நெருங்கின, வண்டெலாம் — வண்டுகளெல்லாம்—எ-று. மல்லிகை மலர்கள் — நிலவின்றுண்டம், வண்டுகள்- இருளின்றுண்டம், இவ்விரண்டுங் கூடியிருத்தல் பொருவன போலுதலென்க. 58

வீசுறுபசுங்கதிர்க்கற்றைவெண்ணிலா
ஆசுறவெங்கணுநுழைந்தளாயது
காசுறுகடிமதிலிலங்கைக்காவலூர்த்
தூசுறையிட்டதுபோன்றுதோன்றிற்றே.

இ-ள். வீசுறு - வீசுதலையுடைய, பசுங்கதிர் – சந்திரனது, கற்றை- திரட்சியைக்கொண்ட, வெண் நிலா — வெள்ளிய சந்திரிகைகள், ஆசு உற- (இருளுக்குத்) தோஷமுண்டாக, எங்கணும் – எவ்விடத்தும், நுழைந்து- புகுந்து, அளாயது — கலந்தது எப்படியிருக்கின்ற தென்றால், காசு- ரத்நங்கள், உறு — பதித்தலைக்கொண்ட, கடி - காவலான, மதில்- மதில் சூழ்ந்த, இலங்கை — இலங்கையாகிய, காவல் – இராவணன் காத்தலுக்குரிய, ஊர் — அவ்வூருக்கு, தூசு — வெள்ளை வஸ்திரமாகிய, உறையிட்டது போன்று – உறையால் மூடினாற்போல், தோன்றிற்று — விளங்கியது—எ-று.

இகழ்வரும்பெருங்குணத்திராமனெய்தவோர்
பகழியின்செலவெனவநுமன்பற்றினால்
அகழ்புகுந்தாண்புகுந்திலங்கையன்னவன்
புகழ்புகுந்துலாயதோர்பொலிவும்போன்றதே.

இ-ள். இகழ்வு அரும் — இகழ்ச்சியில்லாத, பெருங்குணத்து - பெரிதான குணங்களையுடைய, இராமன் — ஸ்ரீராமனுனவர், எய்தது — பிரயோகித்ததான, ஓர் - ஒப்பில்லாத, பகழியின் — அம்பினது, செலவென — செல்லுகைபோல, அனுமன் — அனுமாருடைய, பற்றினுல் — தொடர்தலினுலே, அன்னவன் — அந்த ஸ்ரீராமனுடைய, புகழ்புகுந்து — கீர்த்தியானதுவந்து, இலங்கை - இலங்கையின், அகழ்புகுந்து - அகழிலும்புகுந்து, அரண்புகுந்து- கோட்டைக்குள்ளும்புகுந்து, உலாயது - எங்கும் உலாவியதான, ஓர் — ஒரு, பொலிவும்போன்றது — நிறைவையும் ஒத்திருந்தது சந்திரப் பிரகாசம் என்க—எ-று. 60

அவ்வழியநுமனுமணுகலாம்வகை
எவ்வழியென்பதையுணர்வினெண்ணினுன்
செவ்வழியொதுக்கினன்றேவரேத்தப்போய்
வெவ்வழியரக்கரூர்மேவன்மேயினுன்.

இ-ள். அவ்வழி — அப்போது, அனுமனும் — அனுமாரானவர், அணுகலாம் வகை - இனி இவ்வூர்க்குள் செல்லுவதானவகை, எவ்வழி — எப்படி எந்தவழியாலே, என்பதை — என்கிறதுணிவை, உணர்வின் — தமது புத்தியினுலே, எண்ணினுன் — யோசித்தார், செவ்வழி — செவ்வையாகச் செல்லு நெறியை, ஒதுக்கினன் — விலக்கினவராகி, தேவர் - தேவர்களெல்லாம், எத்த — துதிப்பதாக, போய் — சென்று, வெவ்வழி — யாவருஞ்சொல்லப் படாத கொடியவழியாக, அரக்கர் ஊர் — இலங்காபுரிக்குள்ளே, மேவல்மேயினுன் — போகத் தொடங்கினுர்—எ-று. 61

வேறு

ஆழியகழாகவரிதாயமரர்வாழும்
ஏழுலகின்மேலைவெளிகாறுமுகடேறிக்
கேழரியபொன்கொடுசமைத்தகிளர்வெள்ளத்
தூழிதிரிநாளுமுலையாமதிலையுற்ருன்.

இ-ள். ஆழி — கடலிலே, அகழ் ஆக — அகழ்க்கிடங்காக, அரிதாய்- (யார்க்குஞ்செல்லுதற்கு) அருமையுள்ளதாக, அமரர் - தேவர்கள், வாழும்- வாழ்வதான, ஏழுலகின் — மேலேழுலோகத்துக்கும், மேலை-மேலானதான, வெளிமுகடுகாறும் — ஆகாய முகட்டினளவும், ஏறி — சென்று மோதி உயர்ந்து, கேழ் — நிறத்தால், அரிய — அருமையான, பொன்கொடு-பொன்னுலே, சமைத்த — செய்யலான, கிளர் — பொங்குகின்ற, வெள்ளத்து — பிரவாகத்தினுலே, ஊழி — உகாந்தகாலம், திரிநாளும்—வரும்போதும், உலையா-கெடாத, மதிலை — இலங்கைமதிலை, உற்ருன் — அடுத்தார்—எ-று. சமைத்த உலையாதமதிலென்க. 62

கலங்கலில்கடுங்கதிர்கண்மீதுகடிதேகா
அலங்கலயில்வஞ்சகனையஞ்சியெனினன்ருல்

இலங்கைமதிலிங்கிதனையேறலரிதென்றே
விலங்கியகல்கின்றனன்விரைந்தெனவியந்தான்.

இ-ள். கலங்கல் இல் — கலங்குதலில்லாத மங்குதலில்லாத, கடும் — கடுமையான, கதிர் — சூரியனுடைய, கண் — பார்வைகள், மீது — அவ்வூரின்மேலே, கடிது — விரைவதாய், ஏகா — செல்லாது, அலங்கல்-வெற்றிமாலையணிந்த, அயில் — வேலைக்கொண்ட, வஞ்சகனை — சீதாபிராட்டியை வஞ்சித்துக்கொண்டுவந்த இராவணனுக்கு, அஞ்சியெனில் — பயந்து என்றுசொல்லலாகுல், அன்று — அந்த நிமித்தம் அன்று, இலங்கைமதில் — இலங்கைமதிலாகிய, இங்கிதனை — இங்கேதோன்றுகிற இதை, ஏறல் — கடந்துமேலேசெல்லுதல், அரிதென்று — அருமையென்று, விலங்கி — ஒதுங்கி, விரைந்து அகல்கின்றனன் — சீக்கிரத்திலே நீங்கிப்போகின்றான், எனவியந்தான் — என்று அதிசயித்தார்—எ-று. 63

தெவ்வளவிலாதவிறைசேறலுளதென்றால்
அவ்வளவலன்றரணமண்டமிடையாக
எவ்வளவினுண்டுவெளியீறுமதுவென்று
வெவ்வளவரக்கனைமனக்கொளவியந்தான்.

இ-ள். தெவ் — பகைகள், அளவு இலாத — கணக்கில்லாதவைகள் கூடினால், இறைகொஞ்சம் — இந்தமதில்மேல், சேறல் — செல்லுதல், உளது-உண்டு, என்றால் — என்றுசொல்வதானால், அவ் அளவது — அப்படிச்செல்லுவதான கொஞ்ச அளவையுடையது, அன்று — அல்லதேயாம், அரணம்— இந்தமதில், அண்டம் — தேவருலகம், இடையாக — அதற்கு நடு அளவிலே நிற்க, எவ் அளவது — எந்த உயர்வான அளவையுடையதாக, உண்டு — உளதாயிருக்கிறதுமதில், வெளியீறும் — ஆகாயமுகடும், அது — அந்த அளவையுடையதே ஆம், என்று — என்று, வெவ்வளம் — கொடிதான சம்பத்தையுடைய, அரக்கனை — ராவணனை, மனக்கொள — தமதுமனத்திலேதோன்ற, வியந்தான் — அதிசயத்தை யடைந்தார்—எ-று. மதிலுயர்வினளவே ஆகாயத்தின் உயர்வினளவும் ஆகலால் பகைவர் அநேகர் கூடினாலும் மதிலேறிப்புட்புகுதல் கூடாதென்றபடி. 64

மடங்கலரியேறுமதமால்களிறுநாண
நடந்துதனியேபுகுதுநம்பிநனிமூதூர்
அடங்கரியதானையயிலந்தகனதானைக்
கடுந்திறலின்வாயனையவாயிலெதிர்கண்டான்.

இ-ள். மடங்கல் — மடங்கலென்கிற, அரி ஏறும் — ஆண்சிங்கமும், மதம் — மதத்தையுடைய, மால் — உயர்ந்த, களிறும் — யானையும், நாண-வெட்கத்தையடையும்படி, தனியே — தாமொருவராகவே, நடந்து-சென்று, புகுதும் — மதிலருகேசேருகிற, நம்பி-புருஷசிரேஷ்டரான அனுமார், நனிமூதூர் - மிகப்பெரியதான அவ்வூரினது, அடங்கரிய — அடங்குதலில்லாத,

தானை – சேனைகளையுடையதாய், அயில் – சூலத்தைக்கொண்ட, அந்தகனது – யமனுடைய, ஆணை – ஆக்ஞையைபெற்ற, வாய் – இடத்தை, கடும் – கடுமையான, திறலின் – பலத்தைக்கொண்ட, வாய் – வாயை, அனைய – ஒப்பான, வாயில் – அந்த கோட்டைவாயிலை, எதிர்கண்டான் – முன்னேதெரியப் பார்த்தார்—எ-று. 65

மேருவைநிறுத்திவெளிசெய்ததுகொல்விண்ணோர்
ஊர்புகவமைத்தபடிகால்கொலுலகேழும்
சோர்விலநிலைக்கநடுவிட்டதொருதூணோ
நீர்புகுகடற்குவழியோவெனநினைந்தான்.

இ-ள். மேருவை – மேருமலையை, நிறுத்தி – ஊன்றி, வெளி - (அதிலே) துவாரமுளதாக, செய்ததுகொல் – செய்திருக்கின்றதோ, விண்ணோர் – தேவர்களுடைய, ஊர்புக – ஊர்க்குச்செல்லுவதாக, அமைத்த – உண்டாக்கின, படி – வாசற்படியும், கால்கொல் – நிலைகாலுமோ, உலகேழும் – ஏழுலகமும், சோர்வில – தளர்வில்லாமல் ஜலப்பிரளயக்காலத்திலே, நிலைக்க – (இந்த ஊர்க்குள்ளே) நிலைகொண்டிருப்பதாக, நடு – நடுவிலே துவாரமுளதாக, இட்டது – செய்து நிறுத்தினது, ஒரு – ஆகியவொரு, தூணோ – தூண்தானோ, கடற்கு – இந்தக் கடலுக்கு, நீர்புகு – ஆற்றுநீரெல்லாஞ் சேர்ந்துவருவதான, வழியோ என – மதகுதானோ என்று, நினைந்தான் – எண்ணினார்—எ-று. 66

ஏழுலகின்வாழுமுயிர்யாவையுமெதிர்ந்தால்
ஊழின்முறையன்றியுடனேபுகுதலுண்டே
வாழியரியங்குவழியீதெனவகுத்தால்
ஆழியுளவேழினளவன்றுபகையென்றான்.

இ-ள். ஏழுலகின் — இந்த ஏழுலகங்களிலும், வாழும் — தங்குவன ஆன, உயிர்யாவையும் – எல்லா உயிர்களும், எதிர்ந்தால் – ஒருசேரத்திரண்டுவந்தாலும், ஊழின்முறை – கிரமகிரமமாக, அன்றி – செல்லுவதையல்லாமல், உடனே – எல்லா உயிர்களும் ஒருசேர, புகுதல் – நுழைந்து செல்லுதற்கு, உண்டே – (வாயில்) அகலமுடையதா யிருக்கிறதே இதுபோலகலமுள்ளதெங்குமில்லை யென்றபடி, வாழியர் — இவ்வூர்க்குள்ளே வாழுமவர்கள், இயங்கு — சாதாரணமாகச் செல்லுவதும் வருவதுமான, வழி ஈது என வகுத்தால் — வாயில்வழி இப்படிப்பட்டதாக அமைத்திருந்தால், பகை – இதிலுள்ளபகைவருக்கு அளவு, ஆழி – கடல்களாக, உள – உண்டான, ஏழினளவு – ஏழினளவும், அன்று – போதாது, என்றான் – என்று நினைத்தார்—எ-று. 67

வெள்ளமொருநூறொடொருநூறுமுடைவீரக்
கள்ளவினைவெவ்வலியரக்கரிருகையும்

முள்ளெயிறும்வாளுமுறமுன்னமுறைநின்றார்
எள்ளரியகாவலினையண்ணலுமெதிர்ந்தான்.

இ-ள். வெள்ளம் ஒரு நூறொடொருநூறும் — இருநூறுவெள்ளம் என்னும் அளவை, உடை - உடைய, வீரம் — வீரமும், கள்ளவினை — திருட்டுச் செய்கையும், வெவ்வலி — கொடிதான சாமர்த்தியமுமுள்ள, அரக்கர் - ராக்ஷதர்கள், இருகையும் - இருபுறத்திலும், முள் - முள்ளைப்போன்ற, எயிறும் - வக்கிரதந்தங்களும், வாளும் — கையில் வாளாயுதங்களும், உற — தோன்ற, முன்னம் — முன்னே, முறை — காவலாக நிற்கும்படியே, நின்றார் — நின்றார்கள், எள்ளரிய - அசட்டை பண்ணக்கூடாத, காவலினை — அப்படி நிற்கிற காவற்படைகளை, அண்ணலும் — அனுமாரும், எதிர்ந்தான் - கண்டார்-எ-று.

சூலமழுவாளொடயிறோமரமுலக்கை
காலவரிவிற்பகழிகற்பணமுசுண்டி
கோல்கணையநேமிகுலிசஞ்சுரிகைகுந்தம்
வாலமுதலாயுதம்வலித்தனர்வலத்தார்.

இ-ள். சூலம் — சூலாயுதங்களும், மழு — மழுவாயுதங்களும், வாள் ஒடு - வாளாயுதங்களுடனே, அயில் — வேலாயுதங்களும், தோமரம் - தோமரங்களும், உலக்கை — இருப்புலக்கைகளும், காலன் — யமனுக்கொப்பான, வரி- வரிந்த, வில் - விற்களும், பகழி - அம்புகளும், கப்பணம் — கப்பணங்களும், முசுண்டி - முசுண்டிகளும், கோல் — தடிகளும், கணையம் — வளைதடிகளும், நேமி — சக்கராயுதங்களும், குலிசம் — வச்சிராயுதங்களும், சுரிகை — சிற்றறிவாளும், குந்தம் — கைவேல்களும், வாலம் - பிண்டிபாலங்களும், முதல்- முதலான, ஆயுதம் — ஆயுதவகைகளிலே, வலித்தனர் - சாமர்த்தியர்களான, வலத்தார் - பலசாலிகள்—எ-று. 69

அங்குசநெடுங்கவணயிற்சிலைவழங்கும்
வெங்குசையபாசமுதல்வெய்யபயில்கையார்
செங்குருதியன்னசெறிகுஞ்சியர்சினத்தோர்
பங்குனிமலர்ந்தொளிர்பலாசவனமொப்பார்.

இ-ள். அங்குசம் — அங்குசமும் யானைத்தோட்டியும், நெடுங்கவண்- நீண்டகவண்களும், அயில் — கலப்பைகளும், சிலை — ஒலியை, வழங்கும்- தருவதான, வெம் - வெவ்விய, குசைய - கடிவாளத்தையுடைய, பாசம்- கயிறு, முதல் — முதலான, வெய்ய — கொடிய ஆயுதங்களும், பயில் — பழகுகின்ற, கையார் — கைகளையுடையவர்கள், செங்குருதி - சிவந்தரத்தத்தை, அன்ன — ஒப்பான, செறி — நெருங்கின, குஞ்சியர் - உரோமங்களுள்ளவர்கள், சினத்தோர் — கோபத்தின் மிகுத்தவர்கள், பங்குனி — பங்குனிமாதத்திலே, மலர்ந்து — விரிந்து, ஒளிர் — விளங்குகின்ற, பலாசவனம் - செம்முருக்கவனத்தை, ஒப்பார் - செம்மயிரினாலே ஒத்தவராய் நிற்கிறார்கள். 70

அளக்கவரிதாகியகணக்கொடயனிற்கும்
விளக்கினமிருட்டனைவிழுங்கிவெளிகால
உளக்கடியகாலன்மனமுட்குமணிவாயில்
இளக்கமில்கடற்படையிருக்கையையெதிர்ந்தான்.

இ-ள். அளக்க அரிதாகிய — அளவு செய்யக்கூடாத, கணக்கொடு- கணக்குடனே, அயல் - இருபுறத்திலும், நிற்கும் — நிற்கிற, விளக்கினம்- விளக்கின் வரிசைகள், இருள்தனை - இருட்டை, விழுங்கி – கபளீகரித்து, வெளி — வெளிச்சத்தை, கால – விட, உளக்கடிய – கடினசித்தனுன, காலன்- யமனும், மனம் உட்கும் - மனம் அஞ்சுவதான, மணி - அழகிதான, வாயில்- கோட்டைவாயிலில், இளக்கம் இல் – விலகுதலில்லாத, கடல் – கடல் போன்ற, படையிருக்கையை – சேனைகளிருப்பை, எதிர்ந்தான் – கண்டார்.

எவ்வமரரெவ்வவுணரெவ்வருளரென்னே
கவ்வைமுதுவாயிலினெடுங்கடைகடப்பார்
தெவ்வரிவர்சேமமிதுசேவகனும்யாமும்
வெவ்வமர்தொடங்கிடினெனுய்விளையுமென்றான்.

இ-ள். கவ்வைமுது – சத்தமிகுந்துள்ள, வாயிலின் நெடுங்கடை- இந்த நீண்ட கடைவாயிலை, கடப்பார் – கடந்துசெல்லத்தக்கவர்கள், எவ் அமரர் உளர் – தேவரில் யாரிருக்கிருர்கள், எவ் அவுணர் உளர் – அசுரரில் யாரிருக்கிருர்கள், எவ்வர் உளர் – இன்னம் வலியரில் யாரிருக்கிருர்கள், என்னே – இது என்ன ஆச்சரியம், தெவ்வர் – நமக்குப் பகையானவர்கள், இவர் — இத்தன்மையர்கள், சேமம் — காவலோ, இது – இப்படிப்பட்டது, சேவகனும் – ஸ்ரீராமனும், யாமும் – வானரர்களான நாமும்வந்து, வெவ் அமர் – கொடிதானசண்டையை, தொடங்கிடின் - ஆரம்பஞ்செய்தால், என்ஞல் – எப்படியாக, விளையும் — முடியும், என்ருன் – என்று நினைத்தார்— எ-று. எவ்வமர ரெவ்வருளரென்பதை எந்தத்தேவரில் யாரிருக்கிருர்கள் எந்த அசுரரில் யாரிருக்கிருர்க ளென்னவுமாம், எவர் எவ்வரென விரித்தல் விகாரம். 72

கருங்கடல்கடப்பதரிதன்றுநகர்காவற்
பெருங்கடல்கடப்பதரிதெண்ணமிறைபேரின்
அருங்கடன்முடிப்பதரிதாமமர்கிடைக்கின்
நெருங்கமர்கிடக்குநெடுநாளெனநினைந்தான்.

இ-ள். கருங்கடல் – இந்தக்கரியகடலை, கடப்பது – கடந்துவருகிறது, அரிது அன்று — அருமையுள்ளதல்ல, நகர் — இந்த ஊருக்கு, காவல் – காவலான, பெருங்கடல் – சேனைப்பெருங்கடலை, கடப்பது-கடக்கிறதே, அரிது- அருமையுள்ளது, இறை — கொஞ்சமேனும், எண்ணம்பேரில் – நமது நினைவு பிசகினல் அசட்டையாஞல், அரும் — செய்தற் கரிதான, கடன் - பிராட்டியைக் கொண்டுபோய்ச் சொல்லுகிறகடனை, முடிப்பது-தீர்க்கிறது, அரிது

ஆம் – அருமையுள்ளதே ஆம் ஆகலால், அமர் – இவரோடுசண்டை, கிடைக்கில் – எனக்குநேரிட்டால், நெருங்கு – நெருங்கின, அமர் – அந்தச்சண்டை கிடக்கும், நெடுநாள் – நெடுங்காலமானாலும் முடிவுபெறாதிருக்கும், என நினைந்தான் – என்று நினைத்தார்—எ-று. 73

வாயில்வழிசேறலரிதன்றியும்வலத்தோர்
ஆயிலவர்வைத்தவழியேகலழகன்றால்
காய்கதிரியக்கின்மதிலைக்கடிதுதாவிப்
போயிநகர்புக்கிடுவெனென்றோரயல்போனான்.

இ-ள். வாயில்வழி – ஆனாலு மிந்தவாயில்வழியாக, சேறல் – நான்செல்லுதல், அரிது – அருமையுள்ளதே, அன்றியும் – அல்லாமலும், வலத்தோராயில் – உள்ளேபோகிறவர்கள், சாமர்த்திய முள்ளவர்களானால், அவர்வைத்தவழி – அவர்கள்விட்டிருக்கிறவழியே, ஏகல்-செல்லுதல், அழகு அன்று-அழகுள்ளதல்ல, காய் – எரிக்கின்ற, கதிர் – சூரியன், இயக்கு இல் – சஞ்சரித்தலில்லாத, மதிலை – இந்தமதிலை, கடிது – விரைவிலே, தாவி – தாண்டி, போய் – சென்று, இந்நகர் – இந்த ஊருக்குள்ளே, புக்கிடுவெனென்று – செல்லுவேனென்று, ஓரயல் – ஒருபுறத்திலே, போனான் – சென்றார்—எ-று. அன்று – ஒருமைமுடிபு, அல்ல – பன்மைமுடிபு, என்பதுணர்க. 74

வேறு

நாளுநந்தானல்கியகாவனனிமூதூர்
வாணாளந்நாள்போவதின்மேலேவழிநின்றாள்
தாணுமென்னுந்தோளுடையானைச்சுடரோனைக்
காணுவந்தகட்செவியென்னக்கனல்கண்ணாள்.

இ-ள். நாளும் – தினந்தினமும், தான் – தான் ஒருத்தியே, காவல் நல்கிய – காவலைச்செய்துவருகிற, நனி மூதூர் – மிகப்பெரிய ஊரிலே, வாழ்நாள் – வர்த்திக்கிறகாலத்தில், அந்நாள் – அன்றைத்தினம், போவதின்மேலே – அனுமார்செல்லுவதான அவ்விடத்திலே, வழி நின்றாள் – வழியிலே நிற்றலானாள் அவள், தூண் ஆமென்னும் – தூணே நிகராமென்பதான, தோளுடையானை – தோள்களையுடைய அனுமாரை, சுடரோனைக்காணு-சூரியனைக்கண்டு, வந்த — வருவதான, கட்செவியென்ன — பாம்புபோல், கனல் – கொதிக்கின்ற, கண்ணாள் – கண்களையுடையவள்—எ-று. மூதூர் வாழ்நாளன்னாளென்று பாடமாம்போது அவ்வூருக்கு ஆயுள்போன்றவள் என்றாம் ஆகவே இவள்முடிந்தால் அவ்வூரும் முடிந்தழியுமென்றுகருத்து. போவதின்மேலே போவதற்குமுன்னே என்க. 75

எட்டுத்தோளாணுமுகத்தானலகேழும்
தொட்டுப்பேருஞ்சோதிநிறத்தாள்சுழல்கண்ணாள்
முட்டிப்பேரின்மூவுலகத்தைதமுதலோடும்
கட்டிச்சீறுங்காவல்வலத்தாள்கமையில்லாள்.

இ-ள். எட்டுத்தோளாள்-எட்டுத் தோள்களுள்ளவள், நாலுமுகத்தாள்-நான்கு முகங்களுள்ளவள், உலகேழும்-மேலேழுலோகங்களையும், தொட்டு-தீண்டி, பேரும்—அதற்குமேலும் செல்லுவதான, சோதி – பிரகாசமான, நிறத்தாள் – நிறமுள்ளவள், சுழல் – சுழலுகின்ற, கண்ணாள் – கண்களுள்ளவள், முட்டுப்பேரில் – (பகைவர்கள்) மோதிவந்தால், மூவுலகத்தை – ராவணனுடைய உள்கோட்டையான மூன்றரணையும், முதலோடும்-அடியுடனே, கட்டி—தனக்குள்ளாகச் செய்துகொண்டு, சீறும் – வந்தபகைவருடனே கோபிப்பதான, காவல்—காக்குஞ்செய்கையில், வலத்தாள் – வல்லமையுள்ளவள், கமை – பொறுமை, இல்லாள் – இல்லாதவள்—எ-று. 76

பாரா நின்றாளெண்டிசைதோறும்பலரப்பால்
வாரா நின்றாரோவெனமாரிமழையேபோல்
ஆரா நின்றாணூபுரமச்சந்தருதாளாள்
வேராமெய்யாண்மின்னினிமைக்குமிளிர்பூணாள்.

இ-ள். பலர் – அனுமாரையல்லாது இன்னம் பலபேர் துணையாக, அப்பால் – தூரத்திலே, வாரா நின்றாரோ என—வருகிறார்களோ என்று, எண்டிசைதோறும் – எட்டுத்திக்கிலும், பாரா நின்றாள் – பார்க்கிறாள், மாரிமழையேபோல் – மழைகாலத்து மேகம்போல், ஆரா நின்றாள் – கர்ச்சிக்கிறவள், நூபுரம் – காற்சிலம்புகள், அச்சம் – ஒலியாற் பிறருக்குப்பயத்தை, தரு-கொடுப்பதான, தாளாள் – கால்களையுடையவள், வேர் ஆம் – வேர்வையுண்டாகுகின்ற, மெய்யாள் – சரீரமுள்ளவள், மின்னின் – மின்போல், இமைக்கும் – விளங்குவனவான, மிளிர் பூணாள்—ஒளிகொண்ட ஆபரணங்களுள்ளவள்—எ-று. 77

வேல்வாள்சூலம்வெங்கதைபாசம்விளிசங்கம்
கோல்வாள்குந்தங்கொண்டகரத்தாள்வடகுன்றம்
போல்வாடிங்கள்போழினெயிற்றாள்புகைவாயிற்
கால்வாள்காணிற்காலனுமுட்குங்கதமிக்காள்.

இ-ள். வேல் – வேலும், வாள் – வாளும், சூலம் – சூலமும், வெங்கதை-வெவ்விதானகதையும், பாசம்—கயிறும், விளி—ஒலிக்கின்ற, சங்கம் – சங்கும், கோல்—அம்பும், வாள் – ஒளிபொருந்தின, குந்தம் – எறியீட்டியும், கொண்ட – ஆகிய இவைகளைப்பற்றின, கரத்தாள் — கைகளையுடையவள், வடகுன்றம்போல்வாள் – மேருமலையை ஒப்பானவள், திங்கட்போழின்-சந்திரதுண்டம்போலும், எயிற்றாள் – பற்களையுடையவள், புகை – புகையை, வாயில் – வாய்வழியே, கால்வாள் – விடுகின்றவள், காலனும் – யமனும், காணில் – கண்டால், உட்கும் – அஞ்சுவதான, கதம் – கோபத்திலே, மிக்காள் – மிகுந்தவள்—எ-று. 78

அஞ்சுவணத்தினுடையுடுத்தாளரவெல்லாம்
அஞ்சுவணத்தின்வேகமிகுத்தாளருளில்லாள்

அஞ்சுவணத்தினுத்தரியத்தாளலேயாரும்
அஞ்சுவணத்தின்முத்தொளிராரத்தணிகொண்டாள்.

இ-ள். அஞ்சுவண்ணத்தின் - பஞ்சவர்ணங்களுள்ள, ஆடை — வஸ்திரத்தை, உடுத்தாள் — கட்டினவள், அரவெல்லாம் — பாம்புகளெல்லாம், அஞ்சு — பயப்படுவதான, உவணத்தின் - கருடனைப்போல், வேகம் - வேகத்திலே, மிகுத்தாள் - மிகுந்தவள், அருளில்லாள் - இரக்கமில்லாதவள், அம்- அழகிதான, சுவணத்தின் - சுவர்ணத்தாலான, உத்தரியத்தாள் - மார்யாப் புள்ளவள், அலை ஆரும் - அலைகள் நிரம்பின, அம் - நீரிலுள்ள, சு - நல்ல, வள் - பிரகாசமுடைய, நத்தின் - சங்கிலுண்டான, முத்து-முத்துகளாலே, ஒளிர் — விளங்குகின்ற, ஆரத்து - மாலையை, அணிகொண்டாள் - அணிந்திருக்கிறவள்—எ-று. 79

சிந்தாரத்தின்செச்சையணிந்தாள்தெளிநூல்யாழ்
அந்தாரத்தினேர்வருசொல்லாளறைதும்பி
கந்தாரத்தினின்னிசைபாடிக்களிகூரும்
மந்தாரத்தின்மாலையலம்புமகுடத்தாள்.

இ-ள். சிந்து - மணஞ்சிந்துவதான, ஆரத்தின்செச்சை — சந்தனக் குழம்பை, அணிந்தாள் — அணிந்தவள், தெளி - தெளிந்த, நூல்யாழ்-நூலின் படியான வீணையிலுள்ள, அம் — அழகிதான, தாரத்தின் — தாரமென்னும் இசைக்கு, நேர்வரு — சரிவருகின்ற, சொல்லாள் — சொற்களுள்ளவள், அறை - சத்திக்கின்ற, தும்பி - வண்டுகள், கந்தாரத்தின் — இசைப்பாட்டுப் போல், இன்னிசை - இனிதான இசைகள், பாடி — பாடுதல்செய்து, களி கூரும் - சந்தோஷமிகுகின்ற, மந்தாரத்தின்மாலை - மந்தாரப் பூமாலைகள், அலம்பும் — அசைவதான, மகுடத்தாள் — முடியையுடையவள்—எ-று. 80

எல்லாமுட்குமாழியிலங்கையிகன்மூதூர்
நல்லாளவ்வூர்வைகுறைறொக்குநயனத்தாள்
நில்லாய்நில்லாயென்றுரைநேர்வாணினையாமுன்
வல்லேசென்றாண்மாருதிகண்டான்வருகென்றான்.

இ-ள். எல்லாம் - உலகங்களெல்லாம், உட்கும் — அஞ்சுவதான, ஆழி- கடல் சூழ்ந்த, இலங்கை — இலங்கையாகிய, இகல் — பலங்கொண்ட, மூதூர்- பெரிய ஊருக்கு, நல்லாள் - நன்மையேசெய்பவள், அவ்வூர் — அந்த இலங்கையானது, வைகு — தங்குவதான, உறை — உறைப்போர்வையை, ஒக்கும்- ஒப்பான, நயனத்தாள் — கண்களையுடையவள், நில்லாய் — நில்லாயென்று, நில்லு — நில்லென்று, உரை — வார்த்தை, நேர்வாள் — சொல்லுவாளாக, நினையாமுன் — நினைத்து அனுமாருக்குமுன்னே, வல்லே — விரைவிலே, சென்றாள் - போனாள், கண்டான்மாருதி-அதை அநுமார்கண்டு, வருகென்றான் — என்கிட்டவாவென்றார்—எ-று. 81

ஆகாசெய்தாயஞ்சலைபோலுமறிவில்லாய்
சாகாமூலந்தின்றுழல்வார்பாற்சலமென்னும்
பாகாரிஞ்சிப்பொன்மதிருவிப்பதையாதே
போகாயென்றாள்பொங்கனலென்னப்புகைகண்ணாள்.

இ-ள். ஆகா - தகாதசெய்கையை, செய்தாய் - பண்ணினாய், அறிவில்லாய் - ஓ புத்தியில்லாதவனே, அஞ்சலைபோலும்-பயப்படுகின்றிலை, சாகா-மரக்கிளைகளிலிருந்து, மூலம் - மரவேர்களை, தின்று - புசித்து, உழல்வார் பால் - அலைகிறவர் களிடத்திலே, சலம் - எனதுகோபம், என் ஆம் - யாது பயன்படும், பாகு - சுண்ணச் சாந்தின்குழம்பு, ஆர்-நிரம்பப் பூசினதினாலே, இஞ்சி - இறுகுதலையுடையதாய், பொன் - பொன்மயமான, மதில் - இந்த மதிலை, பதையாது - அச்சமில்லாமல், தாவி - தாண்டி, போகாய் - செல்லாதேபோ, என்றாள் - என்றுசொன்னாள், பொங்கு - கொதிக்கின்ற, அனலென்ன - நெருப்புப்போல், புகை - புகைகின்ற, கண்ணாள் - கண்களையுடையவள்—எ-று. 82

களியாவுள்ளத்தண்ணன்மனத்திற்கதமூழ்க
விளியாநின்றேநீதிநலத்தின்வினையோர்வான்
அளியாலிவ்வூர்காணுநலத்தினணைகின்றேன்
எளியேனுற்றாலியாவதுனக்கிங்கிழவென்றான்.

இ-ள். களியா - மயங்காத, உள்ளத்து - மனத்தையுடைய, அண்ணல்-அனுமார்தமது, மனத்தில் - மனத்திலே, கதம் - கோபம், மூழ்க-அதிகமாக அதனால், விளியா - வெளியே கோபியாமல், நின்று - நின்றுகொண்டுதமது, நீதிநலத்தின் - நல்ல நீதிமார்க்கத்தினாலே, வினை - அவள்செய்கையை, ஓர்வான் - உணர்தற்காக, அளியால் - உன்தயவினாலே, இவ்வூர் - இந்தவூரை, காணும் - காணவேண்டின, நலத்தின் - ஆசையினால், அணைகின்றேன் போகிறேன், எளியேன் - உனக்குச் சுலபமான நான், உற்றால் - இவ்வூர்க்குள்ளேபோனால், உனக்கு இங்கு - இங்கே திரிகிறவுனக்கு, இழவுயாவது-நஷ்டியென்ன, என்றான் - என்றுசொன்னார்—எ-று. 83

என்னுமுன்னமேகெனவேகாதெதிர்மாற்றம்
சொன்னாயேநீயாவனடாதொல்புரமட்டான்
அன்னோரேனுமஞ்சுவரெய்தற்களியுற்றால்
உன்னாலெய்துமூர்கொலிவ்வூரென்றுறநக்காள்.

இ-ள். என்னுமுன்னம் - அனுமாரிப்படிச் சொல்லுதற்குமுன்னே, ஏகென - நான்போவென்றுசொல்ல, ஏகாது - நீபோகாமல், எதிர்மாற்றம்-எதிர்வார்த்தை, சொன்னாயே - சொல்லினாய், நீயாவனடா - நீயாரடா, தொல் - பழையதான, புரம்-திரிபுரத்தை, அட்டான் - எரித்தவனே, அன்னோரேனும் - ஒப்பவரானாலும், எய்தற்கு - இவ்வூருட்போவதற்கு, அஞ்சுவர்-பயப்படுவார்கள், அளியுற்றால்-என்தயவுண்டானாலும், உன்னால் - (குரங்கு

வடிவான) உன்னாலே, எய்தும் — போகத்தக்க, ஊர்கொல் — ஊரோ, இவ்வூ ரென்று - இந்தவூரென்று, உற - மிகவும், நக்காள் - சிரித்தாள்—எ-று. 84

நக்காளைக்கண்டையன்மனத்தோர்நகைகொண்டான்
நக்காய்நீயார்யார்சொலவந்தாயுனதாவி
உக்காலேதாமோடலையென்றானினியிவ்வூர்
புக்காலன்றிப்போகிலெனென்றான்புகழ்கொண்டான்.

இ-ள். நக்காளை - அப்படிச்சிரித்தவளை, கண்டு-பார்த்து, ஐயன்-அனு மார், மனத்து-தமது மனத்துள்ளே, ஓர்நகை - ஒருவகைச்சிரிப்பை, கொண் டான்-கொண்டவராக அப்போது, நக்காய்-சிரித்தவனே, நீயார் - யாவன்நீ, யார்-எவன், சொல — போகச்சொல்ல, வந்தாய் — வந்தனை, உனதாவி - உன் னுயிர், உக்கால்-சிந்திப்போனால் அதன்பின்பு, ஏதாம் — யாதுபயன் உண் டாகும், ஓடலை — நீ ஓடிப்போகாமல் நிற்கிறாய், என்றான் — என்றுசொன் னாள் அதற்கு, இனி இவ்வூர் — இவ்வூர்க்குள்ளே, புக்காலன்றி — போனா லல்லது, போகிலேன் — வெளிச்செல்லேன், என்றான் — என்றுசொன்னார், புகழ்கொண்டான் — கீர்த்திமிக்க அனுமார் — எ-று. அக்கால் நீ யாரென்று பாடமாம்போது அப்போது என்க. 85

வஞ்சங்கொண்டான்வானரமல்லன்வருங்காலன்
துஞ்சுங்கண்டாலென்னையிவன்சூழ்திரையாழி
நஞ்சங்கொண்டகண்ணுதலைப்போனகுகின்றான்
நெஞ்சங்கண்டேகல்லெனநின்றேநினைவுற்றாள்.

இ-ள். வஞ்சங்கொண்டான் — வஞ்சனைவடிவாயிருக்கிறான், வானரம்- குரங்குவடிவுள்ளவன், அல்லன் - அல்லனாகும், வருகாலன் — அந்தியகாலத் தில் வருகிறயமனும், என்னைக்கண்டால் — என்னைப்பார்த்தால், துஞ்சும்- இறந்துபோவான், இவன் — இவனோ, சூழ்திரை ஆழி - உலகைச்சூழ்ந்த அலைகளையுடைய கடலிலுண்டான, நஞ்சங்கொண்ட — விடத்தைக்கண்டத் திலேகொண்ட, கண்நுதலைப்போல - நெருப்புக்கண்ணை நெற்றியிலே யுடைய சிவனைப்போல், நகுகின்றான் — விளங்குகின்றான்என்று, நெஞ்சம்- அனுமாருடைய மனோதிடத்தை, கண்டு — தெரிந்து, கல்லெனநின்று — ஒரு கல்லைப்போல்நின்று, நினைவுற்றாள் — ஆலோசித்தாள்—எ-று. 86

கொல்வாமன்றேற்கோளுறுமிவ்வூரெனல்கொண்டாள்
வெல்வாய்நீயேவென்றியெனத்தன்விழிதோறும்
வல்வாய்தோறும்வெங்கனல்பொங்கமதில்வாயில்
செல்வாயென்னாவுழைவிலைவேலைச்செலவிட்டாள்.

இ-ள். கொல்வாம் — இனி இவனைக்கொல்லுவோம், அன்றேல் - நம் மால் கொல்லப்படானாகில், இவ்வூர் — இந்த ஊர் இவனாலே, கோளுறும்- கொள்ளப்படுவதாம், எனல் — என்னுநியதியை, கொண்டாள் — மனத்திலே

கொண்டவளாய், நீயே - நீ ஒருவனே உனது, வென்றி - ஜெயம்பண்ணு கினைவின்படி, வெல்வாய் என - ஜெயிக்கக்கடவையென்று, தன்விழி தோறும் - தனதுகண்களிலும், வல் வாய்தோறும் - வலியவாயிலும், வெங் கனல் - வெவ்விய நெருப்பு, பொங்க - மிகுதியாக உள்ளேபோகிறவனுல், மதில் - மதில்சூழ்ந்திருக்கிற, வாயில் - கோட்டைவாயில்வழியாக, செல்லாய் - போஎன்று, மூவிலைவேலை - தன்கையிலிருக்கிற முத்தலைச்சூலத்தை, செலவிட்டாள் - எறிந்தாள் அனுமார்மேற்பட எறிந்தாள்—எ-று. 87

தடித்தாமென்னத்தன்னெதிர்செல்லுந்தழல்வேலைக்
கடித்தாநகம்விண்ணின்முரிக்குங்கருளன்போல்
ஒடித்தான்கையாலும்பருவப்பவுயர்காலம்
பிடித்தாணெஞ்சந்துண்ணெனவெண்ணம்பிழைபாதாள்.

இ-ள். தடித்து - மின்னலே, ஆமென்ன - சரியென்னும்படி, தன் எதிர் - தனக்குமுன்னே, செல்லும் - வருவதான, தழல் - அக்கினிஜாச் சுலியமான, வேலை - அந்தச்சூலத்தை, கடித்தான் நாகம் - பாம்பைவாயிலே கடித்தவனுகி, விண்ணில் - ஆகாயத்திலேநின்று, முரிக்கும் - காலாலே சித றச்செய்கிற, கருளன்போல் - கருடனைப்போல், உம்பர் - தேவர்கள், உவப்ப - சந்தோஷிக்க, கையால் - தமதுகையினுலே, ஒடித்தான் - ஒடித் தெறிந்தார் அப்போது, உயர்காலம் - நெடுங்காலமும், பிடித்தாள் - அச் சூலத்தைப்பிடித்திருந்த அவள், நெஞ்சம் - மனது, துண்ணென - திடுக் கென்று, எண்ணம் - தனதுநினைவு, பிழையாதாள் - பிசகாதவளாகி—எ-று.

இற்றுச்சூலநீறெழுகாலத்தெறியொப்பாள்
மற்றுத்தெய்வபலபடைகொண்டுமலைவாண்மேல்
உற்றுக்கையாலாயுதமெல்லாமொழியாமல்
பற்றிக்கொள்ளாவிண்ணிலெறிந்தான்பழியோர்வான்.

இ-ள். இற்றச் சூலம் - அந்தச் சூலமுறிந்து, நீறெழு - தூளாகப் போகிற, காலத்து - காலத்துக்குள்ளே, எரி ஒப்பாள் - நெருப்புப்போன்றவளாய், மற்றும் - இன்னமுமுள்ள, தெய்வம் - தெய்வத்தன்மையான, பல் படைகொண்டு - பல ஆயுதங்களாலும், மலைவாள்மேல் - சண்டை செய்கிறவள்மேலே, உற்று - சென்று, கையால் - தமதுகைகளாலே, ஆயுதமெல்லாம் - ஆயுதங்களையெல்லாம், ஒழியாமல் - தப்பாமல், பற்றி - அவள் கைகளைப்பிடித்து, கொள்ளா - பறித்து, விண்ணில் - ஆகாயத்திலேசெல்ல, எறிந்தான் - வீசினுராகி, பழி - பெண்பழியென்று, ஓர்வான் - எண்ணுகிறவரானுர்—எ-று. 89

வழங்குந்தெய்வப்பல்படைகாணுண்மலைவான்மேல்
முழங்குமேகமென்னவுரப்பிமுதிர்கின்ருள்
கழங்கும்பந்துந்தன்றுகொடாடுங்கரமோச்சித்
தழங்குஞ்செந்தீச்சிந்தவடித்தாடகவில்லாள்.

இ-ள். வழங்கும் - பிரமன்கொடுத்த, தெய்வம் – தெய்வத்தன்மையுள்ள, பல்படை – பல ஆயுதங்களும், காணாள் – தன்னிடத்தில்லாதவளாகிய, மலையான்மேல் – சண்டைபண்ணுகிற அனுமார்மேலே, முழங்கும்-இடிக்கிற, மேகமென்ன - மேகம்போல், உரப்பி – அதட்டி, முதிர்கின்றாள்-அதிககோபங்கொண்டவளாய், கழங்கும் – கழற்காயாகவும், பந்தும் – பந்தாகவும், குன்றுகொடு – மலைகளைக்கொண்டு, ஆடும் – ஆடுவதான, கரம்-கைகளை, ஓச்சி - ஓங்கி, தழங்கும் — சத்திக்கின்ற, செந்தீ — சிவந்தநெருப்பு, சிந்த – சிதறுவதாக, அடித்தாள் – அறைந்தாள், தகவு இல்லாள் – புத்தியில்லாதவள்—எ-று. 90

அடியாமுன்னமங்கையனைத்துமொருகையால்
பிடியாவென்னேபெண்ணிவள்கொல்விற்பிழையென்னு
ஒடியாநெஞ்சத்தோரடிகொண்டானுயிரோடும்
இடியேறுண்டநாகமெனப்பாரிடைவீழ்ந்தாள்.

இ-ள்- அடியா - அவள் அப்படி அடியாமல், முன்னம் – முந்தி, அம்கை அனைத்தும் - அவளுடைய அழகியகைகளையெல்லாம், ஒருகையால்பிடியா-தமதொருகையாலேசேரப்பிடித்து, என்னே – இது என்னதுர்விவகாரம், பெண் இவள் – பெண்ணாயிருக்கிறாளிவள், கொல்வில் - கொன்றால், பிழையென்னு - தோஷமென்று, ஒடியா - அவளுடையதகராத, நெஞ்சத்து-மார்பிலே, ஓரடிகொண்டான் — ஒரு அறைஅறைந்தார், உயிரோடும் - உயிருடனே, இடியேறுண்ட - நெருப்பிடிவிழுதலான, நாகமென – மலைபோல், பாரிடை - பூமியிலே, வீழ்ந்தாள்—விழுந்தாள் — எ-று. 91

விழுந்தாணொந்தாள்வெங்குருதிச்செம்புனல்வெள்ளத்
தழுந்தாநின்றாணான்முகனார்தம்மருளூன்றி
எழுந்தாள்யாரும்யாவையுமெல்லாவுலகத்தும்
தொழுந்தாள்வீரன்றூதுவன்முன்னின்றிவைசொன்னாள்.

இ-ள். விழுந்தாள் - கீழேவிழுந்தவள், நொந்தாள் - வருந்தினள், வெம்-வெப்பமான, குருதி — இரத்தமான, செம் – சிவந்த, புனல்வெள்ளத்து-நீர்ப்பிரவாகத்திலே, அழுந்தா நின்றாள் – அழுந்தப்படுகிறவள், நான்முகனார்தம்-பிரமாவினுடைய, அருள் — அருளுதலை, ஊன்றி – உள்ளே நிறுத்தி, எழுந்தாள் – எழுந்திருந்தாள், யாரும் — சரங்களும், யாவையும் - அசரங்களும், எல்லாவுலகத்தும் – எந்தவுலகங்களிலானாலும், தொழும் — வணங்குவதான, தாள் - பாதங்களையுடைய, வீரன் - ஸ்ரீராமனுக்கு, தூதுவன் – தூதுவந்த அனுமாருக்கு, முன்னின்று — முன்னே நின்று, இவை – இவ்வார்த்தைகளை, சொன்னாள் - சொல்லலானாள்—எ-று. 92

வேறு

ஐயகேள்வையநல்குமயனருளமைதியாக
எய்தியிம்மூதூர்காப்பெனிலங்கைமாதேவியென்பேர்

செய்தொழிலிழுக்கியுள்ளந் திகைத்திந்தச்சிறுமைசெய்தேன்
உய்தியென்றளித்தியாயினுணர்த்துவலுண்மையென்றாள்.

இ-ள். ஐய — ஐயனே, கேள் — கேட்கக்கடவை, வையம் — உலகத்தை, நல்கும் — சிருஷ்டித்த, அயன் — பிரமாவினுடைய, அருள் — அருளுதலே, அமைதியாக - ஏற்பாடாக, எய்தி — வந்து, இம்மூதூர் — இந்தப்பெரிய ஊரை, காப்பென் — காவல்செய்வதானேன், இலங்கைமாதேவி என்பேர்-என்பேரோ இலங்கைமாதேவி, செய்தொழில் — நான் செய்யுங்காவற் செய்கையினாலே, இழுக்கி — தவறுதலாய், உள்ளந்திகைத்து — புத்திமயங்கி, இந்தச் சிறுமைசெய்தேன் — இப்படிப்பட்ட குற்றம் பண்ணினேன், உய்தியென்று - தப்பிப்போவென்று, அளித்தி - ரக்ஷிக்கவேணும், ஆயின் - ஆனால், உண்மை உணர்த்துவல் - மெய்சொல்லுகிறேன், என்றாள் — என்று—எ-று.

எத்தனைகாலங்காப்பல்யானிந்தமூதூரென்று
முத்தனைவினவினேற்குமுரண்வலிக்குரங்கொன்றுன்னைக்
கைத்தலமதனாற்றீண்டிக்காய்ந்தவன்றென்னைக்காண்டி
சித்திரநகரம்பின்னைச்சிதைவதுதிண்ணமென்றான்.

இ-ள். யான் இந்தமூதூர் — நான் இந்தப் பெரியவூரை, எத்தனைகாலம் காப்பல் என்று — எவ்வளவுநாள் காக்கக்கடவேனென்று, முத்தனை — அந்தப் பிரமாவை, வினவினேற்கு - கேட்ட எனக்கு, முரண்வலி - மிகுந்தசாமர்த்தியமுள்ள, குரங்கொன்று — ஒருகுரங்கு, உன்னை — காவல்வேலைசெய்கிறவுன்னை, கைத்தலமதனால் — தன் கையினாலே, தீண்டி — தொட்டு, காய்ந்த-கொன்ற, அன்று — அக்காலம்வந்து, என்னைக்காண்டி — என்னைநீபார்ப்பாய், பின்னை - பின்பு, சித்திரம் - அழகான, நகரம் — இந்தவூர், சிதைவது — அழிந்துபோகிறது, திண்ணம் — மெய், என்றான் - என்று சொன்னார் பிரமதேவர்—எ-று. 94

அன்னதேமுடிந்ததையவறம்வெல்லும்பாவந்தோற்கும்
என்னுமீதியம்பவேண்டுந்தகையதோவினிமற்றுன்னால்
உன்னியவெல்லாமுற்றுமுனக்குமுற்றாததுண்டோ
பொன்னகர்புகுதியென்னாப்புகழ்ந்தவளிறைஞ்சிப்போனாள்.

இ-ள். அன்னதே — அந்தப்பிரமா சொன்னபடியே, ஐயமுடிந்தது-ஐயா முடிவாயிற்று, அறம் — தருமமே, வெல்லும் - ஜெயிக்கும், பாவம்-பாவமே, தோற்கும் — கெட்டுப்போம், என்னும் ஈது — என்பதான இது, இயம்பவேண்டும் — சொல்லவேண்டுவதான, தகையதோ - தகுதியுள்ளதோ, இனிமற்று — இனிமேல், உன்னால் — உம்மாலே, உன்னிய — நினைக்கப்படுகிற, எல்லாம் - எல்லாக்காரியங்களும், முற்றும் — முடிவுபெறும், உனக்கு-உம்மால், முற்றாதது — முடிவாகாததும், உண்டோ — ஒன்று உண்டாஇல்லை, பொன்னகர் — இந்தப் பொன்மயமான ஊர்க்குள்ளே, புகுதி யென்னா-இனிச் செல்லக்கடவீரென்று, புகழ்ந்து — அனுமாரைத் துதித்து, அவள்-

அந்த இலங்கைமாதேவி, இறைஞ்சி – வணக்கஞ்செய்துகொண்டு, போனள்-பிரமலோகத்துக்குப் போயினுள்—எ-று. 95

வீரனும்விரும்பிநோக்கிமெய்ம்மையேவிளையுமஃதென்
றூரியன்கமலபாதமகத்துறவணங்கியாண்டப்
பூரியரிலங்கைமூதூர்ப்பொன்மதிறாவிப்புக்கான்
சீரியபாலின்வேலைசிறுபிரைதெறித்ததன்னான்.

இ-ள். வீரனும் - பின்பு அனுமார், விரும்பி - ஆசைகொண்டு, நோக்கி-அவள் சொன்னதை ஆலோசித்து, மெய்ம்மையே – நிஜமே, விளையும்-முடிவுபெறும், அஃது என்று – அப்படியாக என்று, ஆரியன் - ஸ்ரீராமபிரானுடைய, கமலபாதம் – பாதபத்மங்களை, அகத்து உற – மனத்திலேநன்றாக, வணங்கி – வந்தனை செய்துகொண்டு, ஆண்டு – அங்கே, அ - அந்த, பூரியர்-கீழ்மக்களான ராக்ஷதருடைய, இலங்கை மூதூர் – பெரிய இலங்கையாகிய ஊரினது, பொன்மதில் – பொன்னுலானமதிலை, தாவி — தாண்டி, புக்கான்-போயினார், சீரிய - சிறந்த, பாலின்வேலை — பாற்கடலிலே, சிறுபிரை-கொஞ்சம்மோர், தெறித்தது – சிந்தினதை, அன்னான் – ஒப்பதாயினார். 96

வான்றொடர்மணியிற்செய்தமையறுமாடகோடி
ஆன்றபேரிருளைச்சீத்துப்பகல்செய்தவழகைநோக்கி
ஊன்றியவுதயத்துச்சியொற்றைவானுருளைத்தேரோன்
தோன்றினன்கொல்லோவென்னவறிவனுந்துணுக்கங்கொண்டான்

இ-ள். வான்தொடர்மணியில் – சூரியகாந்தக் கல்லால், செய்த – பண்ணின, மை அறு – குற்றம் அற்ற, மாடகோடி – கோடானுகோடி வீடுகளும், ஆன்ற — விசாலித்துப் பரவின, பேர் இருளை - பெரிய இருட்டை, சீத்து-போக்கி, பகல்செய்த - வெளிச்சஞ்செய்துகொண்டிருக்கிற, அழகைநோக்கி-அழகைப்பார்த்து, ஊன்றிய - நிலைகொண்டிருக்கிற, உதயத்து — உதயகிரியின், உச்சி – உச்சியிலே, ஒற்றை – ஒரு உருளையாய், வான் – ஆகாயத்திலே, உருளை – உருளுதலையுடைய, தேரோன் - தேர்மேல் வருகிற சூரியன், தோன்றினனே என்ன — உதயமாயிற்றோ என்று, அறிவனும் - காலஅளவுதெரிந்த அனுமார், துணுக்கம்கொண்டான் - அஞ்சுதலானார் — எ-று. வான்தொடர்மணி - வானிலேசெல்லுகிறதினாலே அந்தரமணி விண்மணியென்று சூரியனுக்குப்பெயர். 97

மொய்ம்மணிமாடமூதூர்முழுதிருளகற்றுந்தானே
மெய்ம்மையேயுணரினுதுகையெனவிலங்கிப்போனன்
இம்மதிலிலங்கைநாப்பணெய்துமேற்றன்பாலெய்து
மிம்மினியல்லனேவவ்வெயிற்கதிர்வேந்தனென்றான்.

இ-ள். மூதூர் — இந்தப் பெரியவூரிலே, மொய் மணி – மணிகள் நிரம்பின, மாடம்தானே — வீடுகளே, முழுதும் இருள் – இருள்களை யெல்லாம்,

அகற்றும் - போக்கும், மெய்மையே - நிஜமாகவே, உணரில் - யோசித்துப் பார்த்தால், நாண் ஆம் - நமக்கு வெட்கம் உண்டாம், மிகையெ‌ன - நாம் அதிகமேயென்று வேண்டாதவனேயென்று, வெயிற்கதிர்வேந்தன் - சூரியன், விலங்கிப்போனான் - ஒதுங்கிச் செல்கிறவனானான், இம்மதில் — இந்த மதில்சூழ்ந்த, இலங்கை நாப்பண் - ஊர்நடுவே, எய்துமேல் - வருவானானால், தன்பால் - முன்முன்னே, எய்தும் - வருவதாவது, மிம்மினி - கச்சோதம் போல்வான், அல்லனோ - ஆகானோ ஆவான், அ - அந்த, வெயில் - உஷ்ண கிரணங்களையுடைய, கதிர்வேந்தன் — சூரியபகவான், என்றான் - என்று நினைத்தார் — எ-று. 98

பொசிவுறுபசும்பொற்குன்றிற்பொன்மதினடுவட்பூத்து
வசையறவிளங்குஞ்சோதிமணியினாலமைந்தமாடத்
தசைவிலவிலங்கைமூதூராரிருளின்மையாலே
நிசிசரராயிற்றம்மாநெடுநகர்நிருதரெல்லாம்.

இ-ள். பொசிவு உறு - ஒளிபரப்புகின்ற, பசும்பொன் குன்றில் — பசிய பொன்மலைகள்போல், பொன்மதில் - அழகிய மதிலின், நடுவண் - நடுவே, பூத்து - உள்ளனவாகி, வசை அற — தோஷமில்லாமல், விளங்கும் - பிரகாசிப்பதான, சோதிமணியினால் - சூரியகாந்தக்கல்லாலே சூரியன்போன்ற ரத்நங்களாலே, அமைந்த — உள ஆன, பதித்தலான மாடத்து - வீடுகளுடனே, அசைவு இல் - அசைதலில்லாதிருக்கிற, இலங்கை மூதூர் - இவ்வூரிலே, ஆர் - பொருந்துவதாக, இருள் - இருட்டு, இன்மையாலே - இல்லாதபடியால், நெடுநகர் - இந்தநெடியநகரிலுள்ள, நிருதரெல்லாம் - ராக்ஷதர்களெல்லாம், நிசிசரர் - நிசியிலுஞ்சஞ்சரிக்கிறவர்கள், ஆயிற்று - என்னலாயிற்று, அம்மாநெடுநகர் - அந்தப்பெரிய ஊரில் — எ-று. 99

என்றனனியம்பிவீதியேகுதலிழுக்கமென்னாத்
தன்றகையனையமேனிசுருக்கிமாளிகைமின்சாரல்
சென்றனனென்பமன்னோதேவருக்கமுதமீந்த
குன்றெனவயோத்திவேந்தன்புகழெனக்குவவுத்தோளான்.

இ-ள். என்றனன் - என்று நினைத்து, இயம்பி - தன் உள்ளேசொல்லிக்கொண்டு, வீதியேகுதல் - வீதிவழியே செல்லுதலாலே, இழுக்கம் என்னா - தோஷமுண்டாமென்று, தன் - தனது, தகை அனைய - பெருமைக்கொத்த, மேனி - உடம்பை, சுருக்கி - ஒடுக்கிக்கொண்டு, மாளிகையின்சாரல் - வீடுகளினோரமாக, சென்றனன் — பிராட்டியைத் தேடிப் போனார், என்ப - என்று சொல்லுவர் மேலோர், தேவருக்கு அமுதமீந்த - தேவர்களுக்கு அமுதம் கொடுத்த, குன்றென - மந்தரகிரிபோலவும், அயோத்தி வேந்தன் - தசரதமகாராசனுடைய, புகழென - கீர்த்திபோலவும், குவவு - உருண்ட, தோளான் - புஜங்களையுடைய அனுமார் — எ-று.

ஆத்துறுசாலைதோறுமானையின்கூடந்தோறும்
மாத்துறுமாடந்தோறும்வாசியின்பந்திதோறும்
காத்துறுகடைகடோறுங்கருங்கடல்கடந்தகாலால்
பூத்தொறும்வாவிச்செல்லும்பொறிவரிவண்டிற்போனான்.

இ-ள். ஆதுறு — பசுக்கள் கட்டப்பட்டிருக்கிற, சாலைதோறும் — கொட்டங்களும், ஆனையின் கூடந்தோறும் - யானைகட்டியிருக்கிற கூடங்களும், மாதுறு — (சதுரங்கத்திற் பிரதானமான) பெருமையையுடைய தேர்களிருக்கிற, மாடந்தோறும் — வீடுகளும், வாசியின் — குதிரைகள் நிற்கிற, பந்திதோறும் — லாயங்களும், காத்து உறு — காவல்செய்துகொண்டிருக்கிற, கடைகள்தோறும் — கடைவாசல்களும், கருங்கடல் — கரியகடலை, கடந்த-தாண்டிவந்த, காலால் — கால்களாலே, பூதொறும் — புஷ்பங்களெல்லாம், அவாவி — விரும்பி, செல்லும் - செல்லுவதான, பொறி - புள்ளியம், வரி-பாட்டும் உடைய, வண்டில் - வண்டுபோல், சென்றான் - போனார்—எ-று. மா தேருக்காகு பெயர் அழகு பொருந்திய வீடெனவுமாம். 101

பெரியநாளொளிகொணாவிதமணிப்பித்திப்பத்தி
சொரியுமாநிழல்களாங்குச்சுற்றலாற்காலின்றோன்றல்
கரியனாய்வெளியனாகிச்செய்யனாய்க்காட்டுங்காண்டற்
கரியனாயெளியனாய்த்தன்னகத்துறையழகனேபோல்.

இ-ள். பெரிய — பெரிதான, நாள் ஒளிகொள் - நக்ஷத்திர ஒளியைக் கொண்டுள்ள, நானாவிதம் - பலவகைகளான, மணி - ரத்நங்களாலமைத்த, பித்திப்பத்தி — சுவர்வரிசைகள், சொரியும் - சொரிவதானவீசுகிற, மா-பெரிதாகிய, நிழல்கள் - சோதிகள், ஆங்கு - அங்கங்கும், சுற்றலால்-சூழுதலாலே, காலின்றோன்றல் - வாயுபுத்திரனை சிறிய திருவடி, கரியனாய்க் காட்டும் - ஓரிடத்திலே கறுப்பாகவுந்தோற்றுவார், வெளியனாகிக்காட்டும்-ஓரிடத்திலே வெளுப்பாகவுந்தோற்றுவார், செய்யனாய்க்காட்டும் - ஓரிடத்திலே சிவப்பாகவும் தோற்றுவார், காண்டற்கு அரியனாய் - பிரதிகூலர் காணுதற்கு அசக்கியனாய், எளியன் ஆய் - அனுகூலர் காணுதற்குச் சக்கியனுமாய், தன் அகத்து உறை - தன் உள்ளத்திலே இருக்கிற, அழகனே போல் - ராமனைப்போல் சிறியதிருவடி மூவகை நிறவடிவாகவும் சந்தடியுள்ள இடங்களிலே அரூபியாகவும் அதிலில்லாத இடங்களிலே ரூபமுள்ளவராகவும் தோன்றச் செல்லுகிறாரென்க—எ-று. 102

கானகமயில்களென்னக்களிமடவன்னமென்ன
ஆனனகமலப்போதுபொலிதரவரக்கர்மாதர்
தேனுகுசரளச்சோலைத்தெய்வநீராற்றிற்றெண்ணீர்
வானவர்மகளிராட்டமஞ்சனமாடுவாரை.

இ-ள். கானகம் — காட்டிலுள்ள, மயில்களென்ன — மயில்கள்போலவும், களிமட அன்னம் என்ன — காமமயக்கமு முக்தபருவமுமுள்ள அன்னம்

போலவும், ஆனனம் – முகமாகிய, கமலப்போது – தாமரைமலர், பொலி தர – விளங்குவதாக, அரக்கர்மாதர் – ராக்ஷதப்பெண்கள், தேன்உகு – தேன் சிந்துவதான, சாளம் – வரிசையுள்ள, சோலை – பூஞ்சோலையிலேவைத்து, தெய்வம் – தெய்வத்தன்மையுள்ள, நீராற்றில் – நீருள்ள ஆற்றினது, தெண்ணீர் – தெளிந்தநீரால், வானவர்மகளிர் – தெய்வப்பெண்கள், ஆட்ட – குளிப்பாட்ட, மஞ்சனம் ஆடுவாரை – முழுகுகிற பெண்களையும், தெய்வநீர் - தெய்வத்தன்மை, நீர் – தன்மை – எ-று. 103

ஈட்டுவார்தவமலான்மற்றீட்டினுலியைவதின்மை
காட்டினார்விதியாரஃதுகாண்கிற்பார்காண்மினம்மா
பூட்டுவார்முலைபொறாதபொய்யிடைநையப்பூநீர்
ஆட்டுவாரமரர்மாதராடுவாரரக்கர்மாதர்.

இ-ள். ஈட்டுவார் – தேடுகிறவர்கள், தவம் அல்லால் – தவத்தை அல்லது, மற்றுஈட்டினுல் – வேறொருதேட்டினாலே, இயைவது – வருவது அடைவது, இன்மை – ஒன்றுமில்லையென்பதை, காட்டினார் – தெரியச்செய்தார், விதியார் – பிரமதேவனானவர், அஃது – அப்படித் தவத்தாலடைந்திருக்கிற பயனை, காண்கிற்பார் – பார்க்கவேண்டினவர்கள், காண்மின் – பாருங்கள், பூட்டுவார் – கச்சணிந்திருக்கிற, முலை – தனங்களை, பொறாத – தாங்காத, பொய் – உருவமில்லாத, இடை – மத்தியம், நைய – வருந்த, பூநீர் – நன்னீரினாலே, அமரர்மாதர் – தெய்வகன்னிகள், ஆட்டுவார் – முழுகச்செய்கிறார்கள், அரக்கர்மாதர் – ராக்ஷதப்பெண்கள், ஆடுவார் – முழுகுகிறார்கள், காண்மின் எனவே தவத்தாலுயர்ந்த ராக்ஷதப்பெண்களுக்கு குலத்தாலுயர்ந்த தெய்வப்பெண்கள் பணிவிடை செய்கிறதினாலே தவமே பெரிதென்று கருத்து – எ-று. அப்படி முழுகுகிறவர்களையும் கண்டுபோகிறானென்க. 104

இலக்கணமரபிற்கேற்றவெழுவகைநரம்பினல்யாழ்
அலத்தகத்தளிர்க்கைநோவவளந்தெடுத்தமைந்தபாடல்
கலக்குறமுழங்கிற்றென்றுசேடியர்கன்னிமார்கள்
மலர்க்கையான்மாடத்தும்பர்மழையின்வாய்பொத்துவாரை.

இ-ள். இலக்கணமரபிற்கு – லக்ஷணக்ரமத்திற்கு, ஏற்ற – தக்கதான, எழுவகை – எழுவகையுள்ள, நரம்பின் – தந்திகளுடனே, நல் – நன்மைமிக்கிருப்பதான, யாழ் – வீணையிலே, அலத்தகம் – செம்பஞ்சுக்குழம்பு பூசின, தளிர் – மாந்தளிர்போன்ற, கை – கைவிரல்கள், நோவ – வருந்த, அளந்து – அளவுசெய்து, எடுத்து – கொண்டு, அமைந்த – அமைதலான, பாடல் - சுருதியானது, கலக்குற – தப்பிப்போக, முழங்கிற்றென்று – கதறிற்றென்று, சேடியர் – ஊழியக்காரிகளான, கன்னிமார்கள் – பெண்கள், மலர் – தங்கள் மலர்போன்ற, கையால் – கையினாலே, மாடத்து உம்பர் – மேலுபரிகையிலேறி, மழையின் – மேகத்தினது, வாய் – வாயை, பொத்துவாரை – மூடுகிறவர்களையுங்கண்டார், ராக்ஷதப்பெண்கள் வீணையின் தந்திகளைச் சுதி

கூட்டிக்கொண்டிருக்கச்செய்தே அப்போது மேகங்குமுற அந்த ஓசையினாலே சுருதிதவற அதற்கு அஞ்சி ஊழியகாரிகளான தெய்வப்பெண்கள் மேகத்தின் வாயை இனிக்கத்தாதேயென்று மூடுகிறார்களென்க—எ-று. 105

சந்தப்பூம்பந்தர்வேய்ந்ததமனியவரங்கிற்றத்தம்
சிந்தித்ததுதவுந்தெய்வமணிவிளக்கொளிருஞ்சேக்கை
வந்தொத்துந்துரிதமாக்கள்விளம்பிதநெறிவழாமை
கந்தர்ப்பமகளிராடுநாடகங்காண்கின்றாரை.

இ-ள். தத்தம் - அவரவர்கள், சிந்தித்தது – நினைத்தது, உதவும்-கொடுப்பதான, தெய்வம் – திவ்வியஸ்வரூபமுள்ள, மணி - சிந்தாமணியாகிய, விளக்கு – தீபமானது, ஒளிரும்—விளங்குகின்ற, சேக்கை – படுக்கைமேலிருந்துகொண்டு, சந்தம்-அழகான, பூம்பந்தர் —புஷ்பப்பந்தலால், வேய்ந்த-அலங்கிருதமான, தமனியம்—பொன்னாலாகிய, அரங்கில் - சேக்கை முன்னுள்ள நாடகசாலையில், வந்து—அடைவுடன்வந்து, ஒத்தும் – தாளங்களை ஒத்துகின்ற. துரிதம்—விரைவுள்ள, மாக்கள் – பாடகாது, விளம்பிதநெறி-தாளப்பிரமாணவகைகள், வழாமை—தப்பாமல், கந்தர்ப்பமகளிர் —காந்தருவப்பெண்கள், ஆடும் - ஆடுகின்ற, நாடகம்—ஆடல்களை, காண்கின்றாரை-பார்க்கிறவர்களையும்—எ-று. 106

திருத்தியபளிக்குவேதித்தெள்ளியவேல்களென்னக்
கருத்தியல்புரைக்குமுண்கட்கருங்கயல்செம்மைகாட்ட
வருத்தியகொழுநர்தம்பால்வரம்பின்றிவளர்ந்தகாம
வருத்தியபயிர்க்குநீர்போலருநறவருந்துவாரை.

இ-ள். பளிக்கு - பளிங்குக்கற்களாலே, திருத்திய—செய்திருக்கிற, வேதி — திண்ணைமேலிருந்து, தெள்ளிய — தெளிவுள்ளவடித்த, வேல்களென்ன—வேல்கள்போல், கருத்து—தங்கள்மனத்துள்ள, இயல்பு-குறியை, உரைக்கும்—காட்டுகின்ற, உண் —ரூபவிஷயத்தைக்கிரகிக்கிற, கண்-கண்களாகிய, கருங்கயல் - கருத்தகெண்டைகள், செம்மைகாட்ட — சிவந்துதோன்ற, வருத்திய - தங்களைவருந்தும்படி பண்ணின, கொழுநர்தம்பால்-நாயகரிடத்திலே, வரம்பு இன்றி - அளவில்லாமல், வளர்ந்த - வளர்தலான, காம அருத்திய - காமவிருப்பமாகிய, பயிர்க்கு - சஸ்யத்துக்கு, நீர்போல் - பாய்ச்சுகிற தண்ணீரைப்போல், அரு - அரியதான, நறவு-மதுவை, அருந்துவாரை - குடிக்கிறவர்களையும்—எ-று. 107

கோதறுங்குவளைநாட்டங்கொழுநர்கணாட்டங்கொள்ளத்
தூதுளங்கனியைவென்றதுவர்த்தவாய்வெண்மைதோன்ற
மாதருமைந்தர்தாமுமொருவர்மேலொருவர்வைத்த
காதலங்கள்ளுண்டார்போன்முறைமுறைகளிக்கின்றாரை.

இ-ள். கோதுஅறும் - குற்றமற்ற, குவளை - நீலோற்பலம்போன்ற, நாட்டம் - கண்கள், கொழுநர்கள் - புருஷர்களுடைய, நாட்டம் - கண்களை,

கொள்ள - கிரகிக்கவும், தூ தளங்கனியை-சிவந்தபழத்தை, வென்ற-செயிப்ப தான, துவர்த்த - சிவந்த, வாய் - வாயானது, வெண்மைதோன்ற-வெள்ளை நிறமாகவும், மாதரும் - பெண்களும், மைந்தரும் - புருஷர்களும், ஒருவர் மேல் — ஒருவரிடத்தில், ஒருவர்வைத்த — ஒருவர்கொண்ட, காதல் - ஆசை யாகிய, அம் — அழகுள்ள, கள் — மதுவை, உண்டார்போல்-புசித்தவர்களைப் போல், முறைமுறை — மாறிமாறி, களிக்கின்றாரை - கள்குடிக்கின்றவர்களை யும்—எ-று. மாறிமாறிப் போகிப்பதுபோல் மாறிமாறிக் கட்குடிக்கிறார்க ளென்க. 108

விற்படர்பவளப்பாதத்தலத்தகமெழுதிமேனி
பொற்பளவில்லாவாசப்புனைநறுங்கலவைபூசி
அற்புதவடிக்கண்வாளினஞ்சனமெழுதியந்தில்
கற்பகங்கொடுக்கவாங்கிக்கலன்றெரிந்தணிகின்றாரை.

இ-ள். வில்படர் — ஒளிபரவுவதான,பவளம்-பவளம்போன்ற,பாதத்து-கால்களிலே, அலத்தகம் – செம்பஞ்சுக்குழம்பு, எழுதி - பூசி, மேனி - உடம் பில், பொற்பு - அழகுற, அளவுஇல்லா – அளவுபடாத, வாசம்-பரிமளத்தை யுடைய, புனைநறும் — நன்மைசேர்ந்த, கலவை – கூட்டுவர்க்கச்சந்தனமும், பூசி — திமிர்ந்து, அற்புதம் - ஆச்சரியத்தைத்தருவதான, வடி - கூர்மை யுள்ளமாவடுப்போன்ற, கண் — கண்களாகிய, வாளின் - கத்திகளிலே, அஞ் சனம் எழுதி - மையிட்டு, அந்தில் - அவ்விடத்திநின்று, கற்பகம் - கற்பக விருக்ஷம், கொடுக்க - கொடுப்பதாக, வாங்கி - அதைக்கொண்டு, கலன்-ஆபரணவகைகளை, தெரிந்து - இடுமிடங்களில், அணிகின்றாரை - இடுகிற வர்களையும்—எ-று. 109

புலியடுமதுகைமைந்தர்புதுப்பிழைபுயிரைப்புக்கு
நலிவிடவமுதவாயானச்சுயிர்த்தயிற்கணல்லார்
மெலிவுடைமருங்குன்மின்னினலமரச்சிலம்புவிம்மி
ஒலிபடவுதைக்குந்தோறுமயிர்புளகுதிக்கின்றாரை.

இ-ள். புலி - புலிபோல், அடு - பகைவரைக்கொல்லுகின்ற, மதுகை-சமர்த்தரான, மைந்தர் - புருஷர்கள்செய்த, புதுப்பிழை - நூதனமான குற்றங்கள், உயிரை - தங்களுயிரை, புக்கு - உள்ளேசென்று, நலிவு இட-வருத்தஞ்செய்ய, அமுதம் - அமுதமுள்ள, வாயால் – வாயினாலே, நச்சு உயிர்த்து – நஞ்சைப்பெற்று கொடுஞ்சொற்கூறி, அயில் – வேல்போன்ற, கண் - கண்களையுடைய, நல்லார் - அப்பெண்கள், மெலிவு உடை — இளைப் பையுடைய, மருங்குல் – இடையானது, மின்னின் – மின்போல், அலமா-துவளுவதாக, சிலம்பு — சிலம்புகள், விம்மி — மிகுந்து, ஒலிபட – சத்திக்க, உதைக்குந்தோறும் – உதைக்கும்போதெல்லாம், மயிர்புளகு - மயிர் சிலிர்த் தல், உதிக்கின்றாரை – உடம்பிலே உண்டாகுகிறவர்களையும்—எ-று. 110

உள்ளுடைமயக்காலுண்கண்சிவந்துவாய்வெண்மையூறித்
துள்ளிடைப்புருவங்கோட்டித்துடிப்பவேர்பொடிப்பத்தூய
வெள்ளிடைமருங்குலார்தம்மதிமுகம்வேறொன்றாகிக்
கள்ளிடைத்தோன்றநோக்கிக்கணவரைக்கவல்கின்றாரை.

இ-ள். உள்ளுடை – உள்ளே உடையதான, மயக்கால் – மயக்கத்தினாலே, உண் – ரூப விஷயத்தைக்கொள்ளுகின்ற, கண்சிவந்து – கண்கள் சிவப்பாய், வாய் – வாயிலே, வெண்மை ஊறி – வெண்ணிறந் தோன்றுதலாகி, துள் – துடிப்பதான, இடை – நடு இடத்தையுடைய, புருவம் – புருவங்களையும், கோட்டி – வளைத்து, துடிப்ப – பதறுதலாக, வேர் – வேர்வை, பொடிப்ப – பொடிப்பொடியாயரும்ப, தூய – பரிசுத்தமுள்ள, வெள்ளிடை – வெறுநிலமான வெள்ளைவஸ்திரமுடுத்தின இடமான, மருங்குலார்தம் – இடைப்பக்கத்தையுடைய பெண்கள், மதி – தமது சந்திரன்போன்ற, முகம் – முகமானது, வேறொன்றாகி – வேறொருவகையாய், கள்ளிடை – கள்ளிலே, தோன்ற – குடிக்கும்போது தெரிய, நோக்கி – பார்த்து, கணவரை – புருஷர்களை, கவல்கின்றாரை – நொந்துகொள்கிறவர்களையும்—எ-று. தூயவெள்ளை வஸ்திரமுள்ள இடைமருங்கு இடைப்பக்கம் வெற்றிலை வெள்ளிலை என்றாற்போல் வெறு அரை அதாவது உருவமில்லாதிருத்தல் வஸ்திரமில்லாதிருத்தல் என்க. 111

ஆலையின்மலையின்சாரன்முழைமுயினிலமுதவாரிச்
சோலையிற்றுவசரில்லிற்சோனகர்மனையிற்றூய
வேலையிற்கொளவொணாதவேற்கணார்குமுதச்செவ்வாய்
வாலெயிற்றூறுதீந்தேன்மாந்தினர்மயங்குவாரை.

இ-ள். ஆலையின் – கரும்பாலையிலும், மலையின்சாரல் – மலைப்பக்கங்களிலும், முழையினில் – குகைகளிலும், அமுதவாரி – அமுதமூறுகிற, சோலையில் – தோப்புகளிலும், துவசர் இல்லில்-சாணார் வீடுகளிலும், சோனகர்மனையில் – மிலேச்சர் வீடுகளிலும், தூய – பரிசுத்தமான, வேலையில்-கடலிலும், கொள – பெற, ஒண்ணாத – கிடையாத, வேல் – வேல்போன்ற, கண்ணார் – கண்களையுடைய பெண்களது, குமுதம் – செவ்வல்லி மலர்போன்ற, செவ்வாய் – சிவந்தவாயிலும், வால் – வெண்மையுள்ள, எயிற்று – பல்லிலும், ஊறு – சுரக்கப்படுகிற, தீந்தேன் – இனிப்பானதேனை, மாந்தினர் – குடித்தவர்களாய், மயங்குவாரை – மயங்குகிறவர்களையும்—எ-று. 112

நலனுறுகணவர்தம்மைநவையுறப்பிரிந்துநல்கு
முலையுறுகலவைதீயமுள்ளிலாமுளரிச்செங்கேழ்
மலர்மிசைமலர்பூத்தென்னமலர்க்கையால்வதனந்தாங்கி
உலவருமுயிரினோடுநெடிதிருந்துயிர்க்கின்றாரை.

இ-ள். நலன் உறு – அழகால்மிகுத்த, கணவர்தம்மை – புருஷர்களை, நவை உற – தோஷம் அதிகமாக, பிரிந்து – பிரிதலாய், நல்கும் – முன்னே

பூசியிருக்கிற, முலை உறு — தனங்களிலே பொருந்தின, கலவை — கலவைச் சந்தனம், தீய — உலர்ந்து உதிரவும், முள் இலா — முட்களில்லாத, முளரி- தாமரைமலர்போலும், செங்கேழ் — சிவந்த நிறமுள்ள, மலர்மிசை-பூமேலே, மலர் — மற்றொரு பூவானது, பூத்தென்ன — புஷ்பித்தாற்போல், மலர்-மலர் போன்ற, கையால் — ஒருகையாலே, வதனம் — முகத்தை, தாங்கி — சுமந்து கொண்டு, உலவு — உலாவுகின்ற, அறும் — நிறுத்தற்கரிதான, உயிரினோடும்- உயிருடனே, இருந்து — நெடும்போதிருந்து, நெடிது — நீளமாக, உயிர்க்கின்றாரை — சுவாசம் விடுகிறவர்களையும்—எ-று. 113

ஏதியங்கொழுநர்தம்பாலெய்தியசலத்தர்வைகும்
தாதியங்கமளிச்சேக்கையுயிரிலாவுடலிற்சார்வார்
மாதுயர்க்காதறாண்டவழியின்மேல்வைத்தகண்ணார்
தூதியர்முறுவறோன்றவுயிர்வந்துதுடிக்கின்றாரை.

இ-ள். ஏதி — ஆயுதங்களைக்கொண்ட, அம் — அழகுள்ள, கொழுநர்தம்பால் — நாயகரிடத்தில், எய்திய — உண்டான, சலத்தர் — கோபமுள்ளவர்கள், வைகும் — தங்குகின்ற, தாது — பராகங்கள், இயங்கு — உதிர்வதான. அமளிச் சேக்கை — படுக்கையாகிய மெத்தையிலே, உயிர் இலா — பிராணனில்லாத, உடலில் — உடல்போல், சார்வார் — சாய்ந்துவிழுவார்கள், மாதுயர் — பெரிய துன்பத்தைத்தருகிற, காதல் — ஆசையானது, தூண்ட — நினைவை உண்டாக்க அதனாலே, வழியின்மேல் — நாயகன்வருந் திசைமேலே, வைத்த- செலுத்தின, கண்ணார் — கண்களையுடைய பெண்களானவர்கள், தூதியர்- அழைக்கப்போன பெண்களுடைய, முறுவல் — சிரிப்பு, தோன்ற — தெரிவதாக, உயிர்வந்து — தங்களுக்குப் பிராணனுண்டாக, துடிக்கின்றாரை — துடிக்கிறவர்களையும்—எ-று. 114

சங்கொடுசிலம்புநூலும்பாதசாலகமுந்தாழப்
பொங்குபன்முரசமார்ப்பவில்லுறைதெய்வம்பேணிக்
கொங்கலர்கூந்தற்செவ்வாயரம்பையர்பாணிகொட்டி
மங்கலகீதம்பாடமறிப்பலிவகுக்கின்றாரை.

இ-ள். சங்கொடு — வளையலுடனே, சிலம்பும் — சிலம்புகளும், நூலும்- துவளுதலையுடைய அசைகிற, பாதசாலகமும் — பாதசரமும், தாழ ஓசை- தாழ்வனவாக, பொங்கு — சத்திக்கின்ற, பல்முரசம் — பலவாத்தியங்களும், ஆர்ப்ப — சத்திக்க, இல் உறை — தங்கள் வீட்டுக்குரியதாயிருக்கிற, தெய்வம்- தெய்வத்தை, பேணி — பூசித்து, கொங்கு — வாசனை, அலர் — விரிகின்ற, கூந்தல் — கூந்தலையும், செவ்வாய் — சிவந்த வாயையுமுடைய, அரம்பையர்- தெய்வப்பெண்கள், பாணிகொட்டி — கைகளைத்தட்டி, மங்கல கீதம் — சுபமானபாட்டுகள், பாட — பாடுதல்செய்ய, மறி — ஆடு, பலி — பூசையாக, வகுக்கின்றாரை — வெட்டுகிறவர்களையும்—எ-று. 115

இழைதொடர்வில்லும்வாளுமிருளொடுமலையயாணர்க்
குழைதொடர்நயனக்கூர்வேல்குமரர்நெஞ்சுருவக்கோட்டி
முழைதொடர்சங்கம்பேரிமுகிலெனமுழங்கமூரி
மழைதொடர்மஞ்ஞையென்னவிழாவொடுவருகின்றாரை.

இ-ள். இழை — ஆபரணங்களிலிருந்து, தொடர் — வருவனவாகிய, வில்லும் — விற்போலொளியும், வாளும் — வாள்போலொளியும், இருளொடு-அன்றிருளுடனே, மலைய — பொருதுதல்செய்ய, யாணர் — அழகிதான, குழை — காதுடனே பொருத, தொடர் — செல்லுவனவாகிய, நயனம்-கண்களான, கூர்வேல் - கூரியவேல்கள், குமரர் — யௌவன புருஷர்களுடைய, நெஞ்சு — மார்புமுழுதும், உருவ — தொளைத்துச்செல்ல, கோட்டி — சார்த்தி, முழை — ஊதுந்தொளையை, தொடர் — பொருந்திய, சங்கம் — சங்குகளும், பேரி — டம்மானமும், முகிலென — மேகம்போல், முழங்க — குமுற, மூரி-பெரிய, மழை — மேகத்தை, தொடர் — பற்றிவருகிற, மஞ்ஞையென்ன-மயில்போல், விழாவொடு — உற்சவத்துடனே, வருகின்றாரை — வருகிறவர்களையும் — எ-று. குழை குண்டலமணிந்த காதென்க. 116

பள்ளியின் மைந்தரோடுமூடியபண்புநீங்கி
ஒள்ளியகலவிப்பூசலுடற்றுதற்குருத்தநெஞ்சர்
மெள்ளவேயிமையைநீக்கியஞ்சனவிழுதுவேய்ந்த
கள்ளவாணெடுங்கணென்னும்வாளுறைகழிக்கின்றாரை.

இ-ள். பள்ளியின் — படுக்கையிலே, மைந்தரோடும் — புருஷர்களுடனே, ஊடியபண்பு — பிணங்கினகுணத்தை, நீங்கி — விட்டு, ஒள்ளிய — அறிவுக்கிசைந்த, கலவிப்பூசல் — போகச்சண்டையை, உடற்றுதற்கு — செய்கிறதற்கு, உருத்த — கோபித்த, நெஞ்சர் — மனத்தையுடைய பெண்கள், மெள்ள-மெதுவாக, இமையை — மேலிமையை, நீக்கி — திறந்து, அஞ்சன இழுது-மைக்குழம்பு, வேய்ந்த — பூசின, கள்ளம் — திருட்டுத்தனமுள்ள, வாள்-வாள்போன்ற, நெடு — நீண்ட, கண்ணென்னும் — கண்களென்கிற, வாள் — வாள்கலை, உறை — இமையாகிய உரையிலிருந்து, கழிக்கின்றாரை — உருவுகின்றவர்களையும் — எ-று. 117

ஓவியமனையமாதரூடினருணர்வோடுள்ளம்
மேவியகரணமற்றுங்கொழுநரோடொழியயாணர்த்
தூவியம்பெடையென்னமின்னெனத்துவளவேகி
ஆவியுந்தாமுமேசென்றருங்கதவடைக்கின்றாரை.

இ-ள். ஓவியம் — சித்திரத்தை, அனைய — ஒப்பான, மாதர் — பெண்கள், ஊடினர் — பிணங்கினவர்களாய், உணர்வோடு — பிணங்கின மனத்துடனே, உள்ளம் — உள்ளத்துடன், மேவிய — கூடின. கரணமற்றும் — மற்றுமுள்ள கரணங்களும், கொழுநரோடு — புருஷருடனே, ஒழிய — செல்ல, யாணர்-அழகுள்ள, தூவி — இறகுபொருந்தின, அம் - அழகொடுகூடிய, பெடையென்ன-

பெட்டை அன்னம்போல், மின்னென — மின்னலைப்போல், துவள-உடம்பு தள்ளாட, ஏகி — நடந்து, ஆவியும் — உயிரும், தாமுமே — தாங்களுமாகவே, சென்று — போய், அரும் — அரிதான், கதவு — கதவை, அடைக்கின்றாரை-மூடுகிறவர்களையும்—எ-று. 118

இன்னரமிதுனம்பாடவெண்மழைகிழித்துத்தோன்று
மின்னெனத்தாளம்வேய்ந்தவெண்ணிறவிமானமூர்ந்து
பன்னகமகளிர்சுற்றிப்பலாண்டிசைபரவப்பண்ணைப்
பொன்னகர்வீதிதோறும்புதுமனைபுகுகின்றாரை.

இ-ள். கின்னர மிதுனம் — இரட்டைக்கின்னரி, பாட — வாசிக்க, வெண்மழை — வெள்ளைமேகத்தை, கிழித்து — பிளந்துகொண்டு, தோன்றும் விளங்குகின்ற, மின்னென — மின்னல்போல, தாளம் — முத்துகளால், வேய்ந்த — அலங்கிருதமான, வெண்நிறம் — வெள்ளைநிறத்தையுடைய, விமானம் — பல்லக்கை, ஊர்ந்து — செலுத்திக்கொண்டு, பன்னக மகளிர் — நாக கன்னிகள், சுற்றி — சூழ்ந்து, பல்லாண்டு — மங்களமான, இசை — பாட்டை, பரவ — மிருத்துப்பாட, பண்ணை-பெண்கள் கூட்டத்துடனே, பொன்னகர்-அந்த அழகான பட்டணத்து, வீதிதோறும் — வீதிகளெல்லாம், புதுமனை-புதுவீட்டுக்குள், புகுகின்றாரை — போகிறவர்களையும், இது கலியாணம்பண்ணுதபெண்ணை கலியாணம்பண்ணக்கூட்டிப்போதல்—எ-று. 119

கோவையுங்குழையுமின்னக்கொண்டலின்முரசமார்ப்பத்
தேவர்வந்தாசிகூறமுனிவர்சோபனங்கள்செப்பப்
பாவையர்குழாங்கள்சூழப்பாட்டொடுவானநாட்டுப்
பூவையர்பலாண்டுகூறப்புதுமணம்புணர்கின்றாரை.

இ-ள். கோவையும் — கழுத்தின்மாலைகளும், குழையும் — குண்டலங்களும், மின்ன — பிரகாசிக்கவும், கொண்டலின் — மேகத்தைப்போல், முரசம் — பேரிகை, ஆர்ப்ப — ஒலிக்கவும், தேவர் - தேவர்கள், வந்து - கூடவந்து, ஆசிகூற — ஆசீர்வதிக்கவும், முனிவர் — ரிஷிகள், சோபனங்கள்செப்ப — மங்களங்கள் சொல்லவும், பாவையர் குழாங்கள் — பெண்களுடைய கூட்டங்கள், சூழ — சூழ்ந்துவரவும், பாட்டொடு — பாட்டுடனே, வானநாட்டுப் பூவையர்-தெய்வலோகத்துப்பெண்கள், பலாண்டுகூற — மங்களங்கள்சொல்லவும், புதுமணம் — புதிதான கலியாணமாக, புணர்கின்றாரை — சேர்கிறவர்களையும்.

இயக்கியரரக்கிமார்களுகியரெஞ்சில்விஞ்சை
முயற்கறைமலராத்திங்கண்முகத்தியர்முதலினோரை
மயக்கறநாடியேகுமாருதிமலையின்வைகும்
கயக்கமிறுயிற்சிக்கும்பகருணனைக்கண்ணிற்கண்டான்.

இ-ள். இயக்கியர் — யக்ஷகன்னிகள், அரக்கிமார்கள் — ராக்ஷதப் பெண்கள், நாகியர் — நாககன்னிகள், எஞ்சு இல் — யாதொரு குறைவுமில்லாத,

விஞ்சை — வித்தியாதர கன்னிகளான, முயல் கறை — முயலாகிய களங்கம், மலரா — தோன்றாத, திங்கள் — சந்திரன்போன்ற, முகத்தியர் — முகத்தை யுடையவர்கள், முதலினோரை — முதலானவர்களையும், மயக்கு அற — சந் தேகம்தீர, நாடி — தேடி ஆராய்ந்து, ஏகும் மாருதி — போகிற திருவடியான வர், மலையின் — ஒரு மலைபோல், வைகும் — தங்குவதான, கயக்கம் இல்- அசைதலில்லாத, துயற்சி — துக்கத்தையுடைய, கும்பகருணனை — கண்ணில் கண்டான் — தம்முடைய கண்களாலே பார்த்தார், கயம் — கம், இல் — குளத்து நீர்போல், ஓரிடத்தொடுங்கி அசையாதிருந்து தூங்குகிற எனவுமாம்—எ-று.

வேறு

ஓசனையேழகன்றுயர்ந்தவும்பரின்
வாசவன்மணிமுடிகவித்தமண்டபம்
ஏசறவிளங்கியதிருளையெண்வகை
ஆசையினிலைகெடவலைக்கலான்றது.

இ-ள். ஓசனையேழ் — எழுயோசனை, அகன்று — விசாலமுள்ளதாய், உயர்ந்த — அவ்வளவே உயர்ந்துள்ள, உம்பரின் — மேலுலகத்திலே, வாசவன் இந்திரன், மணிமுடி — ரத்நகிரீடம், கவித்த — சூடிக்கொண்ட, மண்டபம்- மண்டபம்போல், ஏசு அற — குற்றந்தீர, விளங்கியது — விளக்கத்தக்கது, எண்வகை — எட்டுவகையான, ஆசையின் — திக்குகளிலும், நிலைகெட — நிலை யில்லாமற்போக, இருளை — இருட்டை, அலைக்கல் — ஓட்டுதலுக்கு, ஆன்றது- அகன்றுள்ளது கும்பகருணன் தூங்குமண்டபம்—எ-று. 122

அன்னதனடுவணோரமளிமீமிசைப்
பன்னகவரசெனப்பரவைதானெனத்
துன்னிருளொருவழித்தொக்கதாமென
உன்னருந்தீவினையுருக்கொண்டென்னவே.

இ-ள். அன்னதன் — அப்படிப்பட்ட மண்டபத்தில், நடுவண் — நடுவே, ஓர் — ஒரு, அமளி மீமிசை — மெத்தையின்மேலே, பன்னக அரசென — நீளத் தால் சர்ப்பராஜன்போலவும், பரவைதானென — அகலத்தால் கடல்போல வும், துன் — நெருங்கின, இருள் — நிறத்தால் இருளெல்லாம், ஒருவழி- ஓரிடத்திலே, தொக்கது என — சேர்ந்திருக்கின்றன என்னவும், உன்னரும்- நினைத்தற்கரிதான, தீவினை — பாபமெல்லாம், உருக்கொண்டென்ன- தோற்றத்தால் வடிவுகொண்டாற்போலவும்—எ-று. 123

முன்னியகனைகடன்முழுகிமூவகைத்
தன்னியல்கதியொடுதழுவித்தாதுகு
மன்னெடுங்கற்பகவனத்துள்வைகிய
இன்னிளந்தென்றல்வந்திழுகியேகவே.

இ-ள். முன்னிய — தான் கருதின, கலை — சத்தியாமின்ற, கடல் — கடலிலேபோய், முழுகி — தோய்ந்து, மூவகை — மூன்றுவகையாக, தன்-தனக்கு, இயல் — பொருந்திய, கதியொடு — வேகத்துடனே, தழுவி — கூடி, தாது — பராகங்கள், உகு — சிந்துகின்ற, மன் — நிலையான, நெடு — நீண்ட, கற்பகவனத்துள் — கற்பகச்சோலையிலே, வைகிய — தங்கிய, இன் — இனிதான, இளந்தென்றல்வந்து — இளமையாகிய தென்றற்காற்றுவந்து, இழுகி-உரசி, ஏக — போகவும்—எ-று. மந்தகதி தீவிரகதி அதிதீவிரகதி — 3 124

வானவர்மகளிர்கால்வருடமாமதி
ஆநனங்கண்டமண்டபத்துளாய்கதிர்க்
கானகுகாந்தமீக்கான்றகாமர்நீர்
தூநிறநறுந்தளிமுகத்திற்றோற்றவே.

இ-ள். வானவர் மகளிர் — தெய்வப் பெண்கள், கால்வருட — கால்பிடிக்கவும், மாமதி — பூரணச்சந்திரன்போன்ற, ஆனனம் — அப்பெண்கள் முகங்களை, கண்ட — பார்த்த, மண்டபத்துள் — மண்டபத்துக்குள்ளே, ஆய்-ஆராய்ந்தமைத்த, கதிர்க்கால் — ஒளியையுடைய தூணுகை, நகு — விளங்குகின்ற, காந்தம் — சந்திரகாந்தக்கற்கள், மீ — மேலிருந்து, கான்ற — ஒழுகுகின்ற, காமர் — அழகிதான, நீர் — ஜலத்தினது, தூ — பரிசுத்தமான, நிறம்-நிறத்தையுடைய, நறுந்தளி — நல்லதுளிகள், முகத்தில் — அவன் முகத்திலே, தோற்ற — தெறிக்கவும்—எ-று. 125

மூசியவுயிர்ப்பெனுமுடுகுவாதமும்
வாசலின்புறத்திடைநிறுவிவன்மையான்
நாசியினளவையினடத்தக்கண்டவன்
கூசினன்குதித்தனன்விதிர்த்தகையினன்.

இ-ள். மூசிய — நெருங்கின, உயிர்ப்பெனும் — சுவாசமென்கிற, முடுகு-விரைவான, வாதமும் — காற்றும், வாசலின் — அந்தமண்டபத்துவாசலுக்கு, புறத்திடை — வெளிப்புறத்திலே திருவடியை, நிறுவி — நிறுத்தி, வன்மையான் — மகாபலாட்டியனுன கும்பகருணனது, நாசியின் — மூக்கின், அளவையின் — அளவும், நடத்த — இழுத்துக்கொண்டுபோக, கண்டவன் — பார்த்துணர்ந்த திருவடி, கூசினன் — அவன்மூக்கிலே புகுதக் கூசினவராய், குதித்தனன் — விலகிக் குதித்தார், விதிர்த்த — நடுங்கின, கையினன் — கையையுடையவர்—எ-று. 126

பூழியின்றொகைவிசும்பணவப்போய்ப்புகும்
கேழில்வெங்கிளர்கிடையுயிர்ப்புக்கேடிலா
வாழியவுலகெலாந்துடைக்குமாருதம்
ஊழியின்வரவுபார்த்துழல்வதொத்ததே.

இ-ள். பூழியின்றொகை — தூசிக்கூட்டம், விசும்பு — ஆகாயத்தை, அணவ — கிட்ட, போய் — சென்று, புகும் — திரும்ப வந்து நுழைகிற, கேழ்

இல் — ஒப்பில்லாத, வெம் — வெம்மை, கிளர் — விளங்குகின்ற, கிடை உயிர்ப்பு — அவனது படுக்கையிலுண்டான சுவாசமானது, கேடு இலா — கெடுதலில்லாமல், வாழிய — வாழ்வையுடைய, உலகெலாம் — உலகமுழுவதும், துடைக்கும் — அழிப்பதான, மாருதம் — பிரசண்டவாயு, ஊழியின் — ஊழிகாலத்து, வரவு — வரவை, பார்த்து — பார்த்துக்கொண்டு, உழல்வது - ஓரிடத்திலே சஞ்சரித்தலை, ஒத்தது — ஒப்பாயிருக்கிறது—எ-று. வாசலிலுள்ள தூளியைவாரிக்கொண்டு மேலேபோய்த் திரும்பி மூக்கிலே புகுகிற சுவாசம்.

பகையெனமதியினைப்பகுத்துப்பாடுற
வகையில்பேழ்வாய்மடுத்தருந்துவானெனப்
புகையொடுமுழங்குபேருயிர்ப்புப்பொங்கிய
நகையிலாமுழுமுகத்தெயிறுநாறவே.

இ-ள். பகையென — தனக்கு விரோதமென்று, மதியினை — சந்திரனை, பகுத்து — இரண்டுபங்காக்கி, பாடுஉற — தனதிரண்டு வாய்ப்புறத்தும்பொருந்த, வகையில் — ஒருபடிப்பட்டிராத, பேழ்வாய் - அகன்றவாயிலே, மடுத்து - சேர்த்து, அருந்துவானெனன - புசிக்கிறானென்று தோற்ற, புகையொடு - புகையுடனே, முழங்கு — ஒலிப்பதான, பேருயிர்ப்பு — பெருமூச்சு, பொங்கிய — மிகுந்துவருகிற, நகையிலா - ஒளியில்லாமல், முழுமுகத்து — முழுதும் இருண்டிருக்கிற முகத்திலே, எயிறு - வக்கிரதந்தங்கள், நாற — தோன்றவும்.

தடைபுகுமந்திரந்தகைந்தநாகம்போல்
இடைபுகலரியதோருறக்கமெய்தினன்
கடையுகமுடிவெனுங்காலம்பார்த்தயல்
புடைபெயராநெடுங்கடலும்போலவே.

இ-ள். தடைபுகு — தடைசெய்வதான, மந்திரம் — மந்திரத்தினாலே, தகைந்த — கட்டுப்பட்ட, நாகம்போல் - பாம்புபோல், இடை — நடுவே, புகல் அரியது — விழித்து வருதலில்லாததான, ஓர் — ஒப்பில்லாத, உறக்கம் — நித்திரையை, எய்தினன் — அடைந்தான், கடையுகம் — கலியுகத்தினது, முடிவெனும் - முடிவென்பதான, காலம்பார்த்து - காலங்கருதி, அயல் - வேறொரு, புடை - பக்கத்தே, பெயரா — வராத, நெடுங்கடலும் — நீண்டகடலையும், போல — ஒப்பாகவும்—எ-று. 129

வேறு

ஆவதாகியதன்மையவரக்கனையரக்கர்
கோவெனுநின்றகுணமிலியிவனெனக்கொண்டான்
காவலுட்டங்கள்பொறியுகக்கனலெனக்கனன்றான்
ஏவனோவிவன்மூவரினொருவனோவீட்டான்.

இ-ள். ஆவது — அப்படிச்சொல்வது, ஆகிய — சரியாயிருக்கிற, தன்மைய — குணத்தையுடைய, அரக்கனை — ராக்ஷதனை, அரக்கர் - ராக்ஷதர்

களுக்கு, கோ — அரசன், எனுகின்ற — என்றுசொல்லப்படுகிற, குணம்இலி-குணங்கெட்டவனான ராவணன், இவனென - இவனேயென்று, கொண்டான் - நினைத்தார், கா — என்னைக் காத்தலிலே, வல் — வலியனவான, நாட்டங்கள் — கண்களிலே, பொறி — தீப்பொறி, உக - சிந்த, கனலென — நெருப்பைப்போல், கனன்றான் — கோபங்கொண்டார், ஏவனோ இவன் — இவன் எவனோ, மூவரின் — ராவணன் கும்பகருணன் விபீடணன் ஆகிய மூவரிலே, ஒருவன் - ஒருத்தன், ஆம் - என்று சொல்லலான, ஈட்டான் - பெருமையையுடையவன் எவனோ—எ-று. காவல் காத்தலையுடைய இமையோடு கூடிய கண்கள் எனவுமாம். கவி தம்மைக் காப்பது கருதிச் சொன்னதாக என்னைக்காத்தலென்று பிரதிபதம் கொள்க. 130

குறுகிநோக்கிமற்றவன்றலையொருபதுங்குறித்த
இறுகுதிண்புயமிருபதிங்கிவனிலனென்று
மறுகியேறியமுனிவெனும்வடவைவெங்கனலை
அறிவெனும்பெரும்பரவையம்புனலினலவித்தான்.

இ-ள். குறுகி - கிட்டப்போய், நோக்கி — பார்த்து, மற்று இவன் — இப்படிக்கிடக்கிற இவனுக்கு, தலைஒருபதும் - ஒரு பத்துத்தலைகளும், குறித்த-அத்தலைகளுக்குச் சரியாகச் சொல்லுகின்ற, இறுகு - கடினமான, திண்-பலம்பொருந்திய, புயம் — தோள்கள், இருபது - இருபதும், இங்கு இவன்-இங்கே கிடக்கிற இவன், இலன் என்று — இல்லாதிருக்கிறானென்று, மறுகி - மயங்கி, ஏறிய — உயர்தலான, முனிவெனும் — கோபமென்கிற, வடவைவெங்கனலை - வெப்பமுள்ள வடவாக்கினியை, அறிவெனும் - தமது அறிவென்கிற, பெரு — பெரிதான, பரவை - கடலினது, புனலினால்-நீராலே, அவித்தான் — தணித்தார்—எ-று. அம் - சாரியை. 131

அவித்துநின்றெவனாயினுமாகவென்றங்கை
கவித்துநீங்கிடச்சிலபகலென்பதுகருதாச்
செவிக்குத்தேனெனவிராகவன்புகழினைத்திருத்தும்
கவிக்குநாயகனனையவனுறையுளைக்கடந்தான்.

இ-ள். அவித்துநின்று — கோபத்தையடக்கிநின்று, எவன் ஆயினும்-யாரானாலும், ஆக என்று - இருக்க என்று, அங்கை — தமது அழகிய கையை, கவித்து - அமைத்து, நீங்கிட — இவன் தொலைய, சிலபகல் - இன்னஞ் சில நாளே, என்பது — என்கிறதை, கருதா - நினைத்து, செவிக்கு — எல்லார் காதுக்கும், தேனென - தேன்போல், இராகவன் - ஸ்ரீராமனுடைய, புகழினை - கீர்த்தியை, திருத்தும் — பிரபலிக்கச்செய்கிற, கவிக்கு நாயகன்-வானரசிரேஷ்டரான திருவடி, அனையவன் — அந்தக் கும்பகருணனுடைய, உறையுளை - படைவீட்டை, கடந்தான் — கடந்துசென்றார்—எ-று. 132

மாடகூடங்கண்மாளிகைகோளிகைமகளிர்
ஆடரங்குகளம்பலந்தேவராலயங்கள்

பாடல்வேதிகைபட்டிமண்டபமுதற்பலவும்
நாடியேகினனிராகவன்புகழெனுநலத்தான்.

இ-ள். மாடகூடங்கள் - வீடுகள் கூடங்கள், மாளிகை - பெரிய வீடுகள்வுள்ள, ஒளிகை - நீண்டவரிசைகளும், மகளிர் — பெண்கள், ஆடு — நடனஞ்செய்கிற, அறங்குகள், நாடகசாலைகளும், அம்பலம் - பொதுச்சாவடிகளும், தேவர் ஆலயங்கள் - தேவர்வீடுகளும், பாடல் - பாடுதலையுடைய, வேதிகை - திண்ணைகளும், பட்டிமண்டபம் - பெரிய மண்டபங்களும், முதல் — முதலான, பலவும் - பல இடங்களும், நாடி - தேடிக்கொண்டு, ஏகினன் — சென்றார், இராகவன் - ஸ்ரீராமனுடைய, புகழெனும் - கீர்த்தியே என்கிற, நலத்தான் - நன்மையைவேண்டுகிறவர் — எ-று. 133

மணிகொள்வாயிலுட்சாளரத்தாள்களின்மலரில்
கணிகொளுளத்திற்காலினும்புகையினுங்கலக்கும்
நுணுகும்வீங்குமற்றவனிலையாவரேநுவல்வார்
அணுவின்மேருவினாழியானெனச்செலுமநுமன்.

இ-ள். மணிகொள் - அழகுகொண்ட, வாயிலுள் - வாயிலுக்குள்ளும், சாளரம் — சன்னலினது, தாள்களில் — கம்பிகளுக்குள்ளும், மலரில் - புஷ்பத்திலே, கண்ணிகொள் - மாலையாகக்கொண்ட, ளத்தில் - காயாம்புகளிலும், காலினும் — காற்றாகவும், புகையினும் - புகையுருவாகவும், கலக்கும் — சென்றுதேடுவார், நுணுகும் - ஒவ்வோரிடங்களில் அதிசூட்சும ரூபங்கொள்வார், வீங்கும் - ஒவ்வோரிடங்களில் பெரிய வுருவங்கொள்ளுவார், மற்றவனிலை - அந்த அனுமாருடைய செல்கையின் வகையை, யாவரே நுகல்வார் - தெரிந்து சொல்லுவோர்கள்யார், அணுவின் - அணுவைப்போலவும், மேருவின் — மேருவைப்போலவும், ஆழியானென - சக்கரத்தையுடைய திருமால்போல், செலும் - செல்லுகிறார், அனுமன் - திருவடி—எ-று. வாயில் — இல்வாய், முன்றில் — இல்முன். 134

ஏந்தலிவ்வகையெவ்வழிமருங்கினுமெய்திக்
காந்தண்மெல்விரன்மடந்தையர்யாரையுங்காண்பான்
வேந்தர்வேதியர்மேலுளோர்கீழுளோர்விரும்பப்
போந்தபுண்ணியன்கண்ணகன்கோயிலுட்புக்கான்.

இ-ள். ஏந்தல் - பெருமையையுடைய திருவடி, இவ்வகை - இப்படி, எவ்வழி — எப்படிப்பட்ட, மருங்கினும் - இடங்களிலும், எய்தி - போய், காந்தள் - காந்தள் மலர்போலும், மெல்விரல் - மென்மையான விரல்களையுடைய, மடந்தையர் — பெண்கள், யாரையும் — எல்லாரையும், காண்பான் - காணுதற்கு, வேந்தர் - அரசர்களும், வேதியர் - பிராமணர்களும், மேலுளோர் — மேலுலகத்தாரும், கீழுளோர் — கீழுலகத்தாரும், விரும்ப — வேண்டும்படி, போந்த - பிறந்திருக்கிற, புண்ணியன் - பரிசுத்தனான விபீடணனு

டைய, கண் அகன் – இடம் அகன்ற, கோயிலுள் – வீட்டுக்குள்ளே, புக்கான்-போயினார்—எ-று. 135

பளிக்குவேதிகைப்பவளத்தின்கூடத்திற்பசுந்தேன்
துளிக்குங்கற்பகப்பந்தரிற்கருநிறத்தோரை
வெளித்துவைகுவதரிதெனவவருருமேவி
ஒளித்துவாழ்கின்றதருமமன்னான்றனையுற்றான்.

இ-ள். பளிக்கு – பளிங்குக்கல்லாற்செய்த, வேதிகை – திண்ணையிலும், பவளத்தின் – பவளக்கால்கள் நிறுத்தின, கூடத்தில் – பட்டகசாலையிலும், பசுந்தேன் – பசியதேனை, துளிக்கும் – சிந்துகின்ற, கற்பகப்பந்தரில் – கற்பகப் பூம்பந்தலிலும் உள்ள, கருநிறத்தோரை – கரிய நிறத்தையுடைய அரக்கர்களில், வெளித்து – வெளியாக வெள்ளை நிறங்கொண்டு, வைகுவது – இருக்கிறது, அரிதென – அருமையென்று, அவர்-அவ்வரக்கருடைய, உரு-வடிவை, மேவி – கொண்டு, ஒளித்து – மறைந்து, வாழ்கின்ற – இருக்கிற, தருமம் – தருமத்தை, அன்னான்றன்னை – ஒத்த விபீடணனை, உற்றான்-போய்க்கண்டார்—எ-று. கருநிறத்தோரை ஒளித்தெனக் கூட்டி கருநிறத்தோருக்குப் பயந்து மறைந்துவைகிய தருமம் எனக்கொள்க. 136

உற்றுநின்றவனுணர்வைத்தன்னுணர்வினாலுணர்ந்தான்
குற்றமில்லதோர்குணமுளனிவனெனக்கொண்டான்
செற்றநீங்கியமனத்தினனொருசிறைசென்றான்
பொற்றைமாடங்கள்கோடியோர்நொடியிடைப்புக்கான்.

இ-ள். உற்று நின்று – அடுத்து நின்று, அவன் உணர்வை – அவன் புத்தியை, தன் உணர்வினால் – தன்புத்தியினாலே, உணர்ந்தான் – ஆய்ந்து தெரிந்தார், குற்றம் – யாதொரு தோஷங்களும், இல்லது – இல்லாததாகிய, ஓர் – ஒப்பற்ற, குணமுளன் – குணமுள்ளவன், இவனென – இவனென்று, கொண்டான் – தெரிந்தவராய், செற்றம் நீங்கிய – அவன்மேல்கோபம் இல்லாத, மனத்தினன் – மனத்தையுடையவராய், ஒருசிறை – மற்றோர்பக்கத்தில், சென்றான் – போயினார், பொற்றை – மலைபோன்ற, மாடங்கள்கோடி-ஒருகோடி வீடுகள், ஓர்நொடியிடை – ஒரு க்ஷணத்துக்குள்ளே, புக்கான்-போயினார்—எ-று. 137

முந்தரம்பையர்முதலினர்முழுமதிமுகத்துச்
சிந்துரம்பயில்வாய்ச்சியர்யாரையுந்தெரிந்து
மந்திரம்பலகடந்தவன்மனத்தின்முன்செல்வான்
இந்திரன்சிறையிருந்தவாயிலின்கடையெதிர்ந்தான்.

இ-ள். முந்து – முன்னே, அரம்பையர் – தெய்வப்பெண்கள், முதலினர் – முதலானவர்கள், முழுமதி – பூரணச் சந்திரன்போன்ற, முகத்து-முகத்தையுடைய, சிந்துரம்பயில் – சிவப்பு நிறம்பொருந்திய, வாய்ச்சியர்

வாயையுடைய பெண்கள், யாரையும் — எல்லாரையும், தெரிந்து — பார்த்தறிந்து, மந்திரம் — ரகசியமான இடங்கள், பல — பலவும், கடந்தவன்—தாண்டிப்போனவராகிய, மனத்தின் — மனோவேகத்துக்கு, முன்செல்வான் — முந்திப்போகிற அனுமார், இந்திரன் — தேவராசன், சிறையிலிருந்த — சிறைகிடந்த, வாயிலின்கடை — கடைவாயிலினை, எதிர்ந்தான் — கண்டான்—எ-று.

ஏதியேந்திய தடக்கையர்பிறையெயிறிலங்க
மூதுரைப்பெருங்கதைகளும்பிதிர்களுமொழிவார்
ஓதிலாயிரமாயிரமுணர்விலியரக்கர்
காதுவெஞ்சினக்களியினர்காவலைக்கடந்தான்.

இ-ள். ஏதியேந்திய — ஆயுதங்களைக்கொண்ட, தடக்கையர் — நீண்ட கைகளுள்ளவர்கள், பிறை — சந்திரதுண்டம்போல், எயிறு — பற்கள், இலங்க-விளங்க, மூதுரை — பழஞ்சொற்களும், பெருங்கதைகளும் — பெரிய சரித்திரங்களும், பிதிர்களும் — சிறுகதைகளும், மொழிவார் — சொல்லிக்கொண்டிருக்கிறவர்களை, ஓதில் — அளவுசொல்லும்போது, ஆயிரமாயிரம் — கோடிகோடி, உணர்விலி - அறிவிலிகளான, அரக்கர் — ராக்ஷதர்கள், காது — கொல்லத்தக்க, வெம்சினம் — வெவ்விய கோபத்தையுடைய, களியினர் — கட்குடியர்கள், காவலை — காக்கும்வாயிலை, கடந்தான் — கடந்துசென்றார்—எ-று.

முக்கணோக்கினன் முதன்மகனறுவகைமுகனும்
திக்குநோக்கியபுயங்களுஞ்சிலகரந்தனையான்
ஒக்கநோக்கியர்குழாத்திடையுறங்குகின்றானைப்
புக்குநோக்கினன்புகைபுகாவாயிலும்புகுவான்.

இ-ள். முக்கண் — மூன்றுகண்களாலே, நோக்கினன் — பார்க்கிறவரான பரமனுடைய, முதல்மகன் — போரிற் பிரதானபுத்திரனை முருகக்கடவுள், அறுவகை — தமது ஆறுவகையான, முகனும் — முகங்களையும், திக்கு-திசைகளை, நோக்கிய — பார்ப்பனவான விசாலமான, புயங்களும் — தோள்களும், சில — முகத்திலைந்தும் கையில்பத்தும், கரந்தனையான் — மறைந்தனபோலிருக்கிறவன், ஒக்க — தன் அழகுக்குச் சரியாக, நோக்கியர் — அழகுள்ளபெண்கள், குழாத்திடை — கூட்டத்திலே, உறங்குகின்றானை — தூங்குகிறவனை இந்திரசித்தை, புக்குநோக்கினன் — போய்க்கண்டார், புகைபுகா — புகை நுழையாத, வாயிலும் — வாயிலிலும், புகுவான் — போகத்தக்க அனுமார்—எ-று.

வளையும்வாளெயிற்றரக்கனோகணிச்சியான்மகனோ
அளையில்வாளரியனையவன்யாவனோவறியேன்
இளையவீரனுமேந்தலுமிருவரும்பலநாள்
உளையவுள்ளபோரிவனொடுமுளதெனவுணர்ந்தான்.

இ-ள். வளையும் — வளைந்திருப்பனவாகிய, வாள் — ஒளிபொருந்தின, எயிற்று — வக்கிரதந்தங்களையுடைய, அரக்கனோ — இவன் ராக்ஷதனோ, கணிச்

சியான் — சூலத்தையுடையசிவன், மகனோ — மகனான முருகக்கடவுளோ, அளையில் — குகையிலிருக்கிற, வாள் — வெள்ளிய ஒளியையுடைய, அரி-சிங் கத்தை, அனையவன் — ஒப்பான இவன், யாவனோ — யாரோ, அறியேன்-நான்தெரிந்திலேன், இளைய வீரனும் — இளையபெருமாளும், ஏந்தலும்-ஸ்ரீராமனும், இருவரும் — ஆகிய இருவரும்கூடி, பலநாள் — அநேககாலம், உளைய — வருந்த, உள்ள — உளதாகுகிற, போர் — சண்டை, இவனோடும்-இவனுடனே, உளது என — உண்டாமென்று, உணர்ந்தான் — தெரிந்தார். 141

இவனையின்றுணையுடையபோரிராவணனென்னே
புவனமூன்றையும்வென்றதோர்பொருளெனப்புகறல்
சிவனைநான்முகத்தொருவனைத்திருநெடுமாலாம்
அவனையல்லவர்நிகர்ப்பவரென்பதுமறிவோ.

இ-ள். இவனை — இப்படிப்பட்டவனை, இன் — தனக்கினிதான, துணையுடைய — துணையாகக்கொண்டிருக்கிற, போர்-வலிமையுள்ள, இராவணன்-இராவணனானவன், புவனமூன்றையும் — திரிலோகத்தையும், வென்றது-ஜெயங்கொண்டதை, ஓர் பொருளென — ஒருபொருளாக, புகறல்-சொல்லுகிறது, என்னே — என்னபெரிதோ அன்று, சிவனை-பரமசிவனையும், நான் முகத்தொருவனை — சதுர்முகப் பிரமாவையும், திருநெடுமாலாம் — ஸ்ரீயப் பதியான, அவனை — அவனையும், அல்லவர் — அல்லாதமற்றையோர் — நிகர்ப் பவர் — இவனுக்கு ஒப்பாவார், என்பதும்-என்றுசொல்லுகிறதும், அறிவோ-விவேகச் செய்கையோ அன்று—எ-று. 142

என்றுகைம்மறித்திடைநின்றுகாலத்தையிகப்ப
தன்றுபோவதென்றுயிரமாயிரத்தடங்காத்
துன்றுமாளிகையோளிகடெரிசறத்துருவிச்
சென்றுதேடினனிந்திரசித்தினைதீர்ந்தான்.

இ-ள். என்று — என்றுநினைத்து, கைமறித்து — இவன் ஒருவராலும் வெல்லத்தகாதவனெனக் கையாலேதடுத்து, இடைநின்று — இவ்விடத்தே நின்று, காலத்தையிகப்பது — வீணேகாலம்போக்குகிறது, அன்று — காரிய மல்ல, போவதென்று — இனிப்போகிறதே நன்றென்று, ஆயிரமாயிரத்து-ஒருகோடியளவிலும், அடங்கா — அடங்காமல், துன்று — நெருங்கின, மாளிகை — பெரிய வீடுகளின், ஒளிகள் — நீண்டவரிசைகளெல்லாம், துரிசு அற — ஒழிவில்லாமல், துருவிச்சென்று — தேடிக்கொண்டுபோய், தேடினன் பின்னும்தேடுகிறார், இந்திரசித்தனை — இந்திரசித்தை, தீர்ந்தான் — விட்டுப் போன அனுமார்—எ-று. 143

அக்கன்மாளிகைகடந்துபோய்மேலதிகாயன்
தொக்ககோயிலும்பொருநர்களில்லமுந்துருவித்
தக்கமந்திரத்தலைவர்கண்மனைகளுந்தாவிப்
புக்குநீங்கினனிராகவன்கழலெனப்புகழோன்.

இ-ள். அக்கன் – அக்ஷனுடைய, மாளிகை – வீட்டையும், கடந்துபோய்-தாண்டிப்போய், மேல் – அதற்குப்பின்பு, அதிகாயன் - அதிகாயன், தொக்க-கூடியிருக்கிற, கோயிலும் – வீட்டையும், பொருநர்கள் – போர்வீரர்களுடைய, இல்லமும் – வீடுகளையும், துருவி – தேடி, தக்க – தகுதியான, மந்திரத்தலைவர்கள் – ஆலோசனையிற்சிறந்த மந்திரிகளுடைய, மனைகளும்-வீடுகளையும், தாவி – தாண்டி, புக்கு – போய்நீங்கினன் அவைகளையுங் கடந்தார், இராகவன் கழலென – ஸ்ரீராமனது திருவடியென்பதான, புகழோன்-கீர்த்தியையுடையவர்—எ-று. 144

இன்னராமிரும்பெரும்படைத்தலைவர்களிருக்கைப்
பொன்னின்மாளிகையாயிரகோடியும்புக்கான்
கன்னிமாநகர்ப்புறத்தகன்கரந்துறைகாண்பான்
சொன்னமூன்றினுநடுவணத்தகழியைத்தொடர்ந்தான்.

இ-ள். இன்னராம் – இத்தன்மையர்களான, இரும் – பெருமையில், பெரும் – பெரியரான, படைத்தலைவர்கள் - சேனாதிபதிகளுடைய, இருக்கை-இருப்பிடமான, பொன்னின் – பொன்னாலமைந்த, மாளிகை – வீடுகள், ஆயிரகோடியும் – ஆயிரகோடிகளிலும், புக்கான் – போனார், கன்னி – அழியாத, மாநகர்ப்புறத்து – பெருமையுடைய அந்த இலங்கைக்குள்ளே, அகன்-அகன்ற, கரந்துறை – மறைவிடமான இராவணன்வீட்டை, காண்பான்-காணுதற்கு, சொன்ன – எல்லாராலுஞ்சொல்லலான, மூன்றினும் – மூன்றாணிளின்றும், நடுவணத்து – நடுவிலிருக்கிற, அகழியை – அகழ்க்கிடங்கை, தொடர்ந்தான் – அடுத்தார் கிட்டினார்—எ-று. 145

தனிக்கடக்களிறெனவொருதுணையிலான்றூய
பணிக்கடற்பெருங்கடவுடன்பரிபவந்துடைப்பான்
இனிக்கடப்பதன்றேழ்கடல்கிடந்ததென்றிசைத்தான்
கனிக்கடற்கதிர்தொடர்ந்தவனகழியைக்கண்டான்.

இ-ள். தனி – ஒப்பில்லாத, கடக்களிறென – மதயானைபோல், ஒரு துணையிலான் – ஒருவர்துணையும் வேண்டாதவரான, கனி – சிவந்த பழமென்று, கடல் – கடலிலேதோன்றுகிற, கதிர் – சூரியனை, தொடர்ந்தவன்-பற்றிப்பாய்ந்த அனுமார், அகழியை – அந்த அகழ்க்கிடங்கை, கண்டான்-பார்த்தவராய், தூய – முன்னேதாம்தாண்டிவந்த, பனிக்கடல் – குளிர்ந்த கடலென்கிற, பெருங்கடவுள்தன் – மகாதேவனுடைய, பரிபவம் – துன்பத்தை, துடைப்பான் – போக்குதற்கு, இனி – இனிமேல், கடப்பது-தாண்டப்படுவது, அன்று – அல்ல, ஏழ்கடல் – கடலேழுஞ்சேர, கிடந்ததென்று-கிடக்கின்றதென்று, இசைத்தான் – சொன்னார்—எ-று. பெருங்கடவுளுக்குத்துன்பமாவது அனுமார் தாண்டுதலான இழிவு. 146

பாழிநன்னெடுங்கிடங்கெனப்பகர்வரேற்பல்லோர்
ஊழிகாலநின்றுலகெலாங்கல்லினுமுலவா

ஆழிவெஞ்சினத்தரக்கனையஞ்சியாழ்கடல்கள்
ஏழுமிந்நகர்சுலாயதுகொலாமெனவிசைத்தான்.

இ-ள். பாழி — விசாலமான, நல் — நன்மைகொண்ட, நெடு — நீண்ட, கிடங்கென — தோண்டினபள்ளமென்று, பல்லோர் — பலரும், பகர்வரேல்-சொல்லுவார்களேயானல், ஊழிகாலநின்று — ஊழிகால அளவுங்கூடி, உலகெலாம் — எல்லாவுலகத்தாரும், கல்லினும் — தோண்டினுலும், உலவா — இவ்வளவு ஆழமுண்டாகா முடிவுபெறு, ஆழி-கடல்நிறமுடைய, வெஞ்சினத்து-வெவ்வியகோபமுள்ள, அரக்கனை — இராவணராக்ஷதனுக்கு, அஞ்சி — பயந்து காவலாக, ஆழ்கடல்கள் ஏழும் - ஆழமுள்ள ஏழுகடல்களும், இந்நகர் — இந்தப்பட்டணத்தை, சுலாயதுகொலென - சூழ்ந்திருக்கிறதோ என்று, இசைத்தான் — சொன்னுர்—எ-று. ஆம் சாரியை. 147

ஆயதாகியவகன்புனலகழியையடைந்தான்
தாயவேலையினிருமடிவிசைகொடுதாவிப்
போயகாலத்தும்போக்கரிதென்பதுபுகன்ருன்
நாயகன்புகழ்நடந்தபேருலகெலாநடந்தான்.

இ-ள். ஆயதாகிய — அப்படிப்பட்டதான, அகன் — அகன்ற, புனலகழியை — நீருள்ள அகழ்க்கிடங்கை, அடைந்தான் — கிட்டினவராய், தாய-முன்னேதாண்டின, வேலையின் — கடலைப்பார்க்கிலும், இருமடி — இரண்டுபங்கு, விசைகொண்டு — வேகத்துடனே, தாவி — தாண்டி, போயகாலத்தும்-போனபோதிலும், போக்கரிது — போகக்கூடாது, என்பது - என்பதாய், புகன்ருன் — சொன்னுர், பயநாயகன் — ஸ்ரீராமனுடைய, புகழ் — கீர்த்தி, நடந்த — உலாவுகிற, பேர் — பெரிய, உலகெலாம்-உலகமுழுதும், நடந்தான்-உலாவுகின்ற கீர்த்தியுள்ளவர் எழு—எ-று. 148

வேறு

மேக்குநால்வகைமேகமுங்கீழ்விழத்
தூக்கினுலன்னதோயத்ததாய்த்துயர்
ஆக்கினுன்படையன்னவகழியை
வாக்கினுலுரைவைக்கலுமாகுமோ.

இ-ள். மேக்கு — மேலுள்ள, நால்வகை - நான்குபிரிவுள்ள, மேகமும்-மேகங்களுங்கூடி, கீழ்விழ் — அகழியின் அடித்தறைதோன்ற, தூக்கினுல் — நீர்மொண்டெழுந்தால், அன்ன — அவ்வளவுள்ள, தோயத்தது ஆய் — நீருள்ளதாகி, துயர்-உலகுக்கெல்லாந்துன்பத்தை, ஆக்கினுன் — உண்டாக்கின ராவணனுடைய, படை அன்ன — சேனைவெள்ளம்போன்ற, அகழியை - அந்த அகழ்க்கிடங்கை, வாக்கினுல் — நமதுவாயினுலே, உரை - சொல்லுஞ் சொற்களை, வைக்கலும் — கொள்ளுதலும், ஆகுமோ — கூடுமோசொல்லிமுடியாது.

ஆனைமும்மதமும்பரியாழியும்
வானமங்கையர்குங்குமவாரியும்
நானமாதர்நறைக்குழலாவியும்
தேனுமாரமுந்தேய்வையுநாறுமால்.

இ-ள். ஆனை – யானைகளினுடைய, மும்மதமும் – மூவகைமதங்களும், பரி – குதிரைகளினுடைய, ஆழியும் – மூத்திரப் பிரவாகமும், வானமங்கையர் – தெய்வகன்னிகளுடைய, குங்குமவாரியும்-குங்குமக்குழம்பினீரும், நானம்-வீட்டில் ஸ்நானஞ்செய்கிற, மாதர் – பெண்களுடைய, நறை-பரிமளமுள்ள, குழல் – கூந்தலுக் கூட்டின, ஆவியும் – அகிற்புகையும், தேனும்-அத்தரும், ஆரமும் – சந்தனக்குழம்பும், தேய்வையும்-கர்ப்பூரத்தேய்வும், நாறும்-அவ்வகழிநீர் பரிமளிக்கின்றது—எ-று. 150

உன்னநாரைமகன்றில்புதாவுளில்
அன்னங்கோழிவண்டானங்களாழிப்புள்
கின்னரங்குரண்டங்கிலுக்கஞ்சிரல்
சென்னங்காகங்குணலைஞ்சிலம்புமே.

இ-ள். உன்னும் – மீனைத்தேடுகிற, நாரை – நாரைகளும், மகன்றில்-ஆணன்றில்களும், புதா – குருகுகளும், உளில் – உள்ளான்களும், அன்னம்-அம்சங்களும், கோழி – நீர்க்கோழிகளும், வண்டானங்கள் – பெண்குருகுகளும், ஆழிப்புள் – சக்கரவாளங்களும், கின்னரம் – கின்னரபக்ஷிகளும், குரண்டம் – கொக்குகளும், கிலுக்கம் – கிலுக்கபக்ஷிகளும், சிரல் – மீன்குத்திக்குருவிகளும், சென்னம் – நீர்ப்பருந்துகளும், காகம் – நீர்க்காக்கைகளும், குணலம் – குணலபக்ஷிகளும், சிலம்பும் – ஒலிக்கும்—எ-று. 151

நலத்தமாதர்நறையகிலுவியம்
அலத்தகக்குழம்புஞ்செறிந்தாடிய
விலக்கணக்கரியோடிளமென்னடைக்
குலப்பிடிக்குமோருடல்கொடுக்குமால்.

இ-ள். நலத்த – அழகுள்ள, மாதர் – பெண்களுடைய, நறை – பரிமளங்களும், அகில் – அகிற்புகையும், நாவியும் – கஸ்தூரியும், அலத்தகக்குழம்பும்-செம்பஞ்சுக்குழம்பும், செறிந்து – நெருங்கப்பெற்று, ஆடிய – பூசுதலான, இலக்கணம் – லக்ஷணங்களுள்ள, கரியோடு – யானைகளுடனே, இளம்-இளமை பொருந்தின, மென் – மெதுவான, நடை – நடையையுடைய, குலப்பிடிக்கும் – சிறப்புள்ள பெண்யானைகளுக்கும், ஓருடல் – ஒருவகைப் பிணக்கை, கொடுக்கும் – தரும் அந்த அகழி—எ-று. 152

நறவுநாறியநாணறுந்தாமரை
துரைகடோறுமுகிழ்த்தனதோன்றுமால்

சிறையினெய்தியசெல்விமுகத்தினோ
டுறவுதாமுடையாரொடுங்கார்களோ.

இ-ள். நறவு — தேனுடனே, நாறிய — மணம்வீசுகின்ற, நாள் — தினமு மலர்கிற, நறும் — நல்ல, தாமரை - தாமரைமலர்கள், துறைகள்தோறும்- எந்த இடங்களிலும், முகிழ்த்தன — குவிந்தனவாகி, தோன்றும் — காணப் படும், சிறையின் — சிறையில், எய்திய — அகப்பட்டிருக்கிற, செல்வி — சீதா பிராட்டியினுடைய, முகத்தினோடு — முகத்துடனே, உறவுடையார்கள்-உற வுள்ளபேர்கள், ஒடுங்கார்களோ - ஒடுங்கியிரார்களோ ஒடுங்கியிருப்பார்கள்- எ-று. உறவு ஒப்பு ஒப்பான தாமரைகள் குவிந்திருக்கின்றன தாம் சாரியை.

பளிங்குசெற்றிக்குயிற்றியபாயொளி
விளிம்பும்வெள்ளமுமெய்தெரியாதுமேல்
தெளிந்தசிந்தையருஞ்சிறியார்களோ
டளிந்தபோதறிதற்கெளிதாவரோ.

இ-ள். பளிங்கு - பளிங்குக்கற்களை, செற்றி — செதுக்கி, குயிற்றிய- பதித்திருக்கிற, பாய் ஒளி — பரவின பிரகாசமுள்ள, விளிம்பும் — ஓரமும், வெள்ளமும் — நீரும், மெய் — உண்மை, தெரியாது — தெரியாமலிருக்கின் றது, மேல் — அகழ்மேல், தெளிந்த — தெளிவுள்ள, சிந்தையரும் — மன முடையவர்களும், சிறியார்களோடு - தெளிவில்லாத சிறியோருடனே, அளிந்தபோது — கூடுதலானல், அறிதற்கு — தெரிவதற்கு, எளிதாவரோ- சுலபராவர்களோ ஆகார் குயிற்றிய பளிங்கினது பாயொளி எனக்கூட்டுக- எ-று. ஒளியால் பளிங்கும்நீரும் வேறு பிரிக்கலாகாம லிருக்கின்றன என்க.

நீலமேமுதனன்மணிநித்திலம்
மேலகீழபல்வேறொளிவீசலால்
பாலின்வேலைமுதற்பலவேலையும்
கால்கலந்தனவோவெனக்காட்டுமே.

இ-ள். நீலமேமுதல் — நீலரத்நமே முதலாகிய, நன்மணி - நல்ல ரத்நங் களும், நித்திலம் - முத்துகளும், மேல - மதில்மேலும், கீழ - நீரின்கீழும், பல்வேறு - பலவேறுவகையான, ஒளி - ஒளியை, வீசலால் - வீசுதலாலே, பாலின்வேலை - பாற்கடல், முதல் - முதலான, பல வேலையும் - பலநிறக் கடல்களும், கால் — காற்றால், கலந்தனவோ - கலப்பன வாயினவோ, என- என்னும்படி, காட்டும் - அந்த அகழ்தோற்றும், மதிலிலுள்ளபலவகை ரத் நங்களும் அகழி லொளி வீசுதலாலே அகழ் பலநிறங் காட்டுகிறதென்க. 155

அன்னவேலையகழியையார்கலி
என்னவேகடந்திஞ்சியும்பிற்படத்
தின்னருங்கடிமாநகர்துன்னினான்
பின்னரெய்தியதன்மையும்பேசுவாம்.

இ-ள்- அன்ன - அப்படிப்பட்ட, வேலை - கடல்போன்ற, அகழியை- அகழ்க்கிடங்கை, ஆர்கலியென்ன — முன்னே தாண்டிவந்த கடல்போலவே, கடந்து - தாண்டிவந்து, இஞ்சியும் - அந்த அகழையடுத்த மதிலும், பிற்பட- பின்னாக, துன்னரும் - போகுதற்கரிதான, கடி - காவலையுடைய, மாநகர்- பெரிய ஊர்க்குள்ளே, துன்னினான் - போயினார், பின்னர் - போனபின்பு, எய்திய தன்மையும் - அங்குப்போனவகைகளையும், பேசுவாம் - சொல்லு வோம் யாம்—எ-று. 156

கரியநாழிகைபாதியிற்காலனும்
வெருவியோடுமரக்கர்தம்வெம்பதி
ஒருவனேயொருபன்னிருயோசனைத்
தெருவுமும்மைநூறாயிரந்தேடினான்.

இ-ள். கரியநாழிகைபாதியில் — நடுராத்திரியிலே, காலனும் — யமனும், வெருவி — பயந்து, ஓடும் — ஓடுவதான, அரக்கர்தம் — ராக்ஷதர்களுடைய, வெம்பதி — வெவ்விதான ஊர்க்குள், ஒருவனே - இவரொருவரே, ஒரு- ஒப்பில்லாத, பன்னிருயோசனை - பன்னிரண்டுயோசனையளவுள்ள, மும்மை நூறாயிரந்தெருவும் — மூன்றுலட்சம் தெருவும், தேடினான் — தேடலானார்.

வேறு

வேரியுமடங்கினநெடுங்கடல்விளம்பும்
பாரியுமடங்கினதடங்கியதுபாடல்
காரியமடங்கினர்கள்கம்மியர்கண்மும்மைத்
தூரியமடங்கினதொடங்கியதுறக்கம்.

இ-ள். வேரியும் — கட்குடித்தலும், அடங்கின — ஓய்வாயின, நெடுங் கடல் — நீண்டகடல்போல், விளம்பும் — பேசுகிற, பாரியும் — பாரிப்பும், அடங்கினது — அடங்கலாயிற்று, பாடல் - அங்கங்கே பாடுகிறதும், அடங்கி யது — அடங்கலாயிற்று, கம்மியர்கள் — தொழிலாளிகளுடைய, காரியம்- வேலைகளும், அடங்கின — அடங்கலாயின, மும்மை — மூவகையான, தூரி யம் — வாத்தியங்களும், அடங்கின - அடங்கலாயின, உறக்கம் — எவ்விடத் தும் நித்திரை, தொடங்கியது — தொடங்கலாயிற்று—எ-று. நெடுங்கடல் என்றதனானே நீண்ட வீதிகளெல்லாம் ஜனசந்தடி அடங்கின எனக. பாரித் தல் - பரவுதல், பாரி — முதனிலைத்தொழிற்பெயர். 158

இறங்கினநிறங்கொள்பரியேமமுறவெங்கும்
கறங்கினமறங்கொளெயில்காவலர்துடிக்கண்
பிறங்கினர்நறுங்குழலரன்பர்பிரியாதோர்
உறங்கினர்பிணங்கியெதிரூடினவரல்லார்.

இ-ள். நிறங்கொள் — நல்லநிறத்தையுடைய, பரி — குதிரைகள், ஏம முற — சந்தோஷமாக, எங்கும் — எவ்விடத்திலும், இறங்கின — தலைகுனித

லாயின தூங்குகின்றன, மறங்கொள் - வீரங்கொண்ட, எயில்காவலர் - மதில் காப்பவர்களுடைய, துடிக்கண் - பறைகளின் மேற்றோர் போர்வைகள், கறங்கின - சத்திக்கலாயின, நறும் - வாசனையுள்ள, குழலர் - கூந்தலையுடையவர்களாய், அன்பர் - நாயகரை, பிரியாதோர் - பிரியாத பெண்கள் சிலர், பிறங்கினர் - காமவின்பத்துடன் விளங்குகிறார், பிணங்கி - ஊடி, எதிர்நாயகர்முன்னே, ஊடினவர் - விரோதித்திருக்கிறவர்களை, அல்லார் - அல்லாத பெண்கள்சிலர், உறங்கினர் - நித்திரை செய்கிறார்கள்—எ-று. 159

வடந்தருகடங்கொள்புயமைந்தர்கலவிப்போர்
கடந்தனரிடைந்தனர்களித்தமயில்போலும்
மடந்தையர்கடந்தனமுகட்டிடைமயங்கிக்
கிடந்தனர்நடந்ததுபுணர்ச்சிதருகேதம்.

இ-ள். வடந்தரு - வில்லினது நாணியைத் தருவதான, கடம்கொள் - முறைமையைக்கொண்ட, புயம் - தோளையுடைய, மைந்தர் - வீரர்கள், கலவிப்போர் - புணர்ச்சியாகிய சண்டையில், கடந்தனர் - பெண்களைவென்றார்கள், களித்த - மயங்கின, மயில்போலும் - மயிற்சாயல்போன்ற, மடந்தையர் - பெண்கள், இடைந்தனர் - தோற்றார்கள், கடம் - குடம்போன்ற, தனம் - கொங்கைகளின், முகட்டிடை - உச்சியிலே, மயங்கி - மயக்கங்கொண்டு, கிடந்தனர் - சாய்ந்தார்கள் அம்மைந்தர்கள், புணர்ச்சிதரு - அக்கலவிப்போர் தருவதான, கேதம் - பெண்கள் அணையமாட்டாததுன்பமும் மைந்தரணையவேண்டுகிறதும், நடந்தது - நடக்கலாயிற்று உண்டாயிற்று, விற்றழும்புள்ளகோள் மடந்தையர்கள் தந்தனம் என்றுமானாலும் கடந்தனம் என்றால் மெலித்தல் விகாரங்கொள்க—எ-று. 160

வாமநறையின்றுறைமயங்கினர்மறந்தார்
காமநறையின்றிறநுகர்ந்தனர்களித்தார்
பூமனறைவண்டறையலங்கமளிபுக்கார்
தூமநறையின்றுறைபயின்றிலர்துயின்றார்.

இ-ள். தூமநறையின்துறை - அகிற்புகைமணமுள்ள இடங்களில், பயின்றிலர் - சஞ்சரித்தலில்லாதவர்களாய், வாம்அ - ஒழுகுவதையுடைய, நறையின்துறை - மதுபானவிஷயங்களில், மயங்கினர் - கலங்கினவர்களாகி, மறந்தார் - பரவசராய் துயின்றார், காமநறையின்துறை - காமசுகமான மதுரவிஷயங்களை, நுகர்ந்தனர் - அனுபவித்தவர்களாய், களித்தார் - களிப்புக்கொண்டு துயின்றார், பூ - பூவிலே, மன் - பொருந்தின, நறை - தேன் குடிக்கிற, வண்டு - வண்டுகள், அறை - சத்திப்பதான, அலங்கு அமளி - அசையும் ஊசல்மெத்தையிலே, புக்கார் - போய்த்துயின்றார், வாமநறை காமநறையிலே களித்து தூமநறையின்றுறைகளிலே பூமன்நறை வண்டறை அலங்கு அமளிக்குப்போய் வெளிச்சஞ்சரிப் பில்லார்களாய் எல்லாரும்

தூங்குகிறார்களென்க, சிலர்வாமநறையில் மயங்கியிருக்கிறார்கள் சிலர் காம நறையிற் களித்திருக்கிறார்கள் சிலர் பயின்றிலர் துயின்றாரெனவுமாம். 161

பண்ணிமையடைத்தபலகட்பொருநர்பாடல்
விண்ணிமையடைத்தனவிளைந்ததிருள்வீணைத்
தண்ணிமையடைத்தன தழங்கிசைவழங்கும்
கண்ணிமையடைத்தனவடைத்தனகபாடம்.

இ-ள். பலகண் - பல இடங்களிலும், பொருநர் - நாடகர்களுடைய, பாடல்பண் - பாடலும் பண்ணும், இமை அடைத்தன - இமைகள் மூடின ஒலித்தலில்லையாயின, விண் - மேகங்களும், இமை அடைத்தன - தூங்க லாயின, இருள் - எங்கும் அந்தகாரம், விளைந்தது - ஆயிற்று, வீணை - வீணை களும், தண் - தமது குளிர்ந்த, இமையடைத்தன - கண்களைமூடின என் றால் வாசித்தலில்லையாயின என்க, தழங்கு - சத்திக்கின்ற, இசைவழங்கும் கண் - இராகத்தைத் தருகிற தொளைக்கருவிகளும், இமையடைத்தன- தூங்கலாயின, கபாடம் - கதவுகள், அடைத்தன - எங்கும் மூடலாயிருக் கின்றன—எ-று. 162

விரிந்தனநரந்தமுதல்வெண்மலர்விளாகத்
துரிஞ்சவருதென்றலுயிரின்புடைபுலாவச்
சொரிந்தனகருங்கண்வருதுள்ளிதருவெள்ளம்
எரிந்தனபிரிந்தவர்தமெஞ்சுதலினெஞ்சம்.

இ-ள். நரந்தம்முதல் - கஸ்தூரிமணமுதலானவைகள், விரிந்தன - எங் கும் பரவியிருக்கின்றன, வெண் - வெண்ணிறமுள்ள முல்லைமல்லிகை, மலர் விள் - புஷ்பங்களின்விகஸிப்பு, ஆகத்து - தனதுடம்பிலே, உரிஞ்ச - உரசு தலாய், வரு - வருகிற, தென்றல் - தென்றற்காற்றானது, உயிரின்புடை- மார்பிலே, உலாவ - மோதத்தவழ, கருங்கண் - கரியகண்கள், துள்ளிவரு தரு - துளிதுளியாய் வருதலையுடைய, வெள்ளம் - நீர்ப்பிரவாகத்தை, சொரிந்தன - சொரிதலாயின, பிரிந்தவர்தம் - பிரிந்திருக்கிறமகளிருடைய, எஞ்சுதலில் - யாதொரு குறைவுமில்லாத, நெஞ்சம் - மனசு, எரிந்தன- எரிதலாயின, கண் - நீரைச்சொரிதலாயின—எ-று. 163

இளக்கரிழுதெஞ்சவிழுமெண்ணருவிளக்கைத்
துளக்கியதுதென்றல்பகைசோரவுயர்வோரின்
அளக்கரொடளக்கரியவாயைுறவீசாச
விளக்கினம்விளக்குமணிமெய்புறுவிளக்கம்.

இ-ள். இளக்கர் — இளகுதலையுடைய, இழுது — நெய், எஞ்ச — குறை யவே, விழும் — அவிவனவான, எண் அரு — எண்ணுதற்குக்கூடாத, விளக்கை- விளக்குகளை, பகை — விரோதிகள், சோர — தளர்ந்தபோது, உயர்வோரின்- அதிகரிக்கின்றவர்கள்போல் — முழுதுங்கெடுக்கிறவர்கள்போல், தென்றல்-

தென்றற்காற்றானது, துளக்கியது — அசைத்தவித்துவிட்டது அப்போது, அளக்கரொடு — கடலும், அளக்க — ஒப்புச்சொல்ல, அரிய — நேர்நில்லாத, ஆசை உற — பிரியந்தோன்ற, மெய் - அப்பெண்கள்சரீரத்திலே, உறு — அணிதலான, மணிவிளக்கம்வீசா — ரத்நாபரணச்சோதிகள்வீசி, விளக்கினம் - எண்ணறுவிளக்குகளாக, விளக்கும் — இருளைப்போக்கும்—எ-று. 164

நித்தநியமத்தொழிலராய்நிறையுஞானத்
துத்தமருறங்கினர்கள்யோகியர்துயின்றார்
மத்தமதவெங்களிறுறங்கினமயங்கும்
பித்தருமுறங்கினரினிப்பிறரிதென்னும்.

இ-ள்- நித்தம் — குறைவுபெறாத, நியமத்தொழிலராய் — நியதிக்கிரியைகளையுடையராகி, நிறையும் — பரிபூரணமான, ஞானத்து — மெய்ஞ்ஞானத்தையுடைய, உத்தமர் — நல்லோர்களும், துயின்றனர்கள் — தூங்குகிறார்கள், யோகியர் — அஷ்டாங்கயோகிகளும், துயின்றார் — தூங்குகிறார்கள், மத்தம் - மயக்கத்தைதருகிற, மதம் - மதத்தையுடைய, வெங்களிறு — வெவ்வியயானைகளும், உறங்கின — தூங்கலாயின, மயங்கும் — எப்போதும் பிராந்திகொண்டலைகிற, பித்தரும் — பைத்தியக்காரர்களும், உறங்கினர் — தூங்கலானார்கள் என்றால், இனி — இனிமேல், பிறர் — தூங்குகிற மற்றையோர்களுக்கு, இது - இந்தநித்திரைக்காலத்தில், என் ஆம் — யாது உண்டாகும் நித்திரையே யுண்டாகுமென்பதாம் — எ-று- பித்தர் - நித்திரைசெய்யாதலைகிறவர்கள்—எ-று.

ஆயபொழுதம்மதிலகத்தரசர்வைகும்
தூயதெருவொன்றொடொருகோடிதுருவிப்போய்த்
தீயவனிருக்கையயல்செய்தவகழிஞ்சி
மேயதுகடந்தனன்வினைப்பகையைவென்றான்.

இ-ள். ஆயபொழுது — அப்போது, அம்மதிலகத்து — அந்தமதிலுக்குள்ளாக, அரசர்வைகும் — ராஜாக்கள்தங்குகிற, தூயதொரு - நல்லவீதிகள், ஒன்றொடொருகோடி — இரண்டுகோடியளவு, துருவிப்போய் — தேடிக்கொண்டுபோய், தீயவன் — பொல்லாதராவணன், இருக்கை — வீட்டுக்கு, அயல் — புறமே, செய்த — செய்திருக்கிற, அகழ் இஞ்சி — அகழும் மதிலும் ஆய், மேயது — இருக்கிறதை, கடந்தனன் — தாண்டிப்போனார், வினைப்பகையை — தீவினைச்செய்கைகளான காமக்குரோதங்களை, வென்றான் - ஜெயித்திருக்கிற திருவடி—எ-று. 166

வேறு

சேரியற்கையிராவணன்பொன்மனை
சீரியற்கைநிரம்பியதிங்களாத்
தாரகைக்குழுவீற்றழுவித்தொடர்
நாரியர்க்குறைவாமிடநண்ணினான்.

இ-ள். போர் — எங்கும்பொருந்துதலே, இயற்கை - சுபாவமாகவுடைய, இராவணன் — இராவணனது, பொன்மனை — சுவர்ணமயமானவீடே, சீர் இயற்கை — சிறந்தசுவபாவமே, நிரம்பிய — நிரம்புதலுள்ள, திங்களா — சந்திரனுக, தாரகைக்குழுவில் — நக்ஷத்திரக் கூட்டங்கள்போல், தழுவி - கூடி, தொடர் - சேர்ந்திருக்கிற, நாரியர்க்கு — பெண்களுக்கு, உறைவு ஆம்-இருப்பனவாகிய, இடம் — வீடுகளையுடையவீதியை, நண்ணினுன் — கிட்டினர்.

முயற்கருங்கறைநீங்கியமொய்மதி
அயர்க்கும்வாண்முகத்தாரமுதன்னவர்
இயக்கர்மங்கையர்யாவருமீண்டினர்
நயக்குமாளிகைவீதியைநண்ணினுன்.

இ-ள். முயல் - முயலாகிய, கருங் கறை - கரிள களங்கம், நீங்கிய-இல்லாத, மொய் — கிரணங்கள் நிரம்பின, மதி — சந்திரன், அயர்க்கும் — சோர்வாகத்தக்க, வாள் — ஒலிபொருந்தின, முகத்து — முகங்களையுடைய, ஆர் அமுது — அருமையான அமுதத்தை, அன்னவர் — ஒத்த பெண்களாகிய, இயக்கர் மங்கையர் — யக்ஷகன்னிகள், யாவரும் — எல்லாரும், ஈண்டினர்- கூடினவர்களாக, நயக்கும் - விரும்பியிருக்கின்ற, மாளிகை — வீடுகளையுடைய, வீதியை - தெருவை, நண்ணினுன் - போய்த்தேடினர் எ-று. 168

தழைந்தமொய்யொளிமெய்மணித்தாழ்தொறும்
இழைந்தநூலினுமின்னிளங்காலினும்
நுழைந்துநொய்தினின்மெய்யுறநோக்கினுன்
விழைந்தவெவ்வினைவேரறவீசினுன்.

இ-ள். தழைந்த - மிகுந்த, மொய் ஒளி - நெருங்கின ஒளிகளை, மெய்- வீசுகின்ற, மணி - ரத்நங்களாலான, தாழ் தொறும் - தாழ்க்கோல் செல்லுமிடங்களெல்லாம், இழைந்த - தூற்ற, நூலினும் - நூல்போலவும், இன்- இனிதான, இளங்காலினும் - தென்றற் காற்றுப்போலவும், நொய்தினில்- விரைவாக, நுழைந்து - புகுந்து, மெய்உற - மெய்விளங்க, நோக்கினுன்- பார்த்தார், விழைந்த - எல்லாரும் வேண்டலான, வெவ்வினை - வெவ்விய காமச்செய்கையின், வேர் - வாசனையும், அற - போக, வீசினுன் - போக்கின திருவடி—எ-று. தாழ்க்கோல் - திறவுகோல். 169

அத்திரம்புனையானையரக்கன்மே
வைத்தசிந்தையர்வாங்குமுயிர்ப்பினர்
பத்திரம்புரைநாட்டம்பதைப்பறச்
சித்திரங்களெனவிருந்தார்சிலர்.

இ-ள். அத்திரம் - பகைவரம்புக்காயங்களை, புனை - அலங்காரமாகக் கொண்ட, யானை - பட்டத்தியானையையுடைய, அரக்கன்மேல் - இராவணனிடத்தில், வைத்த - நிறுத்தின, சிந்தையர் — மனமுள்ளவர்கள், வாங்கும்-

மிகவுநீளுதல்கொண்ட, உயிர்ப்பினர் – சுவாசத்தையுடையவர்களாய், பத்திரம் – அம்புகளை, புரை – ஒப்பான, நாட்டம் – கண்கள், பதைப்பு-இமைத்தல், அற – இல்லாமல், சித்திரங்களென கண்டோர் – சித்திரமென்று நினைக்க, இருந்தார் சிலர் – சிலர் இருந்தார்கள்—எ-று. 170

வள்ளல்வெஞ்சரமாரனையஞ்சியோ
மெள்ளவேகனவின்பயன்வேண்டியோ
கள்ளமென்கொலறிந்திலங்கண்முகிழ்த்
துள்ளமின்றியுறங்குகின்றார்சிலர்.

இ-ள். வள்ளல் — ஓயாமல் எய்கிற, வெஞ்சரம் – வெவ்விய அம்புகளையுடைய, மாரனை — மன்மதனுக்கு, அஞ்சியோ – பயந்துதானோ, மெள்ளவே–மெதுவாக, கனவின் – சொப்பனத்திலாவது, பயன் – அனுபவிக்கிற காமசுகத்தை, வேண்டியோ – விரும்பித்தானோ, கள்ளம் – அப்பெண்களது கபடநினைவு, என்கொல் – யாதோ, அறிந்திலம் – நாம் அறிகிலோம், கண் முகிழ்த்து – கண்களை மூடிக்கொண்டு, உள்ளமின்றி – மனமில்லாமல், சிலர் உறங்குகின்றார் – சிலர் தூங்குகின்றார்கள்—எ-று. 171

பழுதின்மன்மதன்வெங்கணைபன்முறை
உழுதகொங்கையரூசலுயிர்ப்பினர்
அழுதுசெய்வதென்னாணையரக்கனை
எழுதலாங்கொலென்றெண்ணுகின்றார்சிலர்.

இ-ள். பழுது இல் — தோஷமில்லாமல், மன்மதன் – மன்மதனுடைய, வெங்கணை – வெவ்விய அம்புகள், பல்முறை – அநேகவகைகளாக, உழுத-தைத்திருக்கிற, கொங்கையர் – தனங்களை யுடையவர்கள், ஊசல் — நீண்டுபோய்வருகிற ஊசல்போலாடுகிற, உயிர்ப்பினர்-சுவாசத்தையுடையவர்கள், அழுது – நாம் அழுததனாலே, செய்வது — அந்தராவணன் செய்யலாவது, என் - ஒன்றுமில்லை, ஆணை – மகாக்ஞையையுடைய, அரக்கனை - ராவணனை, எழுதலாங்கொல் – எழுதுவோமா எழுதிமுடியுமா, என்று – என்பதாய், எண்ணுகின்றார் சிலர் — சிலரெண்ணுகிறார்—எ-று. 172

ஆவதொன்றருளாயென தாவியைக்
கூவுகின்றிலைகூறலைசென்றெனாப்
பாவைபேசுவபோற்கண்பனிப்புறப்
பூவையோடும்புலம்புகின்றார்சிலர்.

இ-ள். ஆவதொன்று – எனக்கு வேண்டியதான ஒரு காரியத்தையும், செய்யாய் — செய்யாதிருக்கிறாய், அருளாய் – இரக்கஞ்செய்திலை, எனது-என்னுடைய, ஆவியை — பிராணநாயகனான ராவணனை, கூவுகின்றிலை – கூப்பிடாதிருக்கிறாய், சென்றுகூறலை – நீதானேபோய்ச் சொல்லுகின்றிலை, எனா – என்று, பாவை – பிரதிமை, பேசுவபோல் – பேசுகிறதுபோல், கண்-

களிலே, பனிப்பு உற — குளித்தலுண்டாக, பூவையோடும் — நாகணவாய்ப் புட்களுடனே, சிலர் புலம்புகின்றார்—எ-று. 173

ஈரத்தென்றலிழுகமெலிந்துதம்
பாரக்கொங்கையைப்பார்த்தனர்பாதகன்
வீரத்தோள்களின்வீக்கநினைந்துயிர்
சோரச்சோரத்துளங்குகின்றார்சிலர்.

இ-ள். ஈரத்தென்றல் — குளிர்ந்ததென்றற்காற்று, இழுக - வீச அதனாலே, மெலிந்து — உடல்தளர்ந்து, தம் — தம்முடைய, பாரக்கொங்கையை — கனத்த தனங்களை, பார்த்தனர் — நோக்கினவர்களாய், பாதகன் — தம்மொடு கூடாது பாவஞ்செய்கிற ராவணனுடைய, வீரத்தோள்களின் — வீரங்கொண்டபுஜங்களின், வீக்கம் — கனத்தை, நினைந்து - எண்ணி, உயிர்சோரச்சோர — தமதுயிர்குலையக்குலைய, சிலர் துளங்குகின்றார் — சிலர் உடல் நடுங்குகிறார்கள்—எ-று. 174

நக்கசெம்மணிநாறியநாணிழல்
பக்கம்வீசுறுபள்ளியிற்பல்பகல்
ஒக்கவாசையுலக்கவுலந்தவர்
செக்கர்வான்றருதிங்களொத்தார்சிலர்.

இ-ள். நக்க — விளங்குகின்ற, செம்மணி - சிவந்தரத்நங்களிலே, நாறிய — தோன்றுகின்ற, நாள்நிழல் — எப்போதும் ஒருபடியான காந்திகள், பக்கம் — பக்கங்களிலே, வீசுறு - வீசுதலையுடைய, பள்ளியில் — படுக்கையிலே, பல்பகல் — பலநாளும், ஒக்க - கூடவேண்டின, ஆசை - தங்களாசை, உலக்க — வியர்த்தமாக, உலந்தவர் - வருந்தின பெண்கள் சிலர், செக்கர்வான் - செவ்வானத்திலே, தரு — தோன்றுதலாகிய, திங்கள் — சந்திரனை, ஒத்தார் - ஒத்திருக்கிறார்கள்—எ-று. 175

வாளினற்றெளிகற்பகவல்லியர்
தோளினாற்றியதூங்கமளித்துயில்
நாளினற்செவியிற்புகநாமயாழ்த்
தேளினற்றிகைப்பெய்துகின்றார்சிலர்.

இ-ள். வாளினல் — ஒளியினாலே, தெளி — தெளிவுள்ள, கற்பகம் — கற்பக விருக்ஷத்திலே சூழுகிற, வல்லியர் சிலர் - பொன்னங் கொடிபோன்ற சில பெண்கள், தோளில் - தங்கள் தோள்கள்போல், நாற்றிய — தொங்கக்கட்டியிருக்கிற, தூங்கு அமளி — தூங்குமஞ்சத்திலே, துயில் — தூங்குகிற, நாளினல் — காலமாகையாலே, செயிற்புக - காதுகளிலே நுழைய அந்தக் கானமாகிய, நாமயாழ் — வீணையென்கிற பெயரையுடைய, தேளினல் — தேனாலே, திகைப்பு — மயக்கத்தை, எய்துகின்றார் — அடைகிறார்கள், தூக்

கம்வந்து தூங்கும்போது மற்ெறாரு வீட்டிலே மற்றொருத்தி பாடுகிற வீணை கானம் தேள்கொட்டினதுபோல் துஞ்பஞ்செய்ததென்க—எ-று. 176

கவ்வுதீக்கணைமேருவைக்கால்வளைத்
தெவ்வினுன்மலையேந்தியவேந்துதோள்
வவ்வுசாந்துதம்மாமுலைவெளவிய
செவ்விகண்டுகுலாவுகின்றார்சிலர்.

இ-ள். மேருவை — மகாமேருவை, கால்வளைத்து – இருகதிகாலும்சேர வளைவுசெய்து, கவ்வு— பற்றுவதான, தீக்கணை – அக்கினிபாணத்தை, எவ்வினுன் – எவினசிவனுடைய, மலை – வெள்ளிமலையை, எந்திய—பேர்த்துத் தாங்கின, எந்துதோள் - உயர்ந்த தோள்களிலே, வவ்வு - பூசுதலான, சாந்து- சந்தனமானது, தம் - தங்களுடைய, மாமுலை – பெரிய தனங்களிலே, வெளவிய - படிந்திருக்கிற, செவ்விகண்டு — அழகைப்பார்த்து, சிலர் – சில பெண்கள், குலாவுகின்றார் – கொண்டாடிக்கொள்ளுகிறார்கள்—எ-று. 177

கூடிநான்குயர்வேலையுங்கோக்கநின்
றாடினுன்புகழுங்கைநரம்பினுல்
நாடிநாற்பெரும்பண்ணுநயப்புறப்
பாடினுன்பெயர்பாடுகின்றார்சிலர்.

இ-ள். கூடி – ஒன்றாகக்கூடி, நான்கு - நான்குதிக்கிலுமுள்ள, உயர் - உயர்ந்த, வேலையும் – கடல்களும், கோக்க – எங்கும்பிரவகிக்க, நின்று – அக் காலத்திலே நிலைகொண்டு, ஆடினுன் — ஆடின பரமசிவனுடைய, புகழ்- கீர்த்தியை, அம்கை — தன தழகியகையிலுள்ள, நரம்பினுல் — நரம்புகளாகிய தந்திகளைக்கொண்டு, நாடி-ஆலோசித்து, நால் – நானுவகைகளான, பெரும்- பெருமைகொண்ட, பண்ணும் — இராகங்களெல்லாம், நயப்பு உற — சந்தோ ஷிக்க, பாடினுன் – பாடின ராவணனுடைய, பெயர் – கீர்த்தியை, பாடுகின் றார் சிலர் - சில பெண்கள் பாடுகிறார்கள்—எ-று. 178

இனையதன்மையியக்கியரெய்திய
மனையொராயிரமாயிரகோடியாம்
அனையவன்குலத்தாயிழையாரிடம்
நினைவினெய்தினனீதியினெய்தினுன்.

இ-ள். இனைய – இப்படிப்பட்ட, தன்மை - குணங்களையுடைய, இயக் கியம் – யக்ஷகன்னிகள், எய்திய — இருக்கிற, மனை – வீடுகள், ஓராயிர மாயி ரம்கோடி ஆம் — கோடி கோடி கோடிகளானதாம் அதுவிட்டு, அனையவன்- அந்த ராவணனுடைய, குலத்து ஆயிழையார் – குலப்பெண்கள், இடம்-இட மான வீடுகளை, நினைவின் — தனது எண்ணப்படி, எய்தினன் – போய்த் தேடினுர், நீதியின் - நீதி சாஸ்திரப்படியே, எய்தினுன் - செல்லுகிற திரு

வடிகோடியாம், இயக்கிய செய்தியமனை இனைய தன்மையாக வென முடிக்க—எ-று. 179

வேறு

எரிசுடர்மணியின்செங்கேழிளவெயிலிடைவிடாது
விரியிருள்பருகினாளும்விளக்கின்றிவிளங்குமாடத்
தரிவையர்குழுவுநீங்கவாசையுந்தாமுமேயாய்
ஒருசிறையிருந்துபோனவுள்ளத்தோடூடுவாரும்.

இ-ள். எரி—நெருப்பைப்போலும், சுடர்—காந்தியைக்கொண்ட, மணியின்—ரத்நங்களினது, செங்கேழ் – சிவந்தநிறத்தையுடைய, இளவெயில்-இளஞ்சோதியானது, இடைவிடாது – நடுவே ஒழிதலில்லாமல், விரி-விரிவதான, இருள்—இருளை,பருகி—உண்டு, நாளும்—எப்போதும், விளக்கின்றி விளக்கில்லாமல், விளங்கும் – தாமேவிளங்குவனவான, மாடத்து—வீடுகளிலே, அரிவையர்குழுவும் - ஊழியகாரிகளும், நீங்க—போய்விட, ஆசையும் – உண்டான ஆசையும், தாமுமேயாய் - தாங்களுமாக, ஒருசிறையிருந்து-ஒருபுறத்திலேயிருந்துகொண்டு, போன - நாயகனிடத்தேசென்ற, உள்ளத்தோடு – மனத்துடனே, ஊடுவாரும் – பிணங்குகிறவர்களும்-எ-று.

நகையெரிக்கற்றைநெற்றிநாவிதோய்ந்தனையவோதி
புகையெனத்தும்பிசுற்றப்புதுமலர்பொங்குசேக்கை
பகையெனவேகியான்றபளிங்குடைச்சீதப்பள்ளி
மிகையொடுங்காதகாமவிம்மலின்வெதும்புவாரும்.

இ-ள். நகை—விளங்குகின்ற, எரிக்கற்றை – நெருப்புச்சுவாலையின், நெற்றி – மேலே, நாவி—கஸ்தூரி, தோய்ந்தனைய – பூசினாற்போல, ஓதி-கூந்தலிலே, புகையென – புகைபோல். தும்பி – வண்டுகள், சுற்ற-மொய்க்க, புதுமலர் – நூதனபுஷ்பங்களாலே, பொங்கு - மிகுந்திருக்கிற, சேக்கை-படுக்கையானதை, பகையென – விரோதமென்று, ஏகி—அதைவிட்டுப்போய், ஆன்ற – அகன்ற, பளிங்குடை—பளிங்காலமைதலையுடைய, சீதப்பள்ளி – குளிர்ந்ததிண்ணையிலே, மிகை – அதிகமாய், ஒடுங்காத - அடங்காதிருக்கிற, காமவிம்மலின் – காமவெப்பத்தினாலே, வெதும்புவாரும் – சூடுகொண்டிருக்கிறவர்களும்—எ-று. காமவிம்மல் – காமமிகுதி. 181

சவிபடுதகைசால்வானந்தானொருமேனியாகக்
குவியுமீனாரமாகமின்கொடிமருங்குலாகக்
கவிரொளிச்செக்கர்க்கற்றையோதியாமழைபுண்கண்ணா
அவிர்மதிநெற்றியாகவந்திவாணைக்கின்றாரும்.

இ-ள். சவிபடு — சூரியன் அஸ்தமிப்பதாய், தகைசால் – பெருமை அமைந்த, வானந்தான் - ஆகாயமே, ஒருமேனியாக – ஒரு உடம்பாகவும், குவியும் – அவ்வாகாயத்திலேகூடின, மீன் - நக்ஷத்திரங்களே, ஆரமாக-

முத்துமாலையாகவும்,மின்கொடி—மின்னற்கொடிகளே, மருங்குலாக-இடையாகவும், கலிர் – முருக்கம்பூப்போல், ஒளி - சிவந்தநிறத்தையுடைய, செக்கர் - செவ்வானமே, கற்றை—திரட்சியையுடைய, ஓதியா—கூந்தலாகவும், மழை – மேகங்களே, உண் — உருவத்தைக்கொள்ளுகிற, கண்ணு — கண்களாகவும், அவிர் – அப்போது விளங்குகிற, மதி – சந்திரனே, நெற்றியாக நெற்றியாகவும், அந்திவான்—அந்திக்காலத்து ஆகாயத்தை, ஒக்கின்ருரும் ஒத்திருக்கிறவர்களும்—எ-று. 182

பானலுண்கண்ணும்வண்ணப்படிமுறைமாறப்பண்ணைச்
சோனைபோன்றளிகள்பம்புஞ்சுரிகுழற்கற்றைசோர
மேனிமிர்ந்தெழுந்தமாடவெண்ணிலாமுன்றிநண்ணி
வானமீன்கையின்வாரிமணிக்கழங்காடுவாரும்.

இ-ள். பானல் – பானற்பூப்போன்றனவாய், உண் – விஷயங்களைக் கிரகிக்கிற, கண்ணும்—கரியகண்களும்தாமும், வண்ணப்படி – தாமிருக்கும்படியான, முறைமாற – நிறம்வேறுபாடாகவும், பண்ணை - பெண்கள் கூட்டத்துடனே, சோனைபோன்று—மேகம்போல், அளிகள்பம்பும் – வண்டுகள் மொய்ப்பனவாகிய, சுரி – சுருளுதலையுடைய, குழற்கற்றை — கூந்தலினது திரட்சியும், சோர - அவிழ்ந்துவிழவும்,மேல் – மேலே, நிமிர்ந்து - உயர்ந்து, எழுந்த—போயிருக்கிற, மாடம்—வீட்டினது, வெள் - வெண்மையான, நிலாமுன்றில் – நிலாமுற்றத்தை, நண்ணி – அடைந்து, வானம் – ஆகாயத்துள்ள, மீன் - நக்ஷத்திரங்களை, கையின்வாரி – கையாலே அள்ளி, மணி-அழகிதான, கழங்கு – கழற்சிக்காயாக, ஆடு வாரும் - ஆடுகிறவர்களும் எ-று. முறைமாறல்— தமது நிலைகுலைதல். 183

உழையுழைபரந்தவானயாற்றுநின்றும்பர்நாட்டுக்
குழைமுகத்தாயந்தந்தபுனல்குளிர்ப்பிலவென்றூடி
இழைதொடுத்திலங்குமாடமிடைதடுமாறவேறி
மழைபொதுத்தொழுகுநீரான்மஞ்சனமாடுவாரும்.

இ-ள். உழை உழை – எந்த இடங்களிலும்,பரந்த—பரவுதலாகிற, வானயாற்றுநின்று – ஆகாசகங்கையிலிருந்து, உம்பர்நாட்டு - மேனாட்டிலுள்ள, குழை, குழைந்த - வருந்தின, முகத்து – முகத்தையுடைய, ஆயம்-தோழிக் கூட்டங்கள், தந்த – முகந்துகொண்டுவந்த, புனல் – ஜலமானது, குளிர்ப்பு-குளிர்ச்சி, இல என்று – இல்லையென்று, ஊடி – அவர்களோடு பிணங்கி, இழைதொடுத்து-இழைத்தல்செய்து செய்யவேண்டுவனவெல்லாம்செய்து, இலங்கு - விளங்குகின்ற, மாடம் – மேலுபரிகைக்கு, இடை – தமதிடையானவை, தடுமாற - துவள்வதாக, ஏறி – உயரவேறி, மழை – மேகத்தை, பொதுத்து - பொத்து, ஒழுகு — சிந்துகிற, நீரால் – ஜலத்தினாலே, மஞ்சனம் ஆடுவாரும் – ஸ்நானஞ் செய்கிறவர்களும், குழைமுகம் – குண்டலம் விளங்குகிற முகமென்றுமாம்—எ-று. 184

பன்னகவரசர்செங்கேழ்ப்பணாமணிவலிதிற்பற்றி
இன்னுயிர்க்கணவனீந்தானாமெனவிருத்திவிஞ்சை
மன்னவர்முடியும்பூணுமாரமும்பணயமாகப்
பொன்னணிபலகைசூதுதுயில்கிளர்பொருகின்றாரும்.

இ-ள். பன்னக அரசர் — சர்ப்பராஜர்களுடைய, செங்கேழ் - சிவந்த நிறமுள்ள, பணாமணி — படத்திலிருக்கிற ரத்நத்தை, வலிதில் — பலாத்காரமாய், பற்றி - பறித்துவந்து, இன் — தமக்கினியனான, உயிர்க்கணவன்- பிராணநாயகன், ஈந்தான் — கொடுத்தான், ஆமென — எனக்கேயிது தகுமென்று, இருத்தி — அதைவைத்துக்கொண்டு, விஞ்சைமன்னவர் - வித்தியாதர ராஜாக்கள், முடியும் — கிரீடங்களும், பூணும் — ஆபரணங்களும், ஆரமும்- முத்துமாலைகளும், பணயமாக — பந்தயமாகவைத்து, பொன் — பொன்னால், அணி — அலங்கிருதமான, பலகை — பலகையிலே, துயில்கிளர்-நித்திரையில்லாதவர்களாய்த் தன்போன்ற மற்றொருருத்தியுடன், சூதுபொருகின்றாரும்- சூது ஆடுகிறவர்களும், எல்லா நாயகன் தந்தனவே யானாலும் பணாமணி சிறந்ததென்றதைப் பந்தயத்தில் வையாமல் மற்றவைகளை வைத்தாடுகிறார்களென்க—எ-று. 185

தென்னகுருகுடமுட்பாடல்சித்தியரிசைப்பத்தீஞ்சொற்
பன்னகமகளிர்வள்வார்த்தண்ணுமைபாணிபேணப்
பொன்னகர்த்தரளப்பந்தர்கற்பகப்பொதும்பர்பொற்றோள்
இன்னகையரம்பைமாரையாடல்கண்டிருக்கின்றாரும்.

இ-ள். தென் — அழகாக, நகு - விளங்குகிற, குடமுள் — கடவாத்தியத்துடனே, பாடல் — பாட்டுகளை, சித்தியர் — சித்தகன்னிகள், இசைப்ப-பாட, தீஞ்சொல் - இனிச் சொற்களையுடைய, பன்னகமகளிர் — நாககன்னிகள், வள் — பலமான, வார் — தோலாற்கட்டின, தண்ணுமை — மத்தளங்களை, பாணி — கைகளாலே, பேண — முழக்க, பொற்றோள் — அழகான தோள்களும், இன்னகை — இனிமையைத்தருகிற பல்வரிசைகளுமுள்ள, அரம்பைமாரை - தெய்வப்பெண்களின், கற்பகப்பொதும்பர் — கற்பகப் பூஞ்சோலையிலே கட்டியிருக்கிற, பொன்னகர் — பொன்மயமான வீட்டிலே, தரளப்பந்தர் — முத்துப் பந்தலின்கீழே, ஆடல் — ஆடுதலை, கண்டிருக்கின்றாரும்-பார்த்திருக்கிறவர்களும்—எ-று. 186

ஆணியிற்கிடந்தகாதலகஞ்சுடவருவிபுண்கண்
சேணுயருறக்கந்தீர்ந்தசிந்தையர்செய்வதோரார்
வீணையுங்குழலுந்தத்தமிடறும்வேற்றுமையுந்தீர்ந்த
பாணிகளளந்தபாடலமிழ்துகப்பாடுவாரும்.

இ-ள். ஆணியில் — தைத்த ஆணிபோல், கிடந்த-தங்கியிருக்கிற, காதல்- ஆசையானது, அகம்சுட — மனதைச்சுட, அருவி உண்-அருவியாறு பொரு

ந்தின, கண் - கண்களில், சேண் உயர் — மிகவுநெடுநேரமாக, உறக்கம் - நித்திரை, தீர்ந்த - இல்லாத, சிந்தையர் - எண்ணங்கொண்டவர்கள், செய்வது-செய்யுஞ்செய்கைகள், ஓரார் —ஒன்றுந் தெரியாதவர்களாய், வீணையும்-யாழும், குழலும் - பொல்லாங்குழலும், தத்தம் - தங்கள்தங்களுடைய, மிடறும் - மிடற்றோசையும், வேற்றுமையும் - ஒத்திருத்தலேயன்றி வேறுபடுதலும், தீர்ந்த - இல்லாத, பாணிகள் - சங்கீதக் கிரமப்படியே, அளந்த - அளவு செய்துபாடுகிற, பாடல் — பாட்டுகளை, அமிழ்து உக - ரஸஞ்சிந்த, பாடுவாரும் - பாடுகிறவர்களும்—எ-று. 187

தண்டலைவாழைபன்னகுறங்கிடையல்குற்றட்டில்
கொண்டபூந்துகிலுங்கோவைகலைகளுஞ்சோரக்கூர்ங்கள்
உண்டலமந்தகண்ணோடூசலிட்டுலாவுகின்ற
குண்டலத்திருவில்வீசக்குரவையிற்குழற்றுவாரும்.

இ-ள். தண்டலை — சோலையிலுள்ள, வாழை - வாழைத்தண்டை, அன்ன - ஒப்பான, குறங்கிடை - தொடை நடுவிலுள்ள, அல்குல் — அல்குலாகியதட்டில் தேர்த்தட்டிலே, கொண்ட - உடுத்தின, பூம் துகிலும் - அழகிய வஸ்திரங்களும், கோவை - கோத்தமாலைகளும், கலைகளும் - மேகலைவகைகளும், சோர - அவிழ, கூர்ங்கள்-மிகவு மயக்கமுள்ளமதுவை, உண்டு-குடித்து, அலமந்த - சுழலுகின்ற, கண்ணோடு - கண்களுடனே, ஊசலிட்டு-ஊஞ்சல்போலாடி, உலாவுகின்ற - அசைகிற, குண்டலம் - காதணிகள், திருவில் - மிக்ககாந்தியை, வீச - ஜொலிக்க, குரவையில் - குரவைக் கூத்திலே, குழற்றுவாரும் —குழறி ஒலிக்கிறவர்களும்—எ-று. 188

நச்செனக்கொடியநாகக்கள்ளொடுகுருதிநக்கிப்
பிச்சரிற்பிதற்றியல்குற்பூந்துகில்கலாபம்பீறிக
குச்சரித்திறத்தினோசைகளங்கொளக்குழூக்கொண்டீண்டிச்
சச்சரிபாணிகொட்டிநிறைதடுமாறுவாரும்.

இ-ள். நாகநச்சென - பாம்பினஞ்சுபோல், கொடிய - பொல்லாத, கள்ளொடு - மதுவுடனே, குருதி - இரத்தமும், நக்கி-குடித்து, பிச்சரில் — பைத்தியகாரர்போல், பிதற்றி —குழறி, அல்குல் — அல்குல்மேலணிந்த, பூந்துகில்-அழகிய வஸ்திரத்தையும், கலாபம் — அரை நூன்மாலையையும், பீறி - கிழித்துக்கொண்டு, குச்சரித்திறத்தின் - குச்சரியென்னும்பண்ணிலே, ஓசை-சத்தம், களம்கொள - கண்டத்திலேதோன்ற, குழூக்கொண்டு - கூட்டங்கொண்டு, ஈண்டு - கூடி, சச்சரி - சர்ச்சரியென்று ஓசைதோன்ற, பாணி-பிரம தாளங்களைக்கைகளாலே, கொட்டி — மோதி, நிறை - தமதுநிற்குநிலை, தடுமாறுவாரும் - தட்டழிகிறவர்களும்—எ-று. 189

தயிர்நிறத்துறுகளுள்ளந்தள்ளுறவறிவுதள்ளிப்
பயிர்வுறத்தெய்வமென்மேற்படிந்ததுபார்மினென்று

உயிருயிர்த்திரண்டுகையுமுச்சிமேலுயரநீட்டி
மயிர்சிலிர்த்துடலுங்கூசிவாய்விரித்தொடுங்குவாரும்.

இ-ள். தயிர் நிறத்து — தயிரினது நிறத்தை, உறு - பொருந்தின, கள் - மதுவானது, உள்ளம் — மனத்தை, தள்ளுற — தடுமாறப்பண்ண அத னாலே, அறிவுதள்ளி - புத்திமயங்கி, பயிர்வுற — எல்லாரும் அஞ்ச, தெய்வம் - நமதுகுலதெய்வம், என்மேல் - என்மேலே, படிந்தது — ஆவேசமாயிற்று, பார்மினென்று — பாருங்களென்று, உயிர் உயிர்த்து — சுவாசங்களை விட்டுக்கொண்டு, இரண்டு கையும் - இரண்டு கைகளையும், உச்சிமேல் - தலைக்குமேலே, உயர — நீளமாக, நீட்டி — நீளவிட்டு, மயிர்சிலிர்த்து, உரோமபுளகிதமாய், உடலும் — உடம்பும், கூசி — கூசுதலாகி, வாய்விரித்து - ஆவென்றுகத்தி, ஒடுங்குவாரும் — ஒய்கிறவர்களும்—எ-று. 190

இத்திரத்தரக்கிமார்களீரிருகோடியீட்டப்
பத்தியருறையுந்தெய்வப்படர்நெடுந்தெருவும்பார்த்தான்
சித்தியருறையுமாடத்தெருவும்பின்னுகச்சென்றான்
உத்திசைவிஞ்சைமாதருறையுளேமுறையினுற்றான்.

இ-ள். இத்திறத்து — ஆகிய இவ்வகையான, அரக்கியார்கள் — ராக்ஷதப் பெண்கள், ஈரிருகோடி — நாலுகோடி, ஈட்டம் — கூட்டமான, பத்தியர் - வரிசையான வீடுகளை யுடையராய், உறையும் — இருக்கிற, தெய்வம் - தெய் வத்தன்மைகொண்ட, படர் - விசாலமான, நெடுந்தெருவும் — நீண்டவீதி முழுதும், பார்த்தான் — தேடினார், சித்தியர் — சித்தகன்னிகள், உறையும் - வாசம்பண்ணுகிற, மாடம் — வீடுகளையுடைய, தெருவும் - வீதியும், பின் னுக - தமக்குப் பின்புறமாக, சென்றான் — தேடிப்போயினார், உத்திசை - உப்புறமானதிக்கிலே, விஞ்சைமாதர் — வித்தியாதரகன்னிகள், உறையுளை - இருக்கும் வீதியை, முறையின் — ஒவ்வொருவீடாக, உற்றான் - தேடிப் போயினார்—எ-று. 191

வேறு

வளர்ந்த காதலர் மகரிகை நெடுமுடி யரக்கனை வரக்காணார்,
தளர்ந்த சிந்தைதம் மிடையினு நடுங்கிட வுயிரொடு தடுமாறிக்,
களந்தவா நெடுங் கருவியிற் கைகளிற் செயிரியர் கலைக்கண்ணால்,
அளந்த பாடல்வெவ் வரவுதஞ் செவிபுக வலமர லுறுகின்றார்.

இ-ள். வளர்ந்த — அதிகமான, காதலர் — ஆசையுள்ளவர்களாய், மக ரிகை — மகரதோரணவரிசைபோன்ற, நெடுமுடி - நீண்டதலைவரிசைகளை யுடைய, அரக்கனை - ராவணராட்சதனை, வரக்காணார் — வரக்காணுதவர்க ளாகி, தளர்ந்த — சோர்வான, சிந்தை — நெஞ்சானது, தம் - தங்களுடைய, இடையினும் — இடையைப்பார்க்கிலும்அதிகமாக, நடுங்கிட — துவளுதலாக, உயிரொடு — உயிருடனே, தடுமாறி - தடுமாற்றங்கொண்டு, களம் - தங்கள்

கண்டத்தோசைக்கு, தவா - தப்புதலாகாத, நெடுங்கருவியில் - நீண்டவாத்தியங்களாலும், கைகளில் - கைகளாலும், செயிரியர் - பாடகர்கள், கலைக் கண்ணால் - சாஸ்திரோக்தமாக, அளந்த - அளவாக்கிச்சொல்லுகிற, பாடல் பாட்டான், வெவ்வரவு - வெம்பாம்பு, தம்செவிபுக - தங்கள் காதிலே நுழைய, அலமரலுறுகின்றார் - துன்பமடைகிறார்கள்—எ-று. 192

புரியு நன்னெறி முனிவரும் புலவரும் புகலிலாப் பொறைகூர, எரியும் வெஞ்சினத் திகலடு கொடுந்திற லிராவணற் கெஞ்ஞான்றும், பரியு நெஞ்சின ரிவரென வயிர்த்ததோர் பகைகொடு பனித்திங்கள், சொரியும் வெங்கதிர் துணைமுலைக் குவைசுடக் கொடிகளிற் றுடிக்கின்றார்.

இ-ள். நன்னெறிபுரியும் - நன்மார்க்கத்தைச்செய்கிற, முனிவரும்- ருஷிகளும், புலவரும் - தேவர்களும், புகல் இலா - வேறே அடைதலுக் கிடமில்லாமல், பொறைகூர - பொறுத்துக்கொள்ள, எரியும் - எரிகின்ற, வெஞ்சினத்து - வெவ்வியகோபத்தினாலே, இகல் - பகைவரை, அடும்- வாதிக்கிற, கொடுந்திறல் - கொடுமையான சக்தியையுடைய, இராவணற்கு- இராவணனுக்கு, எஞ்ஞான்றும் - எக்காலத்திலும், பரியும் - இரங்குவதான, நெஞ்சினர் - மனமுடையவர்கள், இவரென - இப்பெண்களென்று, வயிர்த்தது - வயிரம் பற்றினதான, ஓர் பகைகொடு - ஒரு விரோதங்கொண்டு, பனித்திங்கள் - குளிர்ந்த சந்திரன், சொறியும் - கொட்டுகிற, வெங்கதிர்- வெவ்விய கிரணமானது, துணைமுலை - இரண்டு முலைகளாகிற, குவை- குப்பல்களை, சுட - எரிக்க, கொடிகளில் - கொடிகள்போல் துடிக்கின்றார்.

சிறுகு காலங்க ளூழிக ளாம்வகை திரிந்து சிந்தனை சிந்த, முறுகு காதலின் வேதனை யுழப்பவர் முயங்கினர் முலைமுன்றில், இறுகு சாந்தமு மெழுதுநற் குறிகளு மின்னுயிர்ப் பொறையீர, மறுகுவாட் கண்கள் சிவப்புற நோக்கினர் வயிர்த்தன ருயிர்க்கின்றார்.

இ-ள். சிறுகுகாலங்கள் - சொற்பகாலமும், ஊழிகளாம்வகை - ஊழிகாலம்போல் நீண்டிருக்கும்படி, திருந்து - அலைந்து வேறுபாடாய், சிந்தனை சிந்த - எண்ணங்குலைய, முறுகு - முதிர்ந்த, காதலின் - காமமாகிய, வேதனை - துன்பத்திலே, உழப்பவர் - வருந்துகிற பெண்கள், முயங்கினர்- தம்மை அணைந்த புருஷனாலே, முலை முன்றில் - தமது முலைகளாகிய முகடுகளிலே, இறுகு - அழுந்தப்பட்ட, சாந்தமும் - சந்தனமும் - எழுது எழுதியிருக்கிற, நற் குறிகளும் - நல்ல அடையாளங்களும் கண்டு, இன் - இனிதான, உயிர்ப்பொறை - உடம்பை அவை, ஈர - வருத்தஞ் செய்ய, மறுகு - மயக்குகின்ற, வாள் - வாளாயுதம்போன்ற, கண்கள் - நேத்திரங்கள், சிவப்புற - சிவக்க அவற்றை, நோக்கினர் - பார்த்தார்கள், வயிர்த்தனர் - வயிரங்கொண்டு, உயிர்க்கின்றார் - நெடுமூச்செறிவார்கள், முயங்கினவர் - முன்னே கூடினவர்களாய் என்க—எ-று. 194

ஆய விஞ்சையர் மடந்தைய ருறைவிட மாறிரண் டமைகோடி, தூய மாளிகை நெடுந்தெருத் துருவிப்போய்த் தொலைவின் மூன் றுலகிற்கும், நாயகன் பெருங் கோயிலை நண்ணுவான் கண்டன னளிர்திங்கள், மாய நந்திய வாண்முகத் தொருதனி மயன்மக ளுறைமாடம்.

இ-ள். ஆய் - அப்படிப்பட்ட, விஞ்சையர் மடந்தையர் — வித்தியாதர கன்னிகள், உறைவிடம் - இருக்குமில்லிடமான, ஆறிரண்டு அமைகோடி- பன்னிரண்டு கோடி, தூய - பரிசுத்தமுள்ள, மாளிகை - வீடுகளையுடைய, நெடுந்தெரு - நீண்ட வீதிமுழுதும், துருவி - தேடிக்கொண்டுபோய், தொலைவு இல் — அழிவில்லாத, மூன்றுலகிற்கும் — திரிலோகத்திற்கும், நாய கன் - அதிபனான ராவணனுடைய, பெருங்கோயிலை - பெரிய கோயிலுக்கு, நண்ணுவான் — போகும்படியானவர், கண்டனன் — பார்த்தார், நளிர் திங் கள் — பூரணசந்திரன், மாய — தோற்க, நந்திய — விளங்குகின்ற, வாள் - ஒளி பொருந்தின, முகத்து — முகத்தையுடைய, ஒருதனி — ஒப்பில்லாமல் தானே தனக்கொப்பான, மயன் மகள் — மண்டோதரி, உறை மாடம் - இருக்கும் வீட்டை கண்டனன்—எ-று. ஆறிரண்டு கூடினகோடி - அசுரர் தச்சன் மகள் மண்டோதரி. 195

கண்டு கண்ணொடு கருத்தொடு கடாவினன் காரணங் கடை நின்ற, துண்டு வேறொரு சிறப்பெங்க ளுயகற் குயிரினு முரியா ளைக், கொண்டு போந்தவன் வைத்ததோ ருறையுள்கொல் குல மணி மனைக்கெல்லாம், விண்டு வின்றட மார்பினின் மணியொத்த திதுவென வியப்புற்றான்.

இ-ள். கண்டு - அந்த வீட்டைப்பார்த்து, கண்ணொடு-தமது கண்களை, கருத்தொடு - மனத்துடனே, கடாவினன் - கூட்டியோசித்தார், காரணம்- நாம்தேடிவந்ததற்கு நிமித்தமானபொருள், கடைநின்றது உண்டு - முடிவி லேயிருந்ததாயிருக்கிறது, வேறு - வேறே, ஒருசிறப்பு - ஒருவிசேடமுள்ள தாக, எங்கள் நாயகற்கு - எங்களாண்டவனுக்கு, உயிரினும் - உயிரினுஞ் சிற ந்ததென்ன, உரியாளை - தக்கவளான பிராட்டியை, கொண்டுபோந்தவன்- கொண்டுவந்தராவணன், வைத்தது - வைக்கப்பட்டதான, ஓர் உறையுள கொல் - ஒருவீடுதானோ இந்தவீடு, குலமணி-சிறந்த ரத்நகசிதமுள்ள, மனைக் கெல்லாம் — எல்லா வீடுகளுக்கும், விண்டுவின் - விஷ்ணுவினுடைய, தடம்- விசாலமுள்ள, மார்பினின் - மார்பிலணிந்த, மணி - மாணிக்கத்தை, ஒத்தது- ஒத்திருக்கின்றது, இது என - இந்த வீடென்று, வியப்புற்றான் - அதிசயி த்தார்—எ-று. 196

அரம்பை மேனகை திலோத்தமை யுருப்பசி யாதியர் மலர்க் காமன், சரம்பெய் தூணிபோற் றளிரடி தாங்தொடச் சாமரை

பணிமாறக், கரும்பை யுஞ்சுவை கைப்பித்த சொல்லியர் காமரங் கனியாழின், நரம்பி னின்னிசை செவிபுக நாசியிற் கற்பக விரை நாற.

இ-ள். அரம்பை - மேனகை - திலோத்தமை - உருப்பசி - அரம்பையோடு கூடின இந்த நால்வரே, ஆதியர் - முதலானபெண்கள், காமன்-மன்மதனது, மலர்ச்சரம் - பூங்கணைகளை, பெய் - அடக்குகின்ற, தூணிபோல்-அம்புக் கூடுபோலவும், தளிர் - தளிர்போலவுமிருக்கிற, அடி - கணைக்கால்களை, தொட - பிடிக்கவும், சாமரை - வெண்சாமரம், பணிமாற - வீசவும், கரும்பையும் - கரும்பு ரசத்தையும், சுவை - ருசியாலே, கைப்பித்த - கசப்பென்னச்செய்த, சொல்லியர்தாம் - மிருது பாஷிகள்பாடுகிற, காமரம்கனி-இசைமுதிர்கின்ற, யாழின் - வீணையினது, நரம்பின் - தந்தியில்வருகிற, இன் இசை - மதுரப்பண்ணனது, செவிபுக - காதிலே நுழையவும், நாசியில் - மூக்கிலே, கற்பகவிரை - கற்பகப் பூமணம், நாற - பரிமளிக்கவும்.

விழைவு நீங்கிய மேன்மையோ ராயினுங் கீழ்மையோர் வெகுள்வுற்றால், பிழைகொ னன்மைகொல் பெறுவதென் றையுறு பீழையாற் பெருந்தென்றல், உழையர் கூவப்புக் கேதெனப் பெயர்வதோ ரூசலி னுளதாகும், பழையம் யாமெனப் பண்பில செய்வரோ பரிணிதா பயனோர்வார்.

இ-ள். விழைவு நீங்கின - இச்சையற்ற, மேன்மையோர் - மேம்பாட்டினர், ஆயினும் - ஆனாலும், கீழ்மையோர்-கீழானவர்கள், வெகுள்வுற்றால்-கோபங்கொண்டால், பெறுவதுபிழைகொல் - அக்கோபத்தினாலே தோஷமாமோ, பெறுவது நன்மைகொல் - நன்மையாமோ, என்று ஐயுறு - என்று சந்தேகிப்பதான, பீழையால் - பயமுள்ளவிசனத்துடன், பெருந்தென்றல்-மிகுதியாய்வருகிற தென்றற்காற்று, உழையர் - ஊழியகாரிகள், கூவ - கூப்பிட்டால், புக்கு - வந்து, ஏதென - என்ன உத்தரவு என்று, பெயர்வது-போவதான, ஓர் ஊசலின் - ஒரு ஊசற்போல், உளதாகும் - போகிறதுவருகிறதாயிருக்கும், பழையம் - வயதால் மூப்புடையோம், யாமென - நாமென்று அடங்காமல், பண்பு இல - தகாதவைகளை, செய்வரோ - செய்யார்கள், பரிணிதர் - தெரிந்தவர்கள், பயன் ஓர்வார் - தாம்செய்பவைகளால் வருகிறபயனைக் கருதுவார்கள்—எ-று. என்பதனால் வாயு அரக்கருக்குச் செல்காலமென்று போவென்றாற் போய் வா என்றால் வருகிறதாயிருக்கிறது.

198 இன்ன தன்மையி னெரிமணி விளக்கங்க ளெழில்கெடப் பொலிகின்ற, தன்ன தின்னொளி தழைப்புறத் துயில்வுறு தையலைத் தங்கவில்லான், அன்னளாகிய சானகி யிவளென வயிர்த்தகத் தெழுவெந்தீ, துன்னு மாருயி ருடலொடு சுடுவதோர் துயருழந் திவைசொன்னான்.

இ-ள். இன்னதன்மையின் — இப்படிப்பட்ட உல்லாசத்துடனே, எரி-நெருப்புநிறமான, மணிவிளக்கங்கள் — ரத்நவிளக்குகள், எழில்கெட — அழகு தோற்க, பொலிகின்ற — விளங்குகிற, தன்னது - தனது, இன் ஒளி — குளிர்ந்த தேககாந்தி, தழைப்புற — எங்குந் தோன்றுவதாக, துயில்வுறுதையலே-தூங்குகின்ற மண்டோதரியை, தகைவு இல்லான் — தடையில்லாமற்போய்க் கண்டதிருவடி, அன்னள் ஆகிய — அப்படிப்பட்ட ராஜகோபிதமுள்ள உள தாயிருக்கையால், சானகி - சீதாபிராட்டி, இவள் என — இவள்தானென்று அயிர்த்து — சந்தேகித்து என்றால் தெரியாமல், அகத்து — உள்ளத்திலே, எழு — உண்டாகுகிற, வெந்தீ — வெவ்வியகோபாக்கினி, துன்னும் — பொருந்துவதான, ஆர் உயிர் - அரியதமதுயிரையும், உடலொடு — உடம்பையும், உருபுமயக்கம் - சுடுவது தகிப்பதான, ஓர்துயர் — ஒருவிததுன்பத்தால், உழந்து — வருந்தி, இவை — இவ்வார்த்தைகளை மனத்தொடு, சொன்னான்-சொல்லலானார் — எ-று. 199

எற்பு வான்றொடர் யாக்கையாற் பெறும்பய னிகந்தனெ னிதுநிற்க, அற்பு வான்றளை யிற்பிறப் பதனொடு மிகழ்ந்து தன் னருந் தெய்வக், கற்பு நீங்கிய கனங்குழை யிவளெனிற் காகுத்தன் புகழோடும், பொற்பும் யானுமிவ் விலங்கையு மரக்கரும் பொன்றுது மின்றென்றான்.

இ-ள். எற்பு — எலும்பையே, வான் - பெரிதான, தொடர் — ஆதாரமாகவுடைய, யாக்கையால் — சரீரத்தினாலே, பெறும்பயன் — அடையும் பலனை, இகந்தனென் - அடைவேனானேன், இதுநிற்க — பிராட்டி நிலைதவறினதிருக்க நான் அடையாதிருப்பது இருக்க, அற்புவான்றளை-அன்பென்னும் பெரியபந்தத்தை, இற்பிறப்பதனொடு — குடிப்பிறப்புடனே, இகழ்ந்து-போகவிட்டு, தன் — தனது, அரும் - சொல்லுதற்கரிய, தெய்வம் — தெய்வம் போன்ற, கற்பு நீங்கிய கனங்குழை - கலங்கா நிலைகலங்கினவள், இவள் எனில் — இவளேயானால், காகுத்தன் — ஸ்ரீராமனுடைய, புகழோடும்-கீர்த்தி முழுதும், பொற்பும் — அவன்பொலிவும், யானும் — நானும், இவ் இலங்கையும் — இந்த ஊரும், அரக்கரும் — ராக்ஷதரும், பொன்றுதும் இன்று — இன்றேமடிவோம், என்றான் — என்றெண்ணினார் — எ-று. இவள் நிலை மகிழ்வு கொண்டதால் பிராட்டியென மதிப்பு. 200

மானுயர்த் திருவடிவின ளவளிவண் மாறுகொண் டனள்கூறின், தாணியக்கியோ தானவர் தையலோ வைபுறுந் தகையாளுள், கானுயர்த்ததா ரிராமன்மே னேக்கிய காதல்கா ரிகையார்க்கு, மீனுயர்த்தவன் மருங்குதான் மீளுமோ நினைந்தது மிகையென்றான்.

இ-ள். மானுயர் — மனிதரது, திருவடிவினள் — திருக்கோலமா யிருப்பாள், அவள் — அந்தப் பிராட்டி, இவள் — இவளோமனிதரில், மாறுகொண்டனள் — வேறாயிருக்கிறாள், கூறில் — இவளை யின்னொன்றுமதித்தால்,

இயக்கியோ — யக்ஷகன்னியோ, தானவர்தையலோ — அசுரர்பெண்ணோ, ஐயுறும் — சந்தேகிப்பதான, தகையாளுள் — தகுதி யுள்ளவளாயிருக்கிறாள்; கான் — பரிமளத்தாலே, உயர்த்த — விசேஷமான, தார் — மாலையணிந்த, இராமன்மேல் — ஸ்ரீராமனையே, நோக்கிய — குறித்திருக்கிற, காதல்-ஆசை, காரிகையார்க்கு — பிராட்டிக்கு, மீனுயர்த்தவன்மருங்குதான் — மன்மதனிடத்திலாவது, மீளுமோ — செல்லுமோ, நினைத்தது — முன்னே எண்ணினது, மிகை என்றான் — தப்பு என்றுகொண்டார்—எ-று. 201

இலக்க ணக்களுஞ் சிலவுள வென்னினு மெல்லைசென் றிருக்கில்லா, அலக்க ணெய்துவ தணியதுண் டென்றெடுத் தறைகுவ திவள்யாக்கை, மலர்க்கருங்குழல் சோர்ந்துவாய் வெரீஇச்சில மாற்றங்கள் பறைகின்றாள், உலக்கு மிங்கிவள் கணவனுமழிவுமிவ் வியனகர்க் குளதென்றான்.

இ-ள். சில இலக்கணங்களும் — பிராட்டிக்குளதாகிற சில லக்ஷணங்களும், உள — இவளிடத்துளவாயிருக்கின்றன, என்னினும் — என்றாலும் எல்லைசென்றிருக்கில்லா — லக்ஷணம்முழுதுஞ்சென்று முடிவுபெறா, அலக்கண் எய்துவது — இவள் துன்பத்தையடைகிறது,' அணியது — சமீபத்திலேயிருக்கிறது, உண்டென — இது தப்பாது வருமென்று, எடுத்து அறைகுவது — விதந்து சொல்லுகின்றது, இவள்யாக்கை — இவள்சரீரம், மலர்க்கருங்குழல் — பூவையணிந்தகரியகூந்தல், சோர்ந்து — அவிழ்ந்து கிடக்கிறதாய், வாய் வெரீஇ — வாயுங்குழறி, சிலமாற்றங்கள் — சிலமறுமொழிகள், பறைகின்றாள் — பிதற்றுகிறாள், இங்கிவள் — இவளுடைய, கணவனும் — புருஷனும், உலக்கும் — சாவான், இவ்வியன்நகர்க்கு — இந்தப்பெரியஊர்க்கு, அழிவும் உளது — கெடுதியும் உண்டு அறைகுவதிவள் யாக்கை, என்றான் — என்றெண்ணினார்—எ-று. 202

என்று ணர்ந்துநின் றேழுறு மிந்நிலை நிற்கவித் திறனென்னுப், பின்று சிந்தையன் பெயர்ந்தன னெடுமனை பிற்படப் பெருமேருக், குன்று குன்றிய தகையுற வோங்கிய கொற்றமா ளிகைதன்னில், சென்று புக்கன னிராவணற் கெடுப்பருங் கிரியெனத் திரடோளான்.

இ-ள். என்றுணர்ந்து — என்றெண்ணி, நின்று — சற்றேபொறுத்து, எழுறும் இந்நிலை — இவள் இன்பத்தையடைகிற நிலைமையும், இத்திறன் — இவ்வகைக் குறிகளும், நிற்க என்னு — ஒருவகையிலே இருக்கட்டுமென்று, பின்று சிந்தையன் — மீண்ட மனத்தினராகி, நெடுமனை — அந்த நீண்டவீடு, பிற்படப் பெயர்ந்தனன் — பின்னாகப்போனார், பெருமேருக்குன்று — பெரிய மேருமலை, குன்றியதகைஉற — குட்டையென்னும்படி, ஓங்கிய — நீண்ட, கொற்றமாளிகை தன்னிற்சென்று — ஒருவெற்றி வீட்டிலேபோய், இராவணற்கு — இராவணனாலும், எடுப்புஅரும் — எடுக்கக்கூடாத, கிரியென

மலையென்னும்படி, திரள் – திரண்ட, தோளான் – தோள்களையுடைய திருவடி, புக்கனன் - உள்ளே நுழைந்தார் நுழைந்த உடன்—எ-று. 203

நிலந் துடித்தன நெடுவரை பொடித்தன நிருதர்தங் குலமாதர், பொலந் துடிக்கமை மருங்குல்போற் கண்களும் புருவமும் பொற்றோளும், வலந் துடித்தன மாதிரந் துடித்தன தடித்தின்றி மதிவானம், கலந் திடித்தன வெடித்தன பூரண மங்கல கலசங்கள்.

இ-ள். நிலந்துடித்தன – பூமி அதிர்ந்தன, நெடுவரை – நீண்ட மலைபோன்ற வீடும், பொடித்தன – பொடிப்பொடியா யுதிர்தலாயின, நிருதர்தம்குல மாதர் - ராக்ஷதப் பெண்களுடைய, பொலந் துடிக்கு - அழகான உடுக்கைக்கு, அமை – ஒப்பான, மருங்குல்போல் - இடையைப்போல், கண்களும் - நேத்திரங்களும், புருவமும் – புருவங்களும், பொன்தோளும் – அழகிய தோள்களும், வலம் – வலப்புறம், துடித்தன - துடிப்புள ஆயின, மாதிரந் துடித்தன – திசைகளெல்லா நடுங்கின, தடித்து இன்றி – மின்னலில்லாமல், மதிவானம் - சந்திரன் விளங்குகிற ஆகாயத்திலே, கலந்து – அபூர்வமாய் வந்து, இடித்தன – இடிமுழங்கின, பூரணம் – நீர்நிறைந்த, மங்கல கலசங்கள் - புதுக்குடங்கள், வெடித்தன – கள்ளுப்பொங்கி வெடிப்பதாயின—எ-று. 204

புக்கு நின்றுதன் புலன்கொடு நோக்கினன் பொருவருந் திருவுள்ளம், நெக்கு நின்றன னீங்குமந் தோவிந்த நெடுநகர்த் திருவென்று, எக்குலங்களின் யாவரே யாயினு மிருவினை யெல்லோர்க்கும், ஒக்கு மூழ்முறை யல்லது வலியதொன் றில்லென வுணர்வுற்றான்.

இ-ள். புக்குநின்று – போய்நின்று, தன்புலன்கொடு – தமது மனவொருமையாய், நோக்கினன் – பார்த்தார், பொருஅரும் – ஒப்பில்லாத, திருஉள்ளம் – கலங்காமனம், நெக்கு – கலங்கி, நின்றனன் – நின்றவர், அந்தோ-ஐயோ, இந்த நெடுநகர்த்திரு – இந்த நீண்ட வீட்டிலுள்ள லட்சுமி, நீங்கும் என்று - விலகிப்போவாளென்று, எக்குலங்களின் – எந்தக் குலத்திலேதானுவதுள்ள, யாவரேயாயினும் – யார்தான் ஆனாலும், எல்லோர்க்கும் – சகலருக்கும், இருவினை ஒக்கும் – புண்ணிய பாபங்கள் சரியே, ஊழ்முறை அல்லது-வகுத்த விதியே அல்லாமல், வலியதொன்று – பெருவலியுள்ள ஒருபொருள், இல்லென – வேறே இல்லையென்று, உணர்வுற்றான் – யோசித்தார்—எ-று. இவ்வூர் புண்ணியவலியா லிதுகாறுமுளதாகி பாபவலியால் இவனுக்கில்லையாய்ப்போமென்று கருத்து. 205

நூற் பெருங்கட னுணங்கிய கேள்விய னோக்கின னியனென்றுள், வேற் பெருங்கடல் புடைபரந் தீண்டிய வெள்ளிடை வியன்கோயில், பாற் பெருங்கடற் பன்மணிப் பஃறிறைப் பரப்புடைப் படர்வேலை, மாற் பெருங்கடல் வதிந்ததே யனையதோர் வளப்பினன் றுயில்வானை.

இ-ள். நூல் — கலைஞானங்களான, பெருங்கடல் — பெரிய கடல்மு தம், நுணங்கிய — சென்றுலாவின, கேள்வியன் — வியாகரணபண்டிதா நோக்கினன்-பார்த்தார், இயல் — எந்நேரமும் உலாவுவதிலே, நோன் — ப முள்ள, தாள் — கால்களையுடைய, வேல் — வேலாளிகளான, பெருங்கட பெரியகூட்டங்கள், புடை — சுற்றிலும், பரந்து — பரவுதலாய், ஈண்டி கூடியிருக்கிற, வெள்இடை — வெறுநிலமுமுள்ள, வியன்கோயில் — பெரி வீடுஆகிய, பாற் பெருங்கடல் — பெரியபாற்கடலிலே, பன்மணி — பலரத் பரணங்களாகிற, பல்திரைப்பரப்பு — அநேக அலைவரிசைகளை, உடை கொண்ட, படர்வேலை — பரவியஒருகடலிலே, மாற்பெருங்கடல் — ஆசை யாகிய ஒருபெரியகடல், வதிந்ததே அனையது — தங்கியிருக்கிறதையே பே ல்வதான, ஓர்வளப்பினன் — வீடே ஒருகடல் அதனுள் ஆபரணங்களுள் அவன் ஒருகடல் அதனுள் 'அவன் ஆசை ஒருகடலென்கிற வளப்பத் யுடையவனாகத் தூங்குகிறவனைக்கண்டார்—எ-று. 20

குழவி ஞாயிறு குன்றிவர்ந் தனையன குருமணி நெடுமோலி இழைக ளோடுநின் றிளவெயி லெறித்திட விரவெனும் பொரு வீய, முழைகொண் மேருவின் பொகுட்டிடைக் கனகனை முரு கிய முரட்சீயம், தழைக டோளொடு தலைபல பரப்பிமுன் றுயி வதோர் தகையானை.

இ-ள். குழவிஞாயிறு — இளஞ்சூரியன், குன்று - மலைமேல், இவர் தனையன — உதயமானாற்போல், குருமணி - காந்தியுள்ள ரத்நங்கள், நெ மோலி — நீளப்பதித்துள்ள கிரீடங்களை, இழைகளோடு — ஆபரணங்களுட னே, நின்று — நிலைகொண்டு, இளவெயில் — சிவந்த காந்தியை, எறித்திட வீச, இரவெனும் — இராத்திரியென்கிற, பொருள்வீய — பெயர்கெட, முழை கொள் — குகையைக்கொண்ட, மேருவென்பொகுட்டிடை - மேருவென்கி மலையிலே, கனகனை — இரணியனை, முருக்கிய - கொன்ற, முரண்சீயம் வலிய நரசிங்கமானது, தழைகொள் — விரிதலைக்கொண்ட, தோளொடு தோள்களுடனே, தலைபலபரப்பி — பலதலைகளையும் பரப்பிக்கொண்டு, முன்- முன்னே, துயில்வது — தூங்குவதுபோன்ற, ஓர் தகையானை — ஒருதகுதியை யுடையவனை—எ-று.மேருமலைபோல்வது அவன் வீடு அதனுட்குகைபோல் வது அவன் படுக்குமிடம் அதில் அவன் நரசிங்கம்போல் தூங்குகிறானென்க.

ஆய பொற்றலத் தாய்வளை யரம்பைய ராயிர ரணிநின்று, தூய பொற்கவ ரித்திர ளியக்கிடச் சுழிபடு பசுங்காற்றின், வீய கற்பகத் தேன்றுளி விராயன வீழ்தொறு நெடுமேனி, தீய நற் றொடிச் சீதையை நினைதொறு முயிர்த்துயிர் தேய்வானை.

இ-ள். ஆய் — அப்படிப்பட்ட, பொற்றலத்து - பொன்மயமான இடத் திலே, ஆய்வளை — நல்ல வளையல்களணிந்த, அரம்பையர் — தெய்வப்பெண் கள், ஆயிரர் — ஆயிரம் பேர்கள், அணிநின்று — வரிசையாய் நின்று, தூய—

வெண்மையான, பொன் — பொன்காம்புள்ள, கவரித்திரள் — சாமரங்கள், இயக்கிட — வீச, சுழிபடு — சுழன்று வருகிற, பசுங்காற்றின் — இளந்தென்றலுடனே, கற்பகவீய — கற்பகப்பூவிலுள்ள, தேன்துளி — தேனினது துளிகள், விராயன — கலந்தனவாகி, வீழ்தொறும் — அவன்மேல் விழும்போதெல்லாம், நெடுமேனி — நீண்ட உடம்பு, தீய — கருக, நற்செருடி — நல்லவளையல்களணிந்த, சீதையை — சீதாபிராட்டியை, நினைதொறும் — எண்ணும்போதெல்லாம், உயிர்த்து — நெடுமூச்சுவிட்டு, உயிர் — உடம்பு, தேய்வானை — தளர்கிறவனைக் கண்டார்—எ-று. 208

குழந்தை வெண்மதிக் குடுமிய னெடுவரை குலுக்கிய குலத்தோளைக், கழிந்து புக்கிடை காந்தன வநங்கன்வெங் கடுங்கணை பலபாய, உழந்த வெஞ்சமத் துயர்திசை யானையி னொளிமருப் புற்றுற்ற, பழந்த ழும்பினுக் கிடையிடை யேசில பசும்புண்க ளசும்பூற.

இ-ள். குழந்தை வெண்மதி — வெள்ளிய இளஞ்சந்திரனை, குடுமியின்-தலையிலேகொண்ட பரமசிவனது, நெடுவரை — நீண்டகைலைமலையை, குலுக்கிய — அசைத்துப்பேர்த்த, குலத்தோளை — சிறந்ததோள்களை, கழிந்துபுக்கு-உருவிப்போய், இடை — அந்தத் தோள்களிலே, காந்தன — அழுந்தின ஆக, அநங்கன் — மன்மதனது, வெங்கடுங்கணை — வெவ்வியகரோமுள்ள அம்புகள், பலபாய — அநேகமாய்த் தைத்துக்கொண்டேயிருக்க அதனாலே, உழந்த-வருந்திச்செய்த, வெஞ்சமத்து — வெவ்விய சண்டையிலே, உயர் — உயர்ந்த, திசையானையின் — திக்கஜங்களின், ஒளி — வெண்மையான, மருப்பு — கொம்புகள், உற்று — பட்டு, இற்ற — ஒடிந்திருக்கிற, பழந்தழும்பினுக்கு — பழையகாயத்துக்கு, இடை இடையே — நடு நடுவே, சில பசும்புண்கள் — சில பச்சைப்புண்களாய், அசும்புஊற — ஊன்சுரந்து மடியக்கண்டார்—எ-று. 209

சாந்த ளாவிய கலவைமேற் றவழ்வுறு தண்டமிழ்ப் பசுந்தென்றல், வந்து காமவெங் கனலினுக் குமிழதட் டுருத்தியி னுயிர்ப்பேறக், காந்தண் மென்விரற் சனகிமேன் மனமுதற் கரணங்கள் கடிதோடப், பாந்த ணீங்கிய முழைமெனக் குழைவுறு நெஞ்சுபாழ் பட்டானை.

இ-ள். கலவைச்சாந்து — கூட்டுவர்க்கச்சந்தனம், அளாவிய — மேல்பூசியிருக்கிற மார்பிலே, தவழ்வுறு — வீசுகிற, தண்தமிழ் — குளிர்ந்த தமிழோடு பிறந்துவருகிற, பசுந்தென்றல் — இளந்தென்றலாலே, வந்து — மூளுகிற, காமவெங்கனலினுக்கு — வெவ்விய காமாக்கினிக்கு, உமிழ் — விடுகிற, அதள் துருத்தியின் — தோல்துருத்தியைப்போல், உயிர்ப்பு — அவன் மூக்குச்சுவாசம், ஏற — அதிகமாக, காந்தள் — காந்தள் மலர்போல, மெல்விரல் — மெல்லிய விரல்களையுடைய, சனகிமேல் — சீதைமேலே, மனமுதல் — மனமுதலான, கரணங்கள் — அந்தக் கரணங்கள், கடிதுஓட — விரைந்துசெல்ல, பாந்

தன் - பாம்பு, நீங்கிய - போகலான, முழையென - குகைபோல், குழைவுறு- நொந்திருக்கிற, நெஞ்சு - உள்ளம், பாழ்பட்டானை - பாழாயிருக்கிறவனைக் கண்டார்—எ-று. 210

வேறு

கொண்டபேருக்கமூளத்திசைதொறுங்குறித்துமேனாள்
மண்டியசெருவின்வீரத்தோள்களால்வாரிவாரி
உண்டதுதெவிட்டிப்பேழ்வாய்க்கடைகளோறொழுகிப்பாயும்
அண்டர்தம்புகழிற்றோன்றும்வெள்ளெயிற்றமைதியானை.

இ-ள். கொண்ட - அவன் கொண்டிருக்கிற, பேர்ஊக்கம் - பெரிதான தயிரியம், மூள - மேன்மேலாக, திசைதொறும் - திக்குகளெல்லாம், குறித்து - ஜெயிக்க எண்ணி, மேல்நாள் - முன்னாள், மண்டிய - நெருங்கின, செருவில் - சண்டையில், வீரத்தோள்களால் - ஜெயம்பண்ணின கைகளாலே, வாரி வாரி - அள்ளி அள்ளி, உண்டது - சாப்பிட்டது, தெவிட்டி- அதிகமாய், பேழ்வாய் கடைகள்தோறு - அகன்ற கடைவாய்களெல்லாம், ஒழுகிபாயும் - ஒழிகிவழிகிற, அண்டர்தம் - தேவர்களுடைய, புகழில் - கீர்த்திபோல், தோன்றும் - விளங்குகிற, வெள் - வெண்மையான, எயிறு - வக்கிரமானபற்கள், அமைதியானை - தோன்றுகிறவனைக் கண்டார்—எ-று.

வெள்ளிவெண்சேக்கைவெந்துபொறியெழவெதும்புமேனி
புள்ளிவெண்மொக்குளென்னப்பொடித்துவேர்கொதித்துப்பொங்க
கள்ளவிழ்மாலைத்தும்பிவண்டொடுங்கரிந்துசாம்ப
ஒள்ளிணர்மாலைதீயவுயிர்க்கின்றவுயிர்ப்பினானை.

இ-ள். வெள்ளி - வெள்ளிபோல, வெண் - வெண்மையான, சேக்கை- மல்லிகைப்பூப் படுக்கையானது, வெந்து - வேவுதலாய், பொறிஎழ - நெருப்புப்பொறிகள் தோன்ற, வெதும்பு - அவ்வளவுக்கிரமான, மேனி - சரீரத்திலே, புள்ளி - புள்ளி புள்ளியாய், வெண்மொக்குளென்ன - வெள்ளியநீர்க்குமிழிகள்போய், வேர்பொடித்து - வேர்வைகள் பொடிப்பொடியாய், கொதித்து - கொதித்தலாகி, பொங்க - பின்னும் பின்னும் வேர்வை அதிகமாக, கள் அவிழ் - தேன்விரிவதான, மாலை - மாலையில்மொய்க்கிற, தும்பி - தும்பிகளும், வண்டொடு - கருவண்டுகளுடனே, கரிந்துசாம்ப - தீந்து அவிய, ஒள் - பிரகாசமுள்ள, இணர்மாலை - கொத்துமாலைகள், தீய - கரிய, உயிர்க்கின்ற - சுவாசிக்கிற, உயிர்ப்பினானை - சுவாசமுள்ளவனைக்கண்டார்—எ-று.

தேவியனேமியானிற்சிந்தைமெய்த்திருவினைகப்
பூவியலமளிமேலாப்பொய்யுறக்குறங்குவானைக்
காவியங்கண்ணிதன்பாற்கண்ணியகாதனீரின்
ஆவியையுயிர்ப்பென்றேதுமம்மியிட்டரைக்கின்றானை.

இ-ள். தே இயல் - தெய்வமாகவிளங்குகிற, நேமியானில் - சக்கரவர்த்தியைப்போல், சிந்தை - அவன் மனமானது, மெய்த்திருவின் - மெய்யான

பிராட்டி விஷயத்திலே உண்மையான செல்வத்திலே, ஏக – செல்ல, பூ. இயல் – புஷ்பங்களாலலங்கிருதமான, அமளிமேலா – மெத்தைமேல், பொய் உறக்கு – பொய்நித்திரையாய், உறங்குவானை – தூங்குகிறவனை, காவி அம் – நீலோற்பலம்போலழகிதான, கண்ணி தன்பால் – கண்களையுடைய பிராட்டி விஷயத்திலே, கண்ணிய – கருதுகிற, காதல் – ஆசையாகிய, நீரின்-ஜலத்தினுலே, ஆவியை-உயிரை, உயிர்ப்புஎன்றூதும்-சுவாசமென்று சொல்லுகிற, அம்மியிட்டு – அம்மியிலேவைத்து, அரைக்கின்றானை – அரைக்கிறவனைக் கண்டார். சக்கரவர்த்திக்கு மனஞ்சென்றது – மெய்சொல்லுதலில், திருவானபிராட்டி விஷயத்திலே இராவணன் மனஞ்சென்றதென்று பிரிக்க.

மிகுந்தகைநினைப்புமுற்றவுருவெளிப்பட்டவேலை
நகுந்தகைமுகத்தன்காதனடுக்குறுமெய்யன்வார்தேன்
உகுந்தகைமொழியாண்முன்னமொருவகையுறையுளுள்ளே
புகுந்தனளன்றேயென்றுமயிர்புறம்பொடிக்கின்றானை.

இ-ள். தகைமிகும் – பிராட்டி அழகிலே மிகுவதான, நினைவுமுற்ற – எண்ணமுடிவாக, உரு – அவள்வடிவு, வெளிப்பட்டவேலை – கண்ணுக்கு வெளியே தோற்றினபோது, நகும் – சிரிப்பதான, தகைமுகத்தன் – பெருமையுள்ள முகத்தையுடையவனாய், காதல் – ஆசையாலே, நடுக்குறு – அஞ்சுகிற, மெய்யன் – சரீரத்தையுடையவன், வார் – ஒழுகுகிற. தேன் – தேன் போல், உகு – சிந்துகிற. தகை – அழகுள்ள, மொழியாள் முன்னம் – வசனத்தையுடைய பிராட்டி நமக்குமுன்னே, ஒருவகை – ஒருபடிதிருந்தி, உறையுளுள்ளே – நமதிருக்கைக்குள்ளே, புகுந்தனள் அன்றே – வந்தாளல்லவோ, என்று – என்பதாய், மயிர் – உரோமங்கள், புறம் – மேலெல்லாம், பொடிக்கின்றானை – சிலிர்க்கிறவனைக் கண்டார்—எ-று. 214

மென்றொழிற்கலாபமஞ்ஞைவேட்கைமீக்கூறுமேனும்
குன்றொழித்தொருமாக்குன்றினரிதிற்சேர்கொள்கைபோல
வன்றொழிற்கொற்றப்பொற்றோண்மணந்தருமயிலேயன்னார்
ஒன்றொழித்தொன்றினேகவரியதோரொழுக்கினானை.

இ-ள். மென்றொழில் – மெல்லிதான விசித்திரங்களையுடைய, கலாபம் – வாலைக்கொண்ட, மஞ்ஞை – மயிலானது, வேட்கை – ஆசையை, மீக்கூறும் எனும் – அதிகமாய் அடையுமே ஆனாலும், குன்று – தான் இருக்கு மலையை, ஒழித்து - விட்டு, ஒருமாக்குன்றில் - இன்னமொரு நீலமலைமேலே, அரிதில் – வருத்தத்துடனே, சேர் கொள்கைபோல – சேருகிற தன்மையைப்போல், வன்றொழில் – பலமான செய்கைகளையுடைய, கொற்றம் – வெற்றிகொண்ட, பொன்தோள் – அழகானதோளை, மணந்து – கூடி, அரு – பிரிய அரியதான, மயிலே – மயிலையே, அன்னார் – ஒத்தபெண்கள், ஒன்று – தாம்கூடின ஒருதோளை, ஒழித்து – விட்டு, ஒன்றின் - மற்றொருதோளிலே, ஏக – செல்ல, அரியது – அரியதான, ஓர் – ஒரு, ஒழுக்கினானை – தோள்வரி.

ளைகளுள்ளவனைக் கண்டார்—எ-று. ஒவ்வொரு தோளே ஒவ்வொருத் திக்கு கூடப் போதுமானதாயிருக்கிறதென்க. 215

தழுவாநின்றகருங்கடன்மீதுதயகிரியிற்சுடர்தயங்க
எழுவானென்னமின்னிமைக்குமாரம்புரளுமியல்பிற்றாய்
முழுவானவராயுலகமொருமூன்றுங்காக்குமுதற்றேவர்
மழுவாணேமிகுலிசத்தின்வாய்மைதுடைத்தமார்பானை.

இ-ள். தழுவாநின்ற கருங்கடல்மீது — எல்லாங்கொள்வதான இராவணனாகிய கரிய கடலின்மேலே தோள்களான, உதயகிரியில் — உதயகிரியிலே, சுடர்தயங்க — தனது கிரணங்கள் விளங்க, எழுவானென்ன — உதிக்கிற சூரியன்போல, மின் இமைக்கும் — ஒளிவிளங்குகிற, ஆரம் — ரத்நமாலைகள், புரளும் — அசைவதான, இயல்பிற்றாய் - சுவபாவமுள்ளதாய், முழுவானவராய் - முழுதும் தெய்வங்களேயாய், உலகமொரு மூன்றும் — ஒரு மூன்றுலகத்தையும், காக்கும் — ஆளுகின்ற, முதல் — பிராதானியமுள்ள, தேவர் — தேவர்களான மும்மூர்த்திகளுடைய, மழுவாள் — மழுவாகியவாள், நேமி — சக்கரம், குலிசத்தின் — வச்சிராயுதம் ஆகிய இவைகளின், வாய்மை-கூறியமுனையை, துடைத்த - மழுங்கச்செய்த, மார்பானை - மார்புள்ளவனைக் கண்டார்—எ-று. மார்பையே உதயகிரியெனவுமாம், நான்முக னிவனுக்குறவாதலால் ஈண்டு முதற்றேவரென்றது, உருத்திரன் விஷ்ணு இந்திரனை என்க. 216

வேறு

தோடுழுதண்டார்வண்டுந்திசையானைமதந்துதைந்தவண்டுஞ்சுற்றி
மாடுழுதநறுங்கலவைவயக்களிற்றின்சிந்தூரத்தைமாறுகொள்ளக்
கோடுழுதமார்பானைக்கொலையுழுதவடிவேலின்கொற்றமஞ்சித்
தாடொழுதபகைவேந்தர்முடியுழுததழும்பிருந்தசரணத்தானை.

இ-ள். தோடுஉழு — இதழ்களிலே ஊர்கிற, தண்தார் — குளிர்ந்த மாலையிலேயுள்ள, வண்டும் — வண்டுகளும், திசையானை — திக்கஜங்களின், மதம் துதைந்த — மதங்களிலே மொய்க்கிற, வண்டும் — வண்டுகளும், மாடுசுற்றி- பக்கமெல்லாம் சூழ்ந்து, உழுத — மொய்க்கலான, நறுங்கலவை — மார்பிலே பூசின நல்ல கலவைச்சந்தனம், வயம் - இவனாலே வெற்றிகொண்ட, களிற்றின் — யானைமுகத்திலணிந்த, சிந்தூரத்தை — சிவந்தபொட்டை, மாறுகொள்ள - விரோதிக்க, கோடுஉழுத — அந்த யானைக்கொம்புகள் பதிந்த, மார்பானை — மார்புள்ளவனை, கொலையுழுத — கொலைசெய்த, வடிவேலின் — இவனது கூரியவேலின், கொற்றம் - வெற்றிக்கு, அஞ்சி — பயந்து, தாள்-இவன் பாதங்களை, தொழுத - வணங்கின, பகைவேந்தர் — முன்பகைவராயிருந்த அரசர்கள், முடிஉழுத — கிரீடங்கள்பதிந்த, தழும்புஇருந்த — தழும்புகள்பொருந்தின, சரணத்தானை — கால்களுள்ளவனைக் கண்டார்—எ-று. 217

வேறு

கொண்டதோருருவமாயன்குறளினுங்குறுகநின்றான்
திண்டலைபத்துந்தோள்களிருபதுந்தெரியநோக்கிக்
கண்டனன்காண்டலோடுங்கருத்தின்முன்காலச்செந்தீ
விண்டனகண்கள்கீண்டுவெடித்தனகீழுமேலும்.

இ-ள். கொண்டது – இவர் கொண்டிருப்பதான, ஓர் உருவம் – ஒரு வடிவு, மாயன் – திருமால்கொண்ட, குறளினும் – வாமனரூபத்திலும், குறுக நின்றான் – குட்டையாகநின்று, திண்தலை – அவனது திண்ணியதலைகள், பத்தும் – பத்தையும், தோள்கள் இருபதும் – இருபது தோள்களையும், தெரியநோக்கி – இவனே ராவணனென்று தெரிவதாகப் பார்த்து, கண்டனன் – தெரிந்தார், காண்டலோடும் – தெரிந்தவுடனே, கருத்தின்முன் – அவர் நினைவுக்குமுந்தி, கண்கள் – நேத்திரங்கள், காலச்செந்தீ – சிவந்த காலாக்கினியை, விண்டன – வெளியேவிட்டன, கீழும்மேலும் கீண்டுவெடித்தன – கீழும்கிழிந்து மேலும் பிளக்களாயின—எ-று. கீழ்கண்டு மேல்வெடித்தன எனக்கூட்டுக. 218

வேறு

தோளாற்றலென்னாகுமேனிற்குஞ்சொல்லென்னும்
வாளாற்றகண்ணாளைவஞ்சித்தான்மணிமுடியென்
தாளாற்றலாலிடித்துத்தலைபத்துந்தகர்த்தென்றன்
ஆளாற்றல்காட்டேனாலடியேனைமுடியேனே.

இ-ள். தோள் – இவனுடைய தோள்களின், ஆற்றல் – பலமானது, என் ஆகும் – யாதுபயன்தரும், புஜபலமுள்ளவன் (வஞ்சித்ததனாலே பழியையேதரும்) என்றபடி, மேல் (இப்போதேயன்றி) இனிமேலும், நிற்கும்-பரதாரத்துரோகியென்று நிற்பதான, சொல் – சொல்லால், என் ஆம்-யாதுண்டாம் (பாவமேவிளையும்) வாள் ஆற்ற – மிகவும்வாளையே ஒத்த, கண்ணாளை – கண்களையுடைய பிராட்டியை, வஞ்சித்தான் – பழியும்பாவமும் வளர வஞ்சனைசெய்து கொண்டுவந்த இவனுடைய, மணிமுடி – ரத்நகிரீடங்களை, என் – என்னுடைய, தாள் ஆற்றலால் – கால்வலியாலே, இடித்து-உதைத்துத்தள்ளி, தலைபத்தும் – பத்துத்தலைகளையும், தகர்த்து – உடைத்து, என்தன் – எனதான, ஆள் ஆற்றல் – அடிமைசெய்வதை, காட்டேன்-செய்யாதிருக்கிறேன், ஆல் – ஆகையாலே, அடியேனை – ஸ்ரீராமனுக்குத் தாசனாகி, முடியேன் – முடிவுபெறேன்—எ-று. 219

நடித்துவாழ்தகைமையதோவடிமைதானன்னுதலைப்
பிடித்தவாளரக்கனார்யான்கண்டும்பிழைப்பரோ
ஒடித்துவான்றோளைத்துத்தலைபத்துமுதைத்துருட்டி
முடித்திவ்வூர்முடித்தான்மேன்முடிவதெலாமுடிந்தொழிக.

இ-ள். அடிமைதான் - அடிமைசெய்கிறது என்ன, நடித்துவாழ் தகைமைதோ — கூத்தாடித்திரிகிற தகுதியுள்ள ஒருசெய்கையோ, நன்னுதலை-நல்லநெற்றியையுடைய சீதாபிராட்டியை, பிடித்த — வஞ்சித்துக்கொண்டுவந்த, வாள் - வாளாயுதத்தையுடைய, அரக்கனுர் — ராக்ஷதப்பயல், யான்கண்டும்-நான்காணக்கிடைத்தும், பிழைப்பரோ — தப்பிப்போறதோ, வாள் — பெரிய, தோள் அனைத்தும்— இருபது தோள்களையும், ஒடித்து — என்கைகளாலொடித்து, தலைபத்தும் - பத்துத்தலைகளையும், உதைத்து —என் கால்களாலே உதைத்து, உருட்டி — கீழே உருளப்பண்ணி, முடித்து - முன்னே இவனைக்கொண்டு, இவ்வூர் - இந்த ஊரையும், முடித்தால் — அழித்தால், மேல்-அதற்குமேல், முடிவதெல்லாம் — முடிகிறவையெல்லாம், முடிந்தொழிக-முடிந்தேதீர்க என்ருல் முன்னே இவனைக்கொன்று ஊரையழிக்கத்தொடங்கினுல் நம்மோடு இவன்மகன் தம்பிமுதலாயினேர்வந்து பொருதாலும் அவர்களையுங் கொல்லுகிறேனென்று கருத்து, இவனைக்கண்டு தப்பவிடுகிறது அடிமைத்தனமன்று — இவ்வளவுஞ் செய்தாலல்லவோ அடிமைத்தனம் சரியாமென்கிருர் —எ-று. 220

என்றாக்கியெயிறுகடித்திருகரனும்பிசைந்தெழுந்து
நின்றாக்கியுணர்ந்துரைப்பானேமியோன்பணியன்ருல்
ஒன்றாக்கியொன்றிழைத்தலுணர்வுடைமைக்குரித்தன்ருல்
பின்றாக்கினிதுசாலப்பிழையாகுமெனப்பெயர்ந்தான்.

இ-ள். என்று ஊக்கி — என்று முயற்சிசெய்து, எயிறுகடித்து — பல்லைக்கடித்து, இருகரனும் — இரண்டுகைகளையும், பிசைந்தெழுந்து — முறுக்கிக்கொண்டெழுந்து, நின்று — சற்றேநின்று, ஊக்கி — உற்சாகங்கொண்டு, உணர்ந்து - ஆலோசித்து, உரைப்பான் — தம்மனத்தொடு சொல்லுகிருர், நேமியோன் — சக்கரவர்த்தித் திருமகன், பணி அன்று — இப்போது நாம் எண்ணினபடிசெய்யச் சொன்னதில்லை, ஒன்று — பிராட்டியைக்கண்டு போய்ச்சொல்லுகிற ஒருகாரியத்தை, ஊக்கி — முயற்சித்து, ஒன்று - மற்ருெருகாரியத்தை, இழைத்தல் — செய்கிறது, உணர்வுடைமைக்கு — அறிவுடைமைக்கு, உரித்து அன்று — தக்கதல்ல, பின் - பின்பு, தூக்கின்-ஆலோசித்தால், இது-இவனைக்கொல்ல நினைக்கிறது, சால - மிகவும், பிழையாகும் என — தவறுதலுளதாமென்று, பெயர்ந்தான் - அவ்விடத்தை நீங்கினுர்—எ-று. 221

ஆலம்பார்த்துண்டவன்போலாற்றலமைந்துளரெனினும்
சீலம்பார்க்குரியோர்களெண்ணுதுசெய்பவோ
மூலம்பார்க்குறினுலகைமுற்றுவிக்குமுறைதெரினும்
காலம்பார்த்திறைவேலைகடவாதகடலொத்தான்.

இ-ள். பார்த்து — தேவர்கள் துன்பத்தைக்கண்டு, ஆலமுண்டவன் போல் — நஞ்சுண்ட கடவுள்போல், ஆற்றல் — சாமர்த்தியம், அமைந்துளர்-பொருந்தியிருப்பவர்கள், எனினும் — என்ருலும், சீலம் — தாம்செல்லுங்கிரமத்தை, பார்க்க உரியோர்கள் - ஆலோசிக்கத்தக்கவர்கள், எண்ணுது - ஆலோ

சியாமல், செய்பவோ — செய்வார்களா செய்யார்கள், மூலம் — இவர் ஆலோசனைக்குக்காரணம் என்னையென்று, பார்க்குறின் — பே ..சித்தால், உலகை- உலகமுழுதும், முற்றுவிக்கும் — முடியச்செய்கிற, முறை — நீதியுள்ளதுதானென்று, தெரினும் — தனக்கே தெரிந்தாலும், காலம்பார்த்து - தான் அழிக்குங்காலத்தையெண்ணி, இறை — கொஞ்சமேனும், வேலைகடவாத — கரைகடவாதிருக்கிற, கடல் - கடலை, ஒத்தான் — ஒத்தவரானுர்—எ-று. 222

இற்றைப்போர்ப்பெருஞ்சீற்றமென்ஞேடுமுடிந்திடுக
கற்றைப்பூங்குழலாளைச்சிறைவைத்தகண்டகனை
முற்றப்போர்முடித்ததொருகுரங்கென்றுன்முனைவீரன்
கொற்றம்போர்ச்சிலைத்தொழிற்குக்குறைவுண்டாமெனக்குறைந்தான்.

இ-ள். இற்றை - இன்றுண்டான, போர் — பொருதற்குரிய, பெருஞ்சீற்றம் — பெருங்கோபமானது, என் — யாதுகாரணத்தால், ஓடும் — இப்படி நீளுகிறதாயிருக்கிறது ஆண்டான்காரியமென்று நீளுகிறதே ஆனுலும் கோபமேநீ, முடிந்திடுக - அடங்குக, கற்றை - திரட்சியான, பூங்குழலாளை - பூவையணிந்த கூந்தலையுடைய பிராட்டியை, சிறைவைத்த - சிறையிலே அமைத்த, கண்டகனை - துஷ்டனை, முற்ற — முடிவாக, போர்முடித்தது — சண்டைசெய்துகொன்றது, ஒருகுரங்கு என்றுல் - ஒருவானரமென்றுசொல்லலானுல், முனைவீரன் — அரக்கரைக் கொல்லவே முனைந்துநிற்கிற ஐயராமனுடைய, கொற்றம் — வெற்றிகொண்ட, போர் — வலிமையுள்ள, சிலைத்தொழிற்கு — வில்விசையத்துக்கு, குறைவு உண்டாம் — குறைவுதோன்றுதலாகும், என - என்று, குறைந்தான் - கோபங்குறைதலானுர். 223

அந்நிலையான்பெயர்ந்துரைப்பானுய்வளைக்கையணியிழையார்
இந்நிலையானுடன்றுயில்வாருளரல்லரிவனிலையும்
புன்னிலையகாமத்தாற்புலர்கின்றநிலைபூவை
நன்னிலையினுளளென்னுநலமெனக்குநல்குமால்.

இ-ள். அந்நிலையான் — அப்படிக்கோபம் அடங்கினவராய், பெயர்ந்து- அவ்விடம்விட்டுப்போய், உரைப்பான் — மனத்தொடு சொல்லுகிறுர், ஆய் வளைக்கை — அந்த வளையலணிந்தகைகளும், அணியிழையார் — அணிந்த ஆபரணங்களுமுள்ள பிராட்டியானவர், இந்நிலையானுடன் - இத்தன்மையுள்ள பழிபாவியானவனுடனே, துயில்வார் — தூங்குகிறவர்களில், உளர் அல்லர்— உளராயிருத்தலிலர், இவன் நிலையும் - இவன்தன்மையோ, புல்நிலைய-அல்பநிலையுள்ள, காமத்தால் — காமவெப்பத்தாலே, புலர்கின்றநிலை — வேவுகின்ற தன்மை ஆதலாலித்தன்மையே, பூவை — சீதாபிராட்டி, நல்நிலையில் - இவனுக்கிணங்காது பதிவிரதா நிலையிலே, உளள் — இருக்கிறுள், என்னுநலன்- என்கிற நன்மையை, எனக்கு நல்கும் — எனக்குத் தெரிவிக்கின்றது—எ-று. அனுமார் தாம் அணியிழையாரென் றுயர்வுகுறித்ததாகவும் புலர்கின்றநிலை பெண்பாலாகவே குறித்ததாகவுங்கொள்க. 224

என்றெண்ணியீண்டினியோர்பயனில்லையெனநினையாக்
குன்றன்னதோளவன்றன்கோமனைபிற்படப்பெயர்ந்தான்
நின்றெண்ணியுன்னுவானந்தோவிந்நெடுநகரம்
பொன்றுன்னுமணிப்பூணரிலரென்னப்பொருமுவான்.

இ-ள். என்றெண்ணி — என்று நினைத்து, ஈண்டு — இங்கே நிற்றலால், இனி ஓர் பயனில்லையெனநினையா — இனி ஒருபலனுமுளதாவதில்லையென்று தெரின்று, குன்றன்ன — மலைபோன்ற, தோளவன்றன் — புஜங்களையுடைய இராவணனது, கோமனை — பெரியவீடு, பிற்பட — பின்னாக, பெயர்ந்தான்- போனார், நின்று — விலகிப்போய்நின்று, எண்ணி உன்னுவான் - ஆலோசித் தெண்ணுகிற திருவடி, அந்தோ — ஐயோ, இ!நெடுநகரம் — இந்த நெடிய ஊரிலே, பொன்துன்னு — பொன்னிலே பதிந்த, மணிப்பூணர் — ரத்நாபாணங்களணிந்த பிராட்டியார், 'இலர் என்ன — இல்லையாயினாரென்று, பொருமுவான் — துக்கிக்கலானார்—எ-று. 225

கொன்றானோகற்பழியாக்குலமகளைக்கொடுந்தொழிலால்
தின்றானோவப்புறத்தேசெறித்தானோசிறையறியேன்
ஒன்றானுமுணர்கிலேன்மீண்டினிப்போயென்னுரைக்கேன்
பொன்றாதபொழுதெனக்குக்கொடுந்துயரம்போகாதால்.

இ-ள். கொன்றானோ கற்பழியாக்குலமகளை — கற்புநிலையிற்கலங்காத லோகமாதாவை வதைசெய்து விட்டானோ, தின்றானோ — கொடுந்தொழிலால் தனது புலால் உண்கிற கொடிய செய்கைக்குணத்தினாலே தின்றுதீர்ந்தானோ, அப்புறத்தே — இந்த இலங்கைக்கப்பாலே கொண்டுபோய், சிறை- காவலுக்குள்ளே, செறித்தானோ — அடங்கச்செய்திருக்கிறானோ, அறியேன்- இந்த மூவகையிலின்னதென்று தெரிகிலேன், ஒன்றானும் — எண்வகை அளவையுள் ஓரளவையாலாவது, உணர்கிலேன் — தெரிந்துகொண்டிலன், மீண்டினிற்போய் — இனித்திரும்பிப்போய், என் உரைக்கேன் — யாது சொல்லக் கடவேன் செத்தால் ஒன்றுமில்லை, பொன்றாதபொழுது — நான் சாவாதிருக்குமளவும், எனக்கு — அடியேனை எனக்கு இந்த, கொடுந்துயரம் — கொடிய துக்கம், போகாது — போகிறதில்லை—எ-று. 226

கண்டுவருமென்றிருக்குங்காகுத்தன்கவிகுலக்கோன்
கொண்டுவருமென்றிருக்கும்யானிழைத்தகோளிதுவால்
புண்டரிகநயனத்தான்பாலின்னம்போவேனோ
விண்டவரோடுடன்வீயாதியான்வாளாவிளிவேனோ.

இ-ள்.| காகுத்தன் — சக்கிரவர்த்தித்திருமகனார், கண்டுவரும் — திருவடி கண்டேவருவான், என்றிருக்கும் — என்றுநினைத்திருப்பர், கவிகுலக்கோன்- வானரகுல சிரேஷ்டரான மஹாராஜர், கொண்டுவரும் — பிராட்டியைச் சுமந்துகொண்டு வருவான், என்றுஇருக்கும் — என்றெண்ணியிருப்பர், யான் இழைத்த — நான் முடித்திருக்கிற, கோள் இது — உணர்கிலேனென்று

கொள்கையாகிற இதுவே ஆம் நான் பண்ணினகொள்கை உணர்கிலேனென்னுமிவ்வளவினதே, புண்டரிகநயனத்தான்பால் — ஸ்ரீராம திவாகரனிடத்திற்கு, இன்னம் — இவ்வளவானபின்பு, போவேனோ — போகவும் எண்ணுவேனோ சாவேன், யான் — வாளாவிளிவேனோ நான் சும்மா சாவேனோ, விண்டவரோடு — (என்னை வியர்த்தமாக) அனுப்பின அங்கதாதிகளோடு, உடன்வீயாது — கூடச்சாவாமல் நான் ஒருவன் மாத்திரமா சாவேனென்றபடி—எ-று. புண்டரிக நயனத்தான் — தாமரைக்கண்ணன், விண்டவர்- விட்டவர். 227

கண்ணியநாள்கழிந்துளவாற்கண்டிலெனுன் கனங்குழையை
விண்ணடைதுமென்றுரையாண்டிருத்திவிரைந்தயான்
எண்ணியதுமுடிக்ககிலேன்யான் முடியாதிருப்பேனோ
புண்ணியமென்றொருபொருளென்னுழைநின்றும்போயதால்.

இ-ள். கண்ணியநாள் — நமக்குக் கெடுச்செய்தனுப்பினகால அளவு, கழிந்துள - கடந்துபோயின, நான் கனங்குழையைக்கண்டிலென் — நான் பிராட்டியை யின்னமுங் காணப்பெறுகிலேன், விண் அடைதும் — செத்துப் போவோம், என்றுரை — என்று உத்தியோகித்த அங்கதாதிகளை, ஆண்டு இருத்தி — அந்த மலையிலே யிருக்கச்சொல்லி, விரைந்தயான் — கண்டுவிரைவில் வருகிறேனென்று வந்த நான், எண்ணியது — நினைத்துவந்ததை, முடிக்கிலேன் — செய்யாதிருக்கிறேன், யான் — செய்யவேண்டுகிற நான், முடியாதிருப்பேனோ — செய்யத்தாமதிக்கத் தக்கவனோ நான் முடியாதிருப்பேன் ஆனால், புண்ணியமென்றொருபொருள் - எனக்குத் துணையாய்வந்த தருமமென்கிற ஒருவஸ்து, என்னுழை நின்றும்-என்னிடத்திலிராமல், போயது- இப்படி நான் வருந்த நீங்கிற்றெனபதாய் முடியும்—எ-று. 228

ஏழுநூறோசனைசூழ்ந்தெயில்கிடந்த இவ்விலங்கை
வாழுமாமன்னுயிர்யான் காணாதமற்றில்லை
ஊழியான்பெருந்தேவியொருவரையும்யான்காணேன்
ஆழிதாயிடராழியிடையேவீழ்ந்தழிவேனோ.

இ-ள். ஏழுநூறோசனை — ஏழுநூறியோசனை, சூழ்ந்து எயில்கிடந்தது- அளவுசுற்றிமதிலுள்ளதாகிய, இவ் இலங்கை — இந்த ஊரிலே, வாழும்- உள்ள, மா — பெருமையும் சரமும், மன் - நிலைமையும் அசரமும், உயிர்- ஆன உயிர்களில், நான் காணாத இல்லை — நான் பார்க்காதவைகளொன்றுமில்லை, ஊழியான் — கால அளவில்லாதவனான ஸ்ரீராமனது, பெருந்தேவி- பெரியபிராட்டி பெரியதேவியாரான, ஒருவரையும் - ஒருவரைமாத்திரம்- யான் காணேன் - நான் கண்டுகொள்ளாதிருக்கிறேன் என்றால் பிராட்டி இவ்வூரிலிருந்தால் நான் எல்லாரையுங்கண்டு பிராட்டியைக்காணக்கூடாமை கூடுமோ என்றபடி, ஆழிதாய் — ஒருகடலைத் தாண்டிவந்து, இடர் ஆழி- இடையே வீழ்ந்து - ஒருதுன்பக்கடலைக் கடக்கமாட்டாமல் அதிலே விழு

ந்து, அழிவேனே - என்னுழை புண்ணிய மின்றால் இப்படி அழிந்துவிடக் கடவேனு—எ-று. 229

வல்லரக்கன் றனைப்பற்றிவாயாறுகுருதியுகக்
கல்லரக்குங்கரதலத்தாற்காட்டென்றுகாண்கேனோ
எல்லரக்குமயினுதிவேலிராவணனுமிவ்வூரும்
மெல்லரக்கினுருக்கியுகவெந்தழலாய்வேய்கேனோ.

இ-ள். வல் அரக்கன்றனை — இவ்வளவு வல்லவனை இந்த ராக்ஷதனையே, பற்றி - போய்ப்பிடித்து, வாய் ஆறு - அவன்வாய்வழியிலே, குருதி உக - ரத்தஞ்சிந்த, கல் - மலையையும், அரக்கும் - வருந்தச்செய்கிற, கரதலத்தால் - என்கையாலே, காட்டென்று - பிராட்டியைக்காட்டென்றுஅடித்து, காண்கேனோ - காணக்கடவனு, எல்லரக்கும் — சூரியனொளியையும் வருந்தச்செய்கிற, அயில்நுதிவேல் - கூரியமுனையையுடைய வேல்பிடித்த, இராவணனும் இவ்வூரும் — இந்த இலங்கையும், மெல் — மெல்லிய, அரக்கின் - அரக்கைப்போல, உருக்கி — உருகப்பண்ணி, உக — கரையும்படி, வெம்தழலால் — கொடிய நெருப்பை மூட்டி அதனாலே, வேய்கேனோ - முடித்துப் பின் காண்பேனோ நெருப்பாற்கொளுத்தேனோ, வாயாறு குருதியுகக் காண்பேனோ — செய்யவல்லேனு என்றபடி—எ-று. 230

வானவரேமுதலோரைவினவுவெனேல்வல்லரக்கன்
தானொருவனுளனாகவுரைசெய்யுந்தருக்கிலரால்
ஏனையர்களெங்குரைப்பாரெவ்வண்ணந்தெரிகேனோ
ஊனழியநீங்காதவுயிர்சுமந்தவுணர்வில்லேன்.

இ-ள். வானவரே முதலோரை — தேவர் முதலியோரைக்கண்டு, வினவுவனேல் — பிராட்டியிருப்பை விசாரிப்பேனானால், வல்லரக்கன் தான் ஒருவன் — இந்த வலிய அரக்கனை ஒரு ராவணன், உளனாக — சாவாமலிருக்குமளவும், உரைசெய்யும் - பிராட்டி நிலையைச் சொல்லுவதான, தருக்கு - சக்தி, இலர் — உள்ளவர்களல்லர், ஏனையர்கள் — அசுரர் முதலான இவனைச் சேர்ந்தவர்கள், எங்கு — எப்படி, தெரியச்சொல்லுவர்கள் — சொல்லார், எவ்வண்ணம் - மற்றெந்தவகையாலே, தெரிகேனோ — தெரிந்தவனாவேனோ தெரிய இல்லை, ஊன் அழிய — இப்படி எண்ணிச் சரீரம் கரையச்செய்தேயும், நீங்காத உயிர் — போகாத உயிரை, சுமந்த — பொறுத்துக்கொண்டிருக்கிற, உணர்வு இல்லேன் — புத்தியில்லாத நான் எவ்வண்ணந் தெரிகேன்—எ-று.

எருவைக்குமுதலாயசம்பாதியிலங்கையிலத்
திருவைக்கண்டனனென்றானவனுரையுஞ்சிதைந்ததால்
கருவைக்குநெடுங்கரைக்கடலிடையேகரையாதென்
உருவைக்கொண்டின்னமுநானுளனாகியுழல்கேனோ.

இ-ள். எருவைக்கு முதலாய — கழுகுகளுக்குத் தலைவரான, சம்பாதி- சம்பாதியென்பவர், இலங்கையில் — இதோ இலங்காபுரியிலே, அத்திருவை- அந்த லட்சுமியை, கண்டனன் — பார்த்தேன், என்றான் — என்றுசொன்னார்,

அவன் உரையும் — அவர்சொல்லும், சிதைந்தது — பொய்யாய்ப்போயிற்று, கரு — தெய்வக்கம்மாளனாலே, வைக்கும் — நிருமித்ததான, நெடுநகரை - இந்த நெடிய ஊரை, கடலிடையே — இந்தக் கடலிலேதானே, கரையாது — கரைத்துக்கெடுக்காமல், இன்னமும் என் உருவைக்கொண்டு — என் உடம்புடனே, நான் உள்ளனாகி - நான் இருக்கிறவனாய், உழல்கேனோ - இப்படி வருந்தவே கடவேனோ—எ-று. 232

வடித்தாய்பூங்குழலாளைவானறியமண்ணறியப்
பிடித்தானிவ்வடலரக்கனெனுமாற்றம்பிழையாதால்
எடுத்தாழியிலங்கைதனையிருங்கடலினிட்டிவனை
முடித்தாலேயான்முடிதன்முறைமன்றவென்றுணர்வான்.

இ-ள். வான் அறிய — மேலுலகங்களுமறிய, மண் அறிய — இந்த வுலகங்களுமறிய, வடித்துஆய் — நீண்டு பூமியைத் துழாவுவதான, பூங்குழலாளை - பூவையணிந்த கூந்தலையுடைய பிராட்டியை, இவ் அடலரக்கன் — இந்தவலிய ராக்ஷதன், பிடித்தானெனும் — சிறைகொண்டானென்கிற, மாற்றம் - மேனிற்குஞ்சொல், பிழையாது — தவறாது, ஆழியிலங்கைதனை - கடல்சூழ்ந்த இவ்வூரை, எடுத்து — ஒருசேரத்தூக்கி, இருங்கடலினிட்டு — ஒருபெரிய கடலிலே போகவிட்டு, இவனை — இந்த ராக்ஷதனை, யான் முடித்தாலே - நான் முடியச்செய்தாலா, முடிதல் - காரிய முடிவுபெறுதல், மன்றமுறை - இதுவே மிகவு நீதியாவது, என்றுணர்வான் - என்று யோசித்தவர்—எ-று. முடித்தால் — முடிக்கத்தொடுத்தால், எயான் — முடியான் அதனால் நான் முடிதலே மன்றமுறையென்று நினைத்தவர் என்னவுமாம். 233

எள்ளுறையுமொழியாமல்யாண்டையுளுமுளனாய்த்தன்
உள்ளுறையுமழகனைப்போலெம்மருங்குமுலாவினான்
புள்ளுறையுய்யானத்தையுறநோக்கியயல்போவான்
கள்ளுறையுமலர்ச்சோலையயலொன்றுகண்ணுற்றான்.

இ-ள். எள் உறையும் — ஒரு எள்ளிருக்குமிடமும், ஒழியாமல் — தப்பாமல், யாண்டையுளும் — எல்லாப் பொருள்களிலும், உளனாய் — உள்ளவனாகி, தன் உள் - தனக்குள்ளும், உறையும் — வாசஞ்செய்கிற, ஒருவனைப்போல்- அந்த ஏகமூர்த்தியைப்போல், எம்மருங்கும் — எல்லா இடங்களிலும், உலாவினான் — கண்டு வருகிற திருவடி, அயல் — தான் வேறேயிருந்தாலோசிக்க, புள்உறை — வண்டுகள் சஞ்சரிப்பதான, உய்யானத்தை — ஒருதோப்பை, உறநோக்கி - அடையத்தேடி, அயல் — அவ்விடம், போவான் — போகநினைத்தவர், கள்ளுறையும் - தேன்மிக்கிருப்பதான, ஒன்றுமலர்ச்சோலை — ஒரு பூந்தோட்டம், அயல் — தாம் செல்லுகிற ஒருபுறத்திலே, கண் உற்றான்- கண்டார்—எ-று. எள் உறையும் எள்ளுக்குள்ளும் என்க. ஒரு சோலைக்குட் போவோமென்று போனார் அங்கே ஒரு சோலையைக் கண்டார் என்க.

ஊர்தேடுபடலம் முற்றிற்று

ஆ படலம் - 2 - க்கு திருவிருத்தம் - 329

கம்பநாட்டாழ்வார் திருவடிகளே சரணம்

மூன்றாவது

# காட்சிப்படலம்

## பிராட்டியைக் கண்டது

மாடுநின்றவம்மணிமலர்ச்சோலையைமருவித்
தேடியவ்வழிக்காண்பனேற்றீருமென்சிறுமை
ஊடுகண்டிலெனெனிற்பின்னருரியதொன்றில்லை
வீடுவேன்மற்றிவ்விலங்கன்மேலிலங்கையைவீட்டி.

இ-ள். மாடுநின்ற - பக்கத்தேதோன்றின, அ மணி - அந்த அழகிதான, மலர்ச்சோலையை — பூந்தோட்டத்தை, மருவி — அடைந்து, தேடியவ்வழி - அந்த இடமெல்லாந்தேடி, காண்பெனேல் - காணுவேனேயானால், என் சிறுமை — எனது விசனம், தீரும் — போம், ஊடு — இந்தச் சோலைக்குள்ளே, கண்டிலேனெனில் - காணப்பெறேனானால், பின்னர் - பின்பு, உரியது ஒன்று இல்லை — செய்யத்தக்கது ஒன்றுமில்லை (செய்வதியாதெனில்), இ — இந்த, விலங்கல்மேல் — மலைமேலே, இலங்கையை — இலங்காபுரத்தை, வீட்டிவிடுவேன் — விழச்செய்துவிடுவேன் அல்லது வீட்டிவிடுவேன் மலைமேலுள்ள இலங்கையை அழித்துவிடுவேனெனவுமாம், வீட்டிவிடல் ஆவது இலங்கையை அடியோடெடுத்து இம்மலைமேல்விழ விடுகிறேனெனல்—எ-று. வீடுவேன் விடுவேன். 1

என்றுசோலைபுக்கெய்தினனிராகவன்றூதன்
ஒன்றிவானவர்பூமழைசொரிந்தனருவந்தார்
அன்றவாளரக்கன்சிறையவ்வழிவைத்த
துன்றலோதிதன்னிலையினைச்சொல்லுவான்றுணிந்தாம்.

இ-ள். என்று - என்றெண்ணி, இராகவன்றூதன் — ஸ்ரீராமதூதனான திருவடி, சோலைபுக்கு — அந்தச்சோலைக் குள்ளேபோய், எய்தினன் — ஒரு புடையிருந்தார், ஒன்றிவானவர் — அப்போது தேவர்கள்கூடி, பூமழைசொரிந்தனர் - புஷ்பமழையைப் பெய்தார்கள், உவந்தார் — ஆனந்தித்தார்கள், அன்றுகொண்டுவந்த — அன்றுதொடங்கி, அவ்வாளரக்கன் — அந்தக்கத்தியையுடைய ராக்ஷதனாலே, அவ்வழி — அந்த அசோகவனத்திலே, சிறை — காவலுக்குள்ளாக, வைத்த — வைக்கப்பட்ட, துன்று — நெருங்கின, அல் — இருள் போன்ற, ஓதிதன் — கூந்தலையுடையவளான பிராட்டியின், நிலையினை-நிலைமையை, சொல்லுவான் — சொல்லுதற்குக் கூடாதாயினும், துணிந்தாம்- ஒருவகை சொல்லத் துணிவுகொண்டோம்—எ-று. 2

வன்மருங்குல்வாளரக்கியர்நெருக்கவங்கிருந்தார்
கன்மருங்கெழுந்தென்றுமோர்துளிவரக்காணு

நன்மருந்துபோனலனறவுணங்கியநங்கை
மென்மருங்குல்போல்வேறுளவங்கமுமெலிந்தாள்.

இ-ள். வன்மருங்குல் - வலிதான இடையையுடைய, வாள் அரக்கியர்-ஒல்லொளியுள்ள ராக்ஷகிகள், நெருக்க - நெருங்குதலாக, அங்கு - அவ்வனத்திலே, இருந்தார் - இருந்தார்கள், கல்மருங்கு - கல்லினிடையே, எழுந்து-முளைத்து, என்றும் - எக்காலத்தும், ஓர் துளி - ஒருமழைத்துளியாவது, வர-விழுவதாக, காணு - கிட்டாத, நல்மருந்துபோல் - அமிர்த சஞ்சீவியைப் போல், நலன் அற - தன் அழகெல்லாங்குலைய, உணங்கிய - வருந்தலான, நங்கை - சீதாபிராட்டி, மென்மருங்குல்போல்-மெல்லிய இடையைப்போல், வேறுள - மற்றுமுள்ள, அங்கமும்-காசாணுதி யவயவங்களெல்லாம், மெலிந்தாள் - இளைத்தலானுள்—எ-று. நெருக்க—வருத்தப்படுத்த எனவுமாம். 3

துயிலெனக்கண்களிமைத்தலுமுகிழ்த்தலுந்துறந்தாள்
வெயிலிடைத்தந்தவிளக்கெனவொளியிலாமெய்யாள்
மயிலியற்குயின்மழலையாண்மானிளம்பேடை
அயிலெயிற்றுவெம்புலிக்குழாத்தகப்பட்டதன்னுள்.

இ-ள். துயிலென - நித்திரைசெய்கிறதுபோல், கண்கள் - நேத்திரங்களை, இமைத்தலும் - சிமிட்டுதலும், முகிழ்த்தலும் - மூடுதலும், துறந்தாள் - விட்டாள் என்றால் முழுதும் திறத்தலுமுழுது மூடுதலு மில்லாதிருக்கிறுளென்க, வெயிலிடைத்தந்த - வெயிலிலேவைத்த, விளக்கென - விளக்கைப் போல், ஒளியிலா - காந்தியில்லாத, மெய்யாள் - சரீரமுடையவளாய், மயில் இயல் - மயிற்சாயலும், குயில் - குயிற்றெனிபோல், மழலையாள் — இளஞ்சொற்களுமுள்ள பிராட்டி, மான் இளம்பேடை - ஒரு இளையதான - பெட்டைமானுனது, அயில் - கூரியதான, எயிற்று - பற்களையுடைய, வெம்புலிக்குழாத்து - வெவ்விய புலிக்கூட்டத்திலே, அகப்பட்டது — உள்ளானதை, அன்னுள் - ஒத்தவளானுள்—எ-று. 4

விழுதல்விம்முதன்மெய்புறவெதும்புதல்வெருவல்
எழுதலேங்குதலிரங்குதலிராமனையெண்ணித்
தொழுதல்சோருதறுளங்குதறுயருழந்துயிர்த்தல்
அழுதலன்றிமற்றயலொன்றுஞ்செய்குவதறியாள்.

இ-ள். விழுதல் — சோர்ந்துவிழுதலும், விம்முதல் — துக்கித்தலும், மெய் - உடம்பெல்லாம், உற - அதிகமாக, வெதும்புதல் - வெம்மைகொள்ளுதலும், வெருவல் - பயப்படுதலும், எழுதல் - எழுந்திருத்தலும், ஏங்குதல்-ஏக்கங்கொள்ளுதலும், இரங்குதல் - பிரலாபித்தலும், இராமனையெண்ணி-ஸ்ரீராமனை நினைத்து, தொழுதல் - கும்பிடுதலும், சோருதல் - தளர்தலும், துளங்குதல் - நடுங்குதலும், துயர் - துன்பத்திலே, உழந்து - வருந்தி, உயிர்த்தல் — சுவாசித்தலும், அழுதல் - அழுதலும், அன்றி - அல்லது, மற்று

அயல் ஒன்றும் – வேறேயாதொன்றும், செய்குவது – செய்யத்தக்கது, அறியாள் – தெரியாளாகி—எ-று. 5

தழைத்தபொன்முலைத்தடங்கடந்தருவிபோய்த்தாழப்
புழைத்தபோலநீர்நிரந்தரம்பொழிகின்றபொலிவால்
இழைக்குநுண்ணியமருங்குலாளிணைநெடுங்கண்கள்
மழைக்கணென்பதுகாரணக்குறியெனவகுத்தாள்.

இ-ள். தழைத்தபொன்-பொன்னிறமான தேமல்மிகுத்திருக்கிற, முலைத்தடம் – முலைகளாகியமேடுகளை, கடந்து – மேலிட்டுப்பெருகி, அருவி-கண்ணீரருவியானது, போய் – ஓடி, தாழ – இறங்க, புழைத்தபோல – துவாரத்திலிருந்து வருகிறதுபோல, நீர் – ஜலத்தை, நிரந்தம் – எப்போதும், பொழிகின்ற – சிந்துகிற, பொலிவால் – நிறைவினாலே, இழைக்கும் – நூலிழையைப்பார்க்கிலும், நுண்ணிய – சூட்சுமமான, மருங்குலாள் – இடையையுடையபிராட்டியின், இணை – இரண்டு, நெடுங்கண்கள் – நீண்டகண்களும், மழைக்கண்-மழைக்கண்கள், என்பது – என்று சொல்லுகிறது, காரணக்குறியென-மழைபெய்தலாலே அப்படிச்சொல்லுகிறதென்று, வகுத்தாள் – நியமித்தாள் என்றால் எப்போதும் அழுதுகொண்டே யிருக்கிறாளென்க, மழைக்கண்-குளிர்ந்தகண் எனப்பெண்களுக்குப் பொது வருணனை—எ-று. 6

அரியமஞ்சினோடஞ்சனமுதலிவையதிகம்
கரியகாண்டலுங்கண்ணினீர்கடல்புகக்கலுழ்வாள்
உரியகாதலினொருவரோடொருவரையுலகில்
பிரிவெனுந்துயருருவுகொண்டாலனபிணியாள்.

இ-ள். அரிய – தொடுதற்கரிதான, மஞ்சினோடு – மேகத்துடனே, அஞ்சனம்முதல் – மையும்முதல் ஆகிய, இவை – இந்த கரியபொருள்களில், அதிகம்கரிய – மிகக்கரியபொருள் எவையானாலும், காண்டலும் – கண்டவுடனே, கண்ணினீர் – கண்களிலுண்டாகிற ஜலம், கடல்புக – பெருகிக் கடலிலே போய்விழும்படி, கலுழ்வாள் – அழுகிறவள், உரிய – உரியதான, உள்ளகாதலின் – ஆசையினாலே, உலகின் – உலகத்திலே, ஒருவரோடு – ஒருவருடனே, ஒருவரை – இன்னமொருவரை, பிரிவு எனும் – பிரிதலாகிய, துயர் – துன்பமே, உருவு – ஒருவடிவு, கொண்டாலன-கொண்டாற்போன்ற, பிணியாள்-நோயுள்ளவளானாள்—எ-று. 7

துப்பினாற்செய்தகைகொடுகாய்பெற்றதுளிமஞ்
சொப்பினான்றனைநினைதொறுநெடுங்கண்களுகுத்த
அப்பினனைந்தருந்துயருயிர்ப்புடையாக்கை
வெப்பினாற்புலர்ந்தொருநிலையுறாதமென்றுகிலாள்.

இ-ள். துப்பினால் – பவளத்திலே, செய்த – பண்ணின, கைகொடு-கையையுங்கொண்டு, கால்பெற்ற – காலும் பவளத்தாலாய், துளி – நீரைத்

துளிக்கிற, மஞ்சு - மேகத்தை, ஒப்பினுன்றனை - ஒப்பான ஸ்ரீராமனை, நினைதொறும் — நினையும்போதெல்லாம், நெடுங்கண்கள் - நீண்டகண்கள், உகுத்த - சிந்துகிற, அப்பினுல் - ஜலத்தினுலே, நனைந்து - ஈரமாய், அரும் போக்கற்கரிதான, துயர் - துக்கமும், உயிர்ப்புடை - சுவாசமுமுள்ள, யாக்கைவெப்பினுல் - தேகவெம்மையினுலே, புலர்ந்து - காய்தலாய், ஒருநிலையுருத - ஒருபடியாயிராத, மென் - மெல்லிதான, துகிலாள் — வஸ்திரமுள்ளவளாகி—எ-று. 8

அரிதுபோகவோவிதிவலிகடத்தலென்றஞ்சிப்
பரிதிவானவன்குலத்தையும்பழியையும்பாராச்
சுருதிநாயகன்வரும்வருமென்பதோர்துணிவால்
கருதிமாதிரமனைத்தையுமளக்கின்றகண்ணுள்.

இ-ள். அரிதுபோகவோ — இவ்வூரைவிட்டுப் போகலாமென்றுலோ மிகவும் அரிதாயிருக்கிறது, விதி - தெய்வசங்கற்பமோ, வலிகடத்தல்-நமது செய்கைவலியை விஞ்சியதாயிருக்கிறது, என்று அஞ்சி - என்று பயந்து, பருதிவானவன் - சூரியபகவானுடைய, குலத்தையும் - குலப்பெருமையையும், பழியையும் - அக்குலத்துக்குண்டான பழிப்பையும், பாரா-பார்த்து, சுருதிநாயகன் - வேதநாயகனுன ஸ்ரீராமன், வரும் வரும் — வருவார் வருவார், என்பது — என்பதாகிய, ஓர் துணிவால் - ஒரு நிச்சயத்தைக் கொண்டு, கருதி — வருவாரென்று நினைத்து, மாதிரம் அனைத்தையும் - திக்குகளெல்லாம், அளக்கின்ற — அளாவிப்பார்க்கிற, கண்ணுள் — கண்களையுடையவளானுள்—எ-று. தானே செல்லமாட்டாமையாற்போக அரிதென்றும் தன்னுலொன்றுஞ் செய்யக்கூடாமையால் விதி வலிகடப்பதென்றுங் கூறினுள் என்க. 9

கமையினுடிருமுகத்தயல்கதுப்புறக்கவ்விச்
சுமையுடைக்கற்றைநிலத்திடைக்கிடந்ததூமதியை
அமையவாயிற்பெய்துமிழ்கின்றவயிலெயிற்றரவிற்
குமையுறத்திரண்டொருசடையாகியகுழலாள்.

இ-ள். கமையினுள் - மிக்க பொறுமையுள்ள பிராட்டியினது, திருமுகத்து - திருமுகத்துக்கு, அயல் - இருபுறமுமுள்ள, கதுப்பு உற — கவுளைப் பொருந்த காதோரத்தை, கவ்வி - பற்றி, சுமையுடை - கனமுடையதான புருவமயிராகிய, கற்றை - திரட்சியையுமுடைய, நிலத்திடை - இடத்திலே, கிடந்த - இருக்கிற, தூமதியை — பரிசுத்தமான முகசந்திரனை, அமைய-முழுதுமடங்க, வாயிற்பெய்து - வாய்க்குள்ளேகொண்டு, உமிழ்கின்ற - கக்குகிற, அயில் - கூரிய, எயிற்று - பற்களையுடைய, அரவில் — பாம்பைப்போல், குமையுற — நெருக்கமாக, திரண்டு - ஒரு சேர்க்கையாய், ஒருசடையாகிய-ஒரேஜடைபோலிருக்கிற, குழலாள் - கூந்தலையுடையவளாய்—எ-று. பாம்பு கவ்வினுல் அதன் இருபுறவாயலகும்போல் காதோரங்களினீண்டுள்ள மயிரே பற்றுதலாகக்கொள்க புருவமயிர் திரளவும் செறிவுமுள்ளனவென்க. 10

ஆவியந்துகில்புனைவதொன்றன்றிவேறறியாள்
தூவியன்னமென்புனலிடைத்தோய்கிலாமெய்யாள்
தேவுதென்கடலமிழ்துகொண்டநங்கவேள்செய்த
ஓவியம்புகைபுண்டதேயொக்கின்றவுருவாள்.

இ-ள். ஆவி - தனக்குயிரொன்றுபோலவே, அம்துகில் - அழகிய வஸ்திரமாக, புனைவது - கட்டிக்கொள்ளுகிறது, ஒன்றன்றி - முன் உடுத்தியிருக்கிற ஒன்றையேயல்லது, வேறு அறியாள் - வேறே இல்லாதவள், தூவி - இறகையுடைய, அன்னம் - அன்னபக்ஷிபோலிருக்கிலும், மென் - மிருதுவான, புனலிடை - ஜலத்திலே. தோய்கிலா - முழுகாத, மெய்யாள் - சரீரமுள்ளவள், தேவு - தெய்வத்தன்மையுள்ள, தெண் - தெளிவுபொருந்திய, கடல் - பாற்கடலிலுண்டான, அமிழ்துகொண்டு - அமிர்தத்தினாலே, அனங்கவேள் - மன்மதனானவன், செய்த - அமைத்த, ஓவியம் - சித்திரமானது, புகையுண்டதே - புகைபடிந்திருக்கிறதையே, ஒக்கின்ற - சரியான, உருவாள் - வடிவையுடையவளாய் — எ-று. 11

கண்டிலன்கொலாமிளவலுங்கனைகடனடுவண்
உண்டிலங்கையென்றுணர்ந்திலருலகெலாமொறுப்பான்
கொண்டிறந்தமையறிகிலராமெனக்குழையாப்
புண்டிறந்ததினெரிநுழைந்தாலெனப்புகைவாள்.

இ-ள். இளவலும் - இளையபெருமாளும், கண்டிலன்கொல் ஆம் - தன் தமையனைக் கண்டிலனோ ஆம் (கண்டாலும்), கனை - சத்திக்கின்ற, கடல் நடுவண் - கடலினடுவே, உண்டு இலங்கையென்று - இலங்கை யிருக்கிறதென்று, உணர்ந்திலர் - தெரிந்திலரோ, ஆம் - அல்லது, உலகெலாம் - எல்லாவுலகங்களையும், ஒறுப்பான் - வருத்துகிறராவணன் என்னை, கொண்டிறந்தமை - கொண்டுவந்தது, அறிகிலர் - தெரிந்திலர், ஆமென - ஆகுமென்று, குழையா - வருந்தி, புண் - புண்ணானது, திறந்து - வெடித்து, அதின் - அப்புண்ணிலே, எரி - அக்கினி, நுழைந்தாலென - பட்டாற்போல, புகைவாள் - துக்கிக்கிறாள் — எ-று. 12

மாண்டுபோயினனெருவைகட்கரசன்மன்மற்றோர்
யாண்டையென்னிலையறிவுறுப்பார்களிப்பிறப்பில்
காண்டலோவரிதென்றென்னுவிம்முறுங்கலங்கும்
மீண்டுமீண்டுபுக்கெரிநுழைந்தாலெனமெலிவாள்.

இ-ள். எருவைகட்கு அரசன் - சடாயு, மாண்டுபோயினன் - இறந்துபோனார், மன் - அவர் மாண்டுபோனபோது, மற்றோர் - அவரல்லாத மற்றோர் - என்னிலை - எனது நிலைமையை, யாண்டை - எப்படி, அறிவுறுப்பார்கள் - தெரியச்செய்வார்கள் ஆகையால், இப்பிறப்பில் - இந்த ஜன்மத்திலே, காண்டலோ - நான்போய்க் காணுதலோ, அரிது - துர்லபம், என்றென்று - என்று இப்படி எண்ணி எண்ணி, விம்முறும் - விம்முவாள், கலங்

கும் — கலங்குவாள், மீண்டு மீண்டு – மறுபடியும் மறுபடியும், புக்கு – வந்து, எரி – அக்கினியானது புண்ணிலே, நுழைந்தாலென – புகுந்தாற்போல, மெலிவாள் – சரீரம் இளைப்பாளாயினாள்—எ-று. 13

என்னைநாயகனிளவலையெண்ணலாவினையேன்
சொன்னவார்த்தைகேட்டறிவிலளெனத்துறந்தானோ
முன்னையூழ்வினைமுடிந்ததோவென்றென்றுமுறையால்
பன்னவாய்புலர்ந்துணர்வுதேய்ந்தாருயிர்பதைப்பாள்.

இ-ள். நாயகன் - ஸ்ரீராமன், இளவலை — இளையபெருமாளை, எண்ணலா — மதியாத, வினையேன் – பாவியானநான், சொன்னவார்த்தை-சொன்ன கடுஞ்சொல்லை, கேட்டு — கேள்வியாய், அறிவிலள் என – புத்தியில்லாதவளென்று, என்னை – தமக்குநாயகியான என்னை, துறந்தானோ-வேண்டாமென்று வெறுத்துவிட்டாரோ, முன்னை ஊழ்வினை – பூர்வகன்ம பலம், முடிந்ததோ – அவர் வேண்டாவென்னும்படி முடிதலாயிற்றோ, என்று என்று – இப்படிப் பலபடி நினைத்து, முறையால் – (ஒவ்வொன்றையும் எண்ணி) வரிசையாக, பன்ன - பிரலாபித்தலால், வாய்புலர்ந்து — வாய் காய்ந்து, உணர்வுதேய்ந்து – அறிவுங்குறைந்து, ஆர் — அரிதான, உயிர்-ஜீவாம்சம், பதைப்பாள் – துடிப்பதானாள்—எ-று. 14

அருந்துமெல்லடகாரிடவருந்துமென்றழுங்கும்
விருந்துகண்டபோதென்னுறுமோவென்றுவிம்மும்
மருந்துமுண்டுகொல்யான்கொண்டநோய்க்கென்றுமயங்கும்
இருந்தமாநிலஞ்செல்லரித்திடவுமாண்டெழாதாள்.

இ-ள். அருந்தும் – நான் உண்ணச்செய்கிற, மெல் அடகு – மெல்லிய இலைக்கறியுணவை, ஆரிட – வேறேயார் பரிமாற, அருந்தும் என்று – சாப்பிடுவாரென்று, அழுங்கும் – வருந்துவாள், விருந்து கண்டபோது – புதியோர் வரக்கண்டால், என் உறுமோ – (உபசரிப்பாரில்லையேயென்று) என்ன துன்பப்படுவாரோ, என்று விம்மும் – என்று துக்கிப்பாள், யான் கொண்ட - நான் கொண்டிருக்கிற, நோய்க்கு – பிணிக்கு, மருந்து – ஔஷதமும், உண்டுகொலென்று - உண்டோ என்று, மயங்கும் – மயங்குவாள், இருந்த - அவளிருக்கிற, மாநிலம் – பெரிதான இடமெல்லாம், செல் அரித்திடவும் – கறையான்பிடித்துத் தின்றாலும், ஆண்டு — அவ்விடத்தைவிட்டு, எழாதாள் — எழுந்திராதவளாகி—எ-று. 15

வன்கண்வஞ்சனையரக்கரித்துணைப்பகல்வையார்
தின்பரென்னினிச்செயத்தக்கதென்றுதீர்ந்தானோ
தன்குலப்பொறைதன்பொறையெனத்தணிந்தானோ
எனகொலென்னுமேவேனென்னுமங்கிராப்பகலில்லாள்.

இ-ள். வன்கண் — கொடுமைசெய்கிற, வஞ்சனை — வஞ்சனையுள்ள, அரக்கர் — ராக்ஷதர்கள், இத்துணைப்பகல் — இவ்வளவுகாலம், வையார் — உயிரோடுவையார்கள், தின்பர் — தின்று தீர்வார்கள், என் — நாம் போய் யாது, இனிச் செய்யத்தக்கது என்று - இனிச் செய்யப்படுவதென்று, தீர்ந்தானோ- போய்விட்டாரோ, தன் குலப்பொறை — தனது குலத்தைப் பொறுத்தானுகையே, தன் பொறையென — தனது சுமையென்று, துணிந்தானோ — என்னைப் பிரிந்து போயினாரோ, என்கொல் — அவர்செய்கை எவ்விதமென்று, எண்ணுவேன் - நினைப்பேன், என்னும் — என்பாள், அங்கு — அவ்வூரிலே, இரா — இராத்திரியென்றும், பகல் — பகலென்றும், இல்லாள் — தெரியாதவள் என்னும்—எ-று. உலகை ஆளுகிறது தன் குலப்பொறை ஆகலால் இப்போதாள்வோரில்லாமைபற்றித் தனது சுமையென்று போயினாரோ வென்பது கருத்து. 16

பெற்றதாயருந்தம்பியும்பெயர்த்தும்வந்தெய்திக்
கொற்றமாநகர்கொண்டிறந்தார்களோகுறித்துச்
சொற்றவாண்டெலாமுறைந்தன்றியந்நகர்துன்னான்
உற்றதுண்டெனப்படருழந்துருதநோயுறுவாள்.

இ-ள். பெற்றதாயரும் - பெற்ற தாய்மார்களும், தம்பியும் — பரதாழ்வானும், பெயர்த்தும்வந்து எய்தி — மறுபடியும் வந்துகூடி, கொற்றம்- வெற்றிபொருந்திய, மாநகர் - அயோத்திமாநகருக்கு, கொண்டிறந்தார்களோ- கூட்டிக்கொண்டுபோனார்களோ, குறித்துச்சொற்ற — அளவுசெய்துசொன்ன, ஆண்டெலாம் — பதினாலு வருஷமும், உறைந்து அன்றி — காட்டிவிருந்தல்லது, அந்நகர் — அந்த அயோத்திக்கு, துன்னான் - போகார், உற்றது — இன்னம் வனத்திலேயேயிருக்கிறது, உண்டு என — உளதென்று, படர் — துன்பத்தால், உழந்து - வருந்தி, உருதநோய் — பொருந்தப்படாத வியாதியெல்லாம், உறுவாள் — பொருந்துவாளானாள்—எ-று. 17

முரனெனத்தகுமொய்ம்பினோர்முன்பொருதவர்போல்
வரனுமாயமும்வஞ்சமும்வரம்பிலவல்லார்
பொரநிகழ்ந்ததோர்பூசலுண்டாமெனப்பொருமாக்
கரனெதிர்ந்ததுகண்டனளாமெனக்கவல்வாள்.

இ-ள். முரன் எனத்தகும் — முரனென்னும் அசுரனே என்னத்தக்க, மொய்ம்பினோர் — புஜபலங்களுள்ளவர்கள், முன் — முன்னே, பொருதவர் போல் — சண்டைபண்ணினவர்கள்போல், வரனும் — வரபலத்தினாலும், மாயமும் — மயங்கச்செய்தலாலும், வஞ்சமும் - வஞ்சனை செய்தலாலும், வரம்பில - அளவில்லாத, வல்லார் — வல்லமையுள்ளவர்கள், பொர — அங்கேவந்து சண்டைசெய்ய, நிகழ்ந்தது - நடக்கிறதான, ஓர் — ஒப்பில்லாத, பூசல் - சண்டையும், உண்டாமென — உளதாயிருக்குமென்று, பொருமா — துக்கங்கொண்டு, கரன் — கரன் முதலானோர், எதிர்ந்தது - வந்துபொருததை, கண்டனளாமென் — இப்போதுங் கண்டவள்போல், கவல்வாள் — துக்கிப்பாள்-எ-று.

வேறு

தெம்மடங்கியசேணிலங்கேகயர்
தம்மடந்தையுன் றம்பியதாமெனு
மும்மடங்குபொலிந்தமுகத்தினன்
வெம்மடங்கலையுன்னிவெதும்புவாள்.

இ-ள். தெவ் — சத்துருக்கள், மடங்கிய-கண்டுமீளத்தக்க, சேண் - அகலமுள்ள, நிலம் — கோசலநாடு, கேகயர்தம் — கேகயதேசத்தாருடைய, மடந்தையர் - பெண்ணான கைகேசியானவள், உன் தம்பியது — உன் தம்பியான பரதனது, ஆமென - ஆமென்றுசொல்ல ஆயிற்றென்ன, மும்மடங்கு-முன்னிருந்ததுக்கு மூன்றுபங்கு, பொலிந்த — விளங்குதலான், முகத்தின் - முகத்தையுடைய, நன் வெம்மடங்கலை - நல்ல வீரமுள்ள சிங்கம்போன்ற ஸ்ரீராமனை, உன்னி — நினைத்து, வெதும்புவாள் — சரீரமெல்லாம் வெப்பங்கொள்வாளானாள்—எ-று. முகத்தினனனவெம் மடங்கலெனவுங் கொள்க. 19

மெய்த்திருப்பதமேவென்றபோதினும்
இத்திருத்துறந்தேகென்றபோதினும்
சித்திரத்தினலர்ந்தசெந்தாமரை
ஒத்திருந்தமுகத்தினையுன்னுவாள்.

இ-ள். மெய் — உண்மையாகவே, திருப்பதம் — தனது சிறந்த ராஜபதத்தை, மேவு என்றபோதினும் — நீ கொள்ளக்கடவையென்று சக்கரவர்த்தி சொன்னபோதும், இத்திரு-இந்த ராஜ செல்வத்தை, துறந்து-விட்டுக்காட்டுக்கு, ஏகென்றபோதினும் - நீ போவென்று கைகேசி சொன்ன அப்போதும், சித்திரத்தின் — சித்திரித்த உருவிலே, அலர்ந்த — விகஸித்திருக்கிற, செந்தாமரை — சிவந்த தாமரைமலரை, ஒத்திருந்த — ஒப்பதாய் விளங்கின, முகத்தினை — திருமுகத்தை, உன்னுவாள் - நினைப்பதானாள். 20

தேங்குகங்கைத்திருமுடிச்செங்கணன்
வாங்குகோலவடவரைவார்சிலை
ஏங்குமாத்திரத்திற்றிரண்டாய்விழ
வீங்குதோளைநினைந்துமெலிந்துளாள்.

இ-ள். தேங்குகங்கை — கங்கைதங்குதலான, திருமுடி — திருமுடியுடனே, செங்கணன் - சிவந்தநெற்றிக் கண்ணையுடைய பரமசிவன், வாங்கு-வளைத்ததான, கோலம் — அழகிய, வடவரை-மேருமலையாகிய, வார்-நீண்ட, சிலை — திரியம்பகமென்னும் வில்லைவளைப்பரோ வளைக்கமாட்டாரோவென்று, ஏங்குமாத்திரத்து — ஏன்பிதா துக்கிக்குமுன்னே, இற்று — அந்த வில்லொடிந்து, இரண்டாய் — இருகூறாய், விழ — கீழேவிழும்படி, வீங்கு-பருத்ததான, தோளை - புஜபலத்தை, நினைந்து — எண்ணி, மெலிந்துளாள்-இளைத்தவளானாள்—எ-று. ஏங்குமாத்திரத்து — துக்கிக்குமளவில் என்க.

இன்னலம்பரவேந்தற்கியற்றிய
பன்னலம்பதினாலாயிரம்படை
கன்னன்மூன்றிற்களப்படக்கால்வளை
வின்னலம்புகழ்ந்தேற்றிவெதும்புவாள்.

இ-ள். அம்பரம் — விண்ணுலகத்திற்கு, வேந்தற்கு — அரசனான இந்திரனுக்கு, இன்னல் - துன்பத்தை, இயற்றிய - செய்த, பல் நலம் — பலவிசேஷங்களுமுள்ள, பதினாலாயிரம்படை — பதினாலாயிரம்சேனை வீரர்களும், கன்னல் மூன்றில் - மூன்று நாழிகையளவிலே, களப்பட-யுத்தகளத்திலேசாவ, கால் — இரண்டுகதிகாலும் வளைய, வளை — வளைத்த, வில்-வில்லினது, நலம்-நன்மையை, புகழ்ந்து — கொண்டாடி, ஏற்றி — மிகவுயர்த்திச்சொல்லி, வெதும்புவாள் — வெம்மையடைகிறாள்—எ-று. 22

ஆழநீர்க்கங்கையம்பிகடாவிய
ஏழைவேடனுக்கெம்பிநின்றம்பிநீ
தோழன்மங்கைகொழுந்தியெனச்சொன்ன
வாழிநண்பினையுன்னிமயங்குவாள்.

இ-ள். ஆழ நீர் — ஆழமுள்ள நீரையுடைய, கங்கை — கங்கா நதியிலே, அம்பி — தோணி, கடாவிய — செலுத்தின, ஏழை — அறிவின்மையானான, வேடனுக்கு — ஒருவேடசாதியானுக்கு, எம்பி — எனதுதம்பி, நின்தம்பி-உனக்குத்தம்பியாம், நீதோழன் — நீ எனக்குத்தோழனானாய், மங்கை — இந்தச் சீதையோ, கொழுந்தியென - கொழுந்தியாளென்று, சொன்ன — நியமித்த, வாழி — குறைவுபடாத, நண்பினை — குகனுக்குச் சிநேகமானதை, உன்னி — நினைத்து, மயங்குவாள் — மயக்கங்கொள்வாளானாள் — எ-று. ஏழை வேடன் - எளியவனான வேடனென்க. 23

மெய்த்ததாதைவிரும்பினனீட்டிய
கைத்தலங்களைக்கைகளினீக்கிவே
றுய்த்தபோதுதருப்பையிலொண்பதம்
வைத்தவேதியிற்செய்திமனக்கொள்வாள்.

இ-ள். மெய்த்த — மெய்ச்சின, தாதை — தந்தையான ஜனகமகாராஜன், விரும்பினன் — விருப்பமுள்ளவனாக, நீட்டிய — பிடித்துக்கொடுத்த, கைத்தலங்களை — தன்கைகளை, கைகளில் - தம்முடைய கைகளில் நின்றும், நீக்கி-விடுதல்செய்து, வேறு — வேறாக, உய்த்தபோது — அரசாணியைச் சூழ்ந்து வரவிட்டபோதில், தருப்பையில் — தர்ப்பைபோற் பரிசுத்தமுள்ள, ஒண்-அழகிதான, பதம் — தன்காலை, வைதத-அம்மிமேலே எடுத்துவைத்த, வேதியிற்செய்தி - ஓம குண்டத்தின்முன்னே நடந்தசெய்கையை, மனக்கொள்வாள் — மனத்துள்ளே எண்ணுவாள்—எ-று. தருப்பையில் என்பது அசம்ஹியப்படாமல் பரிசுத்தமுள்ளதை யெடுக்கிறதுபோலெடுத்து அம்மிமேல் வைத்தகுணத்தை மனக்கொள்வாளென்க. 24

உரங்கொடேமலர்ச்சென்னியுரிமைசால்
வரங்கொள்பொன்முடிதம்பிவனைந்திலன்
திரங்குசெஞ்சடைகட்டியசெய்வினைக்
கிரங்கியேங்குவதெண்ணியிரங்குவாள்.

இ-ள். உரங்கொள் — பலங்கொண்ட, தேம் — தேன்பொருந்திய, மலர்-பூவையணிவதான வெற்றிமாலையணிவதான, சென்னி — சிரசிலேகொள்ள, உரிமைசால் - பாத்தியதையான, வரங்கொள்-வரத்தாலேகொண்ட, பொன் முடி - சுவர்ணகிரீடத்தை, தம்பி — பரதாழ்வான், வனைந்திலன் - சூடாத வனாகி, திரங்கு — திரட்சியான, செஞ்சடை - சிவந்தசடையை, கட்டிய-சூடிக்கொண்டுவந்த, செய்வினைக்கு — அந்தச் செய்கையைக்குறித்து, இரங்கி - இரக்கங்கொண்டு, ஏங்குவது-அவர்வருந்துகிறதை, எண்ணி-நினைத்து, இரங்குவாள் — துக்கிக்கிறாள்—எ-று. 25

பரித்தசெல்வமொழியப்படருநாள்
அருத்திவேதியர்க்கான்குலமீந்தவர்
கருத்தினைசைக்கரையின்மைகண்டிறை
சிரித்தசெய்கைநினைந்தழுஞ்செய்கையாள்.

இ-ள். பரித்த - தாம்தாங்குவதான, செல்வம் ஒழிய — பாக்கியம் தம்மைவிட்டுவிட, படருநாள் — வனத்துக்குவரும்போது, அருத்தி - வாங்க ஆசைகொண்ட, வேதியர்க்கு - பிராமணர்களுக்கு, ஆன்குலம் — பசுக்களைத் தானமாக, ஈந்து — கொடுத்து, அவர் — அந்தப் பிராமணர்கள், கருத்தின்-மனத்திலே உள்ள, ஆசை — ஆசைக்கு, கரையின்மை — அளவில்லாமையை, கண்டு - தெரிந்து, இறை - கொஞ்சம், சிரித்த — நகைத்த, செய்கை — செய்கையை, நினைந்து — எண்ணி, அழும் — அழுகிற, செய்கையாள் — செய்கையுள்ளவளானாள்—எ-று. 26

மழுவின்வாளினன்மன்னரைமூவெழு
பொழுதினூறிப்புலவுறுபுண்ணினீர்
முழுகினான்றவமொய்ம்பொடுமூரிவில்
தழுவுமேன்மைநினைந்துயிர்சாம்புவாள்.

இ-ள். மழுவின்வாளினன் — மழுவாயுதத்தையுடையவராய், மன்னரை - அரசர்களை, மூ எழுபொழுதின்-இருபத்தொரு வம்சத்தளவும், நூறி-அழித்து, புலவு உறு — (அவ்வரசர்) உடம்பிற் பொருந்தின, புண்ணினீர்-ரக்தஜலத்திலே, முழுகினான் — மூழ்குதல்செய்த பரசுராமருடைய, தவமொய்ம்பொடு — தவபலமெல்லாம்சேர, மூரிவில் — அவரதுபெரியவில்லை, தழுவுமேன்மை — கொண்டமேம்பாட்டை, நினைந்து — எண்ணி, உயிர்சாம்புவாள் — உயிர்சோர்வாளானாள்—எ-று. 27

ஏகவாளியவ்விந்திரன்காதன்மேல்
போகவேவியதுகண்பொடித்தநாள்
காகமுற்றுமோர்கண்ணிலவாக்கிய
வேகவென்றியைத்தன்றலைமேற்கொள்வாள்.

இ-ள். ஏகவாளி – ஒருபாணத்தை, அ – அந்த, இந்திரன் காதல்மேல் – இந்திரகுமாரன்மேலே, போக – செல்ல, ஏவி – விட்டு, அது – அந்தக்காக்கையின், கண்பொடித்தநாள் – கண்ணைப்பிடுங்கினநாள்முதல், காகமுற்றும் – காகங்களுக்கெல்லாம், ஓர்கண் – ஒருகண், இல ஆக்கிய – இல்லையாகச் செய்த, வேகம் – விரைவுள்ள, வென்றியை – ஜயத்தை, தன் – தனது, தலை மேற்கொள்வாள் – சிரமேற்கொண்டு புகழுவாள்—எ-று. 28

வெவ்விராதனைமேல்வருந்தீவினை
வவ்விமாற்றருஞ்சாபமுமாற்றிய
அவ்விராமனையுன்னித்தன்னாருயிர்
செவ்விராதுணர்வோய்ந்துடறேம்புவாள்.

இ-ள். வெவ்விராதனை – கொடியவிராதனுடைய, மேல்வரும் – இனி அவனுக்கு வருவதான, தீவினை – ஆகாமிய கர்மங்களை யெல்லாம், வவ்வி – வாங்கி போக்கி, மாற்ற அரும் – போக்கக்கூடாத, சாபமும் – அவனடைந்திருந்த சாபத்தையும், மாற்றிய – போக்கின, அவ்விராமனை – அந்த ராமதிவாகரனை, உன்னி – நினைத்து, தன் ஆர் உயிர் – தனதருமையான ஆவி, செவ் இராது – செவ்வே நில்லாமல், உணர்வு ஓய்ந்து – புத்திமயங்கி, உடல் தேம்புவாள் – உடம்பு கசங்குகிறவளாய், இருந்தனள் – இருந்தாள்—எ-று.

வேறு

இருந்தனடிரிசடையென்னுமின்சொலில்
திருந்தினளொழியமற்றிருந்ததீவினை
அருந்திறலரக்கியரல்லுநள்ளுறப்
பொருந்தலுந்துயினறைக்களிபொருந்தினர்.

இ-ள். இருந்தனள் – பிராட்டிக்குக் காவலாயிருந்தவளான, திரிசடையென்னும் – திரிசடையென்கிற, இனசொலில் – பிராட்டிக்கினிமை சொல்லுதலிலே, திருந்தினள் – நன்றானவள், ஒழிய – தவிர, மற்றிருந்த – இன்னமுமுள்ள, தீவினை – தீயசெய்கையையுடைய, அருந்திறல் – கடக்க அரிதானவலிமையுள்ள, அரக்கியர் – ராக்ஷதிகள், அல்லு – அந்த ராத்திரி, நள் உற – நடுவாகியகாலம், பொருந்தலும் – வந்த அளவில், துயில் – நித்திரையும், நறைக்களி – கள்ளுமயக்கமும், பொருந்தினர் – கூடினார்கள் நன்றாய்த் தூங்கலானார்கள்—எ-று. 30

ஆயிடைத்திரிசடையென்னுமன்பினள்
காயிகையினியவடன்னைநோக்கினள்

தூயைநீகேட்டியென்றுணைவியாமெனு
மேயதோர்கட்டுரைவிளம்பன்மேயினுள்.

இ-ள். ஆயிடை - அப்போது, திரிசடையென்னும் - திரிசடை யென்கிற பெயரையுடைய, அன்பினுள் - மிக்கப்பிரீதியுள்ளவள், தாயினும்- தனக்குத்தாயைப்போல், இனியவள்தன்னை - நல்லவளை, நோக்கினுள்- பார்த்தவளாய், தூயைநீ - நல்லவளான நீயே, கேட்டி - கேட்கக்கடவை, என் துணைவி - எனக்குச் சகாயமுள்ளவள், ஆமெனு - ஆனவளென்று, மேயது - அப்போது தோற்றியதான, ஓர்கட்டுரை - ஒரு உறுதிமொழியை, விளம்பல் - சொல்லுதற்கு, மேயினுள் - தொடங்கினுள்—எ-று. 31

நலந்துடிக்கின்றதோநான்செய்தீவினைச்
சலந்துடித்தின்னமுந்தருவதுண்மையோ
பொலந்துடிமருங்குலாய்புருவங்கண்முதல்
வலந்துடிக்கின்றிலவருவதோர்கிலேன்.

இ-ள். நலம் - (எனக்குவருவதான) ஒரு நன்மைதான், துடிக்கின்றதோ - அவசரப்படுகிறதோ, நான்செய் - அல்லது நான் பண்ணின, தீவினை- பாபமானது, சலம்துடித்து - கோபங்கொண்டு, இன்னமும் - இனிமேலும், தருவது - கொடுப்பதொரு தீவினைப்பயன், உண்மையோ - உண்டோ, பொலம் - அழகிய, துடி - உடுக்கைபோலும், மருங்குலாய் - இடையை யுடையவளே, புருவம் - புருவமும், கண்முதல் - கண்முதலியவைகளும், வலம் - வலப்புறம், துடிக்கின்றில் - துடிக்க இல்லை இடப்புறந் துடிக்கின்றன, வருவது - இக்குறியால் வருவதின்னதென்று, ஓர்கிலேன் - தெரிகிலேன்—எ-று. துடித்தல் சீக்கிரக்குறி. 32

முனியொடுமிதிலையின்முதல்வன்முந்துநாள்
துனியறுபுருவமுந்தோளுநாட்டமும்
இனியனதுடித்தனவீண்டுமாண்டென
நனிதுடிக்கின்றனவாய்ந்துநல்குவாய்.

இ-ள். மிதிலையின் - மிதிலாபுரிக்கு, முனியொடு - கோசிகமுனியுடனே, முதல்வன் - ஸ்ரீராமன், முந்துநாள் - வருமுன்னுக்கு, துனி அறு- கூடிப்பிரிந்த, புருவமும் - என்புருவமும், தோளும் - தோளுடனே, நாட்டமும் - கண்ணும், துடித்தன - துடித்தலாயின அவை, இனியன - நன்மையைவிளைத்தன, ஈண்டும் - இங்கிருக்கச்செய்தேயும், ஆண்டென - அங்குத் துடித்தாற்போலவே, நனி - மிகவும், துடிக்கின்றன - துடிக்கின்றகுறியை, ஆய்ந்து - ஆராய்ந்து, நல்குவாய் - எனக்குச் சொல்லவேணும்—எ-று. கூடிப்பிரிதல் புருவத்தினிடை வெளியாதல். 33

மறந்தனெனிதுவுமோர்மாற்றங்கேட்டியால்
அறந்தருசிந்தையென்னுவிநாயகன்

பிறந்தபார்முழுவதுந்தம்பியேபெறத்
துறந்துகான்புகுந்தநாள்வலந்துடித்ததே.

இ-ள். மறந்தனென் - முன்னே மறந்துபோனேன், இதுவும் ஓர்மாற்றம் - இதுவுமொருசொல், கேட்டி - கேட்பாய், அறந்தரு - தருமத்தையேயெண்ணுகிற, சிந்தை - மனதுள்ள, என் ஆவிநாயகன் - எனதுபிராணனுக்குச் சுவாமியானவர், பிறந்த — சக்கரவர்த்தியாலே தமக்கென்றுசொல்லவுண்டான, பார்முழுவதும் - உலகமெல்லாம், தம்பியேபெற - பரதாழ்வான் பெறுவதாக, துறந்து - ஒழித்து, கான்புகுந்தநாள் — காட்டுக்கு வரும்போது, வலந்துடித்தது — வலப்புறம் துடித்தது—எ-று. 34

நஞ்சனையான்வனத்திழைக்குநாளிடை
வஞ்சனையால்வலந்துடித்தவாய்மையால்
எஞ்சலவீண்டுதாமிடந்துடித்ததால்
அஞ்சலென்றிரங்குதற்கடுப்பதியாதென்றாள்.

இ-ள். வஞ்சனையால் - கபடஞ்செய்கிறதினாலே, நஞ்சு அனையான் - விஷத்தையொத்த ராவணன், வனத்து - நாங்களிருக்கும் வனத்திலே, இழைக்குநாள் இடை — வஞ்சனைசெய்யத்துணிந்தமுன்னுக்கு, வலந்துடித்த - வலப்புறந்துடித்தன, வாய்மையால் - அவற்றால் உண்மை விளங்கியதாகையால், எஞ்சல — குறையாமல், ஈண்டு - இவ்வூரிலிப்போது, தாம் — அந்த அவயவங்கள், இடந்துடித்தது — இடப்புறந்துடிக்கின்றன, அஞ்சலென்று - பயப்படாதையென்று, இரங்குதற்கு — என்விஷயத்தில் இரக்கமுள்ளதாய், அடுப்பது - வருவது, யாது — எதிருக்கின்றது ஒன்றுமில்லையே, என்றாள் - என்றுபிராட்டி சொல்லினாள்—எ-று. 35

என்றலுந்திரிசடையியைந்தசோபனம்
நன்றிதுநன்றெனநயந்தசிந்தையாள்
உன்றுணைக்கணவனையுறுதலுண்மையால்
அன்றியுங்கேட்டியென்றறைதன்மேயினாள்.

இ-ள். என்றலும் - என்றுசொன்ன அளவிலே, திரிசடை — திரிசடை சொல்லுகிறாள்தாயே. இயைந்தசோபனம் — உனக்கு நன்மைவந்து கிட்டுவதாயின, நன்று — மிகவும் நன்று, இது நன்று — இதுவு நல்லது, என - என்று, நயந்த - விரும்பின, சிந்தையாள் - மனமுள்ளவளாய், உன் துணை - உனக்குச்சகாயரான, கணவனை - நாயகரை, உறுதல் - நீர் சேர்கிறது, உண்மை - இனிமெய்யே, அன்றியும் - அல்லதும், கேட்டி என்று - கேள் என்று, அறைதல்மேயினாள் - சொல்லத்தொடுத்தாள்—எ-று. அன்றியுமென்றது தனக்குத் தோற்றின குறிகளை. 36

உன்னிறம்பசப்புறவுயிருயிர்ப்புற
இன்னிறத்தேனிசையினியநண்பினால்

மின்னிறமருங்குலாய்செவியின்மெல்லெனப்
பொன்னிறத்தும்பிவந்தூதிப்போயதால்.

இ-ள். உன்னிறம் – உனதுதேககாந்தி, பசப்புற – பசுமையாகவும், உயிர் உயிர்ப்புற – ஆகாசசந்திரவும் சுவாசம்விடுவதாகவும், இன்னிறம் – காண இனிதான நிறமுள்ள, தேன் இசை இனிய – தேன்போன்றசொல்லினதினிமையுள்ள, நண்பினால் – உறவினாலே, மின் நிறம் – மின்னலையொத்த, மருங்குலாய் – இடையையுடைய சீதா, செவியில் – உன்காதிலே, மெல்லென – மெள்ள, பொன்னிறத்தும்பி – பொன்மயமான ஒருவண்டு, வந்து – உன் சொல்லைத் தனது பெட்டையி னிசையென்று நினைத்துவந்து, ஊதி – உன் சொல்லிசையென்று தெரிந்து ஊதிக்கொண்டு, போயது – இதோபோயிற்று—எ-று. 37

ஆயதுதேரினுன்னாவிநாயகன்
ஏயதுதூதுவந்தெதிர்தலுண்மையால்
தீயதுதீயவர்க்கெய்தறிண்ணமென்
வாயதுகேளெனமறித்துங்கூறுவாள்.

இ-ள். ஆயது – அதை, தேரின் – ஆராய்ந்தால், உன் ஆவி – உனது பிராணனான, நாயகன் – கணவராலே, ஏயது – அனுப்பியதான, தூதுவந்து – தூதுவருதலாய், எதிர்த்தல் – காணப்படுகிறது, உண்மை – உண்டு, தீயது – கெட்டது, தீயவர்க்கு – கெட்டவர்களுக்கே, எய்தல் – வருகிறது, திண்ணம் – மெய், என் வாயது – என்னிடத்து நடந்த குறியையும், கேளென – கேளென்று, மறித்தும் – பின்னும், கூறுவாள் – சொல்லுகிறாள்—எ-று. 38

துயிலிலவாதலிற்கனவுந்தோன்றல
அயில்விழியொருகனவமைந்துநோக்கினேன்
பயில்வனபழுதிலபழுதிறாடென
வெயிலினும்வெய்யனவுரைத்தன்மேயினாள்.

இ-ள். துயில் இல – எனக்கு நித்திரையில்லை, ஆதலில் – ஆகையால், கனவு – சொப்பனமென்றும், தோன்றல – காண இல்லை, அயில்விழி – வேல்போலுங் கண்களுள்ளவளே, ஒரு கனவு – ஒருசொப்பனம், அமைந்து, உண்டாகி, நோக்கினேன் – கண்டேன், பழுது இல் – யாதொருதோஷமுமில்லாத, நாடு – இந்த இலங்கைத்தீவில், பயில்வன – இனிப்பொருந்துமவைகள், பழுது இல – தப்புகிறது இல்லை, என – என்று, வெயிலினும் – எல்லாவற்றையும் எரிக்கிற சூரியகிரணத்தைப் பார்க்கிலும், வெய்யன் – கொடுமையுள்ளவைகளை, உரைத்தல் – சொல்லுதற்கு, மேயினாள் – தொடங்கினாள்—எ-று. மெய்யனவென்று பாடமானால் உதயமாதலும் அஸ்தமித்தலும் தப்பாதுடைய சூரியன்போல் தப்பாது'பலிக்குமவைகள் நான்கண்ட சொப்பனவகைகளென ஆம். 39

எண்ணெய்பொன்முடிதொறுமிழுகியீறிலாத்
திண்ணெடுங்கழுதைபேய்பூண்டதேரின்மேல்
அண்ணலவ்விராவணனரத்தவாடையன்
நண்ணினன்றென்புலனவையில்கற்பினய்.

இ-ள். எண்ணெய் - எண்ணெயை, பொன்முடிதொறும் - தனது பொன்முடியணிகிற தலைகளெல்லாம், இழுகி - பூசிக்கொண்டு தேய்த்துக் கொண்டு, ஈறிலா - ஓரளவில்லாத, திண் - பலமபொருந்தின, நெடு - நீண்ட, கழுதை - கழுதைகளையும், பேய் - பேயையும், பூண்ட - கட்டின, தேரின்மேல் - இரதத்திலே, அண்ணல் - பெருமையையுடைய, அவ்விராவணன் - அந்த ராவணன், அரத்த ஆடையன் - சிவந்த வஸ்திர முடுத்தினவனய், தென்புலம் - தெற்குத்திசையைக் குறித்து, நண்ணினன் - சென்றான், நவையில் - பழுதில்லாத, கற்பினய் - கற்புள்ளவளே—எ-று. 40

மக்களும்சுற்றமுமற்றுளோர்களும்
புக்கனரப்புலம்போந்ததில்லையால்
சிக்கறநோக்கினென்றீயவின்னமும்
மிக்கனகேட்கெனவிளம்பன்மேயினள்.

இ-ள். மக்களும் - அவன் பிள்ளைகளும், சுற்றமும் - அவன் உறவினரும், மற்றுளோர்களும் - இன்னமுள்ளவர்களும், அப்புலம் - அந்தத்திசையைக் குறித்தே, புக்கனர் - போயினர்கள், போந்ததில்லை - திரும்பிவர இல்லை, சிக்கு அற - தடையில்லாமல், நோக்கினன் - பார்த்தேன், தீய இன்னமும் - இன்னம் பொல்லாங்கானவைகள், மிக்கன - அதிகமுண்டு அவைகளை, கேட்கென - நீ கேட்கக் கடவையென்று, விளம்பல் - சொல்லுதற்கு, மேயினள் - தொடங்கினள்—எ-று. 41

ஆண்டகையிராவணன்வளர்க்குமவ்வனம்
ஈண்டனவிறந்தவாலினங்கொள்செஞ்சிகை
தூண்டருமணிவிளக்கழலுந்தொன்மனை
கீண்டதால்வானவேறெறியக்கீழைநாள்.

இ-ள். ஆண்டகை - ஆண்மையிற்சிறந்த, இராவணன் - இராவணனானவன், வளர்க்கும் - வளர்ப்பதான, அவ்வனம் - அந்த அசோகவனமானது, ஈண்டன - மரக்கூட்டத்துடனே, இறந்தன - அழிந்துபோயின, இனங்கொள - கூட்டங்கொண்ட, செஞ்சிகை - சிவந்த சுவாலையையுடைய, தூண்டரு - தூண்டப்படாத, மணிவிளக்கு - ரத்நவிளக்குகள், அழலும் - எரிவதான, தொல்மனை - அவனது பழையதானவீடு, கீழைநாள் - விடியற்காலத்திலே, வானவறுஎறிய-இடியேறுமோத இடிவிழ, கீண்டது-பிளந்தது.

பிடிமதம்பிறந்தனபிறங்குபேரியும்
இடியெனமுழக்குமாலிரட்டலின்றியே

தடியுடைமுகிற்குலமின்றித்தாவில்வான்
வெடிபடவதிருமாலுதிருமீனெலாம்.

இ-ள். பிடி - பெண்யானைகளுக்கு, மதம்பிறந்தன — மதங்கள் ஒழுகலாயின, இரட்டலின்றி — அடிப்பதில்லையாக, பிறங்கு - விளங்குகின்ற, பேரியும் — முரசங்கள், இடியென — இடிபோல், முழங்கும் - முழங்கலாயின, தடியுடை - மின்னலையுடைய, முகிற்குலம் — மேகக்கூட்டங்கள், இன்றி — இல்லாமல், தா இல் — கெடுதலில்லாத, வான் — ஆகாயத்திலே, வெடிபட - அண்டம் வெடிப்பதாக, அதிரும் — அதிர்தலாயின, மீனெல்லாம் — நக்ஷத்திரங்களெல்லாம், உதிரும் — உதிர்தலாயின—எ-று. 43

விற்பகலின்றியேயிரவுவிண்டற
எற்பகவெரிந்துளதென்னத்தோன்றுமால்
மற்பகமலர்ந்ததோண்மைந்தர்சூடிய
கற்பகமாலையும்புலவுகாலுமால்.

இ-ள். வில்-ஒளியையுடைய, பகல் — பகற்காலம், இன்றி — இல்லாமல், இரவு — இராக்காலமும், விண்டு அற — உலகைவிட்டுநீங்க, எல் — சூரியன், பக — பிளவாகி, எரிந்துளது — எரிந்துபோயிற்று, என்னத்தோன்றும் — என்னும்படி தோன்றலாயின, மல் - மற்போர், பக — விரிய, மலர்ந்த — விசாலித்த, தோள் — புஜங்களையுடைய, மைந்தர் — புருஷர்கள், சூடிய — முடித்திருக்கிற, கற்பகமாலையும் — கற்பகப்பூமாலையும், புலவு — புலால்நாற்றத்தை, காலும் - வீசுதலாயின—எ-று. 44

திரியுமாலிலங்கையுமதிலுந்திக்கெலாம்
எரியுமாற்கந்தர்ப்பநகரமெங்கணும்
தெரியுமான்மங்கலகலசஞ்சிந்தின
விரியுமால்விளக்கினைவிழுங்குமாலிருள்.

இ-ள். இலங்கையும் — இவ்வூரும், மதிலும் — இவ்வூரின் மதிலும், திரியும் - சுழலலாயின, திக்கெல்லாம் — எந்தத் திக்குகளும், எரியும் — எரிதலாயின, கந்தர்ப்பநகரம் - மன்மதபுரம் பெண்குறி, எங்கணும் — எவ்விடத்தும், தெரியும் — தோன்றலாயின, மங்கலகலசம் - சுபமான பூரணகும்பங்கள், சிந்தின — உடைந்துபோயின, விரியும் — எங்கும் ஒளி விரிந்திருக்கிற, மால் விளக்கினை - பெரிய நிலைவிளக்குகளை, இருள் — அந்தகாரம்வந்து, விழுங்கும் - மூடிக்கொள்வதாயின—எ-று. 45

தோரணமுறிந்தனதுணியச்சூழிமால்
வாரணமுறியுமால்வலத்தவாண்மருப்
பாரணமந்திரத்தறிஞர்நாட்டிய
பூரணகுடத்துநீர்நறவுபொங்குமால்.

இ-ள். தோரணம் — தோரணகம்பங்கள், முறிந்தன - ஒடிந்தனவாகி, துணிய - இருதுண்டாக, சூழி - முகபடாத்தையுடைய, மால் - உயர்ந்த, வாரணம் — யானைகள், வலத்த - பலங்கொண்ட, வாள் - வெள்ளொளியுள்ள, மருப்பு - கொம்புகள், முறியும் — ஒடிவன ஆயின, ஆரணமந்திரத்து — வேத மந்திரங்களறிந்த, அறிஞர் - அறிவுள்ளவர்கள், நாட்டிய - நிறுத்தின, பூரண குடத்து - நிறைகுடத்திலுள்ள, நீர் — ஜலமெல்லாம், நறவு - கள்ளானவை யாய், பொங்கும் — பொங்கலாயின—எ-று. 46

விண்டொடர்மதியினைப்பிளந்துமின்னெழும்
புண்டொடர்குருதியிற்பொழியும்போர்மழை
தண்டொடுதிகிரிவாடனுவென்றின்னன
மண்டமர்புரியுமாலாழிமாறுற.

இ-ள். விண் — ஆகாயத்திலே, தொடர் — செல்லுவதான, மதியினை - சந்திரனை, பிளந்து — கிழித்துக்கொண்டு, மின் எழும் — மின்னல் விளங்கும், புண் — புண்ணிலிருந்து, தொடர் — சிந்துகிற, குருதியில் — ரக்தம்போல, போர்மழை — வலிய மேகங்கள், பொழியும் — நீரைப்பொழியும், தண்டொடு - கதையுடனே, திகிரி — சக்கரமும், வாள் — கட்கமும், தனு — வில்லும், என்று - என்றுசொல்லப்படுகிற, இன்னன — இவ்வகையாயுதங்கள், மண்டு — நெருங் கின, அமர்புரியும் — சண்டைகள்பண்ணும், ஆழி - கடல்கள் ரக்தப்பிரவாகத் தாலே, மாறுற — நிறமாறுவனவாக அமர்புரியும்—எ-று. மீன் எழும் எனில் கடலிலுள்ள மீன்கள் துள்ளுமென ஆம். 47

மங்கையர்மங்கலத்தாலிமற்றையோர்
அங்கையின்வாங்கினரெவருமன்றியே
கொங்கையின்வீழ்ந்தனகுறித்தவாற்றினல்
இங்கிதனற்புதமின்னுங்கேட்டியால்.

இ-ள். மங்கையர் - பெண்களுடைய, மங்கலத்தாலி - சுபமான தாலியை, அங்கையில் — தமதழகிய கையினாலே, வாங்கினர் — அவிழ்த்தார்கள், மற்றை யோர் எவரும் - பிறரொருவரும், அன்றி — அல்லாமல், கொங்கையின் - தனங் கள்மேல், வீழ்ந்தன — அவிழ்ந்துவிழலாயின, குறித்த ஆற்றினல் — இப்படி நான் சொல்லுகிற முறையினாலே, இங்கு — இவ்வூரிலே, இதன் - இந்தக்கண வினது, அற்புதம் — ஆச்சரியத்தை, இன்னும் - இன்னமும், கேட்டி - சொல் லக்கேள்—எ-று. 48

மன்னவன்றேவியம்மயன்மடந்தைதன்
பின்னவிழோதியும்பிறங்கிவீழ்ந்தன
துன்னிருஞ்சுடர்சுடச்சுருக்கொண்டேறின
இன்னலுண்டெனுமிதற்கேதுவீடெனு.

இ-ள். மன்னவன் — இவ்வூரரசனது, தேவி - பார்வையான, அ—அந்த, மயன்மடந்தை தன் — மயன்குமாரி மண்டோதரியினுடைய, பின் — பின்னுதல், அவிழ் — அவிழ்ந்த, ஓதியும் — அவள் கூந்தலுமோ, பிறங்கி — சுழன்று, வீழ்ந்தன — விழவாய், துன் — அவளருகேயிருந்த, இருஞ்சுடர் — பெரியதிலை விளக்கு, சுட — கொளுத்த, சுறுக்கொண்டேறின — சுறுசுறுவென்று நீளப் பிடித்துவெந்தன, இன்னல் உண்டு — துன்பம் உண்டாகுகிறது, எனுமிதற்கு — என்னும் இக்கனவுக்கு, ஏது - காரணம், ஈதென்றாள் — எரிவது மணிவிளக்காலும் நெய்விளக்குச் சூழ்ந்து சுருள நாறுதலான இதுவே ஆம் என்று சொன்னாள்—எ-று. 49

என்றனளியம்பிவேறிசைப்பக்கேட்டியால்
இன்றிவணிப்பொழுதிபைந்ததோர்கனு
வன்றுணைக்கோளரியிரண்டுமாறிலாக்
குன்றிடையுழுவையங்குழுக்கொண்டீண்டியே.

இ-ள். என்றனன் — என்றுசொன்னதிரிசடை, இயம்பிவேறு — நான் சொன்னதற்குவேறே, இசைப்ப — இன்னமொன்றுஞ்சொல்ல, கேட்டி-கேள், இன்று — இன்றைத்தினம், இவண் - இவ்விடத்திலே, இப்பொழுது-இப்பொழுதிலேதானே, இயைந்தது — காணலானது, ஓர்கனு — ஒருசொப்பனம், வன் வலிதான, துணை — ஒன்றற்கொன்று சகாயமுள்ள, கோளரி இரண்டு - இரண்டு சிங்கங்கள், மாறிலா — பகைவரணுகாத, குன்றிடை-சுவேலமலையிலே, உழுவையாம் - புலிகளான, குழுக்கொண்டு - கூட்டத்துடனே, ஈண்டி — கூடிவந்தது—எ-று. இறைநாள் என்றதனாலே முன்சொன்ன சொப்பனக்குறிகளெல்லாம் நேற்று முதல் நாள்களில் தன்வீட்டிலே கண்ட கனவுகளென இன்றிவணென்பதனாலே கொள்க. 50

வரம்பிலாமதகரியுறையுமவ்வனம்
நிரம்புறவளைந்தனநெருக்கிநேர்ந்தன
குரம்பறுபிணம்படக்கொன்றமாறிலாப்
புரம்புகவிருந்ததோர்மயிலும்போயதால்.

இ-ள். வரம்பு இலா — அளவில்லாத, மதகரி-மதயானைகள், உறையும், பொருந்துவனவான, அவ்வனம் — அந்தக்காட்டுக்குள், நிரம்புற — நிரம்ப, வளைந்தன — கோளரி உழுவைக்குழாங்கள் சூழ்ந்தனவாய், நெருக்கி — நெருக்கமுண்டாக்கி, நேர்ந்தன — பொருதலாயின, குரம்பு அறு — ஒதுங்கலில்லாத, பிணம்பட — பிணங்களுண்டாக, கொன்ற — வதைசெய்தன, மாறிலா - நிகரில்லாத, புரம் — இப்புரத்திலே இவ்வூரிலே, புக இருந்தது - வருதலாயிருந்தது, ஓர்மயில் — ஒருமயில், உம் - அதுவும், போயது — விட்டுப்போயிற்று, எ-று. மதகரிக் கூட்டத்திலே மயில்வாராமையைக் குறிக்கிறதும்மை என்க.

ஆயிரந்திருவிளக்கமையமாட்டிய
சேயொளிவிளக்கதொன்றேந்திச்செப்பவள்

நாயகன் றிருமனைநின் றுநண் ணுதல்
மேயினள்வீடணன்கோயின்மென்சொலாய்.

இ-ள். ஆயிரந்திருவிளக்கு - ஆயிரந்திரியிட்ட திருவிளக்கு, அமைய- எல்லாம் எரிய, மாட்டிய - கொளுத்தின, சேயொளி - சிவந்த ஒளியையுடைய, விளக்கதொன்று - ஒருவிளக்கை, ஏந்தி - தாங்கிக்கொண்டு, செய்யவள் - சிவந்த நிறமுள்ள, ஒருத்தி, நாயகன் - இராவணனுடைய, திருமனை நின்று - திருக்கோயிலிலேயிருந்து, வீடணன்கோயில் - எனதுதந்தை திருவீட்டுக்கு, மென்சொலாய் - ஓ மிருதுபாஷி, நண்ணுதல்மேயினள் - போகலானாள்—எ-று. செய்யவள் ராஜலட்சுமி - மிருதுபாஷி மெள்ளப்பேசுகிறவள். 52

பொன்மனைபுக்கவப்பொருவில்போதினில்
என்னைநீயுணர்த்தினைமுடிந்ததில்லென
அன்னையேயதன்குறைகாணென் றுயிழை
யின்னமுந்துயில்கெனவிருகைகூப்பினாள்.

இ-ள். அப்பொருவில் - அந்த ஒப்பில்லாத, பொன்மனை - அழகிதான வீடான எனதுதந்தை திருக்கோயிலுக்குள், புக்கபோதினில் — அந்தராஜலட்சுமி நுழைந்த அளவிலே, என்னைநீ — நீ என்னை, உணர்த்தினை - விழிக்கச்செய்தாய், முடிந்தது - அக்கனு முடிவுபெறலானது, இல் என - இல்லையென்று திரிசடைசொல்ல அதற்கு, அன்னையே - எனக்குத் தாயானவளே, அதன்குறை — அக்கனுவின்குறையையும், காண் என்று - பார் என்று, ஆயிழை — சீதாபிராட்டி, இன்னமும் - இன்னமுங்கூட, துயில்கென - நித்திரை பண்ணென்று, இருகை — தனதிரண்டுகைகளையும், கூப்பினாள் — குவித்தாள்— எ-று. பொன் இந்தவிளக்கேந்தின லட்சுமி - மனைபுக்கபோதினில் என்பதுமாம், பிராட்டி இன்னமுந் துயில்கென்றுசொல்ல திரிசடை நன்றென்றிருகை கூப்பினாளென்பதுமொன்று. 53

இவ்விடையண்ணலவ்விராமனேவிய
வெவ்விடையனையபோர்வீரத்தூதனும்
அவ்விடையெய்தினனரிதினோக்குவான்
நொவ்விடைமடந்தைதன்னிருக்கைநோக்கினான்.

இ-ள். இவ் இடை - இங்கே மதங்கபருவதத்திலிருக்கிற, அண்ணல்— பெருமையிற்சிறந்த, அவ் இராமன் - அந்த ஸ்ரீராமதிவாகரன், ஏவிய-அனுப்பின, வெவ்விடை - வெவ்வியகொடிய விர்ஷபத்தை, அனைய - ஒத்த, போர்வீரம் - போர்வல்லரான, தூதனும் - சிறியதிருவடி, அவ் இடை - அப்போதவ்விடத்திற்கு, எய்தினன் - வந்தார், நோக்குவான் அரிதின் - வடிவுகாணுதற்கருமையாய், நோ இடை - வருந்தும் இடையையுடைய, மடந்தைதன்- பிராட்டியினுடைய, இருக்கை - இருக்கு நிலையை, நோக்கினான் - கண்டனர்—எ-று. இவ் இடை என்பதற்கு பிராட்டியும் திரிசடையும் பேசிக்

கொண்டிருக்கிற இத்தருணத்தி லென்றுகொள்க. இடைக்கு வடிவின்மை தெரிதல். 54

அவ்வயினரக்கியரறிவுற்றம்மவோர்
செவ்வையிறுயினமைச்செருத்ததீதெனு
எவ்வயின்மருங்கினுமெழுந்துவீங்கினர்
வெவ்வயின்மழுவெழுச்சூலவெங்கையார்.

இ-ள். அவ்வயின் - அப்போது, அரக்கியர் - ராக்ஷதப்பெண்கள், அறிவுற்று - நித்திரைதெளிந்து, அம்ம - இதென்ன ஆச்சரியம், ஓர்-ஒரு, செவ்வையில் - நன்மையுமில்லாத, துயில் - தூக்கம்வந்து, நமை - நம்மையெல்லாம், செருத்தல் - கெடுத்தது, தீதெனு-மிகவுங்கெட்டதென்று, எவ்வயின் மருங்கினும் - நாலுதிக்கிலும், எழுந்து - எழுந்து, வீங்கினர் - கூடினர்கள், வெவ் - வெவ்விதான, அயில் - வேலும், மழு - மழுவும், எழு - எழுவும், சூலம் - சூலமுங்கொண்ட, வெங்கையார் - கொடிய கரங்களையுடையவர்கள்—எ-று. 55

வயிற்றிடைவாயினர்வளைந்தநெற்றியிற்
குயிற்றியவிழியினர்கொடியநோக்கினர்
எயிற்றினுக்கிடையிடையானையாளிபேய்
துயிற்கொள்வெம்பிலனெனத்தொட்டவாயினர்.

இ-ள். வயிற்றிடை - வயிற்றிலே, வாயினர் - வாயையுடையவர்கள், வளைந்த - வளைவாயிருக்கிற, நெற்றியில் - நெற்றிமேலே, குயிற்றிய - பதிவாயிருக்கிற, விழியினர் - கண்களுள்ளவர்கள், கொடிய - இன்னமுங்கொடுமையான, நோக்கினர் - பார்வையுள்ளவர்கள், எயிற்றினுக்கு - பற்களுக்கு, இடை இடை - நடுவே நடுவே, யானை - யானைகளும், யாளி - சிங்கங்களும், பேய் - பசாசுகளும், துயில்கொள் - நித்திரை கொள்ளும்படியான, வெம்பிலனென - வெவ்வியகுகைபோல, தொட்ட - ஆழமான, வாயினர்-வாயுள்ளவர்கள், சிலர் என - எல்லாருங் கூட்டுக—எ-று. 56

ஒருபதுகையினரொற்றைச்சென்னியர்
இருபதுதலையினரிரண்டுகையினர்
வெருவருதோற்றத்தர்விகடவேடத்தர்
பருவரையெனமுலைபலவுநாற்றினர்.

இ-ள். ஒருபதுகையினர் - பத்துக்கைகளுள்ளவர்கள், ஒற்றைச்சென்னியர் - பத்துத்தலைக்கு ஒரேதலையுள்ளவர்கள், இருபதுதலையினர் - இருபது தலையுள்ளவர்களாய், இரண்டுகையினர் - அதற்கு இரண்டே கைகளுள்ளவர்கள், வெருவரு - பயப்படத்தக்க, தோற்றத்தர் - சுரூபத்தையுடையவர்கள், விகடவேடத்தர் - மாறுமாறுன உருவங்களுள்ளவர்கள், பருவரையென - பருத்தமலைபோல், முலைபலவும் - பலதனங்கள், நாற்றினர்-தொங்குகிறவர்கள்—எ-று. 57

சூலம்வாள்சக்கரந்தோட்டிதோமரம்
காலவேல்கப்பணங்கற்றகையினர்
ஆலமேயுருவுகொண்டனையமேனியர்
வாலமேதரித்தவன்வெருவும்வண்மையர்.

இ-ள். சூலம் – வாள், சக்கரம் – தோட்டி, தோமரம் – காலவேல், கப்பணம் – முதலிய ஆயுதங்கள்பழகி, கற்ற – தெரிந்த, கையினர் – கைகளுள்ளவர்கள், ஆலமே – விஷமே, உருவுகொண்டனைய – ஒருவடிவுகொண்டாற்போலும், மேனியர் – நிறத்தையுடையவர்கள், வாலமே – தலையிற் கங்கையையும், தரித்தவன் – கொண்டகடவுளும், வெருவும் – அஞ்சுவதான, வண்மையார் – அழகினையுடையவர்கள், வால் அம் – சுத்தஜலம்—எ-று. 58

கரிபரிவேங்கைமாக்கரடியாளிபேய்
அரிநரிநாயெனவணிமுகத்தினர்
வெரிநுறுமுகத்தினர்விழிகண்மூன்றினர்
புரிதருகொடுமையர்புகையும்வாயினர்.

இ-ள். கரி – யானையென்றும், பரி – குதிரையென்றும், வேங்கைமா – வேங்கைப் புலியென்றும், கரடி – கரடி, யாளி – யானைபோன்ற, ஆளியென்றும், பேய் – பசாசு என்றும், அரி – சிங்கம் என்றும், நரி – நரி என்றும், நாயென – நாயென்றும், அணி – நினைக்கக்கொண்ட, முகத்தினர் – முகங்களுள்ளவர்கள், வெரின் உறு – முதுகிலேயிருக்கிற, முகத்தினர் – முகத்தையுடையவர்கள், விழிகள் மூன்றினர் – திரிநேத்திரங்களுள்ளவர்கள், புரிதரு கொடுமையர் – கொடுமைகளையே செய்கிறவர்கள், புகையும்வாயினர் – புகைகிறவாயுள்ளவர்கள்—எ-று. 59

எண்ணினுக்களவிடலரியவீட்டினர்
கண்ணினுக்களவிடலரியகாட்சியர்
பெண்ணெனப்பெயர்கொடுதிரியும்பெற்றியர்
துண்ணெனத்துயிலுணர்ந்தெழுந்துசுற்றினர்.

இ-ள். எண்ணினுக்கு – நினைக்கவும், அளவிடல் – அளவுசெய்யவும், அரிய – அருமையான, ஈட்டினர் – சேர்க்கையுள்ளவர்கள், கண்ணினுக்கு – நம்கண்களுக்கு, அளவிடல் – அளவுசெய்ய, அரிய – கூடாத, காட்சியர் – தோற்றமுள்ளவர்கள், பெண்ணென – பெண்ணென்று, பெயர்கொடு – பெயரைக்கொண்டு, திரியும் – அலைகிறதான, பெற்றியர் – வரம் பெறுதலுள்ளவர்கள், துண்ணென – திடுக்கென்று, துயில் உணர்ந்து – நித்திரைதெளிந்து, எழுந்து சுற்றினர் – எழுந்து சூழ்ந்தார்கள்—எ-று. 60

ஆயிடையுரையழிந்தழகன்றேவியும்
தீயவளையவர்முகநோக்கித்தேம்பினள்

நாயகன்றூதனும்விரைவினண்ணினான்
ஒப்விலதுயர்மரப்பணையினும்பரான்.

இ-ள். ஆயிடை — அப்போது, உரை அழிந்து — தான்பேசின பேச்சுக் குலைந்து, அழகன் தேவியும் — ஸ்ரீராமனுடைய தேவியானபிராட்டி, தீ-நெருப்பை, அனையவர் — ஒப்பானராக்ஷதிகள், முகநோக்கி — முகங்களைப்பார்த்து, தேம்பினள் - துக்கித்தாள், நாயகன் தூதனும் — அப்போது ஸ்ரீராம தூதனைதிருவடி, விரைவில் நண்ணினன் - விரைவில்வந்து கூடினார், ஒப்விலது — தளர்வில்லாததாய், உயர் — உயர்ந்த, மரப்பணையின் — ஒருமரக்கிளையின், உம்பரான் — மேலிருக்கிறவரானார்—எ-று. 61

அரக்கியரயின்முதலேந்துமங்கையர்
நெருக்கியகுழுவினர்துயிலுநீங்கினர்
இருக்குநர்பலரிதற்கேதுவென்னெனாப்
பொருக்கெனவவரிடைப்பொருந்தநோக்கினான்.

இ-ள். அரக்கியர் — ராக்ஷதப்பெண்கள், அயில்முதல் — வேல்முதலாயுதங்களை, ஏந்தும் — தாங்கின, அங்கையர் — உள் அங்கையுள்ளவர்கள், நெருக்கிய - நெருக்கமான, குழுவினர் — கூட்டமுள்ளவர்கள், துயிலும் - நித்திரையும், நீங்கினர் — இல்லாதவர்களாய், இருக்குனர்பலர்-அநேகரிருக்கிறார்கள், இதற்கு — இப்படியிருத்தற்கு ஏதுகாரணம், என் என — யாதென்று, பொருக்கென — விரைவாக, அவர் இடை — அவர்கள் இருக்குமிடத்தை, பொருந்த-தாம்போய்நோக்க, நோக்கினான் — பார்த்து ஆலோசித்தார்—எ-று 62

விரிமழைக்குலங்கிழித்தொளிருமின்னெனக்
கருநிறத்தரக்கியர்குழுவிற்கண்டனன்
உருநிறத்தொருதனிக்கொண்டலூழியான்
இருநிறத்துற்றவெற்கிசைந்தகாந்தத்தை.

இ-ள். விரி — விரிந்துள்ள, மழைக்குலம் — மேகக் கூட்டங்களை, கிழித்து — பிளந்துகொண்டு, ஒளிரும் — விளங்குவதான, மின்னென — மின்னல்போல. கருநிறத்து - கரிய நிறத்தையுடைய, அரக்கியர் குழுவில் — ராக்ஷதிகள் கூட்டத்திலே, கண்டனன் - பார்த்தார், உரு — குளிர்ந்தவடிவாலும், நிறத்து — கரிய நிறத்தாலும், ஒரு தனி - ஒரு ஒப்புமில்லாத. கொண்டல்-மேகம்போன்ற, ஊழியான் — எந்த நாளுமுள்ளவனான ஸ்ரீராமனுடைய, இரு — பெரிதான, நிறத்து — மார்பிலே. உற்ற — பொருந்தினகவுத்துவமென்னும், எற்கு — பதும ராகமணியான சூரியனுக்கு, இயைந்த — சம்பந்தமான, காந்தத்தை — சூரியகாந்தம்போன்றவளைக் கண்டனன்—எ-று. 63

தொடற்கருமரக்கியர்காவல்சுற்றுளாள்
மடக்கொடிக்சீதையாமாதரோகொலாம்

கடற்றுணைநெடியதன்கண்ணினீர்ப்பெருந்
தடத்திடையிருந்ததோரன்னத்தன்மையாள்.

இ-ள். தொடற்கு — தொடுதற்கு, அரும் — கூடாத, அரக்கியர் — ராக்ஷதிகள், காவல் — காப்பது, சுற்று — சுற்றிலும், உளாள் — உள்ளவர், மடக்கொடி — இளங்கொடிபோன்ற, சீதையாம் — ஜானகியாகிய, மாதரே — பெண்ணரசிதானே, கடல்துணை — கடலளவு, நெடிய — நீண்டு விசாலமான, தன் — தனது, கண்ணின் — கண்களிலிருந்துவருகிற, நீர் — ஜலமுள்ள, பெருந்தடத்திடை — பெரிய குளத்திலே, இருந்தது — இருப்பதான, ஓர் அன்னம் — ஒரு அம்சத்தினது, தன்மையாள் — சுவபாவமுள்ளவராயிருக்கிறவர்—எ-று. 64

வீடினதன்றறன்யானும்வீகலேன்
தேடினென்கண்டனென்றேவியேயெனு
ஆடினன்பாடினனங்குமிங்கும்பாய்ந்
தோடினனுலாவினனுவகைத்தேனுண்டான்.

இ-ள். அறன் — தருமமானது, வீடினது — என்னைவிட்டுப்போனது, அன்று — அல்ல, யானும் — நானும், வீகலேன் — விடாதவனாகி, தேடினன் — தேடித்திரிந்து, கண்டனன் — பார்த்தேன், தேவியேயெனு — இவர்தேவியே ஆமென்று, ஆடினன் — ஆடினார், பாடினன் — பாடினார், அங்கும் — அவ்விடத்தும், இங்கும் — இவ்விடத்தும், பாய்ந்து — தாவித்தாவி, ஓடினன் — ஓடினார், உலாவினன் — உலாவினார், உவகை — சந்தோஷமான, தேன் — கள்ளை, உண்டான் — குடித்தார்—எ-று. 65

எள்ளருமுருவினவ்விலக்கணங்களும்
வள்ளறன்னுரையொடுமாறுகொண்டில
கள்ளவாளரக்கனார்கமலக்கண்ணனார்
உள்ளுறையுயிரினையொளித்துவைத்தவா.

இ-ள். எள்ளரும் — இகழ்வில்லாத நிர்த்தோஷமான, உருவின் — உருவத்தையுடைய, அவ்விலக்கணங்களும் — அந்த லட்சணங்களெல்லாம், வள்ளல்தன் — ஸ்ரீராமனுடைய, உரையொடு — சொல்லுடனே, மாறுகொண்டில — விரோதித்திருக்க இல்லை, கள்ளம் — வஞ்சனையையுடைய, வாள்அரக்கனார் — வாளாயுதத்தைக் கையிற்கொண்ட ராக்ஷதனானவன், கமலக்கண்ணனார் — செந்தாமரைக்கண்ணனான ஸ்ரீராமனுடைய, உள் உறை — உடம்புள்ளிருக்கிற, உயிரினை — பிராணமயமான தேவியை, ஒளித்து — மறைத்து, வைத்தவா — வைத்தபடி இது—எ-று. அரக்கனரென்றது இழிவுகுறிப்பு கமலக்கண்ணனரென்ற துயர்வுகுறிப்பு. 66

மூவகையுலகையுமுறையினீக்கிய
பாவிதன்னுயிர்கொள்வானிழைத்தபண்பிதால்

ஆவதேயையமிலராவினீங்கிய
தேவனேயவனிவள்கமலச்செல்வியே.

இ-ள். மூவகை - மூன்றுவிதமான, உலகையும்-உலகங்களையெல்லாம், முறையின் – நீதியினின்றும், நீக்கிய – விலகச்செய்த, பாவி – பாவியான இந்த ராவணன், தன் உயிர் — தனதுயிரை, கொள்வான் – ஸ்ரீராமன் வாங்குதற்காக, இழைத்த – செய்துகொண்ட, பண்பு இது - முறைமையிதுவே, ஆவதே — இப்படி இவன் செய்யலாகுமா செய்யக்கூடாது, ஐயமில் — சந்தேகமில்லை, அரவின் — சர்ப்பசயனத்தினின்றும், நீங்கிய – நீங்கிவந்தவதரித்த, தேவனே – தெய்வமே, அவன் – அந்தராமன், இவள் – இவர், கமலச்செல்வியே - லட்சுமியே சந்தேகமில்லை — எ-று. 67

மாசுண்டமணியனுள்வயங்குவெங்கதிர்த்
தேசுண்டதிங்களுமென்னத்தேய்ந்துளாள்
காசுண்டகூந்தலாள்கற்புங்காவலும்
ஏசுண்டதில்லையாலறத்துக்கீறுண்டோ.

இ-ள். மாசுண்ட — அழுக்குப்பிடித்த, மணி – ரத்நத்தை, அனுள் – ஒப்பாயிருக்கிறார், வயங்கு – விளங்குகிற, வெங்கதிர் - சூரியனுடைய, தேசுண்ட கிரணம்படலான, திங்களுமென்ன – சந்திரனையும்போல், தேய்ந்துளாள் - தேககாந்தி மழுங்கியிருக்கிறார், காசுண்ட — சிக்குப்பிடித்த, கூந்தலாள் - கூந்தலையுடையவர், கற்பும்-இவரது கற்புநிலையும், காவலும் - அதைக் காக்குநிலையும், ஏசுண்டதில்லை – இகழ்வுபட்டதில்லை குறைவுபட இல்லை, அறத்துக்கு — தருமத்துக்கு, ஈறுண்டோ — அழிவுண்டாகுமா ஆகாது. 68

புனைகழலிராகவன்புயத்தையோபுகழ்
வனிதையர்திலகத்தின்மனத்தின்மாண்பையோ
வனைகழலரசரின்வண்மைவீக்கிடும்
சனகர்தங்குலத்தையோயாதைச்சாற்றுகேன்.

இ-ள். புனைகழல் - வீரக்கழல்கட்டின, இராகவன் – ஸ்ரீராமனுடைய, புயத்தையோ – தோள்களையோ, புகழ் — எல்லாருங் கொண்டாடத்தக்க, வனிதையர் — பெண்களுக்கு, திலகத்தின் – முகத்தில் பொட்டுப்போல்வாரது, மனத்தின் – மனத்தினுடைய, மாண்பையோ – பெருமைக்குணத்தையோ, வனைகழல் – வீரக்கழல் கட்டின, அரசரில் – ராஜாக்களிலே, வண்மை- ஔதாரிய குணத்தையே, வீக்கிடும் – வீரக்கழல்போற், கட்டியிருக்கிற-கொண்டிருக்கிற, சனகர்தம் – சனகமகாராஜனுடைய, குலத்தையோ – குலசிரேஷ்டத்தையோ, யாதை – இவற்றுளெதைப்புகழ்ந்து, சாற்றுகேன் — சொல்லுவன் — எ-று. 69

தேவரும்பிழைத்திலர்தெய்வவேதியர்
ஏவரும்பிழைத்திலாறமுமீறின்றுல்

யாவதிங்கினிச்செயலரியதெம்பிராற்
காவவென்னடிமையும்பிழைத்தின்றாமன்றே.

இ-ள். தேவரும் — தேவர்களிலும் தங்கள் நீதியினின்றும், பிழைத்திலர் — தவறினவர்களில்லை, தெய்வவேதியர் - தெய்வப்பிராமணர்களில், எவரும் — ஒருவராயினும், பிழைத்திலர் — தவறினவர்களில்லை, அறமும் — தருமமும், ஈறு இன்று — தவறி அழிவதில்லை, எம்பிராற்கு — என்னை ஆண்டவனான ஸ்ரீராமனுக்கு, இங்கு — இவ்வுலகத்திலே, இனி — இனிமேல், செயலரியது - செய்யக்கூடாதது, யாவது — எதிருக்கிறது, ஆவ — எல்லாக்காரியமு முடிவுபெறுவனவே ஆம், என் — எனது, அடிமையும் — அடிமைத்தனமும், பிழைத்தின்று — தவறுதலில்லை, ஆமன்றே — ஆகுமல்லவோ—எ-று.

கேழிலாணிறையிறைகீண்டதாமெனின்
ஆழியான்முனிவெனுமாழிமீக்கொள
ஊழியினிறுதிவந்துறுமென்றுன்னினேன்
வாழியருலகினிவரம்பினாளெலாம்.

இ-ள். கேழ் இலாள் — ஒப்பில்லாத இந்த செகன்மாதாவினுடைய, நிறை — பதிவிரதாநிலை, இறை — கொஞ்சம், கீண்டது — தவறிற்றே, ஆமெனில் - ஆமானால், ஆழியான் — சக்கரவர்த்தித்திருமகனுடைய, முனிவெனும் - கோபமென்கிற, ஆழி — கடல், மீக்கொள — மேற்கொண்டுபொங்க, ஊழியினிறுதி — உலகம் அழிகிற முடிவுகாலம், வந்து உறுமென்று — வந்து கூடுமென்று, உன்னினேன் — முன்னே எண்ணினேன், இனி — இனிமேல் நிறைதவறாகாமையால், வரம்பு இல் — அளவில்லாத, நாள் எலாம் - காலதத்துவமுள்ளதனையும், உலகு — உலகத்தார், வாழியர் — வாழக்கடவர்கள்—எ-று.

வெங்கனன்முழுகியும்புலன்கள்வீக்கியும்
நுங்குவவருந்துவநீக்கிநோற்றவர்
எங்குளர்குலனில்வந்தில்லின்மாண்புடை
நங்கையர்மனத்தவநவிலற்பாலதே.

இ-ள். வெம் — வெப்பமான, கனல் — நெருப்பிலே, முழுகியும் — நின்றும், புலன்கள் - விஷயவாசனைகளை, வீக்கியும் — அடக்கியும், நுங்குவ - பானம்பண்ணுகிற நீரும், அருந்துவ — புசிக்கிற உணவும், நீக்கி — விட்டு இப்படி, நோற்றவர் — தவஞ்செய்தவர்கள், எங்கு உளர் — எவ்விடத்திலே யாரிருக்கிறார்கள், குலனில் வந்து — நல்ல குலத்திலே தோன்றி, இல்லின் மாண்பு உடை — இல்லறத்துக்குரிய நற்குண நற்செய்கைகளையுடைய, நங்கையர் — பெண்களுக்குள்ள, மனத்தவம் — மனத்தாற்செய்யுந் தவத்தை, நவிலற்பாலதோ - சொல்லிமுடியும் அளவுள்ளதோ—எ-று. 72

பேணநோற்றதுமனைப்பிறவிபெண்மைபோல்
நாணநோற்றுயர்ந்ததுநங்கைதோன்றலால்

மாணநோற்றீண்டிவளிருந்தவாறெலாம்
காணநோற்றிலனவன்கமலக்கண்களால்.

இ-ள். நங்கை – இந்தப்பிராட்டியார், தோன்றலால் – பிறந்திருக்கிறபடியினாலே, பேண – எல்லாருந்தன்னை விரும்பும்படி, நோற்றது – தவஞ்செய்து உயர்ந்தது, மனைப்பிறவி – இவரது குடிப்பிறப்பு, பெண்மைபோல்-இவரதுபெண்தன்மையைபோலவே, நாணம் – நாண்முதலிய பெண்மைக் குணமும், நோற்று – தவஞ்செய்து, உயர்ந்தது – உயர்வாயிற்று, மாண – தமதுபெருமைதோன்ற, நோற்று – தவஞ்செய்து, ஈண்டு – இங்கே, இவள்-இவர், இருந்தஆறெலாம் – இருந்தபடியெல்லாம், அவன் – அந்த ஸ்ரீராமன், கமலக்கண்களால் – தனது தாமரைபோலுங் கண்களாலே, காண – பார்க்க, நோற்றிலன் – தவஞ்செய்திலர்—எ-று. 73

முனிபவரரக்கியர்முறையினீங்கினர்
இனியவடானலாதியாருமில்லையால்
தனிமையும்பெண்மையுந்தவமுமின்னதே
வனிதையர்க்காகநல்லறத்தின்மாண்பெலாம்.

இ-ள். முறையில் – கிரமத்தினின்று, நீங்கினர் – நீங்கினவர்களாய், முனிபவர் – இவரை வெறுத்துப் பேசுகிறவர்கள், அரக்கியர் – ராக்ஷஸிகளே, இனி – இனி யோசித்தால், அவள்தான் – அந்த ஸ்ரீராமன் தேவியார், அலாது – இவரை அல்லது, யாருமில்லை – வேறொருவரு மிவ்வூரிலில்லை, தனிமையும் – ஒருவரா யிருக்கிறதும், பெண்மையும் – பெண்தன்மையும், தவமும் – நாயகனைப்பிரிந்ததாலுள்ள தவச்செய்கையும், இன்னதே – இவ்வளவினதே ஆகையால், நல் அறத்தின் – நல்ல தருமத்தினாலாகுகிற, மாண்பெல்லாம் – நற்குணநற்செய்கைகளெல்லாம், வனிதையர்க்கு – பெண்களுக்கே, ஆக – உளவாகவேண்டும்—எ-று. 74

தருமமேகாத்ததோசழக்கன்றன்வினைக்
கருமமேகாத்ததோகற்பின்காவலோ
அருமையேயருமையேயாரிதாற்றுவார்
ஒருமையேயெம்மனோர்க்குரைக்கற்பாலதோ.

இ-ள். தருமமே – தருமந்தானே, காத்ததோ – காவல்செய்ததோ, சழக்கன்றன் – கர்வியான ராவணனுடைய, வினைக்கருமமே – தீவினைச்செய்கையே, காத்ததோ – காவல்செய்ததோ, கற்பின் காவலோ – கற்பாகிய காவலாலோ, அருமையே அருமையே – மிகவும் அருமையுள்ளதே, இது – வெங்கதிர்போற் கனற்றுகிற ராக்ஷஸிகள் இம்சையை, யார் – எவர், ஆற்றுவார் – பொறுக்கவல்லவர்கள் இவர் பொறுத்திருக்கிறது அருமை அருமையே என்க, ஒருமையே – ஒருவகையாலே, எம் அனோர்க்கு – என்போல்வாருக்கு, உரைக்கற்பாலதோ – சொல்லுமுறையானதோ சொல்லிமுடியாது—எ-று. 75

செல்வமோவதுவவர்தீமையோவிது
அல்லினும்பகலினுமமரராட்செய்வார்
ஒல்லுமோவொருவர்க்கீதுறுகண்யாதினி
வெல்லுமோதீவினையறத்தைமெய்ம்மையால்.

இ-ள். செல்வமோ – இந்தராவணன்முதலியோர் ஐசுவரியமோ, அது- அப்படிப்பட்டதாயிருக்கிறது, அவர் - அந்தராக்ஷதர் பண்ணின, தீமையோ- தீயசெய்கையோ, இது — இப்படிப்பட்டதாயிருக்கிறது, அல்லினும் – ராத்திரியிலும், பகலினும் – பகலிலும், அமரர் – தேவர்கள், ஆட்செய்வார்- அடிமைத்தனஞ் செய்வாராயினர், ஒருவர்க்கு - வேறொருவருக்கு, ஈது- இச்செல்வம், ஒல்லுமோ - கிட்டுமோ கிட்டாது, இனி உறுகண்யாது - இனித் துன்பமென்பதென்ன இருக்கிறது, மெய்ம்மையால் – இவர்கள் செல்வம் அளவற்றதாயினும் பிராட்டியைப் பிரித்தபாவம் பெரிதாயிருப்பது மெய்யாகையாலே, தீவினை — பாவமானது, அறத்தை – தருமத்தை, வெல்லுமோ- ஜெயிக்குமோ—எ-று. 76

என்றிவையினையனவெண்ணிவண்ணவான்
பொன்றிணிநெடுமரப்பொதும்பர்புக்கவண்
நின்றனனவ்வழிநிகழ்ந்ததென்னெனின்
துன்றுபூஞ்சோலைவாயரக்கன்றோன்றினான்.

இ-ள். என்று – என்று நினைத்து, இவை – இவைகள்போன்ற, இனையன – இப்படிப்பட்டவைகளை, எண்ணி - பின்னுநினைத்து, வண்ணம் - நிறத்தால், வான் – பெரிய, பொன் — பொன்மயமான, திணி – நெருங்குதலுள்ள, நெடுமரம் – நீண்டமரத்தினது, பொதும்பர் - ஒருசெறிவிலே, புக்கு- போய், அவண் — அவ்விடத்தில், நின்றனன் - மறைந்திருந்தார், அவ்வழி- அப்போது, நிகழ்ந்தது – நடந்தது, என்னெனின் – யாதென்றால், துன்றுபூ- மலர்கள்நெருங்கின, சோலைவாம் – அந்தத்தோட்டத்தில், அரக்கன் – ராவணன், தோன்றினான் – வந்தான்—எ-று. 77

காட்சிப்படலம் முற்றிற்று

ஆ படலம்-3-க்குதிருவிருத்தம் — 406

கம்பநாட்டாழ்வார் திருவடிகளே சரணம்

---

நான்காவது

# நிந்தனைப்படலம்

## பிராட்டி ராவணனைத் தூஷித்தல்

சிகரவண் குடுமி நெடுவரை யெவையு மொருவழி திரண்டன சிவண, மகரிகை வயிர குண்டல மலம்புந் திண்டிறற் றேள்புடை வயங்கச், சகரவே லையினீர் தழுவிய கதிரிற் றலைதொறுந் தலைதொறுந் தயங்கும், வகையபன் மகுட மிளவெயி லெறிப்பக் கங்குலும் பகல்பட வந்தான்.

இ-ள். சிகரவண்குடுமி - சிகரத்தையும் அழகிய அதன்மேற்செறிவையுமுடைய, நெடுவரை - நீண்டமலைகள், எவையும் - யாவும், ஒருவழி - ஒருபுறம்போல் மற்றொருபுறமும், திரண்டன - கூடியிருந்தவற்றை, சிவண - ஒப்பாக, மகரிகை - தங்கத்தாலே தலையும்வாலுந்தோன்ற முதலை வடிவாய்ச் செய்து, வயிரம் - அதன்மேல் வயிரம்பதித்த, குண்டலம் - கடுக்கன்கள், அலம்பும் - ஒளிவீசுவனவாகிய, திண் - கெட்டியும், திறல் - சக்தியுமுள்ள, தோள் - தோள்கள், பத்தும் - மற்றொருபத்தும், புடை - இருபுறமும், வயங்க - விளங்க, சகரவேலைனீர் - சாகரமென்னுங்கடனீரை, தழுவிய- தொட்டுத்தோன்றுகிற, கதிரில் - சூரியன்போல, தலைதொறுந் தலைதொறும் - பத்துத்தலைகளிலும், தயங்கும் - விளங்குகிற, வகைய - வெவ்வேறான, பன்மகுடம் - பத்துக்கிரீடங்களும், இளவெயிலெறிப்ப - இளஞ்சோதிகாட்ட, கங்குலும் - அன்றிராத்திரியும், பகல்பட - விடிந்ததாக, வந்தான் இராவணன் வந்தான்—எ-று. 1

உருப்பசி யுடைவா ளெடுத்தன டொடர மேனகை வெள்ளடை யுதவச், செருப்பினைத் தாங்கித் திலோத்தமை செல்ல வரம்பையர் குழாம்புடை சுற்றக், கருப்புரச் சாந்துங் கலவையு மலருங் கலந்துமிழ் பரிமள கந்தம், மருப்புடைப் பொருப்போர் மாதிரக் களிற்றின் வரிக்கைவாண் மூக்கிடை மடுப்ப.

இ-ள். உருப்பசி - ஊர்வசியானவள், உடைவாள் - இடையிலுடுத்துக் கட்டுகிறவாளை, எடுத்தனள் - எடுத்துக்கொண்டு, தொடர - பின்வரவும், மேனகை - மேனகையென்பவள், வெள்ளடை - வெற்றிலைமடித்து, உதவ- கொடுக்கவும், செருப்பினை - காற்செருப்பை, தாங்கி - எடுத்துக்கொண்டு, திலோத்தமை - திலோத்தமையென்பவள், செல்ல - கூடவரவும், அரம்பையர்குழாம் - தெய்வப்பெண் கூட்டம், புடைசுற்ற - நான்குபுறமுஞ் சூழ்ந்து வரவும், கருப்புரம் - பச்சைக்கர்ப்பூரங்கலந்த, சாந்தும் - சந்தனமும், கலவையும் - கூட்டுவர்க்கக்குழம்பும், மலரும் - திவ்விய புஷ்பங்

களும், கலந்து — ஒன்றுகூடி, உமிழ் — வீசுகிற, பரிமளகந்தம் - பரிமள வாசமானது, மருப்புஉடை — கொம்புகளையுடைய, பொருப்பு - மலை போன்ற, ஓர் மாதிரக்களிற்றின் — ஒருதிக்கஜத்தினது, வரி — நீண்ட, கை — துதிக்கையிலுள்ள, வாள் — செவ்வொளிகூடின, மூக்கிடைமடுப்ப-மூக்கிலே புகுதவும் வந்தான்—எ-று. 2

நானநெய் விளக்க நாலிரு கோடி நங்கைய ரங்கையி லெடுப்ப, மேனிவந் தெழுந்த மணியுடை யணியின் விரிகதி ரிருளெலாம் விழுங்கக், கான்முதற் றொடர்ந்த நூபுரஞ் சிலம்பக் கிண்கிணி கலையொடுங் கலிப்பப், பானிறத் தன்னக் குழாம்படர்ந் தென்னப் பற்பல மழலையும் பகர.

இ-ள். நானம் — கஸ்தூரி மணம்வீசுகிற, நெய்விளக்கம் — நெய்விளக்கு, கள், நாலிருகோடி நங்கையர் — எட்டு நூதனகன்னிகள், அங்கையில் — அழகியகைகளாலே, எடுப்ப - தாங்கவும், மேல் — அப்பெண்கள்மேலே, நிவந்து எழுந்த - உயர்ந்து தோன்றுகிற, மணியுடை — ரத்நங்கள் பதித்தலையுடைய, அணியின் — ஆபரணங்களிலிருந்து, விரிகதி-பரவுகிற ஒளியானது, இருளெலாம் — அப்போதுள்ள இருள்முழுவதையும், விழுங்க — போக்கவும், கால்முதல் — காலிலே, தொடர்ந்த — கூடின, நூபுரம் — சிலம்புகள், சிலம்ப-சத்திக்கவும், கிண்கிணி - பாதசாலம், கலையொடும் — மேகலையோடுகூடி, கலிப்ப-சத்திக்கவும், பால்நிறத்து — வெள்ளை நிறத்தையுடைய, அன்னக்குழாம்-அம்சகூட்டங்கள், படர்ந்தென்ன — நடந்தாற்போல், பற்பல-பகுவிதமான, மழலையும் — குழறொலிகளும், பகர — பேச, ஒலிக்கவும்வந்தான்—எ-று. சிலம்பொலியும் அன்னத்தொலியும் ஒப்பு வெள்ளைவஸ்திரங்களைப் பானிறமென்றூரென்க. 3

அந்தரம் புகுந்த துண்டென முனிவுற் றருந்துயி னீங்கினு ணடைச், சந்திர வதனத் தருந்ததி யிருந்த தண்ணறுஞ் சோலையின் றனையோ, மந்திரம் யாதோ யாரொடும் போமோ வென்றுமா மனமறுக் குறலால், இந்திரன் முதலோ ரிமைப்பிலா நாட்ட முகிழ்த்தன ருயிர்ப்பவிந் திருப்ப.

இ-ள். அந்தரம் - நம்மூரிலேதோ வேற்றுமை, புகுந்தது — உண்டானது, உண்டு என — உண்டென்று, முனிவுற்று — கோபங்கொண்டு, அரும் துயில் — போக்கற்கரிய நித்திரையை, நீங்கினன் — போக்கிக்கொண்டானய் இவன் வருதல், ஆண்டை — அந்த, சந்திரவதனத்து — சந்திரன்போலுமுகமுள்ள, அருந்ததி — மகாபதிவிரதை, இருந்த — இருப்பதான, தண் - குளிர்ந்த, நறும் — நலமுள்ள, சோலையின் தனையோ - வனத்தளவோ, மந்திரம்-இவன் எண்ணம், யாதோ — எதுவோ இன்னம், யாரொடும் — யாரளவிலே, போமோ — முடிவுபெறுமோ, என்று — என்பதாய், மா — மிகவும், மனம்-மனசு, மறுக்குறலால் — மயங்குகிறதினலே, இந்திரன் முதலோர் — இந்தி

ராதிதேவர்கள், இமைப்பிலா நாட்டம் — மூடாதகண்களை, முகிழ்த்தனர் - மூடிக்கொண்டு, உயிர்ப்பு — சுவாசம், அவிந்திருப்ப — விடாதிருக்கவும். எ - று.

நீணிறக் குன்றி னெடிதினிற் றாழ்ந்த நீத்தவெள் ளருவியி னிமிர்ந்த, பானிறப் பட்டின் மாலையுத் தரியம் பண்புறப் பசும் பொனா ரத்தின், மானிறப் புடவி யுடையுறப் பரந்த வளர்கதி ரிள வெயில் பொருவச், சூனிறக் கொண்மூக் கிழித்திடை துடிக்கு மின்னென மார்பினூ றுளங்க.

இ-ள். நீலநிறம் — கறுத்தநிறத்தையுடைய, குன்றின் — ஒரு மலையிலே யிருந்து, நெடிதினில் — நீளமாக, தாழ்ந்த — இறங்குகிற, நீத்தம் — பிரவாக மான, வெள்ளருவியில் — வெள்ளருவிபோல், நிமிர்ந்த - உயர்ந்த, பால்நிறம் - பால்நிறமுள்ள, பட்டின் - பட்டினுலான, மாலை — ஒழுங்காகிய, உத்தரியம் - அங்கவஸ்திரத்தினது, பண்புற — சோபைதோற்ற, பசும்பொன் - பசும்பொ ன்னுலான, ஆரத்தின் — மாலையின், மால்நிறம் — பெரிய ஒளியானது, புடவி — பூமிக்கு, உடை — வஸ்திரம்போன்றிருக்கிற கடலிலே, உறப்பரந்த - மிகவும்பரவின, வளர்கதிர் — மேலுயர்ந்து வருகிற சூரியனது, இளவெயில் - இளஞ்சோதியை, பொருவ — ஒம்பாகவும், சூல்நிறம் — கருப்பத்தால் கருநிற மான, கொண்மூ — மேகத்தை, கிழித்து — பீறிக்கொண்டு, இடை — அம்மே கத்திலே, துடிக்கும் — துவளுகிற, மின்னென — மின்னலைப்போல், மார்பில் - மார்பிலே, நூல்துளங்க — யக்ஞோபவீதம் விளங்கவும் — எ-று. 5

தோடொறுந் தொடர்ந்த மகரிகை வயிரக் கிம்புரி வலயமாச் சுடர்கள், நாடொறுஞ் சுடருங் கலிகெழு விசும்பி னுடுவொடு கோ ளினை நக்கத், தாடொறுந் தொடர்ந்த தழங்குபொற் கழலின் றகை யொளி நெடுநிலந் தடவக், கேடொறுந் தொடர்ந்த முறுவல்வெண் ணிலவின் முகமல ரிரவினுங் கிளர.

இ-ள். தோள்தொறும் — இருபது தோள்களிலும், தொடர்ந்த — அலம் புகிற, மகரிகைவயிரம் — வயிரக்கடுக்கன்களும், கிம்புரி — தோளணியாகிய, வலயம் - கேயூரங்களும் ஆகிய இவைகளின், மாச்சுடர்கள் - பேரொளிக ளானவை, நாள்தொறும் — தினந்தினமும், சுடரும் — விளங்குவனவான, கலிகெழு — ஓசைவடிவாகிய, விசும்பில் - ஆகாசத்திலே தோற்றுகிற, நா ளொடு - நக்ஷத்திரங்களையும், கோளினை — கிரகங்களையும், நக்க — மழுங்கச் செய்யவும், தாள்தொறும் - இரண்டுகாலிலும், தொடர்ந்த — கட்டின, தழ ங்கு — சத்திக்கின்ற, பொற்கழலின் - பொன்னுலான வீரக்கழல்களின், தகை ஒளி — பேரொளியானது, நெடுநிலம் — அவன் வருகிற நெடிய வழிமுழுதும், தடவ - வீசவும், கேள்தொறும் — உறவெல்லாம், தொடர்ந்த - அமைந்த ஒன் றோடொன்றொத்திருக்கிற, முறுவல் - பற்களாகிய, வெண்ணிலவின் - வெள் ளிய சந்திரிகையையுடைய, முகமலர் — அவன் முககமலங்கள், இரவினும் - அந்த இராத்திரியிலும், கிளர — விளங்கவும் வந்தான் — எ-று. 6

தன்னிறத் தோடு மாறுதந் திமைக்கு நீவியந் தழைபட வுடுத்த, பொன்னிறத் தூசு கருவரை மருங்கிற் றழுவிய புதுவெயில் பொருவ, மின்னிறக் கதிரிற் சுற்றிய பசும்பொன் விரற்றலை யவிரொளிக் காசின், கன்னிறக் கற்றை நெடுநிழல் பூத்த கற்பக முழுவனங் கவின.

இ-ள். தன்னிறத்தோடு — தனதொளியுடனே வஸ்திரமான, மாறுதந்து — வேறுபாடுசெய்து, இமைக்கும் — விளங்குகின்ற கரையையுடைய, நீவி — கொய்சகத்தினது, அம் — அழகானது, தழைபட — தழைவுதோன்ற, உடுத்த — அவன் கட்டியிருக்கிற, பொன்னிறத்தூசு — பொன்மயமான வஸ்திரமானது, கருவரை மருங்கில் — ஒரு நீலமலையினடுவே, தழுவிய — சூழ்ந்த, புதுவெயில் — இளஞ்சோதியை, பொருவ - ஒப்பாகவும், விரல்தலை - அவன் கைவிரல்களிலே, மின்னிறம் — மின்னுகிற ஒளியையுடைய, கதிரில் — செஞ்சுடர்போல், சுற்றிய — சூழ்ந்திருக்கிற, பசும்பொன் - பைம்பொன்னாலான மோதிரங்களின், அவிரொளி — மிக்க ஒளிகொண்ட, காசின்கல் — ரத்னக்கற்களின், நிறக்கற்றை - ஒளிச்செறிவு ஆனது, நெடுநிழல்பூத்த — நீண்ட ஒளியைக்கொண்ட, கற்பகமுழுவனம் — முழுதுங் கற்பகக்காடேபோல், கவின் - அழகுசெய்யவும் வந்தான்—எ-று. 7

சன்னவீ ரத்த கோவை வெண்டாள மூழியி னிறுதியிற் றனித்த, பொன்னெடு வரையிற் றோற்றிய கோளு நாளுமொத் திடையிடை பொலிய, மின்னொளி மௌலி யுதயமால் வரையின் மீப்படர் வெங்கதிர்ச் செல்வர், பன்னிரு வரினு மிருவரைத் தவிர்வுற் றுதித்ததோர் படியொளி பரப்ப.

இ-ள். சன்னவீரத்த — சன்னவீரத்துடனே, கோவை — கோத்திருக்கிற, வெண்தாளம் — வெண்மையான முத்துமாலையானது, ஊழியினிறுதியில் — ஊழிகால முடிவிலே, தனித்த — ஒன்றாய் நிற்கிற, பொன்நெடுவரையில் - நீண்ட பொன்மலையிலே, தோற்றிய - தோன்றுகிற, கோளும் — ஒன்பது கிரகங்களையும், நாளும் — நக்ஷத்திரங்களையும், ஒத்து — ஒப்பாய், இடையிடை-அந்தச் சன்னவீரத்துக்கு நடுவே நடுவே, பொலிய-விளங்கவும், மின் - மின்னுகின்ற, ஒளி — ஒளியையுடைய, மௌலி — கிரீடங்கள், உதயமால் வரையில் — பெரிய உதயகிரியின், மீப்படர் — மேலேவருகிற, வெங்கதிர்ச் செல்வர் — சூரியர்கள், பன்னிருவரினும் — பன்னிரண்டுபேர்களிலே, இருவரை — இரண்டுபேரை, தவிர்விற்று — விட்டு, உதித்தது — பத்துச் சூரியர்களுதயமாகிய, ஓர்படி — ஒருவகை, ஒளிபரப்ப - பத்துக் கிரீடங்களும் ஒளிவீசவும் வந்தான்—எ-று. சன்னவீரம் — கழுத்திலணிகிற ஒருவகைமாலை இக்காலத்து முந்நூலென்ப. 8

பயிலெயிற் றிரட்டைப் பணைமருப் பொடியப் படியினிற் பரிபவஞ் சுமந்த, மயிலடித் தொழுக்கி னனையமா மதத்த மாதிரக்

காவன்மால் யானை, கயிலையிற் றிரண்ட முரண்டொடர் தடக்தோட் கனகன துயர்வரங் கடந்த, அயிலெயிற் றரியின் சுவடுதன் கரத்தா லளைந்தமாக் கரியினின் றஞ்ச.

இ-ள். பயில் — வாயிலேபொருந்தின, எயிற்று — பற்போல்வனவாகிய, இரட்டை — இரண்டுகிளையாய் முளைத்த, பணை — பருத்த, மருப்பு - கொம்புகள், ஒடிய — முறிய அதனாலே, படியினில் — பூமியிலே, பரிபவம் — துன்பத்தை, சுமந்த — கொண்ட, மயில் — மயிலினுடைய, அடித்து — கால்விரல் மூன்றுபோய், ஒழுக்கின் — மூவகையாய் ஒழுகுதலையுடைய, அனைய — அந்த, மாமதத்த — பெரிய மதங்களைக்கொண்ட, மாதிரம் — திசைகளை, காவல் — காக்கின்ற, மால்யானை — உயர்ந்த யானைகள், கயிலையில் — கயிலாசமலைபோல், திரண்ட — திரட்சியான, முரண்தொடர் — பலங்கூடின, தடந்தோள் - பெரிய தோள்களாலே, கனகனது — இரணியனுடைய, உயர்வரம் — உயர்ந்தவரபலமெல்லாம், கடந்த — வென்ற, அயில் எயிற்று — கூரிய பற்களையுடைய, அரியின்சுவடு — சிங்கத்தின் காற்சுவட்டை, தன்கரத்தால் — தனது துதிக்கையாலே, அளைந்த - தொட்டுக்கண்ட, மாகரியின் — பெரிய யானைபோல், நின்று அஞ்ச — திக்கிலேநின்று பயப்படவும் வந்தான்—எ-று. 9

அங்கயற் கருங்க ணியக்கியர் துயக்கி லரம்பையர் விஞ்சையர்க் கமைந்த, மங்கையர் நாக மடந்தையர் சித்தர் நாரிய ராக்கியர் முதலாக், குங்குமக் கொங்கைக் குவிமுலைக் கனிவாய்க் கோகிலந் துயர்ந்தமென் குதலை, மங்கைய ரீட்ட மால்வரை தழீஇய மஞ்ஞையுங் குழுவென மயங்க.

இ-ள். அம் - அழகிதான, கயல் — கெண்டைமீன்போலும், கருங்கண்- கரிய கண்களையுடைய, இயக்கியர் — யக்ஷகன்னிகளும், துயக்குஇல் — தோஷமில்லாத, அரம்பையர் — தெய்வகன்னிகளும், விஞ்சையர்க்கு - வித்தியாதரருக்கு, அமைந்த மங்கையர் - உடம்பாடான வித்தியாதர கன்னிகளும், நாகமடந்தையர் — நாககன்னிகளும், முதலா — முதலாக, குங்குமம் — குங்குமத்தினது, கொங்கை — மணத்தைக்கொண்ட, குவிமுலை — குவிந்த தனங்களையும், கனிவாய் - கனிபோன்றவாயும், கோகிலம்-குயிலும், துயர்ந்த-துன்பப்படுவதான, மென் — மிருதுவாகிய, குதலை - சொற்களையுமுடைய, மங்கையரீட்டம் — பெண்கள் கூட்டம், மால்வரை — ஒரு பெரியமலையை, தழீஇய — சூழ்ந்த, மஞ்ஞையங்குழுவென - மயிற்கூட்டங்கள்போல், மயங்க-கூடிவரவும் வந்தான்—எ-று. கொங்கு வாசனை, ஐ — சாரியை என்க. 10

தொளையுறு புழைவேய்த் தூக்கிசைக் கானந் துயல்வுறு வொருநிலை படர, இளையவர் மிடறு மிக்நிலை யிசைப்பக் கிந்நரர் முறைநிறுத் தெடுத்த, கிளையுறு பாடல் சில்லரிப் பாண்டி றழுவிய முழவொடு கெழுமி, அளையுறு மரவு மமுதவா யுகுப்ப வண்டமும் வையமு மளப்ப.

இ-ள். தொளையுறு — துவாரம் பொருந்தின, புழைவேய் — நெடுந்துவாரத்தையுடைய பொல்லாங்குழலினது, தூக்கிசை — பாட்டோசையான, கானம் — இராகமானது, துயல்வுறா — அசையாமல், ஒருநிலை — ஒருபுறத்திலே படர — வரவும், இளையவர் — யௌவனப் பெண்களுடைய, மிடறும் — கண்டத்தோசையும், இந்நிலை — இப்படியே, இசைப்ப — ஒலிக்கவும், கிந்நரர்-கின்னரர்கள், முறை — கிரமமாக, நிறுத்து — அளவுசெய்து, எடுத்த-சுதி கூட்டிப் பாடுகிற, கிளையுறு — நரம்பிலிருந்து வருவதான, பாடல் — பாட்டொலியும் சில்லரி — நாகசுரமும், பாண்டில் — பிரமதாளமும், தழுவிய — கூடின, முழவொடு-மத்தளத்தொனியுடனே, கெழுமி — சேர்ந்து, அளை உறும் — புற்றிலேயிருக்கிற, அரவும் — பாம்பும், அமுது — அமிர்தத்தை, வாய் — வாய்வழியாய், உகுப்ப — சிந்த, அண்டமும் — ஆகாயத்தையும், வையமும் — பூலோகத்தையும், அளப்ப — அளவிடுவதாக வந்தான்—எ-று. 1

அன்னபூஞ் சதுக்கஞ் சாமரை யுக்க மாதியாம் வரிசையிற் கமைத்த, உன்னரும் பொன்னின் மணியினிற் புனைந்த விழைக் குல முழைக்குல மனைய, மின்னிடைச் செவ்வாய்க் குவிமுலைப் பணைத்தோள் வீங்குதே ரல்குலார் தாங்கி, நன்னிறக் காரின் வரவு கண் டுவக்கு நாடக மயிலென நடப்ப.

இ-ள். அன்ன — அப்படிப்பட்ட அந்த, பூஞ்சதுக்கம் — அழகிய நான்கு புறமும்வந்து கூடுவதான அவன் வருகிறவழியிலே, சாமரை — வெண்சாமரமும், உக்கம் — விசிறியும், ஆதியாம் — முதலான, வரிசையிற்கு — உபசாரத்துக்கு, அமைந்த — தகுந்தவைகளையும், உன்னரும்-நினைத்தளவிடக்கூடாத, பொன்னின் — பொன்னாலும், மணியினில் — ரத்நங்களாலும், புனைந்த-அலங்கிருதமான, இழைக்குலம் — ஆபரணவகைகளையும், உழைக்குலம் — மான் கூட்டம், அனைய — போன்ற, மின் இடை — மின்னற்போரிடையும், செவ்வாய் — சிவந்தவாயும், குவிமுலை — குவிந்ததனங்களும், பணைத்தோள் — மூங்கில்போன்ற தோள்களும், வீங்கு — பெரிய, தேர் — தேர்த்தட்டுப்போன்ற, அல்குலார் — அல்குலுமுள்ளபெண்கள், தாங்கி — கொண்டு, நன்னிறம்-நல்ல நிறமுள்ளதான, காரின்வரவுகண்டு — மேகத்தின் வருதலைக்கண்டு, உவக்கும்-சந்தோஷிக்கின்ற, நாடகமயிலென — ஆடுகிறமயில்போல், நடப்ப — நடந்துவரவும் வந்தான்—எ-று. 12

தந்திரி நெறியிற் றூக்குறு கருவி தூக்கின ரெழுவிதச் சதியின், முந்துறு குணிலோ டியைவுறு குறட்டிற் சில்லரிப் பாண்டிலின் முறையின், மந்திர கீதத் திசைப்பதந் தொடர வகையுறு கட்டளை வழாமல், அந்தர வானத் தரம்பையர் கரும்பிற் பாடலா ரருகுவந் தகவ.

இ-ள். தந்திரி — தந்திகளின், நெறியில் — கிரமப்படியே முறைக்கேற்க, தூக்குறு — முழக்குகின்ற பாடுகின்ற, கருவி — யாழ் முதலியவைகளாலே.

தூக்கினர் - பாடினவர்களுடைய, எழுவீதச்சதியின் - எழுவகைத் தாளவொத்துடனே, முந்துறு — முன்னிட்டுவருகிற, குணிலோடு - அடிக்கிற குறுந்தடியுடனே, இயைவுறு - கூடுதலான, குறட்டில் - குறடென்னும் வாத்தியத்தினாலும், சில்லரி - நாகசுரத்துடனே, பாண்டிலின் - பிரமதாளங்களாலும், முறையின் - முறைப்படியே, மந்திரம் - ரகசியங்களைச்சொல்லுகிற, கீதத்து - பாட்டாகிய, இசைப்பதம் - ராகமுள்ளகவிகள், தொடர - சேர, வகையுறு - அந்த அந்த வகைகளுக்குள்ள, கட்டளை - நிறை, வழாமல் - தப்பாமல், அந்தரவானத்து அரம்பையர் - அழகான தகுதியுள்ள தெய்வலோகத்துப் பெண்களாகிய, கரும்பில் - கரும்பிற் சாறுபோலும், பாடலார் - பாடகிகள், அருகுவந்து - சமீபத்திலே வந்துநின்று, அகவ - பாடவும் வந்தான்—எ-று. 13

அந்தில்வே ளநங்க னழல்படத் தூரந்த வயின்முகப் பகழிவாயறுத்த, வெந்துறு புண்ணின் வேனுழைந் தாங்கு வெண்மதிப் பசுங்கதிர் விரவ, மந்தமா ருதம்போய் மலர்தொறும் வாரி வயங்கு நீர் மம்மரின் வருதேன், சிந்தநுண் டுளியின் சீகரத் திவலை யுருக்கிய செம்பொனத் தெறிப்ப.

இ-ள். அந்தில் - அந்தச் சமயத்திலே, வேள் - மன்மதனுன, அநங்கன் - உருவமில்லாதவன், அழல்பட — நெருப்புப்பொறிஉதிர, தூரந்த-எய்த, அயில்முகப்பகழி - கூரிய நுனியையுடைய அம்பானது, வாய் - தன்வாயாலே, அறுத்த - அறச்செய்த, வெந்துறு - வெந்திருக்கிற, புண்ணின் - புண்ணிலே, வேல் - வேலாயுதம், நுழைந்தாங்கு - புகுந்தாற்போல், வெண்மதி - வெள்ளிய சந்திரனது, பசுங்கதிர் — குளிர்ந்த சந்திரிகை, விரவ - கலக்க, மந்தமாருதம் - தென்றற்காற்றானது, போய் - சென்று, மலர்தொறும் - புஷ்பங்களிலெல்லாம், வாரி - பராகங்களை வாரிக்கொண்டு, வயங்கு - விளங்குகின்ற, நீர்மம்மரின் - நீர்க்குழம்புபோல் சேற்றுநீர்போல, வரு - ஊறிவருகிற, தேன் - தேனினின்றும், சிந்து — சிதறுதலாகிற, நுண்துளியின் - சிறியதுளிகளையுடைய, சீகரத்திவலை - பனிநீர்ச்செம்புகொண்டு தூவுகிற தூவல்கள், உருக்கிய - உருக்கின, செம்பென - செம்புத்துளிபோல, தெறிப்ப - மேலேபடவந்தான்—எ-று. 14

இழைபுரை மருங்கு லிறுமிறு மெனவு மிறுகலா வனமுலையிரட்டை, உழைபுகு செப்பி னொளிதர மறைத்த வுத்தரீ யத்தினரொல்கிக், குழைபுகு கமலங் கோட்டினர் நோக்குங் குறுநகைக் குமுதவாய் மகளிர், மழைபுரை தடங்கட் செங்கடை யீட்ட மார்பினுந் தோளினு மலைய.

இ-ள். இழை - நூலிழையை, புரை - ஒப்பான, மருங்குல் - இடையானது, இறும் இறும்-ஒடியும் ஒடியும், எனவும் - என்றுசொன்னாலும், இறுகலா-ஒடிவுகொள்ளாத விம்முதலாகுகிற, வனமுலை - அழகிய தனங்கள், இரட்டை-இரண்டும், உழைபுகு - கச்சிலேபுகுந்திருக்கிற, செப்பின் - செப்புகள்

போல், ஒளிதர - மறைப, மறைத்த - மூடின, உத்தரியத்தினர் - மார்யாப் புள்ளபெண்கள், ஒல்கி - துவண்டு, குழைபுகு-காதோலைகள்கூடின, கமலம்-தாமரைமலர்போன்ற முகங்களை, கோட்டினர் - கவிழ்ந்துகொண்டு, நோக்கும் - பார்க்கப்பட்ட, குறுநகை - மந்தகாசத்தையும், குமுதவாய் - செவ்வல்லி மலர்போன்ற வாயுமுள்ள, மகளிர் - பெண்களுடைய, மழைபுரை-குளிர்ச்சிஒத்த குளிர்ந்த, தடங்கண் - பெரிய கண்களின், செம் - சிவந்த, கடை - கடைப்பார்வைகளான, ஈட்டம் - கூட்டங்கள், மார்பினும் - மார்பிலும், தோளினும் - தோள்களிலும், மலைய - தைக்கவந்தான்—எ-று. உழை எழனுருபு கச்சினிடத்தே என்க. 15

மாலையுஞ் சாந்துங் கலவையும் பூணும் வயங்குநுண் டுகிலொடு காசும், சோலையின் றொழுதிக் கற்பகத் தருவு நிதிகளுங் கொண்டு பின் றொடரப், பாலின்வெண் பரவைத் திரைகருங் கிரிமேற் பரந்தெனச் சாமரை பதைப்ப, வேலைநின் றுயரு முயலில்வெண் மதியின் வெண்குடை மீதுற விளங்க.

இ-ள். மாலையும் - பூமாலைகளும், சாந்தும் - சந்தனமும், கலவையும்-கூட்டுவர்க்கச் சந்தனமும், பூணும் - ஆபரணங்களும், வயங்கு விளங்குகின்றது, நுண்துகிலொடு - மெல்லிய வஸ்திரத்துடனே, காசும் - பொற்காசும் ரத்நங்களும், சோலையின்தொழுதி - மரக்கூட்டமாக, கற்பகத்தருவும் - கற்பக விருக்ஷமும், நிதிகளும் - சங்கநிதி பதுமநிதிகளும், கொண்டுபின் - கைக்கொண்டுபின்னே, தொடர - வரவும், பாலின் - பாலுருவமாய், வெண்-வெண்மையான, பரவைத்திரை - கடலினலைகள், கருங்கிரிமேல் - ஒரு நீலகிரி மேலே, பரந்தென - பரவினாற்போல், சாமரை - வெண்சாமரங்கள், பதைப்ப - அசைந்தசைந்து விழவும், வேலைநின்று-கடல்மேலே நின்று, உயரும்-உயர்கின்ற, முயல் இல் - களங்கமில்லாத, வெண்மதியின் - வெள்ளைச்சந்திரன்போல, வெண்குடை - வெள்ளைக்குடையானது, மீதுற-தலைமேலாக, விளங்கவும் வந்தான்—எ-று. 16

ஆர்தரு மகழி யருவரை யிலங்கை யடிபெயர்த் திடுதொறு மழுந்தி, நேர்தரும் பரவைப் பிறழ்திரை தவழ்ந்து நெடுந்தடந் திசைதொறு நிமிரச், சார்தருங் கடுவி னெயிறுடைப் பகுவா யநந்தனுந் தலைதடுமாற, மூரிநீ ராடை யிருநில மடந்தை முதுகுளுக் குற்றனண் முரல.

இ-ள். ஆர்தரும் - நீர்நிறைந்துள்ள, அகழி - அகழ்சூழ்ந்த, அருவரை-மேருசிகரமான, இலங்கை - இலங்காபுரியில், அடி - அந்தராவணன் கால்களை, பெயர்த்து - மாறிமாறி, இடுதொறும் - வைக்கவைக்க, அழுந்தி-பள்ளமாய், நேர்தரும் - அங்கு வருகிற, பரவை - கடலினது, பிறழ் - மடங்குகிற, திரை - அலைகள், தவழ்ந்து - பாய்ந்து, நெடு - நீண்ட, தடம்-பெரிதான, திசைதொறும் - திக்கெல்லாம், நிமிர - பெருகிச்செல்லவும், சார்

தரும் - அவ்விலங்கையைச் சார்ந்து, கடுவின் எயிறுடை - விஷப்பற்களை யும், பகுவாய் - அகன்றவாயையுமுடைய, அநந்தனும் - ஆதிசேடனும், தலைதடுமாற - தலைமாறித்தாங்கவும், மூரிநீர் - கடலை, ஆடை - வஸ்திரமாக வுடைய, இருநில மடந்தை - பெரிய பூமிதேவி, முதுகு - தன்முதுகு, உளுக்குற்றனள் - நொந்தவளாய், முரல - கூசலிடவும் வந்தான்—எ-று. 17

கேடகத் தோடு மழுவெழுச் சூல மங்குசங் கப்பணங் கிடுகோ, டாடகச் சுடர்வா ளயில்சிலை குலிச முதலிய வாயுத மனைத்தும், தாடகைக் கிரட்டி யெறுழ்வலிக் கமைந்த தகைமையர் தடவரை பொறுக்கும், சூடகத் தடக்கைச் சுடுசினத் தடுபோ ரரக்கியர் தலை தொறுஞ் சுமப்ப.

இ-ள். கேடகத்தோடு - கேடகத்துடனே, மழு - மழுவும், எழு—எழு வும், சூலம் - சூலமும், அங்குசம் - அங்குசமும், கப்பணம் - கப்பணமும், கிடுகோடு - பரிசையுடனே, ஆடகச்சுடர் - பொன்னொளிவீசுகிற, வாள்- கத்தியும், அயில் - வேலும், சிலை - வில்லும், குலிசம் - வச்சிரமும், முதலிய- முதலான, ஆயுதமனைத்தும் - ஆயுதங்களெல்லாம், தாடகைக்கு - தாடகை யென்பவளுக்கு, இரட்டி - இரண்டுபங்கு, எறுழ்வலிக்கு - சாமர்த்தியத் திற்கு, அமைந்த - தகுந்த, தகைமையர் - பெருமையுள்ளவர்கள், தடவரை- பெரிய மலையையும், பொறுக்கும் - வேரோடு கொண்டு தாங்கவல்ல, சூட கம் - கங்கணமணிந்த, தடக்கை - நீண்டகைகளுள்ள, சுடுசினத்து - சுடு கின்ற கோபத்தினால், அடு - கொல்லப்பட்ட, போர் அரக்கியர் - வலியராட் சதிகள், தலைதொறும் - தலைகளெல்லாங்கொண்டு, சுமப்ப — தாங்கவும் வந் தான்—எ-று. 18

விரிதளிர் முகைபூக் கொம்புடை முதல்வே ரிவையெலா மணி பொனால் விரிந்த, தருவுயர் சோலை திசைதொறுங் கரியத் தழலுமி ழுயிர்ப்புமுன் றவழத், திருமக ளிருந்த திசையறிந் திருந்துந் திகைப்புறு சிந்தையன் கெடுத்த, தொருமணி நெடும்பற் பஃறலை யரவி னுழைதொறு முழைதொறு முலாவ.

இ-ள். விரி - விரிகின்ற, தளிர் - தளிரும், முகை - அரும்பும், பூ- மலரும், கொம்பு - கொம்பும், அடை - இலையும், முதல்வேர் - அடிவேரும் ஆகிய, இவையெலாம் — இவைகள்யாவும், மணி - ரத்நங்களாலும், பொன் னால் — பொன்னாலும், விரிந்த - விரிவதான, தருஉயர் - விருக்ஷங்களுயர்ந் திருக்கிற, சோலை - அந்த அசோகவனத்து, திசைதொறும் - திக்குகளெல் லாம், கரிய — தீய்ந்துபோகும்படி, தழல் உமிழ் - சுவாலைவீசுகிற, உயிர்ப்பு- இவன் சுவாசமானது, முன்தவழ — முன்னேவீச, திருமகள் — சீதாபிராட்டி, இருந்ததிசை — இருக்கிற இடம், அறிந்திருந்தும் — தெரிந்தும், திகைப்புறு- தெரியாமல மயங்குகிற, சிந்தையன் - மனசுள்ள ராவணன், ஒருமணி- ஒரே ஜீவரத்நத்தை, கெடுத்தது - போக்கிக்கொண்டதான, நெடும்பல்-

நீண்டயல்லும், பல்தலை – அநேகந்தலைகளுமுள்ள, அரவின் – பாம்புபோல், உழைதொறும் – எந்த இடங்களிலும், உலாவ – மனசுபாய வந்தான்—எ-று.

இனையதோர் தன்மை யெறுழ்வலி யரக்க ரேந்தல்வந் தெய்து கின்றானை, அனையதோர் தன்மை யஞ்சனைச் சிறுவன் கண்டன னமைவுற நோக்கி, வினையமுஞ் செயலு மேல்விளை பொருளு மிவ் வழி விளங்குமென் றெண்ணி, வனைகழ லிராமன் பெரும்பய ரோதி யிருந்தனன் வந்தயன் மறைந்தே.

இ-ள். இனையது – இப்படிப்பட்டதான, ஓர்தன்மை – ஒப்பில்லாத பெருமையுள்ள, எறுழ்வலி – மிக்கபலமுடைய, அரக்கரேந்தல் – ராட்சத ராஜனாய், வந்தெய்துகின்றானை – வந்துகிட்டுகிற ராவணனை, அனையது – அப்படிப்பட்டதான, ஓர் தன்மை – ஒப்பில்லாத பெருமையையுடைய, அஞ்சனை – அஞ்சனாதேவி, சிறுவன் – புத்திரனானதிருவடி, கண்டனன் – பார்த்தார், அமைவுற – செவ்வையாக, நோக்கி – பார்த்து, வினையமும் – இவன் உபாயமும், செயலும் — இவன் செய்வதும், மேல் — அதற்குமேலே, விளைபொருளும் – நடக்கிறகாரியமும், இவ்வழி – இவ்விடத்தே, விளங்குமென்று — தெரியுமென்று, எண்ணி – யோசித்து, வனைகழல் — வீரக்கழல் வனைந்துள்ள, இராமன் – ஸ்ரீராமனுடைய, பெரும்பெயர் – பெரிய பெயரான திருமந்திரத்தை, ஓதி — உச்சரித்துக்கொண்டு, வந்து அயல் — கிட்ட வந்து. மறைந்திருந்தனன – மறைந்துகொண்டிருந்தார்—எ-று. 20

ஆயிடை யரக்க னரம்பையர் குழுவு மல்லவும் வேறய லகல, மேயினன் பெண்ணின் விளக்கெனுந் தகையா ளிருந்துழி யாண்ட வள் வெருவிப், போயின வுயிர ளாமென நடுங்கிப் பொறிவரி யெறு ழ்வலிப் புகைகட், காய்சின வுழுவை தின்னியவந்த கலையிளம் பிணையெனக் கரைந்தாள்.

இ-ள். ஆயிடை — அப்போது, அரக்கன் – ராவணனானவன், அரம்பையர் குழுவும் – தெய்வப்பெண்கள் கூட்டமும், அல்லவும் – மற்றைஜாதி கூட்டமும், வேறு – வேறே, அயல் அகல – தூரப்போக, மேயினன் — உத்தரவுசெய்து, பெண்ணின் – பெண்களில், விளக்கு எனும் — தீபம் என்ன, தகையாள் – தக்கவள், இருந்துழி – இருக்குமிடத்துக்கு வேறயலகலமேயினன, ஆண்டு — அப்போது, அவள் – பிராட்டியார், வெருவி – பயந்து, போயின உயிரள் – உயிர் நீங்கின பிரேதம், ஆமென – ஆமென்னும்படி, நடுங்கி – நடுக்கங்கொண்டு, பொறி – புள்ளிகளும், வரி – நீளரேகைகளும், எறுழ்வலி – மிக்க சாமர்த்தியமும், புகைக்கண் – புகைகிற கண்களுங் கொண்டு, தின்னியவந்த – தின்னுதற்குவந்த, காய்சின உழுவை — கொல்லுங் கோபமுள்ள புலியைக்கண்ட, கலை — ஆண்மானில்லாத, இளம்பிணை யென — ஒரு இளைய பெண்மான்போல், கரைந்தாள் – உருகுவதானாள். 21

வேறு

கூசியாவிகுலைவுறுவாளையும்
ஆசையாலுயிராசழிவானையும்
காசில்கண்ணிணைசான்றெனக்கண்டனன்
ஊசலாடியுளையுமுளத்தினன்.

இ-ள். கூசி — உடம்பெல்லாங் கூசுதலாய், ஆவி — உயிரும், குலைவுறுவாளையும் — நடுங்குகிற சீதையும், ஆசையால் — ஆசையினலே, உயிர் — பிராணன், ஆசு — விரைவில், அழிவானையும் — கெடுகிற ராவணனையும், காசு இல் - குற்றமில்லாத, கண்ணிணை — தமதிரண்டு கண்களும், சான்றென - சாக்ஷியாக, கண்டனன் — பார்த்தார், ஊசல் — ஊஞ்சல்போல், ஆடி — அசையும், உளையும் — வருந்துகிற, உளத்தினன் — மனத்தையுடைய திருவடி. 22

வாழிசானகிவாழியிராகவன்
வாழிநான்மறைவாழியரந்தணர்
வாழிநல்லறமென்றுறவாழ்த்தினன்
ஊழிதோறும்புதிதுறுங்கீர்த்தியான்.

இ-ள். வாழிஜானகி — ஜனககுலசுந்தரி வாழ்வாளாக, வாழி இராகவன்-ரகுகுல சுந்தரன் வாழ்வானாக, வாழிநான்மறை — நான்குவேதங்களும் வாழ்வதாக, வாழியர் அந்தணர் - பிராமணர்களெல்லாரும் வாழ்வாராக, வாழிநல்லறம் — இவ்விருவராலே நல்ல தருமமும் வாழ்வதாக, என்று — என்பதாய், உற — மிகவும், வாழ்த்தினன் — வாழிசொல்லினர், ஊழிதோறும் — ஊழிகாலமெல்லாம், புதிதுறும் — விசேஷப்படுகிற, கீர்த்தியான் — கீர்த்தியையுடைய திருவடி—எ-று. 23

அவ்விடத்தருகெய்தியரக்கன்றான்
எவ்விடத்தெனக்கின்னருளீவது
நொவ்விடைக்குயிலேநுவல்கென்றனன்
வெவ்விடத்தையமிழ்தெனவேண்டுவான்.

இ-ள். அவ்விடத்து — அந்த இடத்துக்கு, அருகெய்தி — பக்கத்திலே வந்து, அரக்கன்தான் — ராவணனானவன், எவ்விடத்து - எந்த இடத்திலே எப்போ, எனக்கு — உன்னைவேண்டுகிற எனக்கு, இன் அருள் ஈவது — இனிய தயவு செய்கிறது எவ்விடத்து, நொ — வருந்துகிற, இடை - இடையையுடைய, குயிலே — குயில்போலுந் தொனியுள்ளவளே, நுவல்க - சொல்லு, என்றனன் — என்றுசொன்னான், வெவ்விடத்தை — கொடியநஞ்சை, அமிழ்தென — அமிர்தமென்று நினைத்து, வேண்டுவான் — விரும்புகிறராவணன்.

ஈசற்காயினுமீடழிவுற்றிறை
வாசிப்பாடழியாதமனத்தினன்

ஆசைப்பாடுமந்நாணுமடர்த்திடக்
கூசிக்கூசியிவையன கூறினான்.

இ-ள். ஈசற்கு – சிவனுக்கே, ஆயினும் – ஆனாலும், ஈடு அழிவுற்று– தனது பெருமை குலைந்து, இறை – கொஞ்சமாவது, வாசிப்பாடு – மேம்பாடு, அழியாத – கெடாத குறையாத, மனத்தினான் – மனத்தையுடைய ராவணன், ஆசைப்பாடும் – இவன் ஆசைப்படுகையும், அ – அந்த ஆசை நிரம்பாமையால் வருகிற, நாணும் – வெட்கமும், அடர்த்திட – இவனை மிகவும்வருத்த, கூசிக்கூசி – பேசக்கூச்சமிகுதியாய், இவையன – இவ்வார்த்தைகள், கூறினான் – சொன்னான்—எ-று. 25

இன்றிறந்தனநாளையிறந்தன
என்றிறந்தருந்தன்மையிதாலெனைக்
கொன்றிறந்தபின்கூடுதியோகுழை
சென்றிறங்கிமறந்தருசெங்கணாய்.

இ-ள். இன்று இறந்தன – இன்றும் வீணேபோயின, நாளை இறந்தன– நாளையும் அப்படியேபோவன, என்திறம் – என்விஷயத்திலே, தரும் தன்மை – நீசெய்யும்வகை, இது – இப்படியிருக்கிறது, எனை – என்னை இந்தக்காமநோய், கொன்று – கொலைசெய்து, இறந்தபின் – போனபின்பு, கூடுதியோ – கூட எண்ணுவாயோ, குழை – காதளவும், சென்று – நீண்டு, இறங்கி – என்மேலிழிந்து மறம்தரு – கொலையைத்தருவதான, செங்கணாய்– சிவந்த கண்களையுடையவளே—எ-று. 26

உலகமொன்றொடிரண்டொருங்கோம்புமென்
அலகில்செல்வத்தரசியலாணையில்
திலகமேயுன்றிறத்தநங்கன்றரு
கலகமல்லதெளிமையுங்காண்டியோ.

இ-ள். உலகம் – உலகங்கள், ஒன்றொடிரண்டு – மூன்றையும், ஒருங்கு– முழுதும், ஓம்பும் – அரசாட்சிசெய்கிற, என் – எனது, அலகு இல் – கணக்கில்லாத, செல்வத்து – ஐசுவரியத்தையுடைய, அரசியல் – ராஜலக்ஷணமுள்ள, ஆணையில் – ஆக்கினைக்கு, திலகமே – திலகம்போற் சிறந்தவளே, உன்திறத்து – உன்மூலமாக, அநங்கன்தரு – மன்மதன் உண்டுபண்ணுகிற, கலகம் – கலகத்தை, அல்லது – அல்லாமலும், எளிமையும் – அவனுக்குநான் தோற்கிறதையும், காண்டியோ – பார்க்க உனக்குச் சம்மதிதானோ—எ-று.

பூந்தண்வார்குழற்பொற்கொழுந்தேபுகழ்
ஏந்துசெல்வமிகழ்ந்தனையின்னுயிர்க்
காந்தன்மாண்டிலன்காடுகடந்துபோய்
வாழ்ந்தவாழ்வதுமானிடர்வாழ்வன்றோ.

இ-ள். பூ - பூவணிந்து, தண் - குளிர்ச்சியான, வார் - நீண்ட, குழல் - கூந்தலையுடைய, பொன்கொழுந்தே - பொன்னிற் சிறந்தவளே, புகழ் மிகுகீர்த்தியை, ஏந்து - கொண்டுள்ள, செல்வம் - என்பாக்கியத்தை, இகழ்ந்தனை - அசட்டைபண்ணுகிறாய், இன் - இனிதான, உயிர் - உன் உயிர் போன்ற, காந்தன் - நாயகன், மாண்டிலன் - இறவாதவனாகி, காடு - வனவாசகாலமெல்லாம், கடந்துபோய் - கழித்துச்சென்று, வாழ்ந்த வாழ்வு - இனிவாழப்போகிற வாழ்வுதானென்ன, அது மானிடர் - அதுவும் மனிதருக்குரிய, வாழ்வு அன்றோ - அல்பவாழ்வுதான் அல்லவோ என்வாழ்வு போல் நிலையுள்ளதன்று, வாழும் வாழ்வை - வாழ்ந்தவென இறந்தகாலத்தாற் கூறினும் செய்யுட்கேற்பவழுவமைதியாகக் கொள்க—எ-று. 28

நோற்கின்றார்களுநுண்பொருணுண்ணிதிற்
பார்க்கின்றாரும்பெறும்பயன்பார்த்தியேல்
வார்க்குன்றாமுலையென்சொன்மௌலியால்
ஏற்கின்றாரொடுடனுறையின்பமால்.

இ-ள். நோற்கின்றார்களும் - தவஞ்செய்கிறவர்களும், நுண்பொருள் - அதிசூட்சுமார்த்தங்களும், நுண்ணிதில் - சுலபத்திலே, பார்க்கின்றாரும் - தெரிகிறவர்களும், பெறும்பயன் - அடையும்பலனை, பார்த்தியேல் - நீதெரிவையேயானால், வார் - ரவுக்கையணிந்த, குன்று ஆம் - மலைக்கொப்பான, முலை - தனங்களையுடையவளே, என்சொல் - எனது பணிவிடையை, மௌலியால் - தலையாலே, ஏற்கின்றாரொடு - அங்கீகரிக்கிறதேவர்களுடனே, உடன் உறை - கூட இருக்கிற, இன்பம் சுகமேபெறும்பயன் வேறில்லை. 29

பொருளும்யாழும்விளரியும்பூவையும்
மருளுநாளுமழலைவழங்குவாய்
தெருளுநான்முகன்செய்ததுசிந்தையின்
அருளுமின்மருங்கும்மரிதாக்கியோ.

இ-ள். பொருளும் - பிள்ளையும், யாழும் - வீணையும், விளரியும் - விளரியென்னுமிராகமும், பூவையும் - நாகணவாய்ப்புள்ளும் ஆகிய நான்கும் சொற்சுவைக்குவமைகள், நாளுமருளும் - தினமுமயங்குவனவாகும், மழலை - இளஞ்சொற்களை, வழங்குவாய் - பேசுகிறவளே, தெருளும் - எல்லாந் தெளிந்தவனான, நான்முகன் - சதுர்முகக்கடவுள், செய்தது - உன்னைப் படைத்தது, உன்சிந்தையில் - உன் மனசிலே, அருளும் - இரக்கமும் உடம்பிலே, மின் - மின்போல், மருங்கும் - இடையும், அரிது ஆக்கியோ - இல்லையாகவோ செய்தது—எ-று. 30

ஈண்டுநாளுமிளமையுமீண்டில
மாண்டுமாண்டுபிறிதுறுமாலைய
வேண்டுநாள்வெறிதேகவிளிந்தாலினி
யாண்டுவாழவவ்விடருழன்றாழ்தியோ.

இ-ள். ஈண்டு—(கழிந்துகொண்டு) வருகிற, நாளும் — ஆயிசும், இளமையும்—யௌவநமும், ஈண்டில (கழிவனவேயன்றி) மீளுவனவல்ல, மாண்டு மாண்டு—போய்ப்போய், பிறிதுறு—வேறுபாடாகிற, மாலைய—செல்கையையுடையன அவ்விரண்டும், வேண்டுநாள் — அனுபவிக்கவேண்டுகிறகாலம், வெறிதே — வியர்த்தமாகவே, விளிந்தால் — போனால், இனியாண்டு — இனியெங்கே, வாழ்வு — சுகம் உண்டாகுகிறது, அவ்விடர் — காலத்தேயனுபவியாமற்போன அந்தத்துக்கக்கடலிலே, உழன்று — பின்புவருந்தி, ஆழ்தியோ-முழுகுவையோ—எ-று. 31

இழுவெனக்குயிர்க்கெய்தினுமெய்துக
குழைமுகத்துநின்சிந்தனைகோடினால்
பழகநிற்புறும்பண்பிவைகாமத்தோ
டழகினுக்கினியாருளராவரோ.

இ-ள். எனக்கு — எனக்கு, உயிர்க்கிழவு — உயிர்ச்சேதம், எய்தினும்-வந்தாலும், எய்துக — வருக, குழை — குண்டலமணிந்த, முகத்து — முகத்தையுடைய, நின்சிந்தனை — உன் மனசு, கோடினால் — கோணினால், பழக — நீ இணங்குவதாக, நிற்புறும் — நான் அடங்கிநிற்கிற, பண்பு — குணங்கள், இவை — இப்போது நான் வேண்டுகோள்கள் முதலியன, காமத்தோடு-இனி உனக்குளதாகிற காமத்துக்கும், அழகினுக்கு — என் அழகுக்கும், இனியார் — இனித்தக்கவர், உளராவரோ — என்னை அல்லது வேறே ஒருவருண்டா இல்லை ஆகையால் நீ மனங்கோணி என் உயிர்போகாமற் செய்கை வேணுமென்கிறான்—எ-று. 32

பெண்மையும்மழகும்பிறழாமனத்
திண்மையும்முதல்யாவையுஞ்செய்யவாக்
கண்மையும்பொருந்திக்கருணைப்படர்
வண்மையென்கொல்ஜனகரின்மாண்டவா.

இ-ள். பெண்மையும் — பெண்தன்மையும், அழகும் — அதற்கேற்ற அழகும், பிறழா — அதற்குக்குறையாத, மனத்திண்மையும் — மனோதிடமும், முதல்யாவையும் — முதலான எல்லாம், செய்ய ஆய் — செவ்வையாய் நல்லனவாய், கண்மையும் — தாக்ஷிண்ணியமும், பொருந்தி — உளதாகி, கருணை — இரக்கத்தினாலே, படர் — வருகிற, வண்மை — உதாரகுணமும், ஜனகரில் — ஜனகன் குலத்திலே, மாண்டவா — அழிந்துபோனபடி, என்கொல் — யாது காரணம்—எ-று. உன்னிடத்திலே நற்குணங்களெல்லாமிருந்தும் தாக்ஷிண்ணியமும் ஈகையுமில்லையென்கிறான் என்றால் எனக்கு உயிர்ப்பலி தரவேணுமென்கை, பலி பிச்சை. 33

வீட்டுங்காலத்தலறியமெய்க்குரல்
கேட்டுங்கொண்டற்கிருந்திகால்கிவ்ளைநீ

நாட்டுங்காலெனெடுநல்லறத்தின் பயன்
ஊட்டுங்காலத்திகழ்வதுறுங்கொலோ.

இ-ள். வீட்டுங்காலத்து - ராமனை நான் கொல்லும்போது, அலறியகத்திக்கொண்டு விழுந்த, மெய்க்குரல் — மெய்யான சொல்லை, கேட்டும்- நீகேள்விகொண்டும், காண்டற்கு — இன்னம் ராமனைப் பார்க்கவோ, கிள்ளை நீ — ஓ கிளிபோல் வசனிப்பவளே, இருத்திகொள் — எண்ணியிருக்கிறாய், நாட்டுங்கால் — சொல்லும்போது, நெடு — நெடுங்காலமுமுளதாகுகிற, நல் அறத்தின் பயன் — நல்ல புண்ணிய பலத்தை, ஊட்டுங்காலத்து — நீ அனுபவிக்கக்கிடைத்தபோது, இகழ்வது — அதை வேண்டாமென்கிறது, உறுங் கொல் — உனக்குத்தகுமா, என்னை நீ அனுபவிக்கையே உனக்கு நல்ல புண்ணியபலமென்கிறான்—எ-று. மாரீசன் ராமன் குரலாக ஆ லட்சுமணா என்றது மெய்க்குரல். 34

தக்கதென்னுயிர்வீடெனிற்றாழ்கிலா
தொக்கசெல்வமுலையுமொருத்திநீ
புக்குயர்ந்ததெனும்புகழ்போக்கிவே
றுக்கதென்னுமுறுபழிகோடியோ.

இ-ள். என் உயிர் வீடு — உன்னாலே நான் என் உயிரைவிடுகையே, தக்கதெனில் — சரியென்றால், தாழ்கிலாது - அரைநிமிடமேனுந் தாமதியாமல், ஒக்க — என்கூடவே, செல்வம் — இவ்வளவு ஐசுவரியத்தையும், உலையும்- கெடுத்துக்கொள்ளுகிற கெடுதலாகிற, ஒருத்திநீ - ஒருபெண்ணாயிருக்கிறாய்நீ, புக்கு - நீவந்து கூடி, உயர்ந்தது — ராவணன் செல்வம் மேன்மேலாயிற்று, எனும் — என்பதான, புகழ் — கியாதியை, போக்கி — விட்டு நீக்கி, வேறு- சீதைவந்து வேறுபாடாய், உக்கது — ஐசுவரியம் அழிந்தது, என்னும் — என்பதான. உறுபழி — மிக்கபழிப்பை, கோடியோ — கொள்ளவோ நீ வந்தனை. 35

தேவர்தேவியர்சேவடிகைதொழும்
தாவின்மூவுலகின்றனிநாயகம்
மேவுகின்றதுநுன்கண்விலக்கினை
யாவரேழையர்நின்னினிலங்கிழாய்.

இ-ள். தேவர் — தேவர்களும், தேவியர் — அத்தெய்வப்பெண்களும், சேவடி — உனது சிவந்த பாதங்களைக்கண்டு, கைதொழும் — கைகூப்பும்படியான, தா இல் — கெடுதலில்லாமல், மூன்றலகுக்கும் — திரிலோகத்துக்கும், தனி — ஒப்பில்லாத, நாயகம் — அதிகாரமுடைமை, நுன்கண் — உன் இடத்தே, மேவுகின்றது — வருகிறதாவதை, விலக்கினை — வேண்டாவென்கிறாய், இலங்கு இழாய் — விளங்கும் ஆபரணங்களணிந்தவளே, நின்னில் — உன்போல், ஏழையர் — பெண்கள், யாவர் — யாருண்டு—எ-று. 36

குடிமைமூன்றுலகுஞ்செயுங்கொற்றத்தென்
அடிமைகோடியருளுதியாலெனு

முடியின் மீதுமுகிழ்த்துயர்கையினன்
படியின்மேல்விழுந்தான் பழிபார்க்கலான்.

இ-ள். மூன்றுலகும் - திரிலோகமும், குடிமைசெயும் — குடித்தனஞ் செய்வதாய் அடக்கின, கொற்றத்து — வெற்றியையுடைய, என் — என்னை, அடிமைகோடி - உனக்கு அடிமையாகக்கொள்ளு என் அடிமையைப் பணியைக்கொள்ளு, அருளுதி — தயவுபண்ணு, ஆல் எனு — மெய்யாகவென்று சொல்லி, முடியின்மீது — தலைமேல், முகிழ்த்து — குவித்து, உயர் — உயர்ந்த, கையினன் — கையையுடையவனுய், பழிபார்க்கலான் — பழிப்பையும் எண்ணுமல், படியின்மேல் - மண்மேலே, விழுந்தான் — நீண்டுவிழுந்து சேவித்தான் — எ-று. 37

வேறு

காய்ந்தனசலாகையன்னவுரைவந்துகதுவாமுன்னம்
தீய்ந்தனசெவிகளுள்ளந்திரிந்தது சிவந்தசோரி
யாய்ந்தனகண்களொன்றும்பரிந்திலளுயிர்க்கும்பெண்மைக்
கேய்ந்தனவல்லாவெய்யமாற்றங்களினையசொன்னுள்.

இ-ள். காய்ந்தன — நெருப்பிலேவெந்த, சலாகை — இருப்புக்கம்பியை, அன்ன — ஒப்பான, உரைவந்து — சொல்லானதுவந்து, கதுவாமுன்னம் — நுழையுமுன்னே, செவிகள் — காதுகள், தீந்தன — கருகுதலாயின, உள்ளம் — மனசு, திரிந்தது - வேறுபாடாயிற்று, கண்கள் — நேத்திரங்களிலே, சிவந்த சோரி - சிவந்தரத்தம், பாய்ந்தன — ஒழுகலாயின, ஒன்றும் — ஒருவிதத்தாலும், பரிந்திலள் — துக்கப்படாதவளாய், உயிர்க்கும் — நெடுமூச்செறிகிறவள், பெண்மை - தனது பெண்தன்மைக்கு, ஏய்ந்தன — பொருந்தியன, அல்லா — அல்லாத, வெய்யமாற்றங்கள் - கொடுஞ்சொற்கள், இனைய — இப்படியாக, சொன்னுள் — சொல்லலானுள் — எ-று. அவள் பேசுகிறது பெண்கள்போலன்று ஆண்கள்போற் பேசுகிறுளென்க. தன் உயிர்க்குப் பரிந்திலளெனவுமாம். 38

மல்லடுதிரடோள்வஞ்சன்மனம்பிறிதாகும்வண்ணம்
கல்லொடுந்தொடர்ந்தநெஞ்சகற்பின்மேற்கண்டதுண்டோ
இல்லொடுந்தொடர்ந்தமாதர்க்கேய்வனவல்லவெய்ய
சொல்லிதுதெரியக்கேட்டிதுரும்பெனக்கனன்றுசொன்ளுள்.

இ-ள். மல் — மல்யுத்தத்திறைலும், அடு - கொல்லவல்ல, திரள்தோள் — திரண்ட தோள்களையுடைய, வஞ்சன் — வஞ்சகனுன ராவணன், மனம் — மனசு, பிறிதாகும்வண்ணம் — வேறுபடும்படி, கல்லொடும் — கல்லுடனே, தொடர்ந்த — ஒப்பதான, நெஞ்சம் - மனதாகிறதற்கு, கற்பின்மேல் — கற்பிலுஞ் சிறந்ததாக, கண்டது — பார்க்கத்தக்க பொருளும், உண்டோ — உளதாமோ, இல்லொடும் — இல்லறத்துடனே, தொடர்ந்த — கூடியிருக்கிற மாதர்க்கு — பெண்களுக்கு, ஏய்வன — தகுவனவாயவை, அல்ல — அல்லவேயான,

வெய்யசொல் – கொடுஞ்சொல், இது – இப்போது நீ சொன்னது, தெரிய-இனியாவது நீ தெரிவதாக, கேட்டி – நான் சொல்வதைக்கேள், இரும்பு-ஒ திரணமே, என – என்று, கனன்று – கோபங்கொண்டு, சொன்னான்-சொல்வதானான்—எ-று. 39

மேருவையுருவல்வேண்டின்விண்பிளந்தேகல்வேண்டின்
ஈரெழுபுவனம்யாவுமுற்றுவித்திடுதல்வேண்டின்
ஆரியன்பகழிவல்லதறிந்திருந்தறிவிலாதாய்
சீரியவல்லசொல்லித்தலைபத்துஞ்சிந்துவாயோ.

இ-ள். மேருவை – மேருமலையை, உருவ – பொத்துக்கொண்டுசெல்ல, வேண்டில் – வேண்டினாலும், விண் – ஆகாயத்தை, பிளந்து – கிழித்துக்கொண்டு, ஏகல்வேண்டில் – செல்லல் வேண்டினாலும், ஏரெழுபுவனம்யாவும்-இந்தப் பதினாலு லோகங்களெல்லாம், முற்றுவித்திடுதல்வேண்டில் – அழியச்செய்யவேண்டினாலும், ஆரியன் – ஸ்ரீராமனுடைய, பகழி – பாணமானது, வல்லது – வலிமையுள்ளதே அதை, அறிந்திருந்து – நீயே தெரிந்துகொண்டும், அறிவிலாதாய் – ஒ புத்திகெட்டவனே, சீரிய அல்ல - நல்லதல்லாதவைகளை, சொல்லி – சொல்லுவாயாகில், தலைபத்தும் – உன் பத்துத்தலைகளும், சிந்துவாயோ – சிந்தக்கடவையோ அற்றுப்போகுவையோ—எ-று. 40

அஞ்சினையாதலானன்றாரியனற்றநோக்கி
வஞ்சனைமாவொன்றேவிமாயையான்மறைந்துவந்தாய்
உய்ஞ்சனைபோதியாகின்விடுதியுன்குலத்துக்கெல்லாம்
நஞ்சினையெதிர்ந்தபோதுநோக்குமேநினதுநாட்டம்.

இ-ள். அஞ்சினை – நீ பயந்தாய், ஆதலால் – ஆனபடியினாலே, அன்று-அப்போது, ஆரியன் – ஸ்ரீராமனது, அற்றம் – இல்லாதகாலம், நோக்கி, பார்த்து, வஞ்சனை – வஞ்சனையுள்ள, மாவொன்று - ஒருமானை, ஏவி - முன்னேவிட்டு, மாயையால் - வஞ்சிக்குங் கருத்துடனே, மறைந்துவந்தாய்-மறைந்துவரலானாய், உய்ஞ்சனை போதியாகில் – இனிப் பிழைத்துப்போக மனதுண்டானால், விடுதி – என்னை விட்டுவிடு, உன் குலத்துக்கெல்லாம்-உன் வமிசத்துக்கெல்லாம், நஞ்சினை - விடம்போலிருக்கிற என்னை, எதிர்ந்தபோது – கண்டால், நினதுநாட்டம் – உன் கண்கள், நோக்குமே – வேண்டிப் பார்க்கத்தகுமா—எ-று. 41

பத்துளதலையுந்தோளும்பலபலபகழிதூவி
வித்தகவில்லினாற்குத்திருவிளையாடற்கேற்ற
சித்திரவிலக்கமாகுமல்லதுசெருவிலேற்கும்
சத்தியைபோலின்மேனாள்சடாயுவாற்றரையின்வீழ்ந்தாய்.

இ-ள். பத்துள – பத்தாயிருக்கிற, தலையும் – தலைகளும், தோளும்-தோள்களும், பலபல – அநேகங்களான, பகழிதூவி – அம்புகளைவிட்டு, வித்தக

வில்லினாற்கு — தனுர்வேதந்தெரிந்த ஸ்ரீராமனுக்கு, திருவிளையாடற்கு ஏற்ற திருவிளையாடல் செய்யத்தக்க, சித்திரம் — வேடிக்கையான இலக்கமாகும் லக்ஷியப்பொருளானவை, அல்லது — அல்லாமல், செருவில் — யுத்தத்திலே வந்து, ஏற்கும் — எதிர்ப்பதான, சத்தியை — நீ பலமுள்ளவன், போலும் போல்வையோ, மேனாள் — என்னைநீ கொண்டுவரும்போது, சடாயுவால் ஒரு சடாயு அடித்ததனாலே, தரையில் வீழ்ந்தாய் — மூர்ச்சையாய் மண்மேல் விழுந்த நீ செருவிலேற்குஞ் சத்தியைபோல்வையோ, போலாய் என்கிறாள்.

தோற்றனைபறவைக்கன்றுதுள்ளுநீர்வெள்ளஞ்சென்னி
ஏற்றவன்வாளால்வென்றாயன்றெனிறத்தியன்றே
நோற்றநோன்புடையவாழ்நாள்வரமிவைநுனித்தவெல்லாம்
கூற்றினுக்கன்றேவீரன்சரத்திற்குங்குறித்ததுண்டோ.

இ-ள். பறவைக்கு — அந்தப் பக்ஷிக்கு, அன்று — அக்காலத்திலே சரியாகாமல், தோற்றனை — தோற்றுப்போனாய், துள்ளும் — திவலைதெறிப்பதான, நீர்வெள்ளம் - கங்காப்பிரவாகத்தை, சென்னியேற்றவன் - தலைமேற்கொண்ட சிவனுடைய, வாளால் — கத்தியினாலே, வென்றாய் — செயங்கொண்டாய், அன்றெனில் — அந்தக் கத்தியல்லதானால், இறத்தி அன்றே — சாவாயல்லவோ, நோற்றநோன்பு — நீ முன்பு பசிதாகங்களைப் பொறுத்துப் பண்ணின தவப்பலனாலே, உடைய வாழ்நாள் வரம் — உடைய ஆயுசும் வேண்டியவரங்களும், இவை — ஆகிய இவைகளுடனே, நுனித்த எல்லாம் — நீ பெற்றிருக்கிற யாவும், கூற்றினுக்கு அன்றே — யமனுக்கல்லவோ நியமித்தது, வீரன் - ஸ்ரீராமனுடைய, சரத்திற்கு — அம்புக்கும், குறித்ததுண்டோ — நியமித்ததுண்டோ, உலகத்தில் — எல்லாரும் யமன் வாய் விழுவாரானால் நீ வீரன் அம்பின்வாய் விழுகிறவனானாயென்கிறாள் — எ-று. 43

பெற்றுடைவாளுநாளும்பிறந்துடையூரனும்பின்னும்
மற்றுடையெவையுந்தந்தமலரயன்முதலோர்வார்த்தை
விற்றொடையிராமன்கோத்துவிடுதலும்விலக்குண்டெல்லாம்
இற்றிடைந்திறுதன்மெய்யேவிளக்கின்முன்னிருளுண்டாமோ.

இ-ள். பெற்றுடை — நீ பெற்றிருக்கிற, வாளும் — கத்தியும், நாளும் - ஆயிசும், பிறந்துடை — நீ பிறந்துகொண்டுள்ள, ஊரனும் - பலமும், பின்னும் - பின்பும், மற்றுடை — இன்னமுமுள்ள, எவையும் — எல்லாம், தந்த — கொடுத்த, மலர் — பூமேலிருக்கிற, அயன் — பிரமன், முதலோர் — முதலானவர்கள், வார்த்தை — வரபலமெல்லாம், வில் — வில்லினின்றும், தொடை - தொடுப்பதை, இராமன் — ஸ்ரீராமனானவர், கோத்துவிடுதலும் — பூட்டிவிடுமளவிலே, விலக்குண்டு — நீங்குதலாய், எல்லாம் — எல்லாப் பொருள்களும், இற்று — அழிந்து, இடைந்து இறுதல் — கெட்டுமுடிகிறது, மெய்யே — சத்தியமே, விளக்கின்முன் — விளக்குக்குமுன்னே, இருள் — உண்டாமோ-இருள் நிற்குமோ நில்லா — எ-று. 44

குன்றுநீயெடுத்தநாடன்சேவடிக்கொழுந்தாலுன்னை
வென்றவன்புரங்கள்வேவத்தனிச்சரந்துரந்தமேரு
என்றுணைக்கணவனாற்றற்குானிலாதிற்றுவீழ்ந்த
அன்றெழுந்துயர்ந்தவோசைகேட்டிலைபோலுமம்மா.

இ-ள். குன்றுநீ — நீ மலையை, எடுத்தநாள் — தூக்கினபோது, தன் - தமது, சேவடிக்கொழுந்தால் - சிவந்த பாதப் பெருவிரலாலே, உன்னை வென்றவன் - உன்னைச் செயித்தவன், புரங்கள்வேவ — திரிபுரங்களெரிய, தனிச்சரம் — ஒப்பிலாத பாணத்தை, துரந்த - விட்ட, மேரு — மேருமலையானவில், என்துணை — எனது சகாயரான, கணவன் - நாயகருடைய, ஆற்றற்கு — பலத்துக்கு, ஊன்இலாது - தான் பலம்போதாமல், இற்றுவீழ்ந்தது — ஒடிந்துவிழுந்தது, அன்று - அப்போது, எழுந்து-உண்டாகி, உயர்ந்த - உயர்தலான, ஓசை — சத்தமானதை, கேட்டிலைபோலும் — நீ கேட்க இல்லைபோலிருக்கிறது, அம்மா - இதென்ன ஆச்சரியம்—எ-று. 45

வேறு

மலையெடுத்தெண்டிசைகாக்குமாக்களை
நிலைகெடுத்தேனெனுமாற்றநேருநீ
சிலையெடுத்திளையவனிற்கச்சேர்ந்திலை
தலையெடுத்தின்னமுமகளிற்றாழ்தியோ.

இ-ள். மலையெடுத்து — வெள்ளிமலையைப்பேர்த்து, எண்திசை — எட்டுத்திக்கையும், காக்கும் — காவல்செய்கிற, மாக்களை — பெருமையுள்ளவர்களை, நிலைகெடுத்தேன் — நிலைகெடச்செய்தேன், எனுமாற்றம் — என்கிற வார்த்தையை, நேரு நீ — கொண்டுள்ளநீ, சிலையெடுத்து — வில்லேந்திக்கொண்டு, இளையவன் நிற்க — இளையபெருமாள் நிற்கும்போது, சேர்ந்திலை-வரப்பயந்தாய் பயந்தநீ, தலையெடுத்து — தலைகளைத் தூக்கிக்கொண்டு, இன்னமும் - இன்னமும் சாமர்த்தியமுள்ளவன்போல், மகளில் — ஒரு பெண்காலிலே, தாழ்தியோ — குனியலாமோ என்றால், நீ சாமர்த்தியமுள்ளவனால் ராமனுன ஆண்காலினருகேபோய்க் குனி என்கிறாள் பிராட்டி--எ-று.

ஏழைநின்னொளித்துறைபின்னதாமென
வாழியெங்கோமகனறியவந்தநாள்
ஆழியுமிலங்கையுமழியத்தாழுமோ
ஊழியுந்தீயுமுன்னுயிரொடோயுமோ.

இ-ள். ஏழை — அடே அறிவில்லாதவனே, நின் — உன்னுடைய, ஒளித்துறை - மறைவிடமான இவ்வூர், இன்னது - இவ்விடத்துள்ளது, ஆமென — ஆமென்று, வாழி - எல்லாரும் வாழ்த்தப்பெற்ற, எங்கோமகன் — எனது நாயகர், அறிய வந்தநாள் — தெரிந்துகொள்ளலானபோது, ஆழியும் - இந்தக் கடலும், இலங்கையும் — இந்த ஊரும், அழிய - அழிந்தாலும், தாழுமோ-

அடங்குவாரோ, ஊழியும் – இனி வருகிற ஊழிகாலமும், தீயும் – வெந்து போம், உன் உயிரோடு – உன் உயிருடனே, ஊழியுந்தீயும் ஓயுமோ ஓய்ந் திருப்பரோ – ஒருவருக்கும் அடங்கார், ஆகையாலிப்போதே என்னை விட்டு விடு என்கிறதாம்—எ-று. 47

வெஞ்சினவரக்கரைவிளித்துவீயுமோ
வஞ்சனைநீசெயவள்ளல்சீற்றத்தால்
எஞ்சலிலுலகெலாமெஞ்சுமெஞ்சுமென்
றஞ்சுகின்றேனிதற்கறனுஞ்சான்றரோ.

இ-ள். வெஞ்சினம் – வெப்பமான கோபமுள்ள, அரக்கரை – ராக்ஷதர்களை, விளித்து – கொன்று, வீயுமோ – அதுடனே அடங்குமோ, வஞ்சனை நீசெய – நீ வஞ்சனைசெய்து என்னைச் சிறையிலேவைக்க, வள்ளல் – அதனாலே ஸ்ரீராமனுக்குண்டாகுகிற, சீற்றத்தால் – கோபத்தினாலே, எஞ்சல் இல் – யாதொரு குறைவுமில்லாத, உலகெலாம் – உலகங்கள் முழுதும், எஞ்சும் – அழிந்துபோம், எஞ்சுமென்று – அழிந்துபோமென்று, அஞ்சுகின்றேன் – நான் பயப்படுகிறேன், இதற்கு – இப்படி நான் பயப்படுகிறதற்கு, அறமும் – தருமமும் தேவர்களுமே, சான்று – சாக்ஷியாம், அரோ – அசை.

அங்கண்மாஞாலமும்விசும்புமஞ்சவாழ்
வெங்கணாய்புன்றொழில்விலக்கிமேற்கொளாய்
செங்கண்மானான்முகன்சிவனென்றேகொலோ
எங்களைநாயகனையுநினைந்ததேழைநீ.

இ-ள். அங்கண் – அழகிய இடத்தையுடைய, மாஞாலமும் – பெரியவுலகமும், விசும்பும் – ஆகாயமும், அஞ்ச – பயப்படும்படி, வாழ் – வாழுகின்ற, வெங்கணாய் – கொடுமையுள்ளவனே, புன்றொழில் – உனதுகெட்ட நடக்கையை, விலக்கி – விட்டு, மேற்கொளாய் – மேம்பாட்டைக் கொள்கிலை, செங்கண் – சிவந்த கண்களையுடைய, மால் – திருமாலும், நான்முகன் – சதுர்முகப்பிரமனும், சிவன் – சிவனும், என்றேகொல் – என்பதாகவோ, எங்கள் நாயகனையும் – எங்கள் ஆண்டவனையும், ஏழைநீ – அறிவில்லாதநீ, நினைந்தது – எண்ணினது, அப்படி எண்ணக்கூடாது—எ-று. 49

மானுயரிவரெனமனக்கொண்டாயெனிற்
கானுயர்வரைநிகர்கார்த்தவீரியன்
தானொருமனிதனாற்றளர்ந்துளானெனில்
தேனுயர்தெரியலான்றன்மைதேர்தியால்.

இ-ள். மானுயர் – மனிதர், இவரென – இவ்விருவருமென்று, மனக்கொண்டாயெனில் – நீ உன் மனத்திலே எண்ணுவையானால், கான் – விருக்ஷசாதிகள், உயர் – நீண்டிருக்கிற, வரைநிகர் – மலைபோன்ற, கார்த்த வீரியன்றான் – கார்த்தவீரியனென்பவன், ஒரு மனிதனால் – ஒரு பரசிராம

னாலே, தளர்ந்துளான் – சோர்வையடைந்தான், எனில் – என்று சொல்வ தானால், தேன் – வண்டுகள், உயர் – மிகுத்திருப்பதான, தெரியலான்- மாலையணிந்த ஸ்ரீராமனது, தன்மை – குணத்தை, தேர்தி – அந்தப்பரசி ராமனையும் வென்றவரென்று தெரிவாயாக—எ-று. விருக்ஷசாதிகள்போற் கைகளும் மலைபோற்காத்த வீரியனுமாகக் கொள்க. 50

இருவரென்றிகழ்ந்தனையென்னின்யாண்டெல்லை
ஒருவனன்றேயுலகழிக்குமூழியான்
செருவருங்காலையென்மெய்ம்மைதேர்தியால்
பொருவருந்திருவிழந்தநாயம்பொன்றுவாய்.

இ-ள். இருவரென்று – படைத்துணை யில்லாதவர்கள் அவ்விருவரு மென்று, இகழ்ந்தனை யென்னில் – அலட்சியஞ் செய்வாயானால், யாண் டெல்லை – யுகமுடிவிலே வருஷ அளவிலே, உலகு அழிக்கும் – உலகத்தை யெல்லாங் கெடுப்பவனாக, ஊழியான் – ஊழிகாலத்துள்ள சிவன், ஒருவன் அன்றே – ஒருவனே அல்லவோ, செருவருங்காலை – இனி யுத்தம் வரும் போது, என் – என்னுடைய, மெய்ம்மை – உண்மையானசொல்லை, தேர்தி- அறிவாயாக, பொரு அரும் – ஒப்பரிதான, திரு – உன் செல்வமெல்லாம், இழந்து – நஷ்டியாய், அநாயம் – அநியாயமாய், பொன்றுவாய் – சாகிற வனே என்மெய்மைதேர்தி—எ-று. 51

பொற்கணன்றம்பியென்றினையபோர்த்தொழில்
விற்கொணாண்பொருவுதோளவுணர்வேறுளார்
நற்கணார்நல்லறந்துறந்தநாளினும்
இற்கணாலிறந்திலரிறந்துநீங்கினார்.

இ-ள். பொற்கணன் – இரணியாக்ஷன், தம்பி – இரணியகசிபன், என்று – என்பதாய், இனைய – இப்படிப்பட்ட, போர்த்தொழில் – போர் வல்லமையுள்ள, விற்கொள்ள – வில்லிலேகொள்வதான, நாண்பொருவு- நாணித்தழும்பமைந்த, தோள் – புஜங்களையுடைய, அவுணர் – அசுரரும், வேறுளார் – இன்னம் வேறானவரும், நற்கண் – நன்மையின்கண்ணே, ஆர்- பொருந்துதலான, நல்லறம் – நல்ல தருமத்தை, துறந்தநாளினும் – விட்டுத் தீமைகள் செய்தபோதும், இற்கண் ஆல் – ஒருவன் மனைவி விஷயத்தி னாலே, இறந்திலர் – உன்போல் இறந்துபடுத லில்லையாயினார்கள், இறந்து நீங்கினார் – அவர்கள் காலமுங் கழிந்துபோயினார்களே அல்லது உன்போல் என்று நிலைபெறலாமென்றெண்ணினாரில்லை—எ-று. 52

வேறு

பூவிலோனுதியாகப்புலன்கள்போநெறியிற்போதாத்
தேவரோவவுணர்தாமோநிலைநின்றுவினையிற்றீர்ந்தார்

ஏவலெவ்வுலகுஞ்செய்யச்செல்வநிற்கிசைந்தவென்றால்
பாவமோமுன்னீசெய்ததருமமோதெரியப்பாராய்.

இ-ள். பூ இலோன் — பூமேலிருக்கும் பிரமன் பூவே வீடாகவுடையவன், ஆதியாக - முதலாக, புலன்கள்போம் - விஷயங்களிலேபோகிற, நெறியில் — வழியிலே, போதா — செல்லாத, தேவரோ — தேவர்களோ, அவுணர்தாமோ — அசுரர்களோ, நிலைநின்று — நீதிநிலையிலே நின்று, வினையில் — வினையினின்றும், தீர்ந்தார் — நீங்கினவர்கள்யார் அப்படி வினையிற் றீர்ந்த எல்லாரும், ஏவல் — உனக்கு ஊழியங்கள், எவ்வுலகும் — எந்தவுலகங்களிலும், செய்ய — செய்யும்படியாய், செல்வம் - பாக்கியம், நிற்கு — உனக்கு, இயைந்த என்றால் — கிடைத்ததானால், பாவமோ — கிடைத்தது பாவத்தினாலா, முன் நீ — முன்னே நீ, செய்த — பண்ணின, தருமமோ — புண்ணியத்தினாலா, தெரிய - இப்போதாவ துனக்குத் தெரியும்படி, பாராய் - யோசிக்கக்கடவை—எ-று. 53

இப்பெருஞ்செல்வநின் கணீய்ந்தபேரீசன் யாண்டும்
அப்பெருஞ்செல்வந்துய்ப்பானின் றுமாதவத்தினன்றே
ஒப்பருந்திருவுநீங்கிபுறவொடுமூலக்கவுன்னித்
தப்புதியறத்தையேழாய் தருமத்தைக்காமியாதே.

இ-ள். இப்பெருஞ்செல்வம் — இந்தமகா ஐசுவரியத்தை, நின்கண் - உன்னிடத்தில், ஈந்த — கொடுத்தது, பேர் — பெருமையையுடைய, ஈசன் — தெய்வமானது, யாண்டும் — எவ்விடத்திலும், இன்றும் - இப்போதும், அப்பெருஞ் செல்வம் — அப்படிக்கொடுபட்டவான மகதைசுவரியத்தை, துய்ப்பான் — நீ அனுபவிக்கிறதற்கு, மாதவத்தின் அன்றே - உனது பெரிய தவத்தினாலே யல்லவோ, ஒப்பு அரும் — அப்படிப்பட்ட ஒப்பரிதான, திருவும் - ஐசுவரியமும், நீங்கி - போய், உறவொடும் — உன்சுற்றத்தாருடனே, உலக்க — அழிந்துபோக, உன்னி — எண்ணி தெரிந்து, அறத்தைத் தப்புதி - உனக்குள்ள தருமத்தைக் கெடுக்கிறாய் விடுகிறாய், தருமத்தை — பிறர்க்குரிய தருமபத்தினியை, ஏழாய் — புத்தியில்லாதவனே, காமியாதே — ஆசை கொள்ளாதே ஆசைப்படாதே என்னை விட்டுவிடு—எ-று. இப்பெருஞ் செல்வநின்க ணிந்ததோரீசன்யாண்டு மப்பெருஞ்செல்வந் துய்ப்பா னினது மா தவத்தினன்றே எனப்பாடங்கொள்க. 54

மறந்திறம்பாததோலாவலியினரெனினுமாண்டார்
அறந்திரும்பினருமக்கட்கருடிறம்பினருமன்றே
பிறந்திறந்துழலும்பாசப்பிணக்குடைப்பிணியிற்றீர்ந்தார் [ய்.
துறந்தரும்பகைகண்மூன் றுந்துடைத்தவர்பிறர்யார்சொல்லா

இ-ள். மறம்திறம்பாத — வீரத்தில்வழுவாத, தோலா - யார்க்குந்தோற்காத, வலியினரெனினும் — பலமுள்ளவர்களானாலும், மாண்டார் — பெரியோர்கள்சொன்ன, அறம் திறம்பினரும் — தருமங்களில் வழுவினவர்களும்,

மக்கட்கு — ஜீவர்கள் விஷயத்தில், அருள் திறம்பினரும் — இரக்கமில்லாதவர்களும், அன்றே — பிணியிற்றீர்ந்தாரல்லர், பிறந்து இறந்து — உற்பவித்தழிந்து, உழலும் — அலைவதான, பாசம் — ஆசாபாசமாகிய, பிணக்கு உடை- விரோதமுள்ள, பிணியில் — நோயினின்றும், தீர்ந்தார் — நீங்கினவர்கள் எழு, அறந்து - இருவகைப் பற்றையும்விட்டு, அரும் - போக்குதற்கரிதான, பகைகள் — விரோதங்களாகிய, மூன்றும் — காமவெகுளிமயக்கங்களை, துடைத்தவர் — போக்கினவர்களேயாவார்பய, பிறர்யார் - இவர்களையல்லது வேறேயாவர்யாவரிருக்கிறார்கள், சொல்லாய் - நீயேசொல்லிக்காண்—எ-று. வலியினரெனினு மாண்டாரறந் திறம்பாமையுமக்கட் கருடிறம்பாமையும் வேண்டுமென்றுகொள்க. 55

தென்றமிழுரைத்தோன்முன்னாத்தீதுதீர்முனிவர்யாரும்
புன்றொழிலரக்கர்க்காற்றேநோற்கிலம்புகுந்தபோதே
கொன்றருணின்னாலன்னார்குறைவதுசரதங்கோவே
என்றனர்யானேகேட்டேனீயிதற்கியைவசெய்தாய்.

இ-ள். தென்தமிழ் — அழகிதான தமிழ்ப்பாஷையை, உரைத்தோன்- சொன்ன அகஸ்தியர், முன்னா — முதலாக, தீதுதீர் — தீமையினீங்கின, முனிவர் - இருஷிகள், யாரும் — எல்லாரும், புன்தொழில் — ஈனச்செய்கைகளையுடைய, அரக்கர்க்கு — ராக்ஷதர்களுக்கு, ஆற்றேம் - நேர்நிற்கமாட்டோம், நோற்கிலம் — இனித் தவஞ்செய்யமாட்டோம், புகுந்தபோதே - நீரவதரித்துவந்ததனாலே, கொன்று அருள்-அவ்வரக்கரைக்கொன்று எங்களுக்கருள்செய்யவேணும், நின்னால் — ஸ்ரீராமா உம்மாலே, அன்னார் — அந்தராக்ஷதர்கள், குறைவது — அழிந்துபோகிறது, சரதம் — சத்தியம், கோவே என்றனர் — ஸ்ரீராமா என்றுசொன்னார்கள், யானேகேட்டேன் — அப்படி அவர்கள் சொல்லக்கேட்டவள் நானே, நீஇதற்கு — நீ அவர்கள்கேட்டுக்கொண்டதற்கு, இயைவசெய்தாய் — பொருந்தச்செய்தாய்—எ-று. 56

உன்னையுங்கேட்டுமற்றுன்னூற்றமுமுடையநாளும்
பின்னையிவ்வரக்கர்சேனைப்பெருமையுமுனிவர்பேணிச்
சொன்னபினுங்கைமூக்குமும்பியர்தோளுந்தாளும்
சின்னபின்னங்கள்செய்தவதனைநீசிந்தியாயோ.

இ-ள். உன்னையும் — இராவணனென்கிற உன்னையும், கேட்டு — கேள்விகொண்டு, மற்று உன் — இன்னமுமுன்னுடைய, ஊற்றமும் - வரபலமும், உடைய நாளும் — நீபெற்றிருக்கிற வாழ்நாளும், பின்னை — பின்னையும், இவ்வரக்கர் — இந்தராக்ஷதர்களுடைய, சேனைப்பெருமையும் — சேனைப்பெருக்கத்தையும், முனிவர் — இருஷிகள், பேணி — புகழ்ந்து, சொன்னபின்- சொன்னபின்பு, உங்கை — உன்தங்கையினுடைய, மூக்கும் - மூக்கையும், உம்பியர் - உன்தம்பிமார்களான கரதூஷணாதிகள், தோளும் தாளும்-தோள்களையுங்கால்களையும், சின்னபின்னங்கள்செய்த - துண்டுதுண்டாடின,

அதனை — அந்த நிர்ப்பயத்தையாவது, நீ சிந்தியாயோ — நீ எண்ணமாட்டா யோ—எ-று. 57

ஆயிரந்தடக்கையானின் னைந்நான் குகரமும்பற்றி
வாய்வழிகுருதிசோரக்குத்திவான்சிறையில்வைத்த
தூயவன்வயிரத்தோள்கடுணித்தவன்றொலைந்தமாற்றம்
நீயறிந்திலையோவேகுநெறியறிந்திலாதநீசா.

இ-ள். ஆயிரந்தடக்கையால் — ஆயிரம் நீண்டகைகளாலே, நின் — உன்னுடைய, ஐநான்குகரமும் — இருபதுகைகளையும், பற்றி — பிடித்து, வாய்வழி — உன்வாயின்வழியே, குருதிசோர — ரத்தமொழுக, குத்தி — உன்னை அடித்து, வான்சிறையில் — பெரியகாவலுக்குள்ளே, வைத்த — இடுவித்த, தூயவன் — நல்லவனைகாத்த வீரியனுடைய, வயிரத்தோள்கள் — பலமுள்ள தோள்களை, துணித்தவன் — சிதைத்த பரசிராமனும், தொலைந்தமாற்றம் - தோற்பானசமாச்சாரம், நீ அறிந்திலையோ-நீ அறியாயோ, ஏகுநெறி-செல்லுமார்க்கம், அறிந்திலாத — தெரியாத, நீச — சண்டாளா—எ-று. 58

கடிக்கும்வல்லரவுங்கேட்குமந்திரங்களிக்கின்றோயை
அடுக்குமீதடாதென்றன்றதேவதுவோடறிவுகாட்டி
இடிக்குநரில்லையுள்ளாரெண்ணியதெண்ணியுன்னை
முடிக்குநரென்றபோதுமுடிவன்றிமுடிவதுண்டோ.

இ-ள். கடிக்கும் - கடிப்பதான, வல் அரவும் — வலியபாம்புங்கூட, மந்திரம் — ஒருவர் சொல்லுந்தடையை, கேட்கும் — கேட்டுநிற்கும், களிக்கின்றோயை — ஒன்றுந்தெரியாமல், மதத்திருக்கிறவனக்கு, அடுக்கும் இது-இக்காரியஞ் செய்யத்தகும், அடாதது இது — இதுசெய்யத்தகாதது, என்று ஆன்ற — என்பதாய் அகன்ற, ஏதுவோடு — காரணத்துடனே, அறிவுகாட்டி-ஞானத்தையுஞ்சொல்லி, இடிக்குநர் — தடுத்துப்பேசுகிறவர்கள், இல்லை-ஒருவருமில்லை, உள்ளார் — உன்னிடத்திருக்கிறவர்கள், எண்ணியது — நீநினைத்ததையே, எண்ணி உன்னை - தாமும்யோசித்து, முடிக்குநர் — முடிவுசெய்கிறார்கள், என்றபோது — என்றுசொல்லலானபோது, முடிவு அன்றி-இனிமுடிவாகிறதே அல்லாமல், முடிவதுண்டோ — வேறொன்று முடிவுபெறுமோ—எ-று. 59

வேறு

என்றறத்துறைகேட்டலுமிருபதுநயனம்
மின்றிறப்பனவொத்தனவெயில்விடுபகுவாய்
குன்றிறத்தெழித்துரப்பினன்குறிப்பதென்காமன்
தன்றிறத்தையுங்கடந்ததுசீற்றத்தின்றகைமை.

இ-ள். என்று - என்பதாய், அறத்துறை — தருமமார்க்கங்கள் சொல்ல, கேட்டலும் - கேட்ட அளவிலே, இருபது நயனம் — இருபதுகண்களுட

மின் — மேகத்திலிருந்துமின்னல், திறப்பன-தோன்றுவனவற்றை, ஒத்தன-ஒப்பாயின, வெயில்தட — ஒளியைவீசுகின்ற, பகுவாய் — பிளந்தவாய்களாலே, குன்று - மலைகளும், இற — தூள்தூளாக, தெழித்து - அதட்டி, உரப்பினன்-குமுறினன், குறிப்பது — அவன் நினைப்பது, என் — யாது, காமன்தன்-மன்மதனுடைய, திறத்தையும் — வலியையும், கடந்தது — மேலிட்டுச்சென்றது, சீற்றத்தின் - அவன் கோபத்தினது, தகைமை — பெருமை என்றால், பிராட்டியைக் கொல்லவெண்ணினனென்றுயித்து—எ-று. 60

வளர்ந்தநாணினன்மாதிரமனைத்தையுமறைவித்
தளர்ந்ததோளினனனல்சொரிகண்ணினனிவளைப்
பிளந்துதின்பெனென்றுடன்றவன்பெயர்ந்தனன்பெயரான்
கிளர்ந்தசீற்றமுங்காதலுமெதிரெதிர்கிடைப்ப.

இ-ள். வளர்ந்த — மென்மேலாகுகிற, நாணினன்-வெட்கமுள்ளவனாய், மாதிரம் அனைத்தையும் — திக்குகளையெல்லாம், மறைவித்து — மறையப்பண்ணி, அளர்ந்த — அலைவிடுகின்ற, தோளினன் தோள்களுள்ளவன், அனல்சொரி — நெருப்பைச்சிந்துகிற, கண்ணினன் — கண்களுள்ளவன், இவளை-இந்தச் சீதையை, பிளந்த — இருகூறாகப்பண்ணி, தின்பெனென்று — சாப்பிடுகிறேனென்று — உடன்றனன் — பெயர்ந்தனன், கோபங்கொண்டு - மேற்சென்றான், பெயரான் — மறுபடி பிராட்டிமேற் சொல்லாதவனானான், கிளர்ந்த — பொங்கின, சீற்றமும் — கோபமும், காதலும் — ஆசையும், எதிர் எதிர் — நேருக்குநேரே, கிடைப்ப — நெருங்குவனவாகவே பெயரான்—எ-று.

அன்னகாலையினனுமனருந்ததிக்கற்பின்
என்னையாளுடைநாயகன்தேவியையென்முன்
சொன்னநீசன்கைதொடுவதன்முன்றுகைத்துழக்கிப்
பின்னைநின்றதுசெய்குவெனென்பதுபிடித்தான்.

இ-ள். அன்னகாலையின் — அப்போது, அனுமனும் — சிறிய திருவடியானவர், அருந்ததி — அருந்ததிபோலும், கற்பின் — கற்புள்ள, என்னை - அடியேனை, ஆளுடை — ஆளுதலுடைய, நாயகன் - ஆண்டவனது, தேவியை-நாயகியை, என்முன் — எனக்குமுன்னே, சொன்ன — இப்படியெல்லாஞ்சொன்ன, நீசன் - இந்தச் சண்டாளன், கை —கையாலே, தொடுவதன்முன் — தீண்டுதற்கு முன்னே, துகைத்து — காலாலேமிதித்து, உழக்கி-வருத்தி, பின்னை — பின்பு, நின்றது — செய்யவேண்டியதை, செய்குவனென்பது — செய்வேனென்பதை, பிடித்தான் - மனத்திலெண்ணினார். 62

தனியினின்றனன்றலைபத்துங்கடிதுகத்தாக்கு
பனியின்வேலையிலிலங்கையைக்கீழுறப்பாய்ச்சு
புனிதமாதவத்தணங்கினைச்சுமந்தனன்போவா
இனிதிதென்பதுநினைந்தனன்கரம்பிசைந்திருந்தான்.

இ-ள். தனியில் – ஒருவனாக, நின்றனன் - நிற்கிற இவனுடைய, தலை பத்தும் – பத்துத்தலைகளும், கடிது - விரைவிலே, உக – உதிர, தாக்கி- அடித்து, பனியின் – குளிர்ச்சியையுடைய, வேலையில் – கடலிலே, இலங்கையை - இந்தவூரை, கீழுற – உள்ளழுந்த, பாய்ச்சி – எடுத்துக்கவிழ்த்து, புனிதம் - பரிசுத்தமுள்ள, மாதவத்து – பெரிய தவத்தையுடைய, அணங்கினை — பிராட்டியை, சுமந்தனன் — தாங்கிக்கொண்டு, போவான் —போக, இனிதின் என்பது -- சந்தோஷமாக என்பதை, நினைந்தனன் —எண்ணினவராய், கரம்பிசைந்து – கைகளைப் பிசைந்துகொண்டு, இருந்தான - இருந்தார்—எ-று. 63

ஆண்டவாளரக்கன்கனன்றண்டத்தையழிப்பான்
மூண்டகாலவெந்தீயெனமுற்றியசீற்றம்
நீண்டகாதனீர்நீத்தத்தின்வீவுறுநிலையின்
மீண்டுநின்றொருதன்மையாலிவையிவைவிளம்பும்.

இ-ள். ஆண்டு – அப்போது, அவ்வாளரக்கன் – அந்தவாளைக் கையிலே கொண்ட ராவணன், கனன்று —கோபங்கொண்டு, அண்டத்தை - அண்ட முழுதும், அழிப்பான் — அழிக்கிறதற்கு, மூண்ட -மூண்டதான, காலவெந்தீயென – வெப்பமுள்ள காலாக்கினிபோல, முற்றிய – முதிர்ந்துவந்த, சீற்றம் —கோபமானது, நீண்ட —அதிகமான, காதல் - ஆசையென்கிற, நீர் நீத்தத்தின் - ஜலப்பிரவாகத்தினாலே, வீவுறுநிலையின் – அவிந்தடங்குகிற தன்மையினாலே, மீண்டு - கொல்வனென்றெழுந்ததைவிட்டு, நின்று- காமத்துடனே நின்று, ஒரு தன்மையால் - ஒருவகைகொண்டு, இவை இவை – பிராட்டிசொன்னதற்கு நேர்நேரானவைகளை, விளம்பும் – சொல்லலானான்—எ-று. 64

வேறு

கொல்வெனென்றுடன்றேனுன்னைக்கொல்கிலேன் குறித்துச்சொன்
சொல்லுளவவற்றுக்கெல்லாங்காரணந்தெரியச்சொல்லின் [ன
ஒல்வதீதொல்லாதீதென்றெனக்குமொன்றுலகத்துண்டோ
வெல்வதுந்தோற்றதுவும்விளையாட்டின்விளைந்தமென்றான்.

இ-ள். கொல்வேனென்று - இதோ கொல்லுகிறேனென்று, உடன்றேன் - கோபங்கொண்டேன், உன்னை — எனக்குப்பிரியமானவுன்னை, கொல்கிலேன் - கொல்லமாட்டேன், குறித்துச்சொன்ன – நீ உத்தேசித்துச்சொன்ன, சொல்லுள – சொற்களுமுண்டு, அவற்றுக்கெல்லாம் - அச்சொற்களுக்கெல்லாம், காரணம் – நிமித்தமானவைகளை, தெரிய — உனக்குத் தெரிவதாக, சொல்லில் - சொல்லலானால், ஒல்வது ஈது — என்றாலேசெய்யத்தக்கது இது, ஒல்லாதீது – செய்யக்கூடாத தீது, என்று – என்பதாய், எனக்கும் ஒன்று — எனக்கும் ஒரு காரியம், உலகத்து உண்டோ – உலகத்திலே உள்ளதாமோ, வெல்வதும் – காத்தவீரியன் வெல்லலானதும், தோற்

மலதானும் — நான் தோற்பானதும், விளையாட்டின் - விநோதவகையாலே, முன்னாள் - முன்னாளிலே, விளைந்த - உண்டாயின—எ-று. 65

ஒன்றுகேளுரைக்கநிற்கோருயிரெனவுரியோன்றன்னைக்
கொன்றுகோளிழைத்தானீநின்னுயிர்விடிற்கூற்றங்கூடும்
என்றனாருயிருநீங்குமென்பதையியையவெண்ணி
அன்றுநான்வஞ்சஞ்செய்ததாரெனக்கமரிநேர்வார்.

இ-ள். உரைக்க - நான்சொல்ல, ஒன்றுகேள் - இதொருவார்த்தையா யது கேள், நிற்கு - உனக்கு, ஓருயிர் என - ஒப்பற்ற பிராணனென்ன, உரி யோன்றன்னை - தக்கராமனை, கொன்று - கொலைசெய்து, கோள் - உன் னைக் கொண்டுவருதலை, இழைத்தால் - நான்செய்தால், நீ நின் உயிர் - நீ உன்னுயிரைவிடுவை, விடில் - அப்படி நீ உயிர்விடுவதானால், கூற்றங்கூடும்- யமன் எதிர்வான் அதனால், என்றன் - என்னுடைய, ஆர் உயிரும் - அருமை யானவுயிரும், நீங்கும் என்பதை - போம் என்கிறதை, இயைய - பொருந்த, எண்ணி - நான் யோசித்து, அன்று - அப்போது, நான் வஞ்சஞ்செய்தது- நான் வஞ்சித்து உன்னைக் கொண்டுவந்தது, அமரில் - சண்டைசெய்யத் துணிந்தால் அப்போரிலே, எனக்கு நேர்வார் - சரியானவர்கள், ஆர் - யாரி ருக்கிறார்கள் ஒருவருமில்லை—எ-று. 66

மானெனென்பதறிந்துபோனமானிடராவார்மீண்டி
யானெனென்பதறிந்தால்வாராரேழைமையெண்ணிநோக்கில்
தேனெனென்பதறிந்தசொல்லாய்தேவர்தாம்யாவரேயெங்
கோனெனென்பதறிந்தபின்னைத்திறம்புவார்குறையினல்லால்.

இ-ள். மான் என்பது - வந்த மாரீசனை மானென்றே, அறிந்து - தெ ரிந்து, போன - சென்ற, மானிடராவார் - மனிதரான அவ்விருவரும், மீண்டு - திரும்பி, யானென்பது - நானென்று, அறிந்தால் - தெரிந்தால், வாரார் - உன்னைமீட்க வாரார்கள், ஏழைமை - உனதறியாமையைக்கொண்டு, எண்ணி - யோசித்து, நோக்கல் - பாராதே, தேன் என்பது - தேன் என்ப தற்கு, அறிந்த - தகுதியான, சொல்லாய் - வசனத்தையுடையவளே, தேவர் தாம் - தேவர்களிலே தான், யாவரே - யாரிருக்கிறார்கள், எம் - எமக்கு ராவ ணன், கோன் என்பது - அரசன் என்பதை, அறிந்தபின்னை - தெரிந்த பின்பு, திறம்புவார் - வழிவிடப்பவர்யாவர், குறையின் அல்லால் - கண்ட னப்படுவதேயல்லது. தேவர்தாம் — யாவரே திறம்புவார் அறியாக்கால் திறம் புவார் என்க—எ-று. 67

ஒவன்றோருமிருப்பயார்க்குமேலவர்விளிவிலாதோர்
என்றோருமிருப்பவன்றேயிந்திரனேவல்செய்ய
ஒன்றாதவுலகமூன்றுமுணர்கின்றவொருவன்யானே
மென்றோளாயிதற்குவேறோர்காரணம்விரிப்பதுண்டோ.

இ-ள். வென்றோரும் – என்னை வெல்லவல்லவர்களும், இருப்ப-இருக்கிறார்கள், யார்க்கும் – எல்லாருக்கும், மேலவர் – மேம்பட்டவர்கள், விளிவிலாதோர் - சாவாதவர்கள், என்றோரும் – என்னத்தக்கவர்களும், இருப்ப-இருக்கிறார்கள், அன்றே – அல்லவோ அப்படி இருக்கச்செய்தே, இந்திரன்-தேவேந்திரன், ஏவல்செய்ய – ஊழியஞ்செய்ய, ஒன்றாத – ஒருதன்மைத்தாகாத, உலகமூன்றும் – திரிலோகமும், உணர்கின்ற தெரியத்தக்க, ஒருவன் - ஒப்பில்லாதவன், யானே – நானேயாம், மென்-மெல்லிய, தோளாய்-தோள்களுள்ளவளே, இதற்கு - எனதொப்பில்லாமைக்கு, வேறோர் காரணம் – வேறே ஒரு திருஷ்டாந்தம், விரிப்பது – சொல்லவேண்டுவது, உண்டோ – உளதா இல்லை—எ-று. 68

மூவருந்தேவர்தாமுமுரணுகமுற்றுங்கொற்றம்
பாவைநின்பொருட்டினாலோர்பழிபெறப்பயன்றீர்நோன்பின்
ஆவியின் மனிதர்தம்மையடுகிலேனவரையீண்டுக்
கூவிநின்றேவல்கொள்வேன்காணுதிகுதலைச்சொல்லாய்.

இ-ள். மூவரும் – மும்மூர்த்திகளும், தேவர்தாமும் – தேவர்களும், முரண்உக - பலங்குறைவதாக, முற்றும் - முடிக்கப்படுகிற, கொற்றம் – வெற்றியானது, பாவைஒய் – பெண்ணே, நின்பொருட்டினால் – உனது காரணமாக, ஓர்பழிபெற – ஒரு பழிப்பையடைய, பயன்தீர் – ஒருபலனுமில்லாத, நோன்பின் – விரதங்களைச்செய்கிற, ஆவியில் - ஜீவபலமில்லாத, மனிதர் தம்மை – இரண்டு மனிதரையும், அடுகிலேன் – கொல்லமாட்டேன், அவரை – அவ்விருவரையும், ஈண்டு – இவ்வூருக்குவா, கூவி-அழைத்து, நின்று-நெடுங்காலமும், ஏவல்கொள்வேன் - ஊழியம் வாங்குவேன், காணுதி – நீ பார்க்கப்போகிறாய், குதலைச்சொல்லாய் – இளஞ்சொற்களுள்ளவளே. 69

சிற்றியற்சிறுமையாற்றல்சிறுதொழின்மறவரோடே
முற்றியதாவில்வீரமுனிவென்கண்விளையாதேனும்
இற்றையிற்பகலினெய்தியிருவரையொருகையாலே
பற்றினென்கொணருந்தன்மைகாணுதிபழிப்பிலாதாய்.

இ-ள். சிற்றியல் – சிறிய சுவபாவமும், சிறுமை ஆற்றல் – கொஞ்சபலமும், சிறுதொழில் – அல்பச்செய்கையுமுள்ள, மறவரோடே - வேடர்போல்வாருடனே, முற்றிய – எங்கு முடிவுபண்ணின, தா இல் – வருத்தமில்லாத, வீரம் – வீரத்தைக்கொண்ட, முனிவு – கோபம், என்கண் – எனக்கு, விளையாது - உண்டாகாது, ஏனும் – ஆனாலும், இற்றையிற்பகலில் – இன்றையத்தினமே, எய்தி – அங்குப்போய், இருவரை - அவ்விருவரையும், ஒருகையாலே – என் ஒருகையினாலே, பற்றினன் – பிடித்தேனாகி, கொணருந்தன்மை – நான் கொண்டுவருகிற வேடிக்கையை, காணுதி – இனி நீ பார்ப்பாயாக, பழிப்பு இலாதாய் – யாதொரு தோஷமுமில்லாதவனே—எ-று. 70

பதவியமனிதரேனும்பைந்தொடிநின்னைத்தந்த
உதவியையுணரநோக்கினுயிர்கொலைக்குரியரல்லர்
சிதைவுறலவர்க்குவேண்டிற்செய்திறன்றேர்ந்ததெண்ணின்
இதனினக்கீதேயாகினியற்றுவல்காண்டியின்னும்.

இ-ள். பதவிய — எனக்குத் தின்னப்பக்குவமான, மனிதரேனும் - மனிதரேயானாலும், பைந்தொடி — சீதா, நின்னை — உன்னை எனக்கு, தந்த உதவியை - கொடுத்த உபகாரத்தை, உணரநோக்கில் — தெரிய யோசித்தால், உயிர் — ஜீவனை, கொலைக்கு — கொல்லுதற்கு, உரியார் அல்லர் - தக்கவரல்லர் ஆகையால், சிதைவுஉறல் — அழிவுபடுதல், அவர்க்கு — அவ்விருவருக்கும், வேண்டில் — நீ வேண்டுவையானால், செய்திறன் — நான் செய்யுந்திறத்தை, எண்ணில் — யோசிக்கும்போது, தேர்ந்தது — தெரிந்த காரியமே, இதம் நினக்கு — உனக்கு நன்மை, ஈதேயாகில் — இதுவேயானால் அவ்விருவரையுங் கொண்டுவருகிற தனக்குச் சம்மதியானால், காண்டி — பார், இன்னும்-இன்னமும் நீ வேண்டியபடியே, இயற்றுவல் — செய்கிறேன்—எ-று. 71

பள்ளநீரயோத்திநண்ணிப்பரதனேமுதலினோராண்
டுள்ளவர்தம்மையெல்லாமுயிர்குடித்தூழித்தீயின்
வெள்ளநீர்மிதிலையோரைவேரறுத்தெளிதினெய்திக்
கொள்வெனின்னுயிருமென்னையறிந்திலைகுறைந்தநாளோய்.

இ-ள். பள்ளநீர்—அகழிநீராலே சூழப்பட்ட, அயோத்திநண்ணி-அயோத்தியாபுரிக்குப்போய், பரதனே முதலினோர் — பரதன் முதலானவர்கள், ஆண்டு உள்ளவர் தம்மையெல்லாம் - இன்னமும் அங்குள்ளவர்களையெல்லாம், உயிர்குடித்து — உயிர்வதைசெய்து, ஊழித்தீயின் — காலாக்கினிபோலேபோய், வெள்ளநீர் — பிரவாக ஜலத்தையுடைய, மிதிலையோரை-மிதுலாபுரியிலுள்ளவர்களையும், வேர் அறுத்து — அடியோடேபோக்கி, எளிதின் எய்தி - அதிசுலபத்திலேவந்து, நின்உயிரும் — உன் பிராணனையும், கொள்வேன் — வாங்குவேன், என்னை — என் பெருமையைநீ, அறிந்திலை - தெரிந்தவளல்லை, குறைந்தநாளோய் — அல்பாயுசுள்ளவளே, நீ நெடுங்காலத்தவளானால் முன்னே நடந்தவைகளெல்லாந் தெரிவாயென்றபடி—எ-று. 72

ஈதுரைத்தழன்றுபொங்கியெதிர்கதிர்வாளைநோக்கித்
தீதுயிர்க்கிழைக்குநாளுந்திங்களோடிரண்டிற்றேய்ந்த
தாதலினின்றதெண்ணென்றறிந்தவாறறிவாயென்றுப்
போதரிக்கண்ணினுளையகத்துவைத்தரப்பிப்போனான்.

இ-ள். ஈது — இப்படி இவ்வார்த்தை, உரைத்து — சொல்லி, அழன்று - மனங்கொதித்து, பொங்கி — கோபங்கொண்டு, எதிர் - பிராட்டிக்குமுன்னே, கதிர் - ஒளிமிக்க, வாளை — தனது கத்தியை, நோக்கி — பார்த்து இந்தக் கத்தியே, உயிர்க்கு — சீதா உன் உயிர்க்கு, தீது இழைக்கும் — கெடுதியைச்செய்யும், திங்கள் — சந்திரன் இக்கத்தியோடிகூடி, ஒரிரண்டில்-ஒரு இரண்டுள்ள

தென்பதுபோல், நாளும் — எப்போதும் நான், தேய்ந்தது — வெட்டிவெட்டி தேய்ந்திருக்கிறதிக்கத்தி, ஆதலின் — ஆகையால், நின்றது - இனிநீ செய்ய இருக்கிறதை, எண்ணென்று — ஆலோசியென்றுசொல்லி, அறிந்த ஆறுநீ- உன் வயதளவுக்குள்ளவைகளே, அறிவாயென்று -தெரிவாயென்று, போது அரி - மலர்போலவும் வண்டுபோலவுமிருக்கிற, கண்ணினளை - கண்களுள்ள பிராட்டியை, மனத்துவைத்து — உள்ளே நிரம்பக் காதல்கொண்டு, உரம்பிப் போனான் — அதட்டிக்கொண்டுபோயினான்—எ-று. 73

அஞ்சுவித்தானுமொன்றாலறிவுறத்தெற்றியானும்
வஞ்சியிற்செவ்வியாளைவசித்தென்பால்வருவீரன்றால்
நஞ்சுமக்காவெனென்னாநகையிலாமுகத்துப்பேழ்வாய்
வெஞ்சினத்தரக்கிமார்க்குவேறுறவுணர்த்திப்போனான்.

இ-ள். அஞ்சுவித்தானும் - பிராட்டியை ஒருவகை அஞ்சும்படிசெய்தவனாய், ஒன்றால் — இன்னமொருவகையினாலே, அறிவுற - பிராட்டிதன் பெருமை அறிய, தேற்றியானும் — தெளிவுபடுத்தினவனுமாய், வஞ்சியில்- இந்தக் கொடிபோலும், செவ்வியாளை — அழகுள்ள சீதையை, வசித்து-இணங்கச்செய்து, என்பால் — என்னிடத்துக்குக் கூட்டிக்கொண்டு, வருவீரன்று- வருகிறவளொருத்தியுமில்லை, ஆல் - ஆகையால், நஞ்சு உமக்கு ஆவேனென்னா — இனி உங்களுக்கு நான் விஷமாவேனென்று, நகையிலாமுகத்து-சந்தோஷமில்லாத முகத்துடனே, பேழ்வாய் - அகன்றவாயினருள்ள, வெஞ்சினத்து — வெவ்வியகோபங்கொண்டு, அரக்கிமாரை - அந்தராக்ஷிகளைப்பார்த்து, வேறுற — தனியாகநின்று, உணர்த்தி — வசித்தென்பால் வருவீரன்றென்பதைச்சொல்லி, போனான் — தனதிடம்போயினான் ராவணன்—எ-று.

போயினனரக்கன்பின்னைப்பொங்கராநுங்கிக்கான்ற
தூயவெண்மதியையொத்தகோதையைத்தொடர்ந்துசுற்றித்
தீயவல்லரக்கிமார்கடெழீஇத்தெழித்துரப்பிச்சிந்தை
மேயினவண்ணமெல்லாம்விளம்புவருடன்றுமிக்கார்.

இ-ள். போயினனரக்கன் பின்னை — அந்தராவணன் போனபின்பு, பொங்கு அரா — சீறும்பாம்பு, நுங்கிக்கான்ற — விழுங்கிக்கக்கின, தூயவெண் மதியை — பரிசுத்தமான வெள்ளிய சந்திரனை, ஒத்த — ஒப்பாயிருக்கிற, கோதையை — சீதாபிராட்டியை, தொடர்ந்துசுற்றி — நெருங்கிச் சூழ்ந்து, தீயவல் அரக்கிமார்கள் — பொல்லாத வலியராக்ஷிகள், தெழிஇ — அதட்டி, தெழித்து - பின்னும் அதட்டி, உரப்பி — ஓங்கிப்பேசி, சிந்தை-தங்கள் மனத்துக்கு, மேயினவண்ணமெல்லாம் — தோற்றினவகைகளையெல்லாம், மிக்கார் — மிகவுங்கும்புகூடி, உடனறு — சண்டையிட்டுவைது, விளம்புவர் — சொல்லலானார்கள்—எ-று. 75

வேறு

முன்முன்னின்றார்கண்கனல்சிந்தமுடுகுற்றார்
மின்மின்னென்னுஞ்சூலமும்வேலுமிவையோச்சிக்

கொன்மின்கொன்மின் கொன்றுகுறைத்துகுடராரத்
தின்மின்றின்மினென்றுதெழித்தார்சிலரெல்லாம்.

இ-ள். முன்முன் — பிராட்டிக்குமுன்பில், நின்றார் — நின்றுகொண்டு, கண் — தங்கள் கண்களிலே, கனல் சிந்த — நெருப்புப்பொறிபறக்க, முடுகுற்றார் — அடிக்கவிரைகிறார்கள் சிலர், மின்மினென்னும் — பளபளவென்கிற, சூலமும் — சூலாயுதங்களும், வேலும் — வேலாயுதங்களும், இவை — ஆகிய இவ்வாயுதங்கள்கொண்டு, ஓச்சி — ஓங்கி, கொல்மின் கொல்மின் — கொல்லுங்கள் கொல்லுங்கள், கொன்று — கொலைசெய்து, குறைத்து - சதைசெய்து சதைசெய்து, குடர் ஆர — வயிறுநிறைய, தின்மின் தின்மின் - தின்னுங்கள் தின்னுங்கள், என்றுதெழித்தார் - என்று அதட்டினார்கள், சிலரெல்லாம் - சிலர்முழுதும் ஹிம்சித்தார்கள் — எ-று. முன்முன் ஒருத்திக்குமுன்னே ஒருத்திமுந்தி எனவுமாம். 76

வையந்தந்தநான்முகன்மைந்தன்மகன்மைந்தன்
ஐயன்வேதமாயிரம்வல்லோனறிவாளன்
மெய்யன்புன்பால்வைத்துளதல்லால்வினைவென்றோன்
செய்யும்புன்மையாதுகொலென்றார்சிலரெல்லாம்.

இ-ள். வையம்தந்த — உலகத்தைப்பெற்ற, நான்முகன் — சதுர்முகப்பிரமனுக்கு, மைந்தன் - புத்திரனான, புலத்தியருக்கு, மகன் - புதல்வனான விச்சிரவாவுக்கு, மைந்தன் — தனயனானவன் ராவணன், ஐயம் — எல்லாரிலுஞ் சிறந்தவன், வேதம் ஆயிரம் — ஆயிரம்வேதங்களும், வல்லோன் — தெரிந்தவன், அறிவாளன் — இன்னம் அனுபவரசமெல்லாந் தெரிந்தவன், உன்பால் மெய் அன்பு — அப்படிப்பட்டவன், உன்னிடத்திலே நிஜவிசுவாசம், வைத்துளது — கொண்டிருக்கிற இதொரு குற்றமே, அல்லால்-அல்லாமல், வினைவென்றோன் — தீவினையைவென்று தவஞ்செய்த இவன், செய்யும்புன்மை செய்ததோஷம், யாது என்றார் — என்ன இருக்கிறது என்றுசொன்னார்கள், சிலர் எல்லாம் — சிலர்முழுதும் — எ-று. 77

மண்ணிற்றீயமானுயர்தத்தம்வழியோடும்
பெண்ணிற்றீயோய்நின்முதன்மாயும்பிணிசெய்தாய்
புண்ணிற்கோலிட்டாலனசொல்லிப்பொதுநோக்கால்
எண்ணிக்காணுய்மெய்மையுமென்றார்சிலரெல்லாம்.

இ-ள். மண்ணில் — இந்த வுலகத்திலுள்ளவெல்லாம், தீய-வெந்துபோக, மானுயர் — மனிதரும் மனிதர்தீய, என்க, தத்தம் — தங்கள் தங்கள், வழியோடும் — வம்சத்துடனே, பெண்ணில் — பெண்களிலே, தீயோய் — கெட்டவளே, நின்முதல் — உன்குலவேரும், மாயும் பிணி — அழிவதான நோயை, செய்தாய் — பண்ணினாய், பொதுநோக்கால் எண்ணி — எல்லாரையும் பார்க்கிறதுபோலவேபார்த்து, புண்ணில் — புண்ணிலே, கோலிட்டாலென - கோல்கொண்டுகுதித்தாற்போல், சொல்லி - அரசன்முன்னேபேசி, மெய்ம்மை

யும் — அவன் திரிலோகாதிபத்திய முள்ளவனென்கிற மெய்யான சிறப்பை யும், காணுய் — நீதெரிந்துகொள்கிலே, என்ருர் — என்றுசொன்னுர்கள், சில ரெல்லாம் - சிலர்முழுதும்—எ-று. 78

புக்கவழிக்கும்போந்தவழிக்கும்புகழ்வெந்தீ
ஒக்கவிதைப்பாயுற்றனேயன்ருேவுணர்வில்லாய்
இக்கணமிற்ருய்முந்தினமெல்லாமினிவாழாய்
சிக்கவுரைத்தேமென்றுதெழிந்தார்சிலரெல்லாம்.

இ-ள். புக்கவழிக்கும் — நீமருமகளாய்ப்போன உன்குலத்துக்கும், போந்தவழிக்கும் — மகளாய்ப் பிறந்த, குலத்துக்கும், புகைவெந்தீ — புகைகிறவெப்பமுள்ள நெருப்பு, ஒக்க — மூள, கூட — சரியாக, விதைப்பாயுற்றனே-மூட்டுகிறவளாணுய், அன்ருே — அல்லவோ, உணர்வு இல்லாய் — ஒபுத்தியில்லாதவளே, இக்கணம் — இந்த க்ஷணத்துக்குள்ளே, இற்ருய் — இறந்துபோனவளாவாய், முந்தினம் — நீசாவாதபடி முன்னின்ருேம், எல்லாம் — நாங்களெல்லாம், இனி — இனிராவணன் வந்தால், வாழாய் — நீ பிழைக்கமாட்டாய், சிக்க - நீ அவன் கைவசமாகுதற்காக, உரைத்தேமென்று — இங்நோமும் இப்படிபுத்தி சொல்லுகிருேமென்று, அன்றேல் — கொல்வோமென்று, தெழித்தார் — அதட்டியுருக்கிஞர்கள், சிலரெல்லாம் — சிலர்முழுதும், புகழ் வெந்தீயென்று பாடமாஞல் இருகுலத்துப்புகழையும் அரக்கராகிய நெருப்பிலேவீழ்த்துகிருயென்க, விதைத்தல் - வளரச்செய்தல்—எ-று. 79

கொல்வானுற்ருேர்பெற்றிமையாதுங்குறையாதாள்
வெல்வானங்கோன்றின்னுமின்வம்மென்பவர்மெய்யும்
வல்வாய்வெய்யோனேவலுமெல்லாமனம்வைத்தாள்
நல்லாணல்லகண்கள்கலுழ்ந்தேநகுகின்ருள்.

இ-ள். கொல்வான் உற்று — நாமெல்லாங் கொல்லத்தொடுத்தும் கொல்ல எண்ணினதுகண்டு, பெற்றிமை — தன்குணத்தன்மையில், ஓர் யாதும் - ஒரு எவ்வளவும் கொஞ்சமேனும், குறையாதாள் — குறைவுபடாதிருக்கிருள் ஆதலால், வெல்வான் நங்கோன் — நமதரசன் நம்மைவருத்துவான், தின்னுமின் — இவளேத் தின்னுங்கள், வம் — வாரும், என்பவர் — என்னும் அரக்கிகள், மெய்யும் — மெய்யே கொல்லவருகிறதையும், வல்வாய்-இராவணனை அவ்வல்லவாயையுடைய, வெய்யோன் - கொடியோனுடைய, ஏவலும் — ஆக்ஞையும், எல்லாம் - ஆகிய இவைமுழுதும், மனம்வைத்தாள் — தன்மனத்திலேகொண்டு, நல்லாள் — பிராட்டி, நல்ல — நலமுள்ள ராக்ஷிகள்மேற்கண்ணேட்டமுள்ள, கண்கள் — நேத்திரங்களால், கலுழ்ந்தே-அழுதுகொண்டே, நகுகின்ருள் — அரக்கிகளேநோக்கி விளங்குகிருள், அரக்கிகளறியாமைக்குச் சிரிக்கிருள் சந்தோஷிக்கிருள் மகிழ்கிருள் என்க, குணத்தன்மை - பதிவிரதாகுணம்—எ-று. 80

இன்னோரன்னவெய்தியகாலத்திடைநின்றாள்
முன்னேசொன்னேன்கண்டகனவின்முடிவம்மா
பின்னேவாளாபேதுறுவீயேற்பிழையென்றாள்
அன்னேநன்றென்றாரவரெல்லாமறிவுற்றார்.

இ-ள். இன்னோர் — இவ்வகைராக்ஷதிகள், அன்ன - அப்படியாக, எய்தியகாலத்து — வந்தபோது, இடை நின்றாள் — அவர்கள் நடுவே நின்ற திரிசடையானவள், கண்ட — நான்கண்ட, கனவின் முடிவு — சொப்பனமுடிவை, முன்னேசொன்னேன் — முன்பேசொல்லினேன் ஆதலால், பின்னே-இப்போது, வாளா — வியர்த்தமாக, பேதுறுவீரேல்-மயங்குவீரேயானால், பிழையென்றாள் — தோஷமாம் என்று பிராட்டியை நோக்கிச்சொன்னாள், அவரெல்லாம் - அது அந்தராக்ஷதிகளெல்லாம், அறிவுற்றார் — தெரிந்தவர்களாய், அன்னே ராஜபுத்திரியான திரிசடையைப்பார்த்துதாயே நன்று உன்கனவு நன்றாயிருந்தது எப்படியாமோ, என்றார் — என்று சொன்னார்கள்—எ-று.

அறிந்தாரன்னமுச்சடையென்பாளவள்சொல்லப்
பிறிந்தார்சீற்றமன்னனையஞ்சிப்பிறிதில்லாச்
செறிந்தாராயதீவினையன்னார்தெறலெண்ணார்
நெறிந்தாரோதிப்பேதையுமாவிநிலைநின்றாள்.

இ-ள். அறிந்தார் — வருவதுணர்ந்த பெரியோரை, அன்ன — ஒப்பான, முச்சடையென்பாள் — திரிசடையென்கிற, அவள் - அந்த விபீஷணன்புத்திரி, சொல்ல — ஆக்ஞாபிக்க, பிறந்தார் சீற்றம் — ராக்ஷதிகள் கோப நீங்கினார்கள், மன்னனை — அரசனுனராவணனுக்கு, அஞ்சி - பயந்து, பிறிது - அல்லது, இல்லா — ஒன்றுஞ் செய்தலில்லாது, செறிந்தாராய்-கூடினவர்களான, தீவினை — பாபரூபமே, அன்னார் - ஒத்த ராக்ஷதிகள், தெறல் — பிராட்டியை வருத்த, எண்ணார் — நினையாதிருந்தார்கள், நெறிந்து - நடுவேவழிக்கொண்டு வாகுகொண்டு, ஆர் — நிரம்பினதான, ஓதி — கூந்தலையுடைய, பேதையும்-பிராட்டியாரும், ஆவி — தமது பிராணன், நிலை நினறாள் — ஒருவகைநிலையிலே நிற்கலானார்—எ-று. 82

நிந்தனைப்படலம் முற்றிற்று

ஆ படலம்-4-க்குதிருவிருத்தம் — 488

கம்பநாட்டாழ்வார் திருவடிகளே சரணம்

ஐந்தாவது

# உருக்காட்டு படலம்

## சிரியதிருவடி தம்வடிவைப் பிராட்டிக்குக் காட்டுதல்

காண்டற்கொத்தகாலமுமீதேதெறுகாவல்
தூண்டற்கொத்தசிந்தையினாருந்துயில்கில்லார்
வேண்டத்துஞ்சாரென்றொருவிஞ்சைவினைசெய்தான்
மாண்டற்குற்றாரெனவெல்லாமயர்வுற்றார்.

இ-ள். காண்டற்கு — இனி நான்காணுதற்கு, ஒத்த – தகுந்த, காலமும் ஈதே — காலமும் இதுவே, தெறுகாவல்-காக்குங்காவலினின்று, தூண்டற்கு-வருத்துதற்கு, ஒத்த – தக்க, சிந்தையின்-மனசுள்ளவர்களாகையால், ஆரும்-ஒருத்தியேனும், துயில்கில்லார் – நித்திரைகொள்ள இல்லை, வேண்ட-நான் வேண்டுகிறதினாலே, துஞ்சாரென்று - இவர்கள் தூங்கார்களென்று, ஒரு விஞ்சை – ஒருமந்திரத்தை, வினைசெய்தான் — உச்சரித்தார் திருவடி அம்மந்திரத்தினாலே, மாண்டற்கு – சாவுதற்குக்காலம், உற்றாரென – நேரிட்டவர்கள்போல, எல்லாம் — எல்லாரும் பெருமூச்சுவிட்டு, மயர்வுற்றார் – மயங்கினார்கள் தூங்கினார்கள்—எ-று. காணச்சமையம் கிடையாமையைக்குறித்து காலமும் என்றார் அருமைச்சிறப்பு. 1

துஞ்சாதாருந்துஞ்சுதல்கண்டாடயராற்றாள்
நெஞ்சாலொன்றுமுய்வழிகாணாநெருகின்றாள்
அஞ்சாநின்றாள்பன்னெடுநாளுமழிவுற்றாள்
எஞ்சாவன்பாலின்னபகர்ந்தாங்கிடருற்றாள்.

இ-ள். துஞ்சாதாரும் — தூங்காத ராக்ஷசிகளும், துஞ்சுதல் - தூங்குகிறதை, கண்டாள் – அப்போதுபார்த்தாள், துயர் ஆற்றாள் – உள்ள துன்பத்தைப் பொறுக்கமாட்டாதவளாய், நெஞ்சால்-தன்புத்தியோசனையால், ஒன்றும் – ஒருவகையாலும், உய்வழிகாணாள் – துன்பத்துக்குத் தப்பும்வகை தோற்றாதவளாய், நெருகின்றாள் – உருகுகிறவள், அஞ்சா நின்றாள் - பயப்படுகிறவள், பல் நெடுநாளும் – சிறையிலகப்பட்டகாலமெல்லாம், அழிவுற்றாள் – கரைந்தவள், எஞ்சா – குறையாத, அன்பால் – ராமபக்தியினாலே, இன்ன – இவ்வார்த்தைகளை, பகர்ந்து - சொல்லி, ஆங்கு – அப்போது, இடருற்றாள் - கிலேசித்தாள்—எ-று. 2

வேறு

கருமேகநெடுங்கடல்காரணையான்
தருமேதனியேயெனதாருயிர்தான்

உருமேறுறழ்வெஞ்சிலைநாணொலிதான்
வருமேயுரையாய்வலியார்வலியே.

இ-ள். கருமேகம்-நீலமேகம் கருவைக்கொண்டமேகமும், நெடுங்கடல்-ஆழமுள்ளகடலும், கார் — இருளும், அனையான்தான் - ஒப்பான ஸ்ரீராமன் தானே, தனியேன் - ஒருத்தியான, எனது - என்னுடைய, ஆர் உயிர்-சாவ அரிதான உயிரை, தருமே - சாவாமல் நிலைபெறச்செய்வரோ, உருமேறு-இடியேற்றை, உறழ் - ஒப்பதான, வெஞ்சிலை - கொடியகோதண்ட, நாணொலிதான் - குணத்தொனியும், வருமே - நான்கேட்கக்கிடைக்குமா, உரையாய் - சொல்லக்கடவை, வலியார் - வல்லமையென்பாரை, வலியே — வெல்ல வல்லதெய்வமே—எ-று. கருமேகத்திலு நெடுங்கடலிலுமுள்ள கருநிறத்தை ஒத்தவனெனவுமாம். 3

கல்லாமதியேகதிர்வாணிலவே
செல்லாவிரவேசிறுகாவிருளே
எல்லாமெனையேமுனிவீர்நினையா
வில்லாளனையாதும்விளித்திலிரோ.

இ-ள். கல்லாமதியே — விவேகமில்லாத சந்திரனே, கதிர் — நூற்குங் கதிர்போல் நீண்ட, வாள்நிலவே - ஒளியுள்ள சந்திரிகையே, செல்லா - கழியாத, இரவே - இராத்திரியே, சிறுகா - குறையாதுபெருகின, இருளே-அந்தகாரமே, எல்லாம் - நீவிர் நால்வரும், எனையே-என் ஒருத்தியையே, முனிவீர் - வெறுத்தல்செய்கிறீர்கள், நினையா - என்னை எண்ணுதிருக்கிற, வில்லாளனை - கோதண்டபாணியை, யாதும் - எவ்வளவும், விளித்திலிரோ-வெறுத்தல் செய்வீர்களோ, நீவிர் வெறுத்தாலென்னை - நினைந்து இங்குவருவாரென்கிறாள்—எ-று. 4

தழல்வீசவுலாய்வருவாடைதழீஇ
அழல்வீரெனதாவியறிந்திலிரோ
நிழல்வீரையனோடுடனீர்நெடுநாள்
உழல்வீர்கொடியீருரையாடிலிரோ.

இ-ள். தழல் வீச - நெருப்புச்சுவாலைபட, உலாய்வரு - உலவிவருகிற, வாடை - வடகாற்றை, தழீஇ - கூட்டிக்கொண்டு, அழல்வீர் - ஐவராய்க் கொதித்து முனிகிறீர்கள், எனதாவி - என் உயிரொன்றுதான் ஐவர்க்குஞ் சில்லையென்று, அறிந்திலிரோ - தெரிகிலீர்களோ, நிழல்-தேககாந்தி, வீரை-கடலை, அனோடுடன் - ஒத்த ஸ்ரீராமனுடனே, நீர் - நீவிரைவரும், நெடுநாள். நெடுங்காலமும் நான்சிறைவந்தகால அளவும், உழல்வீர் - கூடியிருக்கிறநீவிர், கொடியீர் - பொல்லாதவர்களாகையால், உரையாடிலிர் - என்குறையொன்றுஞ் சொல்கிலீர்—எ-று. 5

வாராதொழிவானெனினும்வண்மையினல்
ஓராயிரகோடியிடர்க்குடைவேன்

தீராவொருநாள்வலிசேவகனே
நாராயணனே தனிநாயகனே.

இ-ள். ஒருநாள் — ஒருகாலத்திலும், வலி தீரா — சக்திகுறையாத, சேவகனே — சாமர்த்தியமுள்ளவனே, நாராயணனே — சர்வ சுவாமியானவனே, தனி நாயகனே — உபய விபூதியிலே ஒருதானே நிர்வாஹகனே நீயாதலால், வாராதொழியான் — இங்குத் தேடிவாராமலிரார், இரீர் எனும் — என்கிற, வண்மையினால் - ஔதாரிய குணத்தையெண்ணி, ஓராயிரகோடி - அளவிறந்தகோடி, இடர்க்கு — துன்பத்துள் நின்று, உடைவேன் — வருந்திக்கிடக்கிறேன் வாரீரென்று நிச்சயந்தெரிந்தால் நான்செய்வது பிராணத்தியாகமென்பது போதரல்காண்க—எ-று. 6

தருவொன்றியகானடைவாய்தவிர்நீ
வருவென்சிலநாளினின்மாநகர்வாய்
இருவென்றனையின்னருடானிதுவேல்
ஒருவென்றனியாவியையுண்ணுதியோ.

இ-ள். தரு ஒன்றிய — விருக்ஷங்கள் கூடின, கான் — காட்டுக்கு, அடைவாய் நீ — வருகிறநீ தவிர் — வருகிறதைவிடு, மாநகர்வாய் — இந்தமூதூருக்கு, சிலநாளினில் — கொஞ்ச நாளுக்குள், வருவென் - வருகிறேன், இரு என்றனை — என்னை ஊரிலேதானே இரு என்றுசொன்னீர், இன் அருள் தான் - உமதினிதான தயவுதான் அது, இது ஏல் — இப்படிச் சிறையிருப்பதென்னுலானால் இப்போது, ஒருவென் — அநாதியாயிருக்கிற எனது, தனி ஆவியை - ஆதாரவில்லாத உயிரை, உண்ணுதியோ — வதைசெய்யலாகுமா யோசித்தால் உமதுசொற்கடந்து கூடவந்ததனாலே தயவுதப்பினீரென்பதுகொள்க. 7

பேணும்முணர்வேயுயிரேபெருநாள்
நாணின்றுழல்வீர்தனிநாயகனைக்
காணுந்துணையுங்கழிவீரவிர்நான்
பூணும்பழியோடுபொருந்துவதோ.

இ-ள். பேணும் — நான் விரும்பத்தக்க, உணர்வே — என்மனசே, உயிரே - என் ஆத்மாவே, பெருநாள் — நெடுங்காலமும், நாண் இன்று — வெட்கமில்லாமல், உழல்வீர் — அலைகிறீர்கள், தனிநாயகனை — ஏகவஸ்துவானசரணியனை, காணுந்துணையும் — காணுமளவும், கழிவீரலீர் — போகிறவர்களல்லீர் நீவிரிருவரும், நான் — ஆனலினிக்காணமல் நான், பூணும் — பூண்டுகொள்வதான, பழியோடு — நாயகன்சொல்வழி நடவாதவளென்கிற பழிச்சொல்லுடனே, பொருந்துவதோ — கூடி நீவிருமிருக்கவோ சம்மதிசொல்லுங்கள் உணர்வே உயிரே—எ-று. 8

முடியாமுடிமன்னன்முடிந்திடவும்
படியேழுநெடுந்துயர்பாவிடவும்

மடியாநெறிவந்துவனம்புகுதும்
கொடியார்வருமென்றுகுலாவுவதோ.

இ-ள். முடியா — அழிவுபடாத, முடி — கிரீடாதிபனுன, மன்னன்-சக்கரவர்த்தி, முடிக்கிடவும் — இறந்துபோகவும், படியேழும் — சப்தலோகங்களும், நெடுந்துயர் — நெடியதுக்கத்தில், பாவிடவும் — முழுகவும் துக்கம்பரவவும், மடியாநெறி — நீதிவழுவாமல், வந்து-பிதுர்வாக்கிய பரிபாலநராய்வந்து, வனம்புகுதும் — காட்டிலே நுழைகிற, கொடியார் — கொடியசெய்கையுள்ளவர், வருமென்று — எப்படியும் வருவாரென்று, குலாவுவதோ-நீவிரிருவரும் என்னைவிடாதிருக்கிறதோ, சொல்லீர் அவரிரக்கமுள்ளவரானுல் அவ்வளவு துக்கம் அங்குளதாகக் காட்டுக்கு வருவாரா இரக்கமில்லாதவரென்று தன்னைத்தேடாமையைக் குறிப்பிக்கிருள்—எ-று. 9

என்றென்றுயிர்விம்மியிருந்தழிவாள்
மின்றுன்னுமருங்குல்விளங்கிழையாள்
ஒன்றென்றுயிருண்டெனிறுண்டிடர்யான்
பொன்றும்பொழுதேபுகழ்பூணுமெனு.

இ-ள். என்றென்று — இப்படிபலவகை, உயிர்விம்மி — உயிர்வருந்தி இருந்து அழிவாள் — நெடுநேரம்யோசித்து துக்கிக்கிறவளான, மின் துன்னும் — மின்னலுக்கொப்பான, மருங்குல் — இடையையுடைய, விளங்கு இழையாள் — சீதாபிராட்டியானவள், ஒன்று — இதொன்றேசரி, என் உயிர்-எனக்கு உயிர், உண்டெனில் — இருக்குமேயானுல், உண்டு இடர் — துன்பமும் உண்டு துன்பமும் இருக்கும் ஆதலால், யான் — நான், பொன்றும் பொழுதே — இறந்தபோதுதான், புகழ்பூணுமெனு — எனக்குப் புகழுண்டாமென்று—எ-று. 10

வேறு

பொறையிருந்தாற்றியென்னுயிரும்போற்றினேன்
அறையிருங்கழலவற்காணுமாசையால்
நிறையிரும்பல்பகனிருதர்நீணகர்
சிறையிருந்தேனையப்புனிதன்றீண்டுமோ.

இ-ள். அறை — சத்தியாகின்ற, இருங்கழலவன் — பெரிய வீரக்கழலுள்ள ஸ்ரீராமனை, காணுமாசையால் — பார்க்கலாமென்கிற ஆசையினலே, பொறையிருந்து ஆற்றி - இங்கேயிருந்து துன்பத்தைப் பொறுத்தல்செய்து, என் உயிரும் — என் உயிரையும், போற்றினேன் — இதுவரையிலும் வைத்திருந்தேன் இனி, நிறை — நிறைவதான, இரும் - பெருமையையுடைய, பல் பகல் — பலகாலமும் நெடுங்காலம், நிருதர் — ராக்ஷதர்களுடைய, நீள்நகர்-நெடியவூரிலே, சிறையிருந்தேனை — சிறைகிடந்த என்னை, அப்புனிதன் — அந்தப் பரிசுத்தன், தீண்டுமோ — தொடுவாரோ தொடார்—எ-று. 11

உன்னினர்பிறரெனவுணர்ந்துமுய்ந்தவர்
சொன்னனசொன்னனசெவியிற்றூங்கவும்
மன்னுயிர்காத்திருங்காலம்வைகினேன்
என்னின்வேறரக்கியர்யாண்டையார்கொலோ.

இ-ள். பிறர் உன்னினர் என — என்னை வேறொருவ ராசைகொண் டார்கள் என்று, உணர்ந்தும் — தெரிந்தும், உய்ந்து - உயிர்பிழைத்து, அவர்- அந்த ஆசைகொண்டவர்கள், சொன்னன சொன்னன - சொல்லுமவைக ளெல்லாம், செவியில் — என் காதிலேபுகுந்து, தூங்கவும் — நிலைகொண்டிருக் கவும், மன் - என் உடலிலே பொருந்தின, உயிர் — உயிரை, காத்து — ரக்ஷித் துக்கொண்டு, இருங்காலம் — சிறைப்பட்டு இக்கால அளவும், வைகினேன்- இருந்தேன், என்னின் - இப்படியிருக்கிற என்னைப்பார்க்கிலும், வேறு- வேறே, அரக்கியர் — ராக்ஷதிகள், யாண்டையார் — எங்கே யிருக்கிறார்கள் எங்குமிரார்கள், கொல் ஓ — அசைகள்—எ-று. 12

சொற்பிரியாப்பழிசுமந்துதூங்குவேன்
நற்பிறப்புடைமையுநாணுநன்றரோ
கற்புடைமடந்தையர்கதையுளோர்கடாம்
இற்பிரிந்துய்ந்தவர்யாவர்யானலால்.

இ-ள். சொற்பிரியா — சொல்லுதல் விடாத, பழி — பிறர் சிறைக்குள் ளானபழியை, சுமந்து - கொண்டு, தூங்குவேன் - பொழுதுபோக்குகிறேன் ஆன என்னுடைய, நற்பிறப்புடைமையும் — நல்ல குடிப்பிறப்பும், நாணும்- எனக்குள்ள வெட்கமும், நன்று — நல்லனவேயாம் என்றால் நல்லன அன் றென்பது, கற்புடைமடந்தையர் — கற்புள்ள பெண்களாய், கதையுளோர் கள் — முனநடந்த சரித்திரங்களில் வருகிற பெண்கள், தாம் — தாங்கள், இற் பிரிந்து - தமதில்லினின்று நீங்கி நாயகனைப்பிரிந்து, உய்ந்தவர் — உயிர் பிழைத்தவர்கள், யாவர்யான் அலால் - என்னையல்லது அச்சரித்திரங்களிலே யாரிருக்கிறார்கள் ஒருவருமில்லை, நான் ஒருத்தியே நாயகனைப் பிரிந்தும் உயிர்பிழைத்தவளென்பது கருத்து—எ-று. 13

பிறர்மனையெய்தியபெண்ணைப்பேணுதல்
திறனலதென்றுயிர்க்கிறைவன்றீர்ந்தனன்
புறனலரவனுறப்போதுபோக்கியான்
அறனலதியற்றிவேறென்கொண்டாற்றுகேன்.

இ-ள். பிறர்மனை எய்திய — அன்னியர் வீட்டிற்போன, பெண்ணை- ஒருபெண்ணை, பேணுதல் — இனி நாம் வேண்டுகிறது, திறன் — நியாய மானது, அலதென்று - அன்றென்று, உயிர்க்கு — என் உயிர்க்கு, இறை வன் - நாயகனானவர், தீர்ந்தனன் — கைவிட்டுப்போயினார், புறன் — வெளி யெல்லாம், அலர் - பழித்துச் சொல்லுதலை, அவன் - அந்த நாயகனானவர், உற — அடைய, யான் — நான், போதுபோக்கி — இப்படிக் காலங்கழித்து,

அறன் - தருமம், அலது - அல்லதான பாவத்தை, இயற்றி-செய்து, வேறு- இனி வேறே, என்கொண்டு — எந்த நன்மையைக்கொண்டு, ஆற்றுகேன்- அந்தப் பாவத்தைப் போக்கிக்கொள்ளுவேன்—எ-று. 14

எப்பொழுதிப்பெரும்பழியினெய்தினேன்
அப்பொழுதேயுயிர்துறக்குமாணையேன்
ஒப்பரும்பெருமறுவுலகமோதயான்
துப்பழிந்துய்வதுதுறக்கந்துன்னவோ.

இ-ள். எப்பொழுது - எப்போது நான், இப் பெரும்பழியின் — இந்தப் பெரிதான தூஷணைக்குள்ளே, எய்தினேன் — அடைந்தேன் கூடினேன், அப்பொழுதே — அப்போதுதானே, உயிர் — என் உயிரை, துறக்கும் — போக்கிக்கொள்ளத்தக்க, ஆணையேன் — நியதியுள்ள நான், ஒப்பு அரும் - எவர்க்குஞ் சம்மதியில்லாத, பெருமறு — பெரிய தோஷத்தை, ஓத உலகம் — உலகமெல்லாம்சொல்ல, யான் — நான், துப்பு அழிந்து — மதிகேடியாய், உய்வது- பிழைத்திருக்கிறது, துறக்கம் — சுவர்க்கலோகத்தை, துன்னவோ — இனி அடையலாமென்றோ, சிறைப்பட்டவளுக்குச் சுவர்க்கம் கிடைக்குமா கிடையாதே என்கிறாள்—எ-று. 15

அன்பழிசிந்தையராயவாடவர்
வன்பழிசுமக்கினுஞ்சுமக்கவானுயர்
துன்பழிபெரும்புகழ்க்குலத்துட்டோன்றினேன்
என்பழிதுடைப்பவரென்னின்யாவரே.

இ-ள். அன்பு அழி — விசுவாசங்கெட்ட, சிந்தையர் — மனசுள்ளவர்கள், ஆய ஆடவர் — ஆன அவ்விருவரும், வன்பழி — என்னைத் தேடாதிருக்கிற வலிதான பழிப்பை, சுமக்கினும் - கொண்டாலும், சுமக்க — கொள்க, வானுயர் — பெரியவுயர்வுள்ள, துன்பு அழி — துன்பத்தைக்கெடுக்கிற, பெரும்புகழ்- பெரிதான புகழையுடைய, குலத்துள் — குலத்திலே, தோன்றினேன் - பிறந்தேனானேன், என்பழி — எனக்குண்டானபழிப்பை, துடைப்பவர் - போக்குகிறவர்கள், என்னில் — என்னையல்லது, யார் — யாரிருக்கிறார்கள் நானே பழியைத் தீர்த்துக்கொள்ளவேணுமென்பது கருத்து—எ-று. 16

வஞ்சனைமானின்பின்மன்னைப்போக்கியென்
மஞ்சனைவைதுபின்வழிக்கொள்வாயென
நஞ்சனையானகம்புகுந்தநங்கையான்
உய்ஞ்சனெனிருத்தலுமுலகங்கொள்ளுமோ.

இ-ள். வஞ்சனை — கபடவேடங்கொண்டுவந்த, மானின்பின் — அந்தமானுக்குப்பின்னே, மன்னை — சக்கரவர்த்திதிருமகனை, போக்கி — போகவிட்டு, என்மஞ்சனை — எனக்குப் புத்திரபாவமான இளையபெருமாளை, வைது- தூஷித்து, பின் — உன் தமையன் பின்னே, வழிக்கொள்வாயென-செல்லக்

டைவயென்று போகவிட்டு, நஞ்சு - விஷத்தை, அனையான - ஒத்தவனான இவனுடைய, அகம்புகுந்த - வீட்டுக்குள்ளேவந்திருக்கிற, நங்கையான்- பெண்ணானநான், உய்ஞ்ஞனன் - உயிர் பிழைத்தவளாய், இருத்தலும் - இருக்கிறதையும், உலகம் - உலகத்தார், கொள்ளுமோ - சம்மதிப்பார்களோ சம்மதியார்கள்—எ-று. 17

வல்லியன்மறவர்தம்வடுவிற்றீர்பவர்
வெல்லினும்வெல்கபோர்விளிந்துவீடுக
இல்லியலறத்தையானிறந்துவாழ்ந்தபின்
சொல்லியவென்பழியவரைச்சுற்றுமோ.

இ-ள். வல் இயல் - சாமர்த்தியம் பொருந்தின, மறவர் - அந்த இரண்டு வீரரும், தம் - தமக்குண்டாகுகிற, வடுவில் - தோஷத்தினின்றும், தீர்பவர் நீங்கவேண்டியவர்தான் ஆனால், வெல்லினும் - ராக்ஷதரைவென்றாலும், வெல்க - வெல்லக்கடவது, போர் - சண்டையால், விளிந்து வீடுக - இறந்துவிட்டாலும் விடக்கடவது இச்செய்கை அவ்விருவர்காரியம், இல் - ஒருவருக்கு மனையாளாக, இயல் - பொருந்துகிற, அறத்தை - தருமத்தை, யான்-நான், இறந்து - தப்பி, வாழ்ந்தபின் - இப்படிவாழலானபோது, சொல்லிய - அவ்விருவரையும் பிரிந்துபோகும்படி சொன்ன, என்பழி - எனதுபழிப்பு, அவரை - அவ்விருவரை, சுற்றுமோ - சூழுமா சூழாது—எ-று. ஆகையால் என்னால்வந்தபழியை நானே போக்கிக்கொள்ள வேணுமென்று கருத்து. 18

வருந்தலின்மானமாவனையமாட்சியர்
பெருந்தவமடந்தயர்முன்புபேதையேன்
கருந்தனிமுகிலினைப்பிரிந்துகள்வரூர்
இருந்தவளிவளெனவேசநிற்பெனோ.

இ-ள். வருந்தலில் - வருத்தமுற்றபோது, மானமா - மயிர் நீப்பின் வாழாக்கவரிமானை அனைய ஒத்த, மாட்சியர் - குணமுள்ளவர்களான, பெருந்தகை - பெரிதானதகுதியுள்ள, மடந்தையர்முன்பு - பெண்கள்முன்னே, பேதையேன் - அறிவில்லாத நான், கரும் - கறுத்த, தனி - ஒப்பில்லாத, முகிலினை - மேகநிறமுள்ள ஸ்ரீராமனை, பிரிந்து - நீங்கி, கள்வர் - திருட்டு ராக்ஷதர்களுடைய, ஊர் - ஊரிலே, இருந்தவள் - நெடுங்காலமுமிருந்தவள், இவளென - இந்தச் சீதையென்று, ஏச - இகழ்ந்துசொல்ல, நிற்பெனோ-அப்பெண்கள்முன்னே நிற்கமாட்டுவேனோ நிற்கமாட்டேன்—எ-று. 19

அற்புதனரக்கர்தம்வருக்கமாசற
விற்பணிகொண்டருஞ்சிறையின்மீட்டநாள்
இற்புகத்தக்கலையென்னின்யானுடைக்
கற்பினையெப்பரிசிழைத்துக்காட்டுகேன்.

இ-ள். அற்புதன் - ஆச்சரியகுணங்களுள்ள ஸ்ரீராமன், அரக்கர்தம்- ராக்ஷதர்களுடைய, வருக்கம் - கூட்டமான, ஆசு அற - தோஷந்தீர, வில்

தமதுவில்வலியாலே, பணிகொண்டு - காரியஞ்செய்து, அருஞ்சிறையில்-அரிதான சிறையினின்றும், மீட்ட நாள் – திரும்பக்கொண்டபோது, இல்-லன்னைநோக்கி வீட்டுக்குள்; புகத்தக்கலே - புகத்தகாதவள், என்னில்-என்று சொன்னால், யானுடை – நான் இங்குடையதாயிருக்கிற, கற்பினை – கலங்கா நிலையை, எப்பரிசு – எவ்விதமாக, இழைத்து - செய்து, காட்டுவேன்-மெய்க் காட்டுவேன்—எ-று. காட்டவகையில்லை என்பது கருத்து. 20

ஆதலாளிறத்தலேயறத்தினாறெனச்
சாதல்காப்பவருமென்றவத்திற்சாம்பினார்
ஈதலாதிடமும்வேறில்லையென்றொரு
போதுலாமாதவிப்பொதும்பரெய்தினாள்.

இ-ள். ஆதலான் - ஆகையாலே, இறத்தலே – நான் என்ஜீவனைவிடுகிறதே, அறத்தின் – தருமத்தின், ஆறெனு – ஒழுங்கென்று, காதல் – இதற்கு முன்னேதானே நான் செத்துப்போகிறதை, காப்பவரும் – தடையெய்கிற ராக்ஷஸிகளும், என்தவத்தில் - நான்செய்த தவபலத்தினாலே, சாம்பினார்- மயங்கித் தூங்குகிறார்கள், ஈது – இந்தச் சமயத்தை, அலாது – அல்லாமல், இடமும் – சமயமும், வேறில்லை – வேறே இனிக்கிடைக்காது, என்று-என்றெண்ணி, ஒருபோது உலாம் – ஒருபுஷ்பங்கள்பொருந்தின, மாதவிப்பொதும்பர் – குருக்கத்திமரச்செறிவிலே, எய்தினாள் - சென்றாள்—எ-று. 21

கண்டனனநுமனுங்கருத்துமெண்ணினான்
கொண்டனன்றுணுக்கமெய்தீண்டக்கூசுவான்
அண்டர்நாயகனருட்டூதன்யானெனாத்
தொண்டைவாய்மயிலினைத்தொழுதுதோன்றினன்.

இ-ள். அநுமனும் – சிறிய திருவடி அது, கண்டனன் - பார்த்தார், கருத்தும் – பிராட்டிசாவ நினைத்துச் சென்றகுறிப்பும், எண்ணினான்-யோசித்துத் தெரிந்தாராய், துணுக்கம்கொண்டனன் – பயங்கொண்டு, மெய்- பிராட்டி உடம்பை, தீண்ட – தொட, கூசுவான் – அஞ்சினவராய், யான்- நான், அண்டர் நாயகன் – தேவ நாயகனான ஸ்ரீராமனுடைய, அருள்-அருளால்வந்த, தூதன் எனா – தூதுவன் என்று, தொண்டை – கொவ்வைக்கனி போன்ற, வாய் – வாயையுடைய, மயிலினை – மயிற்சாயலுள்ள பிராட்டியை, தொழுது – வணங்கி, தோன்றினன் – தன் உருவைக்காட்டி முன்னின்றார்.

அடைந்தனெனடியனேனிராமனாணையால்
குடைந்துலகனைத்தையுநாடிக்கொட்பினால்
மிடைந்தவருலப்பிலர்தவத்தைமேவலான்
மடந்தைநின்சேவடிவந்துநோக்கினேன்.

இ-ள். அடியனேன் – அடியேனாகிய நான், அடைந்தனென – வந்தேனென, இராமன் – ஸ்ரீராமனுடைய, ஆணையால்-ஏவுதலாலே அடைந்தேன்,

குடைந்து – பூமியைப் பிளந்தாவது, உலகினைத்தையும் – உலகங்களெல்லாம், நாடும் - உன்னைத் தேடவேண்டிய, கொட்பினால் - சூட்சியாலேயோசனையாலே, மிடைந்தவர் – தேடிப்போனவர்கள், உலப்பிலர் – கணக்கில்லாதவர்கள் அவர்களில், தவத்தை – நான் தவத்தை, மேவலான் – செய் திருந்ததனாலே, மடந்தை – ஓ பெண்கள்சிகாமணி, நின்சேவடி - உனது சிவந்த திருவடிகளை, வந்து – கடல்கடந்துவந்து, நோக்கினேன் – கண்டேன் — எ-று. அவர்கள் என்போற்காணத்தவஞ்செய்திலர் என்க. 23

ஈண்டுநீயிருந்ததையிடரின் வைகுறும்
ஆண்டகையறிந்திலனதற்குக்காரணம்
வேண்டுமேயரக்கர்தம்வருக்கம்வேரொடு
மாண்டிலவீதலான்மாறுவேறுண்டோ.

இ-ள். ஈண்டு – இங்கே, நீ யிருந்ததை – நீ யிருக்குமிருப்பை, இடரின்-துன்பத்திலே, வைகுறும் – தங்கிக்கிடக்கிற, ஆண்தகை – புருஷ சிரேஷ்டரான ஸ்ரீராமன், அறிந்திலன் – இன்னும் தெரிந்திலர், அதற்குக் காரணம்- அவர் தெரிந்திலரென்பதற்குத் திருஷ்டாந்தம், வேண்டுமோ – சொல்லவேணுமா, அரக்கர்தம் – இந்த ராக்ஷதருடைய, வருக்கம் – கூட்டம், வேரொடு- அடியோடே, மாண்டில – அழியாதிருக்கின்றன, ஈது – அவர்கள் அழியாதிருக்கிற இதுவே, அலால் – அல்லாமல், மாறு – வேறேகாரணம், வேறுண்டோ – இன்னம் உண்டோ இல்லை — எ-று. ஆண்டகைநீ இருக்குமிடம் தெரிந்தால் ராக்ஷதர்க ளழிந்துபோவார்கள், அவர் தெரியாதிருத்தலால் இவர்கள் சாவாதிருக்கிறார்கள் சாவாதிருக்கிறதே அவர் தெரிந்திலரென்பதற்குக் காரணமென்க. 24

ஐயுறலுனதடையாளமாரியன்
மெய்யுறவுணர்த்தியவுரையும்வேறுள
கையுறுநெல்லியங்கனியிற்காண்டியால்
நெய்யுறுவிளக்கனாய்நினையல்வேறென்றான்.

இ-ள். ஐயுறல் – என்னைச் சந்தேகப்படாதே, உனது அடையாளம்- ராமன்கொடுத்த அடையாளமிருக்கின்றது. ஆரியன் – ஸ்ரீராமன், மெய் உற – நீ நிஜந்தெரிவதாக, உணர்த்திய – சொன்ன, உரையும்-சொற்களும், வேறு – வெவ்வேறாக, உள – உண்டாயிருக்கின்றன, கைஉறு – உன் கையிலேயிருக்கிற, நெல்லியங்கனியில் – நெல்லிப்பழம்போல், காண்டி – பார்ப்பாயாக, நெய்உறு – நெய்உளதான, விளக்கு – திருவிளக்கை, அனாய் – ஒத்ததாயே, வேறு – என்னை வேறாக, நினையல் – எண்ணாதேகொள், என்றான்- என்று சொன்னார் — எ-று. 25

வேறு

என்றவனிறைஞ்சநோக்கியிரக்கமுமுனிவுமெய்தி
நின்றவனிருதனல்லனெறிநின்றுபொறிகளைந்தும்

வென்றவனல்லனுகின்விண்ணவனுகவேண்டும்
நன்றுணர்வுரையன்றூயனவைவயிலன்போலுமென்ன.

இ-ள். என்று அவன் – என்று திருவடி, இறைஞ்சநோக்கி – வணங்கக் கண்டு, இரக்கமும் – தயவும், முனிவும் – கோபமும், எய்தி - உண்டாகி, நின்றவன் – எதிரே நிற்கிறவன், நிருதன் – ராக்ஷதன், அல்லன் – அல்லனே, நெறிநின்று – கிரமப்படியே நடந்து, பொறிகளைந்தும் – ஐந்திந்திரியங்களையும், வென்றவன் – நிக்கிரகித்த முனிவன், அல்லனுகில் - அல்லனுனல், விண்ணவன் – இவன்தேவனே, ஆகவேண்டும் – ஆகியிருத்தலாகும், நன்று உணர்வு – இவனெண்ணமோ நன்றாயிருக்கிறது, உரையன் – சொற்களும் நன்குடையனுயிருக்கிருன், தூயன் - உருவும் பரிசுத்தனுயிருக்கிருன் ஆகையாலே, நவையிலன் – இவன் தோஷரகிதனே, என்ன – ஆமென்று—எ-று. போலும் அசை. 26

அரக்கனேயாகவேருராமரனேயாகவன்றிக்
குரக்கினத்தலைவனேதானுகுகொடுமையாக
இரக்கமேயாகவந்திங்கெம்பிராநாமஞ்சொல்லி
உருக்கினனுணர்வைத்தந்தானுயிரிதினுதவியுண்டோ.

இ-ள். அரக்கனே - இவன் ராக்ஷதனுனுலும், ஆக – ஆகட்டும், வேறூர் – வேறேஒரு, அமரனே – தேவனுனுலும், ஆக - ஆகட்டும், அன்றி- அல்லது, குரக்கு – குரங்குகளுடைய, இனம் – கூட்டத்துக்குள், தலைவனே தான் – சிறந்தவனுனுலும், ஆகுக – ஆகட்டும், கொடுமை – இவன்செய்வது கொடுமையே, ஆக - ஆனுலும் ஆகட்டும், இரக்கமே – இவன்செய்வது என்னிடத்தில் இரக்கமே ஆனுலும், ஆக - ஆகட்டும், வந்து – இந்தச் சமயத்திலேவந்து இங்கு – எம்பிரான் என் ஆண்டவனுடைய, நாமம் – திருநாமத்தை, சொல்லி – உச்சரித்து, உருக்கினன் – உணர்வை என்மனசை உருகப்பண்ணினுன், தந்தான்உயிர் – என் உயிரையுந் தருவானுனுன், இதின்- இதைப்பார்க்கிலும், உதவியுண்டோ – உபகாரஞ்செய்வது வேறுண்டா இல்லை—எ-று. 27

எனநினைத்தெய்தநோக்கியிரங்குமெனுள்ளங்கள்ளம்
மனனகத்துடையராயவஞ்சகர்மாற்றமல்லன்
நினைவுடைச்சொற்கள்கண்ணீர்நிலம்புகப்புலம்பாநின்றுன்
வினவுதற்குரியனென்னுவீரநீயாவனென்ருள்.

இ-ள். எனநினைத்து – என்றுயோசித்து திருவடியை, எய்தநோக்கி- நன்றாகப்பார்த்து, என் – யாதுகாரணத்தால் இவனுக்கு, உள்ளம் – என் மனசு, இரங்கும் - இரக்கங்கொள்கின்றது, கள்ளம் – ஆனுல் திருட்டுத்தனத்தை, மனனகத்து-மனசிலே, உடைவராய - உள்ளவர்களான, வஞ்சகர்- கபடராக்ஷதர்கள், மாற்றம் – வார்த்தையுள்ளவன், அல்லன்-அல்லனே இன்னும், நினைவுடை – நான் எண்ணுதலையுடைய, சொற்கள் – வார்த்தைகள்

சொல்லி சொற்களாலே, கண்ணீர் — இவன் கண்களினீரானது, நிலம்புக- பூமியிலேசோர, புலம்பாநின்றான் — பிரலாபிக்கிறான் ஆகையால், வினவு தற்கு நீயாரென்று கேட்பதற்கு, உரியன் என்னு — தக்கவன்தானென்று, வீர - ஓ வீரனே, நீயாவன் - நீயார், என்றாள் - என்று கேட்டாள் — எ-று. 28

ஆயசொற்றலைமேற்கொண்டவங்கையனன்னைநின்னைத்
தூயவன்பிரிந்தபின்புதேடிய துணைவன்றொல்லைக்
காய்கதிர்ச்செல்வன் மைந்தன் கவிக்குலமவற்றுக்கெல்லாம்
நாயகன் சுக்கிரீவனென்றுளனவையிற்றீர்ந்தான்.

இ-ள். ஆயசொல் — அந்த வார்த்தைகளை, தலைமேற்கொண்ட - சிரசின் மேற்கொண்ட, குவித்த — அங்கையன் — அழகிய கைகளையுடையவராய், அன்னை - தாயே, நின்னை — உன்னை, தூயவன் — பரிசுத்தனான ஸ்ரீராமன், பிரிந்தபின்பு — பிரிந்தபிறகு, தேடிய - உன்னைத் தேடுதற்காக, துணைவன்- கிடைத்த சகாயனானவன், தொல்லை — தொன்றுதொட்டு, காய் — எரிக்கப் பட்ட, கதிர்-கிரணங்களில், செல்வன் — மிக்க சூரியனுடைய, மைந்தன் புத்திரன் — அவனே, கவிக்குலம் — குரங்குக்கூட்டங்களான, அவற்றுக்கெல் லாம் — அவைகளுக்கெல்லாம், நாயகன் சுக்கிரீவன் — அரசன், என்றுஉளன்- என்று| ஒருவனிருக்கிறான், நவையில் — தோஷங்களினின்று, தீர்ந்தான்- நீங்கினவன் — எ-று. 29

மற்றவன் முன்னோனங்காளிராவணன்வலிதன் வாலின்
இற்றுகக்கட்டியெட்டுத் திசையினுமெழுந்துபாய்ந்த
வெற்றியன்றேவர்வேண்டவேலையைவிலங்கன்மத்தில்
சுற்றியநாகந்தேயவமுதெழக்கடைந்ததோளான்.

இ-ள். மற்றவன் — அந்தச்சுக்கிரீவனுக்கு, முன்னோன் - மூத்தவன் ஒருவன் அவனே, அந்நாள் — சென்றகாலத்திலே, இராவணன்வலி — இந்தத் துஷ்டனுடைய சாமர்த்தியமெல்லாம், இற்று உக — அழிந்து சிந்தும்படி, தன்வாலில் - தனதுவாலினாலே, கட்டி — சூழ்ந்து, எட்டுத்திசையினும்- எட்டுத்திக்கிலும், எழுந்து பாய்ந்த — தாவிச்சென்ற, வெற்றியன் — ஜெயத் தையுடையவன், தேவர்வேண்ட - தேவர்கள் கேட்டுக்கொள்ள, வேலையை- திருப்பாற்கடலை, விலங்கல — மந்தரகிரியாகிய, மத்தில் — மத்திலே, சுற்றிய- சூழ்ந்த, நாகம் - பாம்பு, தேய — நைய, அமுது எழ — அமிர்தம் உண்டாகவும், கடைந்த — மதனம்பண்ணின, தோளான் — தோள்களுள்ளவன் — எ-று. 30

அன்னவன்றன்னையுங்கோனம்பொன்றாலாவிவாங்கிப்
பின்னவற்கரசுநல்கித்துணையெனப்பிடித்தானங்கள்
மன்னவன்றனக்குநாயேன் மந்திரத்துள்ளேன் வானின்
நன்னெடுங்காலின் மைந்தனுமமுமநுமனென்றான்.

இ-ள். அன்னவன்தன்னை — அப்படிப்பட்டவாலியை, உங்கோன்- உங்கள் நாயகனானவர், அம்பு ஒன்றால் — ஒருபாணத்தினாலே, ஆவிவாங்கி-

உயிரை அபகரித்து, பின்னவற்கு — அவன் தம்பியான சுக்கிரீவனுக்கு, அரசு நல்கி - வாலியினுடைய ராஜாங்கத்தைக்கொடுத்து, துணையென — உன்னைத் தேடத்துணையென்று, பிடித்தான் — கொண்டான் உங்கோன், நங்கள் — எங்களுக்கு, மன்னவன்தனக்கு — ராஜனான சுக்கிரீவனுக்கு, நாயேன் — அடியேன், மந்திரத்துள்ளேன் — மந்திரித்தொழில் செய்கிறவன், வானின் - ஆகாயத்திலே, நல் - நன்றாக, நெடும் — நீண்டுலாவுகிற, காலின்மைந்தன் - வாயுபுத்திரன், நாமமும்-எனக்குப்பெயரோ, அனுமன் என்றான் — அனுமன் என்று சொன்னார்—எ-று. 31

எழுபதுவெள்ளங்கொண்டவெண்ணனவுலகமெல்லாம்
தழுவிநின்றெடுப்பவேலைதனித்தனிக்கடக்குந்தாள
குழுவினவுங்கோன்செய்யக்குறித்ததுகுறிப்பினுன்னி
வழுவிலசெய்தற்கொத்தவானரம்வானினீண்ட.

இ-ள். எழுபதுவெள்ளம் — என்று, கொண்ட — சொல்லுகிற, எண்ணன — கணக்குள்ளவைகள், உலகமெல்லாம் — எல்லாவுலகங்களையும். தழுவிநின்று — சேரக்கொண்டு, எடுப்ப — தூக்கத்தக்கவைகள், வேலை — கடலை, தனித்தனி — ஒவ்வொன்றுமே, கடக்கும் — தாண்டிவருகிற, தாள - கால்களுள்ளவைகள், குழுவின — கூடியிருக்கின்றன, உங்கோன் — உங்கள் நாயகனவர், செய்யக்குறித்தது — செய்ய எண்ணினதை, குறிப்பின் உன்னி - தங்கள் மனத்திலேகொண்டு, வழு இல — தவறாமல், செய்தற்கு — செய்கிறதற்கு, ஒத்த — தகுந்த, வானரம் — குரங்குகள், வானில் — ஆகாயத்திலும், நீண்ட — தேடப்போயிருக்கின்றன—எ-று. வானரம் வானிற்பெரியன என ஆம் கடலிற்பெரிது. 32

துப்புறுபரவையேழுஞ்சூழ்ந்தபாரேழுமாழ்ந்த
ஒப்புறுநாகர்நாடுமும்பரினிம்பர்காறும்
இப்புறந்தேடிநின்னையெதிர்ந்திலவென்னினண்டத்
தப்புறம்போயுந்தேடவவதியினமைந்துபோன.

இ-ள். துப்புறு — அலைகளைவிசுகிற, பரவை யேழும் — ஏழு கடலும், சூழ்ந்த — அக்கடல் சூழ்ந்துள்ள, பார் ஏழும் — ஏழுதீவும், ஆழ்ந்த — ஆழத்திலிருக்கிற, ஒப்புறு — தேவருலகத்தை ஒப்பான, நாகர்நாடும் — நாகலோகமும், உம்பரின் — மேலுலகம்போலவே, இம்பர் காறும் — கீழே இந்த உலகளவும், இப்புறம் — இவ்விடங்களெல்லாம், தேடி நின்னை — தேடி உம்மை, எதிர்ந்தில — காண இல்லை, என்னில் — ஆனால், அண்டத்து அப்புறம் — இந்த அண்டத்துக்கப்பாலும், போயும் — போயாகிலும், தேட — தேடுதற்கு, அவதியின் — இவ்வளவுநாள் என்று, அமைந்து — கெடுச்செய்துகொண்டு, போன - போயிருக்கின்றன—எ-று. 33

புன்றொழிலரக்கன்கொண்டுபோந்தநாள்பொதிந்ததூசின்
குன்றினெம்மருங்கினிட்டவணிகலக்குறியினாலே

வென்றியானடியன் றன்னை வேறுகொண்டிருந்து கூறித்
தென்றிசைசேறியென்றானவனருள்சிதைவதாமோ.

இ-ள். புன் தொழில் - இழிதொழிலையுடைய, அரக்கன் - இந்திராக்ஷதன், கொண்டுபோந்நாள் - உம்மைக்கொண்டுவரும்போது, பொதிந்த தூசின் - கிழித்தவஸ்திரத்திலே முடிந்துள்ளவைகள். எம் குன்றின்மருங்கில் - எங்கள் மலையினிடத்திலே, இட்ட - நீர்விழவிட்ட, அணிகலம் - நீர் அணிந்திருந்த ஆபரணங்களின், குறியினாலே - அடையாளத்தினாலே நான் காட்டினதினாலே, வென்றியான் - அந்த ஜெயராமன், அடியன்றன்னை - அடியேனை, வேறுகொண்டு - தனியேகூட்டிக்கொண்டு, இருந்து - போயிருந்து ஓரிடத்திருந்து, கூறி - அடையாளங்களுஞ் சொல்லி, தென்றிசை - தெற்குத்திசைக்கு, சேறியென்றான் - போ என்றார், அவன் அருள் - அவரேவினது, சிதைவதாமோ - பழுதுபடுமோ, உம்மைநான் கண்டதினாலே பழுதில்லை—எ-று. 34

கொற்றவற்காண்டுக்காட்டிக்கொடுத்தபோதடுத்ததன்மை
பெற்றியினுணர்தற்பாற்றோவுயிர்நிலைபிறிதுமுண்டோ
இற்றைநாளளவுமன்னாவன்றுநீயிழித்துநீத்த
மற்றைநல்லணிகள்காணுன் மங்கலங்காத்தமன்றே.

இ-ள். கொற்றவற்கு - ஸ்ரீராமனுக்கு, ஆண்டு - அங்கே உமதென்று தெரிய, காட்டி - முன்னே பார்க்கச்செய்து, கொடுத்தபின்பு, அடுத்த தன்மை - அவருக்குண்டானபடியை, பெற்றியின் - நான் சொல்லுகிறதினாலே, உணர்தற்பாற்றோ - அறிந்துகொள்ளக்கூடுமா கண்டேதெரியவேணும், உயிர்நிலை - ஜீவஸ்திதி, பிறிதும் - அந்த ஆபரணத்தையல்லாமல் வேறேயும், உண்டோ - உளதாமா, இற்றைநாள் அளவும் - இன்றளவும், அன்னா - தாயே, நீ அன்று - நீர் பிரிந்துவருகிறபோது, இழித்து - இவைகள் வேண்டாவென்று, நீத்த - எறிந்து விழவிட்ட, மற்றை - அந்த, நல் அணிகள் - நல்ல ஆபரணங்களே, உன்மங்கலம் - நீர் சுமங்கலியாகவே யிருக்கும்படி, காத்த - இராமனுயிரை ரக்ஷித்துக்கொண்டிருக்கின்றன, ஆபரணங்காணுக்காலிறந்துபடுவரென்கிறார் திருவடி—எ-று. காண்முன்னிலையசை மன்றே அசை. 35

ஆயவன்றன்மைநிற்கவங்கதன்வாலிமைந்தன்
ஏயவன்றென்பால்வெள்ளமிரண்டினோடெழுந்துசேனை
மேயினபடர்ந்துதீரவனையவன்விடுத்தானென்னைப்
பாய்புனலிலங்கைமூதூர்க்கென்றனன்பழியைவென்றான்.

இ-ள். ஆயவன் - அந்தராமனுடைய, தன்மை - காரியம் அப்படி, நிற்க - இருக்க இனி, வாலிமைந்த னங்கதன் - வாலிபுத்திரனான அங்கதனும், ஏயவன் - ராமனால் அனுப்பப்பட்டவனே, தென்பால் - தென்றிசைக்கு, வெள்ளமிரண்டினோடு - இரண்டு வெள்ளஞ்சேனையுடனே, எழுந்து - கூடிவந்து,

சேனை - அச்சேனைகள், மேயினபடர்ந்து — பரவியெங்கும் போயிருக்கின்றன, தீர - அவைகள் வராதிருக்கச்செய்தே, அனையவன் — அந்த அங்கதன், என்னைவிடுத்தான் — என்னை அனுப்பினன், பாய்புனல் — கடல் நீர்மோதுவதான, இலங்கைமூதூர்க்கு — இந்த இலங்காபுரிக்கு விடுத்தானென்னை, என்றனன் — என்றுசொன்னர், பழியை-பிராட்டிக்குண் ான பழிப்பை, வென்ருன் — போக்கினர் போக்கின திருவடி—எ-று. 36

எய்தவனுரைத்தலோடுமெழுந்துபேருவகையேற
வெய்துறலொடுங்குமேனிவானுறவிம்மி யாங்கி
உய்தல்வந்துற்றதோவென் றருவிநீரொழுகண்ணாள்
ஐயசொலையமேனியெப்படிக்கறிதியென்ருள்.

இ-ள். எய்து — தூதாகவந்த, அவன் - அந்த அனுமார், உரைத்தலோடும் — சொன்ன அளவில், எழுந்து — நெஞ்சிலேதோற்றி, பேர் உவகை-பெருங்களிப்பு, ஏற — பின்னுமேன்மேலாக, வெய்துறல் — துக்கித்திருத்தல், ஒடுங்கி — போய், மேனி — சரீரம், வானுற — பெரிதாக, விம்மி ஓங்கி — பெருத்து நீண்டு, உய்தல் — நான் பிழைக்கும்படியான, வந்துற்றதோ — காரிய சித்தியாயிற்ருே, என்று - என்பதாய், அருவி — மலையருவிபோல், நீரொழுகு — நீர் பெருகிவருகிற, கண்ணாள் — கண்களையுடைய பிராட்டி, ஐய - ஐயனே, ஐயன் — அந்த ஸ்ரீராமனுடைய, மேனி — திருமேனியை, எப்படிக்கு — எந்த விதமாக எவ்வுவமை சொல்ல, அறிதி — நீதெரிந்தாய், சொல் — சொல்லக்கடவை என்ருள்—எ-று. 37

படியெடுத்துரைத்துக்காட்டும்படித்தன் றுயடிவம்பண்பின்
முடிவுளவுவமமெல்லாமிலக்கணமொழியுமுன்னர்த்
துடியிடையடையாளத்தின்ருெடாவைதொடர்தியென்ற
அடிமுதன்முடியின்காறுமறிவுறவநுமன்சொல்வான்.

இ-ள். படிவம் — அவன் திருமேனியோ, படியெடுத்து — ஒப்புள்ளவைகளாலே, உரைத்துக்காட்டும் — சொல்லித்தெரிவிக்கிற, படித்து அன்று — தன்மையுள்ளதல்ல, பண்பின் — குணங்களாலே, பண்புந்தொழிலும் — பயனுமென்பவைகளாலே, முடிவு உள — முடிவுபெற்றிருக்கிற சரியாயிருக்கிற, உவமமெல்லாம் — எல்லா உவமைகளுக்குமுள்ள, இலக்கணம் — சிறப்பியல்புகளை, மொழியுமுன்னர் — நான்சொல்லுதற்குமுன்னே, துடி இடை — உடுக்கைபோலும் இடையையுடையாய், அடையாளத்தின் — உனது ஞாபகக்குறியினலே, தொடர் - காணத்தக்க, அவை — அந்த உபமேயங்களை அந்தந்த அவயவங்களை, தொடர்தியென்ற - கண்டுகொள்ளென்று, அடிமுதல் — பாதாதி, முடியின்காறும் — கேச அளவும், அறிவுற-பிராட்டிதெரிவதாக, அனுமன்சொல்வான் — திருவடிசொல்லுகிருர்—எ-று. 38

வேறு

சேயிதழ்த்தாமரையென் றுசேணுளோர்
ஏயினாதன் றுணையெளியதில்லையால்

நாயகன்றிருவடிகுறித்துநாட்டுறின்
பாய்திரைப்பவளமுங்குவளைப்பண்பினும்.

இ-ள். சேய் இதழ் – சிவந்த இதழ்களையுடைய, தாமரையென்று – தாமரை மலர்சரியென்று, சேணுளோர் – முன்னுள்ளபெரியோர்கள், எயினர்-பாதங்களுக் குவமையாக நியமித்தார்கள், அதன்துணை - அதனளவு அம்மலரளவு, எளியது – சுலபமாய்க்கிடைப்பது, இல்லை – வேறொன்றுமில்லை, ஆல்-ஆகையால் சேணுளோர் கண்ணுக்கெளிதாய்க் கிடைத்தமையா லம்மலரை நியமித்தாரென்க, நாயகன் – உனது கணவனுடைய, திருவடி – திருவடியையே, குறித்து – உத்தேசித்து, நாட்டுறில் – லக்ஷணஞ்சொல்லலானால், பாய் திரை - பரவுகிற அலைமேலேமிதக்கிற, பவளமும் – பவளமுங்கூட, குவளைப்பண்பின் – நீலோற்பலம்போல், ஆம் – கரியதென்று சொல்லலாகும், எனவே - தாமரைமலரும் உவமையாகாது பவளமும் திருவடியின்சிவப்புக்கு நேர் நில்லாது என்க—எ-று. 39

தளங்கெழுகற்பகமுகிழுந்தண்டுறை
இளங்கொடிப்பவளமுங்கிடக்கவென்னவை
துளங்கொடிவிரற்கெதிருதிக்குஞ்சூரியன்
இளங்கதிரொக்கினுமொக்குமேந்திழாய்.

இ-ள். தளம்கெழு - இதழ்களோடுகூடின, கற்பகமுகிழும் — கற்பக அரும்பும், கண்துறை – குளிர்ந்த நீர்த்துறையிலே கிடக்கிற, இளங்கொடி-இளமையான கொடிரூபமுள்ள, பவளமும் – பவளமும் சேணுளோர் நியமித்ததானாலும், கிடக்க - இருக்கட்டும், என் — யாதுபயனும், அவை — அவ்விரண்டும், துளக்கு – விளங்குவதான, ஒளி – ஒளியையுடைய, விரற்கு-கால்விரல்களுக்கு நிறத்தால், எதிர் – நேரே, உதிக்கும் — உதயமாகிற சூரியன்-சூரியனுடைய, இளங்கதிர் – செஞ்சோதியானது, ஒக்கினும் ...படி ஒப்பானாலும், ஒக்கும் – ஆகும், ஏந்திழாய் – முன்னே ... ... களங்களையெம்மிடம் விழவிட்டதாயே—எ-று. கற்பகப்பூ அரும்பும் கொடிபவளமும் கால்விரல்களுக்குவமை. 40

சிறியவும்பெரியவுமாகித்திங்களோ
மறுவிலபத்துளவல்லமற்றினி
எறிசுடர்வயிரமோதிரட்சியெய்தில
அறிகிலனுகிர்க்கியானுவமமாவன.

இ-ள். சிறியவும் - சின்னவடிவும், பெரியவும் - பெரியவடிவும், ஆகி-உள்ளதாய், திங்களோ – சந்திரனோ, மறு இல — களங்கரகிதனாய், பத்து-பத்துச்சந்திரன், உள அல்ல – உள்ளவைகளல்ல, மற்று – வேறே, இனி-மேல், எறிசுடர் – ஒளிவீசுகின்ற, வயிரமோ – வயிரரத்நமோ என்றால், திரட்சி – அதுவும் பத்துக்கூடியிருத்தலை, எய்தில – பொருந்தினதில்லை ஆகலால், உகிர்க்கு – கால்விரலினகங்களுக்கு, உவமமாவன — சரியாயிருக்கும்

பொருள்களை, யான் — நான், அறிகிலேன் — சேனுளோர் நியமித்த சந்திரன் வயிரமென்னு மிவ்விரண்டையன்றி வேறே தெரிந்திலேன்—எ-று. 41

பொருந்திலநிலனொடுபோந்துகாணிடை
வருந்தினவெனினது நூலைமாறுகொண்
டிருந்ததுநின்றதுபுவனம்யாவையும்
ஒருங்குடன்புணர்வஃதுரைக்கற்பாலதோ.

இ-ள். நிலனொடு — தமக்குரிய ஊரிலே, பொருந்தில — இராதனவாய்க் கீழே படியாதவைகளாயிருந்து பின்பு, கானிடைபோந்து — காடுகளிலே நடந்து, வருந்தின — வருத்தமுற்றிருக்கின்றன, எனில் - என்று சொன்னாலும், அது — அவர் புறவடி, நூலை — நூலெழுது புத்தகத்தை, மாறுகொண்டு - நேர்கொண்டு, இருந்தது — ஆசனத்தின்மேலிருக்கலானது, நின்றது — காடெல்லாம் நடவாநின்றது, புவனம் யாவையும் - உலகமெல்லாம், ஒருங்கு உடன் - ஒருசேரமுழுதுந் தன்னொடு, புணர்வு — சேர்க்கையுள்ளது, அஃது — அப்படிப்பட்டதான புறவடி, உரைக்கற்பாலதோ — ஒருவராலே சொல்லும் பகுதியுள்ளதோ அன்று—எ-று. வாமனுவதாரத்தைக் குறித்துச் சொன்னாராகவுமாம். புவனம்யாவையும் — காடுமேடுகளெல்லாம், புணர்வு - சேர்க்கையுள்ளது, எல்லாவுலகமும் - வணங்கத்தக்கது என்க. 42

தாங்கணைப்பணிலமும்வளையுந்தாங்கரா
வீங்கணைப்பள்ளியானெனினும்வேறினிப்
பூங்கணைக்காற்கொருபரிசுதான்பொரும்
ஆங்கணைக்காவமோவாவதன்னையே.

இ-ள். அணை — கைகளே அணையாக, தாங்கு — தாங்கலான, பணிலமும் சங்கும், வளையும் — சக்கரமும், தாங்கு — தன்னைத் தாங்குவதாய், அரா-ஆதிசேடனாகிய, வீங்கு — காற்றையுண்டுபெருக்கிற, அணை - பஞ்சுமெத்தையான, பள்ளியான் — படுக்கையுமுள்ள திருமாலே, எனினும் — உவமை நியமித்தானாலும், வேறு இனி - இனி உவமைக்கு வேறான, பூங்கணைக்காற்கு-அழகிய கணைக்காலுக்கு, ஒரு பரிசுதான் — ஒருபடிதான், பொரும் — ஒப்பாகும், ஆவமோ — அம்புக் கூடென்றாலோ, ஆம் கணைக்கு - அம்புகள்வைக்க இடமாம், ஆவது — கணைக்காலுக் கொப்பாகுவது ஆவமோ அம்புக்கூடோ, அன்னையே — தாயே—எ-று. உவமை நியமிக்கவல்ல சேனுளோரில் திருமாலும் ஒருவரானாலும், ராமன் பூங்கணைக்காலுக்கு முழுதும் உவமையாகாது, அம்புக்கூடு ஒருபரிசுதான் பொருமென்க எனினுமென்றதிலும்மை திருமால் நியமித்தது பிறழாதென்று குறிக்கிறது. 43

அறங்கிளர்பறவையினரசனொடெழிற்
பிறங்கெருத்தனையனபெயரும்பெற்றுடை
மறங்கிளர்மதகரிக்கரமுநாணின
குறங்கினுக்குவமையிவ்வுலகிற்கூடுமோ.

இ-ள். அறங்கிளர் — தருமவடிவாக விளங்குகிற, பறவையின் — பக்ஷிக ளுக்கு, அரசன் — ராஜனுன கருடனுடைய, ஆடு - திருமால் குறங்குகளிரு தசைவதான, எழில் — அழகு, பிறங்கு விளங்குகின்ற, எருத்து — கழுத்து நிறத்தை, அனையன — ஒத்த அனைய என்னும் பெயரெச்சக்குறிப்பு அன் சாரியை பெற்றுநின்றது, பெயரும் — வெள்ளையென்கிற பெயரையும், பெ ற்று — கொண்டு, உடை — தானுடைய, மறம் — வீரத்துடன், கிளர் — விளங் குகிற, மதகரிக்கரமும் — மதயானையினது துதிக்கையும், நாணினது - நாணித் தொங்குதலாயிருக்கிறது, குரங்கினுக்கு — அப்படிப்பட்ட தொடைகளுக்கு உவமை — நேரானபொருள், இவ்வுலகில் - இந்தவுலகத்திலே, கூடுமோ. இனித்தானுண்டாகுமா இல்லை—எ-று. கருடன் பிடர்போல் தான்முழு தும் வெளுத்ததானாலும் திருமால் தொடைகள் தன் கழுத்திலே பொருந் தப் பொருமையால் கைசோர்ந்து நாணியது என்க. நாணினது என்பது- நாணினவெனக் கடைக்குறையாயிற்று, காமும் நாணே யுடையதாயிற்று என்க தருமவடிவென்றாலும் வேதவடிவென்றாலும் ஒக்கும். 44

வலஞ்சுழித்தொழுகுநீர்வழங்குகங்கையின்
பொலஞ்சுழியென்றலும்புன்மைபூவொடு
நிலஞ்சுழித்தெழுவணியுந்திநேரினி
இலஞ்சியும்போலும்வேறுவமையாண்டரோ.

இ-ள். வலம் — வலப்புறமாக பலங்கொண்டு, சுழித்து — சுழலுதலாய், ஒழுகு — ஓடுவதான, நீர் — ஜலரூபமாக, வழங்கு — சொல்லப்படுகிற, கங்கை யின் — கங்காநதியினது, பொலம் — அழகிதான, சுழி — நீர்ச்சுழிபோலும், என்றலும் — என்றுசொல்லுகிறதும், புன்மை — அல்பவுவமையே, பூவொடு- தாமரைப்பூவுடன், நிலம் — உலகமும், சுழித்துகடல் — சூழ்வதாய், எழும்- உண்டாகத்தருகிற, மணி — அழகிதான, உந்தி — திருவுந்தியானத்தை, நேர் இனி — ஒப்புவதாக, இலஞ்சியும் - மகிழம்பூவும், போலும் — நேர்நிற்கும், வேறு - உவமை, இவ்விரண்டையன்றி வேறே ஒப்பான பொருள்கள், யாண்டு — எந்தநூலிலே சொல்லுகின்றன அது எந்த உலகத்திலே உண்டு.

பொருவருமரகதப்பொலன்கொண்மால்வரை
வெருவுறவிரிந்துயர்விலங்கலாகத்தைப்
பிரிவுறநோற்றிலளென்னிற்பின்னையத்
திருவினிற்றிருவுளார்யாவர்தெய்வமே.

இ-ள். பொரு அரு — ஒப்பரிதான, மாகதம் — மரகதமென்னும், பொ லங்கொள் — அழகுகொண்ட, மால்வரை — பெரியமலையும், வெருவுற — அஞ் சுவதாக, விரிந்து — அகன்று, உயர் — வளர்வதான, விலங்கல் — இதுவொரு மலையென்னலாகிய, ஆகத்தை — மார்பை, பிரிவு உற - பிரிகிறதில்லாதிருக்க, நோற்றிலள் — தவஞ்செய்திலள், என்னில் — என்றால், பின்னை — இனி, அத் திருவினில் — அந்த லட்சுமியைப்பார்க்கிலும், திருவுளார் - சிறந்த அழகுள்ள

பெண்கள், யாவர் — யாரிருக்கிறார்கள், தெய்வமே — எனக்குக் குலதெய்வ மான தாயே, அழகிற் சிறந்த திருவும் க்ஷணகாலமேனும் பிரிவுறநோற்றி லள் — எனப் பாடங்கொண்டு பிரியப்பொருளென்க, அகலகில்லே னிறையு மென்றலர் மேன்மங்கை யுறைமார்பென்பது காண்க—எ-று. நோற்றிலை யாயில் நீ பிரியாய் என்பது குறிப்பு. 46

நீடுறுகீட்டிசைநின்றயானையின்
கோடுறுகரமெனச்சிறிதுகூறலாத்
தோடுறுமலரெனச்சுரும்புசுற்றறாத்
றாடொறுதடக்கைவேறுவமைசாலுமே.

இ-ள். நீடுறு — நெடுங்காலமுமுளதான, கீட்டிசை — கிழக்குத்திக்கிலே, நின்ற — நிற்கிற, யானையின் — ஐராவதத்தினது, கோடு உறு — கொம்புகளி னடுவே யிருக்கிற, கரமென — துதிக்கைபோலுமென்று, சிறிதும் — கொஞ்ச மேனும், கூறலா — தொடைகளுக்கொப்புச் சொல்லப்படாதிருக்கச்செய்தே, தோடு உறு — இதழ்கள் பொருந்தின, மலரென — தாமரைமலரென் றெண்ணி, சுரும்பு — வண்டுகள், சுற்று — மொய்க்கிறது, அறா — நீங்காதிருக் கிற, தாள் — முழந்தாளுக்குக்கீழும், தொடு — நீண்டிருப்பதான, தடக்கை— நீண்டகைகள், வேறு உவமை — தமக்குவேறோ ரொப்புளதாக, சாலுமே— சாலா அமையுமோ—எ-று. கூறலார் எனப்பாடங்கொண்டு குறங்கென் பதைத் தகுதிபற்றி வருவித்துக்கொள்க சிறிது கூறலாமென்று கைக்கே உவமையாக்குவது பொருந்தாமையுணர்க. 47

பச்சிலைத்தாமரைபகல்கண்டாலெனக்
கைச்செறிமுகிழுகிர்கனகனென்பவன்
வச்சிரயாக்கையைவகிர்ந்தவன்றொழில்
நிச்சயமென்றெனிலையநீங்குமே.

இ-ள். பச்சிலை — பசிய இலைகளையுடைய, தாமரை — தாமரைமலரை, பகல் — பகற்காலத்திலே, கண்டால் என — கண்டாற்போன்ற, கை — அங்கை யிலே, செறி — நெருங்கின, முகிழ் — அரும்புபோன்ற குவிந்த, உகிர் — நகங் களுக்கு, கனகனென்பவன் — இரணியனென்னுமவனுடைய, வச்சிரம்- வயிரமலைபோன்ற, யாக்கையை — மார்பை, வகிர்ந்த — கிழித்த, வன்தொழில்- கொடுஞ்செய்கையே, நிச்சயம் — எப்பொழுதுமுள்ளது, அன்றெனில் — அச் செய்கை உள்ளதல்லதென்றால் என்பவருக்கு, ஐயம் — சந்தேகம், நீங்குமோ- தீருமா தீராது, நிச்சயமென்பாருக்கு தூணிலாம் வாளரியே ராமகோளரி யென்று சந்தேகந்தீரும் என்க—எ-று. 48

திரண்டிலவொளியிலதிருவின்சேர்வில
முரண்டருமேருவின்முரியமூரிநாண்
புரண்டிலபுகழிலபொருப்பென்றோன் றுபோன்
றிரண்டிலபுயங்களுக்குவமமேற்குமோ.

இ-ள். திரண்டில - ராமன் தோள்கள்போல் உலகில் திரண்டபொருள்களொன்றுமில்லை, ஒளி இல - ஒளியுள்ளவைகளுமில்லை, திருவின் சேர்வு இல - வீரலட்சுமி சம்பந்தமுள்ளவைகளுமில்லை, முரண் - பகைவர்மேற் பலத்தை, தரு - கொடுப்பதான, மேரு - மேருமலையாகிய, வில்முரிய - வில்லொடிய, மூரிநாண் - பெரிய நாரியும், புரண்டில - புரளுதற்கிடமாகிறதுமில்லை, புகழ் இல - புகழுள்ளவைகளுமில்லை, பொருப்பென்று - மலையென்று, ஒன்றுபோன்று - ஒன்றையொத்ததாய், இரண்டில - மற்றொருமலையுமில்லை சரியான இரண்டு மலைகளில்லை ஆனல், புயங்களுக்கு - தோள்களுக்கு, உவமம் - ஒப்பாம் பொருள்கள், ஏற்குமோ - உண்டென்னக் கூடுமா—எ-று. 49

கடற்படுபணிலமுங்கன்னிப்பூகமும்
மிடற்றினுக்குவமையென்றுரைக்குமெல்லியோர்
உடற்படவொண்ணுமோவுரகப்பள்ளியான்
இடத்துறைசங்கமொன்றிருக்கவெங்களால்.

இ-ள். கடல்படு - கடலிலே உண்டாகுகிற, பணிலமும் - சங்கும், கன்னி - இளமையுள்ள, பூகமும் - கமுகும், மிடற்றினுக்கு - கண்டத்துக்கு, உவமையென்று - ஒப்பாமென்று, உரைக்கும் - சொல்லுகிற, மேலையோர் முன்னுள்ள பெரியோர்களை, உரகப்பள்ளியான் - பாம்பணை அமலன், இடத்து - இடப்புறத்திலே, உறை - தங்குகிற, சங்கமொன்று இருக்க ஒரு பாஞ்சசன்னியமென்னுஞ் சங்கொன்றிருக்கச்செய்தே, எங்களால் சொன்னபடி சொல்கிற எங்களாலே, உடற்பட ஒண்ணுமோ சம்மதியாகக் கூடுமோ சம்மதியாகப்படாது—எ-று. உடன்படாமையாலவர்களை மெல்லியோரென்றிகழ்ந்ததாகப் பாடஞ்சொல்லவுமாம். 50

அண்ணறன்றிருமுகங்கமலமாமெனிற்
கண்ணினுக்குவமைவேறியாதுகாட்டுகேன்
தண்மதியாமெனவுரைக்கத்தக்கதோ
வெண்மதிபொலிந்ததுமெலிந்துதேயுமால்.

இ-ள். அண்ணல்தன் - ஸ்ரீராமனது, திருமுகம் - திருமுகத்தை, கமலம் - தாமரைமலர், ஆமெனில் - நிகராமென்றால், கண்ணினுக்கு - அவர் கண்களுக்கு, உவமை வேறு - வேறொரொப்புள்ளதாக, யாது - எதை, காட்டுகேன் - தெரியச்சொல்லுவேன், தண் மதி - குளிர்ந்த சந்திரன், ஆமென - நிகராமென்று, உரைக்கத்தக்கதோ - சொல்லத்தகுமா தகாது, வெண்மதி - அந்த வெள்ளைச்சந்திரன், பொலிந்ததும் - நிறைந்த பூரணமாகியும், மெலிந்து - நேர்கில்லாதிளைத்து, தேயும் - குறைவுபடும்—எ-று.

வேறு

ஆரமுமகிலுநீவியகன்றதோளமலன்செவ்வாய்
நாரமுண்டலர்ந்தசெங்கேழ்நளினமென்றுரைக்கநாணும்

ஈரமுண்டமுதமூறுமின்னுரையியம்பாதேனும்
மூரல்வெண்முறுவல்பூவாப்பவளமோமொழிபற்பாற்றே.

இ-ள். ஆரமும் — செஞ்சந்தனமும், அகிலும் — அகிற்சந்தனமும், நீவி-பூசுதலாய், அகன்ற — விசாலித்த, தோள் — புஜங்களையுடைய, அமலன்-யாதொரு பரிசுத்தரான அவருடைய, செவ்வாய் — சிவந்தவாய்க்குநிகர், நாரம்உண்டு — நீரைக்குடித்து, அலர்ந்த — விகசித்திருக்கிற, செம் கேழ்-சிவந்த நிறத்தையுடையதான, நளினமென்று — தாமரை மலரென்று, உரைக்க — சொல்லுதலாலே, நாணும் — அம்மலர்தான் நேர்நில்லாமையால் தலைசாய்ந்துபோவதாம், ஈரம்உண்டு — குளிர்ச்சியைக்கொண்டு, அமுதம் ஊறும் — சுவைசுரப்பதான, இன் உரை — இனியசொற்களை, இயம்பாது-அம்மலர்பேசுதலில்லை, எனும் — ஆனாலும், மூரல் — பல்வரிசையும், வெண் முறுவல் - வெள்ளைநகையும், பூவா — அம்மலரிலுளவாகுதலில்லை தாமரை மலரப்படியாம்போது, பவளமோ — பவளமா, மொழியற்பாற்று — சொல் லும் பான்மையது, பவளம் எவ்வளவும் நிகராவதன்று—எ-று. 52

வேறு

முத்தங்கொல்லோமுழுநிலவின்முறியின்றிறனோமுறையமுதச்
சொத்தின்றுள்ளிவெள்ளியினந்தொடுத்தகொல்லோதுறையறத்தி
வித்துமுளைத்தவங்குரங்கொல்வேறேசிலகொன்மெய்முகிழ்த்த[ன்
தொத்தின்றொகைகொல்யாதென்று பல்லுக்குவமைசொல்லுகேன்.

இ-ள். முத்தங்கொல்லோ — முத்துகளோ, முழுநிலவின் — பூரணச் சந்திரனது, முறியின்திறனோ — துண்டுகளின்வகையோ, முறை — வரிசையாக, அமுதச்சொத்தின் — அமுதமாகிய பொருளினது, துள்ளிவெள்ளி — வெள்ளைத்துளிகளை, இனம் - ஒரேசரியாக, தொடுத்தகொல்லோ - கோத்திருக்கின்றதோ, துறை — பலவகையாகச் செய்யப்படுகிற, அறத்தின்வித்து-புண்ணியத்தின் விதையினின்று, முளைத்த - தோன்றின, அங்குரங்கொல்-முளைகளோ, வேறே — இன்னம்வேறான, சிலகொல் — சிலமுல்லைபரும்புகளோ, மெய் — சத்தியமாகிய மரத்திலே, முகிழ்த்த — அரும்பின, தொத்தின் — பூவரும்புகளின், தொகைகொல் — தொகுப்புகளோ, யாதென்று — இன்னம் ஏதென்று, பல்லுக்கு — அவர்பல்வரிசைக்கு, உவமை - ஒப்பு, சொல்லுகேன்-சொல்லக்கடவேன், அறமும் மெய்யும் பரிசுத்தமுள்ளவை யாதலால் வெண் ணிறமென்பதுலகவழக்கு தொத்து அரும்புக்காகலாகுபெயர்—எ-று. 53

எள்ளாநிலத்திந்திரநீலத்தெழுந்தகொழுந்துமரகதத்தின்
விள்ளாமுழுமாநிழற்பிழம்புமேவண்டேவண்டுமேனியதோ
தள்ளாவோதிகோபத்தைக்கவ்வவந்துசார்ந்ததுவும்
கொள்ளாவள்ளறிருமூக்கிற்குவமைபின்னுங்குணிப்பாமோ.

இ-ள். எள்ளா — இகழ்தலில்லாத, நிலத்து — நன்னிலத்திலே தோன்றின, இந்திர நீலத்து — இந்திர நீல ரத்நத்திலே, எழுந்த — உண்டான, கொ

ழுந்தும் - சுடரும், மரகதத்தின் — மரகதமலையினது, விள்ளா — நீங்காத, முழுமா - முழுதும்பெருமைகொண்ட, நிழற்பிழம்பும்-ஜோதியினது, திரள்வும் என்றால் இந்திர நீலக்கொழுந்தும் மரகதச்சோதியும், வேண்டவேண்டும் — விரும்பவேண்டுவதான, மேனியதோ — நிறமுள்ளதுதானோ மூக்கு, தள்ளா - விடாமல், ஓதி - ஓணானது, கோபத்தை — இதழாகிய இந்திர கோபத்தை, கவ்வ — பிடிக்க, வந்துசார்ந்ததுவும் - நீண்டுவந்து நிமிர்ந்திருக்கிறதென்றாலும், வள்ளல் — ஸ்ரீராமனுடைய, திருமூக்கிற்கு — திருநாசிகைக்கு, கொள்ளா — நிகர்போதாது, உவமை — வேறே ஒப்பாம்பொருளை, பின்னும் — இன்னமும்சொல்ல, குணிப்பு ஆமோ - அளவுள்ளதுண்டா—எ-று.

பணிக்கச்சுரத்துக்கரன்முதலோர்கவந்தப்படையும்பல்பேயும்
தனிக்கைச்சிலையும்வானவருமுனிவர்குழுவுந்தனிறயனும்
இனிக்கட்டழிந்ததரக்கர்குலமென்னுஞ்சுருதியீரிரண்டும்
குணிக்கக்குணித்தபுருவத்துக்குவமைநீயேகோடியால்.

இ-ள். சுரத்து - காட்டிலே, கரன்முதலோர் — கரதூஷணாதிகள், பணிக்க - நடுநடுங்கவும், கவந்தப்படையும் — அவ்வரக்கர்களுடைய தலையற்றசேனைகளும், பல்பேயும் - அநேகம்பசாசுகளும், தனி - ஒப்பில்லாத, கைச்சிலையும் — கையிலுள்ளவில்லும், வானவரும் — தேவர்களும், முனிவர்குழுவும் - முனிவர் கூட்டங்களும், தனி - ஒப்பில்லாத, அறனும் — தருமமும், இனி - இனிமேல், கட்டழிந்தது — நிலைகுலைந்தது, அரக்கர்குலம் — ராக்ஷத கூட்டம், என்னும் - என்பதான, சுருதி யீரிரண்டும் — நான்குவேதமும், குணிக்க — கூத்தாடவும், குணித்த — வளைத்த, புருவத்துக்குஉவமை - ஒப்பு, நீயோ கோடி — நீயே தெரிந்துகொள்—எ-று. 55

வருநாட்டோன்றுதனிமருவும்வளர்வுந்தேய்வும்வாளரவம்
ஒருநாட்கவ்வுமுறுகோளுமிறப்பும்பிறப்புமொழிவுற்றால்
இருநாற்பகலினிலங்குமதியலங்கலிருளினெழினிழற்கீழ்ப்
பெருநாணிற்பினவனெற்றிப்பெற்றிற்றாகப்பெறுமன்றே.

இ-ள். வருநாள் — தானுதையமாகும்போதும், தோன்று-தெரிவதான, தனிமறுவும் — ஒருகளங்கமும், வளர்வும் — வளருகிறதும், தேய்வும் — தேய்கிறதும், வாள் அரவம்-ரத்நத்தாலே ஒளியுள்ளபாம்பு, ஒருநாள்-ஒருபோது, கவ்வும் — பற்றுதலாகிற, உறுகோளும் — துன்பமும், இறப்பும் — அஸ்தமிக்கிறதும், பிறப்பும் — உதயமாகிறதும், ஒழிவுற்றால் — தீர்ந்தால், இருநாற்பகலின் — எட்டா நாளிலே, இலங்குமதி — விளங்குகிறசந்திரன் இன்னமொரு, அலங்கல் - மாலையணிந்த குஞ்சியாகிய, இருளின் - இருளினது, எழில்-அழகுள்ள, நிழற்கீழ் — நிழலின்கீழே, பெருநாள் - நெடுங்காலமும், நிற்பின்-நிலைநிற்கப்பெற்றால், அவன் — அந்த ராமனது, நெற்றி — நெற்றியின், பெற்றிற்றாக - தன்மையுள்ளதாக, பெறும் — கிடைக்கும்—எ-று. ஒழிவுற்று நிற்பிக. இடுனெக் கூட் 56

நீண்டுகுழன்றுநெய்த்திருண்டுநெறிந்துசெறிந்துநெடுநீலம்
பூண்டுபுரிந்துசரிந்துகடைசுருண்டுபுகையுநறும்பூவும்
வேண்டுமல்லவெனத்தெய்வவெறியேகமழுநறுக்குஞ்சி
யீண்டுசடையாயினதென்றான்மழையென்றுரைத்தலிழிபன்றே.

இ-ள். நீண்டு – நீளமுள்ளதாய், குழன்று – சேர்க்கையுள்ளதாய், நெய்த்து – நீலநிறமாய், இருண்டு – இருண்டிருப்பதாய், நெறிந்து – செவ்வையுள்ளதாய், செறிந்து – நெருக்கமுள்ளதாய், நெடுநீலம்-மிகவுங் கருநிறத்தை, பூண்டு – கொண்டதாய், புரிந்து – சுருண்டதாய், சரிந்து - சரிவுமுள்ளதாய், கடை – நுனியிலே, சுருண்டு – சுருளுவதாய், புகையும் – அகிற்புகையும், நறும்பூவும் - நல்லபூவும், வேண்டும் – விரும்புகிறதும், அல்லவென - அல்லதென்னும்படி, தெய்வவெறியே – தெய்வமணமே, கமழும்-பரிமளிப்பதான, நறுங்குஞ்சி – நன்மையான தலைமயிர், ஈண்டு – இப்போது, சடையாயின- சடையாயிருக்கின்றது, என்றால் – என்று சொல்லலானால், மழையென்று- மேகமென்று, உரைத்தல் – சொல்லுகிறது, இழிபன்றே – தாழ்வல்லவோ.

புல்லலேற்றதிருமகளும்பூவும்பொருந்தப்புவியேழும்
எல்லையேற்றநெடுஞ்செல்வமெதிர்ந்தஞான்றுமஃதின்றி
அல்லலேற்றகானகத்துமழியாநடையையிழிவான
மல்லலேற்றினுளதென்றான்மதயானைவருந்தாதே.

இ-ள். புல்லல் - அணைத்தலை, ஏற்ற – உடைய, திருமகளும் – பெரியபிராட்டியும், பூவும் – பூமிப்பிராட்டியும், பொருந்த - கூடியிருக்கச்செய்தே, புவியேழும் – சப்ததீவுகளுமே, எல்லையேற்ற – அடைவாயுள்ள, நெடுஞ்செல்வம்-நெடிதான பாக்கியம், எதிர்ந்தஞான்றும் - கிடைத்தபோதிலும், அஃது இன்றி - அச்செல்வங் கிடைத்ததில்லையாய், அல்லலேற்ற – துன்பத்தைத் தருவதான, கானகத்தும் – காட்டில் வந்தபோதிலும், அழியா - வேறுபடாத, நடையை – அவரது நடையை, இழிவான – தாழ்வாகிய, மல்லல் – வளமையையுடைய, ஏற்றின் – ஒரு எருதினிடத்தில், உளது – உள்ளதான நடைதான், என்றால் – என்று சொல்லலானால், மதயானை – அவ்வித நடையுள்ள மதயானையினது, வருந்தாதோ – தன்னைச் சிலாகிக்க இல்லையென்று, வருத்தப்படாதா வருத்தப்படுமே—எ-று. இப்படி ராமனது சுந்தரத்தைச் சொல்லுதலாலே இக்காண்டம் சுந்தரகாண்டமெனலாயிற்று சுந்தரம்-அழகு.

இன்னமொழியவம்மொழிகேட்டெரியினிட்டமெழுகென்னத்
தன்னையறியாதயர்வாளைத்தரையில்வணங்கிநாயகனார்
சொன்னகுறியுண்டடையாளச்சொல்லுமுளவாலவைதோகை
அன்னநடையாய்கேட்கென்னவறியவறைவானுயினன்.

இ-ள். இன்ன – என்றிப்படி, மொழிய - திருவடி சொல்லச்செய்தே, அம்மொழிகேட்டு – அந்தச்சொல்லைக்கேட்டு, எரியினிட்ட – நெருப்பிலேபோட்ட, மெழுகென்ன – மெழுகுபோல, தன்னையறியாது – தன்னையே

தனக்குத்தெரியாமல், அயர்வாளை — சோர்கிறபிராட்டியை, தரையில் — பூமியிலே தம்முடல்படிய, வணங்கி - விழுந்துசேவித்து இன்னம், நாயகனார் - உமது நாயகனானவர், சொன்ன — சொல்லிய, குறியுண்டு - லட்சியங்களுமுண்டு, அடையாளச் சொல்லும் - அடையாளங்களான சொற்களும், உள - உள்ளன, அவை - அவைகளையெல்லாம், தோகை — மயில்போல்வாய், அன்னம் — அம்சம்போலும், நடையாய் — நடையுள்ளவளே, கேட்கென்ன — கேளென்று, அறிய — பிராட்டிதெரிவதாக, அறைவானுயினான் - சொல்லுவாரானார்—எ-று. 59

வேறு

நடத்தலரிதாகுநெறிநாள்கள்சிலதாயர்க்
கடுத்தபணிசெய்திவணிருத்தியெனவச்சொற்
குடுத்ததுகிலோடுமுயிருக்கவுடலோடும்
எடுத்தமுனிவோடுமயனின்றதுமிசைப்பாய்.

இ-ள். நடத்தல் - நீநடக்கிறதற்கு, அரிதாகும் - அருமையாயிருக்கும், நெறி — காட்டுவழி, நாள்கள்சில — நான் மீண்டுவருகிற சிலகால அளவும், தாயர்க்கு — என் தாய்மார்களுக்கு, அடுத்தபணி — தக்க ஊழியங்களை, செய்து — செய்துகொண்டு, இவண் — இந்த அயோத்தியிலேதானே, இருத்தி — இரு, என - என்று சொல்ல, அச்சொற்கு - அந்தச்சொல்லுக்கு, உடுத்த — கட்டின, துகிலோடும் — வஸ்திரத்துடனே, உயிர் உக்க - பிராணன் போனதுபோன்ற, உடலோடும் — உடம்புடனே, எடுத்த — அப்போது கொண்ட, முனிவோடும் — கோபத்துடனே, அயல் — தூரத்தேபோய், நின்றதும் - நின்றதையும், இசைப்பாய் — சீதைக்குத்தெரிய நீ சொல்லக்கடவை.

நீண்டமுடிவேந்தனருளேந்திநிறைசெல்வம்
பூண்டதனைநீங்கிநெறிபோதலுறுநாளின்
ஆண்டநகராரையொடுவாயிலகலாமுன்
யாண்டையதுகானெனவிசைத்ததுமிசைப்பாய்.

இ-ள். நீண்ட — நெடிதான, முடி — கிரீடத்தையுடைய, வேந்தன் - சக்கரவர்த்தியின், அருள் ஏந்தி — அனுக்கிரகத்தைகொண்டு, நிறைசெல்வம் — மகதைசுவரியத்தை, பூண்டு - பெற்று, அதனை — அந்தஐசுவரியத்தை, நீங்கி - பின்புவிட்டு, நெறி — வழிக்கொண்டு, போதலுறுநாளின் — வருகிறபோது, ஆண்ட — அரசன் ஆளுகையையுடைய, நகர் — அயோத்தியாபுரியின், ஆரையொடு - மதிலுடனே, வாயில் — கோட்டைவாயிலையும், அகலாமுன் — கடந்துவருமுன்னே, கான் — காடு இன்னம், யாண்டையதென் - எங்கிருக்கிறதென்று, இசைத்ததும் — சொன்னதையும், இசைப்பாய் - நீசொல்லக்கடவை—எ-று. 61

எள்ளரியதேர்தருசுமந்திரனிசைப்பாய்
வள்ளன்மொழிவாசகமனத்துயர்மறந்தாள்

கிள்ளையொடுபூவைகள்கிளத்தல்கிளவென்னும்
பிள்ளையொடுதன்றிறமுணர்த்துதிபெயர்த்தும்.

இ-ள். எள்ளரிய - யாதோரிகழ்வுமில்லாத, தேர்தரு - தேரூர்ந்துவந்த, சுந்திரன் — சுமந்திரன், இசைப்பாய் — சொல்லுவதாய், வள்ளல் — சக்கரவர்த்திபோன்ற சுமந்திரன், மொழி - சொன்ன, வாசகம் - சொற்களையும், மனத்துயர் - அவன் மனத்துண்டாயிருக்கிற துக்கத்தையும், மறந்தாள் - மறந்தவளாய், கிள்ளையொடு - நான் வளர்க்கிற கிளியுடனே, பூவைகள் - நாகணவாய்ப் புட்களுக்கும், கிளத்தல் — பேசக் கற்றுக்கொடுக்கிறதை, கிள - சொல்லுக, என்னும் - என்று சொல்லுகிற, பிள்ளையொடு - மழலைப் பேச்சுள்ளவளுடனே, தன் திறம் — அவளறியாமைக் குணங்களானதை, பெயர்த்தும் - மறுபடியும் அனுமனே, உணர்த்துதி - நீ சொல்லக்கடவை—எ-று. இசைப்பு ஆய் சுமந்திரன் — நீ சொல்வதென்னவென்று கேட்டபின்பு, இசைப்பு — சொல்லுதல் கட்டடல் ஆய் ஆனபின்பு. 62

மீட்டுமுரைவேண்டுவனவில்லையெனமெய்ப்பேர்
தீட்டியதுதீட்டரியசெய்கையதுசெவ்வே
நீட்டிதெனநேர்ந்தனனெனுநெடியகையால்
காட்டினனோராழியதுவாணுதலிகண்டாள்.

இ-ள். மீட்டும் — மறுபடியும், உரைவேண்டுவன - சொல்லல் வேண்டியவைகள், இல்லையென - இல்லையென்று, மெய் - தமது மெய்யான, பேர் தீட்டியது - பெயரெழுதியிருப்பது, தீட்டரிய - மற்றொருவராலே செய்யப்படாத, செய்கையது இது — வேலைப்பாடுள்ளது ஆகிய இதை, செவ்வே - நேரே, நெடிய - நீண்ட, கையால் - தமது கையாலே, நீட்டென - கொடென்று, நேர்ந்தனனெனு - கொடுத்தாரென்று, ஓராழி — ஒருமோதிரம், காட்டினன் — காணச்செய்தார், அது — அம்மோதிரத்தை, வாணுதலி — பிராட்டி கண்டாள்—எ-று. வேண்டுவன உரை விரும்பத்தக்க சொற்கள் இல்லையென. 63

இறந்தனர்பிறந்தபயனெய்தினர்கொலென்கோ
மறந்தனரறிந்துணர்வுவந்தனர்கொலென்கோ
துறந்தவுயிர்வந்திடைதொடர்ந்ததுகொலென்கோ
திறந்தெரிவதென்னைகொலிநன்னுதலிசெய்கை.

இ-ள். இ - இந்த, நன்னுதலி - சீதா பிராட்டிக்குண்டான, செய்கை - சந்தோஷச்செய்கையை, நன்னுதலிக்கு-அம்மோதிரஞ் செய்ததை, பிறந்த, உலகிற்பிறந்தா லடையவேண்டின, பயன் — புருஷார்த்தங்களை, இறந்தனர் - அதிகமாக, எய்தினர் - அடைந்தவர்கள் சந்தோஷம்போலும், என்கோ - என்னவோ என்னலாமா, அறிந்து - ஒன்றுதெரிந்து, மறந்தனர் — மறந்தவர்கள். உணர்வு - மீண்டு அத்தெரிந்தபுத்தி, வந்தனர் — உண்டாயினர்போலும், என்கோ - என்னவோ, துறந்த உயிர்-போனபிராணன், வந்து இடை-

மீண்டு தன்னிடம்வந்து, தொடர்ந்தது - கூடிற்றுப்போலும், என்கோ என்னவோ, இந்நன்னுதலி செய்கைத்திறம் - பிராட்டிக்குண்டான சந்தோஷவகையை, தெரிவது - தெரிந்து சொல்லுகிறது, என்னை - எப்படி, கொல் 4-ம் அசை என்னைகொல் - எப்படியோ எனவுமாம். 64

இழந்தமணிபுற்றரவெதிர்ந்ததெனலானாள்
பழந்தனமிழந்தனபடைத்தவரையொத்தாள்
குழந்தையையுயிர்த்தமலடிக்குவமைகொண்டாள்
உழந்துவிழிபெற்றதொருயிர்ப்பொறையுமொத்தாள்.

இ-ள். புற்றரவு - புற்றிலுள்ளபாம்பு, இழந்தமணி - தான் காணமற்போயின ரத்நத்தை, எதிர்ந்தது - மீண்டுகண்டது, எனலானாள் - என்று சொல்லத்தக்கவளானாள், இழந்தன - தாம் போக்கடித்த, பழந்தனம் - பழைய பொருளை, படைத்தவரை - மீண்டு பெற்றவர்களையும், ஒத்தாள் - ஒப்பதானாள், மலடி - பிள்ளையில்லாத ஒருத்தி, குழந்தையை - நல்ல ஆண்பிள்ளையை, உயிர்த்ததற்கு - பெற்றதற்கு, உவமைகொண்டாள் - ஒப்பானாள், உழந்து - கண்ணில்லாமல் வருந்தி, விழிபெற்றது - கண்கள் பெற்றதான, ஓர் - ஒரு, உயிர்ப்பொறையும் - உடலையும், ஒத்தாள் - ஒப்பதானாள்—எ-று. வினையெச்சமே வினைமுற்றாகவுமெனக்கொள்க கீழ்ப்பாட்டிலும் எங்கும்.

வாங்கினண்முலைக்குவையில்வைத்தனர்சிரத்தால்
தாங்கினண்மலர்க்கண்மிசையொத்தினடந்தோள்
வீங்கினண்மெலிந்தனளகுளிர்ந்தனள்வெதுப்போ
டேங்கினளுயிர்த்தனளிதின்னதெனலாமே.

இ-ள். வாங்கினள் - தன் இருகையாலும், முலைக்குவையில் - தனமேட்டின்மேலே, வைத்தனள் - ஒரு பீடத்தில் வைப்பதுபோல் வைத்தாள், சிரத்தால் - தன் தலையாலே கிரீடம்போல், தாங்கினள் - சுமந்தாள், மலர்க்கண்மிசை - தனது நீலமலர்போலுங் கண்களிலே, ஒத்தினள் - தூசிப்பட்டதென்று கண்மலராலே துடைத்தாள் ஒத்திக்கொண்டாள், தடந்தோள் - நீண்டதோள்கள், வீங்கினள் - பூரித்தாள், மெலிந்தனள் - இளைத்தாள், குளிர்ந்தனள் - சந்தோஷித்தாள், வெதுப்போடு - வெப்பங்கொண்டு, ஏங்கினள் - அழுதாள், உயிர்த்தனள் - நெடுமூச்செறிந்தாள், இது - நன்னுதலி செய்கையாகிய இதை, இன்னது - இவ்வளவினது, எனலாமே - என்று சொல்லி முடியு ா, மெலிதல் முதலைந்தும் - இன்னதனாலே இன்னதாயிற்றென்னலாகுமா—எ-று. 66

மோக்குமுலைவைத்துறமுயங்குமொளிர்நன்னீர்
நீக்குநிறைகண்ணிணைததும்பநெடுநீள
நோக்குறுவலக்கருதுமொன்றுறுவல்கில்லாள்
மேக்குயிர்விம்மலள்விழுங்கலுறுகின்றாள்.

இ-ள். மோக்கும் — மூக்காலே முகருவாள், முலைவைத்து - தனங்களின் மேற்கொண்டு, உறமுயங்கும் — மிகவும் அணைப்பாள், கண்ணிணை — இரண்டு கண்களிலும், ததும்ப ஒளிர் — ததும்பவருகிற, நிறைநன்னீர் — நிறைவுள்ள நல்ல சலத்தை, நீக்கி — துடைத்துக்கொண்டு, நெடுநீளம் — மிகவு நெடிய காலம், நோக்கும் - மோதிரத்தைப்பார்த்து யோசிப்பாள், நுவல — அம்மோதிரத்துடனேபேச, கருதும் - எண்ணுவாள், ஒன்றும் — ஒருவார்த்தையேனும், நுவல்கில்லாள் — பேசாள், மேக்குயிர் — மேலே பொங்கிவருகிற, விம்மலள் — அழுகையையுடையவளாய், விழுங்கல் உறுகின்ருள் — அவ்வழுகை அடக்குகிறவளாகிருள்—எ-று. 67

நீண்டவிழிநேரிழைதன் மின்னினிறமெல்லாம்
பூண்டதொளிர்பொன்னனையபொம்மனிறமெய்யே
ஆண்டகைதன்மோதிரமடுத்தபொருளெல்லாம்
தீண்டளவில்வேதிகைசெய்தெய்வமணிகொல்லோ.

இ-ள். நீண்டவிழி - நெடிய கண்களையுடைய, நேர் இழைதன் — பிராட்டியினது, மின்னின் — மின்னுதலையுடைய, நிறமெல்லாம் - சரீரமுழுதும், எழுமெய்யே — நிஜமாகவே, ஒளிர் — மோதிரவடிவாக விளங்குகிற, பொன் நிறம் — சுவர்ணநிறத்தையும், அனைய — அதிலே பொதிந்துள்ள மணியின், பொம்மல்நிறம் — விசேஷ காந்தியையும், பூண்டது — பூணலானது. பய ஆண்டகைதன் - ஸ்ரீராமனுடைய, மோதிரம் — சிகாமணி மோதிரமானது மோதிரத்துள்ள மணியானது, அடுத்த — தன்னைச்சேர்ந்த, பொருளெல்லாம் - எந்தப் பொருள்களையும், தீண்டளவில் — பரிசித்த அப்போதே, வேதிகைசெய் — பேதித்தலைச்செய்கிற, தெய்வமணிகொல் — ஒரு தெய்வ ரத்நந்தானே ஒளிர்பொன்னிலேபதித்த அந்த ரத்நச்சோதி மின்னினிறமெல்லாம் பூண்டதென்பதேகொள்க—எ-று. பிராட்டி மின்னினிறமெல்லாம் ஒளிர்பொன்னுகலால் அனைய அதற்குத்தக்க பொம்மனிறம்பெற்றது ரத்நச்சோதியாயிற்றெனல் வேண்டும் தெய்வமணி யென்றதனுலே. 68

இருந்துபசியாலிடருழந்தவர்களெய்தும்
அருந்துமமுதாகிய தறத்தவரையண்மும்
விருந்துமெனலாகிய துவீயுமுயிர்மீளும்
மருந்துமெனலாகிய துவாழிமணியாழி.

இ-ள். பசியால் - பசியினாலே, இருந்து — நடவாதிருந்து, இடர் உழந்தவர்கள் - துன்பப்பட்டவர்கள், எய்தும் — கிடைக்கப்பெற்ற, அருந்தும் அமுது — உண்ணுஞ்சோறுபோல்வதும், ஆகியது — வாழிமணியாழியாயிற்று, அறத்தவரை — அம்பரமேதண்ணீரே சோறேயென்கிற அறத்தைச் செய்யுமவரை, அண்மும் — அடுத்த, விருந்தும் — விருந்தினரையும், எனலாகியது — போலுமென்னலாயித்து, வீயுமுயிர் — செத்த பிராணன்போன உயிர், மீளும் - திரும்புவதான, மருந்தும் — அவிழ்தத்தையும், எனலாகியது- போலுமென்னலாயிற்று, வாழி — வாழ்வைத்தருவதான, மணி ஆழி — ரத்ந

மோதிரம்—எ-று. அறத்தினருக்கு விருந்தினிடத்திலதிக பிரியமுண்டென்பது கொண்டார். 69

இத்தகையளாகியுயிரேமுறவிளங்கும்
முத்தநகையாள்விழியினுவிமுலேமுன்றில்
தத்தியுகமென்குதலேதள்ளவுயிர்தந்தாய்
உத்தமவெனுவினையவாசகமுரைத்தாள்.

இ-ள். இத்தகையள் ஆகி - இப்படிப்பட்டவள் ஆய், உயிர் — தனதாவி, ஏமுற - சந்தோஷிக்க, விளங்கும் - ஒளிருகின்ற, முத்தம் — முத்துகள்போலும், நகையாள் — பல்வரிசைகளுள்ளவள், விழியினுவி — கண்ணனீர், முலே முன்றில் — முலேமுகட்டிலே, தத்தி உக - துளும்பிவிழ, மென்குதலே - மிருதுவான இளஞ்சொற்கள், தள்ள — குழற, உத்தம — ஓ உத்தமனே, உயிர்தந்தாய் — எனக்கு உயிர்கொடுத்தவனே, எனு — என்றழைத்து, இனையவாசகம் - இந்த வார்த்தைகள், உரைத்தாள் — சொல்லலானுள்—எ-று. 70

வேறு

மும்மையாமுலகந்தந்தமுதல்வற்குமுதல்வன்றூதாய்ச்
செம்மையாலுயிர்தந்தாய்க்குச்செயலென்னுலெளியதுண்டோ
அம்மையாயத்தனுயவப்பனேயருளின்வாழ்வே
இம்மையேமறுமைதானுநலகினையிசையோடென்முள்.

இ-ள். மும்மையாம் — மூவகையான, உலகம் தந்த — உலகங்களேயும் கிருஷ்டித்த, முதல்வற்கு - மண்பொதுத் தந்தைக்கு பிரமனுக்கு, முதல்வன் — காரணபூதனுனவனுக்கு, தூதாய் - தூதனுகிவந்து, செம்மையால் - உனது செவ்வைக்குணத்தினுலே, உயிர் தந்தாய்க்கு — எனக்குப் பிராணுபகாரம்பண்ணின உனக்கு, செயல் — கைம்மாறுசெய்தலே, என்னுல் — என்னுலேசெய்ய, எளியது — எளிதாகியதாய், உண்டோ - கிடைக்குமா, அம்மையாய் — எனக்குத் தாயாய், அத்தனுய — அப்பனுமான, அப்பனே — மகோபகாரனே, அருளின்வாழ்வே — தயைக்கிடமானவனே, இம்மையே — இப்போதுதானே, மறுமைதானும் — இனி அடையும்பலனே, இசையோடு-புகழுடனே, நல்கினே — கொடுத்தாய் என்றுள்—எ-று. 71

பாழியபணேத்தோள்வீர துணேயிலேன்பரிவுதீர்த்த
வாழியவள்ளலேயான்மறுவிலாமனத்தேனென்னின்
ஊழியோர்பகலாயோதும்யாண்டெலாமுலகமேழும்
ஏழும்வீவுற்றஞான்றுமின்றெனவிருத்தியென்றுள்.

இ-ள். பாழிய — விசாலமான, பணே — பருமையுள்ள, தோள் - புஜங்களேக்கொண்ட, வீர — வீரனே, துணேயிலேன் — ஒரு உதவியு மில்லாதிருக்கிற என்னுடைய, பரிவுதீர்த்த — துன்பததைப்போக்கின, வாழிய — வாழ்வையுடைய, வள்ளலே - ஔதாரியகுணமுள்ளவனே, யான் — நான், மறு

இலா — தோஷமில்லாத, மனத்தேன் என்னில் — மனமுடையவளேயானால், ஊழி — ஊழிகாலமே மாயன்வாழ்நாளே, ஓர்பகலாய் — ஒருநாளாக, ஓதும்- சொல்லப்பட்ட, யாண்டெலாம் — மாயன் வாழ்நாளுக்குள்ள வருஷகால முழுதும், உலகமேழுமேழும் - பதினாலுலகங்களும், வீவுற்றஞான்றும்-முழு தும் அழிவுகொண்டகாலத்திலும், இன்றெனு — இன்றைக்கொருநாளென்று இன்றுபோலவே, இருத்தி - இருக்கக்கடவை என்றாள்—எ-று. உலகமேழு மேழும் வீவுற்றஞான்றும் ஊழியோர் பகலாயோதும் யாண்டெலாம் இன் றென இருத்தியென்றாளெனக் கூட்டுக. 72

மீண்டுரைவிளம்பலுற்றாள்விழுமியகுணத்தோய்வீரன்
யாண்டையானிளவலோடுமெவ்வழியெய்திற்றுன்னை
ஆண்டகையடியேன்செய்கையார்சொலவறிந்ததென்றாள்
தூண்டிரடடந்தோளானுமுற்றதுசோறலுற்றான்.

இ-ள். மீண்டுரை — மறுபடியும் சொற்கள், விளம்பலுற்றாள் - சொல்ல லானாள், விழுமிய குணத்தோய் — சிறந்த குணமுள்ளவனே, வீரன் — அந்த ரகுவீரனான ஸ்ரீராமன், யாண்டையான் — இப்போதெங்கிருக்கிறார், இளவ லோடும் — தம்பியுடனே, எவ்வழி — எந்த இடத்திலே, உன்னை எய்திற்று- உன்னைக்கண்டது, ஆண்டகை - அந்த ஸ்ரீராமன், அடியேன்செய்கை- எனது காரியத்தை எனக்குவந்த விபத்தை, யார்சொல — எவர்கள்சொல்ல, அறிந்தது — அறியலானதுசொல், என்றாள்-என்றுகேட்டாள், தூண் - தூண் போல, திரள் — திரண்ட, தடந்தோளானும் — நீண்ட தோள்களுள்ள அனு மார், உற்றது — நடந்த வரலாற்றை, சோறலுற்றான் — சொல்லலானார். 73

உழைக்குலத்தீயமாயவுருவுகொண்டுறுதல்செய்தான்
மழைக்கருநிறத்துமாயவரக்கன்மாரீசனென்பான்
இழைத்தடமார்பத்தண்ணலெய்யப்போய்வையஞ்சேர்வான்
அழைத்ததவ்வோசையுன்னைமயக்குதற்கரக்கன்சொல்ல.

இ-ள். உழைக்குலம் — மான்ஜாதியான, தீயமாயம் — பொல்லாத மயக் கஞ்செய்கிற, உருவுகொண்டு — ரூபங்கொண்டு, உறுதல்செய்தான் — அங்கு வந்தவன், மழை — மேகம்போல், கருநிறத்து — கரிய நிறத்தையுடைய, மாய அரக்கன் — மாயராக்ஷஜாதியான், மாரீசனென்பான் — மாரீசனென்பவன், இழை - ஆபரணங்களைக்கொண்ட, தடமார்பத்து-அகன்ற மார்பையுடைய, அண்ணல் — ஸ்ரீராமன், எய்ய — மாயமென்று தெரிந்து அம்புவிட்டபோது, போய் — அந்த அம்புபட்டு, வையம் — மண்ணிலே, சேர்வான் — விழுகிறவன், அழைத்தது — ஆ லட்சுமணுவென்று கூப்பிட்டது ஆன, அவ்வோசை-அந் தச்சத்தம், உன்னை மயக்குதற்கு-உன்னை மயக்கவேண்டி, அரக்கன் - அந்த மாரீசன், சொல்ல — அப்படிச்சொல்லவே—எ-று. 74

இக்குரலிளவல்கேளாதொழிகெனவினைவனிட்டான்
மெய்க்குரல்சாபம்பின்னைவிளைந்ததுவிதியின்மெய்ம்மை

பொய்க்குரலென்றுபோலாம்பொருள்பின்னர்ப்பயக்குமென்
கைக்குரல்வரிவில்லானுமிளையவன்வரவுகண்டான். [பான்

இ-ள். இக்குரல் - இந்தச்சத்தம் — இளவல்-தம்பி, கேளாதொழிகென-கேளாதிருக்கக்கடவதென்று, இறைவன் — நமதாண்டவன், இட்டான் — நியமித்தார், மெய்க்குரல் — தனது மெய்யான குரலாலே, சாபம் — சாபமிட்டனன் இறைவன், பின்னை — பின்பு, விதியின்மெய்ம்மை — அவர் நியமித்தபடி மெய்யாகவே, விளைந்தது - தம்பிக்குக் கேளாதிருந்தது, பொய்க்குரல் என்று — ஏதுக்கு இந்தப் பொய்க்குரலிட்டானென்று யோசித்து, ஆம்பொருள் — இந்தக் குரலாகிற காரியம், பின்னர் — பின்பு, பயக்கும் — ஏதோ விளைவதாம், என்பான் — என்று நினைத்தவராய், கைக்குரல் — தம்பிக்கும் உனக்குந்தெரியச் சிறு நாணொலிகாட்டி மீள்கிற, வரிவில்லானும் — வரிந்த கோதண்டபாணியானவர், இளையவன் — தம்பி, வரவு — தன்னைத்தேடி வருதலைக் கண்டான்—எ-று. 75

கண்டபினிளையவீரன்முகத்தினுற்கருத்தையோர்ந்த
புண்டரீகக்கணனுமுற்றதுபுகலக்கேட்டான்
வண்டுறைசாலைவந்தானின்றிருவடிவுகாணுன்
உண்டுயிரிருந்தானின்னலுழப்பதற்கேதுவொன்றே.

இ-ள். கண்டபின் — பார்த்தபின்பு, இளையவீரன் — தம்பியுடைய, முகத்தினால் — முகக்குறியினாலே, கருத்தை — அவர் மனக்கருத்தை, ஓர்ந்த - தெரிந்த, புண்டரீகக்கண்ணனும் — தாமரைபோலுங் கண்களையுடைய ஸ்ரீராமன், உற்றது — அவர் வரலான வகையெல்லாம், புகலக்கேட்டான் — சொல்லக்கேட்டவராய், வண்டுஉறை - வண்டுகள் மொய்த்திருப்பதான, சாலை-பன்னசாலைக்கு, வந்தான் — வந்து, நின் திருவடிவு — உனது திருவுருவை, காணான் — காணாதவனானார், உண்டுஉயிர் — உயிருள்ளதாய், இருந்தான்-இருக்கிறவர், இன்னல் உழப்பதற்கு — துன்பப்படுவதற்கு, ஏதுஒன்றோ — வேறே ஒரு காரணம்வேணுமோ பலவகைக் காரணங்களுண்டாயின—எ-று. 76

தேண்டினேர்கண்டேன்வாழிதீதிலனெங்கோனாகம்
பூண்டமெய்யுயிரேபோகப்பொய்யுயிர்போலநின்ற
ஆண்டகைநெஞ்சினின்றுமகன்றிலையழிவுண்டாமோ
ஈண்டுநீயிருந்தாயாண்டங்கெவ்வுயிர்விடுமிராமன்.

இ-ள். தேண்டி — தேடிவந்து, நேர் - என் கண்ணுக்குநேராக, கண்டேன் — உம்மைக் காணலானேன் ஆதலால், வாழி-பல்லாண்டு, பல்லாண்டு, தீது இலன் — இனி யாதொருகெடுதலும் இல்லாதவரானார், எங்கோன் — எங்களாண்டவனான ஸ்ரீராமன், ஆகம் பூண்ட - அவர்சரீரத்தை இடமாகக் கொண்டிருக்கிற, மெய் உயிரோ — மெய்உயிரான நீர், போக — பிரிய அதனாலே, பொய் உயிர்போல நின்ற — உயிரில்லாதவராக இருக்கிற, ஆண்டகை— ஸ்ரீராமன், நெஞ்சின் — மனத்தினின்று, இன்றும் — இப்போதும், அகன்

றிலை — நீர் நீங்க இல்லை பிரிய இல்லை ஆனால், அழிவு உண்டாமோ - அவரு க்குக் கெடுதலுண்டாகுமா, ஈண்டு நீ — நீர் இங்கே, இருந்தாய் — இருக்கிறீர் இருக்கும்போது, ஆண்டு — அங்கே, எவ் உயிர்-எந்த உயிரை, இராமன்விடும்- இராமன்விடுவார்—எ-று. 77

அந்நிலையாயவண்ணலாண்டுநின்றன்னைநின்னைத்
துன்னிருங்கானும்யாறுமலைகளுந்தொடர்ந்துநாடி
இன்னுயிரின்றியேகுமியந்திரப்படிவமொப்பான்
தன்னுயிர்புகழ்க்குவிற்றசடாயுவைவந்துசார்ந்தான்.

இ-ள். அந்நிலையாய — அப்படியான, அண்ணல் — அந்தராமன், ஆண்டு நின்று — அங்கேயிருந்து, அன்னை — தாயே, நின்னை — உம்மை, துன் இரும்- நெருக்கமிகுதியான, கானும் - காடுகளும், யாறும் — ஆறுகளும், மலைகளும்- பருப்பதங்களும், தொடர்ந்து நாடி — போய்த் தொடர்ந்துதேடி, இன் உயிர்- இனிதான உயிர், இன்றி — இல்லாமல், ஏகும் — செல்லுகின்ற தேடிவருகிற, இயந்திரவப்படிவம் - சூஸ்திரப்பாவையை, ஒப்பான் — ஒத்துவருகிற ஸ்ரீரா மன், தன் உயிர்-தன் உயிரை, புகழ்க்கு — கீர்த்திக்காக, விற்ற - விலைசெய்த, சடாயுவைவந்து — சடாயுவென்கிற பெரிய உடையாரைக்கிட்டிவந்து, சார் ந்தான் — சேர்ந்தார்—எ-று. 78

வந்தவன்மேனிநோக்கிவானுயர்துயரின்வைகி
எந்தைநீயுற்றதன்மையியம்பெனவிலங்கைவேந்தன்
சுந்தரிநின்னைச்செய்தவஞ்சனைச்சொல்லசொல்ல
வெந்தனவுலகமென்னநிமிர்ந்ததுசீற்றவெந்தீ.

இ-ள். வந்து அவன் — கிட்டிவந்து அந்தச் சடாயுவினுடைய, மேனி- சரீரத்தை, நோக்கி — பார்த்து, வான் உயர் — மிகவும்பெரிதான, துயரின் வைகி — துக்கத்திலழுந்தி, எந்தை — என் ஐயாவே, நீஉற்றதன்மை — நீரிப்படி விழலானதை, இயம்பென — சொல்லுமென்றுகேட்க, இலங்கைவேந்தன்- இந்தஇராவணனுனவன், சுந்தரி - ஜகன்மாதாவான, நின்னைச்செய்த — உம க்குப்பண்ணின, வஞ்சனை — கபடத்தை, சொல்லசொல்ல-சொல்லும்போது, உலகம் — உலகங்களெல்லாம், வெந்தன என்ன — வெந்துபோமென்னும்படி, சீற்றவெந்தீ — வெப்பமுள்ள கோபாக்கினியானது, நிமிர்ந்தது — மேன்மே லாயிற்று—எ-று. 79

சீறியிவ்வுலகமூன்றுந்தீந்துகச்சினவாயம்பால்
நூறுவெனென்றுகைவிநோக்கியகாலைநோக்கி
ஊறொருசிறியோன்செய்யமுனிதியோவுலகையுள்ளம்
ஆறுதியென்றுதாதையாற்றலிற்சீற்றமாறி.

இ-ள். சீறி — அப்படிக்கோபங்கொண்டு, இவ்வுலகமூன்றும் — இந்தத் திரிலோகமும், தீந்து உக — கரிந்துசிந்துவதாக, சினவாய் — மீண்டுங் கோப

முண்டாகி, அம்பால் — அதி தீக்ஷணியமான பாணத்தினாலே, நூறுவெனென்று — அழிக்கிறேனென்று, கை — தமதுகையிலுள்ள, வில்நோக்கியகாலை-தனுசைப்பார்த்தபோது, நோக்கி - அக்கோபக்குறியைக்கண்டு, ஊறு-இடையூற்றை, ஒருசிறியோன் — ஒரு அல்பமதியுள்ளவன், செய்ய — பண்ண அதற்காக, முனிதியோ — கோபிக்கக்கடவையோ, உலகை — உலகத்தை யெல்லா முனிதியோ, உள்ளம் — உன்கோபத்தை மனதுக்குள்ளே, ஆறுதி என்று தணிதியாவாயென்று, தாதை ஆற்றலில் — அந்தத்தகப்பன் ஆறச்செய்ததனாலே, சீற்றம் ஆறி — கோபந்தணிந்து—எ-று. 80

எவ்வழியேகியுற்றான் யாண்டையானுறைபுள்யாது
செவ்வியோய்கூறுகென்னச்செப்புவானுற்றசெவ்வி
வெவ்வியல்விதியின்கொட்பால்வீடினன்கழுகின்வேந்தன்
எவ்வியவரிவிற்செங்கையிருவருமிடரின்வீழ்ந்தார்.

இ-ள். எவ்வழி — எந்தத்திசைமுகமாக, ஏகி உற்றான் — போய்ச் சேர்ந்தான் ஓடிப்போனான், யாண்டையான் — இப்போ தெங்கிருப்பான், உறையுள்யாது — அவனூர் எது எங்கே, செவ்வியோய்-ஓ தருணோபகாரியே, கூறுகென்ன — சொல்லுமென்று கேட்கச்செய்தே, செப்புவான்-சொல்லுதற்கு, உற்றசெவ்வி — வாய் கூட்டுகிறபோது, வெவ்விய விதியின் கொட்பால்-கொடிய தெய்வச் செய்கையினாலே, கழுகின்வேந்தன் வீடினன் — சடாயு இறந்துபோனார் தானே உயிர்போயிற்று, எவ்விய — அம்புகளை ஏவத்தக்க, வரிவில் - வரிந்த விற்களைக்கொண்ட, செங்கை - சிவந்தகைகளையுடைய, இருவரும் — ராமலட்சுமணர், இடரில் வீழ்ந்தார் — துன்பக் கடலிலழுந்தினார்கள்—எ-று. 81

அயர்த்தவரரிதிற்றேறியாண்டொழிற்றாதைக்காண்டுச்
செயத்தகுகடன்மையாவுந்தேவருமருளச்செய்தார்
கயத்தொழிலாக்கன்றன்னைநாடிநாங்காண்டுமென்னாப்
புயற்றொடுகுடுமிக்குன்றுங்கானமுங்கடிதுபோனார்.

இ-ள். அயர்ந்தவர் — அப்படி துன்பசாகரத்திலழுந்தின இருவரும், அரிதில்தேறி — தெளிதற்கு மிகவருத்தமாய், ஆண்தொழில் — ஆண்மைத் தொழிலைப் புரிந்த, தாதைக்கு — தகப்பனுக்கு, ஆண்டு - அங்கே, செயத்தகு — செய்யத்தக்க, கடன்மையாவும் — தீக்கடன்களெல்லாம், தேவரும்-தேவருங்கூட, மருள — இதென்ன விசேஷமென்று மயங்குவதாக, செய்தார்-செய்துமுடித்த அவ்விருவரும், கயத்தொழில் — இழிதொழில்செய்த, அரக்கன்றன்னை - ராக்ஷதனை, நாம் - நாமிருவரும், நாடி-தேடி, காண்டுமென்னா-பார்ப்போமென்று கண்டு பிடிப்போமென்று, புயல்தொடு — மேகமண்டலத்தை அளாவின, குடுமிக்குன்றும் — சிகரவரைகளும், கானமும் — காடுகளும், கடிதுபோனார் — விரைந்து வந்தார்கள்—எ-று. 82

அவ்வழிநின்னைக்காணுதயர்த்தவரரிதிற்றேறிச்
செவ்வழிநயனஞ்செல்லுநெடுவழிசேறுசெய்ய
வெவ்வழலுற்றமெல்லென்மெழுகெனவழியுமெய்யன்
இவ்வழியினையபன்னியறிவழிந்திரங்கலுற்றான்.

இ-ள். அவ்வழி - அந்த இடங்களெல்லாம், நின்னைக்காணுது — உம்மைத்தேடியுங்காணுமல், அயர்த்தவர் — இளைத்த அவ்விருவரிலே, அரிதில்தேறி - தெளிதற்குமிகவும் பிரயாசையாய், செவ்வழி — சிவந்தகாந்திவழிகிற, நயனம் — கண்கள், செல்லும் - நடந்துபோகிற, நெடுவழி — நீளவழிகளெல்லாம், சேறுசெய்ய — அளருக்க, வெவ் அழல் — கொடிய நெருப்பிலே, உற்ற-விழுந்த, மெல்லென் — மிருதுவுள்ள தென்கிற, மெழுகென-மெழுகுபோல, அழியும் — கரைகிற, மெய்யன் — சரீரத்தையுடையனுன ஸ்ரீராமன், இவ்வழி — இப்படியான, இனையபன்னி — இவைகளெல்லாஞ்சொல்லி, அறிவழிந்து — மதிமயங்கி, இராங்கல் உற்றான் — அழலானுர்—எ-று. 83

வேறு

கன்மத்தைஞாலத்தவராருளரோகடப்பார்
பொன்மொய்த்ததோளானமயல்கொண்டுபுலன்கள்வேறாய்
நன்மத்தைநாகத்தயல்சூடியநம்பனேபோல்
உன்மத்தனானுன்றனையொன்றுமுணர்ந்திலாதான்.

இ-ள். கன்மத்தை — தெய்வஞ்செய்யுநிக்கிரகத்தை, ஞாலத்தவர் — உலகத்துள்ளவர்களில், கடப்பார் — கடக்கவல்லவர்கள், ஆருளரோ — யாரேனுமிருக்கிறார்களா, பொன் மொய்த்த — அழகு நிரம்பின, தோளான் — புஜங்களுள்ளவர், மயல்கொண்டு — மயங்கி, புலன்கள்வேறாய் — விஷயங்கள் வேறுபாடாகி சுவை ஒளி ஊறோசைதெரியாமல், நாகத்து அயல்-பாம்போடுகூட, நன்மத்தை — நல்ல ஊமத்தம் பூவை, சூடிய — சூடியிருக்கிற, நம்பனேபோல்-சிவனேபோராக, உன்மத்தனானுன் — தேறுதவராயினார், தனை-தன்னிலையில், ஒன்றும்-ஏதேனுமொருபடியாவது, உணர்ந்து இலாதான் — ஆலோசியாதவர் தன்படிதனக்குத் தெரியாதவன் தனக்குந்தன் றன்மையறிவரியான்.

போதாயினபோதுனதண்புனலாடல்பொய்யோ
சீதாபவளக்கொடியன்னவட்டேடியென்கண்
நீதாதருகிற்றிலையேயெனேருப்பாதியென்னுக்
சோதாவிரியைச்சினங்கொண்டனன்கொண்டலொப்பான்.

இ-ள். போது - சூரியன், ஆயினபோது — உதயமானவுடனே, உன தண்புனல் — உனது குளிர்ந்த நீரிலே, ஆடல் சீதா-சீதைவந்துமுழுகுகிறது, பொய்யோ — இல்லையா, பவளக்கொடி — அந்தப் பவளக்கொடி, அன்னவள்-போன்றவளை, தேடி - தேடிக்கண்டு, என்கண் — என்னிடத்தே கொண்டுவந்து, நீதா — நீயே கொடுக்கவேணும், தருகிற்றிலையேல் - தராதிருப்பாயா

ளுல், நெருப்பு ஆதி — எனது பாணுக்கினியாலே வெந்துபோவாய், என்று — என்று, கோதாவிரியை — கோதா விரியாற்றைப்பார்த்து, சினங்கொண்டனன் — கோபமுண்டார், கொண்டல் ஒப்பான் — மேகம்போன்றவர் — எ-று.

குன்றேகடிதோடினைகோமளக்கொம்பரன்ன
என்றேவியைக்காட்டுதிகாட்டலையென்னினிவ்வம்
பொன்றேயமையும்முனுடைக்குலமுள்ளவெல்லாம்
இன்றேபிளவாவெரியாக்கரியாக்கவென்றான்.

இ-ள். குன்றே — ஓமலையேநீ, கடிது — விரைந்துகாண, ஓடினை — நீண்டோடியிருக்கிறதினுலே, கோமளக்கொம்பர் அன்ன — இளங்கொம்புபோன்ற, என்தேவியை — எனது நாயகியை, காட்டுதி — நான் பார்க்கச்செய்ய வேணும், காட்டலையென்னில் — நீகாட்டாயேயானுல், இவ் அம்பு ஒன்றே — இந்த ஒருபாணமே, அமையும் — போதும், உன் உடைக்குலம் — உன்னுடைய ஜாதிகளாக, உள்ள எல்லாம் — இருப்பவைகளை யெல்லாம், இன்றே — இப்போதே, பிளவா — பிளந்து, எரியா — எரித்து, கரியாக்க — கரிகளாகப் பண்ணுதற்கு, என்றான் — இவ்வம்பொன்றே அமையும் — எ-று. 86

பொன்மானுருவாற்சிலமாயைபுணர்க்கவன்றோ
என்மானகல்வுற்றனளிப்பொழுதென்கணென்று
நன்மான்களைநோக்கிநுந்நாமமுமாய்ப்பெனின்றே
வின்மாண்கொலைவாளியினென்றுவெகுண்டுநின்றான்.

இ-ள். பொன்மான்உருவால் — பொன்மான் வடிவுகொண்டு, சிலமாயைபுணர்க்க — சிலவஞ்சனைசெய்ய, அன்றோ — அதனுலல்லவோ, என்மான் — எனதுமானுனவள், அகல்வுற்றனள் — பிரியலானுள் எப்போதென்றால், இப்பொழுது — இப்போது யாரிடத்தென்றால், என்கண் — என்னிடத்தினின்று அகல்வுற்றனள், என்று — என்றெண்ணி, நன்மான்களைநோக்கி — காட்டிலுள்ள நன்மாக்களையெல்லாம்பார்த்து, இன்றே-இப்போதே, வில்மலான்-வில்லினதுமாண்பினுலே, கொலை — கொலைசெய்யவல்ல, வாளியின் — ஒரு அம்பினுலே, நும்நாமமும்-உங்கள்பேரையும், மாய்ப்பன்-அழிக்கிறேன், என்று வெகுண்டுநின்றான் — நெடிதுநேரங் கோபங்கொண்டார் — எ-று. 87

வேறுற்றமனத்தவனின்னதொர்விம்மனோவ
ஆறுற்றநெஞ்சிற்றனதாருயிராயதம்பி
கூறுற்றசொல்லென்றுளகோதறுநன்மருந்தால்
தேறுற்றுயிர்பெற்றியல்புஞ்சிலசொல்லலுற்றான்.

இ-ள். வேறுற்ற — இப்படிவேறுபடுதலான, மனத்தவன் — மனமுள்ளவர், இன்னது — இப்படியான, ஓர் — நிகரில்லாத, விம்மல்-துன்பங்கொண்டு, நோவ — வருந்த அதுகண்ட, ஆறுற்ற — கோபம் ஆறின, நெஞ்சின் — மனமுள்ள, தனது — தன்னுடைய, ஆர் உயிராய — அரிய உயிர்போன்ற, தம்பி-

இளையபெருமாள், கூறுற்ற — சொன்ன, சொல்லென்றுள — சொல்லென்கிற, கோது அறு — தோஷமில்லாத, நன்மருந்தால் — நல்ல ஔஷதத்தினுலே, தேறுற்று — தெளிந்து, உயிர்பெற்று — தன்புத்தி தனக்குத்தோன்றி, இயல்பும் — பின்பு தேடிவரலானதையும், சில — சிறிது, சொல்லலுற்ருன்-சொல்லலானுர்—எ-று. 88

வந்தானிளையானொடுவானுயர்தேரின்வைகும்
நந்தாவிளக்கின் வருமெங்குலநாதன்வாழும்
சந்தார்தடங்குன்றினிற்றன்னுயிர்க்காதலோனும்
செந்தாமரைக்கண்ணனுநட்டனர்தேவருய்ய.

இ-ள். வந்தானிளையானொடு — இளைய பெருமானுடனே தேடிவந்தார், வான் உயர்ந்தேரின்-உயர்ந்த ஆகாசத்திலே ஒற்றைஉருளைத்தேரின்மேலே, வைகும் — தங்குவதான, நந்தாவிளக்கின் — கெடாதவிளக்கான சூரியனிடத்திலிருந்து, வரும் — பிறந்த, எங்குல நாதன் — எம்து கூட்டத்தரசன், வாழும்-இருப்பதான, சந்து ஆர் — சந்தன விருக்ஷங்கள் நிரம்பின, தடங்குன்றினில்-ஒருபெரியமலையிலே, தன் உயிர் — தனதுயிர்மேல், காதலோனும் — பிரியமுள்ள சுக்கிரீவனும் வாலிஉயிரைப்போக்கவேண்டித் தன்னுயிரை அவ்வலியால் அழியாமற்காக்க வேண்டினவனும், செந்தாமரைக்கண்ணனும் — ஸ்ரீராமனும், நட்டனர் — சிநேகமானுர்கள், தேவர் உய்ய — தேவர்கள் துன்பந்தீர்வதாக நட்டனர்—எ-று. 89

உண்டாயதுமுற்றதுமுற்றுமுணர்த்தியுள்ளம்
புண்டானெனநோயுறவிம்முறுகின்றபோழ்தின்
எண்டானிழந்திட்டனனேந்திழையாங்கள்காட்டக்
கண்டானுயர்வேதமும்போதமுங்காண்கிலாதான்.

இ-ள். உண்டாயதும் — நாட்டிலே கைகேசியால் வந்தவிளையும், உற்றதும் — காட்டிலே மான்வடிவாலே வந்தவிளைவும், முற்றும் — முழுதும், உணர்த்தி — சொல்லி, உள்ளம் — மனமானது மனமல்ல, புண்தானென-புண்ணேயென்னும்படி, நோய்உற — பிணிமிகுதியாய், விம்முறுகின்றபோழ்தில் — துக்கப்படுகிறபோது, எண்தான் — தனதுநினைவை, இழந்திட்டனன்-மறந்துபோயினுர், ஏந்துஇழை — அப்போது நீ பூண்டிருந்த ஆபரணங்களை, யாங்கள் காட்டக் கண்டான் — நாங்கள் கொண்டுவந்து காட்டக்கண்டனர், உயர் — உயர்ந்த, வேதமும் — வேதங்களாலும், போதமும் — அவையுணர்ந்த ஞானங்களாலும், காண்கிலாதான் — காணக்கூடாதவர் கண்டார்—எ-று. 90

தணிகின்றதஞ்சொற்ருடர்தன்மையதன்மைதன்னைத்
துணிகொண்டிலங்குஞ்சுடர்வேலவன்றாயநின்கண்
அணிகண்டுழியேயமுதந்தெளித்தாலுமாறுப்
பிணிகொண்டதுபண்டதுண்டாயினும்பேர்ப்பதென்றுல்.

இ-ள். தணிகின்ற - தாழ்ந்து சொல்லுகிற, நம்சொல் - எங்கள்சொல்லை, தொடர்தன்மை — கேட்கிறதினாலே, அத்தன்மைதன்னை - அப்படி துக்கப் படுகிறதை, துணிகொண்டு — துணித்துக்கொண்டு போக்கிக்கொண்டு, இலங்கு — உயிருள்ளவன்போலிருக்கிற, சுடர்வேலவன் - ஒண்மதியான வேலையுடையவர், தூய - பரிசுத்தமுள்ள, நின்கண் - உன்னிடத்திலிருக் கிற, அணிகண்டுழியே - ஆபரணங்களைக்கண்டபோதே, அமுதம் — சாவா மருந்தை, தெளித்தாலும் - பூசினாலும் ஊற்றினாலும், ஆறு - ஆறுததீராத, பிணிகொண்டது — நோயாளியானது, பண்டுமுன்னே — அணிகாட்டின போது, அது - அந்தநோய், உண்டாய் — அதுமுதல்தோன்றி, இனும்- இன்னமும், பேர்ப்பது — பேர்க்கத்தக்கது, அன்று — அல்லாததாயிருக் கிறது—எ-று. 91

அயர்வுற்றரிதிற்றெளிந்தம்மலைக்குப்புறத்தோர்
உயர்பொற்கிரியுற்றுளன்வாலியென்றோங்கலொப்பான்
துயருற்றவிராவணன்வாலிடைப்பண்டுதூங்க
மயர்வுற்றபொருப்பொடுமால்கடறாவிவந்தான்.

இ-ள். அயர்வுற்று — அய்படிச்சோர்ந்து, அரிதில் - மிகவும் வருத்தத் துடனே, தெளிந்து — ஒருவகைத் தெளிவுகொண்டு, அம்மலைக்கு — அந்த மதங்கமலைக்கு, அப்புறத்து - அப்பால், ஓர் - ஒரு, உயர் — உயர்ந்த, பொற் கிரி — பொன்மயமானகிரிக்கு, உற்று — போய், உளன் — அங்குள்ளவன், வாலியென்று — வாலியென்னும் பெயர்கொண்டு, ஓங்கல் ஒப்பான் — மலை போலிருக்கிறவன், துயர் உற்று - துன்பங்கொண்டு, அவிராவணன் - அந்த இராவணனவன், வாலிடை - தன்வாலிலே, பண்டு — முன்னே, தூங்க— கட்டுப்பட்டிருக்க, மயர்வு உற்ற - மயங்கிக்கிடக்கிற, பொருப்போடு — மலைக ளுடனே, மால்கடல் — மயங்கிக்கிடக்கிற கடல்களையும், தாவி - தாண்டி, வந்தான் — வரலானவன்—எ-று. மயர்வு இங்குகலந்திருத்தல். 92

ஆயானையோரம்பினிலாருயிர்வாங்கியன்பிற்
றூயான்வயினவ்வரசீந்தவன்சுற்றுசேனை
மேயான்வருவானெனவிட்டனன்மேவுகாறும்
ஏயானிருந்தானிடைதிங்களிரண்டிரண்டும்.

இ-ள். ஆயானை — அப்படிப்பட்டவாலியை, ஓரம்பினில் - ஒரு பாணத் தினாலே, ஆர் உயிர் — அருமையான உயிரை, வாங்கி — கொண்டு, அன்பில்- விசுவாசத்தினாலே, தூயான்வயின் — பரிசுத்தனான சுக்கிரீவன்வசமாய், அவ்வரசு — அந்த ராஜாங்கத்தை, ஈந்து — கொடுத்து, அவன் - அந்தச் சுக்ரீ வன், சுற்று - தன்னைச்சூழ்ந்த, சேனை - சேனைகளுடனே, மேயான் — கூடி னவனாகி, வருவானென — வருவானென்று, விட்டனன் — சுக்ரீவனைப் போகவிட்டு, மேவுகாறும் — அவன வருமளவும், ஏயான் — அவனைப்போக விட்டாமன், திங்களிரண்டிரண்டும் — நாலுமாசக்காலமும், இடை — அம்

மலையினிடத்தே, இருந்தான் - இருந்தனர்—எ-று. இடைநடுவுள்ள நாலு மாசமும் எனவுமாம். 93

பிற்கூடியசேனைபெருந்திசைபின்னவாக
விற்கூடுநுதற்றிருநின்னிடைமேவவேவித்
தெற்கூடுருவக்கடிதேவினன்சேர்ந்ததென்ன
முற்கூடியகூறினன்காலமோர்மூன்றும்வல்லான்.

இ-ள். பிற்கூடிய - பின்னே வந்து கூடின, சேனை - சேனைகளை, பெருந்திசை - தூர அளவுள்ள திசைகள், பின்ன ஆக—பின்னுள்ளன ஆக திசைகளுக்கப்பாலும், விற்கூடு - வில்லுக்கொப்பான, நுதல் — புருவத்தை யுடைய, திரு — லட்சுமியே, நின்னிடை — உன்னைக்காண்பதாக உன்னிடத் துக்கு, மேவ - வரும்படி, ஏவி - அனுப்பிவிட்டு, தெற்கூடு — இந்தத் தென் திசைக்குள், உருவ — முழுதுந்தேட, கடிது — விரைந்து, ஏவினன் — என்னை அனுப்பினன், சேர்ந்தது என்ன — அவன் உத்தரவின்படிதான் நான் வந்த தென்று, முற்கூடிய - முன்னேதாங்கள் கூடினவகைகளை, கூறினன்- சொன்னார், காலமோர் மூன்றும் — முக்காலமும், வல்லான் — தெரியவல்ல அனுமார்—எ-று. 94

வேறு

அன்பினனிவ்வுரையுணர்த்தவாரியன்
வன்பொறைநெஞ்சினன்வருத்தமுன்னுவாள்
என்புறவுருகினளிரங்கியேங்கினள்
துன்பமுமுவகையுஞ்சுமந்தவுள்ளத்தாள்.

இ-ள். அன்பினன் — அன்புள்ளவரான அனுமார், இவ்வுரை — இந்த வார்த்தைகளை, உணர்த்த—சொல்லுமளவில், ஆரியன் — முழுதுந்தனக்கு நல்லவராய், வன்பொறை — வலிதானபொறுமையுள்ள, நெஞ்சினன் — மன துள்ளராமனுடைய, வருத்தம் — வருத்தத்தை, உன்னுவாள் — எண்ணுகிற வளாய், என்பு — தன் எலும்பும், உற உருகினள் — மிகக்கரைந்து, இரங்கி- இரக்கங்கொண்டு அழுது, ஏங்கினள் — துக்கித்தவளாய், துன்பமும் — துக்க மும், உவகையும் - சந்தோஷமும், சுமந்த - உளவான, உள்ளத்தாள் — மன த்தையுடையவளானாள்—எ-று. 95

நையுறுசிந்தையணயனவாரியின்
றொய்யல்வெஞ்சுழியிடைச்சுழிக்குமேனியள்
ஐயநீயளப்பருமளக்கர்நீந்தினை
எய்தியதெப்பரிசியம்புவாயென்றாள்.

இ-ள். நையுறு — நைந்துகரைகிற, சிந்தையள் — மனமுள்ளவளாய், நய னம் - கண்களிலிருந்து வருகிற, வாரியின் - ஜலத்தாலாய, தொய்யல்- சேற்றிலும், வெஞ்சுழி டை - வெவ்வியசுழியிலும், சுழிக்கும் — சுழல்வ

தான, மேனியள் - சரீரத்தையுடையவள், ஐயநீ - அப்பனேநீ, அளப்பரும் அளவிட அரிதான, அளக்கர் - கடலை, நீந்தினையெய்தியது — கடந்துவந்தது, எப்பரிசு — எப்படி, இயம்புவாய் - சொல்லக்கடவை என்றாள்—எ-று. 98

சுருங்கிடையுன்னொருதுணைவன் றூயதாள்
ஒருங்குடையுணர்வினரோய்வின் மாயையின்
பெருங்கடல்கடந்தனர்பெயரும்பெற்றிபோல்
கருங்கடல்கடந்தனன் காலினாலென்றான்.

இ-ள். சுருங்கு - அதிசூட்சுமமான, இடை - இடையையுடையாய், உன் — உன்னுடைய, ஒரு துணைவன் - ஒப்பில்லாத நாயகனுடைய, தூய தாள் - பரிசுத்தமான திருவடிகளை, ஒருங்கு உடை - முழுதும் எண்ணுதலை யுடைய, உணர்வினர் - அறிவுள்ள பெரியோர்கள், ஓய்வில் - ஓய்தலில்லாத, மாயையின் பெருங்கடல் — மாயையான பெரியகடலை, கடந்தனர் — கடந்து, பெயரும்பெற்றிபோல் - போகிறதுபோல், காலினால் — என்காலாலே, கருங் கடல் - இந்தக்கரியகடலை, கடந்தனன் - கடந்துவந்தேன் என்றான்—எ-று.

இத்துணைசிறியதோரெண்ணில்யாக்கையை
தத்தினைகடலதுதவத்தினாயதோ
சித்தியினியன்றதோசெப்புவாயென்றாள்
முத்தினுநிலவினுமுறுவன்முற்றினாள்.

இ-ள். இத்துணை - இவ்வளவு சிறியது சிறியதான, ஓர் - ஒரு, எண் ணில் — எள்ளுப்போல் இவ்வளவு சிறியதான ஒரு, யாக்கையை - சரீரமுள்ள நீ, தத்தினைகடல் — கடலைத்தாண்டினாய், அது - அப்படித்தாண்டிவந்தது, தவத்தின் — உன்தவத்தால், ஆயதோ - முடிந்ததோ, சித்தியின் — நீபெற் றிருக்கிற சித்திகளால், இயன்றதோ — ஆயிற்றோ, செப்புவாய் — சொல்லக் கடவை என்றாள், முத்தினும் — முத்தைப்பார்க்கிலும், நிலவினும் - சந்திரி கையைப் பார்க்கிலும், முறுவல் - பல்லொளி முற்றினாள் மிக்கவள்—எ-று.

சுட்டினனின்றனன்றொழுதகையினன்
விட்டுயர்தோளினன் விசும்பின்மேக்குயர்
எட்டருநெடுமுகடெய்திநீளுமேல்
முட்டுமென்றுருவொடுவளைந்தமூர்த்தியான்.

இ-ள். தொழுதகையினன் - குவித்த கைகளையுடையவராய், சுட்டி னன் — தாயேபாருமென்றுகுறித்து, நின்றனன் — நின்றார், விட்டு — கீழே தொங்கவிட்டு, உயர் - மேலே உயர்ந்துள்ள, தோளினன் - தோள்க ளுடனே, விசும்பின்மேக்கு — ஆகாயத்தின்மேலே, உயர் — உயர்ந்த, எட் டரு — யாவராலு மெட்டக்கூடாத, நெடு முகடு - நீண்டவான் முகட்டை, எய்தி — சென்று, நீளுமேல் — இன்னம் தலையுயருமானால், முட்டுமென்று- தலையில்மோதுமென்று, உருவொடு — உருவுடனே, வளைந்த — குனிந்த, மூர் த்தியான் - தலையையுடையவராய் சுட்டினனின்றனன்—எ-று. 99

செவ்வழிப்பெருமையென்றுரைக்குஞ்செம்மைதான்
வெவ்வழிப்பூதமோரைந்தின்மேலதோ
அவ்வழித்தன்றெனினநுமன்பாலதோ
எவ்வழித்தாகுமென்றெண்ணுமீட்டதே.

இ-ள். செவ்வழி—செவ்வையான மார்க்கத்தால் வருகிற, பெருமையென்று — பெருந்தன்மையென்று, உரைக்கும்—சொல்லுகிற, செம்மைதான் – அந்தச் செவ்வையானது, வெவ்வழி—கொடியமார்க்கமுள்ள, பூதமோரைந்தின் – ஒரு ஐம்பூதங்களின், மேலதோ—மேலுள்ளதோ, அவ்வழித்து — அந்தப்பூதங்களினிடமானது, அன்றெனின் — அல்லவென்றால், அநுமன்பாலதோ — அநுமாரிடமாயிருக்கிறதோ, எவ்வழித்து - எந்த இடத்தில், ஆகுமென்று—உள்ளதாகுமென்று, எண்ணும்—ஆலோசிக்கும்படியான, ஈட்டது—பெருமையுள்ளது அப்பெருமை—எ-று. 100

ஒத்துயர்கனகவான்கிரியினோங்கிய
மெய்த்துறுமரந்தொறுமின்மினிக்குலம்
மொய்த்துளவாமெனமுன்னும்பின்னரும்
தொத்தினதாரகைமயிரின்சுற்றெலாம்.

இ-ள். ஒத்து உயர் — உயர்ந்த, கனகவான்கிரியின் — பெரியபொன்மலையை, ஒத்து—ஒப்பாய், ஓங்கிய—வளர்ந்த, மெய் — சரீரத்திலே, துறு-நெருங்கின, மரந்தொறும் - உரோமங்களான மரங்களெல்லாம், மின்மினிக்குலம் – மின்மினிக்கூட்டங்கள், மொய்த்துள – நெருங்கிமொய்த்திருக்கின்றன, ஆமென—போலுமென்ன, முன்னும்பின்னரும் – முன்னும்பின்னும், தொத்தினதாரகை – ஒட்டியிருந்தன நக்ஷத்திரங்கள், மயிரின் – உரோமங்களின், சுற்றெலாம்—சூழலெல்லாம்—எ-று. 101

கண்டலமறிவொடுகடந்தகாட்சியன்
விண்டலமிருபுடைவிளங்குமெய்ம்மையைக்
குண்டலமிரண்டுமக்கோளின்மாச்சுடர்
மண்டலமிரண்டொடுமாறுகொண்டவே.

இ-ள். கண்டலம் – கண்களையும், அறிவொடு – மனங்களையும், கடந்த-மேலிட்டுச்சென்ற, காட்சியன் – தோற்றமுள்ளவருடைய, விண்டலம்-ஆகாயத்தின், இருபுடை – இருபுறத்திலும், விளங்கும் – விளங்குகிற, மெய்ம்மை – மெய்யான, அக்குண்டலம் இரண்டும் – அந்தக்குண்டலங்களிரண்டும், அ – அங்குள்ள, கோள் இல் – நவக்கிரகங்களிலே, மா – பெரிய, சுடர்மண்டிலம்—சோதிவட்டங்களான, இரண்டொடு – சூரியசந்திருடனே, மாறுகொண்ட – எதிராயின—எ-று. 102

ஏணிலவொருகுரங்கீதென்றெண்ணலா
ஆணியையநுமனையமையநோக்குவாள்

சேணுயர்பெருமையோர்திறத்ததன்றெனு
நாணுறுமுலகெலாமளந்தநாயகன்.

இ-ள். எணில — பலமில்லாத, ஒருகுரங்கு ஈதென்று — இதொரு குரங்கென்று, எண்ணலா — எண்ணாமல், ஆணியை — அப்போது தனக்காதாரமாய்வந்த, அனுமனை - திருவடியை, அமைய - முழுதும்பொருந்த, நோக்குவாள் - பார்ப்பவளான பிராட்டி, சேண் உயர் — மிகவுமுயர்ந்ததான, பெருமை — பெருமையென்பது, ஓர்திறத்தது — ஓரிடத்துள்ளது, அன்றெனு- அல்லாததென்று, உலகெலாம் - உலகமுழுதும், அளந்த — அளவுசெய்த, நாயகன் — சுவாமிபோல், நாணுறும் — வெள்கலானுள்—எ-று. அளக்கர் நீந்தினையெப்பரிசென்று தான் கேட்டதனாலே உலகளந்த நாயகன் அனுமார் பெருமைகண்டு வெள்குதல்போல் பிராட்டி வெள்கினளென்க—எ-று.

எண்டிசைமருங்கினுமுலகம்யாவினும்
தண்டலிலுயிரெலாந்தன்னைநோக்கின
அண்டமென்றதினுறையமரர்யாரையும்
கண்டனன்றானுந்தன்கமலக்கண்களால்.

இ-ள். எண்திசை மருங்கினும் — எட்டுத் திக்குகளிலும், உலகம் யாவினும் — எந்த லோகங்களினும், தண்டல் இல் — பிரிதலில்லாத, உயிரெல்லாம்- எல்லா உயிர்களும், தன்னைநோக்கின — அனுமாரையே பார்க்கலாயின, அண்டமென்றதில் - ஆகாயமென்னுமிடத்திலே, உறை — வாசம்பண்ணுகிற, அமரர்யாரையும் - எல்லாத் தேவர்களையும், தன் — தம்முடைய, கமலக்கண்களால் — தாமரை மலர்போலுங் கண்களாலே, தானும் கண்டனன் — தாமுங் கண்டார்—எ-று. 04

எழுந்துயர்நெடுந்தகையிரண்டுபாதமும்
அழுந்துறவழுத்தலினிலங்கையாழ்கடல்
விழுந்ததுநிலமிசைவிரிந்தவெண்டிறை
தழைந்தனபுரண்டனமீனந்தாமெலாம்.

இ-ள். எழுந்து — மேலே எழுதலாய், உயர் — உயர்ந்த, நெடுந்தகை- நீண்ட பெருமையையுடைய அனுமார், இரண்டு பாதமும் — இரண்டு கால்களும், அழுந்துற — பூமியிலேபதிய, அழுத்தலின் — அழுத்துதலினாலே, இலங்கை - அந்த இலங்காபுரியானது, ஆழ்கடல் — ஆழமான கடலுக்குள்ளே, விழுந்தது — அழுந்திற்று, நிலமிசை — அந்தப் பூமிமேலே, விரிந்த — விரிந்துள்ள, வெண்திரை — வெள்ளை அலைகள், தழைந்தன — மிகப் பெருகலாயின, மீனமெல்லாம் — மீன்களெல்லாம், புரண்டன - அதன்மேற் புரளலாயின.

வஞ்சியம்மருங்குலம்மறுவில்கற்பினள்
கஞ்சமும்புரைவனகழலுங்கண்டிலாள்

துஞ்சினரரக்கரென்றுவக்குஞ்சூழ்ச்சியாள்
அஞ்சினனிவ்வுருவடங்குவாயென்றாள்.

இ-ள். வஞ்சி — கொடிபோலும், அம் — அழகிதான, மருங்குல் — இடையையுடைய, அ — அந்த, மறுஇல் — யாதொருதோஷமுமில்லாத, கற்பினாள் — கற்புள்ள சீதாபிராட்டி, கஞ்சமும் — தாமரைமலரையும், புரைவன-ஒப்பாகுவனவாகிய, கழலும் — பாதமுழுதும், கண்டிலள் — தெரியாதவளாய், அரக்கர் — இனி அரக்கரெல்லாம், துஞ்சினரென்று — இவ்வுருவால் மடிவார்களென்று, உவக்கும் — சந்தோஷிக்கிற, சூழ்ச்சியாள் — ஆலோசித்து, இவ்வுரு — இந்த உன் உருவுக்கு, அஞ்சினன் — பயந்தேன், அடங்குவாய்! — இனி அடங்கக்கடவை என்றாள்—எ-று. 106

முழுவதுமிவ்வுருக்காணமுற்றிய
குழுவிலதுலகினிக்குறுகுவாயென்றாள்
எழுவினுமெழுலிலங்கிராமன்றோள்களைத்
தழுவினளாமெனத்தளிர்க்குந்தன்மையாள்.

இ-ள். இவ்வுருமுழுவதும் — இந்த வடிவுமுழுதும், காண — காண்பதற்கு, முற்றிய — நிரம்பின, குழுவினது — கூட்டமுள்ளதாயிருக்கிறது, உலகு இனி — இந்த இடம் ஆகையால், குறுகுவாய் என்றாள் — முன்போலாகக்கடவை, எழுவினும் — எழுக்கம்பத்திலும், எழில் — அழகு, இலங்கு — விளங்குகின்ற, இராமன் — இராமனுடைய, தோள்களை — புஜங்களை, தழுவினளாமென — சேர்ந்தாள்போல, தளிர்க்கும் — சந்தோஷிப்பதான, தன்மையாள் — குணமுள்ளவள் என்றாள்—எ-று. 107

ஆண்டகையநுமனுமருளதாமெனா
மீண்டனன்விசும்பெனும்பதத்தைமீச்செல்வான்
காண்டலுக்குரியதோருருவங்காட்டினான்
தூண்டருவிளக்கனாளினையசொல்லினாள்.

இ-ள். ஆண்தகை — ஆண்மையிற்சிறந்த, அநுமனும் — சிறிய திருவடி, அருளது — உமதருளின்படியே, ஆமெனா — முடியுமென்று, விசும்பெனும் பதத்தை — ஆகாயமென்னுமிடத்துக்கு, மீச்செல்வான் — மேலேபோகிறவர், மீண்டனன் — திரும்பினாராய், காண்டலுக்கு — பிராட்டி பார்ப்பதற்கு, உரியது — தக்கதான, ஓருருவம் — ஒருவடிவை, காட்டினான் — காண்பித்தார், தூண்டரு — தூண்டுதலில்லாத, விளக்கு — தீபத்தை, அனாள் — ஒத்தபிராட்டி, இனைய — இவ்வார்த்தைகள், சொல்லினாள் — சொல்லலானாள்—எ-று. 108

வேறு

இடந்தாயுலகைமலையோடுமெடுத்தாய்விசும்பையிவைசுமக்கும்
படந்தாழரவையொருகரத்தாற்பறித்தாயெனினும்பயனின்றால்

நடந்தாயிடையேயென்றாலுநாணுநினக்குநளிர்கடலைக்
கடந்தாயென்றாலென்னுகுங்காற்றுமன்னகடுமையாய்.

இ-ள். மலையோடும் உலகை இடந்தாய் — மலைகளுடனே உலகத்தை யும்பேர்த்தாய், விசும்பை யெடுத்தாய் - ஆகாயத்தையும் தூக்கினாய், இவை-மலைகள் முதலான இவைகளையெல்லாம், சுமக்கும் — தாங்குகின்ற, படம் தாழ் - படங்கள் பொருந்தின, அரவை — ஆதிசேடனையும், ஒருகரத்தால்- ஒருகையாலே, பறித்தாய் — இழுத்தெறிந்தாய், எனினும் - என்றுசொன்னாலும், பயன் இன்று — பிரயோஜனமில்லை, இடையே — இந்தக் கடலினிடத்தே, நடந்தாய் - நடந்துவந்தாய், என்றாலும் — என்று சொன்னாலும், நினக்கு — உன் பெருமைக்கு, நாண் ஆம் — வெட்கமுள்ளதாம், நளிர் — பெரிதான, கடலை — இந்தக்கடலை, கடந்தாய் — தாண்டிவந்தாய், என்றால் - என்று சொல்வதானால், என் ஆகும் — என்ன பெருமைவிளங்கும், காற்று — வாயுவையே, அன்ன — ஒப்பான, கடுமையாய் — வேகமுள்ளவனே—எ-று. ஆம்-சாரியை. 109

ஆழிநெடுங்கையாண்டகைதன்னருளும்புகழுமழிவின்றி
ஊழிபலவுநிலைநிறுத்தற்கொருவனீயேயுளையானாய்
பாழிநெடுந்தோள்வீராநின்பெருமைக்கேற்பப்பகையிலங்கை
ஏழுகடற்குமப்புறத்ததாகாதிருந்ததிழிபன்றோ.

இ-ள். ஆழி — சக்கரத்தையுடைய, நெடுங்கை — நீண்டகைகளோடுள்ள, ஆண்டகைதன் — ஆண்மையிற் சிறந்த தசரத மகாராஜருடைய, அருளும்-தயவுக்கும், புகழும் — கீர்த்திக்கும், அழிவு — ஒருகெடுதலும், இன்றி — இல்லாமல், ஊழிபலவும் — அநேக ஊழிகால அளவும், நிலை நிறுத்தற்கு — நிலைபெறச் செய்வதற்கு, ஒருவனீயே — நீ ஒருவனே, உளை ஆனாய்-உண்டானாய், பாழி-விசாலமான, நெடுந்தோள் — நீண்ட தோள்களையுடைய, வீரா — வீரனே, நின்பெருமைக்கு — உன்பெருமைக்கு, ஏற்ப — சரியாக, பகை-விரோதமான, இலங்கை — இந்த இலங்காபுரி, ஏழுகடற்கும்-ஏழுகடலுக்கும், அப்புறத்தது-அப்பாலுள்ளதாய், ஆகாதிருந்தது — இல்லாதிருக்கிறது, இழிபு அன்றோ-குறைவு அல்லவோ, ஆழிநெடுங்கை — ஆண்டகை ஸ்ரீராமனெனவுமாம்.

அறிவுமீதேயுருவீதேயாற்றலீதேயரும்புலத்தின்
செறிவுமீதேசெயலீதேதேற்றமீதேதேற்றத்தின்
நெறியுமீதேநினைவீதேநீதியீதேநினக்கென்றாள்
வெறியரன்றேகுணங்களான்விரிஞ்சன்முதலாமேலானோர்.

இ-ள். அறிவும் — உன்விவேகமும், ஈதே — இத்தன்மையதே, உரு-உன்சொரூபமும், ஈதே — இத்தன்மையதே, ஆற்றல் — உன்சாமார்த்தியமும், ஈதே — இத்தன்மையதே, அரும் — அடக்கற்கரிதான, புலத்தியன்-இந்திரியங்களை, செறிவும் — நீ அடக்கியிருக்கிறதும், ஈதே — இத்தன்மையதே, செயல் - உனதுசெய்கையும், ஈதே — இத்தன்மையதே, தேற்றம் — உன்

துணிவும், ஈதே – இத்தன்மையதே, தேற்றத்தின் – துணிவினுடைய, நெறியும் – மார்க்கமும், ஈதே – இத்தன்மையதே, நினைவு – உன் எண்ணமும், ஈதே – இத்தன்மையதே, நீதி – உன் ஒழுங்கும், ஈதே – இத்தன்மையதே, நினக்கு – உனக்கு, என்றால் – என்றுசொல்லலானால், விரிஞ்சன் முதலாம்-பிரமாவேமுதலான, மேலானோர் – மேம்பாடுள்ளவர்கள், குணங்களால்-தங்கள் குணங்களாலே, வெறியர் – பயனில்லாமையையுடையவர்கள், அன்றோ-அல்லவோ—எ-று. 111

மின்னேரெயிற்றுவல்லரக்கர்வீக்கநோக்கிவீரர்க்குப்
பின்னேபிறந்தானல்லதோர்துணையிலாதபிழைநோக்கி
உன்னாநின்றேயுடைகின்றேனொழிந்தேனையமுயிருயிர்த்தேன்
என்னேநிருதரென்னாவரிவனேயெங்கோன்றுணையென்றால்.

இ-ள். மின் – மின்னலுக்கு, நேர் – ஒப்பான, எயிற்று – பற்களையுடைய, வல் அரக்கர் – வலிய ராக்ஷதர்கள், வீக்கம்நோக்கி – பெருக்கத்தைப் பார்த்து, வீரற்கு – ஸ்ரீராமனுக்கு, பின்னே பிறந்தான்-பின்பிறந்ததம்பியை, அல்லது – அல்லாமல், ஓர் துணை இலாத – ஒருதுணையும் இல்லாதிருக்கிற, பிழைநோக்கி – குற்றங்கண்டு, உன்னா நின்றே – ஆலோசித்துக்கொண்டே, உடைகின்றேன் – மனங்கலங்குகிற நான், ஐயம் ஒழிந்தேன் – இப்போது சந்தேகந்தீர்ந்தேன், உயிர் – எனக்குயிருண்டாகி, உயிர்த்தேன் – சுவாசம் விடலானேன், இவனே – இப்படிப்பட்ட மகா புருஷனே, எங்கோன் – எங்கள் ஆண்டவனுக்கு, துணையென்றால் – உதவியானால், நிருதர் – இந்த ராக்ஷதர்கள், என் ஆவர் – எவ்வளவினராவார்கள், என்னே – இது என்ன ஆச்சரியம்—எ-று. 112

மாண்டேனெனினும்பழுதன்றேயின்றேமாயச்சிறைநின்றும்
மீண்டேனென்னையொறுத்தாரைக்குலங்களோடும்வேரறுத்தேன்
பூண்டேனெங்கோன்பொலன்கழலும்புகழேயன்றிப்புன்பழியும்
தீண்டேனென்றுமனமகிழ்ந்தாடிருவின்முகத்துத்திருவன்னாள்.

இ-ள். மாண்டேன் – இறந்துபோனேனே, எனினும்-ஆனாலும், பழுது அன்றே – குற்றமல்லவோ, இன்றே – இப்போதே, மாயம் – கபடமான, சிறையி நின்றும் – சிறையினின்றும், மீண்டேன் – நீங்கினேன், என்னை ஒறுத்தாரை – என்னைவருத்தப் படுத்தினவர்களையெல்லாம், குலங்களோடும்-வம்சத்துடனே, வேர் அறுத்தேன் – அடியறச்செய்தேன், எங்கோன் – எமதாண்டவனுடைய, பொலங்கழலும் – பொன்னடியையும், பூண்டேன் – சிரமேற் பூண்டவளானேன், புகழேயன்றி – கீர்த்தியே யல்லது, புன்பழியும்-புன்மையான பழிப்பையும், தீண்டேன் என்று – சேராதவளானேனென்று, மனமகிழ்ந்தாள் – மனது சந்தோஷித்தாள், திருவின் முகத்து – லட்சுமிமுகத்திலுள்ள, திரு – லட்சுமீகரத்தை அழகை, அன்னாள் – ஒப்பான பிராட்டி—எ-று. 113

அண்ணற்பெரியோனடிவணங்கியறியவுரைப்பானருந்ததியே
வண்ணக்கடலினிடைக்கிடந்தமணலிற்பலரால்வானரத்தின்
எண்ணற்கரியபடைத்தலைவரிராமற்கடியார்யானவர்தம்
பண்ணைக்கொருவனெனப்போந்தேனேவக்கடவபணிசெய்வேன்.

இ-ள். அண்ணற் பெரியோன் — உருவாலும் அறிவாலும் பெருமையுள்ள அனுமார், அடிவணங்கி—பிராட்டி காலிலேவிழுந்துசேவித்து, அறிய-பிராட்டி இன்னம்தெரிவதாக, உரைப்பான் - சொல்லுகிறார், அருந்ததியே-அருந்ததிபோன்றவளே, வண்ணம் — கரிய நிறத்தையுடைய, கடலினிடை— கடலுக்குள்ளே, கிடந்த — கிடக்கிற, மணலில் — மணலிலும், பலர்-அநேகர், எண்ணற்கரிய — எண்ணிமுடியாத, வானரத்தின்படை — வானரசேனைகளுக்கு, தலைவர் — அதிபர்கள் அவரெல்லாம், இராமற்கடியார் — ஸ்ரீராமனுக்கே ஊழியக்காரர்கள், யான் - நான், அவர்தம் — அவர்களுடைய, பண்ணைக்கு-கூட்டத்துக்குள், ஒருவனென — ஒருவனெனும்படி, போந்தேன் — வந்தவன் இருக்கிறவன், ஏவக்கடவ — அவர்களேவத்தக்க, பணிசெய்வேன் - ஊழியங்கள்செய்கிறவன்—எ-று. 114

வெள்ளமேழுபத்துளதால்வீரன்சேனையிவ்வேலைப்
பள்ளமொருகைநீரள்ளிக்குடிக்கச்சாலும்பான்மையதோ
கள்ளவரக்கர்கடியிலங்கைகாணுதொழிந்ததாலன்றோ
உள்ளதுணையுமுளதாவதறிந்துபின்னுமுளதாமோ.

இ-ள். வீரன்சேனை — இராமனுக்குச்சேனை- வெள்ளம் ஏழுபத்துளது-எழுபதுவெள்ளஞ்சேனை உண்டாயிருக்கிறது, இவ்வேலை — இந்தக்கடலாகிய, பள்ளம் — குழியிலுள்ள நீரெல்லாம், ஒருகை நீர் - ஒருகையளவு ஜலமாக, அள்ளிக்குடிக்க — அள்ளி உண்ண, சாலும் — போதுமான, பான்மையதோ-அளவுள்ளதாகுமா, கள்ள அரக்கர் — வஞ்சனையுள்ள ராக்ஷதர்களிருக்கிற, கடி இலங்கை - காவலுள்ள இலங்காபுரியை, காணுது — காணுமல், ஒழிந்ததால்-இருந்ததனுலே, அன்றோ — அல்லவோ, உள்ளதுணையும் — நீ இங்கிருக்குமளவும், உளதாவது - இவ்விலங்கையு முளதாயிருக்கிறது, அறிந்து — இலங்கை இவ்விடத்ததென்றுதெரிந்து, பின்னும் — இன்னமும், உளதாமோ-இலங்கை அழியாதிருக்குமா, இலங்கை அழிந்தல்லவோ நீ இங்கில்லாதிருப்பதாகும், அழியுமளவும் நீ இங்கிருக்கவேண்டியதே—எ-று. 115

வாலியிளவலவன்மைந்தன்மயிந்தன்றுமிந்தன்வயக்குமுதன்
நீலனிடபன்குமுதாக்கன்பனசன்சரபனெடுஞ்சாம்பன்
காலனனையதுன்மருடன்காம்பன்கவயன்கவயாக்கன்
ஞாலமறியுநற்சங்கன்வினதன்றுவிந்தனளனென்பான்.

இ-ள். வாலி இளவல்—வாலி தம்பியான சுக்கிரீவனும், அவன்மைந்தன் — அவ்வாலிபுத்திரனுன அங்கதனும், மயிந்தனும் - துமிந்தனும் வெற்றியுள்ள, குமுதனும் — நீலனும் இடபனும் குமுதாக்கனும், பனசனும், நெடிய

சாம்பனும் - காலன் அனைய, யமனுக்கொப்பான — துன்மருடனும், காம்ப —னும் — கவயனும், கவயாக்கனும் — ஞாலமறியும் லோகப்பிரசித்தனான நலம் பெற்ற சங்கனும், வினதனும் — துவிந்தனும் ஊளனென்பவனும்—எ-று. 116

தம்பன் றாமத்தனிப்பெயரோன் றதியின்வதனன் சதவலியென்
றிம்பருலகோடெவ்வுலகுமெடுக்குமிடுக்கரிராமன்கை
அம்பினுதவும்படைத்தலைவரவரைநோக்கினிவ்வரக்கர்
வம்பின்முலையாயுறையிடவும்போதார்கணக்குவரம்புண்டோ.

இ-ள். தம்பனும் — தாமத்தனிப்பெயரோனும், ததிமுகனும் — சதவலியும் என்று, இம்பருலகோடு — இந்தவுலகுடனே, எவ்வுலகும் — எந்தவுலகங்களையும், எடுக்கும் — தூக்கத்தக்க, மிடுக்கர் — சக்தியுள்ளவர்கள், இராமன் - ஸ்ரீராமனுக்கு, கையம்பின் — அவர் கையம்புபோல், உதவும் — உதவுவோரான, படைத்தலைவர் — சேனாதிபர்கள், அவரை நோக்கின் — அவர்களைக் குறித் தாலோசித்தால், இவ்வரக்கர் — இந்த ராக்ஷதர்களெல்லாம், வம்பின் - கச்சணிந்தமுலையாய், தனங்களுள்ளவளே — உறையிடவும் சிற்றளவுகொள்ளவும். போதார் — பற்றார்கள், கணக்குவரம்பு - கணக்களவு, உண்டோ — உளதாமோ—எ-று. 117

உருக்காட்டுபடலம் முற்றிற்று

ஆகூ படலம் — 5 — க்கு திருவிருத்தம் — 605

கம்பநாட்டாழ்வார் திருவடிகளே சரணம்

ஆருவது

# சூடாமணிப்படலம்

வேறு

உண்டுதுணையென்னவெளிதோவுலகிலென்றுப்
புண்டரிகைபோலுமிவளின்னல்புரிகின்றுள்
அண்டமுதனுயகனதாவியனையாளைக்
கொண்டகல்வதேகருமமென்றுணர்வுகொண்டான்.

இ-ள். உண்டுதுணையென்ன-சேனைகளுக்கு அளவுண்டென்றசொல்ல எளிதோ – சுலபமோ, உலகிலென்று – உலகத்திலேயென்று பின்பு, புண்டரிகைபோலும் – லட்சுமிபோலிருக்கிற, இவள் – இந்தச்சீதாபிராட்டி, இன்னல்புரிகின்றுள் – ஸ்ரீராமனுக்குத் துன்பஞ்செய்கிறவளானுள் ஆகையால் அண்டம் – எல்லாவுலகங்களுக்கும், முதல்நாயகனது – காரணபூதனுன ஸ்ரீராமனுடைய, ஆவி அனையாளை – உயிர்போலிருக்கிறதேவியை, கொண்டு அகல்வதே – கொண்டுபோகிறதே, கருமமென்று – காரியமென்று, உணர்வு கொண்டான் – ஆலோசித்தார்—எ-று.

கேட்டியடியேனுரைமுனிந்தருளல்கேளார்
வீட்டியிடுமேலவனைவேறல்வினையன்றுல்
ஈட்டியினியென்பலவிராமனெதிர்நின்னைக்
காட்டிஅடிதாழ்வெனிதுகாண்டியிதுகாலம்.

இ-ள். அடியேன் உரை – அடியேன்சொல்லை, கேட்டி – தாயே கேட்கக்கடவை, முனிந்தருளல் – கோபங்கொள்ளாதொழிக, கேளார் – பகைவரை, வீட்டியிடும் – வதைத்தல் செய்கிற, மேலவனை – மேம்பாடுள்ள ராவணனை, வேறல் – இப்போதுவெல்ல நினைத்தல், வினை அன்று – காரியமல்ல அதற்கு நியாயங்களை, பலஈட்டி – பலவுந்தேடிச்சொல்லி, இனியென் இனி என்னபிரயோசனம், இராமன் எதிர் – ஸ்ரீராமனுக்குமுன்னே, நின்னைக்காட்டி – உன்னைக்கொண்டுபோய்விட்டு, அடிதாழ்வென் – அவர்பாதம் வணங்குகிறேன், இதுகாண்டி – இதைக்கண்டுதெளிதி, இதுகாலம் – நின்னைக்கொண்டுபோவதற்கு இதுவேதருணம்—எ-று.

பொனறிணிபொலன்கொடியென்மென்மயிர்பொருந்தித்
துன்றியபுயத்தினிதிருக்கதுயர்விட்டாய்
இன்றுயில்விளக்கவொரிமைப்பொனிறைவைகும்
குன்றிடையுனைக்கொடுகுதிப்பெனிடைகொள்ளேன்.

இ-ள். பொன்திணி – பொன்போலுந்தேமல்கள் நெருங்கின, பொலங்கொடி – பொன்கொடிபோன்றதாயே, என்மென்மயிர் – எனது மெல்லிய

உரோமங்கள், பொருந்தித்துன்றிய - பொருந்தி நெருங்கின, புயத்து-தோள்களிலே, இனிது - சுகமாக, இருக்க - இரு, துயர்விட்டாய் - துன்பம் நீங்கினவளாய், இன்துயில்விளைக்க - நல்ல நித்திரை செய்துகொண்டிரு, ஒரிமைப்பின் - ஒருக்ஷணப்பொழுதிலே, இறைவைகும் ஸ்ரீராமனிருப்பதான, குன்றிடை - மலையிலே, உனைக்கொடு - உன்னை எடுத்துக்கொண்டு போய், குதிப்பேன் - நான் குதிக்கிறேன், இடைகொள்ளேன் - நடுவேதங்கேன்—எ-று. 3

✢ அறிந்திடையரக்கர்தொடர்வார்களுளராமேல்
முறிந்துதிரநூறியெதிரென்சினமுடிப்பேன்
செறிந்தகுழனின்னிலைமைகண்டுநெடியோன்பால்
வெறுங்கைபெயரேனொருவராலும்விளியாதேன்.

இ-ள். அறிந்து - இதுதெரிந்து, இடை - நடுவேவந்து, அரக்கர்-ராக்ஷதர்கள், தொடர்வார்கள் - தொடர்ந்து பின்னே வருகிறதே, உளராமேல் - உளராஞல் உண்டானல், முறிந்து - தோற்று, உதிர - கடலிலே சிந்தும்படி, நூறி - அழித்து, எதிர் - உன் கண்முன்னே, என்சினம்-எனதுகோபத்தை, முடிப்பேன் - தீர்த்துக்கொள்ளுகிறேன், செறிந்த-வாகுள்ள, குழல் - கூந்தலையுடையதாயே, நின்னிலைமைகண்டும் - உனது சுவபாவம் முழுதுந்தெரிந்தும், நெடியோன்பால் - அந்த ஸ்ரீராமனிடத்தே, வெறுங்கையோடு, பெயரேன் - செல்லேன் ஆஞல், ஒருவராலும் - யாவராலும் நான், விளியாதேன் - சாவமாட்டேன்—எ-று. 4

✢ இலங்கையொடுமேருதிகொலென்னினுமிடந்தென்
வலங்கொளொருகைத்தலையில்வைத்தெதிர்தடுப்பான்
விலங்கினரைநூறிவரிவெஞ்சிலையினோர்தம்
பொலன்கொள்கழறூழ்குவெனிதன்னைபொருளன்றால்.

இ-ள். இலங்கையொடும் - இந்த இலங்கையுடனே, ஏகுதியென்னினும் - எடுத்துக்கொண்டுபோஎன்றாலும், இடந்து - பெயர்த்து, என் - என்து, வலங்கொள் - பலங்கொண்ட, ஒருகைத்தலையில் - ஒரு கையிலே முழுதும், வைத்து - கொண்டு, எதிர் - அப்போதென்முன்னே, தடுப்பான் - தடுத்தற்காகவந்து, விலங்கினரை - தடுத்தவர்களையெல்லாம், நூறி - ஒரு கையாலே கொன்று, வரிவெஞ்சிலையினோர்தம்-வரிந்த வெவ்விய வில்லாளிகளுடைய, பொலன்கொள் - பொன்னிறத்தைக்கொண்ட, கழல் - பாதங்களை, தாழ்குவென் - வணங்குவேன், இது - இவ்வளவுஞ் செய்கிறது, அன்னை - தாயே, பொருள் அன்று - எனக்கு லட்சியமுள்ளதல்ல—எ-று. 5

✢ அருந்ததியுரைத்திபழகற்கருகுசென்றுன்
மருந்தனையதேவிநெடுவஞ்சர்சிறைவைப்பில்
பெருந்துயரினேடுமொருவீடுபெறலில்லா
திருந்தனளெனப்பகரினென்னடிமையென்னும்.

இ-ள். அருந்ததி - அருந்ததிபோல்வாய், உரைத்தி - நீதான்சொல்லு, அழகற்கருகு - ஸ்ரீராமனுக்குச் சமீபத்தே, சென்று - நான்போய், உன் - உனது, மருந்து அனைய - தேவாமிர்தம்போன்ற, தேவி - நாயகியானவர், நெடுவஞ்சர் - அதிக வஞ்சகருடைய, சிறைவைப்பில் - சிறைவைத்த இடத்திலே, பெருந்துயரினோடும் - பெரிதான துக்கத்துடனே, ஒரு வீடுபெறல் இல்லாது - ஒருவகையாலும் விட்டுவருதல் கூடாமல், இருந்தனள் - இருக்கிறார், எனப்பகரில் - என்று நான் சொல்வதானால், என் அடிமை - எனதடிமைத்தொழில், என் ஆம் - என்ன பிரயோஜனப்படும் எப்படி பிரயோஜனப்படுதலாம்—எ-று. 6

புண்டொடர்வகற்றியபுயத்தினொடுபுக்கேன்
விண்டவர்வலத்தையும்விரித்துரைசெய்கேனோ
கொண்டுவருகிற்றிலென்னுயிர்க்குறுதிகொண்டேன்
கண்டுவருகிற்றிலெனெனக்கழறுகேனோ.

இ-ள். புண்தொடர்வு - புண்படுகிறதை, அகற்றிய - நீக்கிக்கொண்ட, புயத்தினொடு - தோள்களுடனே, புக்கேன் - போனேனாகி, விண்டவர் - நம்மில் வேறான இவ்வரக்கர்களையும் இவர்களுடைய, வலத்தையும் - சாமர்த்தியங்களையும், விரித்து - விஸ்திரித்து, உரைசெய்கேனோ - சொல்லக்கடவேனோ அல்லது, கொண்டுவருகிற்றிலென் - எடுத்துக்கொண்டுவருகிலேன், உயிர்க்கு உறுதிகொண்டேன் - என் உயிர்க்கு நன்மையைத் தேடிக்கொண்டேன் கொண்டுவர எண்ணினால் என்னுயிர்போம் அதனால், கண்டுவருகிற்றிலென் - நான் காணவேயில்லை கண்டிலேன் கண்டுவருகின்றிலேன், எனக் கழறுகேனோ - என்று சொல்லிவிடவா நான் கண்டிலேனென்பதை என் உயிர்க்குறுதி எனக்கொள்க—எ-று. 7

இருக்குமதில்சூழ்கடியிலங்கையையிமைப்பின்
உருக்கியெரியாவிகலரக்கரையுமொன்றா
முருக்கிநிருதக்குலமுடித்துவினைமுற்றிப்
பொருக்கவகல்கென்னினுமதின்றுபுரிகின்றேன்.

இ-ள். இருக்கும் - நீரிருப்பதான, கடிமதில்சூழ் - காவலாக மதில்சூழ்ந்த, இலங்கையை - இலங்காபுரியை, இமைப்பில் - ஒருக்ஷணப்பொழுதிலே, உருக்கிஎரியா - நெருப்பாலெரித்து உருகப்பண்ணி, இகலரக்கரையும் - இதிலுள்ள வலியராக்ஷதர்களையும், ஒன்றா - ஒருசேர, முருக்கி - கொன்று, நிருதக்குலம் - ராக்ஷதகூட்டத்தை, முடித்து - இனி இல்லாமற்களைந்து, வினைமுற்றி - சண்டை முடிவுபண்ணி, பொருக்க - விரைவாக, அகல்க - போ, என்னினும் - என்றுநீ சொல்வாயானாலும், அது - அப்படிச் செய்கிறதை, இன்று - இப்போதே, புரிகின்றேன் - செய்கிறேன்—எ-று. 8

இந்துநுதனின்னெடிவணெய்தியிகல்வீரன்
சிந்தையுறுவெந்துயர்தவிர்ந்துதெளிவோடும்

அந்தமிலரக்கர்குலமற்றவிய நூறி
நந்தலில்புவிக்கணிடர்பிற்களைதனன்றால்.

இ-ள். இந்து - அஷ்டமிசந்திரனை ஒப்பான, நுதல் — நெற்றியுள்ள ஜெகன்மாதா, நின்னொடு — இப்போதேநீ அங்குப்போய் ராமனைக் கண்ட பின்பு உன்னுடனே, இகல்வீரன் — அந்தப் போர்வீரனான ராமன், சிந்தையுறு — தமது மனத்துள்ள, வெந்துயர் — வெவ்விதான துன்பம், தவிர்ந்து - நீங்கி, தெளிவோடும் — யாதொரு கலக்கமுமில்லாமல், இவண் எய்தி - இங்கு வந்து, அந்தம் இல் — முடிவில்லாத, அரக்கர்குலம் — ராக்ஷத கூட்டங்கள், அற்றவிய — அற்றுப்போக, நூறி — அழித்து, நந்தல் இல் — கெடுதலில்லாத, புவிக்கண் — உலகத்துக்குள்ள, இடர் — துன்பத்தை, பின் — நீ ராமனிடம் போய்ச் சேர்ந்தபின்பு, களைதல் — தீர்க்கிறது, நன்று — மிகவும் நல்லது. 9

வேறினிவிளம்பவுளதன்றுவிதியாலிப்
பேறுபெறவென்கணருடந்தருளுபின்போய்
ஆறுதுயரஞ்சொலிளவஞ்சியடியன்றோள்
ஏறுகடிதென்றுதொழுதின்னடிபணிந்தான்.

இ-ள். வேறினி — இனிவேறே, விளம்ப உளதன்று — சொல்லக்கிடந்ததில்லை, விதியால் — உனது நியமத்தாலே, இப்பேறுபெற - சுவாமிகாரியமான இந்தப்பலனை நான் அடைய, என்கண் — என்விஷயத்தில், அருள்தந்தருளு — அருள்பாலிட்டருளவேணும், பின் - நான் கொண்டுபோனபின்பு, போய் — அங்குப்போய், ஆறு துயர் — துன்பந்தீர்த்தி, அஞ்சொல் — அழகிய வசனத்தையுடைய, இளவஞ்சி - இளங்கொடியே, அடியன்தோள் — இதோ எனது தோளின்மேலே, கடிதுஏறு — விரைந்தெழுந்தருளுக, என்றுதொழுது - என்று கும்பிட்டு, இன்னடிபணிந்தான் — பிராட்டி திருவடிகளிலே வணங்கினார்—எ-று. 10

வேறு

ஏயநன்மொழியெய்தவிளம்பிய
தாயின்முன்னியகன்றனையான்றனை
ஆயதன்மையரியதன்றாமெனத்
தூயமென்சொலினையனசொல்லினாள்.

இ-ள். ஏய — தகுதியாக, நன்மொழி — நல்ல வசனங்களை, எய்த — முடிவுபெற, விளம்பிய — சொன்ன, தாயில் முன்னிய - தாய்ப்பசுவுக்கு முன்னிற்கிற, கன்று — இளங்கன்றை, இனையான்றனை - ஒப்பான திருவடியை நோக்கி, ஆயதன்மை — நீ அப்படிச் சொன்னவெல்லாம், அரியதுஅன்று - உனக்குப் பெரிதானதல்ல, ஆமென — நீ செய்யத்தக்கதேயாமென்று, தூய - பரிசுத்தமான, மென்சொல் - மிருதுவான சொற்கள், இனையன — இனிச் சொல்லுமவைகளை, சொல்லினாள் — சொன்னாள்—எ-று. 11

அரியதன்றுநின்னாற்றலுக்கேற்றதே
தெரியவெண்ணினைசெய்வதுஞ்செய்தியே
உரியதன்றெனவோர்கின்றதுண்டதென்
பெரியபேதைமைச்சின்மதிப்பெண்மையால்.

இ-ள். அரியது — நீசெய்யக் கூடாதது, அன்று — அல்ல, நின் ஆற்றலுக்கு - உன்சமர்த்துக்கு, ஏற்றதே — தக்கதே, தெரிய — எனக்குந்தெரியும்படி, எண்ணினை — ஆலோசித்தாய், செய்வதும்செய்தி — நீயே செய்தாலும்செய்வாய், உரியது - அது நீசெய்ய உரியது, அன்று என — அல்ல என்று, ஓர்கின்றது - நான்யோசிக்கிறது, உண்டு — ஒன்றுண்டு, அது — அதாவது, என் - என்னுடைய, பெரிய — பெரிதான, பேதைமை — அறியாமையோடுகூடின, சின்மதி — அல்பபுத்தியுள்ள, பெண்மையால் — பெண்பிறப்பினாலே ஓர்கின்றதுண்டு—எ-று. 12

வேலையின்னிடையேவந்துவெய்யவர்
கோலிவெஞ்சரநின்னெடுங்கோத்தபோ
தாலமன்னவர்க்கல்லையெற்கல்லையால்
சாலவுந்தடுமாறுந்தனிமையோய்.

இ-ள். வேலையினின்னிடையே — கடலுக்கு நடுவே, வந்து-தொடர்ந்து வந்து, வெய்யவர் — கொடிய ராக்ஷதர்கள், கோலி — சூழ்ந்துகொண்டு, வெஞ்சரம் — வெவ்வியபாணங்களை, நின்னெடும் கோத்தபோது — உன்மேலெய்யும்போது, ஆலம் அன்னவர்க்கு — விஷத்தை ஒப்பான ராக்ஷதர்களுக்கே, அல்லை — நேர் நிற்கக் கூடாது, எற்கு — என்னைச் சுமந்துகாத்தற்கு, அல்லை- எப்படி ஒருவனாலே கூடும் என்றபடி, துணைவேண்டுமென்பதுதோன்ற, அதுவுமாட்டாய் — இதுவுமாட்டாய் என இரண்டல்லைசொன்னான், சாலவும் — ஆகையால்மிகவும், தடுமாறும் — சஞ்சலமுண்டாம், தனிமையோய்-நீ ஒருவனே ஆதலால்—எ-று. 13

அன்றியும்பிறிதுள்ளதொன்றாரியன்
வென்றிவெஞ்சிலைமாசுணும்வேறினி
நன்றியென்பதம்வஞ்சித்தநாய்களின்
நின்றவஞ்சனைநீயுநினைத்திபோ.

இ-ள். அன்றியும் — அல்லாமலும், பிறிது — வேறேயும், உள்ளது ஒன்று — ஒன்றிருக்கின்றது, ஆரியன் — ஸ்ரீராமனுடைய, வென்றி — ஜயம் பொருந்தின, வெஞ்சிலை — வெவ்வியவில்லுக்கு, மாசு உணும் — தோஷமுள்ளதாம், வேறினி — இனிவேறும் ஒன்றுண்டு அதாவது, நன்றி என் — விசேஷம் என்னிருக்கின்றது, பதம் — நல்லதென்கிற நானாகியசோற்றை, வஞ்சித்த — வஞ்சனைசெய்து கொண்டுவந்து உண்ண எண்ணுகிற, நாய்களின்- இந்த ராக்ஷத நாய்கள்போல், நின்ற — அவர்கள்செய்யக்கிடக்கிற, வஞ்சனை- கபடச்செய்கையை, நீயும் நினைத்தியோ — நீயும் எண்ணலாமாகூடாது. 14

கொண்டபோரினுங்கொற்றவன்விற்றொழில்
அண்டரேவருநோக்கவென்னாக்கையைக
கண்டபோரரக்கன்விழிகாகங்கள்
உண்டபோதன்றியானுளனாவேனோ.

இ-ள். கொண்டபோரினும் - இவர்கள்செய்யக் கோலின்சண்டையிலும், கொற்றவன் - ஸ்ரீராமனுடைய, விற்றொழில்-வில்வல்லமையை, அண்டரேவரும் — எல்லாத்தேவர்களும், நோக்க — பார்க்க, என்ஆக்கையை - என் சரீரத்தை, கண்ட — பார்த்தாசைப்பட்ட, போரரக்கன் — வலியராக்ஷதனுடைய, விழி — கண்களை, காகங்கள் — காக்கைகள், உண்டபோது, கொத்தித்தின்றால் நான் உளனாவேன், அன்றியான் — கொத்தித் தின்னாவிட்டால், உளனாவேனோ — உயிரோடிருப்பேனா இரேன்—எ-று. 15

வெற்றிநாணுடைவில்லியர்விற்றொழில்
முற்றநாணிலரக்கியர்மூக்கொடும்
அற்றநாணினராயினபோதன்றிப்
பெற்றநாணமும்பெற்றியதாகுமோ.

இ-ள். வெற்றி நாண் உடை — ஜெயமும் நாரியும் உள்ள, வில்லியர்- அந்த வில்லாளிகளுடைய, விற்றொழில் - வில்வல்லமையை, முற்ற — முடிவு பெறச்செய்ய அதனாலே, நாண் இல் — வெட்கமில்லாத, அரக்கியர் - இந்த ராக்ஷதிகள், மூக்கொடும் — மூக்குடனே, நாண் அற்றவர்-வெட்கமும்போனவர்களாய், ஆயினபோது — முடிந்தநாளிலே, அன்றி — நாண் உள்ளவள் ஆவேன் அல்லது, பெற்றநாணமும் — நான்கொண்டவெட்கமும், பெற்றியதாகுமோ - நான்கொண்டுள்ளதாகுமா கொள்ளாதவளே ஆவேன்—எ-று.

பொற்பிறங்கலிலங்கைபொருந்தலர்
எற்புமால்வரையாகிலதேயெனின்
இற்பிறப்பொழுக்குமிழுக்கமில்
கற்பும்யான்பிறர்க்கெங்ஙனங்காட்டுவேன்.

இ-ள். பொற்பிறங்கல் - பொன்மலையான, இலங்கை — இந்த இலங்காபுரியானது, பொருந்தலர் — சத்துருக்களுடைய, எற்புமால்வரை — எலும்பு மலைபெரிய எலும்புமலை, ஆகிலதேயெனின் — ஆகாமற்போமானால், இற்பிறப்பும் — என்குடிப்பிறப்பும், ஒழுக்கும் — என்நடக்கையும், இழுக்கம் இல் — யாதொருவழுவுமில்லாத, கற்பும் — பதிவிரதா நிலையும், யான்பிறர்க்கு — என்னையல்லாத பெண்களுக்கு, எங்ஙனம் — எப்படி, காட்டுகேன் — மெய்காட்டுகிற்பேன், பொன்மலை — எலும்புமலையாகவேணும் என்றபடி—எ-று. 17

அல்லன்மாக்களிலங்கையதாகுமோ
எல்லைநீத்தவுலகங்கள்யாவுமென்

சொல்லினற்சுடுவேனதுதூயவன்
வில்லினாற்றற்குமாசென்றுவீசினேன்.

இ-ள். அல்லல் – ஆரவாரஞ்செய்கிற, மாக்கள் – மிருகங்கள்போன்றவர்களுடைய, இலங்கையது – இலங்கை அளவிலே, ஆகுமோ – முடிவுபெறுமோ அல்லல், எல்லை நீத்த – அளவில்லாத, உலகங்கள்யாவும் – உலகங்களையெல்லாம், என்சொல்லினால் – என்சொல்லாலே, சுடுவேன் – சுட்டுப்போடுவேன், அது – அப்படிச் சுடுகிறது, தூயவன் – ஸ்ரீராமனுடைய, வில்லின் ஆற்றற்கு – வில்வல்லமைக்கு, மாசென்று – தோஷமென்று, வீசினேன் – விட்டிருக்கிறேன், பெண்ணால் வெற்றிபெறுகிறது ஆண்பிள்ளைக்குப் புகழன்று—எ-று. 18

வேறுமுண்டுரைகேளதுமெய்ம்மையோய்
ஏறுசேவகன்மேனியல்லாலிடை
ஆறுமைம்பொறிநின்னையுமாணெனக்
கூறுமிவ்வுருத்தீண்டுதல்கூடுமோ.

இ-ள். வேறும் – வேறேயும், உண்டு உரை – சொல்லுண்டு சொல்வதுண்டு, கேள் அது – அதைக்கேட்பாயாக, மெய்ம்மையோய் – ஓசத்தியவாக்கியே, ஏறுசேவகன் – சிங்கம்போலும் வீரனான ஸ்ரீராமனுடைய, மேனியல்லால் – திருமேனியையல்லது, இடை – நடுவே, ஆறும் ஐம்பொறி – ஐந்திந்திரியங்களும் அடங்கின, நின்னையும் – எல்லாரோடுன்னையும், ஆணெனக்கூறும் – ஆண்என்று சொல்லப்படுகிற, இவ்வுரு – இந்த உன்கையாலே உன்சரீரத்தினாலே, தீண்டுதல் கூடுமோ – தொடலாகுமா—எ-று. 19

தீண்டுவானெனினித்தனைச்சேண்பகல்
ஈண்டுமோவுயிர்மெய்யினிமைப்பின்முன்
மாண்டுதீர்வனென்றேநிலம்வன்மையால்
கீண்டுகொண்டெழுந்தேகினன்கீழ்மையான்.

இ-ள். தீண்டுவான் எனில் – இந்த ராக்ஷதன் தொடுவானேயானால், மெய்யின் – அவன் சரீரத்தில், இத்தனை – இவ்வளவு, சேண்பகல் – நெடுங்காலம், உயிர் ஈண்டுமோ – உயிர் கூடியிருக்குமோ, இமைப்பின்முன் – ஒருக்ஷணப்பொழுதாகுமுன்னே, மாண்டுதீர்வன் – இறந்துபோவான், என்றே – என்று அவன் தெரிந்தே, நிலம் – பூமியை, வன்மையால் – தன் பலத்தினாலே, கீண்டுகொண்டு – வகிர்ந்தெடுத்துக்கொண்டு, எழுந்து – தேர்மேற்கொண்டு, ஏகினன் – வந்தான், கீழ்மையான் – சண்டாளனான இந்தராவணன்—எ-று. 20

மேவுசிந்தையின்மாதரைமெய்தொடில்
தேவுவன்றலைசிந்துகதீதெனப்

பூவின் வந்தபுராதனனேபுகல்
சாவமுண்டெனதாருயிர் தந்ததால்.

இ-ள். மேவுசிந்தை - கூடமனசு, இல் - இல்லாத, மாதரை - பெண்களாகிய, மெய்தொடில் - அவர்களுடைய சரீரத்தைத்தொட்டால், தீது - அந்தத்தீமைக்காக, தேவு - தெய்வத்தன்மையாய்மீண்டு முளைப்பதான, வன்தலை - வலியதலைகள், சிந்துகஎன - சிதறிப்போகக்கடவையென்று, பூவில்வந்த - உந்திக்கமலத்திலே தோன்றின, புராதனனே - பழையபிரமதேவன், புகல் - சொன்ன, சாபமுண்டு - சாபமுளதாயிருந்து, எனது - என்னுடைய, ஆர் உயிர் - அருமையான உயிரை, தந்தது - கொடுத்ததாயிற்று—எ-று. 21

அன்னசாவமுளதெனவாண்மையான்
மின்னுமௌலியன்மெய்ம்மையன்வீடணன்
கன்னியென்வயின் வைத்தகருணையாள்
சொன்னதுண்டுதுணுக்கமகற்றுவாள்.

இ-ள். அன்னசாபம் — அப்படிப்பட்டசாபம், உளதென - அவனுக்குண்டென்று, ஆண்மையான் - இராவணன்போலாளுகைக்குத் தக்கவன், மின்னும் - விளங்குகின்ற, மௌலியன் - கிரீடாதிபதியானவன், மெய்ம்மையன் - சத்தியநிலையுள்ளவன், வீடணன் - விபீஷணனுடைய, கன்னி - புத்திரியான திரிசடையென்பவள், என்வயின் - என்னிடத்தே, வைத்த கருணையாள் - இரக்கமுள்ளவளாய், துணுக்கம் - என் பயத்தை, அகற்றுவாள் - போக்கவேண்டியவள், சொன்னது உண்டு - சொல்லியிருக்கிறது உண்டு—எ-று. 22

ஆயதுண்மையினுமதன்றெனின்
மாய்வென்மன்றவறம்வழுவாதென்றும்
நாயகன்வலியெண்ணியுநானுடைத்
தூய்மைகாட்டவுமித்துணைதாங்கினேன்.

இ-ள். ஆயது - அந்தச்சாபம், உண்மையினும் - உண்டாயிருக்கிறதினாலும், மன்ற - கிரம்ப, அறம் - தருமம், வழுவாதென்றும் - தவறாதென்றும், நாயகன்வலி - நமதாண்டவனுடையசாமர்த்தியத்தை, எண்ணியும் - நினைத்தும், நான் உடை - நான் உடைத்தாயிருக்கிற, தூய்மை-பரிசுத்தத்தை, காட்டவும் - காட்டவும்வேண்டி, இத்துணை - இவ்வளவுகாலம், தாங்கினேன் உயிர்வைத்திருக்கிறேன், அது - அந்தச்சாபம், அன்றெனில் - இல்லையானல், மாய்வென் - உயிர்விடுவேன்—எ-று. 23

ஆண்டுநின்றுமரக்கனகழ்ந்துகொண்
டீண்டுவைத்ததிளவலியற்றிய

நீண்டசாலையொடுநிலைநின்றது
காண்டியையநின்மெய்யுணர்கண்களால்.

இ-ள். ஆண்டு நின்றும் – அங்கிருந்து, அரக்கன் – இந்த ராக்ஷதன், அகழ்ந்துகொண்டு – தோண்டிக்கொண்டுவந்து, ஈண்டுவைத்தது – ஈண்டு வைத்திருக்கிற இடம், இளவல் – இளையபெருமாள், இயற்றிய – கட்டின, நீண்டசாலையோடு – நெடியபன்னசாலையுடனே, நிலைநின்றது – நான் நிலை கொண்டிருக்கிறதை, ஐய – ஐயனே, நின் – உன்னுடைய, மெய் உணர் – மெய் உணர்ச்சியுள்ள, கண்களால் காண்டி – கண்களாலேபார்—எ-று. 24

தீர்விலேனிதொருபகலுஞ்சிலை
வீரன்மேனியைமானுமிவ்வீங்குநீர்
நாரநாண்மலர்ப்பொய்கையைநண்ணுவேன்
சோருமாருயிர்காக்குந்துணிவினால்.

இ-ள். இது – இந்தப்பன்னசாலையை, தீர்கிலேன் ஒருபகலும் – விட்டு வெளியே ஒருநாளாகிலும் நான்போகிறதில்லை, சிலைவீரன் – அந்தக் கோதண்டபாணியினுடைய, மேனியை – திருமேனியை, மானும் – ஒப்பான, இ-இந்த, வீங்குநீர் – பெருகிற தன்மையுள்ள, நாரம் – ஜலத்திலே, நாள் – நாளும் பூப்பதான, மலர்ப்பொய்கையை – புஷ்பங்களுள்ள குளத்துக்கு, நண்ணுவேன் – போகவேண்டும்போது போவேன், சோரும் – உண்பதில்லாமற் சோர்வையடைகிற, ஆர் உயிர் – அரிதான என உயிரை, காக்கும் – தாக சாந்திசெய்துகாக்க, துணிவினால் – வேண்டிய ஒரு துணிவுகொண்டு, நாரநாண்மலர்ப்பொய்கையை நண்ணுவேன்—எ-று.

ஆதலானதுகாரியமன்றைய
வேதநாயகன்பாலினுமீண்டனை
போதல்காரியமென்றனள்பூவையக்
கோதிலானுமினையனகூறினான்.

இ-ள். ஆதலால் – ஆகையினாலே, அது – நீ ஆலோசித்த அது, காரியம் அன்று – செய்யத்தக்கது அல்ல, ஐய – ஐயனே, வேதநாயகன்பால் இனி – ஸ்ரீராமனிடத்துக்கு, மீண்டனைபோதல் – திரும்பிப்போகிறதே, காரியம் – செய்யத்தக்ககாரியம், என்றனள் – என்றுசொன்னாள், பூவை – பிராட்டி அதற்கு, அக்கோதிலானும் – அந்த யாதொரு தோஷமுமில்லாத திருவடி, இனையன – இவைகளை, கூறினான் – சொன்னார்—எ-று. 26

நன்றுநன்றிவ்வுலகுடைநாயகன்
தன்றுணைப்பெருந்தேவிதவத்தொழில்
என்றுசிந்தைகளித்துவந்தேத்தினான்
நின்றசங்கையிடரொடுநீங்கினான்.

இ-ள். நன்று நன்று - மிகவு நல்லது நல்லது, இவ்வுலகுடை - இந்த வுலகங்களையெல்லாம் தன்னதாக உடைய, நாயகன் தன் - ஜெகதீசனுக் குரிய, ஆணை - சகாயமான, பெருந்தேவி - பெரிய பிராட்டியாருடைய, தவத்தொழில் - தவச்செய்கை, நன்று நன்று என்று - என்று கொண்டாடி, சிந்தைகளித்து - மனது சந்தோஷித்து, உவந்து - மிக்க பிரீதிகொண்டு, ஏத்தினன் - துதிசெய்தனர், சின்றசங்கை - இராவணன் தொடுவானோ வென்றுள்ள சந்தேகம், இடரொடு - துன்பத்துடனே, நீங்கினன் - தீர்ந் தான் - எ-று. 27

இருளுஞாலமிராவணனுவிது
தெருளுநீயினிச்சில்பகறங்குறின்
மருளுமன்னவற்கியான்சொலும்வாசகம்
அருளுவாயென்றடியினிறைஞ்சினன்.

இ-ள். இராவணனால் - இந்த ராக்ஷதனாலே, இருளும் - இருண்டிருப்ப தான, ஞாலம் இது - உலகமாகிய இது, தெருளும் - தெளிவையடையும்; நீ - நீ, இனிச் சில்பகல் - இன்னமுஞ் சிலநாள், தங்குறின் - இங்கிருப்பா யானால், மருளும் - மயங்கிக்கொண்டிருக்கிற, மன்னவற்கு - ஸ்ரீராமனுக்கு: யான்சொலும், நான்சொல்வதான, வாசகம்-சொற்களை, அருளுவாயென்று- சொல்லவேணுமென்று, அடியின் - அவள் பாதத்திலே, இறைஞ்சினன்- வணங்கினார் - எ-று. இராவணனாலே அஞ்ஞானாந்தகாரத்திலே முழுகிக் கிடக்கிற இந்த இலங்கை முதலான எல்லா வுலகங்களும் இனி உன்னாலே தெளிவுபெறும் என்பது கருத்து என்ற அளவில் பிராட்டி சொல்லுகிறாள்.

இன்னுமீண்டொருதிங்களிருப்பல்யான்
நின்னைநோக்கிப்பகர்ந்ததுநீதியோய்
பின்னையாவிபிடிக்கின்றிலேனந்த
மன்னனாணையிதனைமனக்கொணீ.

இ-ள். இன்னும் - இன்னமும், ஈண்டு - இங்கே, ஒருதிங்கள் - ஒருமா தம், இருப்பல்யான் - நானுயிர்கொண்டிருப்பேன், நின்னைநோக்கி - உன் னைச் சாக்ஷியாகக்கொண்டு, பகர்ந்தது - நான் சத்தியமாகச் சொல்லுகிற தாவது, நீதியோய் - நீதிதெரிந்த அனுமாரே, பின்னை - ஒருமாசத்துக்குப் பின்பு, ஆவிபிடிக்கின்றிலேன் - உயிர்வைத்திருக்கமாட்டேன், அந்த மன் னன் - அந்தச் சக்கிரவர்த்தித் திருமகன், ஆணை-ஆணை உள்ளதாக, இதனை நீ - நீ இந்த உருகிச்சொல்லை, மனக்கொள் - மனத்திலே எண்ணிக்கொள்.

ஆரந்தாழ்திருமார்பற்கமைந்ததோர்
தாரந்தானலளேனுந்தயாவெனும்
ஈரந்தானகத்தில்லையென்றாலுந்தன்
வீரங்காத்தலைவேண்டென்றுவேண்டுவாய்.

இ-ள். ஆரம் தாழ் – முத்துமாலைகள் தங்கின, திருமார்பற்கு – திரு மார்பையுடைய ஸ்ரீராமனவருக்கு, அமைந்தது – தக்கது ஆன, ஓர் தாரம் – ஒருமனைவி, அவள் எனும் – அல்லாதவளேயானாலும் அதனால், தயா எனும் – தயையென்கிற, ஈரந்தான் – ஒரு அன்புங்கூட, அகத்து – அவருள்ளத்திலே, இல்லையென்றாலும் – இல்லையானாலும், தன்வீரம் – தமக்குள்ள வீரத்தை, காத்தலே – நிறுத்துகிறதையே, வேண்டு என்று – வேண்டக்கடவீரென்று, வேண்டுவாய் – நீ வேண்டக்கடவை—எ-று. அகத்தில்லனென்று தன்னையே பின்னும் சொன்னதாகப் பாடங்கோடலுமொன்று.

ஏற்றும்வென்றியிளையவற்கீதொரு
வார்த்தைகூறுதிமன்னருளாலெனைக்
காத்திருந்தவற்கேகடனென்றிடை
கோத்தவெஞ்சிறைவீடென்றுகூறுவாய்.

இ-ள். ஏத்தும் – எல்லாருங் கொண்டாடுவதான, வென்றி – ஜயத்தையுடைய, இளையவற்கு – இளையபெருமாளுக்கு, ஈது – இந்த, ஒருவார்த்தை கூறுதி – ஒரு சொற்சொல்லு, மன் அருளால் – ஆண்டான் அனுக்ஞை கொண்டு, எனை – புத்தியில்லாத என்னை, காத்திருந்தவற்கே – காவல்செய்து கொண்டிருந்த தனக்கே, கடனென்று – இன்னும் காப்பதே கடனென்று, இடைகோத்த – நடுவேவந்த, வெஞ்சிறை – வெவ்விதான சிறையை, வீடென்று – விடுதல்செய்துகொள்ளவேணுமென்று, கூறுவாய் – நீ சொல்லவேணும்—எ-று. 31

திங்களொன்றினென்செய்தவந்தீர்ந்ததால்
இங்குவந்திலனேயெனின்யாணநீர்க்
கங்கையாற்றங்கரையடியேற்குத்தன்
செங்கையாற்கடன்செய்கென்றுசெப்புவாய்.

இ-ள். திங்களொன்றில் – ஒருமாதத்துக்குள்ளே, என் செய்தவம் – எனக்கு முன்செய்துள்ள தவப்பலன் ஆயுள்முடிவென்று, தீர்ந்தது ஆல் – நிச்சயப்படுகிறதினாலே, இங்குவந்திலனே – இங்கே கூட்டிப்போக வாராரே என்பது, எனில் – மெய்யே ஆனால், யாணர் – அழகுபொருந்தின, நீர் – நீரையுடைய, கங்கை – ஆற்றங்கரை – கங்காநதி தீரத்திலே, அடியேற்கு – அடியேனுக்கு, தன் செங்கையால் – தமது செவந்த கைகளாலே, கடன்செய்கென்று – தீக்கடன்திருத்தி முடிப்பதை முடிக்கவேணுமென்று, செப்புவாய் – நீ சொல்லக்கடவை—எ-று. 32

சிறக்குமாமியர்மூவர்க்குஞ்சீதையாண்
டிறக்கின்றுதொழுதாளெனுமின்னசொல்
அறத்திநாயகன்பாலருளின்மையால்
மறக்குமாயினுநீமறவேலையா.

இ-ள். சிறக்கும் — மிகவு மேன்மைபெற்றுள்ள, மாமியார் மூவர்க்கும்- மூன்று மாமிகளுக்கும், சீதை - சீதையானவள், ஆண்டு - அந்த இலங்கை யிலே, இறக்கின்றுள் — சாகிறுள் சாகிறவள், தொழுதாள் — கும்பிட்டாள், எனும் — என்பதான, இன்னசொல் - இந்த வார்த்தையை, அறத்திருயகன் பால் - அந்தத் தருமசொரூபியானவருக்கு, அருளின்மையால் — என்மேல் தயவு இல்லா திருக்கிறதினுலே, மறக்கும் - சொல்லமறந்துபோவர், ஆயி னும்நீ - ஆனுலும், மறவேல், ஐயா- ஐயனே நீமறந்து போகாதை—எ-று. 33

வந்தெனைக்கரம்பற்றியவைகல்வாய்
இந்தவிப்பிறவிக்கிருமாதரைச்
சிந்தையாலுந்தொடேனென்றசெவ்வரம்
தந்தவார்த்தைதிருச்செவிசாற்றுவாய்.

இ-ள். வந்தெனை - என் ஊர்வந்து என்னை, கரம்பற்றிய — பாணிக்கிர ஹணம்பண்ணிக்கொண்ட, வைகல்வாய் - நாளிலே, இந்த இப்பிறவிக்கு- இந்த இப்படிப்பட்ட ஜன்மத்துக்கு, இருமாதரை-இரண்டாவதுபெண்ணை, சிந்தையாலும் — மனத்திறுலுங்கூட, தொடேன் - தீண்டாதிருப்பேன், எ ன்றசெவ்வரம் - எனறுசொன்ன செவ்வையானவரத்தை, தந்தவார்த்தை- கொடுத்த திருவாக்கை, திருச்செவி — அவருக்கு ரகசியமாக, சாற்றுவாய்- சொல்லக்கடவை—எ-று. 34

ஈண்டுநானிருந்தின்னுயிர்மாயினும்
மீண்டுவந்துபிறந்துதன்மேனியைத்
தீண்டலாவதோர்தீவினைதீர்வரம்
வேண்டினுளொழுதென்றுவிளம்புவாய்.

இ-ள். ஈண்டு - இப்போது இங்கேதானே, நான் இருந்து — நான் இரு ப்பதாய், இன் உயிர் — அவருக்குமுன் பிரியமான உயிரை, மாயினும் — மடி த்துக்கொண்டாலும், மீண்டுவந்து - திரும்பிவந்து, பிறந்து — உலகத்திலே உற்பவித்து, தன்மேனியை - அவரது திருமேனியை, தீண்டலாவது-தொ டும்படியான, தீவினை தீர் — குற்றமில்லாத, ஓர்வரம்-ஒருவரத்தை, தொழுது வேண்டினுள் - ஒருகும்பிடுபோட்டுவேண்டுகிறுள், என்றுவிளம்புவாய்-என் றுசொல்லக்கடவை—எ-று. 35

அரசுவீற்றிருந்தாளவுமாய்மணிப்
புரசையானையின்வீதியிற்போகவும்
விரசுகோலங்கள்காணவிதியிலேன்
உரைசெய்தென்னையென்னூழ்வினையுன்னுவேன்.

இ-ள். அரசு — ராஜாவாக, வீற்றிருந்து — விலக்ஷணராயிருந்து, ஆள வும் — ஆட்சிகொள்ளுதலையும், ஆய்மணி - ஆராய்ச்சிமணிகட்டின, புரசையா னையில் — கழுத்திற் கயிறுடுகூடிய யானைமேல், வீதியில் - அயோத்தியா

புரித்தெருவிலே, போகவும் – பவனிவருதலையும், விரசு — அப்போதைக் கப்போதுகொள்ளுகிற, கோலங்கள் – அலங்காரங்களையும், காண – பார்க்க, விதியிலேன் – அதிர்ஷ்டமில்லாமற் போனேன், உரைசெய்து–நான்பலவுஞ் சொல்லியதனாலே, என்னை – பயன்யாது, என் ஊழ்வினை – எனது பூர்வகர்மத்தை, உன்னுவேன் — நினைத்துக்கொண்டு போகிறேன்—எ-று. 36

தன்னைநோக்கியுலகந்தளர்தற்கும்
அன்னைநோய்க்கும்பரதனங்காற்றுறும்
இன்னனோய்க்குமங்கேகுவதன்றியே
என்னைநோக்கியிங்கெங்ஙனமெய்துமோ.

இ-ள். தன்னைநோக்கி – தாம்வருந் திசைபார்த்து, உலகம் — கோசலநாடுமுழுதும், தளர்தற்கும் — துன்பப்படுதற்காகவும், அன்னைநோய்க்கும்- தாய்துன்பத்துக்காகவும், பரதன – ஸ்ரீபரதாழ்வான், அங்கு – அயோத்தியிலே, ஆற்றுறும் – பட்டுக்கொண்டிருக்கிற, இன்னல்நோய்க்கும் – துன்பப்பிணிக்காகவும், அங்கு - அங்கே, ஏகுவதன்றி — போகவேண்டியதே அல்லாமல், என்னைநோக்கி – என்னைத்தேடி, இங்கு – இங்கே, எங்ஙனம் எய்தும்- எப்படிவருவார்—எ-று. 37

வேறு

எந்தையாய்முதலியகிளைஞர்யார்க்குமென்
வந்தனைவிளம்புதிகவியின்மன்னனைச்
சுந்தரத்தோளனைத்தொடர்ந்துகாத்துப்போய்
அந்தமினெடுநகர்க்கரசனுக்கென்பாய்.

இ-ள். எந்தையாய் – என்தந்தைதாய், முதலிய – முதலான, கிளைஞர் யார்க்கும் — உறவினரெல்லாருக்கும், என்வந்தனை — எனதுவணக்கத்தை, விளம்புதி – நீசொல்லக்கடவை, கவியின்மன்னனை — வானரேசனான சுக்கிரீவனுக்கு, சுந்தரம் — அழகுள்ள, தோளனை — புஜங்களையுடைய ஸ்ரீராமனை, தொடர்ந்துகாத்து – பின்தொடர்ந் துபகரித்துக்கொண்டு, போய் அந்தம் இல் - முடிவில்லாத, நெடுநகர்க்கு — நெடிய அயோத்திமா நகருக்கு, அரசனுக்கு - அரசனாகச்செய், என்பாய் – என்று நீ சொல்லக்கடவை—எ-று. அந்தம் இல் — பகைவரால் முடிவுபெறுதலில்லாத என்க. யுத்தத்தினாலே வெல்லப்படாதது அயோத்தி. 38

இத்திறமினையனவிளம்பவின்னுநீர்
தத்துறலொழிந்திவிர்தையலீரென
எத்திறத்தேதுதமியைந்தவின்னுரை
ஒத்தனதெரிவுறவுணர்த்தினனரோ.

இ-ள். இத்திறம் — இவ்விதங்களான, இனையன — இச்சொற்களை, விளம்ப - சொல்லும்போது, இன்னுநீர் – தாயே நீரின்னமும், தத்துறல் — துன்

பப்படுதலே, ஒழிந்திலீர் - விடாதிருக்கிறீர், தையலீர் என - தாயே என்று, எத்திறத்து - எந்த எந்தவகைகளுக்குள்ள, ஏதுவும் - நிமித்தகாரணங்களும், இயைந்த - கூடின, இன் உரை - இன்சொற்கள், ஒத்தன - தக்கவைகளாக, தெரிவுற - பிராட்டிதெரிய, உணர்த்தினன் - சொன்னர்—எ-று. 39

வேறு

வீவாய்நீயிவண்மெய்யஃதே
உய்வானின்னுயிருய்வானும்
போய்வானந்நகர்புக்கன்றே
வேய்வான்மௌலியுமெய்யன்றே.

இ-ள். இவன் - இந்த இலங்கையிலே, வீவாய்நீ - செத்துப்போவாய்நீ, மெய் - மெய்யாக, அஃதே - அப்படியே, உய்வானும் - இப்போது உய்ந்திருக்கிற ஸ்ரீராமன், உயிர் உய்வானும் - உயிர் பிழைப்பதும் ஆகும், போய் - காடுவிட்டுப்போய், வான் - பெருமைபொருந்தின, அந்நகர் - அந்த அயோத்திக்கு, புக்கன்றே - போயல்லவோ, மௌலி - கிரீடம், வேய்வான் - சூடிக்கொள்ளுவான், மெய் அன்றே - இவையெல்லாம் மெய்யானதல்லவோ.

கைத்தோடுஞ்சிறைகற்போயை
வைத்தோனின்னுயிர்வாழ்வானும்
பொய்த்தோர்வில்லிகள்போவாராம்
இத்தோடொப்பதியாதுண்டோ.

இ-ள். கைத்து - வெறுப்புக்கொண்டு, ஒடுஞ்சிறை - நீளமானகாலங் காவலிலிருக்கும்படி, கற்போயை - மகாபதிவிரதையான உன்னை, வைத்தோன் - வைத்த இந்த ராவணன், இன் உயிர் - அவனுக்கினிதான உயிர் கொண்டு, வாழ்வான் ஆம் - வாழுமவனு ஆவான் ஆகான், பொய்த்து - அவனைக் கொல்கிறேமென்றது பொய்யாய், ஓர் - அந்த ஒப்பற்ற, வில்லிகள் - வில்லாளிகள், போவார் ஆம் - போமவர்களா ஆம் ஆகார்கள், இத்தோடு - அவன் சாவாமல் வில்லிகள்போகிற இதற்கு, ஒப்பது - சரியானவல்லமை யாதுண்டோ - எதிருக்கின்றது—எ-று. 41

நல்லோய்நின்னைநலிந்தோரைக்
கொல்லேமெம்முயிர்கொண்டங்கே
எல்லோருஞ்செலவெங்கோனும்
வில்லோடுஞ்செலவேண்டாவோ.

இ-ள். நல்லோய் - சாதுவானதாயே, நின்னை - உன்னை, நலிந்தோரை - வருத்தினவர்களை, கொல்லேம் - நாங்கள் கொல்ல மாட்டோமாய், எம் உயிர் - எங்களுயிரை, கொண்டு - சுமந்துகொண்டு, அங்கே - அந்த அயோத்தியாபுரிக்கு, எல்லோரும் - வானரர்களெல்லாம், செல்ல - நீயின்றிப்போக, எங்கோனும் - எமதாண்டவனான ஸ்ரீராமனுங்கூட, வில்லோடும் - வில்

னுடனே, செலவேண்டாவோ - செல்லவேண்டியதில்லையா—எ-று. உன்
னொடு செல்லவேண்டியதே என்பது குறிப்பு. 4:

நீந்தாவின்னலினீந்தாமே
தேய்ந்தாறாதபெருஞ்செல்வம்
ஈந்தானைகுனையீயாதே
ஓய்ந்தாலெம்மினுயர்ந்தார்யார்.

இ-ள். நீந்தா—கடக்கக்கூடாத, இன்னலின் - துன்பக்கடலினை, நீந்
தாமோ - கடவாமல், தேய்ந்து - அன்பப்பட்டு, ஆறாத - நீங்காத, பெருஞ்
செல்வம்—பெரிய செல்வத்தை, ஈந்தானுக்கு - கொடுத்த ஸ்ரீராமனுக்கு,
உனை—உன்னை, ஈயாதே—கொடாமல், ஓய்ந்தால்—நாங்களிளைத்து நின்
றால், எம்மில்—எங்களைவிட, உயர்ந்தார்—உயர்ந்தவர்கள், யார்—யாரிருக்
கிறார்கள், ஈயாவிட்டால் நாங்களே தாழ்ந்தவர்களென்பது குறிப்பு—எ-று.

நன்றாய்நல்வினைநல்லோரைத்
தின்றார்தங்குடர்பேய்தின்னக்
கொன்றாலல்லதுகொள்ளேனு
டென்றானுக்கிவையேலாவோ.

இ-ள். நல்வினை—நல்ல செய்கைகளை, நன்றாய் - நன்காராய்ந்துள்ள,
நல்லோரை - நல்லபெரியோர்களை, தின்றார்தம் - வதைத்துண்டவர்களுடை
ய, குடர்—குடலை, பேய்தின்ன-பசாசுகளுண்ணும்படி, கொன்றால்-கொன்
றால் நாட்டுக்குப்போவேன், அல்லது - அப்படிக்கொல்லாவிட்டால், கொள்
ளேன் நாடு - நாட்டுக்குப்போக எண்ணேன், என்றானுக்கு - என்று உறுதி
சொன்ன ஸ்ரீராமனுக்கு, இவை—இவைகளெல்லாம், ஏலாவோ—செய்ய
முடியாதோ—எ-று. 44

மாட்டாதார்சிறைவைத்தோயை
மீட்டாமென்கிலமீள்வாமேல்
நாட்டார்நல்லவர்நன்னூலும்
கேட்டாரிவ்வுரைகேட்பாரோ.

இ-ள். மாட்டாதார் - சத்துருக்களாலே, சிறைவைத்தோயை - சிறை
வைக்கப்பட்ட உன்னை, மீட்டாம் - திருப்பினோம், என்கிலம் - என்னப்
பெறோமாய், மீள்வோமேல் - திரும்பிப்போவோமேயானல், நாட்டார்-
நாட்டிலுள்ளவர்களும், நல்லவர் - நகரிலுள்ளவர்களும், நன்னூலும் — நல்ல
சாஸ்திரங்கள் முதலான எல்லாம், கேட்டார் — கேட்டுணர்ந்தவர்களும், இவ்
வுரை — இந்த மீட்காத எங்கள்பேச்சையும், கேட்பாரோ - யாராவது சொல்
லக்கேட்பார்களா எல்லாரும் எங்களை இகழ்வார்களென்றபடி—எ-று. 45

பூண்டாள்கற்புடையாள்பொய்யாள்
தீண்டாவஞ்சகர்தீண்டாமுன்

மாண்டாளென்றுமனந்தேறி
மீண்டால்வீரம்விளங்காதோ.

இ-ள். பூண்டாள்கற்பு - கற்புநிலையைக் கொண்டவள், பொய்யாள்- அந்த நிலைதவறாதவளாய், உடையாள் - மெய்யே உடையஜானகி, தீண்டா- தொடவுங்கூடாத, வஞ்சகர் கபடராக்ஷதர்கள், தீண்டாமுன் - தொடுதற்கு முன்னே, மாண்டளென்று - இறந்துபோனளென்று, மனந்தேறி - மனந் தெளிந்து, மீண்டால் - திரும்பினேமானல், வீரம் விளங்காதோ - எங்கள் வீரத்தனம் மிகவும் விளங்குதலுறாதா—எ-று. என்றால் - எங்களுக்கு இகழ்ச் சியே வருமென்பதாயிற்று. 46

கெட்டேனீயுயிர்கேதத்தால்
விட்டாயென்றிடின்மெல்லம்பால்
ஒட்டாரோடுலகோரேழும்
சுட்டாலுந்தொலையாவன்றே.

இ-ள். கெட்டேன் - ஐயோ, நீ உயிர் — உன்னுயிரைநீ, கேதத்தால்- துன்பத்தினலே, விட்டாய் - விட்டுவிட்டாய் இறந்துபோனய், என்றிடில்- என்று சொல்லலானல், மெல் அம்பால் - எளிதே உயிர்வாங்குவதான அம் பினலே, ஒட்டாரோடு - சத்துருக்களுடனே, உலகு ஓரேழும் - ஒரு ஏழுல கங்களையும், சுட்டாலும் - தகனஞ்செய்தாலும், தொலையா - பழிபோகா தது, அன்றே - அல்லவோ—எ-று. 47

முன்னேகொல்வான்மூவுலகும்
பொன்னேயோங்கியபோர்வில்லான்
என்னேநின்னிலையீதென்றால்
பின்னேசெம்மைபிடிப்பானே.

இ-ள். முன்னே — முன்பு, மூவுலகும் - இந்தத்திரிலோகங்களையும், கொல்வான் — அழிப்பான், பொன்னே — ஓலட்சுமியானவளே, ஓங்கியர், உயர்ந்த, போர் - வல்லமைகொண்ட, வில்லான் - சோதண்டபாணியானவ, என்னே - இதென்ன ஆச்சரியம், நின்நிலை - உனது நிலைமை, ஈதென்றால், இப்படிஆனல், பின்னே - பின்பு தனது, செம்மை - செவ்வைக்குணத்தை, பிடிப்பானே - கொள்ளுவானே கொள்ளான்—எ-று. மனம்போனபடியெல் லாம் போவான் என்றதாயிற்று. 48

கோளாருயிர்கோளோடு
மூளாவெஞ்சினமுற்றுகா
மீளாவேலையல்வேறுண்டோ
மாளாதோபுவிவாளேடும்.

இ-ள். கோளானர் — உன்னைச் சிறைகொண்டவர்களுடைய, உயிர்- உயிரை, கோளோடும் - கொள்ளுகிறதுடனே, மூளா — வராத, வெஞ்சினம்-

லெங்கோபம், முற்றுகா — முடிவுபெறாது, மீளாவேல் - அப்படிக் கோபந் திரும்பாமல் அதிகப்படுமானால், அயல் - இந்த ராக்ஷதருக்கு வேறாக, வேறுண்டோ - வேறே உலகங்களை அல்லாமல் வேறே யாதிருக்கின்றது, புவி- இந்த உலகம், வானோடும் — சுவர்க்கத்துடனேகூட, மாளாதோ — அழிந்து போகாதா—எ-று. ஏன் கிலேசிக்கிறாயென்றபடி. 49

தாழித்தண் கடறம்மோடும்
ஏழுக்கேழுலகெல்லாமன்
ஆழிக்கையவனம்மம்மா
ஊழித்தீயெனவுண்ணாவோ.

இ-ள். தாழி — பானைபோலிருக்கிற, தண் — குளிர்ந்த, கடலோடும்- கடல்களுடனே, ஏழுக்கு - கீழேழுக்குச்சரியாக, ஏழ் — மேலுமேழான, உலகெல்லாம் - உலகங்களையெல்லாம், மன் — நிலைகொண்ட, ஆழி - சக்கரத்தை, கையவன் — கையிலேகொண்ட ஸ்ரீராமனுடைய, அம்பு — பாணங்களானவை, அம்மா — தாயே, ஊழித்தீயென - முடிவுகாலத்து நெருப்பைப்போல், உண்ணாவோ — எரித்து முடிவுசெய்யவல்லன அல்லவோ, தம் — சாரியை.

படுத்தான்வானவர்பற்றாரைத்
தடுத்தான்றீவினைதக்கோரை
எடுத்தானல்வினையெந்நாளும்
கொடுத்தானென்றிசைகொள்ளாயோ.

இ-ள். வானவர் — தேவர்களுக்கு, பற்றாரை — சத்துருக்களான ராக்ஷதரை, படுத்தான் — கொன்றானாகி, தக்கோரை — நல்லோர்க்குள்ள, தீவினை- தீயசெய்கைகளையெல்லாம், தடுத்தான் — விலக்குதல்செய்து, எந்நாளும்- எக்காலமும், நல்வினை — புண்ணியத்தை, எடுத்தான் — மென்மேலாக்கி, கொடுத்தான் - நல்லோருக்குக் கொடுத்தான். என்று — என்று சொல்வதான, இசை — கீர்த்தியை, கொள்ளாயோ — நீ பெறமாட்டாயோ பெறுவாயென்பதாம்—எ-று. 51

சின்னாணீயிடர்தீராதாய்
இன்னாவைகலினெல்லோரும்
நன்னாள்காணுதனன்றன்றோ
உன்னானல்லறமுண்டானால்.

இ-ள். சின்னாள்நீ — நீ சிலகாலம், இடர் - துன்பத்தை, தீராதாய்-போக்காதவளாய், இன்னா — அத்துன்பத்துடனே, வைகலின் — இருத்தலாலே, எல்லோரும் — அனைவரும், நன்னாள் - தங்களுக்கு நல்லகாலத்தை, காணுதல்- காணப்பெறுதல், நன்றன்றோ — நன்மையானதல்லவோ, உன்னால் — உன்னாலே, நல்லறம் — நல்லதருமம், உண்டானால் — நிலைபெறுவதானால், உன்னால் நல்ல தருமம் நிலைபெறுவதாய் எல்லோரும் நன்னாள்காணுதல் நன்றன்றோ என்க—எ-று. 52

புளிக்குங்கண்டகர்புண்ணீருள்
குளிக்கும்பேய்குடையுந்தோறும்
ஒளிக்குந்தேவருவந்துள்ளம்
களிக்குநல்வினைகாணுயோ.

இ-ள். புளிக்கும் – எல்லாரும் வெறுக்கத்தக்க, கண்டகர் – ராக்ஷதர்களுடைய, புண்ணீருள் – இரக்த ஜலத்திலே, குளிக்கும்பேய் – பசாசுகள் முழுகும், குடையுந்தோறும் – முழுகும்போதெல்லாம், ஒளிக்கும் – அஞ்சி மறைந்திருக்கிற, தேவர் – தேவர்கள், உவந்து – சந்தோஷித்து, உள்ளம்-மனங்கள், களிக்கும் – ஆனந்திப்பதான, நல்வினை – நல்ல செய்கைகளை, காணுயோ – உன் கண்ணுற் பார்க்கமாட்டாயா பார்ப்பாய்—எ-று. 53

வேறு

ஊழியினிறுதியினுருமெறிந்தெனக்
கேழ்கிளர்சுடுகணைகிழித்தபுண்பொழி
தாழிருங்குருதியிற்றரங்கவேலைகள்
எழுமொன்ருகநின்றிரைப்பக்காண்டியால்

இ-ள். ஊழியினிறுதியின் – ஊழிகாலத்து முடிவில் விழுகிற, உரும்-இடியானது, எறிந்தென – விழுந்தாற்போல, கேழ்கிளர்-ஒளிவிளங்குகின்ற, சுடுகணை – தகிப்பதான அம்பு, கிழித்த – விழுந்துபிளந்த, புண்பொழி - புண்ணினின்றுஞ் சிந்துகிறதினுலே, தாழ் – தங்கின, இரும்-அதிக பிரவாகமான, குருதியில் - இரக்த ஜலத்திலே, தரங்கம் – அலைகளையுடைய, வேலைகளேழும் - எழுகடல்களும், ஒன்ருக – ஒரு சேர்க்கையாக, நின்று-நிலைகொண்டு, இரைப்ப - முழங்குதல்செய்ய, காண்டி – நீபார்—எ-று. 54

சூலிரும்பெருவயிறலைத்துச்சோர்வுறும்
ஆலியங்கண்ணியரறுத்துநீத்தன
வாலியுங்கடப்பருவனப்பவானுயர்
தாலியம்பெருமலைதயங்கக்காண்டியால்.

இ-ள். சூல் – கருப்பத்தையுடைய, இரும்பெருவயிறு – மிகப் பெரிய வயிற்றிலே, அலைத்து - மோதிக்கொண்டு, சோர்வுறும் — தளர்ச்சியாகிற, ஆலிஅம் – நீர்த்துளிகளைச் சிந்துகிற, கண்ணியர் – கண்களையுடைய ராக்ஷதிகள், அறுத்துநீத்தன – அறுத்துப்போக்கின, வாலியும் — தாண்டவல்ல வாலியுங்கூட, கடப்பரு – தாண்ட அரிதான, வனப்ப — அழகுகொண்ட, வான் - ஆகாயத்தளவும், உயர் – உயர்ந்த, தாலியின்பெருமலை - தாலிகளான பெரியமலை, தயங்க – இங்கேவிளங்க, காண்டி —நீபார்—எ-று. 55

விண்ணினீளியநெடுங்கழுகும்வெஞ்சிறை
எண்ணினீளியபெருப்பறவைமீட்டமும்

புண்ணினீர்ப்புணரியிற்படிந்துபூவையர்
கண்ணினீராற்றினிர்குளிப்பக்காண்டியால்.

இ-ள். விண்ணில் — ஆகாயத்தளவும், நீளிய — உயர்ந்த, நெடுங்கழுகும் - அதிகமான பசாசுகளும், வெஞ்சிறை — வெவ்விதான சிறகுகளையுடைய, எண்ணில் — கணக்கில், நீளிய — மிகுதியான, பெரும் — பெரிய, பறவையீட்டமும் - பக்ஷிக்கூட்டங்களும், புண்ணினீர் - ரக்தஜலமாகிய, புணரியில்-கடலிலே, படிந்து — முழுகி, பூவையர் - ராக்ஷதப்பெண்களுடைய, கண்ணினீர்-கண்ணீரான, ஆற்றினில் - ஆற்றிலே அந்தரக்தநிறம்போக, குளிப்ப-முழுக, காண்டி - நீபார்—எ-று. 56

கரம்பயின்முரசுனங்கறங்கக்கைதொடர்
நரம்பினுமிமிழிசைநவிலநாடகம்
அரம்பையராடியவரங்கிளுண்டொழிற்
குரங்குகண்முறைமுறைகுனிப்பக்காண்டியால்.

இ-ள். கரம் - கைகளாலே, பயில் - அடிக்கப்படுகிற, முரசினம் - பேரிகைவகைகள், கறங்க — முழங்கவும், கை — ஒழுங்காக, தொடர் - பூண்டிருக்கிற, நரம்பினும் - தந்தியினின்றும், இமிழ் — சத்திக்கின்ற, இசை - இசைப்பாட்டுகள், நவில — பாடவும், அரம்பையர் - தெய்வப்பெண்கள், நாடகம் ஆடிய — கூத்தாடின, அரங்கின் - நாடகசாலைகளிலே, ஆண்தொழில்-ஆண்மைத் தொழில்செய்த, குரங்குகள் — வானரங்கள், முறைமுறை — வரிசை வரிசையாக, குனிப்ப — ஆட, காண்டி — நீ பார்—எ-று. 57

புரையுறுபுன்றொழிலரக்கர்புண்பொழி
திரையுறுகுருதியாறீர்ப்பச்செல்வன
வரையுறுபிணப்பெறும்பிறக்கமண்டின
கரையுறுநெடுங்கடறார்ப்பக்காண்டியால்.

இ-ள். புரையுறு — தோஷங்களால்மிகுந்த, புன்தொழில் — ஈனச்செய்கைகளையுடைய, அரக்கர் — ராக்ஷதர்கள் தேகத்திலுண்டான, புண்பொழி-காயங்களிலிருந்து சிந்துகிற, திரையுறு — அலைகளால்மிகுந்த, குருதி ஆறு-ரக்தவெள்ளமானது, ஈர்ப்ப - இழுத்துக்கொண்டுபோக, செல்வன — போவனவான, வரை உறு — மலைபோன்ற, பிணம்-ராக்ஷதப்பிணங்களின், பெரும் பிறக்கம் — பெரியதோற்றங்கள், மண்டின — நெருங்கின ஆகி, கரை — கரையிலே, உறு - அலைகளால் மோதுவதான, நெடுங்கடல் — நீண்டகடலை, தூர்ப்ப-நிறைவுசெய்ய, காண்டி — நீபார்—எ-று. 58

வினையுடையரக்கராமிருந்தைவெந்துகச்
சனகியென்றொருதழனடுவட்டங்கலான்
அனகன்கையம்பெனுமளவிலூதையால்
கனகநீடிலங்கைநின்றுருகக்காண்டியால்.

இ-ள். வினை உடை – தீவினையையுடைய, அரக்கராம் – ராக்ஷதர்களாகிய, இருந்தை – கரிகள், வெந்து உக-வெந்துகரைவதாக, சனகி என்று-ஜனகருமாரியென்கிற பெயர்கொண்டு, ஒருதழல் - ஒருவகைநெருப்பு, நடுவண்-இவ்வூர் நடுவிலே, தங்கலால் – இருத்தலாலே, அனகன் – யாதொருபரிசுத்தனான ஸ்ரீராமனுடைய, கை அம்பு எனும் – கையால் விடுகிற அம்பென்கிற, அளவில் - அளவில்லாத, ஊதையால் – காற்றினாலே, கனகம் – சுவர்ணமயமாக, நீடு – நெடிதாயிருக்கிற, இலங்கை – இந்த இலங்கையானது, நின்று-நிலைகொண்டு, உருக – உருகும்படி, காண்டி – நீபார்—எ-று. 59

தாக்கிகலிராவணன் றலையிற்றாவின
பாக்கியமனையநின் பழிப்பின்மேனியை
நோக்கியகண்களைநுதிகொண்மூக்கினால்
காக்கைகள்கவர்ந்துகொண்டுண்ணக்காண்டியால்.

இ-ள். தாக்கு – யாவரோடும்மோதுகின்ற, இகல் – வலிமையுள்ள, இராவணன் – இராவணனுடைய, தலையில் – தலைகளிலே, தாவின – பறந்துபோயிருந்து, பாக்கியம் – தேவர்கள்செய்த பாக்கியத்தை, அனைய – ஒப்பான, நின் – உன்னுடைய, பழிப்பு இல் – யாதொருதோஷமுமில்லாத, மேனியை-திருமேனியைவிரும்பி, நோக்கிய – பார்த்த, கண்களை – அவனுடையகண்களை, நுதிகொள் – கூர்மைகொண்ட, மூக்கினால்-மூக்குகளாலேகுத்தி, காக்கைகள் – காகங்கள், கவர்ந்துகொண்டு – பிடுங்கிக்கொண்டு, உண்ண-தின்ன, காண்டி – நீபார்—எ-று. 60

மேலுறவிராவணற்கழிந்துவெஃகிய
நீலுறுதிசைக்கரிதிரிந்துநிற்பன
வாலுறவனையவன் றலையைவவ்வவில்
காலுறுகணைகடிந்திடுவகாண்டியால்.

இ-ள். மேல் - முன்னாளிலே, உற – மிகவும், இராவணற்கு – தசக்கிரீவனுக்கு, அழிந்து – தோற்று, வெஃகிய – விரும்பத்தக்க, நீல் உறு-நீலநிறம்பொருந்தின அஞ்சனமுதலான, திசைக்கரி – திக்கஜங்களாய், வால் உற, வாற்புறந்தோன்ற, திரிந்து – முகங்களைத் திரும்பிக்கொண்டு, நிற்பன – நிற்கின்றவைகண்முன், அனையவன் - அந்தராவணனுடைய, தலையை – தலைகளை, வவ்வவில் – கொண்டுபோய், கால் உறு-வாயுவேகத்தையுடைய, கணை-அம்புகள், கடிந்து – அறுத்து, இடுவ – விழ இடுவனவற்றை, காண்டி - நீபார்—எ-று. 61

நீர்த்தெழுகணைமழைவழங்கநீலவான்
வேர்த்ததென்றிடையிடைவீசுந்தூசுபோல்
போர்த்தெழுபொலன்கொடியிலங்கைப்பூழியோ
டார்த்தெழுகழுதிரைத்தாடக்காண்டியால்.

இ-ள். மழை நீர்த்து - மழையினது தன்மையாக, எழு-உண்டாகுகிற, கணை - அம்புகளை ஸ்ரீராமன், வழங்க - பெய்ய அதனாலே, நீலவான் - நீல நிறத்தையுடைய ஆகாயத்துக்கு, வேர்த்ததென்று - வேர்வையுண்டாயிற்றென்று அவ்வேர்வைபோக, இடை இடை - அங்கங்கே, வீசும் - வீசுகின்ற, தூசுபோல் - வஸ்திரத்தைப்போல், போர்த்து எழு - கவிந்துதோன்றுகிற, பொலன்கொடி - பொன்மயமானகொடி ஆடைகளைக்கொண்ட, இலங்கை - இந்த இலங்கையிலே, பூழியோடு - பூதூளிகளுடனே, ஆர்ந்து - நிறைதலாய், எழு - எழுகின்ற, கழுகு - பசாசுகள், இறைத்து - கொக்கரித்துக்கொண்டு, ஆட - கூத்தாட, காண்டி - நீபார்—எ-று. 62

நீனிறவரக்கர்தங்குருதிநீத்தநீர்
வேலைமிக்காற்றொடுமீளவேலைசூழ்
ஞாலமுற்றுங்கடையுகத்துநச்சறுக்
காலனும்வெறுத்துயிர்காலக்காண்டியால்.

இ-ள். நீலநிறம் - கறுத்த நிறத்தைக்கொண்ட, அரக்கர்தம் - ராக்ஷதர்களுடைய, குருதிநீத்தம் - ரக்தப்பிரவாகம், நீர்வேலை - நீர்மயமானகடலை, மிக்கு - நிரம்பச்செய்து, ஆற்றொடு - உப்பங்கழிகளுடனேபோய்க்கூடி, மீள - மேலேறிச் செல்லவும், வேலை சூழ் - கடல்சூழ்ந்த, ஞாலமுற்றும் - உலகமுடிவாகிற, கடையுகத்து - உகாந்தத்திலே, நச்சு அறு - உயிர்களை அழித்தலில் இரக்கமில்லாத, காலனும் - யமனுங்கூட, வெறுத்து - அழித்தலிலே சலித்து, உயிர்கால - மூச்சுவிடவும் ஓய்ந்துபோவதும், காண்டி - நீ பார்—எ-று. 63

அணங்கிளமகளிரொடரக்கராடுறு
மணங்கிளர்சற்பகச்சோலைவாவிவாய்
பிணங்குறுவான்முறைபிடித்துமாலைய
கணங்கொடுகுரக்கினங்குளிப்பக்காண்டியால்.

இ-ள். அணங்கு - அழகுள்ள, இளமகளிரோடு - யௌவனப் பெண்களுடனே, அரக்கர்-ராக்ஷதர்கள், ஆடுறும் - ஸ்நானஞ்செய்கிற, மணங்கிளர் - வாசனை பரிமளிப்பதான, கற்பகச்சோலை - கற்பகப்பூஞ்சோலையிலுள்ள, வாவிவாய் - குளங்களிலே, பிணங்கு உறு - கோணியிருக்கிற, வால் - ஒன்றன்வாலைமற்றொன்று, முறை - வரிசைவரிசையாக, பிடித்து - பற்றிக்கொண்டு, மாலைய - நீளநீளமாய், கணங்கொண்டு - கூட்டங்கொண்டு, குரக்கினம் - குரங்குக் கூட்டங்கள், குளிப்ப - ஸ்நானஞ்செய்ய, காண்டி - நீபார்.

செப்புறமிலன்பலதெய்வவாளிகள்
இப்புறத்தரக்கரைமுருக்கியேகின
முப்புறத்துலகையுமுடிக்கமூட்டலான்
அப்புறத்தரக்கருமவியக்காண்டியால்.

இ-ள். பலசெப்புறல் - பலவாகச் சொல்லுதலாலே, என் — யாது பய னுண்டாம், தெய்வம் — தெய்வத்தன்மையுள்ள, வாளிகள் — அம்புகளான வை, இப்புறத்து — இந்த இலங்கையிலுள்ள, அரக்கரை — ராக்ஷதர்களை, முருக்கி — கொன்று, ஏகின் — சென்றனவாய், மூப்புறத்து — மூன்றிடங்க ளான மூவகையான, உலகையும் — லோகங்களையும், முடிக்க — முடிவுசெய்ய, முட்டலால் — அம்புகள்விடுகிறதினாலே, அப்புறத்து — மூவுலகுக்கப்பாலு முள்ள, அரக்கரும் — ராக்ஷதர்களும், அவிய - சாவ, காண்டி — நீபார்—எ-று.

ஈண்டொருதிங்களிவ்விடரின்வைகுதல்
வேண்டுவதன்றுநான்விரைவில்வீரனைக்
காண்டலேகுறைவுபின்காலம்வேண்டுமோ
ஆண்டகையினியொருபொழுதுமாற்றுமோ.

இ-ள். ஈண்டு — இங்கே, ஒருதிங்கள் - ஒருமாத அளவு, இவ் இடரில் — இப்படியான துன்பத்திலே, வைகுதல்-தங்கியிருப்பது இருக்க, வேண்டுவது அன்று — வேண்டியதில்லை, நான் — அடியேன், விரைவில் - சீக்கிரத்திலே, வீரனை - ஸ்ரீராமனைப்போய், காண்டலே — காண்பதே வேண்டுவது, குறை வுபின் — காணுங்குறை தீர்ந்தபின்பு, காலம்வேண்டுமோ — கால அளவும் வேணுமோவேண்டா, ஆண் தகை - புருஷசிரேஷ்டரான பெருமாள், இனி — நான் கண்டு சொன்னபின்பு, ஒருபொழுதும் - ஒருநாளாவது, ஆற் றுமோ — பொறுத்திருப்பாரோ பொறார்—எ-று. 66

ஆவியுண்டென்னுமீதுண்டுன்னருயிர்ச்
சேவகன்றிருவுருத்தீண்டத்தீதிலாப்
பூவிலைதளிரிலைபொரிந்துவெந்திலாக்
காவிலைகொடியிலைநெடியகானெலாம்.

இ-ள். ஆவி - அவருக்கு உயிர், உண்டென்னும் — உண்டென்பதான, ஈது - இவ்வார்த்தைமாத்திரம், உண்டு — உள்ளதேயாம், உன் — உனது, ஆர் உயிர் - அரிதான உயிர்போன்ற, சேவகன் — மகாவீரரான பெருமா ளுடைய, திருவுரு — திருமேனியை, தீண்ட — தொடுதற்கு, தீதிலா - கரித வில்லாத, பூ இலை — புட்பங்களுமில்லை, தளிர் இலை — தளிர்களுமில்லை, பொரிந்து - பொரிப்பொரியாய், வெந்திலா — வேவுதலில்லாத, கா இலை- சோலைகளுமில்லை, கொடி இலை — கொடிகளுமில்லை, நெடிய - நெடிதான, கானெலாம் — காடுகளெல்லாம்—எ-று. 67

சோகம்வந்துறுவதுதெளிவுதோய்ந்தன்றோ
மேகம்வந்திடித்துவந்துருவுமூழ்கினும்
ஆகமம்புயங்களுமழுந்தவைந்தலை
நாகம்வந்தடர்ப்பினுமுணர்வுநாறுமோ.

இ-ள். சோகம் — துன்பம், வந்து உறுவது — வந்துசேர்கிறது, தெளிவு- ஞாபகமானநினைவு, தோய்ந்து அன்றோ - உண்டாகி அல்லவோ நினைவில்லை

யானால் எப்படி சோகமென்பது தெரியுமென்றபடி, மேகம் வந்து — மேகங்கள் கூடி, இடித்து — கெர்ச்சித்து, வந்து — வருதலாலே, உருமு — இடிவந்து, வீழ்கினும் — விழுந்தாலும், ஆகமும் — மார்பிலும், புயங்களும் — தோள்களிலும், அழுந்த — பதிய, ஐந்தலை — ஐந்து தலைகளுள்ள, நாகம் வந்து — பாம்பு வந்து, அடர்ப்பினும் — கொத்திநூலும் கடித்தாலும், உணர்வு — நினைவு பிரக்ஞை, நாறுமோ — தோன்றுவதுண்டா இல்லை—எ-று. 68

மத்துறுதயிரெனவந்துசென்றிடை
தத்துறுமுயிரொடுபுலன்கடள்ளுறும்
பித்துநின்பிரிவினிற்பிறந்தவேதனை
எத்தனையுளவவையெண்ணுமீட்டவோ.

இ-ள். மத்துஉறு — மத்துவிழுந்து கலக்குகிற, தயிரென — தயிர்போல், வந்து — உடம்புள்ளேவந்தும், சென்று — வெளியேபோயும், இடை — இப்படிநடுவேநின்று, தத்துறும் — தடுமாறுகிற, உயிரொடு — உயிருடனே, புலன்கள் — எதிர்விஷயங்களும், தள்ளுறும் — தோன்றுதிருக்கிற, பித்து — பைத்தியத்துடனே, நின்பிரிவினில் — உனது பிரிவினாலே, பிறந்த — உண்டான, வேதனை — துன்பங்கள், எத்தனை உள — எவ்வளவு உண்டு, அவை — அவ்வளவும், எண்ணும் — எண்ணிச்சொல்வதான, ஈட்டவோ — தகுதியுள்ளவைகளோ—எ-று. 69

இந்நிலையுடையவன்றரிக்குமென்றியேல்
மெய்ந்நிலையுணர்ந்துழிமிடைந்ததீதெனிற்
பொய்ந்நிலைகாண்டியான்புகன்றயாவுமுன்
கைந்நிலைநெல்லியங்கனியிற்காட்டுகேன்.

இ-ள். இந்நிலை — இவ்வகையான சுவபாவம், உடையவன் — உள்ள பெருமான், தரிக்கும் — தாமதித்திருப்பார், என்றியேல் — என்பாயேஆனால், மெய்ந்நிலை — அவரது தேகநிலையை, உணர்ந்துழி — தெரிந்தபோது, மிடைந்தது — உண்டானது, ஈதுஎனில் — இத்தன்மையதே என்னல்தெரிவாய் ஆனால், பொய்நிலைகாண்டி — தாமதித்திருப்பாரென்று நீகொண்டது பொய்நிலையென்று தெரிவாய் பார்க்கக்கடவை, யான்புகன்ற — நான் இப்போது சொன்னவை, யாவும் — எல்லாம், உன் — உனது, கைநிலை — கையிலுள்ள, நெல்லியங்கனியில் — நெல்லிப்பழம்போல் பின்பு, காட்டுகேன் — காட்டக்கடவேன்—எ-று. 70

தீர்த்தனுங்கவிக்குலத்திறைபுந்தேவிநின்
வார்த்தைகேட்டுவப்பதன்முன்னர்மாக்கடல்
தூர்த்தனவிலங்கையைச்சூழுமாக்குரங்
கார்த்ததுகேட்டுவந்திருத்திஎன்னைநீ.

இ-ள். தீர்த்தனும் – ஸ்ரீராமனும், கவிக்குலத்து – வானரகுலத்துக்கு, இறையும் – அரசனுன! சுக்கிரீவனும், தேவி – தெய்வமான தாயே, நின் – உன்னுடைய, வார்த்தைகேட்டு – சொல்லைக்கேட்டு, உவப்பதன்முன்னம் – சந்தோஷிக்குமுன்னே, மாக்கடல் – பெரியகடலை, தூர்த்தன – மேடுசெய்தவைகளாய், இலங்கையை – இந்த இலங்காபுரியை, சூழும் – சுற்றுவனவான, மாக்குரங்கு – பெரியகுரங்குகள், ஆர்த்தது – சத்திக்கிறதை, கேட்டு-கேள்விகொண்டு, உவந்து – சந்தோஷித்து, இருத்தி – இருக்கக்கடவை, அன்னைநீ-தாயாகியநீ—எ-று. 71

எண்ணரும்பெரும்படைநாளையிந்நகர்
நண்ணியபொழுததுநடுவணங்கைநீ
விண்ணுறக்கருளன்மேல்விளங்கும்விண்டுவிற்
கண்ணனையென்னெடுவெரிநிற்காண்டியால்.

இ-ள். எண்ணரும் – எண்ணுதற்கரிதான, பெரும்படை – பெரியசேனைகள், நாளை – நாளைத்தினமே, இந்நகர் – இவ்வூருக்கு, நண்ணியபொழுது – வந்தபோது, அது – அந்தச் சேனைகளுக்கு, நடுவண் – நடுவே, நங்கைநீ–தாயினுஞ்சிறந்தநீ, விண்ணுற – ஆகாயத்தைப்பொருந்த, கருளன்மேல் - கருடன்மேலே, விளங்கும் – விளங்குகிற, விண்டுவில் – திருமால்போல், கண்ணனை – ஸ்ரீராமனை, என் – எனது, நெடு – நீண்ட, வெரிநில் – முதுகின்மேலே, காண்டி – நீபார்—எ-று. 72

அங்கதன்றோண்மிசையிளவலம்மலை
பொங்குவெங்கதிரெனப்பொலியப்போர்ப்படை
இங்குவந்திறுக்குநீயிடருமையமும்
சங்கையுநீங்குததனிமைநீங்குவாய்.

இ-ள். அங்கதன் – அங்கதனுடைய, தோள்மிசை – தோள்மேலே, இளவல் – இளையபெருமாள், அம்மலை – அந்த உதயகிரிமேலே, பொங்கு-விளங்குகின்ற, வெங்கதிரென – சூரியன்போல், பொலிய – விளங்கவும், போர் - பொருதவல்ல, படை – சேனைகள், இங்குவந்து – இங்கேவந்து, இறுக்கும் - இறங்கும், நீ இடரும் – துன்பமும், ஐயமும் – சந்தேகமும், சங்கையும் - ராக்ஷதிகளாலுண்டாகின்ற தோஷங்களும், நீங்குதி – நீங்குவாய், தனிமை - இங்கே ஒருத்தியாயிருத்தலும், நீங்குவாய் – தீர்வாய்—எ-று. 73

குராவருங்குழலியிக்குறித்தநாளினை
விராவருநெடுஞ்சிறைமீட்கிலானெனிற்
பராவரும்பழியொடும்பாவம்பற்றுதற்
கிராவணனவனிவனிராமனென்றனன்.

இ-ள். குரா – குரவமலர்கள், வரும் – மணப்பதான, குழலி – கூந்தலையுடையவளே, இ – இப்படி, குறித்த – அளவுசெய்த, நாளினை – நாள்களுக்

குள்ளே, விரா - இவ்வூரிலே சேர்ந்திருக்க, வரு - வருவதான, நெடுஞ்சிறை - நெடிய சிறையானதை காவலுக்குள்ளிருப்பதை, மீட்கிலான் - ராமன் மீளச் செய்யான், எனில் - என்றால், பாரா - பரவி, வரும்-வருவதான, பழியொடு-பழிப்புடனே, பாவம் - பாவமும், பற்றுதற்கு - கூடுதற்கு, இராவணன்-தசக்கிரீவனுவான், அவன் - அந்த ஸ்ரீராமன், இவன் - இந்தராவணன், இராமன் - இராமனுவான், என்றனன் - என்று சொன்னுர்—எ-று. 74

வேறு

ஆகவிம்மொழியாசிலகேட்டறிவுற்றுள்
ஓகைகொண்டுகளிக்குமனத்தளுயர்ந்தாள்
போகைநன்றிவனென்பதுபுந்தியின்வைத்தாள்
தோகையுஞ்சிலவாசகமின்னனசொன்னுள்.

இ-ள். ஆசில ஆக - யாதொரு தோஷமுமில்லையாக, இம்மொழி-இந்த வார்த்தைகளை, கேட்டு - கேள்விகொண்டு, அறிவுற்றுள் - தெளிந்தவளாகி, ஓகைகொண்டு - சந்தோஷப்பட்டு, களிக்கும் - ஆனந்திப்பதான, மனத்தள்-மனத்தையுடையவளாய், உயர்ந்தாள்-தலைநிமிர்ந்து நோக்கி, இவன்போகை-இனி இவன்போகுதலே, நன்று - நல்லகாரியம், என்பது - என்பதை, புந்தியின் - தன் எண்ணத்திலே, வைத்தாள் — கொண்டாளாகி, தோகையும்-சீதாபிராட்டியும், சிலவாசகம் - சிலசொற்கள், இன்னன - இத்தன்மையானவைகளை, சொன்னுள் - சொல்லினுள்—எ-று. 75

சேறியைவிரைந்தனைதீயவையெல்லாம்
வேறியானினியொன்றும்விளம்பலென்மேலோய்
கூறுகின்றனமுன்குறியுற்றனகோமாற்
கேறுமென்றவைசொல்லெனவின்னவிசைப்பாள்.

இ-ள். ஐய - அப்பனே, விரைந்தனை - சீக்கிரமாக, சேறி - போ, தீயவையெல்லாம் - நடுவேவருந் தீங்குகளையெல்லாம், வேறி - வென்றுகொள், யான் இனி - இனிமேல்நான், ஒன்றும் விளம்பலென் - ஒன்றுஞ் சொல்லமாட்டேன் ஆனுலும், மேலோய் - மேம்பாடுள்ளவனே, கூறுகின்றன-நான் சொல்வன என்னென்னில், முன்குறியுற்றன - முன்னே அடையாளமானவைகள் அவைகள், கோமாற்கு - பெருமாற்கு, ஏறுமென்று - சம்மதியாமென்றும், அவை - அவைகளை, சொல்லென - நீசொல்லென்றும், இன்ன-இப்படியாக, இசைப்பாள் - சொல்லுவாள்—எ-று. 76

நாகமொன்றியநல்வரையின்றலைமேனுள்
ஆகம்வந்தெனைவள்ளுகிர்வாளினளைந்த
காகமொன்றைமுனிந்தயல்கல்லெழுபுல்லால்
வேகவெம்படைவிட்டதுமெல்லவிரிப்பாய்.

இ-ள். நாகம் ஒன்றிய - ஆகாயத்தை அளாவின, நல்வரையின்தலை-நல்லமலையான சித்திர கூடத்திலே, மேனுள் - முன்னுளிலே, எனை-என்

னுடைய, ஆகம் — மார்பில், வந்து — கிட்டிவந்து, வள் — கூர்மையான, உகிர்-நகமாகிய, வாளின் — வாளாலே, அளைந்த — கீறின, காகம் ஒன்றை — ஒரு காக்கையை, மூளிந்து — கோபித்து, அயல் — தன் அருகிலே, கல் - கல்லின் மேல், எழு — முளைத்த, புல்லால் — ஒரு புல்லைக்கொண்டு, வேகம் — வேகமுள்ள, வெம் — வெவ்விய, படை - பிரமாஸ்திரமாக, விட்டது — விட்டதை, மெல்ல - மெதுவாக, விரிப்பாய் — நீசொல்லு—எ-று. 77

அங்கதஞ்சிநடுங்கியயன்பதியண்மி
இங்குநின்வரவென்னவெனக்கனல்வெய்த
மங்கைபங்கனொடெண்டிசையுஞ்செலமற்றோர்
தங்கடங்களிடங்கண்மறுத்தமைதைப்பாய்.

இ-ள். அங்கு அது — அப்போது அந்தக்காகம், அஞ்சி - பயந்து, நடுங்கி - நடுக்கங்கொண்டு, அயன்பதி - பிரமலோகத்தை, அண்மி — கிட்டி கிட்டினபோது, இங்கு — என்னுலகத்துக்கு, நின்வரவு-உன்வருதலினாலே, என்ன என — யாதுவிளையுமோவென்று, கனல்வு எய்த — பிரமன்கோபங்கொள்ள, மங்கைபங்கனொடு — பார்வதி சமேதனிடத்துடனே, எண்திசையும் — எட்டுத்திக்கிலும், செல - போக, மற்றோர் — அவர்களெல்லாம், தங்கள் தங்கள்-அவரவர்கள், இடங்கள் — இடங்களுக்கு வரவேண்டாமென்று, மறுத்தமை-தடுத்துவிட்டவைகளை, தைப்பாய் - அவருக்குத் தெரியச்சொல்லு—எ-று.

இந்திரன்றருமைந்தனுறுந்துயர்யாவும்
அந்தரத்தினினின்றவர்கண்டினியந்தோ
எந்தைதன்சரணன்றியோர்தஞ்சமுமின்றால்
வந்தவன்சரண்வீழ்கெனவுற்றதும்வைப்பாய்.

இ-ள். இந்திரன்தரும் - தேவேந்திரன்பெற்ற, மைந்தன் — புத்திரனான அந்தக்காகம், உறும் துயர் யாவும் — பட்ட துக்கமெல்லாம், அந்தரத்தினில்-ஆகாயத்திலே, நின்றவர் — சஞ்சரிக்கிறதேவர்கள், கண்டு — பார்த்து, இனி-இனிமேல், அந்தோ — ஐயோ, எந்தைதன் - எங்கள் சுவாமியான பெருமானுடைய, சரண் அன்றி — பாதமல்லது, ஓர்தஞ்சமும் — வேறே ஒரு ஆதரவும், இன்று ஆல் — இல்லை ஆகலால், வந்து - காகமேநீபோய், அவன் சரண் — அந்தப்பெருமாள் பாதத்திலே, வீழ்கென - விழக்கடவையென்ன, உற்றதும் — காகம் மீண்டுவந்ததையும், வைப்பாய் — தெரியவைக்கவேணும்.

ஐயநின்சரணஞ்சரணென்றவனஞ்சி
வையம்வந்துவணங்கிடவள்ளன்மகிழ்ந்தே
வெய்யவன்கணிரண்டொடுபோகெனவிட்ட
தெய்வவெம்படையுற்றுளதன்மைதெரிப்பாய்.

இ-ள். ஐய — ஐயனே ஓசுவாமி, நின் சரணம் — உன் திருவடிகளே, சரணென்று — ரக்ஷிக்கவல்லனவென்று, அவன் - அந்தச்சயந்தன், அஞ்சி — பய

ந்து, வையம்வந்து — பூமியில்வந்து, வணங்கிட — நமஸ்கரிக்க, வள்ளல் — பரமோதாரரான பெருமாள், மகிழ்ந்து — சந்தோஷித்து, வெய்யவன்கண்-அந்தக் கொடியவனுடைய, கண் இரண்டொடு — இரண்டுகண்களையும் பிடுங்கிக் கொள்ளுதலுடனே, போகென — அஸ்திரத்தைச் செல்லென்று, விட்ட- அனுசந்தித்த, தெய்வம் — தெய்வத்தன்மையுள்ள, வெம் — வெவ்விதான, படை — பிரமாஸ்திரம், உற்றுளதன்மை — அப்படியேசென்றபடியை, தெரிப்பாய் — பெருமாளுக்குத் தெரியச்சொல்லு—எ-று. 80

எந்தைநின்சரணஞ்சரணென்றவிதன்னால்
முந்துநின்குறையும்பொறைதந்தனமுந்துன்
சந்தமொன்றுகொடித்திரள்கண்கடமக்கே
வந்தொர்நன்மணிநிற்கெனவைத்ததும்வைப்பாய்.

இ-ள். எந்தை — என்சுவாமி, நின்சரணம் — உன்பாதமே, சரண் என்ற- ரக்ஷகமென்ற, இதனால் — இந்தச்சொல்லாலே, முந்து — முன்னேநீசெய்த, நின்குறையும் — உன்குற்றத்தையும், பொறைதந்தனம் — பொறுத்தோம், முந்து — இக்காலத்துக்குமுன்னே, உன்சந்தம் — உன்வடிவை, ஒன்று-பொருந்தின, கொடித்திரள் — காக்கைக் கூட்டங்களுடைய, கண்களுக்கு — இரண்டு கண்களுக்கும், வந்து — வருவதாய், ஓர் நன்மணி — ஒரு நல்லகண்மணியே, நிற்கென — நிலையாகக் கடவதென்று வைத்ததும் — நிலையுறுத்தினதையும் வைப்பாய் — தெரியவைத்தி—எ-று. 8

வேகம்விண்டுசயந்தன்வணங்கிவிசும்பில்
போகவண்டர்கள்கண்டலர்கொண்டுபொழிந்தார்
நாகநம்பனிளங்கிளைநன்குணராத
பாகுதங்கியவென்றியினின்சொல்பணிப்பாய்.

இ-ள். வேகம்விண்டு — தான்வேகங்கொண்டலைந்ததைவிட்டு, சயந்தன் இந்திரகுமாரன், வணங்கி — கும்பிட்டுக்கொண்டு, விசும்பில் — ஆகாயத்திலே போக — செல்லச்செய்தே, அண்டர்கள்கண்டு — தேவர்கள்பார்த்து, அலகொண்டு — புஷ்பங்களைவாரி, பொழிந்தார்கள் — சிந்தினார்கள், நாக நம்பன் மலைகளிற் சிறந்தவனான பருபதராஜனுக்கு, இளங்கிளை — இளையபிள்ளை போன்ற இளையபெருமாள், நன்கு — இச்செய்கைகளை நன்றாய், உணராது தெரியாத, பாகுதங்கிய — ரஸம்பொருந்தின, வென்றியின் — காகஜயத்தை நின்சொல் — உன்சொல்லாலே, பணிப்பாய் — சொல்லு—எ-று. இந்தக்காகசுரஜயம் இளையபெருமாளில்லாதகாலத்திலே நடந்ததென்க. பருபதராஜன் பிள்ளையென்றது மேருமலைபோல்வார் இளையபெருமாளென்க. 8.

என்றொரின்னுயிர்மென்கிளிக்கியார்பெயரீகென்
மன்னவென்றனுமாசறுகைகயன்மாதென்
அன்னைதன்பெயராகெனவன்பினொடன்றட்
சொன்னமெய்ம்மொழிசொல்லுதிமெய்ம்மைதொடர்ந்தோய்.

இ-ள். என் ஒர் - எனது ஒப்பற்ற, இன் உயிர் - இனிய உயிர்போன்ற, மென்கிளிக்கு - மெல்லியகிளிப்பிள்ளைக்கு, யார்பெயர்-யாருடையபெயரை, ஈகேன் - வைப்பேன், மன்ன - பெருமானே, என்றலும் - என்று நான் கேட்டபோது, மாசு அறு - குற்றந்தீர்ந்த, கையன்மாது - கேகயராஜ குமாரியான, என் அன்னைதன் - எனதுதாயினுடைய, பெயர் - பெயரே, ஆகெனவைக்கக்கடவதென்று, அன்பினொடு - பிரியத்துடனே, அந்நாள்-அப்போது, சொன்ன - சொல்லிய, மெய்மொழி-மெய்யானவார்த்தையை, சொல்லுதி-சொல்லு, மெய்மை - மெய்மார்க்கத்தை, தொடர்ந்தோய் - அனுசரித்தவனே—எ-று. 83

என்றுரைத்தினிதித்தனைபேரடையாளம்
ஒன்றுணர்த்துவதில்லெனவெண்ணியுணர்ந்தாள்
தன்றிருத்துகிலிற்பொலிவுற்றதுதானே
வென்றதச்சுடர்மேலொடுகீழுறமெய்யால்.

இ-ள். என்று - என்பதாய், இனிது உரைத்து - நன்றாகச்சொல்லி, இத்தனை - இவ்வளவு, பேர் அடையாளம் - பெரிய அடையாளங்களில், ஒன்று - ஒன்றும் இதுபோல, உணர்த்துவது-மெய்க்காட்டுவது, இல்லென-இல்லையென்று, எண்ணி - ஆலோசித்து, உணர்ந்தாள் - தெரிந்தவளாய், தன் திருத்துகிலில் - தனதுதிருவுடையிலே, பொலிவுற்றது - அடங்கியுள்ளள, தானே - அதுதானே, மெய்யால் - தன்வடிவொளியாலே, மேலொடு-மேலுலகத்துடனே, கீழ் உற - கீழுலகமும்தெரிய, அச்சுடர் - அந்தச் சூரியன் முதலான தேஜசுக்களை, வென்றது - ஜயங்கொண்டிருப்பது—எ-று.

வாங்கினடன்மலர்க்கையினன்னதுமுன்னு
ஏங்கினளவ்வநுமனுமென்கொலிதென்னு
வீங்கினன்வியந்தானுலகேழும்விழுங்கித்
தூங்குகாரிருண்முற்றுமிரிந்ததுசுற்றி.

இ-ள். தன்மலர் - தனதுமலர்போன்ற, கையின் - கையிலே, வாங்கினள் - கொண்டாள், அன்னது - அதை, முன்னு - நினைத்து, ஏங்கினள்-விசனப்பட்டாள், அவ் அனுமனும் - அந்த அனுமாருங்கண்டு, இது - இப்பொருள், என்கொலென்னு - யாதோவென்று, வீங்கினன் - உடம்புபூரித்தவராய், வியந்தான் - அதிசயித்தார், உலகேழும்-எழுலகங்களையும், விழுங்கி-கபளீகரித்து, தூங்கு - தூங்குகின்ற, கார் - கறுத்த, இருள்முற்றும் - இருள்முழுதும், சுற்றி - சூழ்ந்து ஒருசேர, இரிந்தது - ஓடிப்போயிற்று—எ-று.

மஞ்சலங்கொளியோனுமிம்மாநகர்வந்தான்
அஞ்சலன்னெனவெங்கணரக்கரயிர்த்தார்
சஞ்சலம்புரிசக்கரவாகமுடன்ரூழ்
கஞ்சமும்மலர்வுற்றனராத்தினகாந்தம்.

இ-ள். அஞ்சலன் — பயப்படாதவனும், மஞ்சு — மேகமண்டலத்துக்கு மேலே, அலங்கு - விளங்குகின்ற, ஒளியோனும் — சூரியனும், இம்மா நகர் - இந்தப்பெரிய ஊருக்குள்ளே, வந்தான் என — வருவதானுனென்று, வெங்கண் — கொடுமைசெய்கிற, அரக்கர் — ராக்ஷதர்கள், அயிர்த்தார் — சந்தேகித்தார்கள், சஞ்சலம்புரி — துன்பங்கொண்டலேகிற, சக்கரவாகமுடன் — சக்கரவாகப் பட்சிகளுடனே, தாழ் — அந்த நீரிலேதங்குகிற, சஞ்சலம் — தாமரைகளும், மலர்வுற்றன - முகமலர்ச்சியாயின, காந்தம் — சூரிய காந்தக்கற்கள், காந்தின — கொதிப்பதாயின—எ-று. இராத்திரி காலத்திலே இரைக்காக அலேதலேவிட்டு — பகற்கால மாயிற்றென்று நீரிலே முழுகிப்புணர்தற்கு முக மலர்ச்சியாகச்செய்தது சூடாமணி. 86

கூந்தன்மென் மழைக்கொண்முகின் மேலெழுகோளின்
வேந்ததன்னது மெல்லியறன்னெழின் மேனி
சேந்ததந்தமில்சேவகன் சேவடிபோலக்
காந்துகின்றது காட்டினண் மாருதிகண்டான்.

இ-ள். மென்கூந்தல் — மெல்லிதான அளகபாரமென்கிற, மழைகொள் - குளிர்ச்சிகொண்ட, முகில்மேல் — மேகத்தின்மேலே, எழு — தோன்றுகிற, கோளின்வேந்து — கிரகங்களிற்சிறந்த சூரியன்போல்வது, அது — அந்தச் சூடாமணி, அன்னது — அப்படிப்பட்ட சூடாமணியானது, மெல்லியல்தன் - மிருதுவே சுவபாவமான சீதா பிராட்டியினுடைய, எழில் — அழகிதான, மேனி - திருமேனிபோல், சேந்தது - சிவந்திருப்பது, அந்தம் இல் - முடிவில்லாத, சேவகன் — வீரத்தன்மைகொண்ட பெருமாளுடைய, சேவடி போல — சிவந்த திருவடிகள்போல், காந்துகின்றது-விளங்குகின்றதை, காட்டினள் - தெரியக்காண்பித்தாள், மாருதி — அனுமாரானவர், கண்டான்-பார்த்தார்—எ-று. 87

சூடையின்மணிகண்மணியொப்பதுதொன்னாள்
ஆடையின்கணிருந்ததுபேரடையாளம்
நாடிவந்தெனதின்னுயிர்நல்கியநம்பா
கோடியென்றுகொடுத்தனண்மெய்ப்புகழ்கொண்டாள்.

இ-ள். சூடையின்மணி — இது நான் தலேமேல் முடிக்கிற சூடாமணி, கண்மணி ஒப்பது — எனக்குக் கண்மணிபோல்வது, தொல்நாள் — முன்சிறையில்கப்பட்ட நாள்முதல், ஆடையின்கண் — என்வஸ்திரத்திலே, இருந்தது - முடிந்திருக்கலானது, பேர் அடையாளம் — இதுவேபெரிதான அடையாளமாம், நாடிவந்து — என்னேத்தேடிவந்துகண்டு, எனது இன் உயிர் — எனதினிய உயிரை, நல்கிய - கொடுத்த, நம்பா — புருஷசிரேஷ்டனே, கோடியென்று — கொள்ளென்று, கொடுத்தனள் — கொடுத்தாள், மெய்ப்புகழ்-மெய்யானகற்பென்னும் புகழையே, கொண்டாள்-பரிபாலித்தவள்—எ-று. சூடாமணியென்பது நடுவே ரத்நம்பதித்த சடைப்பில்லே. 88

தொழுதுவாங்கினன் சுற்றியதூசினன் முற்றப்
பழுதுருவகைபந்தனைசெய்தனன்வந்தித்
தழுதுமும்மைவலங்கொடிறைஞ்சினனன்போ
டெழுதுபாவையுமேத்தினளேகினனிப்பால்.

இ-ள். தொழுது - கும்பிட்டு, வாங்கினன் - வாங்கி அதை, சுற்றிய-முடிந்த, சீரையன் - உடையையுடையவராய், முற்ற தாம்-கொண்டுபோய்க் கொடுக்குமளவும், பழுது - அதற்கு யாதொருதோஷமும், உருவகை - வாராதபடி, பந்தனைசெய்தனன் - பத்திரப்படுத்தினர், வந்தித்து - பிராட்டியைவணங்கி, அழுது - தனிமைகருதித் துக்கித்து, மும்மை - மூன்றுதரம், வலங்கொண்டு - வலம்வந்து, இறைஞ்சினன் - வணங்கினர், அன்போடு-பிரியத்துடனே, எழுது - எழுதின, பாவையும் - சித்திரத்தை ஒப்பான பிராட்டியும், ஏத்தினள் - ஆசீர்வதித்தாள், ஏகினன் - சென்றார், இப்பால்-பின்பு—எ-று. 89

சூடாமணிப்படலம் முற்றிற்று

ஆ படலம் – 6 — க்கு திருவிருத்தம் – 694

கம்பநாட்டாழ்வார் திருவடிகளே சரணம்

ஏழாவது

# பொழிலிறுத்தபடலம்

## அசோகவனத்தை அழித்தது

நெறிக்கொடுவடக்குறநினைப்பினிநிமிர்ந்தான்
பொறிக்குலமலர்ப்பொழிலிடைக்கடிதுபோவான்
சிறுத்தொழின்முடித்தகறநீதெனத்தெரிந்தான்
மறித்துமொர்செயற்குரியகாரியமதித்தான்.

இ-ள். நினைப்பினில் — மனத்திலே, வடக்குற — வடக்கு முகமாக, நெறிக்கொடு - பிரயாணமாய், நிமிர்ந்தான் - எழுந்தவராய், பொறி - பிராட்டி யிருக்கிற, குலமலர் — விசேஷபுஷ்பங்களையுடைய, பொழிலிடை — அந்த அசோகவனத்தினின்றும், கடிதுபோவான் - விரைந்து செல்லுமவரான திருவடி, சிறுதொழில் — பிராட்டியிருக்கு மிடங்கண்டு செல்லுதலோ மிகவும் அல்பகாரியம், முடித்து — அதைமாத்திரமுடிவுசெய்து, அகல்தல் — போகிறது, நீது — ஆண்மைக்குமிகவுங்குறைவு, எனல் — என்பதாக, தெரிந்தான்- யோசித்தவராய், மறித்து — ஓர் பின்னும்ஒரு, செயற்குறிய — செய்யத்தக்க, காரியம் — செய்கையை, மதித்தான் — யோசித்தார் — எ-று. சிறுத்தொழில் விரித்தல் விகாரம். 1

ஈனமுறுபற்றலரையெற்றியெயின்மூதூர்
மீனநிலயத்தினுகவீசிவிழிமானை
மானவன்மலர்க்கழலின்வைத்துமிலெனென்றால்
ஆனபொழுதெப்பரிசினானடியனாவேன்.

இ-ள். ஈனம் உறு — இழிவால் மிகுந்த, பற்றலரை — இந்தப் பகைவர் களை எல்லாம், எற்றி — அடித்துக்கொன்று, எழில் — மதிலாற் சூழப்பட்ட, மூதூர் — இந்தப்பழையவூரை, மீன நிலயத்தில் — மீன்களுக்கிருப்பிடமான இந்தக்கடலிலே, உக — கவிழ, வீசி — கொட்டிவிட்டு, விழிமானை — மான் போலுங்கண்களுள்ளபிராட்டியை, மானவன் — புருஷசிரேஷ்டருடைய, மலர்க்கழலில் — மலர்போலுந் திருவடிகள் முன்னே, வைத்தும் — கொண்டு போய்வைப்பதையும், இலென் — செய்யாதிருக்கிறவன், என்றால் — நானே யென்று சொல்லலானால், ஆனபொழுது - அப்படிச்சொல்லலானபோது, எப்பரிசின் — பின்னை எந்தவகையினாலே, நான் அடியனாவேன் — நான் அடிமையாகப் பெறுவேன் — எ-று. அடிமையென்னத் தக்கிலேனென்கிறார். 2

வஞ்சனையரக்கனைநெருக்கிநெடுவாலால்
அஞ்சினுடனஞ்சுதலைதோளுறவசைத்தே
வெஞ்சிறையில்வைத்துமிலென்வென்றுமிலெனென்றால்
தஞ்சமொருவர்க்கொருவரென்றதருமன்றோ.

இ-ள். வஞ்சனை - திருடிக்கொண்டுவந்த, அரக்கனை - இந்த ராவண ராக்ஷதனை, நெருக்கி - இருபதுகைகளும் ஒருசேரப்பண்ணி, நெடுவாலால்- எனது நீண்டவாலாலே, அஞ்சினொடும் - ஓரஞ்சுடனே, அஞ்சு - பின்னு மோரஞ்சுகூடின, தலை - தலைகளையும், தோளுற - இருபது தோள்களோடு கூட, அசைத்து - கட்டிக்கொண்டுபோய், வெஞ்சிறையில் - கொடியசிறைக் கூடத்திலே, வைத்தும் - வைப்பதையும், இலென் - செய்யாதிருக்கிறேன், வென்றும் - ஜெயங்கொள்வதையும், இலென் - செய்யாதிருக்கிறேன், என்றால் - என்றுசொல்லலானால், ஒருவர்க்கு - ஒருவருக்கு, ஒருவர் - மற்றொருவர், தஞ்சமென்றல் - ஆதரவாகவேணுமென்பது, தகும் அன்றே - தக்கதா மல்லவோ, அத்தகவிலேன் - நான் என்பது குறிப்பு—எ-று. 3

கண்டநிருதக்கடல்கலக்கினனெவலத்தில்
திண்டிறலரக்கனுமிருக்கவொர் திறத்தின்
மண்டவுதரத்தவண் மலர்க்குழல்பிடித்துக்
கொண்டுசிறைவைத்திடுதலிற்குறைவதுண்டோ.

இ-ள். கண்ட - இப்போது நான்பார்த்த, நிருதக்கடல் - ராக்ஷதக் கடலை, கலக்கினன் - வலத்தில் - என்வலியாலேகலக்கி, திண்திறல் - மிக்க வலியையுடைய, அரக்கனும் - இந்தராவணனும், இருக்க - பார்த்துக்கொண் டிருக்கச்செய்தே, ஓர்திறத்தின் - என் ஒரு சக்தியினாலேதானே, மாண்ட வுதரத்தவள் - மண்டோதரியை, மலர்க்குழல் - அவள் பூங்குழலை, பிடித்துக் கொண்டு - பிடித்திழுத்துக்கொண்டுபோய், சிறைவைத்திடுதலில் - கிட் கிந்தாபுரியிலே சிறையில் வைத்தால், குறைவது - அதனாலே காரியக்குறை வாவது, உண்டோ - உளதாமோ உளதாகாது—எ-று. மண்டோதரி இரா வணன் மனைவி. 4

மீட்டுமினியெண்ணும்வினைவேறுமுளதன்றால்
ஓட்டியிவ்வரக்கரையுலைத்துரிமையெல்லாம்
காட்டுமிதுவேகருமமன்னவர்கடும்போர்
மூட்டும்வகையாவதுகொலென்றுமுயல்கின்றான்.

இ-ள். மீட்டும் - மறுபடியும், இனி - இன்னமும், எண்ணும்வினை - ஆலோசிக்குங்காரியம், வேறும் - இவைகளைவிடவேறே, உளது - உள்ள தானால், அன்று - அதுசெய்யத்தக்கதன்றாம், இவ் அரக்கரை - இந்த ராக்ஷ தர்களை யெல்லாம், ஓட்டியுலைத்து - ஊரைவிட்டுத் துரத்திப்பின்பு, உரிமை யெல்லாம்-நான் அடிமையென்னும் பாக்கியதைமுழுதும், காட்டும் இதுவே, தெரியச்செய்கிற இதே, கருமம் - செய்யத்தக்ககாரியம் ஆனால், அன்னவர்- அந்தராக்ஷதர்களுடனே, கடும்போர் — கடிதானசண்டை, மூட்டும் வகை- செய்யும் விதம், யாவது என்று - எப்படியென்று, முயல்கின்றான் — அதற் குத்தக யோசிக்கிறார், கொல் - அசை—எ-று. 5

இப்பொழிலினைக்கடிதிறுக்குவெனிறுத்தால்
அப்பெரியபூசல்செவிசார்தலுமரக்கர்

வெப்புறுசினத்தரெதிர்மேல்வருவர்வந்தால்
துப்புறமுருக்கியுயிருண்பலிதுசூதால்.

இ-ள். இப்பொழிலினை - இந்தச்சோலையை, கடிது - விரைவிலே, இறுக்குவென் - அழிக்கிறேன், இறுத்தால் - அப்படி அழித்தால், அ- அந்த, பெரிய பூசல் - பெருமுழக்கம், செவிசார்தலும் - செவியில் விழுந்த வுடனே, அரக்கர் - ராக்ஷதர்கள், வெப்பு உறு - வெம்மைமிகுந்த, சினத்தர்- கோபமுள்ளவர்களாய், எதிர் - நமக்குமுன்னே, மேல்வருவர் - இனி வரு வார்கள், வந்தால் - அப்படிவாலானுல், துப்பு உற - எனது பலமிகுதியாக முறுக்கி - எல்லாரையுங்கொன்று, உயிர் - அவருயிர்களையெல்லாம், உண் பல் - பக்ஷிப்பேன், இது சூது - இதுவே உபாயம், ஆல் - அசை—எ-று. 6

வந்தவர்கள்வந்தவர்கண்மீள்கிலர்மடிந்தால்
வெந்திறலரக்கனும்விலக்கருவலத்தால்
முந்துமெனினன்னவன்முடித்தலைமுசித்தென்
சிந்தையுறுகோபமுமவித்தினிதுசெல்வேன்.

இ-ள். வந்தவர்கள் வந்தவர்கள் - மேன்மேலும் வந்தவர்களெல்லாம், மீள்கிலர் - திரும்பாதவர்களாய், மடிந்தால் - செத்தால் பின்பு, விலக்கஅரு- யாராலும் என்னைத்தடுக்க அரிதாயிருக்கிற, வலத்தால் - பலத்தைப்பற்றி, வெம்திறல் - வெவ்விதான பலத்தையுடைய, அரக்கனும் - அந்த ராவண னும், முந்துமெனில் - வருவானுனல், அன்னவன் - அந்த ராவணனுடைய, முடித்தலை - கிரீடமணிந்த தலைகளை, முசித்து - திருகி, என் சிந்தையுறு- என் மனத்திலே உள்ளதான, கோபமும் - கோபத்தையும், அவித்து-தணித் துக்கொண்டு, இனிது - சந்தோஷமாக, செல்வேன் - போகக்கடவேன். 7

என்றுநினையாவிரவிசந்திரனியங்கும்
குன்றமிருதோளனையதன்னுருவுகொண்டான்
அன்றுலகெயிற்றிடைகொளேனமெனலானுன்
துன்றுகடிகாவினையடிக்கொடுதுகைத்தான்.

இ-ள். என்று நினையா - என்று நினைத்து, இரவி சந்திரன் - சூரிய சந் திரர்கள், இயங்கும் - சஞ்சரிப்பதான, குன்றம் - மேருமலையே, இருதோள்- இரண்டு தோள்களும், அனைய - ஒப்பதான, தன்உருவு - தனது பெரிய வடிவை, கொண்டான் - கொண்டவராய், அன்று - இரணியாக்ஷனை வதை த்த அப்போது, உலகு - உலகை, எயிற்றிடை - தனதொரு கொம்பிலே, கொள் - கொண்ட, ஏனம் - மஹாவராகமே, எனலானுன் - நிகரென்ன லான திருவடி, துன்றுகடி - நெருங்கின வாசமுள்ள, காவினை - அசோக வனத்தை, அடிக்கொடு - தமது கால்களாலே, துகைத்தான் - மிதித்துழக் கினுர்—எ-று. 8

முடிந்தனபிளந்தனமுரிந்தனநெரிந்த
மடிந்தனபொடிந்தனமறிந்தனமுறிந்த

இடிந்தன தகர்ந்தனவெரிந்தனகரிந்த
ஒடிந்தனவொசிந்தனவுதிர்ந்தனபிதிர்ந்த.

இ-ள். முடிந்தன—சிலமரங்கள் வேரோடு முடிதலாயின, பிளந்தன—சில பிளவுகளாயின, முரிந்தன—சில முறிதலாயின, நெரிந்த—சில நெரிதலாயின, மடிந்தன—சில அடியோடு தலைசாய்ந்தன, பொடிந்தன—சில தூள் தூளாயின, மறிந்தன—சில மடங்கினவாய், முறிந்த—முறிதலாயின, இடிந்தன—சில கிளைகள் முதலியனவெல்லாஞ் சிந்துதலாயின, தகர்ந்தன—சில துண்டுதுண்டாயின, எரிந்தன—சில நெருப்புத்தோன்றி எரிதலாயின, கரிந்த—சில அதனாலே கரிதலாயின, ஒடிந்தன—சில ஒடிதலாயின, ஒசிந்தன—சில ஒடிந்து துவளளாயின, உதிர்ந்தன—சில பூ காய் முதலியன உதிர்தலாயின, பிதிர்ந்த—இப்படி ஒன்றன்மேலொன்றாய்ச் சில பிதிர்தலாயின—எ-று. 9

வேரொடுமறிந்தசிலவெந்தசிலவிண்ணில்
காரொடுமறிந்தசிலகாலினொடுவேலைத்
தூரொடுமறிந்தசிலதும்பியொடுவானோர்
ஊரொடுமறிந்தசிலவுக்கசிலநெக்க.

இ-ள். வேரொடுமறிந்த—வேரோடு மடங்கலாயின, சில-சிலமரங்கள், வெந்தசில—சிலமரங்கள் வேவலாயின, விண்ணில்—ஆகாயத்திலேபோய், காரொடு—மேகங்களோடுகூடி, மறிந்தசில—திரும்பலாயின சில, காலினொடு—காற்றோடுகூடி, வேலை—கடற்கரையிலுள்ள, தூரொடு—மரவேர்களுடனே, மறிந்தசில—மடங்கிவிழுந்தன சில, தும்பியொடு—வண்டுகளுடனேபோய், வானோர்ஊரொடு—தேவருலகத்திலேகூடி, மறிந்தசில—மீண்டனசில, உக்கசில—சில உதிர்தலாயின, நெக்க—இப்படி அசோகவனங்கடிகுலைந்தன, காலினொடு—உப்பங்கழிகளுடனேகூடி, வேலை—கடலுக்கு, தூரொடுமறிந்த—வேரொடு செல்லலாயின எனவுமாம்—எ-று. 10

சோலைமுதன்மற்றவைசுழற்றியதிசைப்போர்
ஆனைநுகரக்குளகுமானவடிபற்றா
மேனிமிரவிட்டனவிசும்பின்வழிமீப்போய்
வானவர்கணந்தனவனத்தையுமடித்த.

இ-ள். சோலைமுதல்—மேகமுதலான, மற்றவை—ஆகாயத்துள்ளவைகளை, சுழற்றிய—சிலமரங்கள் சுழற்றலாயின, திசை—திக்குகளிலேயுள்ள, போர்—பலமுள்ள, ஆனை—யானைகள், நுகர—தின்ன, குளகுமான—இலைகளுமாயின, அடிபற்றா—அடியைப்பிடித்து, மேல்நிமிர—மேலேபோக, விட்டன—எறிந்தமரங்கள், விசும்பின்வழி—ஆகாயமார்க்கமாய், மீப்போய்—மேலேசென்று, வானவர்கள்—தேவர்களுடைய, நந்தவனத்தையும்—சோலையையும், மடித்த—சில அழிக்கலாயின. 11

அலைந்தனகடற்றிரையரக்கரகன்மாடம்
குலைந்துகவிடிந்தனகுலக்கிரிகளோடு
மலைந்துபொடியுற்றனமயங்கிநெடுவானத்
துலைந்துவிழுமீனினொடுவெண்மலருதிர்ந்த.

இ-ள். கடல்திரை - கடலினலைகளெல்லாம், அலைந்தன - மரங்களலை தலாயின, அரக்கர் — அந்த ராக்ஷதர்களுடைய, அகல்மாடம் — அகன்றவீடுகள், குலைந்துஉக — கெட்டழிய, இடிந்தன - மரங்களாலிடிதலாயின, குலக்கிரிகளோடு — குலாசலங்களுடனே, மலைந்து - மோதிவிழுந்து, பொடியுற்றன — பொடிப்பொடியாயின, மயங்கி — கலந்து, நெடுவானத்து - நீண்ட ஆகாயத்தினின்றும், உலைந்துவிழு — அசங்கிவிழுகிற, மீனினொடு — நக்ஷத்திரங்களுடனே, வெண்மலர் — வெள்ளிய புட்பங்கள், உதிர்ந்த — உதிர்தலாயின — எ-று. 12

முடக்குநெடுவேரொடுமுகந்துலகமுற்றும்
கடக்கும்வகைவீசினகளித்ததிசையானை
மடப்பிடியினுக்குதவமையினிமிர்கைவைத்
திடுக்கியனவொத்தனவெயிற்றினிடைஞால்வ.

இ-ள். முடக்கு — கீழேவளைந்து பதிந்திருக்கிற, நெடுவேரொடு-நீண்ட வேருடனே, முகந்து — பிடுங்கி, உலகமுற்றும் - உலகமெல்லாம், கடக்கும்வகை — கடந்துபோய்விழும்படி, வீசின — எறிந்தமரங்கள், களித்த — மதமயக்கங்கொண்ட, திசையானை-திக்கியானைகள், மடப்பிடியனுக்கு-தமது இளைய பெண்யானைக்கு, உதவ — கொடுக்க, மையில் — மேகமண்டலத்தளவும், நிமிர்-நீளுகின்ற, கைவைத்து — துதிக்கையினடியிலேகொண்டு, இடுக்கியன-கொம்பொடு நெருங்கக்கொண்டிருக்கின்றவற்றை, ஒத்தன — ஒப்பாயின, எயிற்றினிடை — அதன் கொம்புகளிலே சொருகுதலாகி, ஞால்வ - தொங்குகிற மரங்கள் — எ-று. 13

விஞ்சையுலகத்தினுமியக்கர்மலைமேலும்
துஞ்சுதலில்வானவர்துறக்கநகரத்தும்
பஞ்சியடிவஞ்சியர்கண்மொய்த்தனர்பறித்தார்
நஞ்சமனையானுடையசோலையினறும்பூ.

இ-ள். விஞ்சையுலகத்தினும் — விஞ்சையருலகத்திலும், இயக்கர்மலைமேலும் - யக்ஷர்களுடைய மலைகளின்மேலும், துஞ்சுதல் இல் — மடிதலில்லாத, வானவர் — தேவர்களுடைய, துறக்கநகரத்தும் — சுவர்க்கலோகத்திலும் உள்ள, பஞ்சி — செம்பஞ்சுக்குழம்புபூசின, அடி — கால்களுள்ள, வஞ்சியர்கள் — பெண்கள், மொய்த்தனர் — நெருங்கிவந்து, நஞ்சம் அனையானுடைய-விஷம்போன்ற ராவணனுடைய, சோலையில் - பூஞ்சோலையிலுள்ள, நறும்பூ - நல்ல மலர்களை, பறித்தார் — கொய்தார்கள் — எ-று. அவ்வூர்களெல்லா மரங்கள்போய் விழுதலாலே நறும்பூப் பறித்தாரென்க. 14

பொன்றிணிமணிப்பருமரன்றிசைகள்போவ
மின்றிரிவவொத்தனவெயிற்கதிருமொத்த
ஒன்றினொடுமொன்றிடைபுடைத்துதிரவூழின்
தன்றிரளொடுக்கிவிழுதாரகையுமொத்த.

இ-ள். பொன் — பொன்னாலும், திணி — கெட்டியான, மணி — ரத்நத்தாலும் ஆகிய, பருமரன் — பருத்தமரங்கள், திசைகள்போவ — திக்குகளிலே போய் விழும்போது, மின்திரிவ — மின்னல் உலாவுகிறதையும், ஒத்தன — ஒப்பாயின, வெயிற்கதிரும் — சூரியப்பிரகாசத்தையும், ஒத்த — ஒப்பாயின, ஒன்றினொடும் — ஒருமரத்துடனே, ஒன்று — மற்றொருமரம், இடைபுடைத்து — எவ்விடங்களிலுமோதுதலாய், உதிர — சிந்துதலாக அவைகள், தன்திரள் — தமது திரட்சியெல்லாம், ஒடுக்கி — ஒடுங்கக்கொண்டு, ஊழின் — முறைமுறையே, விழு — உதிருகிற, தாரகையும் — நக்ஷத்திரங்களையும், ஒத்த — ஒப்பாயின—எ-று. பொன்மரம் — மின்னலையும், மணிமரம் — சூரியப்பிரகாசத்தையும் ஒத்தனவென்பது இரணிறை சிதறிவிழுகிற துண்டுகள் நக்ஷத்திரங்கள் போன்றனவென்க. தன் சாரியை. 15

புள்ளினொடுவண்டுமிஞிறுங்கடிகொள்பூவும்
கள்ளுமுகையுந்தளிர்களோடினியகாயும்
வெள்ளநெடுவேலையிடைமீனினம்விழுங்கித்
துள்ளினமரன்படநெரிந்தனதுடித்த.

இ-ள். புள்ளினொடு — பக்ஷிகளையும், வண்டும் — கருவண்டுகளையும், மிஞிறும் — பொன் வண்டுகளையும், கடிகொள் — மணங்கொண்ட, பூவும் — மலர்களையும், கள்ளும் — தேனையும், முகையும் — அரும்புகளையும், தளிர்களோடு — தளிர்களுடனே, இனிய — நன்றான, காயும் — பழங்களையும், வெள்ளம் — மஹாப்பிரவாகமான, நெடுவேலையிடை — நெடுங்கடலிலேயுள்ள, மீனினம் — மீன்கூட்டங்கள், விழுங்கி — மரங்கள்போய் விழுகிறதினாலே உண்டு, துள்ளின — முன் துள்ளுதலாயின, மரன்பட — பின்னுமரங்கள் போய் விழுவதனாலே, நெரிந்தன — நசுங்கினவாகி, துடித்த — துடிப்பனவாயின—எ-று. 16

தூவியமலர்த்தொகைசுமந்துதிசைதோறும்
பூவின்மணநாறுவபுலால்கமழ்கிலாத
தேவியர்களோடுமுயர்தேவரினிதாடும்
ஆவியெனலாயதிரையார்கலிகளம்மா.

இ-ள். தூவிய — எங்குஞ்சிந்தின, மலர்த்தொகை — புஷ்பக்குவியல்களை, சுமந்து — சுமந்துகொண்டு, திசைதோறும் — எந்த இடங்களும், பூவின் மணம் — புஷ்பவாசமே, நாறுவ — பரிமளிக்கின்ற, புலால் — மீனினது நாற்றம், கமழ்கிலாத — நாறுதிருக்கின்றன, தேவியர்களோடும் — தங்கள்மனைவிக

ளுடனே, உயர் - உயர்ந்த, தேவர் - தேவர்கள், இனிது - சந்தோஷமாக ஆடும் - முழுகுவதான, ஆவியெனலாய - குளமென்று சொல்லலாயின திரை - அலைகளையுடைய, ஆர்கலிகள் - கடல்கள் — எ-று. அம்மா அலை ஆர்கலிகள் முழுதும் மீளுற்றம்போய் பூமணநாறுகின்றனவென்க. 1'

இடந்தமணிவேதியுமிறுத்தகடிகாவும்
தொடர்ந்தனதுரந்தனபடிந்துநெறிதூரக்
கடந்துசெலவென்பதுகடந்தவிருகாலால்
நடந்துசெலலாகுமெனலாகியதுநன்னீர்.

இ-ள். இடந்த - அனுமார்பெயர்த்தெறிந்த, மணிவேதியும் - அழகிய திண்ணைகளும், இறுத்த - அழித்த, கடிகாவும் - காவலுள்ள சோலைமரங் களும், தொடர்ந்தன - ஒன்றையொன்று தொடர்ந்துபோனவைகளாய் துரந்தன - பின்னும் எறியுமவைகளும்போய், படிந்து - கடலெல்லாம் அமிழ்ந்து, நெறி - அனுமார் தாவிவந்தவழி, தூர - மூடப்பட்டதனுலே முன்னே, கடந்து செலவு - தாவிப்போகத்தக்கது, என்பது - என்றுசொ ல்லலாகியதான, நன்னீர் - அந்த நன்மணங்கொண்டகடல் இப்போது, கட ந்த - தாண்டிவந்த, இருகாலால் - இரண்டுகால்களாலும். நடந்து செலலாகு மெனலாகியது - நடந்துபோகும்படி மேடாயின — எ-று. 18

வேனில்விளையாடுசுடரோனினொளிவிம்மும்
வானினிடைவீசியவரும்பணைமரத்தால்
தானவர்கண்மாளிகைதகர்ந்துபொடியாய
வானவிடியாலொடியுமால்வரைகண்மான.

இ-ள். வேனில் - கோடைகாலத்திலே, விளையாடு - சஞ்சரிப்பதான, சுடரோனில் - சூரியன்போல், ஒளிவிம்மும் - பிரகாசமிகுகின்ற, வானி னிடை - ஆகாயத்திலே, வீசியவரும் - எறிதலாலே வருகிற, பணைமரத் தால் - கிளைகளுள்ள மரங்களாலே, தானவர்கள் - அசுரர்களுடைய, மாளி கை - வீடுகள், தகர்ந்து - உடைபட்டு, பொடியாய - தூள்களாயின, வானம்- ஆகாயத்திலிருந்து விழுகிற, இடியால் - இடியேற்றினுலே, ஒடியும் - உடை படுகிற, மால்வரைகள் - பெரியமலைகளை, மான - ஒப்பாகப்பொடியாயின— எ-று. ஒளிவிம்மு மரமெனக்கூட்டுக. 19

எண்ணிறருகோடிகளெறிந்தனசெறிந்தே
தண்ணமழைபோலிடைதழைந்ததுசலத்தால்
அண்ணலநுமானடலிராவணனதந்நாள்
விண்ணுமொருசோலையுளதாமெனவிதித்தான்.

இ-ள். எண்ணில் - ஆலோசிக்குமிடத்தில், எறிந்த - அனுமான் உயர எறிந்த, தருகோடிகள் - கோடிமரங்களும், செறிந்து - நெருங்கி, தண்ணம்- நீரைப்பெய்கிற, மழைபோல் - மேகங்களைப்போல், இடை - ஆகாயத்திலே,

தழைந்தது — மிகுதலாயினது எப்படியென்னில், சலத்தால் — கோபத்துடனே, அண்ணல் — பெருமைகொண்ட, அநுமான் — சிறிய திருவடியானவர், அடல் — வெற்றிகொண்ட, இராவணனது - இராவணனதாக, அந்நாள் — அப்போது, விண்ணும் — ஆகாயத்திலும், ஒருசோலை உளது என — ஒரு பூந்தோட்டம் உண்டென்ன, விதித்தான் — நியமித்தார்போலாயிற்று—எ-று. தண் அம் — குளிர்ந்தநீர் ஆம் சாரியை. 20

தேனுறைதுளிப்பநிறைபுட்பலசிலம்பப்
பூநிறைமணித்தருவிசும்பினிடையேபோய்
மேன்முறைநெருக்கவொளிவாளொடுவில்வீச
வானிடைநடாயநெடுமானமெனலான.

இ-ள். தேன் உறை — தேன்றுளிகள், துளிப்ப — சிந்தவும், நிறை — மரங்களிலே நிறைந்துள்ள, புள்பல - பலபக்ஷிகளும், சிலம்ப — சத்திக்க, பூ நிறை — புஷ்பங்கணிறைந்த, மணித்தரு — ரத்நமயமான மரங்களெல்லாம், விசும்பினிடையே — ஆகாசத்திலே, போய் — சென்று, மேல் — மேலே, முறை - வரிசைவரிசையாக, நெருக்க — நெருங்குதலாலே, ஒளிவாளொடு — வாளொளியுடனே, வில்லொளி — வில்லினொளியும், வீச - தருவனவாக, வானிடை — ஆகாயத்திலே, நடாய — செலுத்துகிற, நெடுமானம் - நெடிய விமானங்களே, எனலான — என்று சொல்வதாய் விளங்கின—எ-று. ஒளியை வாளுக்கும் வில்லுக்குங் கூட்டுக, வாள்போ னீண்ட வொளி விற்போல் வளைவான வொளி. 21

சாகநெடுமாப்பணைதழைத்தனதனிப்போர்
நாகமனையானெறியமேனிமிர்வநாளு
மாகநெடுவானிடையிழிந்துபுனல்வாரும்
மேகமெனலாயநெடுமாகடலின்வீழ்வ.

இ-ள். நெடுமாப்பணை — நீண்ட பெரிய கிளைகளும், தழைத்தன — இலைகளு மிகுத்திருக்கின்றனவாகிய, சாகம் — தேக்கமரங்கள், தனி — ஒப்பில்லாத, போர் — பலங்கொண்ட, நாகம் — ஒருமலையை யானையை, அனையான் — ஒத்ததிருவடி, எறிய — பிடுங்கி எறிய, மேல் — அவைகள்மேலே, நிமிர்வ — உயர்ந்து செல்லுவனவாய், மாகம் - மாகமென்கிற, நெடுவானிடை - நெடிய ஆகாயத்தினின்றும், இழிந்து - பின்பு தாழ்ந்து, நெடுமா - நீண்ட பெருமையையுடைய, கடலின்வீழ்வ - கடலில் விழுகின்றன எப்படியென்னில், புனல் — கடலினீரை, வாரும் — முகப்பனவான, மேகம் — மேகங்களே, எனலாய — என்று சொல்லலாயின—எ-று. 22

வேறு

ஊனமுற்றிடைமண்ணினுதித்தவர்
ஞானமுற்றுபுநண்ணினர்வீடெனத்

தானகற்பகத்தண்டலைவிண்டலம்
போனபுக்கனமுன்னுறைபொன்னகர்.

இ-ள். ஊனம் உற்று – ஏதேனுமொரு தோஷத்தைச்செய்து, இடை– மத்தியலோகமான, மண்ணின் – பூமியிலே, உதித்தவர் – பிறந்தவர்கள், ஞானம் - சுவரூபஞானம், முற்றுபு – நிறைதலாகி, வீடு-மோக்ஷலோகத்தை, நண்ணினரென – அடைந்தாரென்னும்படி, விண்டலம் – ஆகாயத்திலே, போன – திருவடியெறியச்சென்ற, தானம் – எல்லாந் தருவனவான, கற்பகத்தண்டலை - கற்பகமரங்களெல்லாம், முன் – முன்னே, உறை - தாங்கவிருந்த, பொன்னகர் – சுவர்க்கலோகத்திற்கே, புக்கன – போய்ச்சேர்ந்தன.

மணிகொள்குட்டிமமட்டித்துமண்டபம்
துணிபடுத்தயல்வாவிகடூர்த்தொளிர்
திணிசுவர்த்தலஞ்சிந்திச்செயற்கரும்
பணிபடுத்துயர்குன்றம்படுத்தரோ.

இ-ள். மணிகொள் – ரத்நங்களென்று கொள்ளத்தக்க, குட்டிமம் – கற்பதித்த வாசல்களையெல்லாம், மட்டித்து – தகர்த்து, மண்டபம் – மண்டபங்களையெல்லாம், துணிபடுத்து - துண்டுதுண்டுகளாகவுடைத்து, அயல் - பக்கங்களிலுள்ள, வாவிகள் – குளங்களையெல்லாம், தூர்த்து – மேடாக்கி, ஒளிர்– விளங்குகின்ற, திணி – கெட்டியான, சுவர்த்தலம் – சுவரான இடங்களையும், சிந்தி – இடித்து, செயற்கு – செய்கிறதற்கு, அரும் – அருமையான, பணி• வேலைப்பாடுகளையெல்லாம், படுத்து – கெடுத்து, உயர் – உயர்ந்த, குன்றம்- மலைகள்போல், படுத்து-கெடுத்து, உயர் – உயர்ந்த, குன்றம் - மலைகள்போல், படுத்து – அவைகளைக்குவித்து, அரோ – அசை—எ-று. உயர்குன்றம் படுத்து உயர்ந்த செய்குன்றுகளையு மிடித்து என்னலாம். 24

வேங்கைசெற்றுமராமரம்வேர்பறித்
தோங்குகற்பகம்பூவொடொடித்துராய்ப்
பாங்கர்சண்பகப்பந்திபறித்தயல்
மாங்கனிப்பணைமட்டித்துமாற்றியே.

இ-ள். வேங்கை – வேங்கைமரங்களையும், செற்று-அழித்து, மராமரம்- கடப்பமரங்களையும், வேர்பறித்து - வேரோடு பிடுங்கி, ஓங்கு – உயர்ந்த, கற்பகம் – கற்பக விருக்ஷங்களை, பூவோடு – புஷ்பங்களுடனே, ஒடித்து – முறித்து, உராய் – அவைகளை உராசிக்கொண்டு, பாங்கர் – பக்கத்தேநிற்கிற, சண்பகப்பந்தி – சண்பகமரவரிசைகளையும், பறித்து – பிடுங்கியெறிந்து, அயல்– அவற்றினருகுள்ள, மாங்கனி – மாம்பழங்களையுடைய, பணை – மரக்கிளைகளையும், மட்டித்து – கெடுத்து, மாற்றி - அவைகளெல்லாம் நிலைமாறச் செய்து—எ-று. 25

சந்தனங்கடகர்ந்தனதாள்பட
இந்தனங்களின்வெந்தெரிசிந்திட

முந்தனங்கவசந்தன் முகங்கெட
நந்தனங்கள்கலங்கிநடுங்கவே.

இ-ள். தாள்பட — திருவடி கால்கள் படுதலாலே, சந்தனங்கள் - சந்தன விருக்ஷங்கள், தகர்ந்தன — ஒடிந்தனவாய், எரிசிந்திட — நெருப்புப் பொறி பறக்க அதனாலே, இந்தனங்களின்-அந்த மரங்களெல்லாம் விறகுகள்போல், வெந்து — வேகின்றனவாகி, முந்து — முற்காலத்திலே, அனங்கம் — சரீரமில்லாதவனை, வசந்தன் — மன்மதனுடைய, முகம்கெட — முகம் சோர்வாக, நந்தனங்கள் — அவனுக்குப் பாடிவீடான சோலைமுழுதும், கலங்கி — நிலைகெட்டு, நடுங்க — மரங்களெல்லாம் அசைவதாக—எ-று. 24 - 25 - 26 ஆகிய இம்மூன்றுபாட்டும் 27 - ம் பாட்டில் மடிந்தனவென்பதால் முடிபாயின- 26

காமரங்களிவண்டுகலங்கிட
மாமரங்கண்மடிந்தமண்ணொடு
தாமரங்கவரங்குதகர்ந்துகப்
பூமரங்களெரிந்துபொரிந்தவே.

இ-ள். காமரம் — இசைப்பாட்டுடனே, களி — மதுமயக்கங்கொண்ட, வண்டு — வண்டுகளெல்லாம், கலங்கிட — கலைந்தோட, மாமரங்கள் — பெரிய மரங்களெல்லாம், மடிந்தன — இப்படி அழிதலாயின, மண்ணொடு — நிலத்துடனேசேர, அரங்குதாம் — நாடக சாலைகளெல்லாம், அரங்க - படிதலாக, தகர்ந்து — வரங்கள்போய்விழுந்து இடிந்து, உக — சிந்துதலாக, பூமரங்கள்- புஷ்பங்களையுடைய விருக்ஷங்களும், எரிந்து — வெந்து, பொரிந்த — பொரிதலாயின, தாம் — உயரத்தாவுகிற எனவுமாம், ஏ — அசை—எ-று. 27

குழையுங்கொம்புங்கொடியுங்குயிற்குலம்
விழையுந்தண்டளிர்ச்சூழலுமென்மலர்ப்
புழையும்வாசப்பொதும்பும்பொலன்கொடேன்
மழையும்வண்டுமயிலுமரிந்தவே.

இ-ள். குழையும் — இலைகளும், கொம்பும் — கிளைகளும், கொடியும்- கொடிகளும், குயிற்குலம் — குயிற்கூட்டங்கள், விழையும்-விரும்புவனவான, தண்-குளிர்ந்த, தளிர்ச்சூழலும்-தளிர்களுள்ள இடங்களும், மென்-மிருதுவான,மலர்ப்புழையும் — மலரின் றுவாரங்களும், வாசம் — மணமுள்ள, பொதும்பும் — மலச்செறிவுகளும், பொலன்கொள் — பொன்னிறத்தைக்கொண்ட, தேன்மழையும் — தேன்சிந்துதலும், வண்டும் — வண்டுகளும், மயிலும்-மயில்களும், மரிந்த — அழிதலாயின, ஏ — அசை—எ-று. புழையாவது — மலரினதுகாம்பு பொதிந்துள்ள இடம். 28

பவளமாக்கொடிவீசினபன்மழை
துவளுமின்னெனச்சுற்றிடச்சூழ்வரை

திவளும்பொற்பணைமாமரஞ்சேர்ந்தன
கவளயானையினோடையிற்காந்தவே.

இ-ள். வீசின — திருவடிபிடுங்கியெறிந்த, பவளமாக்கொடிபல் — நீண்ட பவளக்கொடிகள்பலவும், மழை — மேக மண்டலத்திலேபோய், அவளும்-மேகத்திலே நடங்குகிற, மின்னென் — மின்னல்போல், சுற்றிட — மேலே சுழலவும், சூழ் — கடலைச் சூழ்ந்த, வரை — மலைமேலே, திவளும் — அசைதலான, பொன் — பொன்மயமுள்ள, பணை — கிளைகளையுடைய, மாமரம்-பெரியமரங்கள்போய், சேர்ந்தன — விழுந்துகிடப்பன எப்படியென்னில், கவளம்-கவளந்தின்று பருத்த, யானையின் — யானையினது, ஓடையில் — முகபடாம் போல், காந்த — விளங்கவும்—எ-று. கவளம் — யானையுணவு, இப்பாட்டு-30-பாட்டில் போயதென்பதால் முடியும். 29

பறவையார்த்தெழுமோசையும்பன்மரம்
இறலெடுத்தவிடிக்குரலோசையும்
அறவனார்த்தெழுமோசையுமண்டத்தின்
புறநிலத்தையுங்கைம்மிகப்போயதே.

இ-ள். பறவை — பக்ஷிகள், ஆர்த்து எழும் — சத்தித்துக் கிளம்புகிற, ஓசையும் — சத்தமும், பன்மரம் — பலமரங்களும், இறல் — ஒடிதலாலே, எடுத்த - உண்டான, இடிக்குரல் — இடிக்குரல்போன்ற, ஓசையும் — சத்தமும், அறவன் — தரும ரூபமானதிருவடி, ஆர்த்து — சத்தித்தலாலே, எழும்-உண்டாகுகிற, ஓசையும் — சத்தமும், அண்டத்தின் - இந்த அண்டத்துக்கு, புறம் — வெளியிலுள்ள, நிலத்தினும் — இடங்களிலும், கைமிக — படைவகுப்புகள்கூட, போயது - சென்றொலித்தன—எ-று. திருவடி இங்குப்படைகூடிப் போர்க்கு வரச்செய்ய அண்டத்தின் புறநிலத்தினும் படை கூடுவதாயின இவ்வொலிகளாலே யென்க இற எடுத்த என்றுபாடமானல் ஒடியப்பிடுங்கின என்க. 30

பாடலம்படர்கோங்கொடும்பன்னிசைப்
பாடலம்பணிவண்டொடுபஃறிரைப்
பாடலம்புயர்வேலையிற்பாய்ந்தன
பாடலம்பெறப்புள்ளினம்பாறவே.

இ-ள். பாடலம் — பாதிரிமரங்களெல்லாம், படர் — ஆகாயத்தளவுஞ் சென்றிருக்கிற, கோங்கொடும் - கோங்கமரங்களுடனே, பன் — பாடுகின்ற, இசைப்பாடல் — இசைப்பாடலும், அம் — அழகும், பணி-குளிர்ச்சியுமுள்ள, வண்டொடும் — வண்டுகளுங்கூட, பல்திரை — அளவற்ற அலைகளாலே, பாடு-பக்கமெல்லாம், அலம்பு — சத்தித்தலையுடைய, உயர் — உயர்ந்த, வேலையில்-கடலிலேபோய், பாடலம் — சிவந்த நிறத்தை, பெற — கடல் நீர்பெறவும், புள்ளினம் — தம்மிடத்துள்ள பக்ஷிக்கூட்டங்கள், பாற — ஓடவும், பாய்ந்தன-விழுந்தன—எ-று. பலமரங்களும்போய் விழுதலால் கடலுங்கலங்கி அதி

ுள்ள ஜலசாங்களுமிறந்து ரக்தப்பிரவாக மாகுதலாலே பாடலம் பெற வென்றார். 31

வண்டலம்புநலாற்றின்மராமரம்
வண்டலம்புனலாற்றின்மடிந்தன
விண்டலம்புகநீங்கியவெண்புனல்
விண்டலம்புகநீண்மரம்வீழ்ந்தவே.

இ-ள். வண்டு - வண்டுகள், அலம்பு — சத்திக்கின்ற, நல்லாற்றின் - நல்லொழுங்கினையுடைய, மராமரம் — கடப்பமரங்கள், வண்டல் — சேற்றையுடைய, அம் — அழகிதான, புனலாற்றில் — நீராற்றிலேபோய்விழுந்து, விண்டு மடிந்தன — வெவ்வேறு யழிதலாயின, அலம்பு — திருமால் திருவடியைக் கழுவுவதான, உலகம் நீங்கிய — முடிவில்லாத, வெண்புனல் — வெண்ணிறமான ஆகாய கங்கையிலேபோய், விண்டலம் — ஆகாயத்தளவும், புக — செல்லுவதாக, நீள் — நீண்டுள்ள, மரம் — மரங்கள், வீழ்ந்த — விழுதலாயின—எ-று. நீராறு — உப்பங்கழி. 32

தாமரைத்தடம்பொய்கைசெஞ்சந்தனம்
தாமரைத்தனவொத்ததுகைத்தலின்
காமரக்களிவண்டொடுங்கள்ளொடும்
காமரக்கடல்பூக்கடல்கண்டவே.

இ-ள். தடம் — பெரியனவாய் அங்குள்ள, தாமரைப்பொய்கை — தாமரைக்குளங்கள், செஞ்சந்தனந்தாம்-சிவந்த சந்தனத்தை, அரைத்தன ஒத்த-அரைத்துக் குழம்பினபோலாயின, துகைத்தலின் — மரங்கள்போய்விழுந்து குழம்புதலாலே, காமரம் — இசைப்பாட்டுடனே, களி — மயக்கத்தையுடைய, வண்டொடும் — வண்டுகளுடனே, கள்ளொடும் — தேனோடுகூட, கா — அந்த அசோகவனத்துள்ள, மரம் — மரங்களைபுமுடைய, அக்கடல் — அந்த இலங்கைக்கருகுள்ள கடலானது, பூக்கடல் — பலமலர்களையும் புஷ்பித்திருக்கிற கடலாகவும், கண்ட — திருவடியாலே செய்யலாயின—எ-று. 33

சிந்துவாரந்திசைதொறுஞ்சென்றன
சிந்துவாரம்புரைதிரைசேர்ந்தன
தந்துவாரம்புதவொடுதாளறத்
தந்துவாரந்துகள்படச்சாய்ந்தவே.

இ-ள். திசைதொறும் — அசோகவனத்துச் சூழ வேலியாக நான்குதிக்கிலும், சென்றன — நீண்டுநிற்கின்றனவாகிய, சிந்துவாரம்-நொச்சிமரங்கள், சிந்து — கடலினது, வாரம் — கரையிலும், புரை — உயர்வுள்ள, திரை — அலைகளிலும், சேர்ந்தன — போய்விழுந்தன, தந்து — திருவடியாலே எறிதலாகி, வார் - நீண்ட, அம் — அழகிய, புதவொடு - கதவுடனே, தாள் — அதன் சீப்பும், அற - அறுதலாக, தம் — அந்த அரக்கருடைய, துவாரம் — வாயிலும்,

துகள்பாட — தூள்தூளாக, சாய்ந்த - அழிந்தன—எ-று. தம் அக்கதவுகளை யுடையனவான எனவுமாம். 34

நந்தவானத்துநாண்மலர்நாறின
நந்தவானத்துநாண்மலர்நாறின
சிந்தவாநந்திரிந்துகச்செம்மணி
சிந்தவானந்திரிந்ததிரைக்கடல்.

இ-ள். நந்தவானத்து - அசோகவனத்திலே, நாள் — தினந்தோறும், நாறின — பூத்த, மலர் - புஷ்பங்கள், நந்த - அதிகமாக, வானத்து — ஆகாயத்திலேபோய், மலர் — அங்கேவிரிகிற, நாள் - நக்ஷத்திரங்கள்போல், நாறின- பரிமளித்து நின்றனவாகி, சிந்து — நீரைப்பெய்கிற, அவ்வானம் — அந்த மேகமண்டலத்திலே, திரிந்து — காற்றுற் சுழன்று, உக — உதிர அவ்வளவில், செம்மணி — செவ்வையானமணிகளை நன்முனைமுத்துகளை, சிந்த — பெறும்படி, வால் நந்து — வெண்சங்குகள், இரிந்த-பயந்து ஓடலாயின, திரை- அலைகளையுடைய, கடல் — கடலிலே—எ-று. மணிசிந்த என்றது சங்குகள் கர்ப்பங்கலங்க என்றபடி. 35

பொல்லும்பொற்பணைப்பன்மணிப்பொன்மரம்
கொல்லுமிப்பொழுதேயெனுங்கொள்கையால்
எல்லியிட்டுவிளக்கியவிந்திரன்
வில்லுமொத்தனவிண்ணுறவீசின.

இ-ள். புல்லும்பொன் — பொன்னிறத்தைக்கொண்ட, பணை - கிளைகளையுடைய, பொன்மரம் — பொன்னுலானமரங்களும், பல்மணிமரம் — பலரத் நங்களாலுமான மரங்களும், இப்பொழுதே — இந்த க்ஷணத்துக்குள்ளே, கொல்லும் — கொல்லப்படும், எனும் — எனபதான, கொள்கையால் — திருவடி மனத்துள்ளே கொண்டிருத்தலாலே, எல்லி — இராத்திரியிலே, இட்டு-இடப்பட்டு, விளக்கிய — உற்பாதமாகக்காட்டின, இந்திரன்வில்லும் — இந்திரதனுசையும், விண்ணுற — ஆகாயத்திலேசெல்ல, வீசின-பிடுங்கியெறிந்த பொற்பணைப்பன்மணிப்பொன்மரம், ஒத்தன - ஒப்பாயின—எ-று. இனி இந்த வனமும் ஊரும் அழிந்துபோமென்று அவ சகுனமாக இராத்திரியிலே தோன்றுகிற இந்திர தனுசுபோன்றன மேலெறிந்த மரங்கள் இன்னும்மரங்களை அழிப்பான எனுங்கொள்கையால் எல்லியிட்டுவிளக்கிய இந்திரவில் என்க—எ-று. 36

ஆனைத்தானமுமாடலரங்கமும்
பானத்தானமும்பாய்பரிப்பந்தியும்
ஏனைத்தாரணிதேரொடுமிற்றன
கானத்தார்தருவண்ணல்கடாவவே.

இ-ள். ஆனைத்தானமும் — யானைச்சாலைகளும், ஆடல் — அரங்கமும், நாடகசாலைகளும், பானத்தானமும் — கள்ளுக்கடைகளும், பாய்பரித்தான

மும் — தாவுகின்ற குதிரைலாயங்களும், எனை — இன்னமுள்ள, தார் அணி-கிண்கிணிமாலைகட்டின, தேர் ஒடும் — தேர்ச்சாலைகளுடன், இற்றன — அழிதலாயின, கானத்து — அந்த அசோகவனத்திலே, ஆர் - நிரம்பியுள்ள, தரு-மரங்களை, அண்ணல் திருவடி, கடாவ-எறிந்ததனாலே, அந்தவனமேயன்றி ஊரும் அழிந்தன—எ-று. 37

மயக்கில்பொல்குலவல்லிகள்வாரிநேர்
இயக்குறத்திசைதோறுமெறிந்தன
வெயிற்கதிர்க்கற்றையற்றுறவீழ்ந்தன
புயற்கடற்றலைபுக்கனபோல்வன.

இ-ள். வாரி — அள்ளி அள்ளி, திசைதோறும்-திக்குகளெல்லாம், நேர்-நீள நீளமாக, இயக்குற — இயங்கிவிழ தொங்கிவிழும்படி, எறிந்தன — வீசிய, மயக்கில் — மழுங்குதலில்லாத, பொன் - பொன்மயமான, குலவல்லிகள்-சிறந்த கொடிகள், எழு — வெயில் சூரியனுடைய, கதிர்க்கற்றை — கிரணத்திரள், அற்று — அறுபட்டு, உற — மிகவும், வீழ்ந்து அன — வீழ்ந்தாற்போலாயின, பய — அவைகள் எழு, புயல் — மேகங்கள், கடல்தலை — கடலிலே, புக்கன-இறங்கிமொய்த்தல், போல்வன — போலாயின பாணிலை புகுந்தன போன்றன—எ-று. 38

பெரியமாமரமும்பெருங்குன்றமும்
இரியவீசலினிந்நெடும்பொன்மதில்
நெரியமாடநெருப்பெழநீறெழ
இரியல்போனவிலங்கையுமெங்கணும்.

இ-ள். பெரிய — பெரிதான, மாமரமும் — மகா விருக்ஷங்களும், பெருங்குன்றமும் — பெரியமலைகளும், இரிய — கெட தகரும்படி, வீசலின் — சுற்றும் எறிதலாலே மரங்கள்விழுந்து, இ — இந்த ராவணனுடைய, நெடு — நீண்ட, பொன் - பொன்னாலான, மதில் — சுற்றுச்சுவர்கள், நெரிய - நெரிந்துவிழ, அதனாலே மாடம் — வீடுகளிலே, நெருப்பு எழ - நெருப்புப் பிறக்க அதனாலே, நீறு எழ — எல்லாம்வேந்து சாம்பலாக, அச்சாம்பல், இலங்கையும்-இலங்கா புரியிலும், எங்கணும் — மற்ற எவ்விடங்களிலும், இரியல்போன — பறந்துபோயின, ஊராரும் பலவிடங்களிலும் ஓடலாயினார்களென்பதுமாம். 39

வேறு

தொண்டையங்கனிவாய்ச்சீதைதுயக்கினலென்னைச்சுட்டாய்
விண்டவானவர்தம்முன்னேவிரிபொழிலிறுத்துவீசக்
கண்டனைநின்றுயென்றுகாணுமேலரக்கன்காய்தல்
உண்டெனவெருவினன்போலொளித்தனனுடுவின்கோமான்.

இ-ள். தொண்டை — கொவ்வைக்கனிபோல், அம் — அழகிதான, கனி-பழம்போன்ற, வாய் — அதரமுள்ள, சீதைதுயக்கினல் — சனகி நிமித்தமாக,

என்னைச்சுட்டாய் - என்னைச் சுடுதலும்செய்தாய், விண்ட — என்னில்வேருன, வானவர்தம்முன்னே — தேவர்கள் முன்பே, விரிபொழில் — இந்த விரிந்தசோலையை, இறுத்து வீச — ஒடித்தெறியவும், கண்டனை நின்ருய் என்று — பார்த்துக்கொண்டிருந்தாய் என்பதாக, காணுமேல் — கண்டானுல், அரக்கன் - இராவணன், காய்தலுண்டென — கோபிப்பதாமென்று வெருவிஞன்போல் — பயந்தவன்போல், உடுவின்கோமான்-சந்திரன், ஒளித்தனன் — அஸ்தமித்தான்—எ-று. 40

காசறுமணியும்பொன்னுங்காந்தமுங்கஞல்வதாய
மாசறுமரங்களாகக்குயிற்றியமதனச்சோலை
ஆசைகடோறுமையன்கைகளாலள்ளியள்ளி
வீசியவிளக்கலாலேவிளங்கினவுலகமெல்லாம்.

இ-ள். காசு அறு - குற்றமற்ற, மணியும் — ரத்நங்களும், பொன்னும்-சுவர்ணமும், காந்தமும் — சூரியகாந்தம் சந்திரகாந்தமுமே, கஞல்வதாய-விளங்குவதான, மாசு அறு — தோஷந்தீர்ந்த, மரங்களாக — விருக்ஷங்களாக, குயிற்றிய — செய்திருக்கிற, மதனச்சோலை — காமரசத்துக்கிடமான அந்தச் சோலையினின்று, ஆசைகள்தோறும் — எந்தத்திக்கிலும், ஐயன் — திருவடியானவர், கைகளால் — இரண்டு கையாலும், அள்ளிஅள்ளி — பிடுங்கிப்பிடுங்கி, வீசிய — எறிந்தமரங்கள், விளக்கலாலே — துலங்கச்செய்கிறதிஞலே, உலகமெல்லாம் — எல்லா வுலகங்களும், விளங்கின - விழித்து விளங்கலாயின சஞ்சரிப்பதாயின—எ-று. 41

கதறினவெருவியுள்ளங்கலங்கினவிலங்குகண்கள்
குதறினபறவைவேலைகுளித்தனகுளித்திலாத
பதறினபதைத்தவானிற்பறந்தனபறந்துபார்வீழ்ந்
துதறினசிறையைமீளவொடுக்கினவுலந்துபோன.

இ-ள். விலங்கு — அந்தவனத்துள்ள மிருகஜாதிகள், வெருவி — பயந்து, கதறின — கத்துமவைகளால், உள்ளம் - மனங்கள், கலங்கின-கலக்கங்கொண்டன, பறவை — அதிலுள்ள பக்ஷிஜாதிகள், கண்கள் — தம்முடைய விழிகள், குதறின — கலங்குமவைகளாய், வேலை — கடலிலேபோய், குளித்தன — சில பக்ஷிகள் முழுகின, குளித்திலாத — அப்படி முழுகாத பக்ஷிகள், பதறின-துடிக்குமவைகளாய், பதைத்த — ஆத்திரப்பட்டு, வானில் — ஆகாயத்திலே, பறந்தன — பறக்கலாயின, பறந்து — அப்படிப் பறந்தபடியே, பார் — பூமியிலே, வீழ்ந்து — மரங்களாலடிபட்டு விழுந்து, சிறையை — இறகுகளை, உதறின — உதறிக்கொண்டு, மீள — பின்னும், ஒடுக்கின — சிறகுகளைக் குவித்தவைகளாய், உலந்துபோன — இறந்துபோயின—எ-று. 42

தோட்டொடுந்துதைந்ததெய்வமரந்தொறுந்தொடுத்தபுட்பம்
கூட்டொடுந்துறக்கம்புக்கதுன்றெனக்குவவுத்திண்டோள்

சேட்டகன்பரிதிமார்பன்சீரியுந்தீண்டறன்ஞல்
மீட்டவன்கருணைசெய்தாற்பெறும்பதம்விளம்பலாமோ.

இ-ள். தோட்டொடும் — இதழ்களுடனே, துதைந்த — மலர்களெருங்கின, தெய்வம் — தெய்வத்தன்மையுள்ள, மரந்தொறும் — மரங்களெல்லாம், தொடுத்த — கூடுகட்டியிருக்கிற, புள் — பக்ஷிகள், தம் — தம்முடைய, கூட்டொடு — கூடுகளுடனே, சுறக்கம் — சுவர்க்கலோகம், புக்க — மரங்களோடு போயின, குன்றென — மலையென்னும்படி, குவவு — உருண்டிருக்கிற, திண்தோள் — பலமான தோள்களையுடைய, சேடு — இளமையுடனே, அகன் — அகன்ற, பரிதி — பிரகாசந்தங்கின, மார்பன் — மார்பையுடைய திருவடி, சீறியும் — அருள்செய்யாது கோபித்தேனும், தீண்டல் தன்ஞல் — தொட்டதனாலே சுவர்க்கம்போகலாயின, மீட்டு — அப்படிக் கோபியாமல், அவன் — அந்த ஆஞ்சனேயர், கருணைசெய்தால் — அருள்கொண்டு தீண்டினால், பெறும்பதம் — தொடப்பெற்றவையடையும் பதவியைப் பரமபதம் என்பதையன்றி, விளம்பலாமோ — வேறு சொல்லப்படுமோ — எ-று. 43

பொய்ம்முறையரக்கர்காக்கும்புள்ளுறைபுதுமென்சோலை
விம்முறுமுள்ளத்தன்னமிருக்குமவ்விருக்கமொன்றும்
மும்முறைபுலகமெல்லாமுற்றுறமுடிவதான
அம்முறையையன்வைகுமாலெனநின்றதம்மா.

இ-ள். பொய்ம்முறை — மெய்யில்லாத கிரமங்களைக்கொண்ட அக்கிரமங்களையுடைய, அரக்கர் — ராக்ஷதர்கள், காக்கும் — காவல்செய்கிற, புள்உறை — பக்ஷிகளிருப்பதான, புது — நித்திய வசந்தமுள்ள, மென் — மென்காற்று வீசுவதான, சோலை — அந்த அசோகவனத்திலே, விம்முறும் — துக்கித்துக்கொண்டிருக்கிற, உள்ளத்து — மனத்தையுடைய, அன்னம் — அம்சநடையைக்கொண்ட சீதாபிராட்டி, இருக்கும் — இருப்பதான, அவ்விருக்கமொன்றும் — அந்த ஒருமாமும் அந்தமரமாத்திரம், மும்முறை — மூவகையாயிருக்கிற, உலகமெல்லாம் — உலகங்கள் முழுதும், முற்றுற — அழிவுபட, முடிவதான — முடிவுபெறுகிற, அம்முறை — அக்காலத்திலே, ஐயன் — ஜகத்காரணபூதன், வைகும் — தங்குகிற, ஆலென — ஆலமரம்போல், நின்றது — நிற்றலாயிற்று — எ-று. அம்மா அசை. 44

உறுசுடர்ச்சூடைக்காசவ்வுயிரினையுயிரொப்பானுக்
கறிகுறியாகவிட்டாளாதலான்வறியளங்தோ
செறிகுழற்சீதைக்கென்ஞேர்சிகாமணிதெரிந்துவாங்கி
எறிகடலீவதென்னவெழுந்தனனிரவியென்பான்.

இ-ள். உறு சுடர் — மிக்க ஒளியையுடைய, சூடைக்காசு — சூடாமணியான, அ உயிரினை — அந்த உயிர்போல்வதை, உயிரொப்பானுக்கு — தன் உயிர்போன்ற நாயகனுக்கு, அறிகுறியாக — தன்னை அறியும் அடையாளமாக, விட்டாள் — சீதை அனுப்பினாள், ஆதலால் — ஆனபடியினாலே, வறி

யள் — இப்போதொன் றுமில்லாதிருக்கிறாள், அந்தோ — ஐயோ என்று, செறிகுழல் — மணஞ்செறிந்த கூந்தலையுடைய, சீதைக்கென்று — சீதாபிராட்டிக்கென்று, ஓர் சிகாமணி — இன்னமொரு சூடாமணி, தெரிந்துள்வாங்கி-தேடியெடுத்து, எறிகடல் — அலைமோதுவதான கடலானது, ஈவதென்ன — மகளென்று கொடுப்பதுபோல, இரவியென்பான் — சூரியனென்பவன், எழுந்தனன் — உதயமாயினன்—எ-று. செறிகுழல் — சிறையிருத்தலாலே சடையாகச்செறிந்த கூந்தலெனலாம். 45

தாழிரும்பொழில்களெல்லாந் துடைத்தொருதமியனின்றான்
ஏழினோடேழுநாடுமளந்தவனெனலுமானான்
ஆழியினடுவணின்றவருவரைக்கரசுமொத்தான்
ஊழியினிறுதிக்காலத்துருத்திரமூர்த்தியொத்தான்.

இ-ள். தாழ் — பிராட்டி தங்குவதான, இரும் — பெரிய, பொழில்களெல்லாம் — சோலைமுழுதும், துடைத்து — அழித்து, ஒருதமியன் — தானொருவராகவே, நின்றான் - நின்றதிருவடி, ஏழினோடேழுநாடும் — பதினாலுலகங்களையும், அளந்தவன் — அளந்த நெடுமாலே, எனலும் — இவரென்றுசொல்லுதற்கும், ஆனான் — சரியானார், ஆழியின் நடுவண் — பாற்கடலினடுவே, நின்ற — கடைவதாக நின்ற, அருவரைக்கு அரசும் — உயர்வுகாண அரிதான மலைகளுக்கெல்லாஞ் சிறந்த மந்தர கிரியையும், ஒத்தான் — சோலை நடுவே நிற்றலால் ஒப்பதானார், ஊழியின் — ஊழியாகிய, இறுதிக்காலத்து — முடிவு காலத்திலே தோன்றுகிற, உருத்திர மூர்த்தி — உருத்திர சுரூபத்தையும், ஒத்தான் — ஒப்பதானார்—எ-று. 46

இன்னனநிகழும்வேலையரக்கியரெழுந்துபொங்கிப்
பொன்மலையென்னநின்றபுனிதனைப்புகன்றுநோக்கி
அன்னையீதென்னைமேனியார்கொலென்றச்சமுற்றார்
நன்னுதறன்னைநோக்கியறிதியோநங்கையென்றார்.

இ-ள். இன்னன — இத்தன்மையனவாக, நிகழும்வேலை - நடக்கும் போது, அரக்கியர் — அந்தராக்ஷஸிகள், எழுந்து — விழித்தெழுந்து, பொங்கி- ஒருசேரக் கூட்டி, பொன்மலையென்ன — மேருமலைபோல், நின்ற - நிற்கிற, புனிதனை — பரிசுத்தரான திருவடியை, புகன்று — யாரடாவென்றுசொல்லி, நோக்கி - திரிசடையைப்பார்த்து, அன்னை - தாயே, ஈது — இங்கேநிற்கிறது, என்னைமேனி — என்ன சுவரூபம், யார்கொலென்று-யாரோவென்று, அச்சமுற்றார் - பயங்கொண்டவர்களாய் பின்பு, நன்னுதல்தன்னை — சீதாபிராட்டியை, நோக்கி — பார்த்து, நங்கை - பெண்ணே, அறிதியோ — இந்தவுருவை நீதெரிந்ததுண்டோ, என்றார் — என்றுகேட்டார்கள்—எ-று. 47

தீயவர்தீயசெய்தறீயவர்தெரியினல்லால்
தூயவர்துணிதலுண்டேநும்முடைச்சூழலெல்லாம்

ஆயமானெய்தவம்மானிளையவனரக்கர்செய்த
மாயமென்றுரைக்கவேயுமெய்யெனமையல்கொண்டேன்.

இ-ள். தீயவர் - கெட்டவர்களே, தீய — கெட்டகாரியங்களை, செய்தல் — செய்கிறது அதை, தீயவர் — அப்படிக் கெடுதலானவர்களே, தெரிவின் - தெரிகிறதே, அல்லால் — அல்லாமல், தூயவர் — நல்லவர்கள், துணிதல் — தெரிந்துசொல்லுதலும், உண்டே — உளவோ, நும்முடை — உங்களுடைய, சூழலெல்லாம் — மாயச்செய்கைகளையெல்லாம், தூயவர் — துணிதலுண்டா இல்லை, ஆயமான் — அந்தமாயமான், எய்த — வந்தபோது, அம்மான்-அந்தமானைக்கண்டு, அரக்கர்செய்த — ராக்ஷதர்கள் பண்ணின, மாயமென்று-மாயாரூபமென்று, இளையவனுரைக்கவேயும் — இளையபெருமாள் சொல்லச்செய்தேயும், மெய்யென — மெய்மானென்று, மையல்கொண்டேன் — மயங்கினேன் தெரியவல்லேனோ என்பது எஞ்சியது, நும்முடைச் சூழலெல்லாம் உள்ளதாகிய மானென்று கூட்டவுமாம்—எ-று. தீமைசெய்தலால் தீயவருக்குத் தீமையே வந்ததென்றுளென்க. 48

என்றனளரக்கிமார்கள்வயிறலைத்திரியல்போகிக்
குன்றமுமுலகும்வானுங்கடல்களுந்துளையவோட
நின்றதோர்சமித்தங்கண்டானீக்குவலிதனையென்னுத்
தன்றடக்கைகணீட்டிப்பற்றினன்றாதையொப்பான்.

இ-ள். என்றனள் — என்றுசொன்னாள் பிராட்டி அதற்கு, அரக்கிமார்கள் — அந்தராக்ஷசிகள், வயிறலைத்து — வயிற்றில்மோதிக்கொண்டு, இரியல்போகி — பயமிகுந்து, குன்றமும் — இலங்கையைச் சேர்ந்தமலையும், உலகும்-அந்த இலங்கையும், வானும் — ஆகாயமும், கடல்களும் — சமுத்திரங்களும், துலைய — நடுங்கும்படி, ஓட — ஓடுதலாக அப்போது, நின்றது — அந்தவனத்திலே கெடாமல் நிற்பதான, ஓர் சமித்தம்-ஓமமண்டபம் ஒன்றை, கண்டான்-திருவடியானவர்கண்டு, இதனை - இதையும், நீக்குவலென்று — பிடுங்கியெறிகிறேனென்று, தன் — தனது, தடம் - நீண்ட, கைகள்நீட்டி — இருகைகளுங்கொண்டு, பற்றினன் — நீட்டிப்பெயர்த்தார், தாதை — தன்பிதாவானவாயுபகவானை, ஒப்பான் - ஒப்பானவர்—எ-று. 49

கண்கொளவரிதுமீதுகால்கொளவரிதுதிண்கால்
எண்கொளவரிதிராவுமிருள்கொளவரிதுமாக
விண்கொளநிவந்தமேருவெள்குறவெதும்பியுள்ளம்
புண்கொளவுயர்ந்ததிப்பார்பொறைகொளவரிதுபோலாம்.

இ-ள். கண்கொள — யாருங் கண்கொண்டுபார்க்கவும், அரிது-கூடாது ஒளியாற் கண்கூசுமெனவுமாம், மீது — அதன்மேலேயாரேனும், கால்கொள-கால்வைக்கவும், அரிது — கூடாதுவாயுவுஞ் சஞ்சரிக்கவுங் கூடாதென்னவுமாம், திண் — அதற்குப்பலமாயுள்ள, கால் — அடிவாரத்தை இவ்வளவினதென்று, எண்கொள — மதிக்கவும், அரிது — கூடாது, இராவும் — இராத்திரியும்,

இருள்கொள — இருண்டுசூழ, அரிது — கூடாது, மாகவிண்கொள — மிகப்பெரிய ஆகாயத்தைக்காணுவதாக, நிவந்த — உயர்ந்த, மேரு-மேருமலையானது, வெள்குற — நாணவும் உயர்வுக்குத்தோற்று, வெதும்பியுள்ளம் — மனம்வெந்ததாய், புண்கொள — அம்மேருவேபுண்ணாகவும், உயர்ந்தது — உயர்ந்திருப்பது, இப்பார் — அது இருக்கிறபூமி, பொறைகொள-பொறுத்துத்தாங்கவும், அரிதுபோலாம் — கூடாதென்னவுமாம்—எ-று. போல் — ஐயத்தில் வந்த அசை. 50

பொங்கொளிநெடுநாளீட்டிப்புதியபால்பொழிவதொக்கும்
திங்களைநக்குகின்றவிருளெலாம்வாரித்தின்ற
அங்கைபத்திரட்டியான்றன்றாணையாலழகுமானப்
பங்கயத்தொருவன்றானேபசும்பொனாற்படைத்ததம்மா.

இ-ள். பொங்கு — மிகுந்த வளர்ந்துகொண்டிருக்கிற, ஒளி — பிரகாசத்தை, நெடுநாள் — நெடுங்காலமாக,ஈட்டி — சம்பாதித்து, புதியபால் — கறக்கிற பால், பொழிவது — சிந்துவதை, ஒக்கும் — ஒப்பான, திங்களை — சந்திரனையும், நக்குகின்ற — கவிவதான, இருளெல்லாம் — இருட்டைமுழுதும், வாரி-அள்ளி அள்ளி, தின்றது — உண்டிருப்பது, அங்கை — அழகியகைகள், பத்திரட்டியான்றன் — இருபதுள்ள இராவணன், ஆணையால் — உத்தரவினாலே இதன் அழகுமான அழகுசரியென்ன, பங்கயத்து — தாமரைமலரிலிருக்கிற, ஒருவன்தானே — தானொருவனேபிரமனே, பசும்பொன்னால் — பசும்பொன்னாலேவிளங்க, படைத்தது — சிருஷ்டித்தது—எ-று. அந்த ஓமமண்டபம் சூரியனுக்காபரணமாகச் சூடத்தக்கது. 51

தூணெலாஞ்சுடருங்காசுசுற்றெலாமுத்தஞ்சொன்னம்
பேணலாமணியின்பத்திப்பிடரெலாமொளிகள்விம்மச்
சேணெலாம்விரியுங்கற்றைச்சேயொளிச்செய்தற்கேயும்
பூணலாமெம்மனோராற்புகழலாம்புதுமைத்தன்றே.

இ-ள். தூணெலாம்-அதிலுள்ளதூண்களெல்லாம், சுடரும்-விளங்குகின்ற, காசு-ரத்நங்களேயாம், சுற்றெலாம்-அதன்சுற்றுப்புறமெல்லாம்,முத்தம்-முத்துகளும், சொன்னம்-சுவர்ணங்களுமேயாம், பேணல் ஆம் — மிகவும்விரும்புவதான, மணியின்பத்தி — ரத்நவரிசைகளே, பிடரெலாம் — அதன்பின்புறமெல்லாம், ஒளிகள் — காந்திகள், விம்ம — அதிகமாயிருத்தலாலே, சேணெலாம் — நெடுந்தூரமான இடங்களெல்லாம், விரியும் — விரிவதான, கற்றை-திரட்சியான, சேயொளி — சிவந்தகாந்தியையுடைய, செல்வற்கேயும் — சூரியனுக்கேயானாலும், பூணலாம் — அலங்கரிக்கப்படுவனவாம் அவ்வொளிகள், எம் அனோரால் — எம்போலிகளாலே, புகழலாம் — புகழ்ந்துசொல்லுவதான, புதுமைத்து — புதுமையானது, அன்று — அல்லதாம் என்றால் சூரியனுக்கும் அம்மண்டபத்தி னொளிகளைக்கொண்டு அலங்கரிக்கலாகும் அதிசய வொளிகளைக்கொண்டுள்ளது நான் புகழ்ந்து முடிவுபடுவதன்று என்பதுகருத்து.

வெள்ளியங்கிரியைப்பண்டவ்வெங்தொழிலரக்கன்வேரோ
டள்ளினனென்னக்கேட்டானத்தொழிற்கழிவுதோன்றப்
புள்ளிமாமேருவென்னும்பொன்மலையெடுப்பான்போல
வள்ளுகிர்த்தடக்கைதன்னுன் மண்ணின்றும்வாங்கியண்ணல்.

இ-ள். வெள்ளியங்கிரியை — கைலாயமலையை, பண்டு அவ் — முன்னே அந்த, வெங்தொழில் அரக்கன் - கொடியசெய்கையுள்ள இராவணன், வேரோடு அள்ளினன் — வேருடனே பிடுங்கினன், என்ன — என்றுபலருஞ் சொல்ல, கேட்டான் - கேட்டவரானதிருவடி, அத்தொழிற்கு — அந்தப் பலப்பெருமைக்கு, இழிவுதோன்ற — குறைவுண்டாக, புள்ளி — மலைகளிற் சிறந்த, மா — பெருமைகொண்ட, மேருவென்னும் — வடமேருவென்கிற, பொன்மலை - சுவர்ணபருவதத்தை, எடுப்பான்போல — பெயர்ப்பவர்போல் பெயர்க்கிறதுபோல், வள் உகிர் — கூரியநகத்தைக்கொண்ட, தடக்கைதன்னுல் — நீண்டகைகளாலே, மண்ணின்றும் — அது இருக்குமிடத்திலிருந்து, வாங்கி — வேருடனேகொண்டு அடியோடெடுத்து, அண்ணல் - திருவடியானவர் விட்டனர்—எ-று. 53

விட்டனனிலங்கைதன்மேல்விண்ணுறவிரிந்தமாடம்
பட்டனபொடிகளானபகுத்தனபாங்குநின்ற
சுட்டனபொறிகள்பின்னைத்துளங்கினரரக்கர்தாமும்
கெட்டனர்வீரம்மாபிழைப்பரோகேடுசூழ்ந்தார்.

இ-ள். இலங்கைதன்மேல் விட்டனன் — இலங்காபுரிமேலெறிந்தார், விண்ணுற — ஆகாயத்தையளாவ, விரிந்த — எங்குமுள்ள, மாடம் — வீடுகளின் மேலே, பட்டன — விழுந்த அளவில், பொடிகளான - வீடுகள் தூளிகளாயுடைந்து, பகுத்தன — உடைப்பட்டவைகளின், பாங்குநின்ற — இடத்திலுளவான, பொறிகள் சுட்டன — நெருப்புப் பொறிகள்போய்ச்சுட்டு, பின்னை — பின்பு அதனுலே, அரக்கர்தாமும் — ராக்ஷஸர்களும், துளங்கினர்- கலங்கினுர்கள், வீரர்கெட்டனர் — அந்தராக்ஷஸவீரர்கள் அநேகர் செத்தார்கள், கேடுசூழ்ந்தார் — பிராட்டிக்குக் கெடுதியைசெய்தவர்கள், பிழைப்பரோ- எங்கேனும் அழியாது தப்புவார்களா அழிவாரென்பதாம்—எ-று. 54

நீரிடுதுகிலரச்சர்நெருப்பிடுநெஞ்சர்நெக்குப்
பீரிடுமுருவர்தெற்றிப்பிணங்கிடுதாளர்பேழ்வாய்
ஊரிடுபூசலாரவுளைத்தனரோடியுற்றுர்
பாரிடுபழுவச்சோலைபாலிக்கும்பருவத்தேவர்.

இ-ள். அச்சர் — அதுகண்டு பயந்தவர்களாய், நீரிடுதுகிலர் — மூத்திரம் பெய்துகொண்ட கௌபீனர்களாகி, நெருப்பு இடு — வனம் அழிந்ததென்கிற நெருப்புவிழுந்த, நெஞ்சர் — மனசுண்டாகி, நெக்கு — சதைந்து, காயம்பட்டு, பீரிடும் — ரத்தமொழுகுகிற, உருவர் — உடம்புகளுடனே, தெற்றி- மரக்கள்பட்டு, பிணங்கிடு — தடுமாறிவிழுகிற, தாளர் - கால்கள் நடுங்க

அதுடனே, பேழ்வாய் — அகன்ற இடமுள்ள, ஊர் இடு — ஊரார்கத்துகிற, பூசல் — பெருமுழக்கமும், ஆர — நிரம்பக் கேட்டவுடனே, உளைத்தனர்- மிகவும் வருத்தங்கொண்டு, பார் — இலங்கையென்னு நிலத்திலே, இடு — இராவணன் வளர்த்திருக்கின்ற, பழுவச்சோலை — இளஞ்சோலையை, பாலிக்கும்- காக்கக்கடவ, தேவர் — தேவர்கள், ஓடி உற்றார் — ஓடிப்போனார்கள்—எ-று. பழுவச்சோலை — அடர்ந்தசோலை, பருவத்தேவர் - காலதேவதைகள், சோலையின்பருவந் தெரிந்து பாலிக்குந்தேவரென்க. 55

அரிபடுசீற்றத்தான்றனருகுசென்றடியின்வீழ்ந்தார்
கரிபடுதிசையினீண்டகாவலாகாவலாற்றேம்
கிரிபடுகுவவுத்திண்டோட்குரங்கிடைகிழித்துவீச
எரிபடுதுகிலினொய்தினிற்றதுகடிகாவென்றார்.

இ-ள். அரிபடு — சிங்கம்போல், சீற்றத்தான்றன் — சீறிக்கிடக்கிற ராவணன், அருகுசென்று — கிட்டப்போய், அடியின் வீழ்ந்தார் — காலில் விழுந்து, கரிபடு — யானைகள் தாங்குகிற, திசையில் — எட்டுத்திக்கிலும், நீண்ட- செல்லுவதான, காவலா — ஆக்ஞையுள்ளவனே, காவல் ஆற்றேம் — இனி யாங்கள் காக்கவல்லேமல்லேம், கிரிபடு — மலைபோலிருக்கிற, குவவு — உருண்ட, திண்தோள் — வலியதோள்களையுடைய, குரங்கு — ஒரு குரங்கு, இடை — நடுவேநின்று, கிழித்துவீச — ஒடித்தெறிந்ததனாலே, எரிபடு- நெருப்பிலே விழுந்த, துகிலின் — பஞ்சுபோல், நொய்தின் — ஒரு நொடியளவிலே, கடிகா — நாங்கள் காக்கிறசோலை, இற்றது என்றார் — அழிந்ததென்று சொன்னார்கள்—எ-று. 56

சொல்லிடவெளியதன்றாற்சோலையைக்காலிற்கையிற்
புல்லொடுதுகளுமின்றிப்பொடிபடநூறிப்பொன்னால்
வில்லிடுவோமந்தனைவேரொடுவாங்கிவீசச்
சில்லிடமொழியத்தெய்வவிலங்கையுஞ்சிதைந்ததென்றார்.

இ-ள். சொல்லிட — எங்களாலேசொல்ல, எளியதுஅன்று — சுலபமான தல்ல ஆல் ஐயோ, சோலையை — அந்த அசோகவனத்தை, காலில் — அதன் கால்களாலும், கையில் — கைகளாலும், புல்லொடு — ஒரு புல்லுடனே, துகளும் — அந்தப் புல்லிலொட்டின தூசியுங்கூட, இன்றி - இல்லையாக, பொடிபட - தூள்தூளாக, நூறி — அழித்து, பொன்னால் — முழுதும் பொன்னாலாகி, வில்லிடு - ரத்நகாந்திகளும் வீசுகிற, ஓமந்தனை — ஓமமண்டபத்தையும், வேரொடுவாங்கி — அடியோடேபிடுங்கி, வீச — ஊர்மேலேயெறிய அதனாலே, சில்லிடம் ஒழிய - கொஞ்சம் இடம்போக தவிர என்றபடி, தெய்வ இலங்கையும் — தெய்வீகபட்டணமுழுதும், சிதைந்தது — இடிந்துபோயிற்று, இடியாத சில்லிடம் — இராவணன் வீட்டிலே கொஞ்சம்—எ-று. 57

ஆடகத்தருவிண்சோலைபொடிபடுத்தரக்கர்காக்கும்
தேடருமோமம்வாங்கியிலங்கையுஞ்சிதைத்ததம்மா

கோடரமொன்றேநன் றிதிராக்கதர்கொற்றஞ்சொற்றல்
மூடருமொழியாரென்னமன்னனுமுறுவல்செய்தான்.

இ-ள். விண் — ஆகாயத்திலேயுள்ள, ஆடகத்தருச்சோலை — பொன்மய விருக்ஷங்களுள்ள சோலையை, பொடிபடுத்து — தூள்களாக அழித்து, அரக்கர்காக்கும் — ராக்ஷஸர்கள்காக்கிற, தேட அரும் — தேடினலுங்கிடையாத, ஓமம் - ஓம மண்டபத்தை, வாங்கி — வேரோடே பிடுங்கி, இலங்கையும் — ஊரையுங்கூட, சிதைத்தது — அழித்தது, கோடரம் ஒன்றே — ஒரு குரங்கே, அம்மா — மிகப்புதுமை, நன்றிது-இது நல்லகாரியமே புதுமையே, இராக்கதர் — ராக்ஷஸர்களுடைய, கொற்றஞ்சொற்றல் - வெற்றியைக்கொண்டாடுதலிலே, மூடரும் — புத்தியீனருங்கூட, மொழியார் என்ன - உங்களைப்போற் பொய்சொல்லார்களென்று, மன்னனும் — ராக்ஷதேந்திரன், முறுவல் பூத்தான் - சிரித்தான்—எ-று. 58

தேவர்கள்பின்னுமன்னவதனுருச்சுமக்குந்திண்மைப்
பூவலயத்தையன்றோபுகழ்வதுபுலவர்போற்றும்
மூவரிலொருவனென்றுபுகல்கினுமுடிவிலாத
ஏவமக்குரங்கையையகாணுதியின்னேயென்றார்.

இ-ள். தேவர்கள் — அப்படிச் சொல்லக்கேட்ட காவற்றேவர்கள், பின்னும் — மறுபடியும், மன்ன — ராக்ஷதேந்திரா, அதனுரு — அந்தக் குரங்கின் சரீரகனத்தை, சுமக்கும் திண்மை — தாங்கவல்லதான, பூவலயத்தை அன்றோ — அது நிற்கிற இடத்தையல்லவோ, புகழ்வது - கொண்டாடவேண்டும், புலவர் போற்றும் — தேவர்கள் வணங்கத்தக்க, மூவரில் — அரியரப்பிரமர்களிலே ஒருவனென்று-சிறந்த ஒருவனிவனென்று, புகல்கினும் — சொன்னபோதிலும், முடிவிலாதது — போதுமானதன்று, ஏவம் — நாங்களெவ்வளவினம் சொல்லவல்லேமல்லேம், அக்குரங்கை — அப்படிப்பட்ட குரங்கை வந்து, ஐய — சுவாமி, இன்னே காணுதி — இப்போதே பார்ப்பீராக, என்றார்-என்று சொன்னார்கள்—எ-று. 59

மண்டலங்கிழிந்தவாயின்மறிகடன்மோழைமண்ட
எண்டிசைசுமந்தமாவுந்தேவருமிரியல்போகத்
தொண்டைவாயரக்கிமார்கள்சூழ்வயிறுடைந்துசோர
அண்டமும்பிளந்துவிண்டதாமெனவநுமனார்த்தான்.

இ-ள். மண்டலம் — அப்போது திருவடி கர்ச்சித்ததனலே அந்தப்பூமி, கிழிந்த — வெடித்துப்பிளந்த, வாயில் - வெடிப்புவழியே, மறிகடல் — அலைகள் கொதித்து மடங்குகிற கடலாகிய, மோழை — கஞ்சியானது, மண்ட - புகுந்துசெல்லவும், எண்திசை — அஷ்டதிக்கையும், சுமந்த — தாங்குகிற, மாவும் — யானைகளும், தேவரும் — அவைகளிலேறுகிற தேவர்களும், இரியல் போக - ஓடுதலாகவும், தொண்டைவாய் - கொவ்வைக்கனிபோலும் அதரத்

தையுடைய, அரக்கிமார்கள் - ராக்ஷதப் பெண்களுடைய, சூல்வயிறு — கருப்பங்கொண்ட வயிறு, உடைந்து — வெடித்து, சோர — பிள்ளை வெளிவரவும், அண்டமும் - ஆகாயமுகடும், பிளந்து விண்டது — பிளந்து வெடித்தது, ஆமென — மெய்யேயென்னும்படி, அனுமன் ஆர்த்தான் - திருவடி கர்ச்சித்தார்—எ-று. 60

பொழிலிருத்தபடலம் முற்றிற்று

ஆ படலம் - 7 - க்கு திருவிருத்தம் - 754

கம்பநாட்டாழ்வார் திருவடிகளே சரணம்

எட்டாவது

# கிங்கரர்வதைப்படலம்

அருவரைமுழையின் முட்டுமசனியினிடிப்புமாழி
வெருவருமுழக்குமீசன்வில்லிறுமொலியுமென்னக்
குருமணிமகுடகோடிமுடித்தலைகுலுங்கும்வண்ணம்
இருபதுசெவியினூடுநுழைந்ததவ்வெழுந்தவோசை.

இ-ள். அரு - தெய்வத்தன்மையுள்ள, வரைமுழையில் — ஒரு மலைக் குகையிலேபோய், முட்டும் — மோதுவதான, அசனியினிடிப்பும் - இடிமுழக் கமும், வெருவரும் — பயந்தோன்றத்தக்க, ஆழிமுழக்கும் - கடல்முழக்கமும், ஈசன் — சிவனுடைய, வில் இறும் — வில்லொடிந்த, ஒலியும் என்ன — முழக்க மும்போல, குருமணி — காந்திபொருந்தின ரத்நங்கள்பதித்த, மகுடகோடி- கிரீடவரிசைகளானவுறுப்பும், முடி — மயிர்முடியுமுள்ள, தலை — பத்துத்தலை களும், குலுங்கும்வண்ணம் — நடுங்கும்படி, இருபது செவியினூடும் — இரா வணன் இருபது காதுக்குள்ளும், நுழைந்தது - புகுந்தது, அவ் — அந்தச் சோலையினின்றும், எழுந்த - உண்டான, ஓசை — அனுமார் கெர்ச்சித்த வொலி, இராவணனே — ஒரு மலையாகவும், அவன் காதுகளே — குகைகளாக வுங்கொள்க—எ-று. 1

புல்லியமுறுவறோன்றப்பொருமையுஞ்சிறிதுபொங்கி
எல்லையிலாற்றன்மாக்களெண்ணிறந்தாரையேவி
வல்லியினகலாவண்ணம்வானையும்வழியைமாற்றிக்
கொல்லலீர்குரங்கைநொய்திற்பற்றுதிர்கொணர்திரென்றான்.

இ-ள். புல்லியமுறுவல் — புன்சிரிப்பும், தோன்ற - உண்டாக, பொரு மையும் — அழுக்காறும், சிறிதுபொங்க — கொஞ்சமுண்டாக, எல்லையில்- அளவில்லாத, ஆற்றல் — பலத்தையுடைய, மாக்கள் — வீரர்கள், எண் இறந் தாரை — அளவற்றபேர்களை, ஏவி — போகச்சொல்லி, வல்லையின் — அதிக விரையிலே, அகலாவண்ணம் — அது ஓடிப்போகாதபடி, வானையும் — ஆகா யத்தையும் திக்குகளையும், வழியை மாற்றி - போகும்வழியை மறித்து, கொல்லலீர் குரங்கை — கொல்லாமல் நீங்கள், நொய்தில் — உபாயத்தினல், பற்றுதிர் — பிடியுங்கள், கொணர்திர் - கொண்டுவாருங்கள், என்றான் என்று விடைதந்தான் இராவணன், வானையும் என்பதில் — வானிலும் இசைகளி லும் என வருபுமாறுக—எ-று. 2

சூலம்வாண்முசலங்கூர்வேறோமரந்தண்டுபிண்டி
பாலமேமுதலாவுள்ளபடைக்கலம்பரித்தகையர்

*ஆலமேயனையமெய்யரகலிடமருவுசெய்யும்*
*காலமேலெழுந்தமூரிக்கடலெனக்கடிதுசெல்வார்.*

இ-ள். சூலம் – சூலாயுதங்களும், வாள் – வாளாயுதங்களும், முசலம்– இருப்புலக்கைகளும், கூர்வேல் – கூரிய வேலாயுதங்களும், தோமரம் – எறியாயதங்களும், தண்டு – தண்டாயுதங்களும், பிண்டிபாலம் – பிண்டிபாலங்களும், முதலாவுள்ள – முதலான, படைக்கலம் – ஆயுதங்களை, பரித்த–கொண்ட, கையர் – கைகளுள்ளவர்கள், ஆலமே அனைய – விஷத்தையே நேரான, மெய்யர் – சரீரமுள்ளவர்கள், அகல் இடம் – அகன்றவுலகத்தை, அழிவுசெய்யும் – முழுகல்பண்ணுகிற, காலமேல் – காலத்திலே, எழுந்த–பொங்கிவருகிற, மூரிக்கடல் என – பெருங்கடல்போல், கடிது – விரைவிலே, செல்வார் – எங்கும் வியாபிக்கத்தக்கவர்கள்—எ-று. பாலமே என்பதில் ஏ– எண்ணிடைச்சொல். 3

*நானிலமதனினுண்டுபோரெனநவிலினச்சொல்*
*தேனினுங்களிப்புச்செய்யுஞ்சிந்தையர்த்தெரித்துமென்னின்*
*கானினும்பெரியரோசைகடலினும்பெரியகீர்த்தி*
*வானினும்பெரியர்மேனிமலையினும்பெரியர்மாதோ.*

இ-ள். நால்நிலம் – நான்குதிக்குகளாகிய, அதனில் – அவ்விடங்களிலே, உண்டுபோரென – சண்டையுண்டென்று, நவிலில் – சொல்லக்கேட்டால், அச்சொல் – அந்தவார்த்தையை, தேனினும் – தேனின் மாதுரியத்திலும், களிப்புச்செய்யும் – அதிகமதுரமாகக்கொள்ளுகிற, சிந்தையர் – மனமுள்ள வர்கள் அவர்களளவை, தெரித்துமென்னின் – ஒருவகை தெரிந்து சொல்வோமானல், கானினும் – நெருக்கத்தாலு நீளத்தாலும் காட்டைப்பார்க்கிலும், பெரியர் – அதிகமானவர்கள், ஓசை – குமுறுகிறதினலே, கடலினும் – கடலைப்பார்க்கிலும், பெரியர் — அதிகமானவர்கள், கீர்த்தி – புகழாலே, வானினும் – ஆகாயப்பரப்பிலும், பெரியர் — அதிகமானவர்கள், மேனி – சரீரதிடத்தினலே, மலையினும் – மலைகளைப்பார்க்கிலும், பெரியர்– அதிகமானவர்கள், மாது ஓ — அசைகள்—எ-று. 4

*திறுகுறுஞ்சினத்துத்தேவர்தானவரென்னுந்தெவ்வர்*
*இருகுறும்பெறிந்துநின்றவிசையினர்வசையென்றெண்ணிப்*
*பொருகுறும்பின்றுவென்றுபுணர்வதுபூவுண்வாழ்க்கை*
*ஒருகுறுங்குரங்கென்றெண்ணிநெடிதுநாணுழக்குநெஞ்சர்.*

இ-ள். திருகு உறும் – மாறுபாடுகொள்கிற, சினத்து – கோபத்தையுடையவராய், தேவர்தானவர் – தேவாசுரர்கள், என்னும் – என்னப்படுகிற, தெவ்வர் – பகைவர்களாகிய, இருகுறும்பு – இருவகையோர் போர்களையும், எறிந்து – கடிந்து, நின்ற – நிலைகொண்ட, இசையினர் – புகழுள்ளவர்கள், வசையென்று – அரசன் பொழிலை அழித்தகுனலே பழிப்புண்டாயிற்றென்று, எண்ணி – நினைத்து, பொருகுறும்பு – பொரும்போரிலே, இன்று–

இப்போது நாம், வென்றுபுணர்வது – ஜெயித்துப் புகழையடைவதற்கு, பூ – பூ, தளிர் – இலைகளை, உண்வாழ்க்கை – தின்கிற அல்பசரீரியான, ஒரு குறுங்குரங்கு – ஒரு சிறிய குரங்குதானே, என்று எண்ணி – என்று இகழ்ச்சி செய்து, நெடிதுநாண் – மிகவும் வெட்கத்தால், உழக்கும் – வருந்துவதான, நெஞ்சர் – மனமுள்ளவர்கள்—எ-று. இக்குரங்கைவென்றதனாலே புகழில்லையென்பதவர்கள் கருத்து. 5

கட்டியவாளரிட்டகவசத்தர்கழலர்திக்கைத்
தட்டியதோளர்மேகந்தடவியகையர்வானை
எட்டியமுடியர்தாளாலிடறியபொருப்பரீட்டிக்
கொட்டியபேரியென்னமழையெனக்குமுறுஞ்சொல்லார்.

இ-ள். கட்டியவாளர் – இடையிலே கத்திகட்டினவர்கள், இட்டகவசத்தார் – மார்பிலே சீரா அணிந்தவர்கள், இட்டகழலர் – காலிலே வீரக்கழல் கட்டினவர்கள், திக்கை – திசைகளை, தட்டி – மோதுகிற, தோளர் – புஜங்களுள்ளவர்கள், மேகம் – மேகங்களை, தடவிய – தடவுகிற, கையர் – அகங்கைகளுள்ளவர்கள், வானை – ஆகாயத்தை, எட்டிய – தொடுகிற, முடியர் – தலைகளுள்ளவர்கள், தாளால் – கால்களாலே, இடறியபொருப்பர் – மலைகளை உந்துகிறவர்கள், ஈட்டி – ஒருசேர்க்கையாக, கொட்டிய – முழக்குகிற, பேரியென்ன – பேரிமுதலிய வாத்தியவோசைபோலவும், மழையென – மேகமுழக்கமென்று நினைக்கவும், குமுறும் – அதட்டுகிற, சொல்லார் – சொற்களுள்ளவர்கள் அந்த வீரர்கள்.—எ-று. 6

வானவரெறிந்ததெய்வவடுபடைவடுக்கண்மற்றைத்
தானவர்துரந்தவேதித்தழும்பொடுதயங்குந்தோளர்
யானையும்பிடியும்வாரியிடுங்கயவாயரீன்ற [ணர்.
கூனல்வெண்பிறையிற்றோன்றுமெயிற்றினர்கொதிக்குங்கண்

இ-ள். வானவர் – தேவர்கள், எறிந்த – வீசின, தெய்வம் – தெய்வத்தன்மையுள்ளனவாய், அடு – கொல்லுகின்ற, படை – அஸ்திரசஸ்திரங்களாலான, வடுக்கள் – தழும்புகளும், மற்றைத்தானவர் – தேவரில்வேறான அசுரர்கள், துரந்த – பிரயோகித்த, ஏதி – ஆயுதமுதலானவைகளாகிய, தழும்பொடு – காயங்களுடனே, தயங்குந்தோளர் – விளங்கும்புஜங்களுள்ளவர்கள், யானையும் – ஆண்யானைகளையும், பிடியும் – பெண்யானைகளையும், வாரியிடும் – அள்ளியுண்கிற, கயவாயர் – பெரியவாய்களுள்ளவர்கள், ஈன்ற – அவ்வாய்கள்பெற்றனவாக, கூனல் – வளைவுள்ள, வெண் – வெண்மையான, பிறையில் – அர்த்தசந்திரன்போல், தோன்றும் – விளங்குகிற, எயிற்றினர் – தந்தங்களுள்ளவர்கள், கொதிக்கும் – கொதிப்புள்ள, கண்ணர் – கண்களுள்ளவர்கள், ஈன்ற கூனல்வெண்பிறை – மூன்றாம்பிறைபோலெனவுமாம்-எ-று.

சக்கரமுலக்கைதண்டுதோரைவாள்பரிகஞ்சங்கு
முற்கரமுசுண்டிபிண்டிபாலம்வேல்சூலமுட்கோல்

*பொற்கரங்குலிசம்பாசம்புகர்மழுவெழுப்பொற்குந்தம்*
*விற்கருங்கணைவிட்டேறுகழுக்கடையெழுக்கண்மின்ன.*

இ-ள். சக்கரம் - சக்கராயுதங்களும், உலக்கை - இருப்புலக்கைகளும், தண்டு - தண்டாயுதங்களும், தாரை — கூர்மையுள்ள, வாள் — வாளாயுதங்களும், பரிகம் — வளைதடிகளும், சங்கு - சங்குகளும், முற்கரம் முசுண்டி- இவ்வகைகளும், பிண்டிபாலம் — எறியீட்டிகளும், வேல் சூலம் முட்கோல்- இவைகளும், பொற்கரம் — பொன்னொளியுள்ள, குலிசம் — வச்சிராயுதங்களும், பாசம் — கயிறுகளும், புகர் — காந்தியுள்ள, மழு — பரசாயுதங்களும், எழு — எழுத்தண்டங்களும், பொற்குந்தம் - பொன்வடிம்புள்ளகைவேல்களும், வில் - விற்களும், கருங்கணை — பெரிய அம்புகளும், விட்டேறு- நெடுஞ்சூலங்களும், கழுக்கடை — கூறியகழுக்களும், எழுக்கள் - மற்றுமுள்ள பலவகை ஆயுதங்களும், மின்ன — விளங்க—எ-று. 8

*பொன்னின்றுகனலுந்தெய்வப்பூணினர்பொருப்புத்தோளர்*
*மின்னின்றபடையுங்கண்ணும்வெயில்விரிக்கின்றமெய்யர்*
*என்னென்றார்க்கென்னென்னென்றாரெய்தியதறிந்திலாதார்*
*முன்னின்றார்முதுகுதீயப்பின்னின்றார்முடுகுகின்றார்.*

இ-ள். பொன்நின்று-சுவர்ணமயமாக நிலைகொண்டு, கனலும்-விளங்குகின்ற, தெய்வப்பூணினர் — திவ்வியாபரணங்களுள்ளவர்கள், பொருப்பு- மலைபோலும், தோளர் — புஜங்களுள்ளவர்கள், மின்நின்ற - ஒளிவிளங்குகிற, படையும் — ஆயுதங்களும், கண்ணும் — கண்களும், வெயில் — சூரிய கிரணத்தைப்போல், விரிக்கின்ற — ஒளியைக்காட்டுகிற, மெய்யர்-சரீரமுள்ளவர்கள், என் என்றார்க்கு — செல்லாதுநிற்றல் ஏனென்று கேட்பவர்களுக்கு, என் என் — அப்படியே என் என், என்றார் — என்று சொல்லலானார்கள், எய்தியது — செல்ல இடமில்லாமனிற்பது, அறிந்திலாதார் — தெரியாதவர்கள், முன் நின்றார் - முன்னே நின்றவர்கள், முதுகு — பின்புறம், தீய — வேவ, பின்நின்றார் — பின்னே நின்றவர்கள், முடுகுகின்றார்-விரைவுசெய்கிறார்கள், அறிந்திலாதாரேனேனென்றா ரெனக்கூட்டுக. முதுகுதீய முடுகுதல்சினந்து செல்லச்சொல்லுதல்—எ-று. 9

*வெய்துறுபடையின்மின்னர்வில்லினர்வீசுகாலர்*
*மையுறுவிசும்பிற்றோன்றுமேனியர்மடிக்கும்வாயர்*
*கைபரந்துலகுபொங்கிக்கடையுகமுடியுங்காலைப்*
*பெய்யவென்றெழுந்தமாரிக்குவமைசால்பெருமைபெற்றார்.*

இ-ள். வெய்து உறு — வெம்மைமிகுந்த, படையின் — ஆயுதங்களான, மின்னர் — மின்னலையுடையவர், வில்லினர் - இந்திரதனுசுபோல் வில்லுமுள்ளவர்கள், வீசு — மோதுகின்ற, காலர் - மூச்சுக்காற்றுமுள்ளவர்கள், மை உறு — கருமைமிகுந்த, விசும்பில் — மேகம்போலவே, தோன்றும் — காணப்படுகிற, மேனியர் — நிறமுள்ளவர்கள், மடிக்கும் - இதழைமடிக்கிற, வாயர்-

வாயுமுள்ளவர்கள், கைபரந்து — கைகளாகிய அலைகள்பரவி, உலகு-உலகமெல்லாம், பொங்கி — நிரம்புதலாய், கடையுகம் - யுகமுடிவுவந்து, முடியுங்காலை-எல்லாம் அழியும்போது, பெய்யவென்று - பொழியவேணுமென்று, எழுந்த - கிளர்ந்துகூடின, மாரிக்கு — மேக கூட்டத்திற்கு, உவமைசால் — ஒப்பமைவதான, பெருமைபெற்றார் - பெரியதன்மை கொண்டுள்ளவர்கள்-எ-று. மின் வில் காற்றுகரிபநிறம் அம்புபெய்தல் முதலிய பலதிறத்தானும் உலகம் அழியப்பெய்யவெழுந்த மேககூட்டத்தை ஒத்தனரென்க. 10

பணியுறுசெயலைசிந்தியோமமும்பறித்ததம்மா
தனியொருகுரங்குபோலாநன்றுநந்தருக்கென்கின்றார்
இனியொருபழிமற்றுண்டோவிதனினென்றிரைத்துப்பொங்கி
முனிவுறுமனத்திற்றாவிமுந்துறமுடுகுகின்றார்.

இ-ள். பணியுறு — குளிர்ச்சிமிகுந்த, செயலை-அசோகவனத்தை, சிந்தி-அழித்து, ஓமமும் — ஓமமண்டபத்தையும், பறித்தது — அம்மா வேரோடேதோண்டியழித்தது, தனி — தனியேவந்து, ஒரு குரங்குபோல் — ஒரு குரங்குவடிவுள்ளதே, ஆம் — இதுமெய்யேயானால், நம்தருக்கு — நமது மனக்களிப்பு, நன்று — நன்றாயிருந்தது, என்கின்றார் — என்றுசொல்கிறார்கள், இதனின்-இதைப்பார்க்கினும், இனி — இன்னமும், ஒருபழி-ஒருபழிப்பு, மற்று உண்டோ — நமக்கு வேறே விளையவேணுமோவேண்டா, என்று இரைத்து - என்றுமுழங்கி, பொங்கி — கொதித்து, முனிவுறு — கோபங்கொள்ளுகிற, மனத்தில் - மனோவேகத்துடனே, தாவி - தாண்டி, முந்துற — முன்னேசெல்ல, முடுகுகின்றார் — விரைவுகொள்கிறார்கள்—எ-று. 11

எற்றுறுமுரசும்வின்னாணேறவிட்டெடுத்தவார்ப்பும்
சுற்றுறுகழலுஞ்சங்குந்தெழிதெழித்துரப்புஞ்சொல்லும்
உற்றுடன்றொன்றாயோங்கியொலித்தெழுந்தூழிப்பேர்வில்
நற்றிரைக்கடல்களோடுமழைகளைநாவடக்க.

இ-ள். எற்றுறு — கொட்டப்படுகிற, முரசும் — பேரிகைச்சத்தமும், வில் — வில்லிலே, நாண் ஏறவிட்டு — நாணையேற்றி, எடுத்த — குணத்தொனிசெய்கிற, ஆர்ப்பும் — சத்தமும், சுற்றுறு - காலிலே சூழக்கட்டின, கழலும்-வீரகண்டாமணியும், சங்கும் — சங்குகளும், தெழிதெழித்து - மிகமுழங்கி, உரப்பும் — அதட்டுகிற, சொல்லும் — சொல்முழக்கமும், உற்று — ஒருசேர்க்கையாய், உடன்று — மாறுகொண்டு, ஒன்றாய் — ஒரேமுழக்கமாய், ஓங்கி-உயர்ந்து, ஒலித்து — சத்தித்து, எழுந்து — எழுதலாகி, ஊழிப்பேர்வில் — யுகமுடிவிலேதோன்றுகிற, நல்திரை — பெரிய அலைகள் மிகுகின்ற, கடல்களோடு-கடல்களுடனே, மழைகளை — அக்காலத்து மேகத்தையும், நா அடக்க - ஒலிஒலிக்கும்வாய்களை அடங்கச்செய்வதாய்ச் செல்கிறார், நாணேறு என்றால்-நாணாகிய இடிமுழக்கமென்க—எ-று. 12

தெருவிடமில்லென்றெண்ணிவானிடைச்செல்கின்றாரும்
புருவமுஞ்சிலையுங்கோட்டிப்புகையுயிர்த்துயிர்க்கின்றாரும்
ஒருவரினொருவர்முந்திமுறைமறுத்துருக்கின்றாரும்
விரிவிலதிலங்கையென்றுவழிபெறார்விளிக்கின்றாரும்.

இ-ள். தெரு — வீதியிலே நடக்க, இடமில்லென்று — இடமில்லையென்று, எண்ணி — நினைத்து, வானிடை — ஆகாயத்திலே, செல்கின்றாரும்- சிலர் செல்கிறார்கள், புருவமும் — புருவங்களையும், சிலையும் — வில்லையும், கோட்டி - வளைத்து, புகை உயிர்த்து — கோபாக்கினியால் வருகிற புகையைப்பெறுதலாய், உயிர்க்கின்றாரும் — சிலர் சுவாசிக்கிறார்கள், ஒருவரின் ஒருவர் — ஒருவனுக்கொருவன், முந்தி — முன்னிட்டு, முறைமறுத்து — அடைவுகெடராய், உருக்கின்றாரும் - சிலர் கோபங்கொள்கிறார்கள், இலங்கை-அந்த அந்த இலங்காபுரி, விரிவிலதென்று — அகலமில்லையென்று, வழிபெறார்-நடக்கவழி கிடையாதவர்களாய், விளிக்கின்றாரும் — சிலர்தம்மோடுபொருதவல்லவனைக் கூப்பிடுகிறார்கள் —எ-று. விளித்தல் — அழைத்தல், உம் எல்லாம் — அசைகளென்க. 13

வாளுறைவிதிர்க்கின்றாரும்வாயினைமடிக்கின்றாரும்
தோளுறத்தட்டிக்கல்லைத்துகள்படத்துகைக்கின்றாரும்
தாள்பெயர்த்திடம்பெறாதருக்கினர்நெருக்குவாரும்
கோள்வளையெயிறுதின்றுதீயெனக்கொதிக்கின்றாரும்.

இ-ள். வாள் — கத்தியை, உறை — உறையினின்று, விதிக்கின்றாரும்- சிலருருவுகிறார்கள், வாயினை — வாயிதழை, மடிக்கின்றாரும் — சிலர் மடிக்கின்றார்கள், தோள் — புஜங்களை, உற — அதிகமாக, தட்டி — கொட்டி, கல்லை- கீழுள்ளகற்களை, துகள்பட — தூள்தூளாக, துகைக்கின்றாரும் — சிலர் மிதிக்கின்றார்கள், தாள்பெயர்த்து - கால்களை எடுத்துவைத்து, இடம்பெறாது- ஊன்ற இடங்கிடையாமல், தருக்கினர் — செருவங்கொண்டவர்களாய், நெருக்குவாரும் — சிலர் நெருக்குகிறார்கள், கோள்வளை — வளைவுகொண்ட, எயிறு தின்று - பல்லைக்கடித்து, தீயென — நெருப்பைப்போல், கொதிக்கின்றாரும் சிலர்மனங் கொதிக்கிறார்கள் —எ-று. 14

வேறு

அனைவருமலையெனநின்றாரளவறுபடைகள்பயின்றார்
அனைவருமமரினுயர்ந்தாரகலிடநெளியநடந்தார்
அனைவரும்வரனினமைந்தாரசனியினணிகளணிந்தார்
அனைவருமமரரைவென்றாரசுரரையுயிரையயின்றார்.

இ-ள். அனைவரும் — எல்லாரும், மலையென — மலைபோல், நின்றார்- வந்து நின்றார்கள், அளவறு — அளவற்ற, படைகள் — ஆயுதவரிசைகளெல்லாம், பயின்றார் — கற்றவர்கள், அனைவரும் — எல்லாரும், அமரின் - யுத்தஞ்

செய்வதிலே, உயர்ந்தார் - மேலானவர்கள், அகலிடம் – அகன்ற பூமியின், நெளிய – முதுகுசுளிக்க, நடந்தார் – சென்றார்கள், அனைவரும்-எல்லாரும், வரனின் —வரபலத்தை, அமைந்தார் – கொண்டவர்கள், அசனியின் —இடி முழக்கம்போலொலிக்க, அணிகள் - வீரக்கழல்களை, அணிந்தார் – இருசக்கட்டினர்கள், அனைவரும் – எல்லாரும், அமரரை - தேவர்களை, வென்றார்-ஜெயங்கொண்டவர்கள், அசுரரை – அசுரர்களுடைய, உயிரை-பிராணவாயுவை, அயின்றார் – பாம்புபோலுண்டவர்கள்—எ-று. 15

குறுகினகவசருமின்போற்குரைகழலுரகரும்வன்போர்
முறுகினபொழுதினுடைந்தார்முதுகிடைமுறுவல்பயின்றார்
இறுகினநிதிகிழவன்பேரிசைகெடவளகையெறிந்தார்
தெறுநரின்மையர்வன்றோடினவுறவுலகுதிரிந்தார்.

இ-ள். குறுகின – குறைதலான, கவசரும் – சட்டையிட்டிருக்கிற சித்தரும், மின்போல் – மின்போலொளிவிடுகிறதாய், குரை — சத்திக்கிற, கழல்-வீரக்கழலணிந்த, உரகரும் — உரகசாதியும், வன்போர் – வலியபோரிலே, முறுகினபொழுதின் - அதிகமான காலத்தில், உடைந்தார் – தோற்றாராயோடுகிறவர்கள், முதுகிடை – முதுகைக்கண்டு, முறுவல்பயின்றார் - சிரிக்கக்கற்றவர்கள், இறுகின – நிலைகொண்ட, நிதி – சங்கநிதி பதுமநிதிகளுக்கு, கிழவன் - பாத்தியஞன குபேரனுடைய, பேரிசை — பெருங்கீர்த்தி, கெட-அழிய, அளகை - அளகாபுரியை, எறிந்தார் – இடித்தவர்கள், தெறுநர்-தம்மை வெல்லவல்லவரை, இன்மையர்-இல்லாதவர்கள், வன்தோள்-வலிய தோள்கள், தினவுற – நமைச்சலுண்டாகையாலே, உலகு - உலகமெல்லாம், திரிந்தார் – சண்டைசெய்ய அலைந்தவர்கள்—எ-று. குறுகினகவசம் அரைச்சட்டை. 16

வரைகளையிடறுமினென்றான்மறிகடல்பருகுமினென்றால்
இரவியைவிழவிடுமென்றாலெழுமழைபிழியுமினென்றால்
அரவினதரசனையொன்றாதரையினொடரையுமினென்றால்
தரையினையெடுமெடுமென்றாலொருவரதமைதல்சமைந்தார்.

இ-ள். வரைகளை — மலைகளை, இடறுமினென்றால் – உதுங்களென்றாலும், மறிகடல் – அலைபுரளுகிறகடலை, பருகுமினென்றால் – குடியுங்களென்றாலும், இரவியை – சூரியனை, விழவிடுமென்றால் - தள்ளிவிடுங்களென்றாலும், எழுமழை – ஏழுமேகங்களையும், பிழியுமினென்றால் – பிழிந்துவிடுங்களென்றாலும், அரவினதரசனை-சர்ப்பராஜனை, ஒன்றா-ஒருவகையாகவோ, தரையினொடு – பூமியோடேசேர, அரையுமினென்றால் – அரைத்துவிடுங்களென்றாலும், தரையினை — பூமியை, எடும் எடுமென்றால் – எடுங்கள் எடுங்களென்றாலும், ஒருவர் — அவரிலொருவரே, அது – அச்செய்கை, அமைதல்-செய்தலுக்கு, சமைந்தார் – தக்கவர்—எ-று. 17

தூளியினிமிர்படலம்போயிமையவர்விழிதுறவெம்போர்
மீளியினினமெனவன்றாள்விரைபுலிநிரையெனவின்டோய்

ஆளியினணிமெனவன்றேலலைகடல்விடமெனவஞ்சா
வாளியின்விசைகொடுதிண்கார்வரைவருவனவெனவந்தார்.

இ-ள். தூளியின் – பூதூளிகளின், நிமிர் – உயர்தலான, படலம்போய் - பரப்புச்சென்று, இமையவர் – தேவர்களுடைய, விழிதுற – கண்களிற் புகுத, வெம்போர் – வெவ்விய சண்டைசெய்யவல்ல, மீளியின் – சிங்கங் களின், இனமென – கூட்டம்போலவும், வன் தாள் – வலியகால்களாலே, விரை – வேகஞ்செய்வதான, புலிநிரையென – புலிக்கூட்டங்கள்போலவும், விண்தோய் – ஆகாசத்தளவு பாயவல்ல, ஆளியின் – யாளியாளியின், இன மென – கூட்டம்போலவும், அன்றேல் – இவைகளல்லவாயில், அலைகடல் - அக்கடலிலேதோன்றின, விடமென - நஞ்சுபோலவும், அஞ்சா - அஞ்சாமல், வாளியின் – பாணத்தினது, விசைகொடு – வேகங்கொண்டு, திண் – பல முள்ள, கார்வரை – கரியமலைகள், வருவனவென – நடந்துவருவனபோல், வந்தார் – வந்துகூடினார்கள்—எ-று. 18

பொறிதரவிழியுயிரொன்றேபுகையுகவயிலொளிமின்போல்
செறிதரவுருமதிர்கின்றார்திசைதொறும்விசைகொடுசென்றார்
எறிதருகடையுகவன்காலிடறிடவுருமினினம்போய்
மறிதரமழையகல்விண்போல்வடிவழிபொழிலைவளைந்தார்.

இ-ள். விழி – கண்களிலே, பொறிதர – நெருப்புப்பொறிதோன்ற, உயிரொன்றே – நெடுமூச்சுமாத்திரமோ, புகையுக – அதுடனே புகையும் வர, அயிலொளி – வேலினதுகாந்தி, மின்போல் – மின்னலைப்போல், செறி தர – நெருங்குதலாக, உரும் – இடிபோல், அதிர்கின்றார் – முழங்குகிறார்கள், திசைதொறும் – நான்குதிக்கிலும், விசைகொடு-வேகங்கொண்டு, சென்றார்– செல்லலானார்கள், எறிதரு – வீசுகின்ற, கடையுகம் – முடிவுகாலத்து, வன் கால் – பிரசண்டவாயு, இடறிட – தடுமாறவும், உருமினினம் – இடிக்கூட் டங்கள், போய் – தூரச்சென்று, மறிதர – மடங்குதலாகவும், மழை – மேக சஞ்சாரம், அகல் – நீங்குதலான, விண்போல் – ஆகாயம்போல், வடிவுஅழி- மரவுருமாய்க்கிடக்கிற, பொழிலை – அசோகவனத்தை, வளைந்தார் – சூழ்ந் தார்கள்—எ-று. 19

வயிரொலிவளையொலிவன்கார்மழையொலிமுரசொலிமண்பால்
உயிருலையுறநிமிரும்போருருமொலிசெவியினுணர்ந்தான்
வெயில்விரிகதிரவனும்போய்வெருவிடவெளியிடைவிண்டோய்
கயிலையின்மலையெனநின்றானையவர்வருதொழில்கண்டான்.

இ-ள். வயிரொலி – கொம்பினொலியும், வளையொலி – சங்கினொலி யும், வன் – பலமான, கார் – மழைகாலத்து, மழையொலி – மேகமுழக்கம் போன்ற, முரசொலி-பேரிகைச்சத்தமும், மண்பால் - உலகத்துள்ள, உயிர்- உயிர்களெல்லாம், உலைவுற – நடுநடுங்க, நிமிரும்-அதிகரித்துவருகிற, போர்- யுத்தசன்னகமான, உருமொலி – இடிபோன்ற கெர்ச்சிதவொலியும், செவி

யின் — காதில்விழ, உணர்ந்தான் — தெரிந்தாராய், வெயில்விரி - கிரணங்களை விரிக்கிற, கதிரவனும் - சூரியனும், போய் — விலகிப்போய், வெருவிட-பயங்கொள்ள, வெளியிடை — ஆகாயத்துள்ள, விண்தோய் - மேகமண்டலத்தை அளாவுகிற, கயிலையின்மலையென — வெள்ளிமலைபோல், நின்றான் - நின்ற அனுமார், அனையவர் — அந்தக்கிங்கரர், வருதொழில் — வருகிறசெய்கையை, கண்டான் — பார்த்தார்—எ-று. 20

இதவியலிதுவெனமுந்தேயியைவுறவினிதுதெரிந்தான்
பதவியலறிவுபயந்தாலதினலபயனுளதுண்டோ
சிதவியல்கடிபொழிலொன்றேசிதறியசெயறருதிண்போர்
உதவியலினிதினுவந்தானெவரினுமதிகமுயர்ந்தான்.

இ-ள். இதவியல் — செய்தற்குரியதான இயல்பு, இதுவென — இப்படி யென்று, முந்தே — முன்புதானே, இயைவுற - பொருத்தமாக, இனிது-நன்றாக, தெரிந்தான் — இப்பொழிலினைக் கடிதிறுக்குவனென்றபாட்டில் யோசித்தவராதலாலே, பதவியல் - பக்குவமான வியல்புள்ள, அறிவு — விவேகம், பயந்தரல் — உண்டானால், அதின் — அதைப்பார்க்கிலும், நலபயன் — நல்லபயனைத் தருவது, உளதுண்டோ — வேறொன்றுளதாவதில்லை, சிதவியல்-ஜயத்தைத்தரு மியல்புள்ளது, கடிபொழில் — இந்தக் காவலையுடையசோலை, ஒன்றே — ஒன்றினாலேதானே இன்னம், சிதறிய — அழித்தற்கேதுவான, செயல்தரு - செய்கையைத்தருகிற, திண்போர் — வலிதான சண்டையை, உதவுஇயல் — எனக்குத்தந்த இயல்பு இந்தவனத்தை அழித்ததல்லவோவென்று, இனிதின் — நன்றாக, உவந்தான் — சந்தோஷித்தார், எவரினும் — எல்லாரிலும், அதிகம் — அறிவாலும் திறலாலும் அதிகமாக, உயர்ந்தான் - உயர்ந்துள்ள அனுமார், இயல் - சிறப்பு—எ-று. 21

இவனிவனிவனெனநின்றாரிதுவெனமுதலியெதிர்ந்தார்
பவனனின்முடுகிநடந்தார்பகலிரவுறமிடைகின்றார்
புவனியுமலையும்விசும்பும்பொருவருநகருமுடன்போர்த்
துவனியிலதிரவிடம்போற்சுடர்விடுபடைகடுரந்தார்.

இ-ள். இவன்இவன் இவன்என — இப்படிக் குறிப்பித்து, நின்றார்-நின்றார்சிலர், இதுவென — இந்தக் குரங்குதான் வனத்தை அழித்ததென்று, முதலி — முற்பட்டு, எதிர்ந்தார் — எதிரே சென்றார்கள் சிலர், பவனனில்-வாயுவைப்போல், முடுகி — விரைந்து, நடந்தார் — நடக்கலானார்கள் சிலர், பகல் — அந்தப் பகற்காலமும், இரவுற — இராக்காலமாக இருள, மிடைகின்றார் — நெருங்குகிறார்கள் சிலர், புவனியும் - உலகமும், மலையும்-மலைகளும், விசும்பும் — ஆகாயமும், பொருவரு — ஒப்பில்லையான, நகரும் — அந்தஊரும், உடன் - ஒருசேர, போர்த்துவனியில் — அவர்கள் யுத்த முழக்கத்தினாலே, அதிர — நடுங்குவதாக, விடம்போல் - நஞ்சுப்போல்வனவான, சுடர்விடு-ஒளிவீசுகிற, படைகள் — அஸ்திரசஸ்திரங்களை, துரந்தார் — சிலர் விடலானார்கள்—எ-று. நஞ்சுபோற் சுடர்விடுதல் விஷாக்கினிபோல் சுவலித்தல்.

மழைகளுமறிகடலும்போய்மதமறமுரசமறைந்தார்
முழைகளினிதழ்கடிறந்தார்முதுபுகைகதுவமுனிந்தார்
பிழையிலபடவரவின்றோள்பிடருறவடியிடுகின்றார்
கழைதொடர்வனமெரியுண்டாலெனவெரிபடைஞர்கலந்தார்.

இ-ள். மழைகளும் – மேகங்களும், மறி – அலைகள் மடங்குகிற, கடலும் – சமுத்திரங்களும், போய் – தூரவிலகி, மதம்அற – தமது பெருமை குலைய, முரசம் – பேரிகைகளை, அறைந்தார் - கொட்டினார்கள் சிலர், முழைகளின் – குகைகள்போல், இதழ்கள் – வாய்களை, திறந்தார் – விழுங்க அங்காந்தார்கள் சிலர், முதுபுகை – அதிகமான புகைகள், கதுவ – உண்டாக, முனிந்தார் – கோபங்கொண்டார்கள் சிலர், பிழையில – தோஷமில்லையான, படம் – படங்களை யுடைய, அரவின் – ஆதிசேடனது, தோள் – தோளும், பிடர் – பிடரும், உற – அழுந்த, அடியிடுகின்றார் – சிலர் மிதிக்கிறார்கள், கழைதொடர் - மூங்கில்கணுெருங்கின, வனம் – காடுகளிலே, எரியுண்டாலென – நெருப்பு விழுந்தாற்போல, எரி – சுவாலிக்கிற, படைஞர் – ஆயுதங்களுள்ள சிலர், கலந்தார் – கிட்டினார்கள்—எ-று. 23

அறவனுமதனையறிந்தானருகினிலழகினமைந்தார்
இறவினினுதவுநெடுந்தாருயர்மரமொருகையிலையைந்தான்
உறவருதுணையெனவன்றேவுதவியவதனையுவந்தான்
நிறைகடல்கடையுநெடுந்தாண்மலையெனநடுவணிமிர்ந்தான்.

இ-ள். அறவனும் – தருமரூபியான அனுமார், அதனை – அப்படி அவர்கள் வந்ததை, அறிந்தான் – தெரிந்தாராய், அருகினில் – தமது பக்கத்திலே, அழகினமைந்தார் – யுத்தவேஷங்கொண்டுவந்தவர்கள், இறவினின் – இறத்தலுக்கு, உதவு – உதவிசெய்வதான, நெடுந்தார் - நீண்டவொழுங்குள்ளதாய், உயர்மரம் – உயர்ந்தவொருமரத்தை, ஒருகை - தமதொருகையிலே, இயைந்தான் – கொண்டார் அம்மரத்தை, உறவரு – நமக்குப் பொருந்தவருவதான, துணையென அன்றே - துணையென்று நினைக்கவல்லவோ, உதவிய அதனை - கொடுத்த அவ்வனத்தை, உவந்தான் – மிகவுஞ் சந்தோஷித்தவராய், நிறைகடல் – நிறைந்தகடலை, கடையும் - கடைவதான, நெடுந்தாள் – நீண்ட அடியையுடைய, மலையென - மந்தரகிரிபோல், நடுவண் – அவர்கள் நடுவிலே, நிமிர்ந்தான் - உயர்ந்து நின்றார்—எ-று. 24

பருவரைபுரைவனவன்றோள்பனிமலையருவிநெடுங்கால்
சொரிவனபலவெனமண்டோய்துறைபொருகுருதிசொரிந்தார்
ஒருவரையொருவர்தொடர்ந்தாருயர்தலையுடையவுருண்டார்
அருவரைநெரியவிழும்பேரசனியுமசையவறைந்தான்.

இ-ள். பருவரை – பருத்தமலையை, புரைவன – ஒப்பாயினவான, வன்றோள் – தமது வலிய தோள்களாலே, பனிமலை – இமையமலையானது பலவாய், அருவி – அருவிகளான, நெடுங்கால் – நீண்ட வாய்க்கால்களை, பல-

அநேகமாக, சொரிவனவென — சிந்துகின்றனவென்ன, மண்தோய் — பூமியிலேபடிகிற, துறைபொரு - துறைகளையுடைய ஆறுகள்போல் அலைமோதுகின்ற, குருதி — ரக்தவெள்ளங்களை, சொரிந்தார் - ஒழுகவிட்டவர்களாய், ஒருவரையொருவர் — ஒருத்தனை மற்றொருத்தன், தொடர்ந்தார் - பின்பற்றினவனுகி, உயர்தலை — உயர்ந்ததலைகள், உடைய - உடைபடுதலாய், உருண்டார் — கீழே உருள்வதானுர்கள், அருவரை — பெரிய மலைகளும், நெரியதகர, விழும் — விழுவதான, பேர் — பெரிய, அசனியும் — இடியும், அசையநடுங்க, அறைந்தான் — பருவரை புரைவனவன்றோளிலே அம்மரத்தைக் கொண்டு மோதினுர் —எ-று. 25

பறைபுரைவிழிகள்பறிந்தார்படியிடைநெடிதுபடிந்தார்
பிறைபுரையெயிறுமிழந்தார்பிடரொடுதலைகள்பிளந்தார்
குறையுயிர்சிதறநெரிந்தார்குடரொடுகுருதிகுழைந்தார்
முறைமுறைபடைகளெறிந்தார்முடையுடன்மறியமுறிந்தார்.

இ-ள். பறை — அகன்றவாயுள்ள தோட்பறையை, புரை — ஒப்பான, விழிகள் — கண்கள், பறிந்தார் — சிலர் தெறிபட்டார்கள், படியிடை — பூமியிலே, நெடிது — நீளநீளமாக, படிந்தார் — சிலர் விழுந்தார்கள், பிறை-பாதிச் சந்திரனை, புரை — ஒப்பான, எயிறும் — பற்களும், இழந்தார் - சிலர் ஒடிந்தார்கள், பிடரொடு — பிடரியுடனே, தலைகள் — தலைகளும், பிளந்தார் - சிலர் பிளவுபட்டார்கள், குறையுயிர் — குற்றுயிராக, சிதற — உடல்சிதைவுபட்டு, நெரிந்தார் — சிலர் நெரிதலானுர்கள், குடரொடு — குடலுடனே, குருதி - ரக்தமுங்கூடி, குழைந்தார் — சிலர் குழைவுபட்டார்கள், முறைமுறை — வரிசை வரிசையாய்நின்று, படைகள் — ஆயுதங்கள், எறிந்தார் — வீசின கிங்கரர்களிற் சிலர், முடை — நாற்றம்பொருந்தின, உடல்மறிய — தேகம்பிளக்க, முறிந்தார் - முறிவுபட்டார்கள் —எ-று. தோட்பறையாவது ஒருதோளிலேசேர மார்பிலும் இடக்கையிலுங்கொண்டு கொட்டுகிற ஓர்வகை வாச்சியம். 26

புடையொடுவிடுகனலின்காய்பொறியிடைமயிர்கள்புகைந்தார்
தொடையொடுமுதுகுதுணிந்தார்சுழிபடுகுருதிசொரிந்தார்
படையிடையொடியநெடுந்தோள்பறிதரவயிறுதிறந்தார்
இடையிடைமலையின்விழுந்தாரிகல்பொரமுடுகியெழுந்தார்.

இ-ள். புடையொடு — அனுமாரடிக்கிற அடியுடனே, விடு - வேகத்தால் வருகிற, கனலின் — நெருப்பினுலே, காய் — சுடுகிற, பொறியிடை — பொறிகள்பட்டு, மயிர்கள் — உரோமங்கள், புகைந்தார் — புகைதலாய் நாறினுர்கள் சிலர், தொடையொடு - தொடைகளுடனே, முதுகு — முதுகும், துணிந்தார் — துண்டுதுண்டானுர்கள் சிலர், சுழிபடு — சுழலுண்டாகுகின்ற. குருதி-ரக்தப்பிரவாகங்களை, சொரிந்தார் — சிந்தினுர்கள் சிலர், படையிடை — தாங்கொண்ட ஆயுதங்களினடு, ஒடிய — முறிய, நெடுந்தோள் — நீண்டதோள்கள், பறிதர — துண்டித்துவிழ, வயிறு - உதரமுழுதும், திறந்தார் - கிழிந்தார்கள் சிலர், இடை இடை — அங்கங்கே, மலையின் — மலைகள்போல், விழுந்தார்-

கீழேவிழுந்தார்கள் சிலர், இகல்பொர - சண்டைசெய்ய, முடுகி - விரைந்து, எழுந்தார் - சிலர் எழுந்து வந்தார்கள்—எ-று. 27

புதைபடவிருளின்மிடைந்தார்பொடியிடைநெடிதுபுரண்டார்
விதைபடுமுயிரர்விழுந்தார்விளிவொடுவிழியுமிழந்தார்
கதையொடுமுதிரமலைந்தார்கணைபொழிசிலையர்கலந்தார்
உதைபடவுரனுநெரிந்தாருதரொடுகுருதியுமிழ்ந்தார்.

இ-ள். புதைபட - எங்குமறைவாக, இருளின் - இருள்போல், மிடைந்தார் - நெருங்கினவர்களிலே சிலர், பொடியிடை - பூதூளியிலே, நெடிது - நீளநீளமாக, புரண்டார்சிலர் - புரளலானார்கள், விதைபடும் - சிந்திப்போன, உயிரர் - உயிருள்ளவர்களாய், விழுந்தார் - சிலர்விழுந்தார்கள், விளிவொடு - சாதலுடனே, விழியும் - கண்களும், இழந்தார் - சிலர்போனார்கள், கதையொடு - தண்டாயுதத்துடனே, முதிர - அதிகமாக, மலைந்தார் - சண்டைசெய்தவர்களும், கணைபொழி - அம்புகளைப்பெய்கிற, சிலையர் - வில்லாளிகளாக, கலந்தார் - நெருங்கினவர்களிற் சிலர், உதைபட - அனுமார்காலுதைபடுதலாலே, உரனும் - மார்புமுதுகும், நெரிந்தார் - ஒடிந்தார்கள், உதரொடு - வயிற்றுடனே, குருதி - ரக்தமும், உமிழ்ந்தார் - சிலர் சிந்தினார்கள்.

அயலயன்மலையொடறைந்தானடுபகையளகையடைந்தார்
வியலிடமறையவிரிந்தார்மிசையுலகடையமிடைந்தார்
புயலொடுகடலின்விழுந்தார்புடைபுடைசிதைவொடுசென்றார்
உயர்வுறவிசையினெறிந்தானுடலொடுமுலகுதுறந்தார்.

இ-ள். அளகை - அளகாபுரியை, அடு - வெல்லுகிற, பகை - சத்துருக்களாக, அடைந்தார் - முன்னேசென்று வென்ற அவர்களை, அயலயல் - நான்குபுறத்துமுள்ள, மலையொடு - மலைகளுடனே, அறைந்தான் - மோதினார் அதனாலே யிறந்து, வியலிடம் - அகன்ற அவ்விடமெல்லாம், மறைய - மறைவாக, விரிந்தார் - உடல்கள் அதிகமாகக்கிடந்தார்கள், மிசையுலகு - மேலுலகம், அடைய - முழுதும், மிடைந்தார் - உயிர்கள் நெருங்கலானார்கள் சிலர், புயலொடு - மேகங்கள் மேய்கிற, கடலின் - கடலிலேபோய், விழுந்தார் - சிலர் விழுந்தார்கள், புடைபுடை - நான்குபுறத்திலும், சிதைவொடு - காயங்களுடனே, சென்றார் - சிலர்போனார்கள், உயர்வுற - மேலே செல்ல, விசையின் - வேகங்கொண்டு, எறிந்தான் - சிலரை வாரி யெறிந்தான் அவர்கள், உடலொடும் - தம்முடலுடனே, உலகு - தாம் வாழ்ந்த ஊரையும், துறந்தார் - விட்டுப்போனார்கள் சிலர்—எ-று. அயல் - புடை என்பன இடம். 29

வேறு

பற்றித்தாளொடுதோள்பறித்தெறிந்தனன்பாரின்
இற்றவெஞ்சிறைவெற்பினமாமெனக்கிடந்தார்

கொற்றவாலிடைக்கொடுந்தொழிலரக்கரையடங்கச்
சுற்றிவீசலிற்பம்பரமாமெனச்சுழன்றார்.

இ-ள். பற்றி - அவர்களைப் பிடித்து, தாளொடு — கால்களுடனே, தோள் - தோள்களையும், பறித்து - ஒடித்தொடித்து, எறிந்தனன் — சிலரை எறிந்தார் அவர்கள், பாரின் - உலகத்திலே, வெம்சிறை — வெவ்விதான இறகுகள், இற்ற — ஒடிந்த, வெற்பினம் — மலைக்கூட்டங்களே, ஆமெனா- கிகென்னும்படி, கிடந்தார் — கிடப்பதானார்கள், கொற்றம் — வெற்றி பொருந்தின, வாலிடை — வாலாலே, கொடுந்தொழில் - கொடிய செய்கை யுடைய, அரக்கரை — ராக்ஷதர்களை, அடங்க — அடங்கும்படி, சுற்றி — சூழக் கட்டி, வீசலில் — உதறுதலாலே, பம்பரம் ஆமென — பம்பரம் ஆடுவது போல், சுழன்றார் — சுழலலானார்கள் சிலர்—எ-று. 30

வாள்களிற்றனவிற்றனவரிசிலைவயிரத்
தோள்களிற்றனவிற்றனசுடர்மழுச்சூலம்
நாள்களிற்றனவிற்றனநகையெயிற்றீட்டம்
தாள்களிற்றனவிற்றனபடையுடைத்தடக்கை.

இ-ள். வாள்கள் - கத்திகளும், இற்றன - ஒடிதலாயின, வரிசிலை - வரிந் துள்ளவிற்களும், இற்றன — ஒடிதலாயின, வயிரம் — வயிரமலைபோன்ற, தோள்கள் — புஜங்களும், இற்றன - ஒடிதலாயின, சுடர் — காந்தியுள்ள, மழு- மழுக்களும், சூலம் — சூலங்களும், இற்றன — ஒடிதலாயின, நாள்கள் - நக்ஷத் திரங்கள், இற்றன — உதிர்ந்தாற்போல, நகை — விளங்குகின்ற, எயிற்றீட்டம்- பல்லின் கூட்டங்கள், இற்றன — உடைந்துதிர்ந்தன, தாள்கள் - கால்களும், இற்றன - ஒடிந்தன, படையுடை — ஆயுதங்கள் பற்றின, தடக்கை — நீண்ட கைகளும், இற்றன - ஒடிதலாயின—எ-று. 31

தெறித்தவன்றலைதெறித்தனசெறிசுடர்க்கவசம்
தெறித்தபைங்கழல்தெரித்தனசிலம்பொடுபொலந்தார்
தெறித்தபன்மணிதெறித்தனபெரும்பொறித்திறங்கள்
தெறித்தகுண்டலந்தெறித்தனகண்மணிசிதறி.

இ-ள். வன்றலை - வலியதலைகள், தெறித்த — உடைந்து தெறிப்பதா யின, செறிசுடர் — நெருங்கின காந்தியுள்ள, கவசம் - சீராக்களும், தெறித் தன — கிழிந்து தெறிப்பதாயின, பைங்கழல் — பசும்பொன்னாலான வீரக்கழல் களும், தெரித்த — உடைந்துதெறிப்பதாயின, சிலம்பொடு - சத்திப்ப துடனே, பொலம் — பொன்னாலே செய்த, தார் — அரையிற்கட்டின கிங் கிணி மாலைகளும், தெறித்தன — உடைந்துதெறிப்பதாயின, பன்மணி- ஆபரணங்களிலுள்ள பலவகைரத்நங்களும், தெறித்த — தெறித்துதிர்ந்தன, பெரும் — பெரிதாகிய, பொறித்திரங்கள் - உடலின் பொருத்து வகைகள், தெறித்த - கழன்று சிந்தின, குண்டலம் - காதணிகள், தெறித்தன - தகர்ந்

துதிர்ந்தன, கண்மணி - கண்ணின்மணிகள், சிதறி - சிதறுதலாய், தெறித்தன - தெறித்து விழுந்தன சிலம்புகளுடனே எனவுமாம்—எ-று. 32

உக்கபற்குவையுக்கன துவக்கெலும்புதிர்வுற்
றுக்கமுற்கரமுக்கன முசுண்டிகளுடைவுற்
றுக்கசக்கரமுக்கனவுடற்றிறந்துயிர்கள்
உக்ககற்பணமுக்கனவுயர்மணிமகுடம்.

இ-ள். பற்குவை - பல்லின் கூட்டங்கள், உக்க - உதிர்ந்தன, துவக்கு- உடம்பிலுள்ள, எலும்பு - எலும்புகள், உதிர்வுற்றுக்கன - வெவ்வேறுயுதிர்ந்தன, முற்கரம் - பாங்குகள் ஒடிந்து, உக்க - சிந்தின, முசுண்டிகள் - முள்ளம்புகளும், உக்கன - ஒடிந்துதிர்ந்தன, சக்கரம் - சக்கரங்கள், உடைவுற்று- உடைந்து, உக்க - உதிர்ந்தன, உடல்திறந்து - தேகங்கள் பிளந்து, உயிர்களுக்கன - பிராணன்கள் சிந்தின, கற்பணம் - கல்வட்டங்களும், உக்க- உடைந்துதிர்ந்தன, உயர் - உயர்ந்த, மணிமகுடம் - ரத்நகிரீடங்களும், உக்கன - உடைந்து சிந்தின—எ-று. 33

தாள்களாற்பலர்தடக்கைகளாற்பலர்தாக்கும்
தோள்களாற்பலர்சுடர்விழியாற்பலர்தொடரும்
கோள்களாற்பலர்குத்துகளாற்பலர்தத்தம்
வாள்களாற்பலர்மரங்களினாற்பலர்மடிந்தார்.

இ-ள். தாள்களால் - அனுமார்கால்களாலே, பலர் - அநேகரும், தடக்கைகளால் - நீண்டகைகளாலே, பலர் - அநேகரும், தாக்கும் - மோதுவனவான, தோள்களால் - புஜங்களாலே, பலர் - அநேகரும், சுடர் - பிரகாசமான, விழியால் - கண்பார்வையாலே, பலர் - அநேகரும், தொடரும்-தொடர்ந்துசெல்கிற, கோல்களால் - கொள்கைகளாலே. பலர் - அநேகரும், குத்துகளால் - கைக்குத்துகளாலே, பலர் - அநேகரும், தத்தம்-அவ்வவர், வாள்களால் - சத்திகளாலேதானே. பலர் - அநேகரும், மரங்களினால் - மரத்தடியாலே, பலர் - அநேகருமாக, மடிந்தார் - இறந்தார்கள்—எ-று. கொள்கை பிடித்துக் கொள்ளுதல். 34

ஈர்க்கப்பட்டனர்சிலர்சிலரிடிப்புண்டுபட்டார்
பேர்க்கப்பட்டனர்சிலர்சிலர்பிடியுண்டுபட்டார்
ஆர்க்கப்பட்டனர்சிலர்சிலரடியுண்டுபட்டார்
பார்க்கப்பட்டனர்சிலர்சிலர்பயமுண்டுபட்டார்.

இ-ள். சிலர் ஈர்க்க - சிலர் பற்றியிழுத்தலாலே, பட்டனர் - இறந்தார்கள், சிலரிடிப்புண்டு - சிலர்மோதுண்டு, பட்டார் - இறந்தார்கள், சிலர்பேர்க்க - சிலர்பெயர்ந்து நடக்கும்போதே, பட்டனர் - இறந்தார்கள், சிலர்பிடியுண்டு - சிலர்கைப் பிடியினாலே, பட்டார் - இறந்தார்கள், சிலர் ஆர்க்க- சிலர் அனுமார்கெர்ச்சித்ததினாலே. பட்டனர் - இறந்தார்கள், சிலரடியுண்டு- சிலர்மரத்தடிபட்டு, பட்டார் - இறந்தார்கள், சிலர்பார்க்க - சிலர்பார்க்கிறதி

னுலேயே, பட்டனர் — இறந்தார்கள், சிலர்பயமுண்டு-சிலர்பயமுண்டாகிய
தனுலே, பட்டார் – இறந்தார்கள்—எ-று. 35

ஓடிக்கொன்றனன்சிலவரையுடலுடறோறும்
கூடிக்கொன்றனன்சிலவரைக்கொடிநெடுமரத்தால்
சாடிக்கொன்றனன்சிலவரைப்பிணங்தொறுந்தடவித்
தேடிக்கொன்றனன்சிலவரைக்கறங்கெனத்திரிவான்.

இ-ள். ஓடி — ஓடுதலாலே, சிலவரை — சிலரை, கொன்றனன் — கொன்றார், சிலவரை — சிலரை, உடல் — பொருதுகின்ற, உடல்தோறும் – சரீரங்களெல்லாம், கூடி — சேரச்சென்று, கொன்றனன் – கொன்றார், சிலவரை-சிலரை, கொடிநெடு – கொடிபோல் நீளமான, மரத்தால் – மரத்தினுலே, சாடி – அடித்து, கொன்றனன் — கொன்றார், சிலவரை — சிலரை, பிணந்தொறும் — பிணங்கள்முழுதும், தடவி – விசாரித்து, தேடி - உயிருள்ளது தெரிந்து, கொன்றனன் – கொன்றார், சிலவரை — சிலரை, கறங்கென-காற்றாடிபோல், திரிவான் – சுழன்று திரிகிற அனுமார்—எ-று. 36

முட்டினார்படமுட்டினன்முறைமுறைமுடுகிக்
கிட்டினார்படக்கிட்டினன்கிரியெனநெருங்கிக்
கட்டினார்படக்கட்டினன்கைகளின்மெய்யிற்
றட்டினார்படத்தட்டினன்மலையெனத்தகுவான்.

இ-ள். முட்டினர் - மோதினவர்கள், பட — சாவ, முட்டினன்-மோதினர், முறைமுறை – வரிசை வரிசையாய், முடுகி – விரைந்து, கிட்டினர்-நெருங்கினவர்கள், பட – சாவ, கிட்டினன் - நெருங்கினர், கிரியென — மலைபோல்வந்து, நெருங்கி — நெருக்கமாக, கட்டினர் – கைகளாலிறுகப் பிடித்தவர்கள், பட — சாவ, கைகளிற் கட்டினன் – தம்முடைய கைகளாலிறுகப்பிடித்தார், மெய்யில் - தம்முடைய சரீரங்களாலே, தட்டினர் – தடுத்தவர்கள், பட – சாவ, தட்டினன் - தடுத்தார், மலையென – மலையென்று நினைக்க, தகுவான் — தக்கவர்—எ-று. 37

மறக்கினுங்கொல்லுமுணரினுங்கொல்லுமால்விசும்பிற்
பறக்கினுங்கொல்லும்படரினுங்கொல்லுமின்படைக்கை
நிறக்கருங்கழலரக்கர்கணெரிதொறும்பொறிகள்
பிறக்கநின்றெறிபடைகளைத்தடக்கையாற்பியையும்.

இ-ள். மறக்கினும் - சண்டையைமறந்து நின்றாலும், கொல்லும்-கொல்லுவார், உணரினும் - சண்டைசெய்ய நினைந்தாலும், கொல்லும் - கொல்லுவார், மால் — உயர்ந்த, விசும்பில் — ஆகாயத்திலே, பறக்கினும் — பறந்து சென்றாலும், கொல்லும் – கொல்லுவார், படரினும் - கீழேபோனாலும், கொல்லும் — கொல்லுவார், மின் – மின்னுகின்ற, படை-ஆயுதங்களை, கை-கையிலேயுடைய, நிறம் - கரிய நிறமும், கருங்கழல் - பெரிய வீரக்கழலு

முள்ள, அரக்கர்கள் - ராக்ஷதர்கள், நெரிதொறும் - நெரியும்போதெல்லாம் பொறிகள் - நெருப்புப்பொறிகள், பிறக்க - சிதற, நின்று - எதிரே நின்று எறி - அவர்களெறிகிற, படைகளை - ஆயுதங்களை, தடக்கையால் - நீண்ட கைகளாலே, பிசையும் - பிசைவார்—எ-று. 38

சேறும்வண்டலுமூளையுநிணமுமாய்த்திணிய
நீறுசேர்நெடுந்தெருவெலாநீத்தமாய்நிரம்ப
ஆறுபோல்வருங்குருதியவ்வநுமனுலலைப்புண்
டீறில்வாய்தொறுமுமிழ்வதேயொத்ததவ்விலங்கை.

இ-ள். சேறும் - குழையும், வண்டலும் - அள்ளுசேறும், மூளையும் தலையினுமெலும்பினுமுள்ள மூளைகளும், நிணமும்-கொழுப்பும், ஆய்-ஆகி திணிய - கெட்டியாக, நீறுசேர்-தூளிகள்பொருந்தின, நெடுந்தெருவெலாம் நீண்ட வீதிகள்முழுதும், நீத்தமாய் - வெள்ளமாய், நிரம்ப - நிறைவாக ஆறுபோல் - ஆற்றைப்போல், வரும் - பெருகிவருகிற, குருதி - ரக்தமா னது, அவ்வனுமனுல் - அந்த அனுமாருலே, அலைப்புண்டு - அடிபட்டு ஈறில் - முடிவில்லாத, வாய்தொறும் - நான்குவாயிலாகிய வாய்முழுதும் உமிழ்வதே - கக்குகிறதையே, அவ்விலங்கை - அந்த ஊர், ஒத்தது - ஒப்பா யிற்று—எ-று. ஆற்றிலுள்ளசேறே மூளை வண்டலே நிணமாக நிரனிறை கொள்க. 39

கருதுகாலினுங்கையினும்வாலினுங்கட்டிச்
சுருதியேயன்னமாருதிமரத்திடைதுரப்பான்
நிருதரெந்திரத்திடுகரும்பாமெனநெரிவார்
குருதிசாறெனப்பாய்வதுகுரைகடற்கூனில்.

இ-ள். கருது - நாமெல்லா மெண்ணத்தக்க, காலினும் - அவர் காலி ஞலும், கையினும் - கைகளாலும், வாலினும் - வாலாலும், கட்டி - சேரப் பிடித்து, சுருதியே - வேதத்தையே, அன்ன - ஒப்பான, மாருதி - அனுமா ரானவர், மரத்திடை - மரத்தினுலே, துரப்பான் - அடிக்கலானுர் அப் போது, நிருதர் - ராக்ஷதர்கள், எந்திரத்து - ஆலையிலே, இடு - கொடுக்கிற, கரும்பாமென - கரும்பே நிகரென்ன, நெரிவார் - கால்கைவால்களா னெரி வாராயினுர்கள், குருதி - அவர்களிரக்தமோ, சாறென - கருப்பஞ்சாறே நிகரென்ன, பாய்வது - ஒழுகலாயிற்று, குரை - சத்தியாநின்ற, கடல்-சமுத் திரமாகிய, கூனில் - பானையில்—எ-று. 40

எடுத்தரக்கரையெறிதலுமவருடலெற்றக்
கொடுத்திண்மாளிகையிடிந்தனமண்டபங்குலைந்த
தடக்கையானைகண்மறிந்தனகோபுரந்தகர்ந்த
பிடிக்குலங்களும்புரவியுமவிந்தனபெரிய.

இ-ள். அரக்கரை - ராக்ஷதர்களை, எடுத்து - வாரி, எறிதலும் - எறியு மளவில், அவர் - அவ்வரக்கருடைய, உடல்-சரீரங்கள்போய்விழுந்து, எற்ற-

மோத அதனாலே, கொடி — கொடிகள்கட்டின, திண் — கெட்டியான, மாளிகை — வீடுகள், இடிந்தன - தகர்தலாயின, மண்டபம் — மண்டபங்கள், குலைந்த — உடைதலாயின, தடக்கை — நீண்டகைகளையுடைய, யானைகள்-யானைகளெல்லாம், மறிந்தன — முகமடங்கலாயின, கோபுரம் — கோபுரங்கள், தகர்ந்த — இடிதலாயின, பிடிக்குலங்களும் - பெண்யானைக் கூட்டங்களும், புரவியும் — குதிரைகளும், அவிந்தன — இறந்தவைகளே, பெரிய — அதிகமாயின.

தத்தமாடங்கடம்முடலாற்சிலர்தகர்த்தார்
தத்தமாதரைத்தங்கழலாற்சிலர்சமைத்தார்
தத்தமாக்களைத்தம்படையாற்சிலர்தடிந்தார்
எற்றிமாருதிதடக்கைகளான்விசித்தெறிய.

இ-ள். தத்தம் - தங்கள்தங்கள், மாடங்கள் - வீடுகளை, தம் உடலால்-தங்கள் சரீரங்களாலேயே, சிலர் — சிலராக்ஷதர்கள், தகர்த்தார் — உடைத்தார்கள், தத்தம் — தங்கள்தங்கள், மாதரை — பெண்களை மனைவியரை, தங்கழலால் — தம்முடைய கால்களாலேயே, சிலர் — சில அரக்கர்கள், சமைத்தார்—அழித்தார்கள், தத்தம் — தங்கள்தங்கள், மாக்களை - குதிரைகளை, தம்படையால் — தங்களாயுதங்களாலேயே, சிலர் — சில அரக்கர்கள், தடிந்தார்-கொன்றார்கள், மாருதி — அனுமாரானவர், எற்றி — அடித்து, தடக்கைகளால்-நீண்டகைகளாலே, விசித்து — சோப்பிடித்து, எறிய - எறிதலாலே—எ-று. 42

ஆடன்மாக்களிறனையவனரக்கியர்க்கருளி
வீடுநோக்கியேசெல்கென்றுசிலவரைவிட்டான்
கூடினார்க்கவருயிரெனச்சிலவரைக்கொடுத்தான்
ஊடினார்க்கவர்மனைதொறுஞ்சிலவரையுய்த்தான்.

இ-ள். ஆடல் - ஜெயங்கொள்ளுகின்ற, மாக்களிறு — பெரியயானையை, அனையவன் - ஒப்பானதிருவடி, அரக்கியர்க்கு-அந்தராக்ஷவிகளுக்கு, அருளி-இரக்கங்கொண்டு, வீடுநோக்கியே — உங்கள் — வீட்டைப்பார்க்கவே, செல்கென்று — போங்களென்று, சிலவரை — சிலராக்ஷதர்களை, விட்டான்—போகஎறிந்தார், கூடினார்க்கு - அன்று கூடினபெண்களுக்கு, அவருயிரென-அவர்கள் தம்முயிர்வந்ததென்று நினைக்க, சிலவரை - சில அரக்கரை, கொடுத்தான் — எடுத்து வீசினார், ஊடினார்க்கு — அன்று பிணங்கியிருந்த பெண்களுக்கு, அவர் — அப்பெண்கள், மனைதொறும் - வீடுகளெல்லாம்போய்விழ, சிலவரை — சில அரக்கரை, உய்த்தான் - எறிந்தார்—எ-று. 43

தருவெலாமுடறெற்றியெலாமுடல்சதுக்கத்
துருவெலாமுடலுவரியெலாமுடலுள்ளோர்க்
கருவெலாமுடல்காயமெலாமுடலரக்கர்
தெருவெலாமுடனீறயமெலாமுடல்சிதற.

இ-ள். தருவெலாம் — மரத்தடிகளெல்லாம், உடல் — சரீரங்கள், தெற்றியெல்லாம் - திண்ணைகளெல்லாம், உடல் — சரீரங்களே, சதுக்கத்து-நாலு

தெருவுங் கூடுகிறதின், உருவெலாம் — இடங்கள்முழுதும், உடல் - சரீரங்களே, உவரியெல்லாம் — கடல்முழுதும், உடல் — சரீரங்களே, உள்ளூர் — அந்நகரின், நடுவெலாம் — நடுவிடங்களெல்லாம், உடல் — சரீரங்களே, காயமெலாம் - மேலிடங்களெல்லாம், உடல் — சரீரங்களே, அரக்கர் — ராக்ஷதர்களுடைய, தெருவெல்லாம் — வீதிகளெல்லாம், உடல் — சரீரங்களாக, சிதறி — சிந்தி, சாடுகை தவிரானெனப் பின்கூட்டுக—எ-று. 44

ஊனெலாமுயிர்கவர்வுறுங்காலனேய்ந்துலந்தான்
தானெலாரையுமாருதிசாடுகைதவிரான்
மீனெலாமுயிர்மேகமெலாமுயிர்மேன்மேல்
வானெலாமுயிர்மற்றுமெலாமுயிர்சுற்றி.

இ-ள். ஊனெலாம் — சரீரங்கள்முழுதுமுள்ள, உயிர் — உயிர்களை, கவர்வுறும் — பிடிக்கிற, காலன் — யமனும், ஓய்ந்து - கைகால்களயர்ந்து, உலந்தான் — வருந்தினன் ஆனலும், மாருதிதான் - அனுமாரானவர், எலாரையும் — அவர்களெல்லாரையும், சாடுகை — மரத்தாலடிக்கிறதில், தவிரான்- ஓய்கிறதில்லையாக, மீனெலாம் — நக்ஷத்திரமண்டலங்களெல்லாம், உயிர்-உயிர்கள்போகலாயின, மேகமெலாம் — மேகமண்டலங்களெல்லாம், உயிர் — உயிர்களே, மேன்மேல் — மிகவுமுயரமான, வானெலாம்-ஆகாயமெல்லாம், உயிர்-உயிர்களே, மற்றுமெலாம் — மற்ற இடங்களிலும், சுற்றி — சூழ்ந்து, உயிர்-உயிர்கள் செல்லலாயின—எ-று. அந்த அந்த உயிர்கள்செல்லுங் கதிகளுக்குச் செல்லுகின்றனவென்பது கருத்து. 45

ஆகவிச்செருவிளைவுறுமமைதியினரக்கர்
மோகமுற்றனராமெனமுறைமுறைமுனிந்தார்
மாகமுற்றவுமாதிரமுற்றவும்வளைந்தார்
மேகமொத்தனர்மாருதிவெய்யவனொத்தான்.

இ-ள். ஆக — இப்படியாக, இச்செரு — இந்தச்சண்டை, விளைவுறும்- நடக்கிற, அமைதியின் — காலத்திலே, அரக்கர் — சிலராக்ஷதர்கள், மோகம்- மயக்கம், உற்றனர் - கொண்டவர்களே, ஆமென — நிகரென்னும்படி, முறைமுறை — கும்பல் கும்பலாக வந்து, முனிந்தார் — கோபங்கொண்டவர்களாய், மாகமுற்றவும் — ஆகாயமுழுதும், மாதிரமுற்றவும் — திசைகள் முழுதும், வளைந்தார் — சூழ்ந்தார்கள் சூழ்ந்து, மேகம் - மேகக்கூட்டத்தை நிறத்தால், ஒத்தனர் — ஒப்பதானார்கள், மாருதி — அனுமார் தனிமையால், வெய்யவன்- சூரியனை, ஒத்தான் — ஒப்பானார்—எ-று. 46

அடலரக்கருமார்த்தவினலைத்தலினயரப்
புடைபெருத்துயர்பெருமையிற்கருமையிற்பொலிவின்
மிடலயிற்படைமீனெனவிலங்கலிற்கலங்கும்
கடனிகர்த்தனர்மாருதிமந்தரங்கடுத்தான்.

இ-ள். அடல் — மிகவும் பலமுள்ள, அரக்கரும் - ராக்ஷதர்கள், ஆர்த்தலின் - முழங்குதலாலும், அலைத்தலின் — அனுமாரை அலைவுசெய்தலாலும், அயர் — சண்டைசெய்கிற, அப்புடை — அவ்விடத்திலே, பெருத்து - மிகப் பெருமிதராய், உயர் — உயர்ந்து நிற்கிற, பெருமையில் — திரளின் பெருமையாலும், கருமையில் — நிறத்தின் கருமையாலும், பொலிவின் — நிறைவினுலும், மிடல் - பலங்கொண்ட, அயில் — வேலாயுதங்களும், படை — வாளாயுதங்களும், மீனென — மீன்கள்போல், விலங்கலில் — புரளுதலாலும், கலங்கும் — கடையும்போது கலங்குகிற, கடல் — கருங்கடலை, நிகர்த்தனர் — ஒப்பாயினுர்கள், மாருதி - அனுமார், மந்தரம் - முன் பாற்கடலைக்கலக்கினது போலவே இப்போது கருங்கடலையும் கலக்குகிற மந்தரகிரியை, கடுத்தான்-ஒப்பாயினுர்—எ-று. அக்கடலமுதிற்காக, இக்கடல் விருதிற்காக, பிராட்டியாகிய அமுதற்காக எனவுமாம். 47

கரதலத்தினுங்காலினும்வாலினுங்கதுவளைந்
நிரைமணித்தலைநெரிந்துகச்சாய்ந்துயிர்நீப்பார்
சுரர்நடுக்குறவமுதுகொண்டெழுந்தநாடொடரும்
உரகரொத்தனரநுமனுங்கலுழனையொத்தான்.

இ-ள். கரதலத்தினும் - கையினுலும், காலினும் — காலினுலும், வாலினும் - வாலாலும், கதுவ - பிடித்தலாலே, நிறைமணி — வரிசையாகக்கறுத்த, தலை — தலைகள், நெரிந்து - நெரிதலாகி, உக — உதிர, சாய்ந்து — கீழேவிழுந்து, உயிர் — உயிரை, நீப்பார் — விடுகிறவர்கள், சுரர் — தேவர்கள், நடுக்குற-அஞ்சுவதாக, அமுதுகொண்டு — அமுதகலசத்தை யெடுத்துக்கொண்டு, எழுந்தநாள் — வந்தபோது, தொடரும் — பின்றொடர்ந்துவந்த, உரகர் — உரகரை, ஒத்தனர் — ஒப்பாயினுர்கள், அனுமனும் - அனுமார், கலுழனை - கருடனையே, ஒத்தான் — ஒப்பானுர்—எ-று. 48

மானமுற்றதம்பகையினுன்முனிவுற்றுவளைந்த
மீனுடைக்கடலுலகினிலுளவெலாமிடைந்த
ஊனறக்கொன்றுதுகைக்கவுமொழிவிலாநிருதர்
ஆனையொத்தனராளரியொத்தனனநுமன்.

இ-ள். மானமுற்ற — பெருமைபொருந்தின, தம் — தமக்கு, பகையினுல் - பகையானதினுலே, முனிவுற்று — கோபங்கொண்டு, வளைந்த — உலகைச்சூழ்ந்த, மீனுடை - மீன்களையுடைய, கடல் - கடலைஅழகாகக்கொண்ட, உலகினின் — இலங்கையிலே, உளவெலாம் - உள்ள ஜீவராசிகளெல்லாம், மிடைந்த — நெருங்கினுற்போற் கூடின, ஊன் — ராக்ஷதசரீரங்கள், அற-முடிவுபெற, கொன்று — வதைத்து, துகைக்கவும் — வருத்துமிடத்திலும், ஒழிவிலா - ஓயாமல் வந்துகொண்டிருக்கிற, நிருதர் — அரக்கர்கள், ஆனை-யானைகளை, ஒத்தனர் — ஒப்பாயினுர்கள், ஆளரி — நரசிங்கத்தை, ஒத்தனன்-ஒப்பாயினுர், அனுமன் - திருவடி—எ-று. 49

எய்தவெற்றினவெறிந்தனவீர்த்தனவிகலிற்
பொய்தகுத்தினபொதுத்தனதொளைத்தனபோழ்ந்த
கொய்தசுற்றினபற்றினகுடைந்தனபொலிந்த
ஐயன்மற்பெரும்புயத்தனபுண்ணளப்பரிதால்.

இ-ள். எய்த — அவர்களெய்த அம்புகளாலும், எற்றின — அடித்தவைகளாலும், எறிந்தன — வெட்டினவைகளாலும், ஈர்த்தன — அறுத்தவைகளாலும், இகலில் - தமதுபலங்கொண்டு, பொய்த - இடித்தவைகளாலும், குத்தின — குத்தினவைகளாலும், பொதுத்தன — பொத்தவைகளாலும், தொளைத்தன — துவாரஞ்செய்தவைகளாலும், போழ்ந்தன — பிளந்தவைகளாலும், கொய்த - கத்தரித்தவைகளாலும், சுற்றின — சூழ்ந்தவைகளாலும், பற்றின-பிடித்தவைகளாலும், குடைந்தன - கிண்டினவைகளாலும், பொலிந்த-நிறைதலான, ஐயன் — அனுமாருடைய, மல் - பலத்தாலே, பெரு — பெரிய, புயத்தன — தோள்களிலுள்ள, புண் — காயங்களை, அளப்பு - அளவுசெய்ய, அரிது — முடியாது—எ-று. கயிற்றாலே சுற்றல். 50

கார்க்கருந்தடங்கடல்களுமழைமுகிற்கணனும்
வேர்க்கவெஞ்செருவிளைத்தெழும்வெள்ளெயிற்றரக்கர்
போர்க்குழாம்படிபூசலினையனைப்புகழ்வுற்
றார்க்கும்விண்ணவரமலையேயுயர்ந்ததன்றமரில்.

இ-ள். கார்க்கரு — மிகவுங்கரியதான, தடங்கடல்களும் — பெரிய கடல்களும், மழை — மழைபெய்கிற, முகிற்கணனும் — மேகக்கூட்டங்களும், வேர்க்க — அஞ்ச, வெஞ்செரு — வெவ்விதான சண்டையை, விளைத்து-செய்து, எழும் — மேன்மேலாகிற, வெள் — வெண்மையான, எயிறு - பற்களையுடைய, அரக்கர் — ராக்ஷதர்களின், போர்க்குழாம் — வலியகூட்டத்தில், படி — பொருந்தின, பூசலின் — சத்தத்தைக்காட்டினும், ஐயனை — அனுமானை, புகழ்வுற்று — கொண்டாடி, ஆர்க்கும் — கெர்ச்சிக்கிற, விண்ணவர்-தேவர்களுடைய, அமலையே — சத்தமே, உயர்ந்தது - அதிகமாயிற்று, அன்று — அப்போது, அமரில் — யுத்தகளத்திலே—எ-று. 51

மேவும்வெஞ்சினத்தரக்கர்கண்முறைமுறைவிசையால்
ஏவும்பல்படையெத்தனைகோடிகளெனினும்
தூவுந்தேவருமகளிருமுனிவருஞ்சொரிந்த
பூவும்புண்களுந்தெரிந்திலமாருதிபுயத்தில்.

இ-ள். மேவும் — சண்டைக்குவந்த, வெஞ்சினத்து — வெவ்வியகோபத்தையுடைய, அரக்கர்கள் — அந்த ராக்ஷதர்கள், முறைமுறை - வரிசைவரிசையாய், விசையால் — வேகங்கொண்டு, ஏவும் — விடுகிற, பல்படை — பலவகை அஸ்திரசஸ்திரங்கள், எத்தனை - எவ்வளவோ, கோடிகளெனினும் — கோடிகளென்றாலும், தூவும் - சிந்துகிற, தேவரும் — வானவரும், மகளிரும் — அவர்கள் மனைவியரும், முனிவரும் — தேவரிஷிகளும், சொரிந்த — பொழிந்த,

பூவும் – புஷ்பங்களென்றும், புண்களும் – காயங்களென்றும், தெரிந்தில- வேறுபாடு தோற்றவில்லை, மாருதி - அனுமாருடைய, புயத்தில் – தோள் களிலே—எ-று. 52

பெயர்க்குஞ்சாரிகைகறங்கெனத்திசைதொறும்பெயர்வின்
உயர்க்கும்விண்மிசையோங்கலின்மண்ணின்வந்துறலின்
அயர்த்துவீழ்த்தனரழிந்தனரரக்கராயுள்ளார்
வெயர்த்திலன்மிசையுயிர்த்திலனல்லறவீரன்.

இ-ள். பெயர்க்கும் – மாறிமாறிச்செல்லுகிற, சாரிகை – இடசாரியும் வலசாரியும், கறங்கென – காற்றாடிபோல், திசைதொறும் – நான்குதிக்கி லும், பெயர்வில் – செல்லுதலாலும், உயர்க்கும் – உயர்த்தப்படுகிற, விண் மிசை – ஆகாயத்திலே, ஓங்கலில் – கிமிர்தலாலும், மண்ணில் – பூமியிலே, வந்துறலில் - வந்து தாழ்தலாலும், அயர்ந்து – சோர்தலாய், வீழ்ந்தனர்- விழுந்தார்களாய், அழிந்தனர் – இறந்தார்கள், அரக்கராயுள்ளார் – ராக்ஷதரா னவர்கள், மிசை – தம்முடைய உடம்பின்மேல், வெயர்த்திலன் – சற்றே னும் வெயர்வுகொண்டிலர், உயிர்த்திலன் – அயர்வுகொண்டிலர், நல்லறம்- நல்ல தருமசொரூபியான, வீரன் – அனுமார்—எ-று. உயிர்த்திலன்-மூச்சு விடுதலு மிலரெனவுமாம். 53

எஞ்சலக்கணத்தறிந்திலமிராவணனேவ
நஞ்சமுண்டவராமெனவநுமன்மேனடந்தார்
துஞ்சினுரல்லதியாவருமறத்தொடுந்தொலைவுற்
றஞ்சினுரில்லையரக்கரில்வீரர்மற்றியாரே.

இ-ள். அக்கணத்து – அந்தக்ஷணப்பொழுதிலே, எஞ்சல் – அவர்கள் குறைதலானதை, அறிந்திலம் – இவ்வளவென்று தெரிந்துசொல்ல வல்லோ மல்லோம், இராவணன் – தசக்கிரீவன், ஏவ – அனுப்ப, நஞ்சம் - விஷத்தை, உண்டவர் – சாப்பிட்டவர்கள், ஆமென – நிகரென்னும்படி, அனுமன்மேல்- அனுமரர்மேலே, நடந்தார் – வந்த ராக்ஷதர்கள், மறத்தொடும் – வீரத்து டனே, யாவரும் – எல்லாரும், துஞ்சினுர் – இறந்தார்களே, அல்லது – அல் லாமல், தொலைவுற்று – தோற்று, அஞ்சினுரில்லை-ஓடினவர்கள் கிடையாது, அரக்கரில் - ராக்ஷதர்கள்போல், வீரர் – வீரத்தன்மையுள்ளவர்கள், மற்றி யார் – வேறே யாரிருக்கிறுர்கள்—எ-று. 54

வந்தகிங்கரரேயெனுமாத்திரைமடிந்தார்
நந்தவானத்துநாயகரோடினர்நடுங்கிப்
பிந்துகாவினர்கையினர்பெரும்பயம்பிடரின்
உந்தவாயிரம்பிணக்குவைமேல்விழுந்துளைவார்.

இ-ள். வந்த - பிடிக்கவந்த, கிங்கரர் – இராவணனுடைய ஊழியகாரர் கள், ஏயெனுமாத்திரை – உம்மென்னுமளவில், மடிந்தார் – இறந்தார்கள்,

நந்தவானத்து — அந்த அசோகவனத்தை, நாயகர் — காக்கிற தேவர்கள், ஓடினர் நடுங்கி — பயந்தோடும்போது, பிந்து — பின்வாங்குகிற, காலினர் — காலராகியும், கையினர் — கையராகியும், பெரும்பயம் — பெரிதான அச்சம், பிடரினுந்த — பிடரியைப்பற்றித்தள்ள, ஆயிரம் — அநேகமாய்க்கிடக்கிற, பிணக்குவை — பிணக்குப்பல்கள், மேல்விழுந்து-மேலேவிழுந்து, உளைவார்-வருந்துவாரானார்கள்—எ-று. 55

விரைவினுற்றனர்விம்மலுற்றியாதொன்றும்விளம்பார்
கரதலத்தினற்பட்டதுங்கட்டுரைக்கின்றார்
தரையினிற்கிலர் திசைதொறுநோக்கினர்சலிப்பார்
அரசன்மற்றவரலக்கணையுரைத்திடவறிந்தான்.

இ-ள். விரைவின் - சீக்கிரத்திலே, உற்றனர் — போனார்கள், விம்மலுற்று — துக்கப்படுதலாய், யாதொன்றும் — யாதொரு வார்த்தையும், விளம்பார் — சொல்லாதவர்களாய், கரதலத்தினல் - கையினாலே, பட்டதும் — கிங்கரர்பட்டதும் தாங்கள் பட்டுவந்ததும், கட்டுரைக்கின்றார் — குறிப்பிக்கின்றார்கள், தரையின் — பூமியிலே, நிற்கிலர் - நிலைகொள்ளாதவர்களாய், திசைதொறும் - நாலுபக்கமும், நோக்கினர் — பார்த்து, சலிப்பார் — வியசனப்படுவாரானார்கள், அரசன் — அதுகண்ட ராவணன், மற்றவர் — அந்த வனங்காக்குந்தேவர்கள், அலக்கணை — படுகிறதுன்பமே, உரைத்திட — கிங்கரரிறந்துபோனார்களென்பதைச்சொல்ல, அறிந்தான் — தெரியலானான்-எ-று.

இறந்துநீங்கினரோவின்றெனணையையிகழ்ந்து
துறந்துநீங்கினரோவென்றிவெஞ்சமர்தொலைந்தார்
மறந்துநீங்கினரோவென்கொல்வந்ததென்றுரைத்தான்
நிறஞ்செருக்குறவாய்தொறுநெருப்புமிழ்கின்றான்.

இ-ள். இறந்து நீங்கினரோ — செத்துப்போனார்களா, இன்று — அல்லதிப்போது, என் ஆணையை — எனதாக்கினையை, இகழ்ந்து — குரங்கின்மேலேவினுனென்றிகழ்ச்சிசெய்து, துறந்து நீங்கினரோ — இவ்வூரையே விட்டுப்போயினார்களா, அன்றி — அல்லது, வெஞ்சமர் — வெவ்விதான யுத்தஞ்செய்ய, தொலைந்தார் — மாட்டாராய், மறந்து நீங்கினரோ — சோர்ந்துபோனார்களா, என்கொல் - யாதுசொல்வதாக, வந்ததென்று — நீங்கள் வரலானதென்று, உரைத்தான் — கேட்டான், நிறம் - அவன் நெஞ்சிலே, செருக்குற — அதிக கருவந்தோன்றலாலே, வாய்தொறும் - பத்துவாயிலும், நெருப்பு - அக்கினியை, உமிழ்கின்றான் — கக்குகிற ராவணன்—எ-று. 57

வேறு

சலந்தலைக்கொண்டனராயதன்மையார்
அலந்திலர்செருக்களத்தஞ்சினாலர்
புலந்தெரிபொய்க்கரிபுகலும்புண்கணார்
குலங்களினவிந்தனர்குரங்கினலென்றார்.

இ-ள். சலம் – கோபத்திலே, தலைக்கொண்டனர்–அதிகமாயினவர்கள், ஆய தன்மையார் – நீரனுப்பின அந்தக் கிங்கரர், அலந்திலர் – சோர்ந்ததுமில்லை, செருக்களத்து – யுத்தபூமியிலே, அஞ்சினூலர் - பயந்தோடினதுமில்லை, புலந்தெரி – தம்மனமே தெரிகிற, பொய்க்கரி – பொய்ச்சாட்சி, புகலும் - சொல்வதான, புண்கணூர்-துன்பிகள், குலங்களின்-வம்சங்கள்போல், அவிந்தனர் – இறந்துபோனூர்கள், குரங்கினூல் – ஒரு குரங்கினூலே, என்றூர் – என்று சொன்னூர்கள்—எ-று. அலந்திலர் - குரங்கின்மேலே வினையென்று துன்பமாயினருமல்லரென வினுவுக்கு நேர்விடையாக்கவுமாம். 58

ஏவலினெய்தினரிருந்தவெண்டிசைத்
தேவரைநோக்கினூனுஞ்சிந்தையான்
யாவதென்றறிந்திலிர்போலுமாலென்றூன்
மூவகையுலகையும்விழுங்கமூள்கின்றூன்.

இ-ள். ஏவலின் – தன் உத்தரவினூலே, எய்தினர் – வந்தவர்களாய், இருந்த - சபையிலே வந்திருக்கிற, எண்டிசைத்தேவரை – அஷ்டதிக்குப்பாலரையும், நோக்கினூன் – பார்த்து, நாணும் – வெட்கமடைந்த, சிந்தையான் – மனமுள்ள ராவணன், யாவதென்று-அங்கே நடந்ததின்னதென்று, அறிந்திலிர் - நீங்கள் தெரிந்துவந்தீரல்லீர், என்றூன் – என்றுசொன்னூன், மூவகை – மூன்றுவிதமான, உலகையும் உலகமெல்லாம், விழுங்க – கபளீகரிக்க, மூள்கின்றூன் — தொடங்குகிற கோபமுடையவனூன ராவணன்-எ-று. போலும் ஆல் அசைகள். 59

மீட்டவருரைத்திலர்பயத்தின்விம்முவார்
தோட்டலரினமலர்த்தொங்கன்மோலியான்
வீட்டியதரக்கரையென்னும்வெவ்வுரை
கேட்டதோகண்டதோகிளத்துவீரென்றூன்.

இ-ள். மீட்டு – அந்த வார்த்தைக்கு மறுமொழி, பயத்தின் – பயத்தினூலே, விம்முவார் – துக்கித்தவர்களாய், அவர் - அந்த வனங்காப்பவர்கள், உரைத்திலர் – தடுத்து ஒன்றுஞ்சொல்லாது நின்றூர்கள், தோடு - இதழ்கள், அலர் – விகசிக்கின்ற, இனம் – பலஜாதி, மலர் – பூவாற்கட்டின, தொங்கல்-மாலையணிந்த, மோலியான் – முடியையுடைய ராவணன், அரக்கரை – கிங்கரரை, வீட்டியது – குரங்கு கொன்றுவிட்டது, என்னும் – என்பதான, வெவ்வுரை – கொடியசொல்லை, கேட்டதோ – யாரேனுஞ் சொல்லக்கேட்டு வந்தீர்களா, கண்டதோ - நீங்களே கண்ணூற்கண்டு வந்தீர்களா, கிளத்துவீர் – சொல்லுங்கள், என்றூன் – என்று கேட்டான் ராவணன்—எ-று. 60

கண்டனமொருபுடைநின்றுகண்களால்
தெண்டிரைக்கடலெனவளைந்தசேனையை
மண்டலந்திரிந்தொருமரத்தினூலடித்
துண்டதக்குரங்கினமொழிவதன்றென்றூர்.

இ-ள். ஒருபுடைநின்று — நாங்களொருபுறத்திலேநின்றே, கண்களால்- எங்கள் கண்களாலேயே, கண்டனம் - பார்த்தோம், தெண் — தெளிந்த, திரை — அலைகளையுடைய, கடலென — கடல்போல், வளைந்த — சூழ்ந்த, சேனையை — சேனைகளையெல்லாம், மண்டலம்திரிந்து — ஒரு வட்டமிட்டு, ஒரு மாத்திறல் — ஒரு மாத்திறலே, அடித்து — அடித்தடித்து, உண்டது- உயிரை வாங்கிற்று, அக்குரங்கு — அந்த ஒரேகுரங்கு, இனம் — இன்னமும், ஒழிவது அன்று — ஒடிப்போகிறதல்ல, என்றார் - என்று சொன்னார்கள், எ-று. சேனை அடியுண்டதென்று கொண்டால், ஒக்கும் மண்டலந் திரிந்தென்பதற்கும் சோராமையால் அடித்து உயிருண்டது குரங்கெனக. 61

கிங்கரர்வதைப்படலம் முற்றிற்று

ஆக படலம் 8 - க்கு திருவிருத்தம் - 815

கம்பநாட்டாழ்வார் திருவடிகளே சரணம்

ஒன்பதாவது

# சம்புமாலி வதைப்படலம்

கூம்பினகையனின்றகுன்றெனக்குவவுத்திண்டோட்
பாம்பிவர்தறுகட்சம்புமாலியென்பவனைப்பாரா
வாம்பரித்தானையோடுவளைத்ததன்மறனைமாற்றித்
தாம்பினிற்பற்றித்தந்தென்மனச்சினந்தணித்தியென்றான்.

இ-ள். கூம்பினகையன் – குவித்த கைகளையுடையவனாகி, நின்ற-முன்னேநிற்கிற, குன்றென – மலைபோல், குவவு – உருண்ட, திண்தோள் – பலமான தோள்களும், பாம்பு – பாம்புப்பார்வைபோல், இவர் – சீறிப்பார்க்கிற, தறுகண் – அஞ்சாதவீரனை ஜம்புமாலியென்பவனை, பாரா – ராவணன் பார்த்து, வாம் – தாவுவனவான, பரி-குதிரைகளோடுகூடின, தானையோடு-சேனைகளுடனேபோய், வளைத்து-அந்தக் குரங்கைச்சூழ்ந்து, அதன்மறனை-அதனுண்மையை, மாற்றி – மாறச்செய்து, தாம்பினில் – கயிற்றினாலே, பற்றி – பிடித்துவந்து, தந்து – கொடுத்து, என் மனச்சினம் – என் மனத்திலுள்ள கோபத்தை, தணித்தி – நீங்கச்செய், என்றான் – என்றுசொன்னான்.

ஆயவன்வணங்கிவீரமளக்கருமளக்கர்முன்னர்
நீயிதுமுடித்தியென்றுநேர்ந்தனைநினைவினெண்ணி
ஏயினையென்னப்பெற்றாலென்னின்யாருயர்ந்தாரென்னாப்
போயினனிலங்கைவேந்தன்போர்ச்சினம்போவதொப்பான்.

இ-ள். ஆயவன் – அந்தச் சம்புமாலி, வணங்கி – கும்பிட்டுக்கொண்டு, வீரம் – சாமர்த்தியத்தை, அளக்கஅரும் – அளவிட அரிதான, அளக்கர் முன்னர் – உமதுசேனைக்கடலுக்குமுன்னே, நீ இது - நீ இந்தக்காரியத்தை, முடித்தியென்று – முடிவுசெய்யென்று எனக்கு, நேர்ந்தனை – உத்தரவுசெய்தீர், நினைவின் – உமதுள்ளத்திலே இப்படி ஆலோசித்து, எண்ணி – இவன் முடிப்பானென்றுத்தரவுசெய்தீரென்று, ஏயினை என்னப்பெற்றால் – எல்லாருங்கொண்டாட நான்பெற்றேனே ஆனால், என்னின் – என்னிலும், யார் – எவர், உயர்ந்தாரென்னா – உயர்ந்தவரென்று, போயினன் – போனான், இலங்கைவேந்தன் – இராவணனுடைய போர்ச்சினம் – வலிதான கோபம், போவது – செல்வதை, ஒப்பான் – ஒத்தவனாயினான்—எ-று. 2

தன்னுடைத்தானையோடுந்தசமுகன்றருகென்றேய
மன்னுடைச்சேனையோடுந்தாதைதவந்தீந்தவாளின்
மின்னுடைப்பரவையோடும்வேறுளோர்சிறப்பின்விட்ட
பின்னுடையனிகத்தோடும்பெயர்ந்தனன்பெரும்போர்பெற்றான்.

இ-ள். தன்னுடை — தன்னுடைய, தானேயோடும் — சேனைகளுடனே, தசமுகன் — ராவணன், தருகென்று — குரங்கைப் பிடித்துவாருங்களென்று, ஏய — தன்கூட அனுப்பின, மன்னுடை - அரசனுடைய, சேனேயோடும்- சேனைகளுடனும், தாதை — பிரமதேவன், வந்து — இவன் தவத்துக்குப் பிரசன்னனாகி, ஈந்த — முன்னே, கொத்தவாளின் — வாளாயுதங்களாலே, மின்னுடை — மின்னுதலையுடைய, பரவையோடும் — கடல்போன்ற சேனைகளுடனும், வேறுளோர் - மற்றுமுள்ளவர்கள், சிறப்பின் - இவனுக்கலங்காரமாக, விட்ட - அனுப்பின, பின்னுடை — பின்துணையாக வுதவுதலையுடைய, அணிகத்தோடும் — சேனைகளுங்கூட, பெயர்ந்தனன் - போயினன், பெரும்போர் பெற்றன் - பெரிய வலிமைகொண்ட சம்புமாலி—எ-று. வேறுளோர்- இவனுக்குச்சரியான ராக்ஷதராஜர்கள். 3

உருமொத்தமுழக்கிற்செங்கண்வெள்வெயிற்றோடைநெற்றிப்
பருமித்தகிரியிற்றோன்றும்வேழமும்பதுமத்தண்ணல்
நிருமித்தவெழிலிமுற்றிற்றென்னலாநிலையநேமி
சொரிமுத்தமாலைசூழ்ந்ததுகிற்கொடித்தடந்தேர்சுற்ற.

இ-ள். உரும் ஒத்த — இடியை ஒப்பான, முழக்கின் — சத்தத்தையுடையனவாய், செங்கண் - சிவந்தகண்களும், வெள்ளெயிறு — வெண்கொம்புகளும், ஓடை — முகபடாமணிந்த, நெற்றி — நெற்றியுங்கொண்டு, பருமித்த- விரியிட்டலங்காரஞ்செய்த, கிரியில் — மலைபோல், தோன்றும் — காணப்படுகிற, வேழமும் — யானைகளும், முன் — முன்னே, பதுமத்து — தாமரைமலர் மேலிருக்கிற, அண்ணல் — பிரமதேவன், நிருமித்த — உண்டாக்கின, எழிலி- மேகங்களெல்லாம், முற்றிற்று — கூடிவருகின்றன, என்னலாம் — என்று சொல்லலாகிய, நிலைய — நிலையையுடையன, நேமி — கடலானது, சொரி- சிந்துகிற, முத்துமாலை — முத்துமாலைகள், சூழும் - சுற்றிலுமணிந்த, துகிற்கொடி — கொடியாடைகள்கட்டின, தடந்தேர் — பெரியதேர்களும், சுற்ற- சூழ—எ-று. நிலையவேழங்களும் தேர்களும்சூழ எனக்கூட்டுக. 4

காற்றினைமருங்கிற்கட்டிக்கால்வகுத்துயிருங்கூட்டிக்
கூற்றினையேற்றியன்னகுலப்பரிகுழுவக்குன்றின்
தூற்றினிலெழுப்பியாண்டுத்தொகுத்தெனச்சுழல்பைங்கண்ண
வேற்றினப்புலியேயென்னவியங்கெழும்பதாதியீட்டம்.

இ-ள். காற்றினை — வாயுவை, மருங்கில் — இடையிலே, கட்டி — சேர்த்து, கால் — நாலுகால்களாக, வகுத்து — செய்து, உயிரும் — ஜீவனும், கூட்டி - உண்டாக்கி, கூற்றினை - யமனை, ஏற்றி அன்ன — அதன்மேலேற்றினதுபோன்ற, குலப்பரி — நல்ல ஜாதிக்குதிரைகள், குழுவ — கூட, குன்றின் தூற்றினில் — மலைக் குகைகளிலிருந்து, எழுப்பி — எழக்கூட்டி, ஆண்டு- அங்கே, தொகுத்தென — சேர்செய்தாற்போல், சுழல் — சுழலுகின்ற, பைங்கண்ண — பசியகண்களையுடைய, வேற்றினம் — வெவ்வேறுவகைகளான,

புலியேறு – ஆண்புலிகள், என்ன – என்று சொல்லும்படி, வியந்து – அக்குரங்கெப்படிப்பட்டதென்றதிசயித்து, பதாதியீட்டம் – காலாட்கூட்டம், எழும் – எழுவதாயின—எ-று. 5

தோமரமுலக்கைகூர்வாள்சுடர்மழுக்குலிசந்தோட்டி
தாமரந்தின்றகூர்வேறழலொளிவட்டஞ்சாபம்
காமர்தண்டெழுக்கள்காந்துங்கற்பணங்காலபாசம்
மாமரம்வலயம்வெங்கோன்முதலியவயங்கமாதோ.

இ-ள். தோமரம் – தோமரங்களும், உலக்கை – இருப்புலக்கைகளும், கூர்வாள் – கூரியவாளாயுதங்களும், சுடர்மழு – ஒளிபொருந்தின மழுக்களும், குலிசம் – வச்சிராயுதங்களும், தோட்டி – அங்குசங்களும், தாம் – அராவுகின்ற, அரம் – அரத்தாலே, தின்ற – அராவப்பட்ட, கூர்வேல் – கூரியவேல்களும், தழல் – கொதிக்கப்படுகிற, ஒளிவட்டம் – சக்கரங்களும், சாபம் – விற்களும், காமர் – அழகிதான, தண்டு – தண்டாயுதங்களும், எழுக்கள் – எழுத்தடிகளும், காந்தும் – ஒளிவிடுகிற, கற்பணம் – கற்பணங்களும், காலபாசம் – காலபாசங்களும், மாமரம் – பெரியமரங்களும், வலயம் – வல்லயங்களும், வெங்கோல் – வெவ்விதானதடிகளும், முதலிய – முதலான ஆயுதங்கள், வயங்க – விளங்க—எ-று. 6

எத்தியவயில்வேல்குந்தமெழுக்கழுமுதலவேந்திக்
குத்தியதிளைப்பமீதிற்குழுவினமழைமாக்கொண்மூப்
பொத்துகுபொருவினன்னீர்சொரிவனபோவபோலச
சித்திரப்பதாகையீட்டந்திசைதொறுஞ்செறிவசெல்வ.

இ-ள். எத்திய – கொண்டாடத்தக்க, அயிலவேல் – கூடிய கைவேல்களும், குந்தம் – எறியீட்டிகளும், எழு – எழுவும், கழு – கழுவும், முதல – முதலானவைகளை, ஏந்தி – கொண்டு, குத்திய – குத்தினவைகளாலே, திளைப்ப – பொருந்த, மீதில் – ஆகாயத்திலே, குழுவின – கூடின, மழை – மழைபெய்கிற, மா – கறுத்த, கொண்மு – மேகங்கள், பொத்து – பொத்தலாய், உகு – சிந்துகிற, பொருவில் – ஒப்பில்லாத, நன்னீர் – நல்ல ஜலத்தை பனிநீரை, சொரிவன – சிந்துவனவாகி, போவபோல் – செல்கின்றனபோல், சித்திரம் – பலநிறங்களையுமுடைய, பதாகையீட்டம் – கொடிக்கூட்டங்கள், திசைதொறும் – எந்தத்திக்கிலும், செறிவ – நெருங்குவனவாய், செல்வ – செல்லலாயின—எ-று. அயில் வேல் முதலியவைகளாலே குத்திப்பொத்தாற்போல் மேகங்களைப் பொத்துச் சேனைகள்மேல் பனிநீர்ச் சிந்திக்கொண்டு செல்கிறவர்கள்போற் கொடிகள் செல்கின்றன என்க. 7

பல்லியந்துவைப்பநன்மாப்பணிலங்கண்முரலப்பொன்றேர்ச்
சில்லிகளிடிப்பவாசிசிரித்திடச்செறிபொற்றூரும்
வில்லுநின்றிசைப்பயானைமுழக்கம்விட்டார்ப்பவிண்டோய்
ஒல்லொலிவானிற்றேவருரைதெரிவொழிக்கமன்றே.

இ-ள். பல்லியம் - பலவாத்தியங்களும், அவைப்ப — சத்திக்க, நன்மா— நல்லபெரிதான, பணிலங்கள் - சங்குகள், முரல - சத்திக்கவும், பொன்தேர்- பொன்மயமான ரதங்களின், சில்லிகள் — உருளைகள், இடிப்ப — மோதிமுழங் கவும், வாசி — குதிரைகள், சிரித்திட - அனுமானிக்கவும், செறி — நெருங் கின, பொன் — பொன்னலாகிய, தாரும் — கிண்கிணிமாலைகளும், வில்லும்- வில்லினது குணத்தொனிகளும், நின்று — அவைகளோடு கூடிநின்று, இசைப்ப - சத்திக்கவும், யானை - யானையினது, முழக்கம் - சத்தமானது, விட்டார்ப்ப — அதன் வாய்விட்டொலிக்கவும் ஆகிய இவையெல்லாங்கூடி, விண்தோய் - ஆகாயத்திலேபோய்ச் சேருகிற, ஒல்லொலி - மிக்க வொலி யானது, வானில் — ஆகாயத்திலுள்ள, தேவர் — தேவர்கள், உரை — ஒரு வரோடொருவர் பேசுகிறபேச்சு, தெரிவு — தெரிந்துகொள்கிறதை, ஒழிக்க- தெரியாதுசெயய—எ-று. 8

மின்னகுகிரிகள்யாவுமேருவின்விளங்கித்தோன்றத்
தொன்னகர்பிறவியெல்லாம்பொலிந்தனதுறக்கமென்ன
அன்னவன்சேனைசெல்லவார்கலியிலங்கையாய
பொன்னகர்தகர்ந்துபொங்கியார்த்தெழுதூளிபோர்க்க.

இ-ள். மின் — மின்களையுடையமேகங்கள், நகு — விளங்குகின்ற, கிரி கள்யாவும் - மலைகளெல்லாம், மேருவின் — மகாமேருவைப்போல், விளங்கி பிரகாசித்து, தோன்ற — தெரிய, தொன்னகர் — பழைய பட்டணங்கள்முத லான, பிறவும் - மாஞ்செடிகளும், எல்லாம் - தூளிபட்டவைகளெல்லாம் துறக்கமென்ன — பொன்னுலகம்போல், பொலிந்தன — விளங்கின, அன்ன வன் — அந்தச் சம்புமாலியினுடைய, சேனை — சேனைகள், செல்ல-மிதித்து நடத்தலாலே, ஆர்கலி — கடல்சூழ்ந்த, இலங்கையாய — இலங்காபுரியான பொன்னகர் — பொன்னலாகிய ஊர், தகர்ந்து — நெரிந்து, பொங்கி — மிகு ந்து, ஆர்த்து — திமிர்ந்து, எழு - கிளம்புகிற, தூளி — தூளிகள்போய், போர் க்க — படிதலாலே—எ-று. 9

ஆயிரமைந்தொடைந்தாமாழியந்தடந்தேரத்தேர்க்
கேயினவிரட்டியானையானையினிரட்டிபாய்மா
போயினபதாதிசொன்னபுரவியினிரட்டிபோலாம்
தீயவன்றடந்தேர்சுற்றித்தெற்றெனச்சென்றசேனை.

இ-ள். ஆயிரம் ஐந்தொடைந்தாம் — பதினயிரமாகிய, ஆழி — உருளை களையுடைய, அம் — அழகிதான, தடந்தேர் — பெரியதேர்களும், அத்தேர் க்கு — அந்தத்தேர்க்கு, எயின — சொன்னகணக்கின்தொகை, இரட்டி — இர ண்டானல் இருபதினயிரம், யானை — யானைகளும், யானையினிரட்டி — யா னைத்தொகையை இரட்டித்தால் நாற்பதினயிரம், பாய்மா — பாயுங்குதிரை களும், போயின — இவைகளுடன்சென்ற, பதாதி — காலாள்கள், சொன்ன- முன்னேசொன்ன, புரவியினிரட்டி — குதிரைத்தொகையை இரட்டித்தால் எண்பதினயிரம், தீயவன் — பொல்லாதவனன சம்புமாலியின், தடந்தேர்-

பெரியதேரை, சுற்றி - சூழ்ந்து, தெற்றென - விரைவாக, சென்ற - போன, சேனை - சேனையின்தொகை—எ-று. 10

வின்மறக்கிழவர்நானாவிஞ்ஞையர்வரத்தின்மிக்கார்
வன்மறக்கண்ணராற்றல்வரம்பிலாவயிரத்தோளார்
தொன்மறக்குலத்தர்தூணிதூக்கியபுறத்தர்மார்பின்
கன்மறைத்தொளிருஞ்செம்பொற்கவசத்தர்கடுந்தேராட்கள்.

இ-ள். வின்மறைக்கிழவர் - தனுர்வேதந் தெரிந்தவர்களும், நானாவிஞ்ஞையர் - பலவிதவித்தை கற்றவர்களும், வரத்தின்மிக்கார் - வரபலத்தாலதிகர்களும், வன்மறக்கண்ணர் - வலிய வீரவேஷமுள்ளவர்களும், ஆற்றல்-சாமர்த்தியத்தால், வரம்பிலா - அளவில்லாத, வயிரம் - வயிரமலைபோன்ற, தோளர் - புஜங்களுள்ளவர்களும், தொல் - பாரம்பரியமாய், மறக்குலத்தர்-வலியிற் சிறந்தவர்களும், தூணிதூக்கிய - அம்பறாத் தூணிதொங்குகிற, புறத்தர் - முதுகுள்ளவர்களும், மார்பின்கல் - மார்பாகியகல்லை, மறைத்து - மூடுதல்செய்து, ஒளிரும் - விளங்குகின்ற, செம்பொன் - சிவந்தபொன்மயமான, கவசத்தர் - சீராவை யுடையவர்களுமே ஆனவர்கள், கடு - வேகமுள்ள, தேராட்கள் - தேர்வீரர்கள்—எ-று. 11

பொருதிசையானையூரும்புனிதனைப்பொருவும்பொற்பர்
சுரிபடைத்தொழிலுமற்றையங்குசத்தொழிலுந்தொக்கார்
நிருதியிற்பிறந்தவீரர்நெருப்பிடைபரம்புங்கண்ணர்
பரிதியிற்பொலியுமெய்யர்படுமதக்களிற்றின்பாகர்.

இ-ள். பொரு - ராவணனுடனே சண்டைபண்ணவல்ல, திசையானை - திக்கியானைமேல், ஊரும் - ஏறிவருகிறவனான, புனிதனை - பாலனகுணமுள்ளநைருதியை, பொருவும் - சாமர்த்தியத்தாலொத்த, பொற்பர் - அழகுள்ளவர்கள், சுரிபடை - உடைவாளால் வெல்லுகிற, தொழிலும்-செய்கையும், மற்றை - யானையைச் செலுத்துவதான, அங்குசத்தொழிலும் — தோட்டிகொண்டு வெல்லுஞ்செய்கையும், தொக்கார் - கூடியவர்கள், நிருதியில்-நைருதிகுலத்திலே, பிறந்த - உற்பவித்த, வீரர் - வீரர்கள், நெருப்பு - அக்கினிப்பொறியை, இடை - பார்க்குமிடமெல்லாம், பரப்பும் - விரிப்பதான, கண்ணர் - கண்களுள்ளவர்கள், பரிதியில் - சூரியன்போல், பொலியும் - ஆபரணங்களால் விளங்குகிற, மெய்யர் - சரீரமுள்ளவர்கள், படுமதம்-மதஞ்சிந்துகின்ற, களிற்றின்பாகர் - யானைமேலேறிச்செலுத்திவருகிறவீரர்கள்—எ-று.

ஏர்கெழுதிசையுஞ்சாரிபதினெட்டுமியல்பினெண்ணிப்
போர்கெழுபடையுங்கற்றவித்தகப்புலவர்போரில்
தேர்கெழுமறவர்யானைச்சேவகர்சிரத்திற்செல்லும்
தார்கெழுபுரவியென்னுந்தம்மனந்தாவப்போனார்.

இ-ள். ஏர்கெழு — எழுதலையுடைய, திசையும் — திக்கினது நெடுமையும், சாரிபதினெட்டும் — பதினெண்சாரியும், இயல்பின் — முறைப்படி, எண்ணி — ஆலோசித்து, போர்கெழு — யுத்தஞ்செய்தற்குத்தக்க, படையும் — ஆயுதவகையும், கற்ற — தெரிந்த, வித்தகப்புலவர் — விவேகத்திலே சிறந்தவர்கள், போரில் — யுத்தத்திலே, தேர்கெழு மற்றவர் — ரதவீரர் சிரத்திலும், யானைச்சேவகர் — யானை வீரர்களுடைய, சிரத்தில் — தலைகளிலும், செல்லும் — தாவிக்கால்வைக்கின்ற, தார்கெழு — கிண்கிணிமாலைகள் பூண்ட, புரவியென்னும் — குதிரைகளென்கிற, தம்மனம் — தங்கள்மனமானவை, தாவ, தாண்டிச்செல்ல, போனார் — குதிரை வீரர்களும்போனார்கள்—எ-று. 13

அந்நெடுந்தானைசுற்றவமரரையச்சஞ்சுற்றப்
பொன்னெடுந்தேரிற்போனான்பொருப்பிடைநெருப்பொங்கித்
தன்னெடுங்கண்கள்காந்தத்தாழ்பெருங்கவசமார்பின்
மின்னிடவெயிலும்வீசவில்லிடுமெயிற்றுவீரன்.

இ-ள். அந்நெடுந்தானை — அந்த நெடியசேனைகள், சுற்ற — சூழவும், அமரரை — தேவர்களை, அச்சஞ்சுற்ற — பயஞ்சூழவும், பொன்னெடுந்தேரில்-பொன்மயமான நெடியதேரின்மேலேறி, பொருப்பிடை — ஒருமலைமேலே, நெருப்பில்-நெருப்பெரிகிறதுபோல், பொங்கி — கோபங்கொண்டு, போனான்-சென்றான், தன்-தன்னுடைய, நெடுங்கண்கள்-நீண்டகண்கள், காந்த-கொதிக்கவும், தாழ் — தங்க அணிந்த, பெருங்கவசம்-பெரிய சீராவானது, மார்பின் மின்னிட — மார்பிலே விளங்கவும், வெயிலும் — ரத்நமாலைகள் வெயிலையும், வீச — வீசுதலாக, வில்லிடும் - விற்போல் வளைந்தொளி வீசுகின்ற, எயிற்று-பற்களையுடைய, வீரன் - மஹாவீரனான சம்புமாலி—எ-று. 14

நந்தனவனத்துநின்றநாயகன்றூதன்றானும்
வந்திலரரக்கரென்னுமனத்தினன்வழியைநோக்கிச்
சந்திரன்முதலவானமீனெலாந்தழுவநின்ற
இந்திரதனுவிற்றோன்றுந்தோரணமிவர்ந்துநின்றான்.

இ-ள். நந்தனவனத்துநின்ற — அசோகவனத்திலே நிற்கிற, நாயகன்றூதன்றானும் — அனுமாரானவர், அரக்கர்வந்திலர் — ராக்ஷதர்களின்னம் வரக்காணோமே, என்னுமனத்தினன் — என்கிற நினைவுடையவராய், வழியை நோக்கி — அவர் வருந்திசையைக்குறித்து, சந்திரன்முதலவான — சந்திரன் முதலாகிய, மீனெலாம் — நக்ஷத்திரங்கள்யாவும், தழுவநின்ற - சூழ்வதாக நிற்கிற வுயர்வுள்ளதாய், இந்திரதனுவில் — பலரத்நவொளிகளாலே வானவிற்போல், தோன்றும் — காணப்படுகிற, தோரணம் — தோரணகம்பத்தில், இவர்ந்துநின்றான் — ஏறியிருந்தார்—எ-று. 15

கேழிருமணியும்பொன்னும்விசும்பிருள்கிழித்துவீங்க
ஊழிருங்கதிர்களோடுந்தோரணத்தும்பர்மேலான்

சூழிருங்கதிர்களெல்லாந்தோற்றிடச்சுடருஞ்சோதி
ஆழியினடுவட்டோன்றுமருக்கனேயனையனானான்.

இ-ள். கேழிழு - ஒளியாற்பெரிதான, மணியும் — ரத்நங்களும், பொன்னும் — சுவர்ணமும், விசும்பு — ஆகாயத்துள்ள, இருள் இருளை, கிழித்து-கீண்டுபோக்கி, வீங்க — அதிகமாக, ஊழ் — முறைமுறையாக, இரும் — பெரிதான, கதிர்களோடும் — தேஜசுக்களோடுகூடி, தோரணத்தும்பர் - தோரணகம்பத்தினுனியின், மேலான — மேலேயிருக்கிற அனுமார், சூழ் — பலவகை ரத்நங்களினின்றும்வருகிற, இரும் — பெரிய, கதிர்களெல்லாம் — ஒளிகளெல்லாம், தோற்றிட — வெளியேவிளங்க, சுடரும் — காந்துவதான, சோதி - பிரகாசமுள்ள, ஆழியினடுவண் — கடலினடுவே, தோன்றும், விளங்குகின்ற, அருக்கனே — சூரியனேயே, அனையன் — ஒத்தவன், ஆனான் — ஆயினார்-எ-று. ரத்நாகரமாகையால் கடலைத் தோரணகம்பமாகவும் உடம்பெல்லாம் புண்ணாய் ரத்ததேஜஸ்ஸோடிருப்பதினாலே அனுமாரைச் சூரியனாகவுஞ் சொல்லியது—எ-று. 16

செல்லொடுமேகஞ்சிந்தத்திரைக்கடல்சிலைப்புத்திரக்
கல்லளைக்கிடந்தநாகமுயிரொடுவிடமுங்காலக்
கொல்லியலரக்கர்நெஞ்சிற்குடிபுகவச்சமவீரன்
வில்லெனவிடிக்கவிண்ணோர்நடுக்குறவீரனார்த்தான்.

இ-ள். செல்லொடு - இடியுடனே, மேகம் - மேகங்கள், சிந்த — சிதறவும், திரைக்கடல் — அலையையுடைய கடல்கள், சிலைப்புத்திர - தம்மொலியடங்கவும், கல்லளை — மலைக்குகைகளிலே, கிடந்த — கிடக்கிற, நாகம் — பாம்புகள், உயிரொடு — தம்முயிருடனே, விடமும் — நஞ்சையும், கால - கக்கவும், கொல் இயல் — கொலைசெய்கிற, அரக்கர் - ராக்ஷதர்களுடைய, நெஞ்சில்-மனத்திலே, அச்சம் — பயம், குடிபுக — நிலைகொள்ளவும், வீரன் — ஸ்ரீராமனுடைய, வில்லென — கோதண்டத்தின் குணத்தொனியென்னும்படி, இடிக்க — பெருமுழக்கமாக, விண்ணோர் — தேவரும், நடுக்குற — அஞ்ச, வீரன் — அனுமார், ஆர்த்தான் - கெர்ச்சித்தார்—எ-று. 17

நின்றனதிசைக்கண்வேழநெடுங்களிச்செருக்குநீங்கத்
தென்றிசைநமனுமுள்ளந்துணுக்கெனச்சிந்திவானில்
பொன்றலின்மீன்களெல்லாம்பூவெனவுதிரப்பூவும்
குன்றமும்பிளக்கவேலைதுளக்குறக்கொட்டினான்றோள்.

இ-ள். திசைக்கணின்றன — திக்குகளிலேநிற்கிற, வேழம் - யானைகள், நெடுங்களி — தம்முடைய நெடிய மதமயக்கானுண்டான, செருக்கு — கருவங்கள், நீங்க — போக, தென்றிசை — தெற்குத்திசையிலுள்ள, நமனும் — யமனுங்கூட, உள்ளம் — மனசு, துணுக்கென — திடுக்கிட, சிந்தி — சிதறுதலாய், வானில் — ஆகாயத்திலே, பொன்றலில் — கெடுதலில்லாதிருக்கிற, மீன்களெல்லாம் — நக்ஷத்திரங்களெல்லாம், பூவென — பூப்போல், உதிர — உதிர்க

லாக, பூவும் - பூமியும், குன்றமும் - மலைகளும், பிளக்க - பிளந்துபோகவும், வேலை - கடல்கள், துளக்குற - சலிக்கவும், தோள்கொட்டினன் - புஜங்களைத் தட்டினர் — எ-று. 18

அவ்வழியரக்கரெல்லாமலைநெடுங்கடலினூர்த்தார்
செவ்வழிச்சேறலாற்றார்பிணப்பெருங்குன்றந்தெற்றி
வெவ்வழிகுருதிவெள்ளம்புடைமிடைந்துயர்ந்துவீங்க
எவ்வழிச்சேறுமென்றூர்தமருடம்பிடறிவீழ்வார்.

இ-ள். அவ்வழி - அப்போது, அரக்கரெல்லாம் - ராக்ஷதர்களெல்லாம்; அலை - அலைகளையுடைய, நெடுங்கடலின் - நெடிய கடல்போல், ஆர்த்தார் - முழங்கினர்கள், செவ்வழி - நல்லவழிகிடைத்து, சேறலாற்றார் - செல்ல மாட்டாதவர்களாய், பிணம் - சவங்களான, பெருங்குன்றம் - பெரியமலைகள், தெற்றி - தடுக்குதலாகி, வெவ்வழி - அந்தக் கொடியவழியிலே, குருதி வெள்ளம் - ரக்தப்பிரவாகம், புடை - பிணமலைகளினிடத்திருந்து, மிடைந்து - அதிகமாய், உயர்ந்து - உயர்வுகொண்டு, வீங்க - பெருக அதனாலே, எவ்வழி - எந்தவழியாக, சேறும் - செல்லுவோம், என்றூர் - என்றுசொல்லுகிறவர்கள், தமர் - தம்முறவினர்கள், உடம்பிடறி - உடம்புதடுக்கி, வீழ்வார் - விழுவார்கள் — எ-று. 19

ஆண்டுநின்றரக்கன்வெவ்வேறணிவகுத்தனிகந்தன்னை
மூண்டிருபுடையுமுன்னுமுறைமுறைமூசவேவித்
தூண்டினன்றானுந்திண்டேர்தோரணத்திருந்ததோன்றல்
வேண்டியதெதிர்ந்தாளென்னவீங்கினன்விசயத்திண்டோள்.

இ-ள். ஆண்டுநின்று - அங்கிருந்து, அரக்கன் - அந்தச் சம்புமாலி, வெவ்வேறு - வேறுவேறாக, அணிவகுத்து-ஒழுங்குசெய்து, அனிகந்தன்னை - சேனைகளை, மூண்டு - அதிகரித்து, இருபுடையும் - இருபுறத்திலும், முன்னும் - முன்னேயும், முறைமுறை - வரிசைவரிசையாய், மூச - நெருங்கிச் செல்ல, ஏவி - விட்டு, திண்டேர் - தனது பலமுள்ளதேரை, தானுந்தூண்டினன் - தானும் செலுத்தினன், தோரணத்து - தோரணகம்பத்தின்மேலே, இருந்ததோன்றல் - இருந்த அனுமார், வேண்டியது - தமக்கு வேண்டிய பொருள், எதிர்ந்தாளென்ன - கிடைக்கப்பெற்றாற்போல், விசயத்திண்டோள் - சயத்தினாலே பலமுள்ளதோள்கள், வீங்கினன் - பருத்தார் - எ-று.

ஐயனுமமைந்துநின்றானாழியானளவினுமம்
நெய்சுடர்விளக்கிற்றோன்றுநெற்றியேநெற்றியாக
மொய்மயிர்ச்சேனைபொங்கமூரணியினுகிர்வாண்மொய்த்த
கைகளேகைகளாகக்கடைக்கூழைதிருவாலாக.

இ-ள். ஐயனும் - அனுமாரும், அமைந்து - அவன்போலவே அணிவகுத்து, நின்றான் - நின்றனர் எப்படியென்னில், ஆழியான் - சக்கராயுத

ஞை திருமாலினுடைய, அளவின் — அறிமைக்குறியளவான, நாமம் — கேச வாகிதி திருமண்காப்பே, நெய் — நெய்யூற்றி, சுடர்-எரிவதான, விளக்கில்- விளக்கைப்போல், தோன்றும் — விளங்குகின்ற, நெற்றியே — இவர் நெற்றி தானே, நெற்றியாக - முன்னணியாகவும், மொய்-இவருடம்பெல்லாநெருங்கி யிருக்கிற, மயிர் — உரோமங்களாகிய, சேனை — சேனைகள், பொங்க — மிகுத லாகவும், முரண் — பலம்பொருந்தின, அயில் — கூர்மையான, உகிர் — கைகா லினகங்களே, வாள் — வாளாயுதங்களாகவும், மொய்த்த - அவைகளையுடைய, கைகளே — இருகைகளும், கைகளாக — சேனை ஒழுங்காகவும், கடைக்கூழை- பின்னணியானது, திருவாலாக - அழகியவாலாகவும் ஐயனமைந்து நின்ருனென்க—எ-று. 21

வயிர்கள்வால்வளைகள்விம்மவரிசிலைசிலைப்பமாயப்
பயிர்களார்ப்பெடுப்பமூரிப்பல்லியங்குமுறப்பற்றிச்
செயிர்கொள்வாளரக்கர்சீற்றஞ்செருக்கினர்படைகள்சிந்தி
வெயில்கள்போலொளிகள்வீசவீரன்மேற்கடிதுவிட்டார்.

இ-ள். வயிர்கள் — கொம்புகளும், வால்வளைகள் — வெண்சங்குகளும், விம்ம — சத்திக்கவும், வரிசிலை — வரிதலையுடையவிற்களிலே, சிலைப்ப- குணத்தொனியுண்டாகவும், மாயப்பயிர்கள் — மாயச்செய்கைகளான, ஆர்ப் பெடுப்ப — சத்தமுண்டாகவும், மூரிப்பல்லியம் — பெரிதான பலவகைவாத்தி யங்களும், குமுற — முழங்கவும், பற்றி — கையிலேகொண்டு, செயிர்கொள்- தீமையைச்செய்கிற, வாள் — கத்திகளையுடைய, அரக்கர் — ராக்ஷதர்கள், சீற் றம் - சீறுதலாலே, செருக்கினர் — மனக்களிப்பினராய், படைகள் - அஸ்திர சஸ்திரங்களை, சிந்தி — பொழிந்து, வெயில்கள்போல் — சூரியகிரணம்போல், ஒளிகள்வீச — காந்திகள்தோன்ற, வீரன்மேல் — அனுமார்மேலே, கடிது- விரைந்து, விட்டார் — பிரயோகித்தார்கள்—எ-று. பயிர் — பயில், சிந்தி ஒளி கள்வீசவிட்டாரென்க. 22

வேறு

கருங்கடலரக்கர்தம்படைக்கலங்கரத்தால்
பெருங்கடலுறப்புடைத்திறுத்துகப்பிசைந்தான்
விரிந்தனபொறிக்குலநெருப்பெனவெகுண்டாண்
டிருந்தவன்கிடந்ததொரெழுத்தெரிந்தெடுத்தான்.

இ-ள். கருங்கடல் — கரிய கடல்போன்ற, அரக்கர்தம் — ராக்ஷதர்க ளுடைய, படைக்கலம் — ஆயுதங்களை, கரத்தால் — கைகளாலே, பெருங் கடல் — பெரிய கடலிலேபோய், உற — விழும்படி, புடைத்து — அடித்து, இறுத்து — ஒடித்து, உக — உதிர, பிசைந்தான் — கசக்கினுர் அதனலே, பொறிக்குலம் — நெருப்புப் பொறிகள், விரிந்தன — பறத்தலாயின, நெருப் பென — அப்பொறிகளுண்டாகுகிற நெருப்பென்னும்படி, வெகுண்டு- கோபங்கொண்டு, ஆண்டு — அங்கே தோரணகம்பத்திலே, இருந்தவன்- முன் இருந்தவரான அனுமார், கிடந்தது ஓர் — அங்கே கிடந்ததான ஒரு,

எழு — எழுத்தடி, தெரிந்து — ஆராய்ந்துகண்டு, எடுத்தான் — கையிலேகொண்டார்—எ-று. 23

இருந்தனனெழுந்தனனிழிந்தனனுயர்ந்தான்
திரிந்தனன்புரிந்தனனெனனனிதெரியார்
விரிந்தவர்குவிந்தவர்விலங்கினர்கலந்தார்
பொருந்தினர்நெருங்கினர்களப்படப்புடைத்தான்.

இ-ள். இருந்தனன் — தோரணகம்பத்திலிருந்தவர், எழுந்தனன் - எழுந்தார், இழிந்தனன் — அதைவிட்டிறங்கினர், உயர்ந்தான் — வளர்ந்தார், திரிந்தனன் — சுழன்றார், புரிந்தனன் — இன்னது செய்தார், எனநனி - என்று முழுதும், தெரியார் — தெரியார்களாய், விரிந்தவர் — அதிகாரனராக்ஷதர்கள், குவிந்தவர் — கும்பல்கூடினவர்களாய், விலங்கினர் — ஒதுங்கினவர்களும், கலந்தார் — கூடினின்றவர்களும், பொருந்தினர் — சண்டை செய்தவர்களும், நெருங்கினர் — கிட்டினவர்களும், களப்பட — எல்லாரும் யுத்தகளத்திலே சாவும்படி, புடைத்தான் - அடித்தார் எழுத்தடியினாலே—எ-று. தெரியாதவர்களும் விரிந்தவரும் குவிந்தவருமெனவுமாம். 24

எறிந்தனவெய்தனவிடியுருமெனமேல்
செறிந்தனபடைக்கலமிடக்கையிற்சிதைத்தான்
முறிந்தனதெறுங்கரிமுடிந்தனதடந்தேர்
மறிந்தனபரிநிரைவலக்கையின்மலைந்தான்.

இ-ள். எறிந்தன - எறிந்தசாஸ்திரங்களும், எய்தன - எய்த அம்புகளும், இடி — இடிக்கின்ற, உருமென — இடிபோல், மேற்செறிந்தன — தம் மேலேபட்ட, படைக்கலம் — ஆயுதவகைகளை, இடக்கையில் — இடதுகையினாலே, சிதைத்தான் — அழித்தார், தெறுங்கரி — கொல்லும்யானைகள், முறிந்தன — கொம்புகளொடிந்தன, தடந்தேர் - பெரிய தேர்கள், முடிந்தன - பரிநிரை - குதிரைக்கூட்டங்கள், மறிந்தன — தலைகள் மடங்கின, வலக்கையின் - இப்படி வலதுகையாலே, மலைந்தான் — சண்டை செய்தார்—எ-று. 25

இழந்தனநெடுங்கொடியிழந்தனவிருங்கோ
டிழந்தனநெடுங்கரமிழந்தனவியன்றாள்
இழந்தனமுழங்கொலியிழந்தனமதம்பா
டிழந்தனபெருங்கதமிருங்கவுள்யானை.

இ-ள். நெடுங்கொடி — முதுகின்மேற்கொண்ட நெடியகொடிகளும், இழந்தன — போயின, இருங்கோடு — பெரிய கொம்புகளும், இழந்தன - போயின, நெடுங்கரம் — நீண்டகைகளும், இழந்தன — போயின, வியன்றாள் - பெரிய கால்களும், இழந்தன — போயின, முழங்கொலி — வீறிடுகிற சத்தமும், இழந்தன — போயின, மதம்பாடு — மதமொழுகுதலும், இழந்தன - போயின, பெருங்கதம் - பெரிய கோபமும், இழந்தன — போயின, இருங்கவுள் — பெரிய கபோலங்களையுடைய, யானை — யானைகள்—எ-று. 26

நெரிந்தன தடஞ்சுவர்நெரிந்தனபெரும்பார்
நெரிந்தன நுகம்புடைநெரிந்தனவதன்கால்
நெரிந்தனகொடிஞ்சில்கணெரிந்தனவியன்ருர்
நெரிந்தனகடும்பரிநெரிந்தனநெடுந்தேர்.

இ-ள். தடஞ்சுவர் — பெரிய சுற்றுச்சுவர்களும், நெரிந்தன — நெரிதலாயின, பெரும்பார் — பெரிய அடிப்பார்களும், நெரிந்தன — நெரிதலாயின, நுகம்புடை — நுகத்தடியினிடமெல்லாம், நெரிந்தன — நெரிதலாயின, அதன் கால் - அதனுருளைகளும், நெரிந்தன - நெரிதலாயின, கொடிஞ்சில்கள்-மேற்பரப்புகளும், நெரிந்தன — நெரிதலாயின, வியன்ருள் — பெரிய குதிரைக்கால்களும், நெரிந்தன — நெரிதலாயின, கடும்பரி — வேகக்குதிரைகளும், நெரிந்தன — நெரிதலாயின, நெடுந்தேர் — இப்படி நெடிய தேர்களெல்லாம், நெரிந்தன — நெரிதலாயின—எ-று. நுகமும் அதன் பக்கமும் எனவுமாம். 27

ஒடிந்தனவுருண்டனவுலந்தனபுலந்த
இடிந்தனவெரிந்தனநெரிந்தனவெழுந்த
மடிந்தனமறிந்தனமுறிந்தனமலைபோல்
படிந்தனமுடிந்தனகிடந்தனபரிமா.

இ-ள். ஒடிந்தன — கழுத்தொடிந்தன சில, உருண்டன - கீழே உருளலாயின சில, உலந்தன — உயிரேபோயின சில, புலந்த — துன்பப்படுகின்றன சில, இடிந்தன - இடிபட்டனசில, எரிந்தன — வேவுதலாயினசில, நெரிந்தன- எலும்புநெரிதலாயின சில, எழுந்த - கீழேவிழுந்தெழுந்தன சில, மடிந்தன- மடிவதாயினசில, மறிந்தன - மீண்டோடுவனசில, முறிந்தன — கால்கள் முறிந்தனசில, மலைபோல் படிந்தன — இப்படி மலைகளைப்போற் படிதலாயினபல, முடிந்தன - இப்படி முடிவுபெற்று, கிடந்தன - கிடக்கலாயின, பரிமா — ஏறுங்குதிரைகள்—எ-று. 28

வெருண்டனர்வியந்தனர்விழுந்தனரெழுந்தார்
மருண்டனர்மயங்கினர்மறிந்தனரிறந்தார்
உருண்டனருலைந்தனருழைத்தனர்பிழைத்தார்
சுருண்டனர்புரண்டனர்தொலைந்தனர்மலைந்தார்.

இ-ள். வெருண்டனர் — பயங்கொண்டார்கள் சிலர், வியந்தனர் — அதிசயித்தார்கள்சிலர், விழுந்தனர் - கீழேவிழுந்தார்கள்சிலர், எழுந்தார் — சண்டைக்கெழுந்தார்கள்சிலர், மருண்டனர் — மயங்கினுர்கள்சிலர், மயங்கினர்-மூர்ச்சையானுர்கள் சிலர், மறிந்தனர் — மீண்டோடினுர்கள்சிலர், இறந்தார்-செத்துப்போனுர்கள் சிலர், உருண்டனர் — தலைகளுருண்டார்கள் சிலர், உலைந்தனர் — வருந்தினுர்கள் சிலர், உழைத்தனர் — குற்றுயிரானுர்கள் சிலர், பிழைத்தார் — அடிக்குத் தப்பினுர்கள்சிலர், சுருண்டனர் — சுருண்டுவிழுந்

தார்கள்சிலர், புரண்டனர் - குப்புற விழுந்தார்கள் சிலர், மலைந்தார் - சண்டைசெய்த காலாள்கள், தொலைந்தனர் - இப்படி அழிந்தார்கள்—எ-று. 29

வேறு

கரிகொடுகரிகளைக்களப்படப்புடைத்தான்
பரிகொடுபரிகளைத்தலத்திடைப்படுத்தான்
வரிசிலைவயவரைவயவரின்மடித்தான்
நிரைமணித்தேர்களைத்தேர்களினிரைத்தான்.

இ-ள். கரிகொடு - யானைகளாலே, கரிகளை - யானைகளை, களப்பட - யுத்தகளத்திலே சாவும்படி, புடைத்தான் - அடித்தார், பரிகொடு - குதிரைகளாலே, பரிகளை - குதிரைகளை, தலத்திடை - பூமியிலே, படுத்தான் - சாவக்கொன்றார், வரிசிலை - வரிதலுள்ள வில்லையுடைய, வயவரை - வீரரை, வயவரின் - அவ்வகை வீரர்களாலே, மடித்தான் - கொன்றார், நிரை - வரிசைவரிசையாய் நிற்கிற, மணித்தேர்களை - மணிகள்கட்டின தேர்களை, தேர்களில் - அவ்வகைத் தேர்களாலே, நிரைத்தான் - அழித்துவரிசை வரிசையாகக் குவித்தார்—எ-று. 30

மூளையுமுதிரமுமுழங்கிருங்குழம்பாய்
மீளிருங்குழைபடக்கரிவிழுந்தழுந்தத்
தாளொடுந்தலையுகத்தடநெடுங்கிரிபோல்
தோளொடுநிருதரைவாளொடுந்துகைத்தான்.

இ-ள். மூளையும் - தலைகால்மூளைகளும், உதிரமும் - ரத்தமுங்கூடி, முழங்கு - கொதிப்பதான, இருங்குழம்பாய் - பெரியகுழம்பாகி, மீள் - சருக்குவதான, இரும் - அதிகமுள்ள, குழைபட - சேறுக, கரிவிழுந்து - யானைகள்விழுந்து, அழுந்த - பதியவும், தாளொடும் - கால்களுடனே, தலையுக - தலைகளுமுதிர, தடநெடுங்கிரிபோல் - பெரியநீண்டமலைபோல், தோளொடு - தோள்களுடனும், வாளொடும் - கத்திகளுடனும், நிருதரை - ராக்ஷதர்களை, துகைத்தான் - மிதித்தார்—எ-று. 31

மல்லொடுமலைமலைத்தோளரைவளைவாய்ப்
பல்லொடுநெடுங்கரப்பகட்டொடும்பருந்தாள்
வில்லொடுமயிலொடும்விறலொடும்விரிக்கும்
சொல்லொடுமுயிரொடுசிலத்தொடுந்துகைத்தான்.

இ-ள். மல்லொடு - மல்யுத்தங்கொண்டு, மலை-சண்டைசெய்கிற, மலைமலைபோன்ற, தோளரை - புஜங்களுள்ளவர்களை, வாய் - வாயிலுள்ள, வளைபல்லொடும் - வளைந்தபற்களுடனே, நெடுங்கரம் — நீண்டகைகளையுடைய, பகட்டொடும் - யானைகளுடனே, பருந்தாள் - கனத்த கதிகால்களையுடைய, வில்லொடும் - விற்களுடனே, அயிலொடும் — வேல்களோடு, விறலொடும்-சவுரியத்துடனே, விளிக்கும் - கூப்பிடுகிற, சொல்லொடும் — சொற்களுட

னே, உயிரொடு — உயிர்களோடுகூட, நிலத்தொடும் — பூமியிலேபடிய, துகைத்தான் — கால்களாலே மிதித்துக்கொன்றார்—எ-று. 32

புகைநெடும்பொறிபுகுந்திசைதொறும்பொலிந்தான்
சிகைநெடுஞ்சுடர்விடுந்தேர்தொறுஞ்சென்றான்
தகைநெடுங்கரிதொறும்பரிதொறுஞ்சரித்தான்
நகைநெடும்படைதொறுந்தலைதொறுநடந்தான்.

இ-ள். புகை — புகையுடனே கோபாக்கினியால், நெடும்பொறி-நீண்ட நெருப்புப்பொறிகள், புகுந்திசைதொறும் — போகுமிடமெல்லாம், பொலிந்தான் — போய் விளங்கினார், சிகை - சிகரத்துடனே, நெடுஞ்சுடர் - நீண்ட காந்தியை, விடும் - வீசுவனவான, தேர்தொறும் - தேர்கள் நிற்கு நிலையெல்லாம், சென்றான் - போயுலாவினார், தகை - பெரிதாக, நெடும் - உயர்ந்துள்ள, கரிதொறும் - யானைகள்மேலும், பரிதொறும் - குதிரைகள்மேலும், சரித்தான் - சஞ்சரித்தார் நகைவிளங்குகிற, நெடும் - நீண்ட, படைதொறும் - ஆயுதங்கள்மேலும், தலைதொறும் - அவர்கள் தலைகள்மேலும், நடந்தான் — நடந்துசென்றார், நகைநெடும்படை — பற்களாகியநீண்டவாள்கள்மேலுமெனவுமாம்—எ-று. புகைநெடும்பொறி புகுந்திசைதொறு மென்பது-தமக்குக்கோபமூண்ட இடமெல்லாஞ்சென்று விளங்கினாரென்க. 33

வென்றிவெம்புரவியின்வெரிநினும்விரவார்
மன்றலந்தாரணிமார்பினுமணித்தேர்
ஒன்றினின்றொன்றினுமுயர்மதமழைதாழ்
குன்றினுங்கடையுகத்துருமெனக்குதித்தான்.

இ-ள். வென்றி - முன்னேஜயம்பெற்றுள்ள, வெம்புரவியின் - வெவ்வியகுதிரைகள், வெரிநினும் - முதுகுகளிலும், விரவார் - அந்தப்பகைவருடைய, மன்றலர்ந்தார் - பரிமளமிக்கமாலைகள், அணிமார்பினும் - அணிந்த மார்புகளிலும், மணித்தேர் - மணிகள் கட்டினதேர், ஒன்றினின்று — ஒன்றின்மேலே நின்று, ஒன்றினும் - மற்றொன்றின்மேலும், உயர் - உயர்ந்த, மதமழை - மதமாகியமழை, தாழ் - இறங்குகின்ற, குன்றினும் - மலைபோன்ற யானைகள்மேலும், கடையுகத்து - முடிவு காலத்திலேவிழுகிற, உருமென - இடிகள்போல், குதித்தான் - குதிகொண்டார்—எ-று. 34

பிரிவருமொருபெருங்கோலெனப்பெயரா
இருவினைதுடைத்தவரறிவெனவெவர்க்கும்
வருமுலைவிலைக்கெனமதித்தனர்வழங்கும்
தெரிவையர்மனமெனக்கறங்கெனத்திரிந்தான்.

இ-ள். பிரிவரும் - நீங்குதலில்லாத, ஒருபெருங்கோலென - ஒருபெரிதான செங்கோல்போலவும், பெயரா - போகாத, இருவினை - பெரிய பாபங்களையெல்லாம், துடைத்தவர் - போக்கினவர்கள், அறிவென- புத்திபோலவும், எவர்க்கும் - யார்க்கானாலும், வரு - விம்மிவருகிற, முலை-

தனங்களை, விலக்கென — விலைசெய்து, மதித்தனர் - பொருள் நிச்சயித்தவர்களாய், வழங்கும் — கொடுக்கின்ற, தெரிவையர் — தாசிகளுடைய, மனமென — மனம்போலவும், கறங்கென — காற்றாடிபோலவும், திரிந்தான் - சுழன்று வியாபித்தான்—எ-று. செங்கோல் நல்லோரறிவு— தாசிகள் மனம் கறங்கு எங்கும் சுழன்று வியாபித்தற் குவமைப்பொருள்களாம். 35.

அண்ணலவ்வரியினுக்கடியவரன்சீர்
நண்ணுவரெனும்பொருணவையறத்தெரிப்பான்
மண்ணினும்விசும்பினுமருங்கினும்வலித்தார்
கண்ணினுமனத்தினுந்தனித்தனிக்கலந்தான்.

இ-ள். அண்ணல் - எப்பொருட்கு மிறைவனான, அவ்வரியினுக்கு - அந்தத் திருமாலுக்கு, அடியவர் — தாசரானவர்கள், அவன்சீர் - அத்திருமாலினது சிறப்பையே, நண்ணுவர் — அடைவார்கள், எனும்பொருள் — என்கிற அர்த்த விசேஷத்தை, நவையற - தோஷமில்லாமல், தெரிப்பான் — தெரியச்செய்தற்கு, மண்ணினும் — நிலத்திலும், விசும்பினும் — ஆகாயத்திலும், மருங்கினும் — திக்குகளிலும், வலித்தார் —வலிசெய்த ராக்ஷதர்கள், கண்ணினும் — கண்களிலும், மனத்தினும் — அவர்கள் நினைவிலும், தனித்தனி — ஒவ்வொருவராக, கலந்தான்-தோற்றலானான்—எ-று. மனத்தினும் என்பதனால் மனோவேகத்திலும் அதிகமாய் அவ்விடங்களெல்லாம் கலந்தானெனவுமாம்.

கொடித்தடந்தேரொடுங்குரகதக்குழுவை
அடித்தொருதடக்கையினிலத்தினிட்டரைத்தான்
இடித்துநின்றதிர்கதத்தெயிற்றுவன்பொருப்பைப்
பிடித்தொருதடக்கையினுயிருகப்பிழிந்தான்.

இ-ள். கொடி - கொடிகள் கட்டின, தடந்தேரோடும் —பெரிய தேர்களுடனே, குரகதக்குழுவை — குதிரைக்கூட்டங்களை, அடித்து — எழுவாலடித்து, ஒரு தடக்கையில் — நீண்ட ஒருகையாலே, நிலத்தினிட்டு — பூமியிலே சாய்த்து, அரைத்தான் — தேய்த்தான், இடித்துநின்று - முழங்குதலுடனே நின்று, அதிர் — அதிர்க்கிற, கதம் - கோபமுள்ள, எயிற்று - கொம்புகளையுடைய, வன் - வலிய, பொருப்பை - மலைபோன்ற யானைகளை, பிடித்து- பற்றி, ஒரு தடக்கையின் - நீண்ட ஒருகையினாலே, உயிருக - உயிர்கள்சிந்த, பிழிந்தான் - ரத்தத்தைப் பிழிந்தான்—எ-று- 37

கறுத்தெழுநிறத்தினரெயிற்றினர்கயிற்றார்
செறுத்தெரிவிழிப்பவர்சிகைக்கழுவலத்தார்
மறுத்தெழுமறலிகளிவரெனவதிர்ந்தார்
ஒருத்துருத்திரனெனத்தனித்தனியுதைத்தான்.

இ-ள். கறுத்தெழு - கருமைகொண்டு வருகிற, நிறத்தினர் - நிறமுள்ளவர்களையும், எயிற்றினர் - வக்கிரதந்தங்களுள்ளவர்களையும், கயிற்றார்—

பாசக்கயிறுகொண்டவர்களையும், செறுத்து - சினங்கொண்டு, எரி - நெருப்புப்போல், விழிப்பவர் - கண்கள் திறப்பவர்களையும், சிகை-கூரிய நுனியையுடைய, கழு - கழுவாயுதத்தால், வலத்தார்-பலமிக்கவர்களையும், மறுத்து-இரக்கத்தைவிட்டு, எழு - வருகிற, மறலிகள் - யமன்களே, இவரென - இவர்களென்னும்படி, வதிர்ந்தார் - நெருங்கினவர்களையும், ஒறுத்து - கொன்று, உருத்திரனென - சங்காரவுருத்திரமூர்த்திபோல், தனித்தனி - ஒவ்வொருவரையும், உதைத்தான் - காலாலெற்றினான்—எ-று. 38

சக்கரந்தோமரமுலக்கைதண்டையில்வாள்
மிக்கனதேர்பரிகுடைகொடிவிரவி
உக்கனகுருதியம்பெருந்திரையுருட்டிப்
புக்கனகடலிடைநெடுங்கரப்பூட்கை.

இ-ள். சக்கரம் - தோமரம் உலக்கை தண்டு அயில்வாள் ஆகிய இவைகளும், மிக்கன - மிகுந்துள்ள, தேர் - இரதங்களும், பரி - குதிரைகளும், குடை - குடைகளும், கொடி - கொடிகளும், விரவி - கலந்து, உக்கன-சிந்தலாயின, குருதியம்பெருந்திரை - ரத்தக்கடலானது, உருட்டி - அவைகளை உருட்டிக்கொண்டு, கடலிடை - கடலிலேபோய், புக்கன - சேரலாயின, நெடுங்கரம் - நீண்ட கைகளையுடைய, பூட்கை - யானைகளும் புக்கன என்க. 39

எட்டினவிசும்பிணையெழுப்படவெழுந்த
முட்டினமலைகளைமுயங்கினதிசையை
ஒட்டினவொன்றையொன்றூடடித்துதைந்து
தட்டுமுட்டாடினதலையொடுதலைகள்.

இ-ள். எழுப்பட - எழுவினடிபடுதலாலே, எழுந்த—எழலாகி, விசும்பிணை – ஆகாயத்தை, எட்டின - சில தலைகள் தொடலாயின, மலைகளை-பருப்பதங்களின்மேலே, முட்டின - சில மோதலாயின, திசையை - திக்குகளை, முயங்கின - சில கூடலாயின, ஒன்றையொன்று - ஒரு தலைகளை மற்றொருதலை, ஒட்டின - நெருங்கலாயின, ஊடு - ரணக்களத்துக்குள்ளே, அடித்து - அனுமாராலடிக்கப்பட்டு, உதைந்து - நெருங்கியுதைதலாய், தட்டு முட்டு - தட்டுதலும் முட்டுதலும்ஆக, ஆடின - ஆடலாயின. தலையொடு-ஒருதலையொடு, தலைகள் - மற்றுமுள்ள தலைகள்—எ-று. 40

வேறு

கானேகாவல்வேழக்கணங்கள்கதவாளரிகொன்ற
வானேயெய்தத்தனியேநின்றமதமால்வரையொப்பான்
தேனேபுரைகண்கனலேசொரியச்சீற்றஞ்செருக்கினான்
தானேயானான்சம்புமாலிகாலன்றன்மையான்.

இ-ள். கதவாளரிகொன்ற - சிங்கத்தாலே கொல்லப்பட்ட, கானே-காடே, காவல் - தம்மைக் காத்தலாகவுடைய, வேழக்கணங்கள் - யானைக்

கூட்டங்கள், வானே எய்த - எல்லா முடிவாக, தனியேநின்ற - ஒரு தானே யாகநின்ற, மதமால்வரை - பூதநாதனான யானையை, ஒம்பான் - ஒத்தவன்; தேனே - சிவந்ததேனையே, புரை - ஒப்பான, கண் - கண்களிலேநின்றும் கனலே — நெருப்பே, சிந்த - உதிர, சீற்றம் - சீறுதலுடனே, செருக்கினான் கர்வமுமுள்ளவன், தானே - தானொருவனே, ஆனான் சம்புமாலி - மிகுந்தவ னானான், காலன்றன்மையான் - கொல்லுதலாலே யமனை நிகர்த்தவன்-எ-று கதவாளரி - கோபமும் நகங்களானவாளுமுள்ளசிங்கம், மதமால்வரை - மதமு முயர்வுமுள்ள மலைபோல்வது, உதவிசெய்தினத்தைக் காக்குமும்பலே பூத நாதன் எனவுணர்க. 41

காற்றிற்கடியகலினப்புரவிநிருதர்களத்துக்கார்
ஆற்றுக்குருதிநிணத்தோடடுத்தவள்ளற்பெருங்கொள்ளை
சேற்றிற்செல்லாத்தேரினாழியாழுநிலைதேரா
வீற்றுச்செல்லும்வெளியோவில்லையளியன்விரைகின்றான்.

இ-ள். காற்றில் - வரயுவேகத்திலும், கடிய - அதிகவேகமுள்ள, கலினம் - கடிவாளம்பூண்ட, புரவி-தேர்க்குதிரைகள், களத்து-யுத்தகளத்திலே, உக்கார் — இறந்தவர்களான, நிருதர் — ராக்ஷதர்களுடைய, ஆற்று — ஆறுபோற்பெருகி வருகிற, குருதி — ரக்தமானது. நிணத்தோடு — கொழுப்புடனே, அடுத்த - கூடின, அள்ளல் — கையாலள்ளத்தக்க, பெரும் — பெரிதான, கொள்ளைச்சேற்றில் — அதிகமாகிய சேற்றிலே, செல்லா — போகமாட்டாமல், தேரினாழி — தேரினுருளைகள், ஆழுநிலை - அழுந்துகிறபடியை, தேரா - தெரிந்து, வீற்று - வேறே, செல்லும் - போகுதலான, வெளியோ- வெறுநிலமோ, இல்லை - இல்லாமல், அளியன் - தனி அவனொருவனே, விரைகின்றான் - அவசரப்படுகின்றான்—எ-று. 42

எதியொன்றாற்றேருமஃதாலெளியோருயிர்கோடல்
நீதியன்றாலுடன்வந்தாரைக்காக்குநிலையில்லாய்
சாதியன்றேற்பிறிதென்செய்தியவர்பின்றனிநின்றாய்
போதியென்றான்பூத்தமரம்போற்புண்ணாற்பொலிகின்றான்.

இ-ள். எதியொன்றால் - என்கையிலாயுதமும்ஒன்றே, தேரும் — உனக்குள்ளதேரும், அஃதால் — அவ்வொன்றே, எளியோர் — எளிமையான ஒருவனுடைய, உயிர்கோடல் — பிராணனைவாங்குதல், நீதியன்று ஆல் - நியாயமல்ல ஆகையாலே, உடன் வந்தாரை - கூடவந்தவர்களை, காக்கும் - ரக்ஷிப்பதான, நிலையில்லாய் - திறமில்லாதவனே, சாதி - சண்டைபண்ணிப்பார்; அன்றேல் - அல்லவானால், பிறிது - வேறே, என்செய்தி - நீ என்னசெய்ய வல்லவன், அவர் - அவ்வரக்கர்களுக்கு, பின் - பின்னே, தனிநின்றாய்- நீ ஒருவனே நிற்பதானாய், போதியென்றான் - ஆதலாலோடிப்போவென்று சொன்னார், பூத்தமரம்போல் - புஷ்பித்த செம்முருக்க மரத்தைப்போல் புண்ணால் - காயங்களாலே, பொலிகின்றான் - விளங்குகிற அனுமார்-எ-று.

எதியொன்று தேரொன்றென்றதனாலே ஒரே அடிக்குத்தான்காணும் ஓடிப் போவென்று கருத்து. 43

நன்றுநன்றுன்கருணையென்றுநெருப்புநகநக்கான்
பொன்றுவாரினொருவனெனன்றாய்போலுமென்னையென்று
வன்றிண்சிலையின்வயிரக்காலால்வடித்திண்சுடர்வாளி
ஒன்றுபத்துநூறுநூறாயிரமுமுதைப்பித்தான்.

இ-ள். நன்று நன்று – மிகவு நன்றாயிருக்கிறது, உன்கருணையென்று – உன் இரக்கமென்று, நெருப்புநக – நெருப்புவிளங்க, நக்கான் – சிரித்தவனாகி, பொன்றுவாரின் – இறந்துபோனவர்களிலே, எனை – என்னையும், ஒருவனென்றாய் – ஒருவனென்றெண்ணினாய், என்று – என்று, வன்றிண் – வலிதாய்க்கெட்டியான, சிலையின் – வில்லினது, வயிரக்கலால் – உறுதியான கால்களாலே, வடித்திண் – கூர்மையான பலமுள்ள, சுடர்வாளி – பிரகாசமான அம்புகள், ஒன்று – முன்னே ஒன்றும், பத்து – உடனே பத்தும், நூறு – பின்பு நூறும், நூறாயிரமும் – அப்புறம் நூறாயிரமுமாக, உதைப்பித்தான் – வயிரக்காலால் உதைந்து செல்லச்செய்தான் வில்லினாலெய்தான்—எ-று. போலும் – அசை. 44

செய்திசெய்திசிலைகைக்கொண்டால்வெறுங்கைதிரிவோரை
நொய்தின்வெல்வதரிதோவென்றுமுறுவலுகநக்கான்
ஐயனங்குமிங்குங்காலாலழியுமழைமென்ன
எய்தவெய்தபகழியெல்லாமெழுவால்வழுவித்தான்.

இ-ள். சிலைகைக்கொண்டால் – வில்கையிலிருந்தால், செய்தி செய்தி – செய்யவல்லவனே செய்யவல்லவனே, வெறுங்கைதிரிவோரை – வெறுங்கையுடனே திரிகிறவர்களை, நொய்தின் – விரைவிலே, வெல்வது – ஜெயிப்பது, அரிதோ – அருமையோ, என்று – என்று, முறுவலுக – பல்லொளி தோன்ற, நக்கான் – சிரித்தவரான, ஐயன் – அனுமார், அங்குமிங்கும் – எவ்விடத்தும், காலால் – காற்றினாலே, அழியும் – குலைவாகிற, மழையென்ன – மேகங்கள்போல், எய்தஎய்த – அவன் ஒன்றன்மேலொன்றாகவிட்ட, பகழியெல்லாம் – அம்புகளையெல்லாம், எழுவால் – தமதுகையிற்கொண்ட எழுத்தடியினாலே, வழுவித்தான் – தம்மேலே படாமல் தடுத்தார்—எ-று. 45

முற்றமுனிந்தானிருதன்முனியாமுன்னும்பின்னுஞ்சென்
றுற்றபகழியுருதுமுறியாவுதிர்கின்றதைபுன்னுச்
சுற்றுநெடுந்தேரோட்டித்தொடர்ந்தான்றூடருந்துறைகாணான்
வெற்றவெழுவைமழுவாயம்பாலறுத்துவீழ்த்தினான்.

இ-ள். முற்ற – அதிகமாக, முனிந்தான் – கோபங்கொண்டான், நிருதன் – சம்புமாலி, முனியா – அப்படிக்கோபித்து, முன்னும்பின்னும் – ஒன்றன்மேலொன்றாக, சென்றுற்ற – போய்மோதின, பகழி – அம்புகள்,

உறுது - தம்மேலேபடாமல், முறியா - முறிந்து, உதிர்கின்றதை - சிந்து கிறதை, உன்னு - நினைத்து, சுற்றும் — அவரைச்சுற்றிலும், நெடுந்தேர் தனது நெடியதேரை, ஒட்டி - செலுத்தி, தொடர்ந்தான் — நெருங்கினன், தொடரும் — நெருக்கிப்பிடிப்பதற்கு, துறைகாணுன் — வழியில்லாதவனுய், வெற்ற - வெறுமையான, எழுவை - எழுத்தடியை, மழுவாய் - மழுவுக்கு நேரான, அம்பால் - அம்பினுலே, அறுத்து - கண்டித்து, வீழ்த்தினன் கீழேவிழப் பண்ணினன்—எ-று. 46

சலித்தாணையன்கையாலெய்யுஞ்சரத்தையுகச்சாடி
ஒலித்தாரமரர்கண்டாரார்ப்பத்தேரினுட்புக்குக்
கலித்தான்சிலையைக்கையால்வாங்கிக்கழுத்தினிடையிட்டு
வலித்தான்பகுவாய்மடித்துமலைபோற்றலைமண்ணிடைவீழ.

இ-ள். சலித்தான் ஐயன் — அதற்கு அனுமார் மனஞ்சலித்து, கையால் தம்முடைய கைகளாலே, எய்யும் — அவனெய்கிற, சரத்தை - அம்புகளை யெல்லாம், உகச்சாடி - உதிர அடித்து, ஒலித்தார் - கொர்ச்சித்தவர்களாய், அமரர் — தேவர்களுடனே, கண்டார் - கண்டமுனிவர்களும், ஆர்ப்ப - ஆர வாரிக்க, தேரினுள் - அவன் தேருக்குள்ளே, புக்கு - புகுந்து, கலித்தான் கொர்ச்சிதஞ்செய்து, சிலையை - அவன்வில்லை, கையால் — தமதுகையினுலே, வாங்கி — பிடுங்கி, கழுத்தினிடை — அவன்கழுத்திலே, இட்டு - மாட்டி, வலித்தான் - இழுத்தார், பகுவாய் - அகன்றவாயை, மடித்து - மடித்துக் கொண்டு, மலைபோல் — ஒருமலைபோல், தலை — அவன்றலையானது, மண்ணிடை - மண்ணிலே, வீழ - விழுவதாக வலித்தார்—எ-று. 47

குதித்துத்தேருங்கோல்கொளாளும்பரியுங்குழம்பாக
மிதித்துப்பெயர்த்துநெடுந்தோரணத்தைவீரன்மேற்கொண்டான்
கதித்துப்பழிந்துகழிந்தார்பெருமைகண்டுகளத்தஞ்சி
உதித்துப்புலர்ந்ததோல்போலுருவத்தமரரோடினர்.

இ-ள். குதித்து — பின்பு அவன் தேரின்மேலே குதித்து, தேரும் — அந்தத்தேரும், கோல்கொள் — சாட்டிக்கோலைக்கொண்டிருக்கிற, ஆளும் — சாரதியும், பரியும் — குதிரைகளும், குழம்பாக — குழம்பிப்போக, மிதித்து — மிதித்துக்கொன்று, பெயர்த்தும் — மறுபடியும், நெடுந்தோரணத்தை — நீண்ட தோரணகம்பத்தின்மேல், வீரன் — அனுமார், மேற்கொண்டான் - ஏறியிருந்தார், கதி - தங்கள் வேகமான, துப்பழிந்து — சாமர்த்தியங்குலைந்து, கழிந்தார் — இறந்தவர்களுடைய, பெருமை - அதிகத்தை, கண்டு - பார்த்து, களத்து - அந்தயுத்தகளத்திலேநிற்க, அஞ்சி — பயந்து, உதித்து - பெருத்து, புலர்ந்த - காய்ந்த, தோல்போல் - தோலைப்போல், உருவத்து - சரீரத்தையுடைய, அமரர் - வணங்காக்குந் தேவர்கள், ஓடினர் - ஓடினர்கள்—எ-று.

பரிந்துபுலம்புமகளிர்காணக்கணவர்பிணம்பற்றி
விரிந்தகுருதிப்பேராறீர்த்துமளைகடொறும்வீச

இரிந்ததிலங்கையெழுந்ததழுகையின் றிங்கிவனாலே
சரிந்ததரக்கர்வலியென் றெண்ணியறமுந்தளித்ததால்.

இ-ள். பரிந்து - இரங்கி, புலம்பும் - புலம்புகிற, மகளிர் - பெண்டுகள், காண - பார்க்கும்படி, கணவர் - அவர்கள் நாயகருடைய, பிணம் - இறந்த உடல்களை, பற்றி - வாரி, விரிந்த பிரவாகமான, குருதி - ரத்தமாகிய, பேராறு - பெரியநதி, ஈர்த்து - இழுத்து, மனைகடொறும் - அவர் வீடுகளெல்லாம், வீச - அலையெறிய, இரிந்ததிலங்கை - இலங்கைமுழுதும் ஓடலாயிற்று, எழுந்ததழுகை - அழுகுரலதிகமாயிற்று, இன்று - இப்போது, இங்கிவனாலே - இந்த அனுமானாலே, அரக்கர்வலி - ராக்ஷதர்கள்பலம், சரிந்தது - சாய்ந்துபோயின, என்றெண்ணி - என்றுநினைத்து, அறமும் - தருமமும், தளிர்த்தது - சந்தோஷித்தது—எ-று. 49

புக்காரமரர்பொலந்தாரரக்கன்பொருவில்பெருங்கோயில்
விக்காநின்றார்விளம்பலாற்றார்வெருவிவிம்முவார்
நக்கானரக்கனடுங்கலென்றானையநமரெல்லாம்
உக்கார்சம்புமாலியுலந்தானொன் றேகுரங்கென்றார்.

இ-ள். புக்காரமரர் - போனதேவர்கள், பொலந்தார் - பொன்மாலைகளணிந்த, அரக்கன் - இராவணனுடைய, பொருவில் - ஒப்பில்லாத, பெருங்கோயில் - பெரிய அரண்மனைக்குள்ளேபோய், விக்காநின்றார் - விக்கிக்கொண்டு நின்றார்கள், விளம்பலாற்றார் - சொல்லமாட்டாதவர்களாய், வெருவி - பயந்து, விம்முவார் - துக்கிக்கிறவர்களைக்கண்டு, நக்கான் - சிரித்தவனாகி, அரக்கன் - ராவணன், நடுங்கல் - பயப்படாமல் நில்லுங்கள், என்றான் - என்று சொன்னான், ஐய - சுவாமி, நமரெல்லாம் - நமது கூட்டத்தாரெல்லாம், உக்கார் - இறந்தார்கள், சம்புமாலி - சம்புமாலியும், உலந்தான் - இறந்துபோனான், ஒன்றேகுரங்கு - அந்த ஒரு குரங்கினாலே, என்றார் - என்று சொன்னார்கள், பெருங்கோயில்புக்காராகிய அமரரெனக்கூட்டுக—எ-று. 50

என்னுமளவினெரிந்துவீங்கியெழுந்தவெகுளியான்
உன்னவுன்னவுதிரக்குமிழிவிழியூடுமிழ்கின்றான்
சொன்னகுரங்கையானேபிடிப்பன்கடிதுதொடர்ந்தென்ன
அன்னதுணர்ந்தசேனைத்தலைவரைவரறிவித்தார்.

இ-ள். என்னுமளவின்-என்றுசொல்லும்போது, எரிந்து - எரிதலாகி, வீங்கியெழுந்த - அதிகமாயுண்டான, வெகுளியான் - கோபமுள்ள ராவணன், உன்ன உன்ன - நினைக்கநினைக்க, உதிரக்குமிழி - ரத்தக்குமிழிகள், விழியூடு - கண்களினின்றும், உமிழ்கின்றான் - சிந்துகிறவன், சொன்ன - நீங்கள்சொன்ன, குரங்கை - அந்தக்குரங்கை, யானேபிடிப்பன் - நானே பற்றுகிறேன், கடிது - விரைவிலே, தொடர்ந்தென்ன - போய் என்றுசொல்ல, அன்னது - அதை, உணர்ந்த - தெரிந்த, சேனைத்தலைவர் - சேனாபதிகள், ஐவர் - ஐந்துபேர்கள், அறிவித்தார் - தெரியச்சொல்லுகிறார்கள்—எ-று. 51

சம்புமாலிவதைப்படலம் முற்றிற்று

ஆக படலம் 9 - க்கு திருவிருத்தம் - 866

கம்பநாட்டாழ்வார் திருவடிகளே சரணம்

---

# பஞ்சசேனாபதிகள் வதைப்படலம்

சிலந்தியுண்பதோர்குரங்கின்மேற்சேறியேற்றிறலோய்
கலந்தபோரிடைக்கட்புலன்கடுங்கனல்கதுவ
உலந்தமால்வரையருவியாறொழுக்கற்றவொக்கப்
புலந்தமாமதம்பூக்குமன்றேதிசைப்பூட்கை.

இ-ள். சிலம்பி - புழுப்பூச்சிகளை, உண்பது - பொசிப்பதான, ஓர் குரங்கின்மேல் - ஒரு குரங்கைக்குறித்து, சேரியேல் — போர்க்குச் செல்வாயானால், திறலோய் - மகாவல்லவரே, கட்புனல் - உம்முடைய கண்களினிடத்தில், கடுங்கனல் - கடுமையான நெருப்பு, கதுவ - பொருந்த, கலந்த - நேர்தலான, போரிடை - யுத்தத்திலே, மால்வரை - பெரியமலைகள், அருவியாறு - அருவியாகிய ஆறுகள், ஒழுக்குஅற்ற - ஒழுகுதலில்லாமல், உலந்த - காய்ந்தவற்றை, ஒக்க - ஒப்பாக, புலந்த - காய்ந்துபோன, மாமதம் - பெரிதான மதங்கள். பூக்கும் அன்றே - உண்டாகப்பெறுமல்லவோ, திசைப்பூட்கை - திக்கிலுள்ள யானைகள்—எ-று. சிலம்பி - நூல்நூற்கிற ஒருவகைச்செந்து அதை எட்டுக்காற் பூச்சியென்பர்கள். 1

இலங்குவெஞ்சினத்தஞ்சிறையெறுழ்வலிக்கலுழன்
உலங்கின்மேலுருத்தன்னநீகுரங்கின்மேலுருக்கின்
அலங்கன்மாலைநின்புயநினைந்தல்லுநன்பகலும்
குலுங்கும்வன்றுயர்நீங்குமால்வெள்ளியங்குன்றம்.

இ-ள். இலங்கு - மிகவிளங்குகின்ற, வெஞ்சினத்து - வெவ்விய கோபத்தையுடைய, அஞ்சிறை - அழகிய சிறகுகளைக்கொண்ட, எறுழ்வலி- மிக்க வலிமைபெற்ற, கலுழன் - கருடபக்ஷியானது, உலங்கின்மேல் - ஒரு கொசுகின்மேலே, உருத்தன்ன - கோபித்துச் சென்றாற்போல், நீ - மகப்பிரபுவானநீர், குரங்கின்மேல் - ஒரு குரங்கின்மேலே, உருக்கின் - கோபங்கொண்டுசென்றால், அலங்கன்மாலை - அசைகிற மாலையணிந்த, நின்புயம்- உமது தோள்வலியை, நினைந்து - எண்ணி, அல்லும் - இரவும், நன்பகலும்- நல்ல பகற்காலமும், குலுங்கும் - நடுங்குவதான, வன்றுயர் - தீராததுன்பம், வெள்ளியங்குன்றம் - கயிலாசமலையானது, நீங்கும் - உம்மை அலட்சியமாக எண்ணித்தீர்வதாகும்—எ-று. 2

உறுவதென்கொலோவாளிழிவென்பதொன்றுடையார்
பெறுவதியாதொன்றுங்காண்கிலர்கேட்கிலர்பெயர்ந்தார்
சிறுமையீதொப்பதியாதுநீகுரங்கின்மேற்சேறின்
முறுவல்பூக்குமன்றேநின்றமூவர்க்குமுகங்கள்.

இ-ள். உறுவது - நீர் அடையவேண்டியது, என்கொல் - இன்னம் யாதிருக்கின்றது, வானிழிவு - மிகவுந்தாழ்வு, என்பது - என்பதாகிய, ஒன்று - ஒன்றையே, உடையார் - அடைந்தவர்களாய், பெறுவது - தாம் பெறத்தக்க பெருமையில், யாதொன்றும் - எதுவும், காண்கிலர் - உமக்குமுன்னே காணக்கிடையாராய், கேட்கிலர் - உமது பெயர்கேட்கவும் அஞ்சுதலுண்டாகி, பெயர்ந்தார் - ஓடிப்போனுர்கள் மூவர் அப்படிக்கிருக்க, நீ - நீர், குரங்கின்மேல் - ஒரு குரங்கின்மேலே, சேறின் - செல்லுவீரேயானல், ஈதொப்பது - இதற்குச் சரியான, சிறுமை - இழிவு, யாது - வேறே என்ன இருக்கிறது, கின்ற - மறைந்து விலகிநிற்கிற, மூவர்க்கும் - மும்மூர்த்திகளுக்கும், முகங்களில் — முகங்களிலே, முறுவல் - சிரிப்பு, பூக்கும் - உண்டாகும், அன்றே - அல்லவோ—எ-று. 3

அன்றியும்முனக்காளின்மைதோன்றுமாலரச
வென்றியில்லவர்மெல்லியோர்தமைச்செலவிட்டாய்
நன்றியின்றொன்றுகாண்டியேலெமைச்செலநயத்தி
என்றுகைதொழுதிறைஞ்சினரரக்கனுமிசைந்தான்.

இ-ள். அன்றியும் - இவைகளையல்லாமலும், உனக்கு — மூவரையும் வென்றவுமக்கு, ஆளின்மை - துணைவலியில்லையாக, தோன்றும் - காணப்படும், அரச - ஓ பிரபு, வென்றியில்லவர் - செயங்கொள்ளமாட்டார்களும், மெல்லியோர்தமை - மிகவும் இளைத்தவர்களுமானவர்களை, செலவிட்டாய் - போகவிட்டீர், நன்றியொன்று - நாங்கள்செய்யுமோருதவியை, இன்று - இப்போது, காண்டியேல் - காணவேண்டுவீரானல், எமை - எங்களை, செல - போகும்படி, நயத்தி - வேண்டுவீராக, என்று கைதொழுது - என்று கைகள் குவித்து, இறைஞ்சினர் - வணங்கினர்கள், அரக்கனும் - இராவணனும், இசைந்தான் - அதற்குச் சம்மதியானன்—எ-று. 4

உலகமூன்றிற்குமுதன்மைபெற்றோரெனவுயர்ந்தார்
திலகமண்ணுறவணங்கினர்கோயிலிற்றீர்ந்தார்
அலகிறேர்பரிகரியொடாண்மிடைந்தபோரரக்கர்
தொலைவிலாதனகதுமெனவருகெனச்சொன்னர்.

இ-ள். உலக மூன்றிற்கும் – ஒரு திரிலோகத்திற்கும், முதன்மை-தலைமையான பெருமையை, பெற்றோரென — அடைந்தவர்கள்போல், உயர்ந்தார் — உயர்வுகொண்டவர்களாய், திலகம் – நெற்றியிலுள்ளபொட்டு, மண்ணுற – மண்ணிலேபட விழுந்து, வணங்கினர் — தொழுதுகொண்டு, கோயிலில் — அரசனரண்மனையினின்றும், தீர்ந்தார் - வெளியேவந்து, அலகுஇல் - கணக்கில்லாத, தேர் - இரதங்களும், பரி - குதிரைகளும், கரியொடு - யானைகளுடனே, ஆள் - காலாள்களுமாக, மிடைந்த – நெருங்கின, போரரக்கர் - வலியராக்ஷதவீரர்கள், தொலைவிலாதன - அளவில்லாதவைகளுமுள்ளசேனைகள், கதுமென — விரைவாக, வருகென - வரக்கடவனவென்று, சொன்னர் - உத்தரவுசெய்தார்கள்—எ-று. 5

ஆனைமேன்முரசறைந்தனர்வள்ளுவரமைந்தார்
பேனவேலையிற்புடைபரந்ததுபெருஞ்சேனை
சோனைமாமழைமுகிலெனப்போர்ப்பணைதுவைப்ப
மீனவானிடைமின்னெனப்படைக்கலமிடைந்த.

இ-ள். அமைந்தார் - அவ்வுத்தரவைத் தெரிவிப்பாரான, வள்ளுவர்-பறையறைவோர்கள், ஆனைமேல் — ஆனைமேலிட்டு, முரசு - பேரிகையை, அறைந்தனர் — அடித்தார்கள், பெருஞ்சேனை — அவ்வளவிலே பெரியசேனைகள், பேனம் - நுரைகளையுடைய, வேலையில் - கடல்போல், புடைபரந்தது-சேனாதிபதிகளிடத்தேவந்துகூடின, சோனை - விடாதுபெய்கிற, மாமழை பெரிய மேகங்களாகிய, முகிலென - மழையிடிகள்போல், போர்ப்பணை-யுத்த வாத்தியங்கள், துவைப்ப — முழங்க, மீன — நக்ஷத்திரங்களையுடைய, வானிடை — ஆகாசசஞ்சாரமான மேகங்களிலே, மின்னென-மின்னல்கள்போல், படைக்கலம் — அஸ்திரசஸ்திரங்கள், மிடைந்த — நெருங்கி விளங்கின—எ-று.

தானைமாக்கொடிமழைபொதுத்துயர்நெடுந்தாள
மானமாற்றருமாருதிமுனியநாளுலந்து
போனமாற்றலர்புகழெனக்கால்பொரப்புரண்ட
வானயாற்றுவெண்டிரையெனவரம்பிலபரந்த.

இ-ள். தானை — அந்தச் சேனைகளிலுள்ள, மாக்கொடி — பெரிய கொடிகள், மழை — மேகங்களை, பொதுத்து — பொத்து, உயர் — உயர்ந்த, நெடுந்தாள — நீண்ட கால்களையுடைய தானைமாக்கொடியென்க, மானம் — ராமதாசனென்னும் அபிமானத்தை, மாற்றரு — மாறுதலில்லாத, மாருதி — அனுமார், முனிய — கோபித்தலாலே, நாளுலந்துபோன, ஆயுள்முடிந்துசென்ற, மாற்றலர்-பகைவரான அரக்கர்கள், புகழென - கீர்த்திகள் புரண்டாற்போல், கால்பொர — காற்றுவீசலாலே, புரண்ட — கொடியாடைகள் புரளலாயின, வானயாற்று — ஆகாயகங்கையினது, வெண்டிரையென-வெள்ளையான அலைகள்போல், வரம்பில் — அளவில்லாதவைகள், பரந்த — மேலே பரவலாயின, நெடுந்தாளாவது - அடிமரம் அடிமரத்தினுனி மேகங்களைப் பொத்தெனக் கூட்டுக—எ-று. 7

விரவுபோர்க்கழல்விசித்தினர்வெரிநுற்றிவிளங்கச்
சரமொடுக்கினபுட்டிலுஞ்சாத்தினர்சமையக்
கருவுபுக்கனரரக்கர்மாப்பல்லணங்கவினப்
புரவியிட்டதேர்பூட்டினபருமித்தபூட்கை.

இ-ள். விரவுபோர் — போருக்குத்தகுதியான, கழல் — வீரக்கழல்களை, விசித்தனர் - காலிலே கட்டிக்கொண்டு, வெரின் உற்று — முதுகிலே பொருந்தி, விளங்க — பிரகாசிக்க, சரமொடுக்கின பாணங்களை யடக்கியிருக்கிற, புட்டிலும் — அம்புக்கூடுகளும், சாத்தினர் — கட்டிக்கொண்டார்கள், சமைய-பொருந்த, கருவி - கவசத்துக்குள், புக்கனர் — நுழைந்துகொண்டு, அரக்கர்-

ராக்ஷதர்கள், மா - குதிரைகளுக்கு, பல்லணம் - சேனங்கள், கவின - விளங்கவும், புரவி, குதிரைகளை, இட்ட - கட்டுவதான, தேர் - இரதங்களிலே, பூட்டின - கட்டலாயின, பூட்கை - யானைகள், பருமித்த - விரிமுதலானவைகளால் அலங்கிருதமாயின—எ-று. 8

ஆறுசெய்தனவானையின்மதங்களவ்வாற்றைச்
சேறுசெய்தனதேர்களின்சில்லியச்சேற்றை
நீறுசெய்தனபுரவியின்குரமற்றைநீற்றை
வீறுசெய்தனவப்பரிக்கலினமாவிலாழி.

இ-ள். ஆனையின்மதங்கள் - யானைமதங்கள், ஆறுசெய்தன - எங்கும் ஆருகப்பண்ணின, அவ்வாற்றை - அந்தமதயாற்றை, தேர்களின்சில்லி-தேருருளைகள், சேறுசெய்தன—சேருகப்பண்ணின, அச்சேற்றை - அந்தத் தூளிகலந்து சேருனதை, புரவியின்குரம் - குதிரைகளின்கால்கள், நீறுசெய்தன - முழுதுந்தூளியாகவே செய்தன, மற்றைநீற்றை - அந்தத் தூளிகளை, கலினம்—கடிவாளம்பூண்ட, அப்பரிமா - அந்த ஆண்குதிரைகளின், விலாழி - வாய்நுரைகள்கூடி, வீறுசெய்தன - வேறுவிதமானகுழை சேருக்கின—எ-று. 9

வழங்குதேர்களினிடிப்பொடுவாசியினார்ப்பும்
முழங்குவெங்களிற்றதிர்ச்சியுமொய்கழலொலியும்
தழங்குபல்லியத்தமலையுங்கடையுகத்தாழி
விழுங்குமோதையின்மும்மடங்கெழுந்ததுவிரைந்து.

இ-ள். வழங்கு — அங்கே ஊர்ந்துவருகிற, தேர்களின் — இரதங்களினுடைய, இடிப்பொடு - முழக்கத்துடனே, வாசியின் - குதிரைகளின், ஆர்ப்பும் - அனுமானிப்பும், முழங்கு - வீறிடுகின்ற, வெங்களிற்று — கோபமிக்க யானைகளின், அதிர்ச்சியும் - பேரொலியும், மொய் - காலிலே அணிந்த, கழலொலியும் — வீரக்கழல்களின் முழக்கமும், தழங்கு - அதிருகிற, பல்லியத்து - பலவாத்தியங்களின், அமலையும் - சத்தமும், கடையுகத்து — யுகமுடிவிலே, விழுங்கும் - உலகை விழுங்குகிற, ஆழி ஓதையின் - கடலொலியிலும், விரைந்து - வேகமாய், மும்மடங்கு - மூன்றுபங்கு, எழுந்தது - கிளம்பலாயிற்று—எ-று. 10

ஆழித்தேர்த்தொகையைம்பதினுயிரமஃதே
சூழிப்பூட்கைக்குத்தொகையவற்றிரட்டியின்றொகைய
ஊழிக்காற்றன்னபுரவிமற்றவற்றினுக்கிரட்டி
பாழித்தோணெடும்படைக்கலப்பதாதியின்பகுதி.

இ-ள். ஆழி - உருளையையுடைய, தேர்த்தொகை - தேரினளவு, ஐம்பதினுயிரம் அஃதே - அந்த ஐம்பதினுயிரமே, சூழி - முகபடாமணிந்த, பூட்கைக்கு - யானைகளுக்கும், தொகை— அளவு, அவற்று - அவைகளை, இரட்டி

யின் — இரண்டுகொண்ட நூறுயிரம், தொகைய — அளவுள்ளன, ஊழிக் காற்று — முடிவுகாலக்காற்றை, அன்ன — ஒப்பான, புரவி — குதிரைகள், மற்ற வற்றினுக்கு இரட்டி - அவைகளை யிரண்டுகொண்ட இருநூறுயிரமே, பாழித்தோள் — பெரிய தோள்களையுடைய, நெடும் - நெடிதான, படைக் கலம் — ஆயுதங்களுடைய, பதாதியின்பகுதி — காலாள்களினளவு—எ-று. 11

கூய்த்தருந்தொறுந்தருந்தொறுந்தானைவெங்குழுவின்
நீத்தம்வந்துவந்தியங்கிடுமிடனின்றினெருங்கக்
காய்த்தமைந்தவெங்கதிர்ப்படையொன்றொன்றுகதுவித்
தேய்த்தெழுந்தனபொறிக்குலமழைக்குலந்தீய.

இ-ள். கூய் — கூப்பிட்டு, தருந்தொறும் — தருந்தொரும்வரவர, தானை - அந்தச்சேனைகளின், வெங்குழுவின் - வெவ்விய கூட்டமாகிய, நீத்தம் — பிரவாகம், வந்து வந்து — சேர்ந்து சேர்ந்து, இயங்கிடும் — சஞ்சரித்தற்கு, இடனின்றி — இடமில்லாமல், நெருங்க — நெருக்கமாக அதனலே, காய்ந்து- கொல்லனுலையிலே காய்ந்து, அமைந்த — உண்டான, வெங்கதிர் — வெவ்வி தான ஒளிகொண்ட, படை — ஆயுதங்கள், ஒன்றொன்று — ஒன்றோடொன்று, கதுவி - மோதி, தேய்த்து — உரசி, மழைக்குலம் — மேககூட்டங்கள், தீய — கருக, பொறிக்குலம் — பொறிக்கூட்டங்கள், எழுந்தன — உண்டாயின—எ-று. 12

பண்மணிக்குலம்யானையின்புடைதொறும்பரந்த
ஒண்மணிக்குலமழையிடையுருமெனவொலிப்பக்
கண்மணிக்குலங்கனலெனக்காந்துவகடிப்பின்
தண்மணிக்குலமழையெழுகதிரெனத்தழைப்ப.

இ-ள். பண் — மிகவுமொலிக்கச்செய்திருக்கிற, மணிக்குலம் — கழுத்து மணிகளும், யானையின் — கழுத்துமணியையுடைய யானைகளின், புடை தொறும் — இருபுறத்திலும், பரந்த — ஒலிபரவலாயிருக்கிற, ஒண் — அழகி தான, மணிக்குலம் - மணிகளும், மழையிடை — மேகத்திலேயுள்ள, உரு மென — இடிகள்போல, ஒலிப்ப — முழங்க, கண்மணிக்குலம் — அந்த யானை களின் கண்களினொளிகள், கனலென — நெருப்புப்போல், காந்துவ — ஒளி விடுகின்றன, கதுப்பில் — இரண்டுகவுள்களிலும் ஆபரணங்களாயணிந்துள்ள, தண் — குளிர்ந்த ஒளியுள்ள, மணிக்குலம் - ரத்நச்சோதிகள், மழை — மேகத் திலே, எழு - தோன்றுகிற, கதிரென — சூரியன்போல், தழைப்ப — ஒளி செய்கின்றன—எ-று. 13

தொக்கதாம்படைசுரிகுழன்மடந்தையர்தொடிக்கை
மக்கடாயர்மற்றியாவருந்தடுத்தனர்மறுகி
ஒக்கவேகுதுங்குரங்கினுக்குயிர்தரவொருவர்
புக்குமீண்டிலரென்றழுதிரங்கினர்புலம்பி.

இ-ள். படை - இப்படிச்சேனைகள், தொக்கதுகூடியது - கூடுமளவில், சரிகுழல் - சுருண்ட கூந்தலையுடைய, மடந்தையர் - ராக்ஷதப்பெண்களும், தொடிக்கை - கங்கணங்களணிந்த, மக்கள் - அவர்கள் பிள்ளைகளும், தாயர்- தாய்மார்களும், மற்றியாவரும் - இன்னமுள்ள எல்லாரும்வந்து, மறுகி- மயங்குதலாகி, தடுத்தனர் - தடைசெய்தார்கள், ஒக்க - கூடவே, எகுதும்- வருகிறோம், குரங்கினுக்கு - அந்தக் குரங்குக்கே, உயிர்தர - எங்களுயிரை யுங் கொடுக்க, ஒருவர் - ஒருவராயிலும், புக்கு - போய், மீண்டிலர் - திரும் பினதிலர், என்று - என்பதாக, புலம்பி - பிரலாபித்து, அழுதிரங்கினர்- அழுது அவலித்தார்கள்—எ-று. 14

கைபரந்தெழுசேனையங்கடலிடைக்கலந்தார்
செய்கைதாம்வருந்தேரிடைக்கதிரெனச்செல்வார்
மெய்கலந்தமானிகர்வருமுவமையைவென்றூர்
ஐவரும்பெரும்பூதமோரைந்துமொத்தமைந்தார்.

இ-ள். கைபரந்து - ஒழுங்குகொண்டுபரவி, எழு - எழுகின்ற, சேனை யங்கடலிடை - சேனைக்கடலிலே, கலந்தார் - கூடினூர்கள், செய்கை - மயன் செய்ததினுலே, தாம் - தாவுகின்றனவாக, வரு-வருகின்ற, தேரிடை - தேர் களின்மேல், கதிரென - சூரியர்கள்போல், செல்வார் - போகலானூர்கள், மெய்கலந்த - நாசரீரத்துடன்கூடின, மா - சிங்கத்தை, நிகர்வரும் - ஒப்பா கச்சொல்லுகிற, உவமையை - ஒப்பையும், வென்றூர் - கடந்தவர்களான, ஐவரும் - பஞ்சசேனுபதிகள், பெரும்பூதம் - பெரியபூதங்கள், ஓரைந்தும், ஓரைந்தையும், ஒத்து அமைந்தார் - எண்ணுலொத்தவர்கள்—எ-று. சூரியன் தேர் அயன் செய்தது. 15

முந்தியம்பலகறங்கிடமுறைமுறைபொறிகள்
சிந்தியம்புறுகொடுஞ்சிலையுருமெனத்தெரிப்பார்
வந்தியம்புறுமுனிவர்க்குமமரர்க்கும்வலியார்
இந்தியம்பகையாயவையைந்துமொத்தியைந்தார்.

இ-ள். முந்து - முன்னே, இயம்பல - பலவாத்தியங்களும், கறங்கிட- ஒலிக்க, முறைமுறை - வரிசைவரிசையாக, பொறிகள்சிந்தி - பொறிகள் சிதறுதலாய், அம்பு உறு - அம்புகள் பொருந்தின, கொடுஞ்சிலை - வளைந்த வில்லை, உருமென - இடியென்னும்படி, தெறிப்பார் - குணத்தொனி செய்துகொண்டு, வந்து - போர்க்களத்திலேவந்து, இயம்புறு - மதித்துச் சொல்லத்தக்க, முனிவர்க்கும் - ருஷிகளுக்கும், அமரர்க்கும் - தேவர்களுக் கும், வலியார் - சமர்த்தின்மிக்கவர்கள், இந்தியம் - இந்திரியங்களென்று பகையாயவை - பகைகளான, ஐந்துமொத்து - ஐந்தையும் ஒப்பாய், இயைந் தார் - கூடினூர்கள்—எ-று. 16

வாசவன்வயக்குலிசமும்வருணன்றன்கயிறும்
பசிறென்றிசைக்கிறவன்றனெரிமுனையெழுவும்

ஈசன்வன்றனிச்சூலமுமென்றிவையொன்றும்
ஊசிபோவதோர்வடுச்செயாநெடும்புயமுடையார்.

இ-ள். வாசவன் — இந்திரனுடைய, வயம் — வெற்றியுள்ள, குலிசமும் — வச்சிராயுதமும், வருணன்றன் — வருணதேவனுடைய, கயிறும் — பாசமும், ஏசு இல் — இகழ்வில்லாத, தென்றிசைக்கிழவன்றன் — யமனுடைய, எரிமுனை — நெருப்பைமுனையிலேகொண்ட, எழுவும் — எழுத்தண்டமும், ஈசன் — சிவனுடைய, வன்றனி — வலிதா யொப்பில்லாத, சூலமும் — சூலாயுதமும், என்றிவை — என்று சொல்லலான இவ்வாயுதங்களில், ஒன்றும் — ஒன்றாயினும், ஊசி — ஒரு ஊசியானது, போவது — நுழைவதாகிய, ஓர்வடு — ஒரு காயமும், செயா — பண்ணப்படாத, நெடும்புயம் — நீண்டதோள்கள், உடையார் — உடையவர்கள்—எ-று. 17

சூர்தடிந்தவன்மயிலிடைப்பறித்தவன்றோகை
பார்பயந்தவனன்னத்தினிறகிடைப்பறித்த
மூரிவெஞ்சிறகிடையிட்டுத்தொடுத்தனமுறுக்கி
வீரசூடிகைநெற்றியினயலிட்டுவிசித்தார்.

இ-ள். சூர்தடிந்தவன் — சூரனைக்கொன்ற முருகவேளினுடைய, மயிலிடை — மயிலினிடத்தே, பறித்த — பிடுங்கின, வன்றோகை — வலிதான வாலை, பார் — உலகத்தை, பயந்தவன் — சிருஷ்டித்தபிரமனுடைய, அன்னத்தின் — அன்னபக்ஷியின், இறகிடை — இறகிலே, பறித்த — பிடுங்கின, மூரி — பெரிய, வெஞ்சிறகிடை — வெவ்விய இரகிலேசேர, இட்டு — கூட்டி, முறுக்கித் தொடுத்தன — முறுக்குள்ளவாக நீட்டியிருக்கிற, வீரசூடிகை — கலிக்கித்துரா, நெற்றியின் — நெற்றிக்கு, அயலிட்டு — மேலேகொண்டு, விசித்தார் — கட்டினவர்கள்—எ-று. வீரசூடிகை — வீரத்தினலே உச்சிக் கொண்டையிலே சேர்த்துக்கட்டுகிற இறகுகள் மயில்வாலும் அன்னத்திறகு மென்க. 18

பொன்றிணிந்ததோளிராவணன்மார்பொடும்பொருத
அன்றிழந்தகோடரிந்திடுமழகுறுகுழையர்
நின்றவன்றிசைநெடுங்களியானையினெற்றி
மின்றிணிந்தன்னவோடையின்வீரபட்டத்தர்.

இ-ள். பொன்திணிந்த — பொன்வலயங்களாலிறுகின, தோள் — தோள்களையுடைய, இராவணன் — இலங்கேசனது, மார்பொடும் — மார்புடனே, பொருத — யானைகள் மோதின, அன்று — அந்நாள், இழந்த — ஒடிதலான, கோடு — கொம்பை, அரிந்திடும் — பின்னும் அறுத்தணிந்துகொண்ட, அழகுறு — அழகுள்ள, குழையர் — குண்டலங்களையுடையவர்கள், நின்ற — நிலைகொண்ட, வன்நெடு — வலிமையுள்ளநெடிய, திசையானையின் — திக்கஜங்களின், நெற்றி — நெற்றியிலே, மின் — மின்னல், திணிந்தன்ன — ஒட்டினாற்போன்ற, ஓடையின் — முகபடாத்தையே, வீரபட்டத்தர் — தமக்கு வீரபட்ட

ாகக்கொண்டவர்கள்—எ-று. நெடுங்களி — அதிக மதமயக்கங்கொண்ட திக்கஜங்களென்க. 19

வேறு

நிதிநெடுங்கிழவனைநெருக்கிநீணகர்ப்
பதியொடும்பெருந்திருப்பறித்தபண்டைநாள்
விதியொடுமனனவன்விழுந்துவெந்நிடப்
பொதியொடும்வாரியபொலன்கொள்பூணினர்.

இ-ள். நிதிநெடுங்கிழவனை — நெடிய நிதிக்குரிய குபேரனை, நெருக்கி-ெட்டி, நீணகர் - நீண்டபட்டணமான, பதியொடும் — அவன் ஊருடனே, ெபருந்திரு — அவன் பெருஞ்செல்வத்தையும், பறித்த — பிடுங்கிக்கொண்ட, ண்டைநாள் — முன்னளிலே, விதியொடும் — செய்தொழிலுடனே, அன் னவன் — அந்தக் குபேரன், விழுந்து — கீழ்ப்பட்டவனுகி, வெந்நிட — முதுகு ொடுக்க, பொதியொடும் — மூட்டைமூட்டையாக, வாரிய — வாரிக்கொண்டு ந்த, பொலன்கொள் — பொன்மயமான, பூணினர் - ஆபரணங்களுள்ளவர் ள்—எ-று. பொதி — பொதியப்படுதல். 20

இந்திரனிசையிழந்தேகுவானிகற்
றந்திமுன்கடாவினன்முடுகத்தாமதன்
மந்திரவாலடிபிடித்துவல்லையேல்
உந்துதிநீயெனவலிந்தவூற்றத்தார்.

இ-ள். இந்திரன் - மகவான், இசையிழந்து — தனதுகீர்த்திகெட்டு, ஏகு வான் — ஓடுமவனுகி, இகல் — பலங்கொண்ட, தந்தி — தனதுயானையை, முன் டவினன் - முன்னே செல்லவிட்டுக்கொண்டு, முடுக — விரைந்துபோக, ாம் — இவர்கள் தாங்கள், அதன் — அந்த, மந்தரம் — மந்திரகிரிபோன்ற ானையின், வாலடி — அடிவாலை, பிடித்து - பிடித்து நிறுத்தி, வல்லையேல்- சமர்த்தனுனல், உந்துதி நீயென — எங்கள்மேலிந்த யானையைச் செலுத் ிப்பாயென்று, வலிந்த — பலாத்கரித்த, ஊற்றத்தார் — பலாட்டியர்களிவர் ள்—எ-று. 21

பாணிறுத்தந்தணன்பணியனுகிநின்
கோனிலைத்திலனென்னவுலகங்கூறலும்
நீணிறத்திராவணன்முனிவுநீக்குவான்
காலனைக்காலினிற்கையிற்கட்டினர்.

இ-ள். பாணிறுத்து - முறையே உயிர்களை விதிப்பதாய், அந்தணன்- பிரமனுடைய, பணியனுகி — உத்தரவு பெற்றவனுய், நின்கோல் — உனதாக் ஞையை, நிலைத்திலன் — அசட்டை செய்கிறான், என — இந்த யமனென்று, உலகம் — இந்த இலங்காபுரியார், கூறலும் — சொல்லும்போது, நீல்நிறத்து- கரிய நிறத்தையுடைய, இராவணன் - இலங்கேசனது, முனிவு — கோப

த்தை, நீக்குவான் — தணிப்பதாகிய காலனை — அந்த யமனை, காலினில் — கால்களிலும், கையினில் — கைகளிலும், கட்டினர் — பாசத்தாற் கட்டிப்பிடித்துக் கொண்டு வந்தவர்கள்—எ-று. காலனுடைய காலிலே பாசத்தாலே தங்கள் கையாற் கட்டினரெனவுமாம். 22

மலைகளைநகுந்தடமார்பர்மால்கடல்
அலைகளைநகுநெடுந்தோளரந்தகன்
கொலைகளைநகுநெடுங்கொலையர்கொல்லனூ
துலைகளைநகுமனலுமிழுங்கண்ணினர்.

இ-ள். மலைகளை — பெரிய மலைகளையும், நகும் — இகழ்வதான, தடமார்பர் - பெரிய மார்புள்ளவர்கள், மால்கடல் — பெரிய கடல்களின், அலைகளை - பெரிய அலைகளையும், நகும் — இகழ்வதான, நெடுந்தோளர் — நீண்ட தோள்களுள்ளவர்கள், அந்தகன் — யமனுடைய, கொலைகளை — கொல்லுஞ்செய்கைகளை, நகும் — இகழ்வதான, நெடும் — நெடிதான, கொலையர் - கொலைத்தொழிலில் வல்லவர்கள், கொல்லன் - கருமகன், ஊது — ஊதுகிற, உலைகளை - உலைநெருப்பையும், நகும் — இகழ்வதான, அனல் — நெருப்பை, உமிழும்-சிந்துகிற, கண்ணினர் — கண்களுள்ளவர்கள்—எ-று. 23

தோல்கிளர்திசைதொறுமுலகைச்சுற்றிய
சால்கிளர்முழங்கெரிதழங்கியேறினும்
கால்கிளர்தோங்கினுங்காலங்கையுற
மால்கடல்கிளரினுஞ்சரிக்கும்வன்மையார்.

இ-ள். தோல்கிளர் — யானைகள்நிற்கிற, திசைதொறும் — திக்குகளெல்லாம், உலகை—உலகத்தை, சுற்றிய — சூழ்வதாக, சால்கிளர் - மிகவுமெரிகிற, முழங்கு - ஒலியைக்கொண்ட, எரி — நெருப்பு, தழங்கி — கொதித்து, ஏறினும் — அதிகரித்தபோதிலும், கால்கிளர்ந்து — பிரசண்டவாயு மேன்மேலாகி, ஓங்கினும் — உயர்ந்தாலும், காலம் — யுகமுடிவு, கையுற — சிறியதாக, மால்கடல் — பெரியகடல்கள், கிளரினும் — பொங்கினபோதும், சரிக்கும்- எப்போதும்போற் சஞ்சரிப்பதான, வன்மையார் — திடமுள்ளவர்கள்-எ-று.

இவ்வகையனைவருமெழுந்ததானையர்
மொய்கிளர்தோரணமதனைமுற்றினர்
கையொடுகையுறவணியுங்கட்டினர்
ஐயனுமவர்நிலையமையநோக்கினன்.

இ-ள். இவ்வகை - இப்படிப்பட்டவர்களான, அனைவரும் — எல்லாரும், எழுந்த — கூடத்தொடர்ந்த, தானையர் — சேனைகளையுடையவராகி, மொய்கிளர் — பலங்கொண்டுநிற்கிற, தோரணமதனை — தோரணகம்பத்தினருகே, முற்றினர் — வந்து கூடினார்கள், கையொடு — கைகளுடனே, கையுற-கைகள் சேர, அணியும் - வகுப்பும், கட்டினர் - வகுத்தார்கள், ஐயனும்-அனுமாரும்,

அவர்நிலை — அந்த ராக்ஷதகூட்டத்தாருடைய திடசக்தியை, அமைய — பொருந்த, நோக்கினன் — பார்த்தார்—எ-று. கையொடுகையுறுதல்-வகுப்போடு வகுப்புச்சேர்ந்துநிற்றல். 25

அரக்கரதாற்றலுமளவில்சேனையின்
தருக்குமம்மாருதிதனிமைத்தன்மையும்
பொருக்கெனநோக்கியபுரந்தராதியர்
இரக்கமுமவலமுந்துளக்குமெய்தினர்.

இ-ள். அரக்கரது — அந்த ராக்ஷதர்களுடைய, ஆற்றலும் - சாமர்த்தியமும், அளவில் — கணக்கில்லாத, சேனையின்-சேனைகளினுடைய, தருக்கும்-மனக்களிப்பும், அம்மாருதி - அந்த அனுமாருடைய, தனிமைத்தன்மையும்-ஒருவரான நிலையும், பொருக்கென — திடுக்கென்று, நோக்கிய — கண்ட, புரந்தராதியர் - இந்திராதி தேவர்கள், இரக்கமும் — காருண்ணியமும், அவலமும் — துன்பமும், துளக்கும் — பயமும், எய்தினர் — அடைந்தார்கள், இரக்கம் — அழுதிறங்கலெனவாம்—எ-று. 26

இற்றனரரக்கரிப்பகலுளேயெனக்
கற்றுணர்மாருதிகளிக்குஞ்சிந்தையான்
முற்றுறச்சுலாவியமுடிவிறுனையைச்
சுற்றுறநோக்கித்தன்றோளைநோக்கினன்.

இ-ள். இற்றனரரக்கர் — ராக்ஷதர்களெல்லாம் அழிந்தார்கள், இப்பகலுளே — இந்த ஒருநாளுக்குள்ளே, என — என்று, கற்றுணர் — எல்லாங்கற்றறிந்த, மாருதி - அனுமார், களிக்கும் — சந்தோஷிப்பதான, சிந்தையான்-மனமுடையவராய், முற்றுற - தம்மைமுழுதும், சுலாவிய — சூழ்ந்த, முடிவில் - கணக்கிறந்த அழிவுபடாத, தானையை — சேனைகளை, சுற்றுற — சுற்றிலும், நோக்கி — பார்த்து, தன் — தம்முடைய, தோளை - புஜங்களையும், நோக்கினன் — பார்த்தார்—எ-று. 27

புன்றலைக்குரங்கிதுபோலுமாமலர்
வென்றதுவிண்ணவர்புகழைவேரொடும்
தின்றவல்லரக்கரைத்திருகித்தின்றதால்
என்றனரயிர்த்தனர்நிருதரெண்ணிலார்.

இ-ள். புன்றலை — அல்ப விஷயமான, குரங்கு - குரங்குருவமாகிய, இது போலுமால் — இதுவே ஆமல்லவோ, அமர்வென்றது — சண்டையிலே ஜயங்கொண்டது, விண்ணவர்புகழை — தேவர்கள் கீர்த்தியை, வேரொடுந்தின்ற, வேரோடழித்த, வல்லரக்கரை - வலியராக்ஷதர்களை, திருகித்தின்றது - தலைகளைத் திருகியழித்தது, என்றனர் — என்று நினைத்தார்கள், அயிர்த்தனர்- இது இவ்வளவுசெய்ய வல்லதாவென்றுஞ் சந்தேகித்தார்கள், நிருதர் — ராக்ஷதர்கள், எண்ணிலார் — நினைவு பிசகினார்கள்—எ-று. 28

ஆயிடையநுமனுமமரர்கோனகர்
வாயினின்றவ்வழிகொணர்ந்துவைத்தமாச்
சேயொளித்தோரணத்தும்பர்ச்சேணெடு
மீயுயர்விசும்பையுங்கடக்கவீங்கினன்.

இ-ள். ஆயிடை — அப்போது, அனுமானும் — சிறிய திருவடியானவர், அமரர்கோன் — இந்திரனுடைய, நகர்வாயினின்று — பட்டணத்துக்கு முன்னிடத்தே நிற்கலாய், அவ்வழி-இராக்காலத்தவ் விலங்கையிலே, கொணர்ந்து வைத்த — கொண்டுவந்துவைத்த, தானமா — பெரிய, சேயொளி — சிவந்த ஒளியைக்கொண்ட, தோரணத்தும்பர் — தோரணகம்பத்தின்மேலே, சேணெடு — மிகவுமுயரமாய், மீயுயர் — மேன்மேலான, விசும்பையும் — ஆகாயத்தையும், கடக்க — கடந்துசெல்வதாக, வீங்கினன் — பருத்தார்—எ-று. தோரணகம்பத்தின்மேலே தானேநின்று வளர்ந்தாரென்க. 29

வீங்கியவீரனைவியந்துநோக்கிய
தீங்கியலரக்கருந்திருகினர்சினம்
வாங்கியசிலையினர்வழங்கினர்படை
ஏங்கியசங்கினமிடித்தபேரியே.

இ-ள். வீங்கிய — அப்படிவளர்ந்த, வீரனை — அனுமானை, வியந்து - அதிசயித்து, நோக்கிய — பார்த்த, தீங்குஇயல் - தீயசெய்கையையுடைய, அரக்கரும் ராக்ஷதர்களும், சினந்திருகினர் — கோபமிகுந்தார்கள், வாங்கியசிலையினர் — வில்லைவளைத்தவர்களாய், படைவழங்கினர் — அம்புகளை விட்டார்கள், ஏங்கினசங்கினம் - சங்குகள் முழங்கலாயின, பேரி — முரசங்கள், இடித்த - அதிரலாயின—எ-று. 30

எறிந்தனரெய்தனரெண்ணிறந்தன
பொறிந்தெழுபடைக்கலமரக்கர்போக்கினர்
செறிந்தனமயிர்ப்புறந்தினவுதீர்வுறச்
சொறிந்தனவெனவிருந்தையன்றூங்கினன்.

இ-ள். எறிந்தனர் — சிலரெறிந்தார்கள், எய்தனர் — சிலரெய்தார்கள், எண்ணிறந்தன — அளவில்லாதவைகளாய், பொறிந்து — பொறிகளுண்டாகி, எழு — கிளருகின்ற, படைக்கலம் — அஸ்திரங்களை, அரக்கர் — ராக்ஷதர்கள், போக்கினர் — செல்லவிட்டார்கள், செறிந்தன — அவைகள் மேலேபடப்பட, மயிர்ப்புறம் — மயிர்களுள்ள உடம்பெல்லாம், தினவுதீர்வுற-நமைச்சல்போக, சொறிந்தனவென — சொறிந்தாற்போலாக, இருந்து — சுகமாகக்கொண்டு, ஐயன் — அனுமார் சற்றுநேரம், தூங்கினன் — நித்திரைசெய்தார்—எ-று. 31

உற்றுடன்றரக்கருமுருத்துடற்றினர்
செற்றுறநெருக்கினர்செருக்குஞ்சிங்கையர்

மற்றையர்வரும்பரிசிவரைவல்விரைந்
தெற்றுவெனெனவெழுவநுமனேந்தினன்.

இ-ள். உற்று — கிட்டநெருங்கி, உடன்று-கோபங்கொண்டு, அரக்கரும்-ராக்ஷதர்களெல்லாம், உருத்து — ஆக்கிரமித்து, உடற்றினர் — சண்டைசெய்தார், செற்று - அநேகமாயிரம்சித்து, உறநெருக்கினர் — மிகவுநெருக்கினார்கள், செருக்கும் — களிப்புக்கொண்ட, சிந்தையர் — மனமுள்ளவர்கள், மற்றையர் — அவர்கள், வரும்பரிசு - இப்படி வரும்போது, இவரை - இவர்களையெல்லாம், வல்விரைந்து — மிகவும் சீக்கிரத்திலே, எற்றுவெனென - அடிக்கிறேனென்று, எழு - எழுத்தடியை, அனுமன்-அனுமார், ஏந்தினன் - கையிலேகொண்டார்—எ-று. 32

ஊக்கியபடைகளுமுருத்தவீரரும்
தாக்கியபரிகளுந்தடுத்ததேர்களும்
மேக்குயர்கொடியுடைமேகமாலைபோல்
நூக்கியகரிகளும்புரளநூக்கினன்.

இ-ள். ஊக்கிய — அவர்கள்விட்ட, படைகளும்-அஸ்திரசஸ்திரங்களும், உருத்த — கோபங்கொண்டுவந்த, வீரரும் — வீரர்களும், தாக்கிய — மோதின, பரிகளும் — குதிரைகளும், தடுத்த - தடைசெய்கிற, தேர்களும் — இரதங்களும், மேக்கு — மேலே, உயர் — உயர்ந்த, கொடியுடை - துவசங்களையுடைய, மேகமாலைபோல் - மேககூட்டங்கள்போல், நூக்கிய - தம்மைக் கீழேதள்ளுவதான, கரிகளும் — யானைகளும், புரள - சாவ அழிய, நூக்கினன் - அடித்துத்தள்ளினார்—எ-று. 33

வார்மதக்கரிகளின்கோடுவாங்கிமாத்
தேர்படப்புடைக்குமத்தேரின்சில்லியால்
வீரரையுருட்டுமவ்வீரர்வாளினால்
தாருடைப்புரவியைத்துணியத்தாக்குமால்.

இ-ள். வார் — நீண்ட, மதக்கரிகளின் — மதயானைகளினுடைய, கோடு-கொம்புகளை, வாங்கி - பிடுங்கி, மாத்தேர்பட — குதிரைகட்டின தேர்கள் விழ, புடைக்கும் — அடிப்பார், அத்தேரின் — அந்த ரதங்களினுடைய, சில்லியால் — உருளைகளாலே, வீரரை — வீரர்களை, உருட்டும் — உருளப்பண்ணுவார், அவ்வீரர் — அந்த வீரர்களுடைய, வாளினால்-கத்திகளாலே, தாருடை-கிங்கிணிமாலைகளுள்ள, புரவியை — குதிரைகளை, துணிய — துண்டாக, தாக்கும் — வெட்டுவார்—எ-று. 34

இரண்டுதேரிரண்டுகைத்தலத்துமேந்திவே
றிரண்டுமால்யானைபட்டுருளவெற்றுமால்
இரண்டுமால்யானைகையிரண்டினேந்திவே
றிரண்டுபாலினும்வரும்பரியையெற்றுமால்.

இ-ள். இரண்டுதேர் — இரண்டுதேரை, இரண்டு கைத்தலத்தும் — இரண்டு கைகளிலும், ஏந்தி — கொண்டு, வேறு — வேறான, இரண்டு மால்யானை - இரண்டு பெரிய யானைகள், பட்டுருள — செத்துவிழ, எற்றும் - அடிப்பார், இரண்டு மால்யானை — இரண்டு பெரிய யானைகளை, கையிரண்டினேந்தி - இருகையிலுங்கொண்டு, வேறு — வேறாக, இரண்டுபாலினும்வரும் — இருபுறத்திலும் வருகிற, பரியை - குதிரைகளை, எற்றும் — அடிப்பார் — எ-று.

மாயிருநெடுவரைவாங்கிமண்ணினிட்
டாயிரந்தேர்படவரைக்குமாலழித்
தாயிரங்களிற்றையோர்மரத்தினாலடித்
தேயெனுமாத்திரையெற்றிமுற்றுமால்.

இ-ள். மாயிரு — மிகப்பெரிதான, நெடுவரை - நீண்டமலைகளை, வாங்கி - பிடுங்கி, ஆயிரந்தேர்பட — ஆயிரந்தேர்களழிய, மண்ணினிட்டு — பூமியிலே தள்ளி, அரைக்கும் — அரைப்பார், அழித்து — அப்படியழிவுசெய்து, ஆயிரங்களிற்றை — ஆயிரம்யானைகளை, ஓர்மரத்தினால் — ஒருமரத்தாலே, அடித்து - எற்றி, ஏயெனுமாத்திரை - உம்மென்னுமளவில், எற்றி — பின்னுமடித்து, முற்றும் - முடிவுசெய்வார் — எ-று. 36

உதைக்கும்வெங்கரிகளையுழக்குந்தேர்களை
மிதிக்கும்வன்புரவியைத்தேய்க்கும்வீரரை
மதிக்கும்வல்லெழுவினலரைக்குமண்ணிடைக்
குதிக்கும்வன்றலையிடைக்கடிக்குங்குத்துமால்.

இ-ள். வெங்கரிகளை - கோபங்கொண்ட யானைகளை, உதைக்கும் - உதைப்பார், தேர்களை — இரதங்களை, உழக்கும் — மிதிப்பார் குழப்புவார், வன்புரவியை — வலிய குதிரைகளை, மிதிக்கும் - மிதிப்பார், வீரரை — வீரர்களை, தேய்க்கும் — தேய்ப்பார், மதிக்கும் — மதிப்புள்ள, வல்லெழுவினால் — வலிய எழுத்தடியினாலே, அரைக்கும் - குழவியாகக்கொண்டரைப்பார், மண்ணிடை - மண்ணிலே, வன்றலையிடை — வலிய தலைகள்மேலே, குதிக்கும் — குதிப்பார், கடிக்கும் — கடிப்பார், குத்தும் — குத்துவார் — எ-று. 37

விசையின்மான்றேர்களுங்களிறும்விட்டகன்
றிசையுமாகாயமுஞ்செறியச்சிந்துமால்
குசைகொள்பாய்பரியொடுங்கொற்றவேலொடும்
பிசையுமாலரக்கரைப்பெருங்கரங்களால்.

இ-ள். விசையின் — வேகத்தினையுடைய, மான்றேர்களும் — குதிரைத்தேர்களும், களிறும் — யானைகளும், விட்டு — உயரச்செல்லவீசி, அகன்றிசையும் ஆகாயமும் — அகன்றதிக்குகளும் ஆகாசமும், செறிய — நெருங்க, சிந்தும் — சிதறுவார், குசைகொள் — கடிவாளங்கொண்ட, பாய்பரியொடும் - பாயும்குதிரைகளுடனே, கொற்றவேலொடும் — வெற்றிவேல்களுடனே, பெ

ருங்கரங்களால் – பெரியகைகளாலே, அரக்கரை - அரக்கர்களை, பிசையும்-பிசைவார்—எ-று. 38

தீயுறுபொறியுடைச்செங்கண்வேங்கைமா
மீயுறத்தடக்கையால்வீரன்வீசுதோ
றாய்பெருங்கொடியனகடலினாழ்வன
பாயுடைநெடுங்கலம்படுவபோன்றவே.

இ-ள். தீயுறு – நெருப்பிலே பொருந்தின, பொறியுடை — பொறிகளையுடைய, செங்கண் – சிவந்தகண்களோடு, வேங்கை-புலியோன்ற, மாமீயுற-குதிரைகள் மேலேசெல்ல, தடக்கையால் – நீண்டகைகளாலே, வீரன்-அனுமார், வீசுதோறு – எறியும்போது, ஆய் –'திசைகளை ஆராயத்தக்க, பெருங்கொடியன – பெரிய கொடிகளையுடையனவாக, கடலினாழ்வன – கடலிலே போய் விழுகின்றன, பாயுடை — அவைகள் பாய்மரத்தையுடைய, நெடுங்கலம் – உயர்ந்தகப்பல்கள், படுவபோன்ற – செல்லுவனபோலிருந்தன-எ-று. கப்பல்களழுந்துவன போலெனவுமாம். 39

தாரொடுமுருளொடுந்தடக்கையாற்றனி
வீரன்விட்டெறிந்தனகடலின்வீழ்வன
வாரியினெழுஞ்சுடர்க்கடவுள்வானவன்
தேரினைநிகர்த்தனபுரவித்தேர்களே.

இ-ள். தாரொடும் – கிங்கிணிமாலைகளுடனே, உருளொடும் - உருளைகளோடுகூடி, தடக்கையால் – நீண்டகைகளாலே, தனிவீரன் – ஒப்பில்லாத அனுமார், விட்டெறிந்தன – தூக்கியெறிந்தவைகள், கடலின் வீழ்வன – கடலிலே விழுகின்றன, வாரியின் - கடலின்மேலே, எழும் — உதயமாகுகிற, சுடர் – சோதிவடிவான, கடவுள்வானவன் - தெய்வமாகிய சூரியனது, தேரினை — தேரை, நிகர்த்தன - ஒப்பாயின, புரவித்தேர்கள் - குதிரைத்தேர்கள்—எ-று. 40

மீயுறவிண்ணிடைமுட்டிவீழ்வன
வாய்பெருந்திரைக்கடலழுவத்தாழ்வன
ஓய்வனபுரவிவாயுதிரஞ்சால்வன
வாயிடையெரியுடைவடவைபோன்றவே.

இ-ள். மீயுற - மேலேமிகவும், விண்ணிடை — ஆகாயத்திலேசென்று, முட்டி - மோதி, வீழ்வன – விழுகிறவைகள், ஆய் — அந்த, பெருந்திரை-பெரிய அலைகளையுடைய, கடலழுவத்து – கடற்பள்ளத்திலே, ஆழ்வன-அழுந்துகிற, ஓய்வன — ஓய்ந்த, புரவிவாய் — குதிரைகளின்வாயிலே, உதிரஞ்சால்வன-ரத்தங்கள் சிந்துகிறவை எப்படியிருக்கிறதென்றால், வாயிடை-வாயிலே, எரியுடை – நெருப்பையுடைய, வடவை — வடவாக்கினியை, போன்ற-ஒப்பாயின—எ-று. 41

வரிந்துறவல்லிதிசுற்றிவாலினால்
விரிந்துறவீசலிற்கடலின்வீழ்குநர்
திரிந்தனர்செறிகயிற்றரவினாற்றிரி
அருந்திறன்மந்தரமனையராயினர்.

இ-ள். வல்லிதின் – பலமாக, உறவரிந்து – மிகவும்வரிந்து, சுற்றி-சுழற்றி, வாலினால் – வாலாலே, விரிந்துற – மிகவும்விரிதலாய், வீசலில் – வீசுதலாலே, கடலின் - கடலிலே, வீழ்குநர் - விழுகிறவர்கள், திரிந்தனர்-சுழன்றார்களாய், செறி – இறுகுகிற, கயிற்று - கயிறுபோன்ற, அரவினான்-பாம்பினாலே, திரி – சுழலுகிற, அருந்திறல் – அரிதான பலத்தையுடைய, மந்தரம் – மந்தரகிரியை, அனையர் – ஒத்தவர், ஆயினர் – ஆனார்கள்—எ-று.

வீரன்வன்றடக்கையாலெடுத்துவீசிய
வார்மதகரியினிற்றேரின்வாசியின்
மூரிவெங்கடல்புகக்கடிதின்முந்தின
ஊரின்வெங்குருதியாறீர்ப்பவோடின.

இ-ள். வீரன் – அனுமார், வன்றடக்கையால் – வலிதாய் நீண்டகைகளாலே, எடுத்து வீசிய – எடுத்தெறிந்த, வார் – ஒழுகுகின்ற, மதம் - மதத்தையுடைய, கரியினில் – யானையிலும், தேரில் – தேரிலும், வாசியின் – குதிரையிலும், மூரிவெங்கடல் - பெரிதாய்க் கொதிப்புள்ளகடலிலே, புக-போய் விழ, கடிதின் – மிகுவிரைவிலே, முந்தின – முன்சென்றன, ஊரின் – அவ்வூரிலேபெருகின, வெங்குருதியாறு – கொதிப்பான ரத்தப்பிரவாகம், ஈர்ப்ப ஓடின – பிணங்களை யிழுப்பனவாக ஓடியகுருதியாறு கடிதின்முந்தின—எ-று. 43

பிறைக்கடையெயிற்றினபிலத்தின்வாயின
கறைப்புனல்பொறிகளோடுமிழுங்கண்ணின
உறைத்தபுபடையினவுதிர்ந்தயாக்கைகள்
மறைத்தனமகரதோரணத்தைவானுற.

இ-ள். பிறை – பிறைபோல், கடை எயிற்றின - கடைவாய்ப்பற்களையும், பிலத்தின் - குகைபோலும், வாயின – வாயையும், கறைப்புனல் – ரத்தஜலத்தை, பொறிகளோடு-நெருப்புப் பொறிகளுடனே, உமிழுங்கண்ணின - சிந்துகிற கண்களையும், உறைத்தபுபடையின் – உறையினீங்கின வாள்களைப்பிடித்த கைகளுமுள்ள, உதிர்ந்தயாக்கைகள் – சிந்தின சரீரங்கள், வான் உற – ஆகாயத்தைப் பொருந்துவனவாக, மகரதோரணத்தை – அந்தத்தோரணகம்பத்தை, மறைத்தன – மூடலாயின—எ-று. தோரணகம்பத் துயர்வினளவும் பிணங்களுயர்ந்தன என்பதாம். 4

குன்றுளமாமுளகுலங்கொள்பெரெழு
ஒன்றலபலவுளவுயிருண்பானுள

அன்றினர்பலருளரையன்கையுள
பொன்றுவதல்லதுபுறத்துப்போவரோ.

இ-ள். குன்றுள - மலைகளுமுள்ளன, மரமுள - மரங்களுமுள்ளன, நுலங்கொள் — கூட்டங்கொண்ட, பேரெழு — பெரிய எழுத்தடிகள், ஒன் றலஒன்றேயல்லது, பலவுள - அநேகங்களுள்ளன, உயிருண்பான் - உலகத்துள்ளவுயிர்களை யுண்ணுதற்கு, உள — உளராகிய, அன்றினர் - பகைவரான அரக்கரும், பலருளர் - அநேகருண்டு — ஐயன் — அனுமாருடைய, கையுள் - கைகளுமுளவாயின ஆதலால், பொன்றுவது - இறிவதே, அல்லது - அல்லாமல், புறத்து - வேறொருவகையில், போவரோ - அவ்வரக்கர்கள் செல்வார்களா உயிருள்ள அளவும் சண்டைபண்ணுவார்களென்பது கருத்து. 45

முழுமுதற்கண்ணுதன்முருகன்றாதைகை
மழுவெனப்பொலிந்தொளிர்வயிர்வான்றனி
எழுவினிற்பொலங்கழலரக்கரீண்டிய
குழுவினைக்களப்படக்கொன்றுநீக்கினன்.

இ-ள். முழுமுதல் — கிரம்பவும் ஆதியான, கண்ணுதல் - கண்ணைநெற்றியிலேகொண்ட - முருகன் — முருகவேளினுடைய, தாதை - பிதாவினது, கை — கையிலேகொண்ட, மழுவென — மழுவாயுதம்போல்,பொலிந்தொளிர்மிகுந்து விளங்குகின்ற, வயிரம் — வயிரக்கற்போல், வான் - பெரியதிண்மையினுலே, தனி — ஒப்பில்லாத, எழுவினில் — எழுத்தடியாலே, பொலங்கழல்பொன்னிறக்கழல்கட்டின, அரக்கர் - ராக்ஷதர்களாக, ஈண்டிய - கூடின, குழுவினை - கூட்டத்தை, களப்பட - ரணக்களத்திலேவிழ, கொன்று நீக்கினன் — கொன்று தீர்த்தார்—எ-று. 46

வேறு

உலந்தது தானையுவந்தனரும்பர்
அலந்தலையுற்றதவ்வாழியிலங்கை
கலந்ததழுங்குரலின்கடலோதை
வலந்தருதோளவரைவரும்வந்தார்.

இ-ள். உலந்தது தானை — இப்படிச்சேனைகளிறந்தது, உம்பருவந்தனர்-தேவர்கள் சந்தோஷித்தார்கள், அவ்வாழியிலங்கை — அந்தக்கடல்சூழ்ந்தவூர், அலந்து — துன்பங்கொண்டு, அலையுற்றது-அலையலாயிற்று அதுடன், அழுங்குரலின் — அழுகிற சத்தமான, கடலோதை — கடல்முழக்கமே, கலந்தது-எங்கும்பரவியது அப்போது, வலந்தரு - பலமுள்ள, தோளவர் - தோள்களையுடையவரான, ஐவரும் — ஐந்துசேனுபதிகளும், வந்தார் — அனுமார்மேல் வரலானார்கள்—எ-று. 47

ஊர்ந்தெழுசெம்புனலெக்கரிழுக்கத்
தேர்த்துணையாழியழுந்தினர்சென்றார்

ஆர்த்தனராயிரமாயிரமம்பால்
தூர்த்தனரஞ்சனைதோன்றலுநின்றான்.

இ-ள். ஈர்த்து எழு - இழுத்துக்கொண்டுபோகிற, செம்புனல் — சிவந்த ரத்தமானது, எக்கர் - பிணக் குவியல்களைப்போல், இழுக்கத்தேர் — தேரை யிழுக்க, துணையாழி-இருபுறவண்டில்களும், அழுந்தினர் — அழுந்தப்பட்டவ ராய், சென்றார் - செல்லலானவர்கள், ஆர்த்தனர் — கெர்ச்சித்தவர்களாய், ஆயிரமாயிரம் — அளவில்லாத, அம்பால் - அம்புகள்கொண்டு, தூர்த்தனர்- அவருடம்பெலா மறையச்செய்தார்கள், அஞ்சனைதோன்றலும் - ஆஞ்சனே யர், நின்றான் — அதற்கு நேர்நின்றவராய்—எ-று. 48

எய்தகடுங்கணையாவையுமெய்தா
நொய்தகலும்படிகைகளினூறாப்
பொய்தகடொன்றுபொருந்திநெடுந்தேர்
செய்தகடும்பொறியொன்றுசிதைத்தான்.

இ-ள். எய்தகடுங்கணை-அவர்களெய்த கடுமையுள்ளஅம்புகள், யாவையு மெய்தா — ஒன்றுந்தம்மேல் விழாமல், நொய்து — விரைவிலே, அகலும்படி- நீரும்படியாக, கைகளில் — தங்கைகளாலே, நூறு — அழித்து, பொய்து- துளைகளுள்ளதாக, அகடு — அச்சின்வயிறு நடுமுழுதும், ஒன்றுபொருந்தி- ஒருதன்மையாகச்சேர்ந்து, நெடுந்தேர் — நெடியதேருக்கு, செய்த — செய்தி ருக்கிற, கடும் — வேகமான, பொறியொன்று — ஒரு சூத்திரத்தை, சிதைத் தான் - அழித்தார்—எ-று. 49

உற்றுறுதேர்சிதையாமுனுயர்ந்தான்
முற்றினவீரனைவானின்முனிந்தான்
பொற்றிரணீளெழுவொன்றுபொறுத்தான்
எற்றினனஃதவன்வில்லினினேற்றான்.

இ-ள். உற்றுறு - நடந்துகொண்டுவந்த, தேர் — அந்தத்தேரினது சூத் திரம், சிதையாமுன் — கெடுமுன்னே, உயர்ந்தான்-மேலேயெழுந்தானொரு வன், முற்றின — அப்படிமேலேபோன, வீரனை - அவனை, வானின் — ஆகா யத்திலேதானே, முனிந்தான்-கோபங்கொண்டவராகி,பொற்றிரள்-பொன் திரண்டாற்போன்ற, நீளெழுவொன்று — ஒரு நீண்ட எழுத்தடியை, பொறு த்தான் - தாங்கி, எற்றினன் — அடித்தார், அஃது — அவ்வடியை, அவன் வில்லினில் - அவன்தன்வில்லாலே, ஏற்றான் - தாங்கினான்—எ-று. 50

முறிந்ததுமூரிவிலம்முறி யகொ
டெறிந்தவரக்கனேர்வெற்பையெடுத்தான்
அறிந்தமனத்தவனவ்வெழுவேகொ
டெறிந்தவரக்கனையின்னுயிருண்டான்.

இ-ள். மூரிவில் - அந்தப்பெரியவில் அப்படித்தாங்கினதினலே, முறிந்தது - முறிந்துபோயிற்று, அம்முறியேகொடு - அந்தவில்லினது துண்டையேகையாலே, எறிந்து - அனுமார்மேலே யெறிந்தபின்பு, அவ் அரக்கன் - அந்தராக்ஷதன், ஓர்வெற்பை - ஒருமலையை, எடுத்தான் - கையிலேகொண்டான், அறிந்த - அதுதெரிந்த, மனத்தவன் - மனமுள்ள அனுமார், அவ் வெழுவேகொடு - அந்த எழுத்தடியாலேயே, எறிந்து - அடித்து, அவ்வரக்கனை - அந்தராக்ஷதனுடைய, இன் உயிர் - இனிதான உயிரை, உண்டான் - போக்கினர்—எ-று. 51

ஒழிந்தவர்நால்வருமூழியுருத்த
கொழுந்துறுதீயெனவெய்துறுகொட்பர்
பொழிந்தனர்வாளிபுகைந்தனகண்கள்
விழுந்தனசோரியவ்வீரன்மணித்தோள்.

இ-ள். ஒழிந்தவர் - மற்றையரான, நால்வரும் - நாலுபேரும், ஊழியுருத்த - யுகமுடிவிலே சினவுகிற, கொழுந்துறு - சுவாலையுள்ள, தீயென - நெருப்புப்போல், வெய்துறு - கொதிப்புள்ள, கொட்பர் - சூழ்தலானவர்கள், கண்கள்புகைந்தன - கண்கள் புகையுள்ளனவாக, வாளிபொழிந்தனர் - அம்பெய்தார்கள், அவ்வீரன் - அந்த அனுமாருடைய, மணித்தோள் - அழகிய தோள்களிலிருந்து, சோரிவிழுந்தன - ரத்தமொழுகின—எ-று. 52

ஆயிடைவீரனுமுள்ளமழன்றுன்
மாயவரக்கர்வலத்தையுணர்ந்தான்
மீயெரியுய்ப்பதொர்கற்செலவிட்டான்
தீயவரச்சிலையைப்பொடிசெய்தார்.

இ-ள். ஆயிடைவீரனும் - அப்போது அனுமார், உள்ளமழன்றுன் - மனங் கொதித்தவராய், மாய அரக்கர் - மாயை செய்யவல்ல ராக்ஷதர்கள், வலத்தை - சௌரியத்தை, உணர்ந்தான் - தெரிந்தாராய், மீ - அவர்கள் மேலே, எரியுய்ப்பது - நெருப்புச்சிந்துவதான, ஓர்கல் - ஒருமலையை, செலவிட்டான் - பட எறிந்தார், தீயவர் - அந்தக் கொடியவர்கள், அச்சிலையை - அந்தக்கல்லை, பொடிசெய்தார் - தூளாக்கினர்கள்—எ-று. 53

தொடுத்ததொடுத்தசரங்கடுரந்த
அடுத்தகன்மார்பினழுந்தியகன்ற
படற்றெழிலான்விடுதேரொடுநொய்தின்
எடுத்தொருவன்றனைவிண்ணினெறிந்தான்.

இ-ள். தொடுத்த தொடுத்த - அவர்கள் விட்டவிட்ட, சரங்கள் - அம்புகளும், துரந்த - எறிந்த ஆயுதங்களும், அடுத்து - வந்து, அகல் - அனுமாருடைய அகன்ற, மார்பினழுந்தி - மார்பிலே பட்டுப்பட்டு, அகன்ற - நீங்கி உதிர்ந்தன, மிடற்றெழிலான் - அவரில் பலச்செய்கையாளுக, விடு-

செலுத்துகிற, தேரோடு - இரதத்துடனே, நொய்தின் - விரைவிலே, எடுத்து - தூக்கி, ஒருவன்றனை - ஒருராக்ஷதனை, விண்ணின் — ஆகாயத்திலே, எறிந்தான் — வீசினர்—எ-று. 54

ஏய்ந்தெழுதேரிமிழ்விண்ணினையெல்லாம்
நீந்தியதோடிகிமிர்ந்ததுவேகம்
ஓய்ந்ததுவீழ்வதன்முன்னுயர்பாரில்
பாய்ந்தவன்மேலுடன்மாருதிபாய்ந்தான்.

இ-ள். ஏய்ந்தெழு — எறியச்சொல்லுகிற, தேர் — அந்தத் தேரானது, இமிழ் - சத்திக்கின்ற, விண்ணினை யெல்லாம் — ஆகாயமுழுதும், நீந்திய தோடி — விரைந்து கடந்து, கிமிர்ந்தது — உயரப்போனது, வேகமோய்ந்தது - பின்பு வேகங்குறைந்ததாய், வீழ்வதன்முன் - விழுதற்கு முன்னே, உயர் பாரில் — உயர்ந்த ஒரு மேட்டிலே, பாய்ந்தவன்மேல் - குதித்த அரக்கன் மேலே, உடன் — உடனே, மாருதிபாய்ந்தான் — அனுமார்பாய்ந்தார்—எ-று.

மதித்தகளிற்றினின்வாளரியேறு
கதித்ததுபாய்வதுபோற்கதிகொண்டு
குதித்தனன்மால்வரைமேனிகுழம்ப
மிதித்தனன்வெஞ்சினவீரருள்வீரன்.

இ-ள். மதித்த — மதங்கொண்டுயர்ந்த, களிற்றினின் — ஒரு யானை மேலே, வாளரியேறு - நகாயுதமுள்ள ஒரு ஆண் சிங்கம், கதித்தது - வேகங் கொண்டதாக, பாய்வதுபோல் — குதித்தாற்போல், கதிகொண்டு - வேகங் கொண்டு, குதித்தனன் - குதித்தார், மால்வரை - பெரியமலைபோன்ற, மேனி — அவனுடம்பு, குழம்ப — குழம்புதலாக, மிதித்தனன் - துவைத்தார், வெஞ்சினம் — வெவ்விய கோபமுள்ள, வீரருள் — வீரரில், வீரன் — அதிவீரனை அனுமார்—எ-று. 56

மூண்டசினத்தவர்மூவர்முனிந்தார்
தூண்டியதேரர்சரங்கடுறந்தார்
வேண்டியவெஞ்சமம்வேறுவிளைப்பார்
யாண்டினியேகுதியென்றெதிர்சென்றார்.

இ-ள். மூண்ட — மேன்மேலான, சினத்தவர் — கோபமுள்ளவர்களாகிய, மூவர் - மற்றமூவரும், முனிந்தார் — கோபங்கொண்டு, தூண்டியதேரர் - தேர்களைச் செலுத்திவந்து, சரங்கள் துரந்தார் - அம்புகளை எய்தார்கள், வேண்டிய — பின்னும் வேண்டினவளவு, வெஞ்சமம் — வெவ்வியசண்டைகள், வேறு விளைப்பார் — வெவ்வேறே செய்வார்களாய், யாண்டு இனி - இனி எங்கே நீ, ஏகுதியென்று — போகிறாயென்று, எதிர் சென்றார் — முன்னேவந்தார்கள்—எ-று. 57

திரண்டுயர்தோளிணையஞ்சனைசிங்கம்
அரண்டருவிண்ணுறைவார்களுமஞ்ச
முரண்டருதேரவையாண்டொருமூன்றின்
இரண்டுமிரண்டுகையிற்கொடெழுந்தான்.

இ-ள். திரண்டு - திரட்சியாய், உயர் - உயர்ந்த, தோளிணை - தோள் களைக்கொண்ட, அஞ்சனை - அஞ்சனாதேவி, சிங்கம் - புத்திரனான வானர சிரேஷ்டர், அரண்தரு — தம்மைக்காத்தல் செய்யவேண்டுகிற, விண் - ஆகா யத்திலே, உறைவோர்களும் - வாசஞ்செய்கிற தேவர்களுங்கூட, அஞ்ச- பயங்கொள்ள, முரண்தரு - பலஞ்செய்வதான, தேரவை — தேர்களாகிய அவைகள், ஆண்டு — அங்கே, ஒருமூன்றில் - மூன்றிலேஒப்பற்ற, இரண்டும்- இரண்டு தேர்களை, இரண்டுகையிற்கொடு - இரண்டு கையிலுங்கொண்டு, எழுந்தான் — மேலே கிளர்ந்தார்—எ-று. 58

தூங்கியபாய்பரிசூதருலைந்தார்
வீங்கியதோளவர்விண்ணின்விசைத்தார்
ஆங்கதுகண்டவர்போயகலாமுன்
ஓங்கியமாருதியொல்லையினுற்றான்.

இ-ள். தூங்கிய — அவ்விரண்டிலுங் கட்டின, பாய்பரி — பாயுங்குதிரை களும், சூதர் — பாகரும், உலைந்தார் — அழிந்தார்கள், வீங்கிய - அப்போது பருத்த, தோளவர் — தோள்களுள்ள அரக்கர்கள், விண்ணின் - ஆகாயத் திலே, விசைத்தார் — வேகங்கொண்டு கிளர்ந்தார்கள், ஆங்கது — அப்படி அவர்களெழுந்ததை, கண்டு—பார்த்து, அவர்போய் - அவ்விருவரும் தூர த்தேசென்று, அகலாமுன் - ஓடுதற்கு முன்னே, ஓங்கியமாருதி — வளர்ந்த அனுமார், ஒல்லையின் — விரைவிலே, உற்றான் - அவராருகேபோய்—எ-று.

காணிமிர்வெஞ்சிலைகையினிறுத்தான்
ஆனவர்தூணியும்வாளுமகைத்தான்
ஏனையவெம்படையில்லவரெஞ்சார்
வானிடைநின்றுயர்மல்லின்மலைந்தார்.

இ-ள். கால் — இரண்டுகதிகால்களுடனே, நிமிர் — உயர்வதான, வெஞ் சிலை — அவர்கள் வெவ்வியவில்லை, கையின் — தமதுகைக்கொண்டு, இறுத் தான் — ஒடித்து, ஆனவர் — அப்படியான அவ்விருவருடைய, தூணியும்- அம்புக்கூடுகளையும், வாளும் — கத்திகளையும், அகைத்தான் - ஒடித்தார், ஏனைய — அப்போது மற்ற, வெம்படை — வெவ்விய ஆயுதங்களொன்றும், இல்லவர் — இல்லாமல் அவ்விருவரும், எஞ்சார் - பலங்குறையாதவர்களாய், வானிடை நின்று - ஆகாயத்திலே நின்று, உயர் மல்லின் — உயர்ந்தமல்ல யுத் தத்தாலே, மலைந்தார் — சண்டை செய்தார்கள்—எ-று. 60

வெள்ளையெயிற்றர்கறுத்துயர்மெய்யர்
பிள்ளைவிரித்தபிலப்பெருவாயர்
கொள்ளவுருத்தடர்கோளரவொத்தார்
ஒள்ளிகல்வீரனருக்கனையொத்தான்.

இ-ள். வெள்ளை எயிற்றர் — வெண்பல்லராய், கறுத்துயர் — கறுப்பாயுயர்ந்த, மெய்யர் — சரீரமுள்ள அவ்விருவரும், பிள்ள — பிளவாக, விரித்த— திறந்த, பிலம் — குகைபோன்ற, பெருவாயர் — பெரியவாய்களுள்ளவர், கொள்ள — விழுங்க, உருத்து — கோபங்கொண்டு, அடர் — நெருங்குகின்ற, கோளரவு — இராகுக்கோள் கேதுக்கோள்களை, ஒத்தார் — ஒப்பானார்கள், ஒள் — பிரகாசமான, இகல்வீரன் — வலிமையுள்ள அனுமார், அருக்கனை ஒத்தான் — சூரியனை ஒப்பாயினார்—எ-று. 61

தாம்பெனவாலின்வரிந்துயர்தாளோ
டேம்பலிலாரிருதோள்களிறுத்தான்
பாம்பெனநீங்கினர்பட்டனர்வீழ்ந்தார்
ஆம்பனெடும்பகைபோல்பவனின்றான்.

இ-ள். தாம்பென — கயிறுபோல், வாலின் — வாலாலே, வரிந்து — வரியக்கட்டி, உயர்தாளோடு — உயர்ந்தகால்களுடனே, ஏம்பலிலார் — நல்லோருக்காகாத அவ்விருவருடைய, இருதோள்கள் — இரண்டு தோள்களையும், இறுத்தான் — ஒடித்துவிட்டார், பாம்பென — அந்த இரண்டு பாம்புகள் போல், நீங்கினர் — விலகினராகி, பட்டனர் — இறந்து, வீழ்ந்தார் — கீழே விழுந்தார்கள், ஆம்பல் — செவ்வல்லிகளுக்கு, நெடும்பகை — நெடியபகையான சூரியனை, போல்பவன் — ஒப்பான அனுமார், நின்றான் — தனியே நின்றார்—எ-று. 62

நின்றனனேனையனின்றதுகண்டான்
குன்றிடைவாவுறுகோளரிபோல
மின்றிரிவன்றலைமீதுகுதித்தான்
பொன்றியவன்புவிதேரொடுபுக்கான்.

இ-ள். நின்றனன் — சாவாது நின்றவனை, ஏனையன் — மற்றுமொருவன், நின்றது — நிற்பதை, கண்டான் — அனுமார் பார்த்து, குன்றிடை— மலைமேலே, வாவுறு — தாவுகின்ற, கோளரிபோல் — சிங்கம்போல், மின்திரி— ஒளிசுலாவுகிற அவனது, வன்றலைமீது — வலியதலைமேலே, குதித்தான்— ஒருகுதி கொண்டார், பொன்றி அவன் — அக்குதியினாலே அவன் இறந்து, புவி — பூமியிலே, தேரொடு — ஏறியிருந்த தனது தேருடனே, புக்கான்— புதைந்து போயினன்—எ-று. 63

வேறு

வஞ்சமுங்களவும்வெஃகிவழியலாவழிமேலோடி
நஞ்சினுங்கொடியராகிநவைசெயற்குரியநீரார்

வெஞ்சினவரக்கரைவரொருவனேவெல்லப்பட்ட
அஞ்செனும்புலன்களொத்தாரவனுநல்லறிவையொத்தான்.

இ-ள். வஞ்சமும் — வஞ்சனையும், களவும் — சோரமும், வெஃகி — விரும்புதலாய், வழியலா — நீதியில்லாத, வழிமேல் — வழிமேலே, ஓடி — சென்று, நஞ்சினும் — விஷத்திலும், கொடியர் ஆகி — பொல்லாதவர்களாய், நவை செயற்கு — தோஷஞ்செய்தற்கு, உரிய நீரார் — தகுந்த தன்மையுள்ளவர்கள், வெஞ்சினம் — வெவ்விய கோபமுள்ள, அரக்கர் — ராக்ஷதர்கள், ஐவர் — அஞ்சு சேனாபதிகளும், ஒருவனே — அனுமார் ஒருவராலே, வெல்லப்பட்ட — வெல்லலான, அஞ்செனும் புலன்கள் — பஞ்சவிஷயங்களையும், ஒத்தார் — ஒப்பாயினார்கள், அவனும் — அந்த அனுமார், நல்லறிவை — பரிசுத்த ஞானத்தை, ஒத்தான் — ஒப்பானார்—எ-று. 64

நெய்தலையுற்றவேற்கைநிருதரச்செருவினேர்ந்தார்
உய்தலையுற்றுமீண்டாரொருவருமில்லையுள்ளார்
கைதலைப்பூசல்பொங்கக்கடுகினர்காலனுட்கும்
ஐவருமுலந்ததன்மையனைவருமமையக்கண்டார்.

இ-ள். நெய்தலையுற்ற — நெய்யை முனையிலேகொண்ட, வேற்கை — வேலைக் கையிலேயுடைய, நிருதர் — ராக்ஷதர்களான, அச்செருவில் — இந்த யுத்தத்திலே, நேர்ந்தார் — எதிரிட்டவர்களில், உய்தலையுற்று — பிழைத்தலாகி, மீண்டாரொருவருமில்லை — திரும்பினவர்களொருவராயினுமிலர், உள்ளார் — சாவாதொழிந்தவர்கள், கைதலை — கைகளைத்தலைமேற்கொண்டு, பூசல்பொங்க — அழுகுரலதிகமாக, கடுகினர் — ஓடினார்கள், காலனுட்கும் — யமனும் அஞ்சுவதான, ஐவரும் — அந்தப் பஞ்சசேனாபதிகள், உலந்த தன்மை — அழிந்துபோனதை, அனைவரும் — எல்லாரும், அமைய — சரியாக, கண்டார் — பார்த்தார்கள்—எ-று. 65

இறுக்குறுமின்னேநம்மைக்குரங்கெனவிரங்கியேங்கி
மறுக்குறுகின்றநெஞ்சின்மாதரைவைதுநோக்கி
உறுக்குறுசொல்லரூழித்தீயெனவுலகமேழும்
சுறுக்கொளநோக்குவான்றன்செவித்தொளைதீயச்சொன்னார்.

இ-ள். குரங்கு — இனி இந்த வானரம், இன்னே — இப்பொழுதே, நம்மை — நம்மையும், இறுக்குறும் — கொன்றுவிடும், என — என்றெண்ணி, இரங்கியேங்கி — அழுது பிரலாபித்து, மறுக்குறுகின்ற — மயங்குகிற, நெஞ்சின் — மனமுள்ள, மாதரை — பெண்களையெல்லாம், நோக்கிவைது — பார்த்துத்திட்டி, உறுக்குறு — அதட்டுகிற, சொல்லர் — சொல்லையுடையவர்களாய், ஊழித்தீயென — முடிவுகாலத்தக்கினிபோல, உலகமேழும் — ஏழுலகங்களும், சுறுக்கொள — தீய்ந்துபோக, நோக்குவான்றன் — பார்க்கின்ற இராவணன், செவித்தொளை — காதுத்துவாரங்கள், தீய — தீயும்படி, சொன்னார் — போய்ச் சொன்னார்கள்—எ-று. மாதரைப்போகச்சொல்லி அதட்டுகிற. 66

தானையுமுலந்ததைவர் தலைவருஞ்சமைந்தார் தாக்கப்
போனபின் மீள்வேம்யாமேயதுவும்போர்புரிகிலாமை
வானையும்வென் றுளோரைவல்லையின் மடிய நூறி
ஏனையரின்மைசோம்பியிருந்ததக்குரங்குமென்றார்.

இ-ள். தானையும் - சேனைகளும், உலந்தது - அழிந்தது, ஐவர் தலைவரும் - அஞ்சுசேனாபதிகளும், தாக்க - அந்தக்குரங்குகொல்ல, சமைந்தார் - அப்படியேபோனார்கள், போனபின் - அவர்கள் சண்டைக்குப்போனபின்பு, மீள்வேம்யாமே - திரும்பினவர்கள் நாங்களே, அதுவும் - அந்தக் குரங்கு, போர்புரிகிலாமை - இப்போது சண்டைசெய்ய ஒருவருமில்லாமையாலே, வானையும் - இந்திரலோகத்தையும், வென்றுளோரை - வென்ற அவர்களை, வல்லையின் - விரைவிலே, மடிய நூறி - அழியக்கொன்று, ஏனையர் - இனி வருவார், இன்மை - இல்லாமையாலே, சோம்பியிருந்தது - சோம்பலாயிருக்கின்றது, அக்குரங்கு என்றார் - அந்தக்குரங்குயென்று சொன்னார்கள் - எ-று. உம் அசை. 67

பஞ்சசேனாபதிகள்வதைப்படலமுற்றிற்று

ஆக படலம் 10 - க்கு திருவிருத்தம் - 933

கம்பநாட்டாழ்வார் திருவடிகளே சரணம்

பதினோராவது

# அட்சகுமாரன் வதைப்படலம்

கேட்டலும்வெகுளிவெந்தீக்கிளர்ந்தெழுமுயிர்ப்பனாகித்
தோட்டலர்தெரியன்மாலைவண்டொடுஞ்சுருக்கொண்டேற
ஊட்டரக்குண்டபோலுநயனத்தானொருப்பட்டானைத்
தாட்டுணைதொழுதுமைந்தன்றடுத்திடைதருதியென்றான்.

இ-ள். கேட்டலும் — கேட்டவுடனே, வெகுளி — கோபமாகிய, வெந்தீ- வெவ்விய நெருப்பு, கிளர்ந்து — மிகுந்து, எழும் — எழாநின்ற, உயிர்ப்பனாகி- சுவாசமுள்ளவனாய், தோடு அலர் — இதழ்களுடன் விகசிக்கின்ற, தெரியல்- மாலையிலேமொய்த்த, மாலைவண்டொடும் - ஒழுங்கான வண்டுகளுடனே, சுருக்கொண்டு — சுரீரென்று, ஏற — அச்சுவாசம்பட, ஊட்டு - ஒன்றிலே பூசப்படுகிற, அரக்குண்டபோலும் — அரக்கைப் பூசினாற்போன்ற, நயனத்தான் - கண்களுள்ளவனாகி, ஒருப்பட்டானை — சண்டைக்குப்போக எழுந்த இராவணனைக்கண்டு, தாள் துணை — அவனதிரண்டுபாதங்களையும், தொழுது- வணங்கி, மைந்தன் — புத்திரனான அட்சன், இடைதடுத்து — அவனை அவ்விடத்தேநிறுத்தி, தருதியென்றான் — விடைகொடு என்று சொல்லுகிறான்- எ-று. இறை தருதியென்று பாடமானால் — விடைகொடுவெனவாம். பிறர் மேல் வண்டுகளுஞ் சுவாசமும்பட. 1

முக்கணானூர்தியன்றேன்மூன்றுலகடியிற்றாயோன்
ஒக்கவூர்பறவையன்றேலவன்றுயிலுரகமன்றேல்
திக்கயமல்லதேற்புன்குரங்கின்மேற்சேறிபோலாம்
இக்கடனடியேற்கீதியிருந்தியீண்டினிதினெந்தாய்.

இ-ள். முக்கணான் — சிவனுடைய, ஊர்தி — வாகனம், அன்றேல் — அல்லதுமாய், மூன்றுலகு — திரிலோகமும், அடியில் - பாதத்தாலே, தாயோன்- அளந்தவிஷ்ணு, ஒக்க — நேராக, ஊர் — செலுத்துகிற, பறவை - கருடபக்ஷி, அன்றேல் - அல்லதுமாய், அவன் — அந்தவிஷ்ணு, துயில் — தூங்குகின்ற, உரகம் — பாம்பு, அன்றேல் — அல்லதுமாய், திக்கயம்- திக்கியானையும், அல்லதேல் — அல்லதுமாயிருக்கச்செய்தே, புன்குரங்கின்மேல் — அல்பமான ஒரு குரங்கைநோக்கி, சேறிபோலாய் - செல்லுதியாகிறாய், ஆதலால் இக்கடன்- இந்தச் செய்முறையை, அடியேற்கு — அடியேனுக்கு, ஈதி — கொடுத்தருளு, இருந்தி ஈண்டு — இங்கேதானே இரு, இனிதின் — சுகமாக, எந்தாய்-எனது தந்தையே — எ-று. 2

அண்டர்கோன்றன்னைப்பற்றித்தருகெனவடியேனிற்கக்
கொண்டனையென்முன்றன்னைப்பணியெனநெஞ்சங்கொண்ட

துண்டது தீருமன்றேயுரனிலாக்குரங்கொன்றேனும்
எண்டிசைவென்றநீயேயேவுதியென்னையென்றான்.

இ-ள். அண்டர்கோன் றன்னை — இந்திரனை, பற்றித்தருகென — பிடித்துக்கொடென்று, அடியேனிற்க — நானிருக்கச்செய்தே, என்முன் றன்னை எனது தமையனை, கொண்டனை — கேட்டுக்கொண்டாய், பணியென — அவ்வுத்தரவை யெனக்குக் கொடென்று, நெஞ்சங்கொண்டது - என் மனத்திலே நான் கொண்டுகின்றது, உண்டு — அப்படியுண்டான, அது — அந்த என் மனவிருப்பம், தீருமன்றே — இப்போது இந்தக் குரங்கின்மேலேவிஞல் தீருமல்லவா, உரனிலா — சக்திபோதாத, குரங்கு ஒன்றேனும் — ஒரு குரங்காயிருந்தாலுமிருக்க, எண்டிசை — எட்டுத்திக்கையும், வென்ற - ஜெயங்கொண்ட, நீயே — நீதானே, ஏவுதியென்னை — என்னை ஏவியருளு, என்றான் — என்றுசொன்னான் அட்சன்—எ-று. 3

கொய்தளிர்கோதும்வாழ்க்கைக்கோடரத்துருவுகொண்டு
கைதவமியற்றியீண்டோர்சிறுபழியிழைக்குங்கற்பான்
எய்தினனிமையாமுக்கணீசனேயென்றபோதும்
நொய்தினின்வென்றுபற்றித்தருகுவெனொடியினுன்பால்.

இ-ள். கொய்தளிர் — பறிக்குந்தளிர்களை, கோதும் — வாயாலுண்கிற, வாழ்க்கை, வாழ்வையுடைய, கோடரத்து — குரங்கினது, உருவுகொண்டு-வடிவாகி, கைதவமியற்றி — வஞ்சனையைச்செய்து, ஈண்டு — இந்த இலங்கைக்கு, ஓர் சிறுபழி - ஒரு சிறிய தோஷத்தை, இழைக்குங்கற்பால் - செய்ய நினைவுகொண்டு, எய்தினன் - வந்தான், இமையாமுக்கண் — சிமிட்டாத மூன்று கண்களையுடைய, ஈசனேயென்றபோதும் - சிவனே என்றாலும், நொய்தினின் — விரைவிலே, வென்று — ஜெயங்கொண்டு, பற்றித்தருவன்-பிடித்துத்தருகிறேன், நொடியின் — ஒரு க்ஷணப்பொழுதிலே, நுன்பால்-உன்னிடத்தில் பற்றிவருகிறேன்—எ-று. 4

தூண்டத்தூணதனிற்றோன்றுங்கோளரிசுடர்வெண்கோட்டு
மண்டொத்தநிமிராண்கேழலாயினுமலைதலாற்றூ
தண்டத்தைக்கடந்துபொங்கியப்புறத்தகலினென்பால்
தண்டத்தையிடுதியன்றேநின்வயிற்றந்திலேனேல்.

இ-ள். அண்டத்தூணதனில் - ஒரு அண்டாகிய ஒரு தூணிலே, தோன்றும் — உண்டான, கோளரி — சிங்கமும், சுடர் — விளங்குகிற, வெண்கோட்டு-வெள்ளைக்கொம்பிலே, மண்தொத்த — மண் ஒட்டும்படி, நிமிர் — உயர்ந்த, ஆண்கேழல் — ஆண்பன்றியும் ஆகிய, ஆயினும் — இவ்விரண்டிலெதுவானாலும் ஆகுக, மலைதலாற்றாது — என்னோடு சண்டைசெய்யமாட்டாமல், அண்டத்தைக்கடந்து — இந்த வெளியைக்கடந்து, பொங்கி - மிகுந்து, அப்புறத்து-அப்பால், அகலின் — அதைப் போகவிட்டாலும், நின்வயின் - உன்னிடத்

,கில், தந்திலேனேல் — பிடித்துக்கொண்டு வரேனேயானாலும், என்பால்-என
க்கு, தண்டத்தையிடுதி — அபராதம் விதிப்பாய், அன்றே — அல்லவோ-எ-று.

எனவிவையியம்பியீ திவிடையெனவிறைஞ்சிநின்ற
வனைகழல்வயிரத்திண்டோண்மைந்தனைமகிழ்ந்துநோக்கித்
துனைபரித்தேர்மேலேறிச்சேறியென்றினையசொன்னான்
புனைமலர்த்தாரினானும்போரணியணிந்துபோனான்.

இ-ள். எனவிவை — என்றிவ்வார்த்தைகளை, இயம்பி — சொல்லி, ஈதி விடையென — கொடு உத்தரவென்று, இறைஞ்சிநின்ற — வணங்கிநிற்கிற, வனைகழல் — கட்டின வீரக்கழலும், வயிரத்திண்டோள் — வயிரமலைபோற் கெட்டியான தோள்களுமுடைய, மைந்தனை - தன்மகனை, மகிழ்ந்துநோக்கி- சந்தோஷித்துப்பார்த்து, துனை - வேகமுள்ள, பரித்தேர்மேல்ஏறி — குதிரை கட்டின தேரின்மேலேறிக்கொண்டு, சேறியென்று - செல்லென்று, இனைய சொன்னான் — இவ்வாறுசொன்னான், புனைமலர் — மலராற்புனைந்த, தாரினானும் — மாலையையுடைய அட்சன், போரணி — யுத்தவேஷம், அணிந்து- கொண்டு, போனான் — போயினான்—எ-று. 6

ஏறினனென்பமன்னேவிந்திரனிகலினிட்ட
நூறொருநூறுபூண்டநொறில்வயப்புரவிநோன்றேர்
கூறினராக்கராசிகுமுறினமுரசக்கொண்மூ
ஊறினவுரவுத்தானையூழிபேர்கடலையொப்ப.

இ-ள். இந்திரன் — தேவராஜன், இகலினிட்ட — சண்டையிலே விட்டுப்போன, நூறொருநூறுபூண்ட - இருநூறுகட்டின, நொறில் — வேகமும், வயம் - வெற்றியுமுள்ள, புரவிமான் — ஆண்குதிரைகளையுடைய, தேர்-தேர் மேலே, ஏறினனென்ப — ஏறினனென்பார்கள், அரக்கர் — அப்போது ராக்ஷதர்கள், ஆசிகூறினர் — ஆசீர்வாதஞ்சொன்னார்கள், முரசம் - பேரிகையாகிய, கொண்மூ — மேகங்கள், குமுறின — முழங்கலாயின, உரவுத்தானை — மகாபல முள்ள சேனைகள், ஊறின-பெருகுதலாயின, ஊழி-அவைகளூழிகாலத்தே, பேர் — கிளருகிற, கடலை ஒப்ப — கடலை ஒப்பதாக—எ-று. 7

பொருகடன்மகரமெண்ணினெண்ணலாம்பூட்கைபொங்கித்
திரிவனமீன்களெண்ணினெண்ணலாஞ்செம்பொற்றிண்டேர்
உருவுறுமணலையெண்ணினெண்ணலாமுரவுத்தானை
வருதிரைமரபினெண்ணினெண்ணலாம்வாவும்வாசி.

இ-ள். பொரு — அலைகள்மோதுகின்ற, கடல் — கடலிலுள்ள, மகரம்- மகரமீன்களை, எண்ணில் — எண்ணி அளவுசெய்தால், பூட்கை — யானைகளை, எண்ணலாம் — எண்ணி அளவுசொல்லலாகும், பொங்கி — மிகுந்து, திரிவன- அக்கடலிலே உலாவுகிற, மீன்கள் — மகரங்களல்லாத மீன்களை, எண்ணின்- எண்ணி அளவுசெய்தால், செம்பொன் — சிவந்தபொன்னாலான, திண்தேர்-

பலமுள்ள தேர்களை, எண்ணலாம் — எண்ணி அளவுசொல்லலாகும், உரு வுறு — நுண்வடிவாயிருக்கிற, மணலை — மணல்களை, எண்ணின் — எண்ணி அளவுசெய்தால், உரவு - பலங்கொண்ட, தானை — காலாள்களை, எண்ண லாம் - எண்ணி அளவுசொல்லலாகும், வரு — ஒன்றன்மேலொன்றாகவருகிற, திரை — அலைகளை, மரபின் - ஒவ்வொன்றாக, எண்ணின் - எண்ணி அளவு செய்தால், வாவும்வாசி — தாவுங்குதிரைகளை, எண்ணலாம் — எண்ணி அளவு சொல்லலாகும்—எ-று. 8

ஆறிரண்டடுத்தவெண்ணினுயிரக்குமாராவி
வேறிலாத்தோழவென்றியரக்கர்தம்வேந்தர்மைந்தர்
ஏறியதேரர்சூழ்ந்தாரிறுதியின்யாவுமுண்பான்
சீறியகாலத்தீயின்செறிசுடர்சிகைகளன்னார்.

இ-ள். ஆறிரண்டு — பனிரண்டு, அடுத்தஎண்ணின் — கூடின தொகை யுள்ள, ஆயிரம் — ஆயிரமென்றால் பன்னீராயிரம், குமரர் — புத்திரர்கள், ஆவிவேறிலா — உயிர்வேறுபாடில்லாத, தோழர் — அட்சனுக்குச் சினேகர் கள், வென்றி — எங்கும் ஜெயங்கொண்ட, அரக்கர்தம் — ராட்சதர்களுக்கு, வேந்தர் - அரசரானவர்களுடைய, மைந்தர் — பிள்ளைகள் அவர்களும், ஏறிய தேரர் - தேரேறினவர்களாக, சூழ்ந்தார் — அட்சனைச்சுற்றினார்கள், இறுதி யின் — முடிவுகாலத்திலே, யாவும் — எல்லாப் பொருள்களையும், உண்பான் - உண்ணுதற்கு எரிக்கிறதற்கு, சீறிய — சுவாலித்தெழுகிற, காலத்தீயின் - காலாக்கினியினது, செறிசுடர் — கனமான ஒளிகொண்ட, சிகைகள் - சுவா லைகளை, அன்னார் — ஒத்தவர்கள் அந்தப் பன்னீராயிரங் குமாரரும்—எ-று.

மந்திரக்கிழவர்மைந்தர்மதிநெறியமைச்சர்மக்கள்
தந்திரத்தலைவரீன்றதநயர்கள்பிறருந்தாதைக்
கந்தரத்தரம்பைமாரிற்றோன்றினராதியாயோர்
எந்திரத்தேரர்சூழ்ந்தாரீரிரண்டிலக்கம்வீரர்.

இ-ள். மந்திரக்கிழவர் மைந்தர் — ஆலோசனைக்குரிய யூகிகள் பிள்ளை களும், மதிநெறி — புத்தியு நீதியுமுள்ள, அமைச்சர்மக்கள் — மந்திரிகள் பிள் ளைகளும், தந்திரத்தலைவர் - சாமபேத தானதண்டங்களிற் சிறந்தவர்கள், ஈன்ற — பெற்ற, தனயர்கள் — பிள்ளைகளும், பிறரும் — இன்னமுள்ள பிள் ளைகளும், தாதைக்கு — அட்சனுடைய தகப்பனான ராவணனுக்கு, அந்த ரத்து — தேவருலகத்திருந்த, அரம்பைமாரில் - தேவகன்னிகை வயிற்றிலே, தோன்றினர் — பிறந்த பிள்ளைகளும், ஆதியாயோர் — முதலான பிள்ளைக ளெல்லாரும், வந்திரம் — உருளைகளையுடைய, தேரர் - தேர்மேலேறினவ ராக, சூழ்ந்தார் — சுற்றினார்கள், ஈரண்டிலக்கம் — நாலுலட்சம், வீரர — வீரர் கள்—எ-று. 10

தோமரமுலக்கைசூலஞ்சுடர்மழுக்குலிசந்தோட்டி
ஏமருவரிவில்வேல்கோலீட்டிவாளெழுவிட்டேறு

மாமரம்வீசுபாசமெழுமுளைவயிரத்தண்டு
காமருகணையங்குந்தங்கற்பணங்காலநேமி.

இ-ள். தோமரம் – உலக்கை, சூலம் – சுடர்மழு, குலிசம்-வச்சிராயுதம் தோட்டி, எமரு – அம்புகள்பொருந்தின, வரிவில் – வரிந்தவிற்கள், வேல்-வேலாயுதம், கோல் – தடி, ஈட்டி – வாள், எழு – விட்டேறு, மாமரம் – வீசுபாசம் எழுமுளை, வயிரத்தண்டு – காமருகணையம் குந்தம், கற்பணம் – காலநேமி, சுடர்த்தோமரம் – சுடருலக்கை சுடர்ச்சூலமெனக்கூட்டுக, வீசிக்கட்டுங்கயிறு – எழுவாற்செய்தமுளை, அழகுபொருந்தின கணையம் – இவ்வாறே கீழாயுதங்களைச்சொன்ன இடங்களெல்லாம் பிரதிபதங்கள் வேறெழுதப்படாமையால் அந்த அந்தப் பெயர்களே பெயராகக்கொள்க—எ-று. 11

என்றிவைமுதலயாவுமெறிதருபடைகளீண்டி
மின்றிரண்டனையவாகிவெயிலொடுநிலவுவீசத்
துன்றிருந்தூளிபொங்கித்துறுதலாலிறுதிசெல்லாப்
பொன்றிணியுலகமெல்லாம்பூதலமாயமாதோ.

இள். என்று – என்று சொல்லப்படுகிற, இவைமுதல் – இவ்வாயுதங்கள்முதலான, யாவும் – எல்லாம், எறிதரு – எறியத்தக்க, படைகள் – சேனைகள், ஈண்டி – கூடி, மின் – மின்னல்கள், திரண்டனையவாகி – கூடினாற்போற்கூடி, வெயிலொடு – வெயிலொளியுடனே, நிலவு – நிலவொளியும், வீச – ஜ்வலிக்க, , துன்று – நெருங்கின, இரும் – அதிகமாகிய, தூளி பொங்க – தூள்கள்கிளர்ந்து, துறுதலாய் – நெருங்குதலாலே, இறுதிசெல்லா-அழிவுபடாத, பொன்திணி – பொன்மயமான, உலகமெல்லாம் – மேலுலகங்களெல்லாம், பூதலம் ஆய – மண்ணுலகமாயின—எ-று. 12

காகமுங்கழுகும்பேயுங்காலனுங்கணக்கில்காலம்
சேகுறவினையிற்செய்ததீமையுந்தொடர்ந்துசெல்லப்
பாகியல்கிளவிச்செவ்வாய்ப்படைவிழிப்பணைத்தவேய்த்தோட்
டோகையர்மனமுந்தொக்கதும்பியுந்தொடர்ந்துசுற்ற.

இ-ள். காகமும் – காக்கைகளும், கழுகும் – கழுகுகளும், பேயும் – பேய்களும், காலனும் – யமனும், கணக்கில் காலம் – அளவில்காலமெல்லாம், சேகுஉற – சஞ்சிதமாயிருக்க, வினையிற்செய்த – இவ்வரக்கர்கள் செய்கையாலே பண்ணின, தீமையும் – பாபமும், தொடர்ந்து செல்ல – பின்பற்றி வரவும், பாகு இயல் – தேன் குழம்புக்கொப்பான, கிளவி – சொற்களும், செவ்வாய் – சிவந்தவாயும், படைவிழி – வாளாயுதம்போன்ற கண்களும், பணைத்த – பருத்த, வேய்த்தோள் – மூங்கில்போன்ற தோள்களுமுள்ள, தோகையர்மனமும் – பெண்களுள்ளமும், தொக்க – அம்மனங்கள்கூடின, தும்பியும் – வண்டுகளான கண்களும், தொடர்ந்துசுற்ற – பின்னேதொடர்ந்து சுற்றவும், மனங்கூடியே கண்பார்த்தலாலே தொக்க தும்பியென்பது கண்களென்று கொள்க—எ-று. 13

உழைக்குலநோக்கினார்களுலந்தவர்க்குரியமாதர்
அழைத்தழுகுரலின்வேலையமலையினரவச்சேனை
தழைத்தெழுமொலியினானாப்பல்லியந்துவைத்தலால்விண்
மழைக்குரலிடியிற்சொன்னமாற்றங்களொழிப்பமன்னோ.

இ-ள். உழைக்குலம் — மான் கூட்டம்போன்ற, நோக்கினார்கள் — பார்வையுள்ளவர்களான, உலந்தவர்க்கு — அனுமாராலேஇறந்தவர்களுக்கு, உரிய மாதர் — உரித்தான மனைவிகள், அழைத்து — தம்முடைய நாயகர்களைக் கூப்பிட்டு, அழு — அழுகின்ற, குரலின் - குரல்களான, வேலை — கடல்போன்ற, அமலையின் — சத்தத்தாலும், அரவம் — பெருமுழக்கமுள்ள, சேனை — சேனைகள், தழைத்து — அதிகரித்து, எழும் — எழுகின்ற, ஒலியின் — சத்தத்தாலும், நானா — பலவிதங்களான, பல்லியம் — அனேகவாத்தியங்களும், துவைத்தலால் — சத்திக்கிறதினாலும், விண் — ஆகாயத்துள்ள, மழைக்குரல் — மேகத்தொனியாகிய, இடியில் — இடிபோல், சொன்ன — அவர்கள்பேசின, மாற்றங்கள் — சொற்கள் தெரிதல், ஒழிப்ப — இல்லையாவன—எ-று. 14

வெயிற்கரமணிகள்வீசும்விரிகதிர்விழுங்கவெய்ய
அயிற்கரமணிகள்காலுமவிரொளிபருகவஃகா
எயிற்றிளம்பிறைகளீன்றவிலங்கொளியொதுங்கயாணர்
உயிர்க்குலவிரவுமன்றுபகலன்றென்றுணர்வுதோன்ற.

இ-ள். வெயிற்கரம் — சூரியகிரணத்தைக்கொண்ட, மணிகள் — அவர்களாபரணங்களிலுள்ள ரத்நங்கள், வீசும் — ஆகாயத்தினின்றும் எறிக்கிற, விரிகதிர் — விரிந்த சூரியகிரணத்தை, விழுங்க — கபளீகரிக்கவும், வெய்ய- வெவ்விதான, அயில் - வேலாயுதங்களின், கரம் — ஒளிகளானவை, மணிகள்— அந்த ரத்நங்கள், காலும் — வீசுகிற, அவிரொளி — மிக்க ஒளியை, பருக- உண்டு மறைக்கவும், அஃகா — குறைவுபடாத, எயிற்று — அவர்கள் பல்லொளிகளாலே, இளம்பிறைகள் — இளஞ்சந்திரர்கள், ஈன்ற — பெறுவனவாகிய, இலங்கொளி — மிக்கவொளிகள், ஒதுங்க — மறையவும் ஆகுதலாலே, யாணர் — அந்தப் புதுமைகள் காண்கின்றனவாக, உலவுயிர்க்கு — மேலுங்கீழும் சஞ்சரிக்கிறவுயிர்களுக்கு, இரவும் அன்று — இக்காலம் இராத்திரியுமல்ல, பகலன்று — பகலுமல்ல, என்று — என்பதாக, உணர்வுதோன்ற — புத்திக்கு விளங்க—எ-று. 15

ஓங்கிருந்தடந்தேர்பூண்டவுளைவயப்புரவியொல்கித்
தூங்கினவீரத்தோளுங்கண்களுமிடத்துத்துள்ள
வீங்கினமேகமெங்குங்குருதிநீர்த்துள்ளிவீழ்ப்ப
ஏங்கினகாகமார்ப்பவிருளில்விண்ணிடிப்பமாதோ.

இ-ள். ஓங்கு இரும் — வளர்ந்து பெரிதான, தடந்தேர் — விசாலமான தேரிலே, பூண்ட — கட்டின, உளை — உரோமங்களையும், வயம் — வெற்றியுமுள்ள, புரவி — குதிரைகள், ஒல்கி - தளர்ந்து, தூங்கின — உறங்கிவிழவும்,

வீரத்தோளும் — வீரமுள்ள தோள்களும், கண்களும் — நேத்திரங்களும், இடத்து – இடப்புறத்திலே, துள்ள — துடிக்கவும், வீங்கின - அதிகமான வைகளாய், மேகம் – மேகங்கள், எங்கும் – எவ்விடங்களிலும், குருதிநீர்-ரத்தஜலங்களை, துள்ளி — துளிதுளிகளாக, வீழ்ப்ப — உதிர்க்கவும், ஏங்கின- அழுதுகொண்டு, காகம் — காக்கைகள், ஆர்ப்ப – கத்தவும், இருளில் - இருட்டில்லாமல், விண் – ஆகாயம், இடிப்ப – குமுறவும்—எ-று. 16

வெள்ளவெஞ்சேனைசூழவிண்ணுளோர்வெருவிவிம்ம
உள்ளநொந்தனுங்கிவெய்யகூற்றமுமுறுவதுன்னத்
துள்ளியசுழல்கட்பேயடோள்புடைத்தார்ப்பத்தோன்றும்
கள்ளவிழலங்கலானைக்காற்றின்சேய்வரவுகண்டான்.

இ-ள். வெள்ளம் – வெள்ளக்கணக்குள்ள, வெஞ்சேனை — வெவ்விய சேனைகள், சூழ — சுற்றவும், விண்ணுளோர் – ஆகாசவாசிகள், வெருவி விம்ம - பயந்துதுக்கிக்கவும், உள்ளம் – மனது, நொந்து – வருந்தி, அனுங்கி- கெடுதலாய், வெய்ய கூற்றமும் – கொடியயமனும், உறுவது – அட்சன் வருகிறதை, உன்ன – பார்த்து யோசிக்கவும், துள்ளிய – துள்ளுகின்ற, சுழல் கண் - சுழலுங்கண்களுள்ள, பேய்கள் — பேய்க்கூட்டங்களையுடைய காளியானவள், தோள்புடைத்து — தன் தோள்களைத்தட்டிக்கொண்டு, ஆர்ப்ப- கர்ச்சிக்கவும், தோன்றும் - வருகிற, கள் அவிழ் – தேனொழுகுகின்ற, அலங்கலானை – தும்பைமாலையணிந்து வருகிற அட்சகுமாரனுடைய, வரவு- வருகுதலை, காற்றின்சேய் – அனுமார், கண்டான் — பார்த்தார்—எ-று. 17

இந்திரசித்தோமற்றவ்விராவணனேயோவென்னச்
சிந்தையினுவகைகொண்டுமுனிவுற்றகுரக்குச்சியம்
வந்தனன்முடிந்ததன்றோமனக்கருத்தென்னவாழ்த்திச்
சுந்தரத்தோளைநோக்கியிராமனைத்தொழுதுசொன்னான்.

இ-ள். இந்திரசித்தோ — மேகநாதனோ, மற்றவ்விராவணனேயோ-அல்லதந்த இராவணனோ, என்ன – என்று, சிந்தையின் - மனத்திலே, உவகை கொண்டு — சந்தோஷமாய், முனிவுற்ற — கோபங்கொண்ட, குரக்குச்சியம்- வானரசிரேஷ்டரான அனுமார், வந்தனன் - அவ்விருவரி லொருவன் வந்தானென்கையாலே, மனக்கருத்து-நமது மனத்திலேகொண்ட எண்ணம், முடிந்ததன்றோ — முடிவாயிற்றல்லவோ, என்னவாழ்த்தி - என்று ராமனைத்துதித்துக்கொண்டு, சுந்தரத்தோளைநோக்கி — தமதழகிய தோள்களையும்பார்த்து, இராமனை – ஸ்ரீராமனையும், தொழுது – வணங்கிக்கொண்டு, சொன்னான்- சொல்வாராயினர்—எ-று. 18

எண்ணியவிருதர்தம்முளொருவனேல்யான்முன்செய்த
புண்ணியமுளதாலெங்கோன்றவத்தொடும்பொருந்தினானே
நண்ணினனனுங்கின்றேன்காலனுநணுகிநின்றான்
கண்ணியகருமமின்றேமுடிக்குவெனகடிதினென்றான்.

இ-ள். எண்ணிய - நாமெண்ணின, இருவர்தம்முள் - இருவரிலே, ஒருவனேல் — ஒருவனுனல், யான்முன் - நான்முன்னே, செய்த - பண்ணின. புண்ணியம் - புண்ணியபலம், உளது - சித்தித்ததாயிற்று, எங்கோன் — எமதாசனுன சுக்கிரீவனும், தவத்தொடும் பொருந்திஞனே - தவத்துடனே கூடினவனேயாவான், நண்ணினன் — இருவரிலொருவன்வந்தான், நானுநின்றேன் - இதோநானும் அவன்முன்னே நிற்கிறேன், காலனும் - யமனுங்கூட, நணுகிநின்ருன் — சமீபித்திருக்கிருன், நண்ணிய - நான்கருதின, கருமம் - காரியத்தை, இன்றே - இப்பொழுதே, முடிக்குவன் - முடித்துவிடுகிறேன், கடிதின் - விரைவிலே, என்ருன் - என்றுயோசித்தார்—எ-று. 19

பழியிலதுருவென்ருலும்பஃறலையரக்கனல்லன்
விழிகளாயிரமுங்கொண்டவேந்தைதவென்ருனுமல்லன்
மொழியின்மற்றவர்க்குமேலான்முரட்டொழின்முருகனல்லன்
அழிவிலொண்குமரன்யாரோவஞ்சனக்குன்றமன்ஞன்.

இ-ள். பழியிலது — உரு இவன்வடிவு ராஜலட்சணத்தி லொருகுறைவுமில்லாதிருக்கிறது, என்ருலும் - என்னலாமாயினும், பஃறலை - பத்துத்தலைகளையுடைய, அரக்கன் - ராவணன், அல்லன் - இவன் ஒருதலையோடிருத்தலாலல்லனேயாம், விழிகளாயிரமுங்கொண்ட — ஆயிரங்கண்களுள்ள, வேந்தை - அரசனுன இந்திரனே, வென்ருனும் - வென்ற மேகநாதனும், அல்லன் - அல்லனுகவே தோற்றுகிருன் இடிக்கொடி யில்லாமையாலே, மொழியின் - இவனையின்ஞனென்று சொல்லுமிடத்தில், மற்றவர்க்கு-அந்த இருவருக்கும், மேலான் — சிரேஷ்டனுன, முரண்தொழில் - பலாட்டியச் செய்கையுள்ள, முருகன் அல்லன்-முருகவேளுமல்லன் ஆறுமுகமில்லாமையால், அழிவின் - யாதொரு கெடுதலுமில்லாத, ஒண்குமரன் — அழகிய இவன், யாரோ — எவனே, அஞ்சனக்குன்றம் - நீலமலையையே, அன்ஞன் - ஒப்பாயிருக்கிருன்—எ-று. 20

என்றவனுவந்துவிண்டோயிந்திரசாபமென்ன
நின்றதோரணத்தினும்பரிருந்ததோர்நீதியானை
வன்றொழிலரக்கனேக்கிவாளெயிறிலங்கநக்கான்
கொன்றதிக்குரங்குபோலாமரக்கர்தங்குழுவையென்ருன்.

இ-ள். என்றவன் — என்று நினைத்தவராய், உவந்து - சந்திரனைத்தீண்ட, விண்தோய் - ஆகாயத்தை அளவுவதாய், இந்திரசாபமென்ன — இந்திர வில்லைப்போல், நின்ற — நிற்பதான, தோரணத்தினும்பர் — தோரணஸ்தம்பத்தின் மேலே, இருந்ததோர் — இருப்பதான ஒரு, நீதியானை — நீதியுள்ள அநுமானை, வன்றொழில் — வலியசெய்கையுள்ள, அரக்கன் — ராட்சதனுன அட்சன், நோக்கி - பார்த்து, வாள் எயிறு — ஒலிபொருந்தினபற்கள், இலங்க-விளங்க, நக்கான் — சிரித்தவனுகி, அரக்கர்தங்குழுவை — இராக்ஷஸ ராக்ஷஸ கூட்டத்தை, கொன்றது — வதைபண்ணினது, இக்குரங்கு — இந்தக்குரங்கு வடிவுள்ளதுதாஞ் என்ருன்—எ-று. போல் ஆம் அசைகள். 21

அன்னதாமச்சொற்கேட்டசாரதியையகேண்மோ
இன்னதாமென்னலாமோவுலகியலிகழ்தலம்மா
மன்னனேடெதிர்ந்தவாலிகுரங்கென்றுன்மற்றுமுண்டோ
சொன்னதுதுணிவிற்கொண்டுசேறியென்றுணரச்சொன்னுன்.

இ-ள். அச்சொற்கேட்ட — அந்தவார்த்தையைக்கேட்ட, சாரதி — பாகனுனவன், அன்னது — அந்தக்குரங்கே, ஆம் — வெல்லவல்லதாகும், ஐயசுவாமி, கேண்மோ — நான்சொல்வதைக் கேட்பீராக, இன்னது — இப்படிப்பட்டதாக, உலகியல் — லோக சுவபாவம், ஆம் — முடிவுபெறும், என்னலாமோ — என்று அளவுபடுத்தக் கூடுமோ கூடாது, இகழ்தல் - உலகியலை இகழ்ந்துபேசுதலைக்கேட்போர், ஆமென்னலாமோ — சரிதானென்னக்கூடுமா கூடாது, அ — அந்த, மாமன்னனேடு-பெரிய அரசனுன இராவணனுடனே, எதிர்ந்தவாலி — நேரானவாலியும், குரங்கென்றால் — குரங்குருவமேயான போது, மற்றுமுண்டோ-இன்னம் இகழ்ந்துபோகக் கூடுமோ, சொன்னது-நான் சொல்லியதை, துணிவிற்கொண்டு — நம்புதலாக எண்ணி, சேறியென்று — செல்கவென்று, உணர — அவன்தெரிவதாக, சொன்னுன்-சொல்லினன் — எ-று. 22

விடந்திரண்டனையமெய்யானவ்வுரைவிளம்பக்கேளா
இடம்புகுந்தினையசெய்தவிதனெடுசீற்றமெஞ்சத்
தொடர்ந்துசென்றுலகமூன்றுந்துருவினெனுழிவுறுமல்
கடந்துபின்குரங்கென்றேதுங்கருவையுங்களைவெனென்றுன்.

இ-ள். விடம்திரண்டனைய — நஞ்சே ஒருவடிவுகொண்டாற்போ லிருக்கிற, மெய்யான் — உருவமுள்ள அட்சன், அவ்வுரை — அந்தவார்த்தைகளை, சாரதி — தன்பாகனுனவன், விளம்ப — சொல்ல, கேளா — கேட்டு, இடம்புகுந்து — நம்மூரிலேவந்து, இனையசெய்த-இப்படிப்பட்டவைகளைப்பண்ணின, இதனெடு — இந்தக்குரங்குடனே, சீற்றம் - எனதுகோபம், எஞ்ச — தீர, தொடர்ந்துசென்று — இதுபோன இடமெல்லாங் கூடவேபோய், உலகமூன்றும் — திரிலோகமும், துருவினென் ஒழிவுறுமல் — தப்பாமல்தேடினேனுகி, கடந்து - இதைவென்று, பின் — பின்பு, குரங்கென்று ஓதும் — குரங்கென்றுசொல்லுகிற, கருவையும்-மூலத்தையும், களைவென்-போக்குவேன், என்றுன் — என்றுசொன்னுன் — எ-று. 23

ஆர்த்தெழுந்தரக்கர்சேனையஞ்சனைக்குரியகுன்றைப்
பேர்ந்ததுபோழிந்தகம்மாபொருபடைப்பருவமாரி
வேர்த்தனர்திசைகாப்பாளர்சலித்ததுவின்னுமண்ணும்
கார்த்தனிவீரன்றுனுந்தனிமையும்வரமேற்சார்ந்தான்.

இ-ள். ஆர்த்து - அப்போது, கொர்ச்சித்தடனே, எழுந்து — எழுதலாகி, அரக்கர்சேனை — அந்த ராக்ஷதசேனைகள், அஞ்சனைக்கு — அஞ்சனுதேவிக்கு, உரிய — புத்திரனுதற்குரித்தான, குன்றை — மலைபோன்ற அனு

மாரை, போர்த்தது — சூழ்ந்ததாக, பொருபடை — மோதுகிற அஸ்திரசஸ்திரங்களான, பருவமாரி — பெய்யுங்காலத்துமழைபோல், பொழிந்தது — பெய்யலாயிற்று, திசைகாப்பாளர் — அப்போது திக்குப்பாலகர்கள், வேர்த்தனர் — பயந்து உடம்புவேர்த்தார்கள், விண்ணும் — விண்ணுலகும், மண்ணும் — மண்ணுலகமும், சலித்தது — சலிக்கலாயிற்று, தார் — வெற்றிமாலைகொண்ட வீரன் — வீரனான அனுமார், தானும் — தாமும், தனிமையும் — தாமொருவரே யென்கிற சொல்லும், வர — கூடவருவதாக, மேல் — அச்சேனைகளின் மேலே, சார்ந்தான் — சென்றார் — எ-று. தனி — ஒப்பில்லாத, அம்மா அசை. 2

எறிந்தனநிருதர்வெய்தினெய்தனபடைகள்யாவும்
முறிந்தனவீரன்மேனிமுட்டினமொகரயானை
மறிந்தனமடிந்ததேரும்வாவுமாக்குழுவுமற்றும்
நெறிந்தனவரம்பில்யாக்கையிலங்கைதன்னிலையிற்பேர.

இ-ள். நிருதர் — அந்த ராக்ஷதர்கள், எறிந்தன — எறிந்த சஸ்திரங்களும், வெய்தின் — கோபங்கொண்டு, எய்தன — எய்த அஸ்திரங்களுமாகிய, படைகள்யாவும் — எல்லாவகைகளும், முறிந்தன — முறிதலாயின, வீரன்மேனி — அனுமாருடம்பின்மேல், முட்டின — மோதினவாகி முறிந்தன, மொகரம் — முதலொழுங்கிலேகின்ற, யானை — யானைகள், மறிந்தன — மீண்டோடலாய், மடிந்த — இறந்துபோயின, தேரும் — இரதங்களும், வாவும் — தாவுகின்ற, மாக்குழுவும் — குதிரைக்கூட்டங்களும், மற்றும் — குடைகொடை முதலாயினவும், நெறிந்தன — நெரிதலாயின, வரம்பு இல் — அளவில்லாத, யாக்கை — தேகங்கள் குவிகிறதனத்தினாலே, இலங்கை — அந்த ஊர், தன் நிலையில் — தனதுநிலையினின்றும், பேர — விலகுதலாகமுடிந்தன மடிந்தன நெறிந்தன என்க. 25

காயெரிமுளிபுற்கானிற்கலந்தெனக்காற்றின்செம்மல்
ஏயெனுமளவிற்கொல்லுநிருதர்க்கோரெல்லையில்லைப்
போயவருயிரும்போக்கித்தென்புலம்படர்தல்பொய்யா
தாயிரகோடிதூதருளர்கொலோநமனுக்கம்மா.

இ-ள். காய் — சுடுகின்ற, எரி — அக்கினியானது, முளி — நிந்திருக்கிற, புல்கானில் — புல்லுள்ளகாட்டிலே, கலந்தென — கூடினாற்போல், காற்றின் செம்மல் — அனுமார், ஏயெனுமளவில் — உம்மெனுமளவிலே, கொல்லும் — கொல்லலான, நிருதர்க்கு — ராக்ஷதர்களுக்கு, ஓரெல்லையில்லை — ஒரு அளவுமில்லை, போய் — உடல் அழிந்துபோய், அவர் — அந்த ராக்ஷதர்களுடைய, உயிரும் — பிராணன்களும், போகி — போய், தென்புலம் — யமலோகத்துக்கு, படர்தல் — செல்லுதல், பொய்யாது — தப்புதலில்லை ஆனால், ஆயிரகோடி தூதர் உளர்கொலோ நமனுக்கு — எமனுக்குண்டோ — எ-று. எமதூதர்களை

அவ்வளவினாலல் இறந்தவர்க ளெவ்வளவினரென்று சொல்லலாமென்றா ருத்து. 26

வரவுற்றார்வாராநின்றார்வந்தனர்வரம்பில்வெம்போர்
பொரவுற்றபொழுதும்வீரன்மும்மடங்காற்றல்பொங்கி
எரியிற்போய்க்கதிரோனூழியிறுதியினென்னலானன்
உரவுத்தோளரக்கரெல்லாமென்பிலாவுயிர்களொத்தார்.

இ-ள். வரவுற்றார் — வருவார்களும், வராநின்றார் — வருகிறவர்களும், வந்தனர் — வந்தவர்களும் ஆக, வரம்பில் — அளவில்லாத, வெம்போர் - வெவ்விய சண்டைகளை, பொரவுற்றபொழுதும் — செய்யத் தொடங்கின போதிலும், வீரன் - அனுமாருக்கு, மும்மடங்கு — முன்னிலு மூன்றுபங்கு, ஆற்றல் — சாமர்த்தியம், பொங்கி — அதிகமாய், எரியில் — முன்னே நெருப் புப்போல், போய் — சென்று, ஊழியிறுதியின் - யுகமுடிவிலேதோன்றுகிற, கதிரோன் — சூரியனே, என்னலானன் — என்று சொல்லும்படியாயினர், உரவு — பலங்கொண்ட, தோள் — புஜங்களையுடைய, அரக்கரெல்லாம் - ராக்ஷதர்கள் முழுதும், என்பில்லா — எலும்பில்லாத புழுவை, ஒத்தார் - ஒப் பாயினார்கள்—எ-று. 27

வேறு

பிள்ளப்பட்டன நுதலோடைக்கரி பிறழ்பொற்றேர்பரி பிழை யாமல், அள்ளப்பட்டழி குருதிப்பொருபுன லாறுகப்படி சேறுக, வள்ளப்பட்டன மகரக்கடலென மதில்சுற்றியபதி மறலிக்கோர், கொள்ளைப்பட்டுள வுயிரென்னும்படி கொன்றானை புலன்வென் றானே.

இ-ள். நுதல் ஓடை — நெற்றியிலே வீரபட்டமுள்ள முகபடாமணிந்த, கரி - யானைகளும், பிறழ் — ஊர்கிற விளங்குகின்ற, பொற்றேர் — பொன்மய மான ரதங்களும், பரி — குதிரைகளும், பிழையாமல் — தப்பாமல் — பிள்ளப் பட்டன — பிளவுபடுதலாயின, அள்ளப்பட்டு — கையாலள்ளு கூழ்போலாகி, அழி - கரைதலாகுகிற, குருதி - ரத்தமாகி, பொரு — அலைமோதுவதான, புனலாறுக - நீராறுபோற் பிரவாகமாக, படி — கீழ்மண்ணெலாம், சேறுக- சேறுமாகிறதினாலே, வள்ளப்பட்டன — ஒருதோணிமிதப்பதுபோலான, மகரக்கடலென — மகரமீன்களையுடைய கடல்சூழ்ந்தாற்போல், மதில் சுற் றியபதி — மதிலாலே சூழப்பட்ட அவ்வூரிலே, மறலிக்கு — யமனுக்கு, உயிர் - ராக்ஷதர்களுயிராகிய பொருள், ஓர் கொள்ளைப்பட்டுள - ஒரு கொள்ளை கொள்ளும்படி, என்னும்படி - ஆயினவென்பதாக, ஐம்புலன்வென்றான் - ஜிதேந்திரியரான அனுமார், கொன்றான் — வதைசெய்தார்—எ-று. ஒரு தோணி மிதப்பதுபோலாயின இலங்கை என்க. 28

தேரேபட்டன வென்றார்சிலர்சிலர் தெறுகட்செம்முக வாசி ரத்தோர், பேரேபட்டன வென்றார்சிலர்சிலர் பரியேபட்டன பெரி

தென்றார், காரேபட்டன நுதலோடைக்கட கரியேபட்டன கடி தென்றார், நேரேபட்டனர் படமாடேதனி நில்லாவுயிரொடு நின்றாரே.

இ-ள். மாடே – பக்கங்களிலே, தனி – ஒவ்வொருவரும், நில்லாவுயிரொடு – நிலைகொள்ளாத வுயிருடனே, நின்றார் – நின்று காண்போர்களில், தேரேபட்டனவென்றார் சிலர் – சிலர் தேர்களே அதிகமாயுடைபட்டன வென்றார்கள், தெறுகண் – கொல்ல நோக்குங் கண்கள், செம் – சிவந்திருத்தலையுடைய, முகம் – முகங்களும், வயிரம் – வயிரமலைபோன்ற, தோள் – தோள்களுமுள்ள, பேரே – பேர்களான காலாள்களே, பட்டன – அதிகமாய்ச்சாதலாயின, என்றார் – என்றார்கள், சிலர் – சிலர்கள், பரியே – குதிரைகளே, பட்டன – அழிந்தன, பெரிதென்றார் – அதிகமென்றார், சிலர் – சிலர்கள், காரே – மேகங்களே, பட்டன – இறந்துவிழுந்தாற்போல், நுதலோடை – முகபடாத்தையுடைய, கடகரியே – மதயானைகளே, பட்டன – அழிந்தன, கடிது – விரைவிலே, என்றார் – என்றுசொன்னார்கள், நேரே – அனுமார்முன்னே, பட்டனர் – இறந்தவர்கள், பட – இறந்துகொண்டிருக்க, மாடு நின்றுகண்டோர்கள் அவ்வாறு நிர் ஜீவர்களாய்ச் சொல்லுகிறார்களென்க—எ-று. 29

ஆழிப்பொருபடை நிருதப்பெருவலி யடலோராய்மக ளடுபேழ்வாய்த், தாழிப்படுதயி ரொத்தார்மாருதி தனிமத்தென்பதொர் தகையானன், எழிப்புவனமு மிடைவாழுயிர்களு மெறிவேலிளையவ ரினமாக, ஊழிப்பெயர்வதொர் புனலொத்தாரன லொத்தான் மாருத மொத்தானே.

இ-ள். ஆழி – கடல்போற் சூழ்ந்து, பொரு – சண்டைசெய்கிற, படை – ஆயுதங்களாலே, பெருவலி – மிக்கவல்லமையுள்ள, நிருத அடலோர் – ராட்சதர்களான கொலைக்கஞ்சாதபாவிகளெல்லாம், ஆய்மகள் – இடைச்சி, அடு – கட்டியை உடைத்துக்கடைகிற, பேழ்வாய் – அகன்றவாயையுடைய, தாழி – இலங்கையான பானையிலே, படு – உள்ள, தயிர் – தயிரை, ஒத்தார் – ஒப்பானார்கள், மாருதி – அனுமாரானவர், தனிமத்து – ஒருமிலைமத்தே, என்பது – என்றுசொல்லலான, ஒர் தகையானன் – ஒரு தகுதிக்கொப்பாயினார், ஏழ் – ஏழென்கிற அளவுள்ள, இப்புவனமும் – சப்த தீவுகளிலும், இடை – நெருங்கின நெருங்குதலாகி, வாழ் – வாழ்கின்ற, உயிர்களும் – உயிர்கள்முழுதும், எறி – குத்துகிற, வேல் – வேல்களைக்கொண்ட, இளையவர் – ராசகுமாரர்கள், இனமாக – கூட்டமேயாக, ஊழி – யுகமுடிவிலே, பெயர்வது – கரைபுரண்டுவருவதான, ஓர்புனல் – ஒருபிரவாக ஜலத்தை, ஒத்தார் – ஒப்பானார்கள், மாருதமொத்தான் – பிரசண்டவாயுவேகமுள்ள அனுமார், அனலொத்தான் – அந்நீரை உறிஞ்சுகிற நெருப்பை ஒப்பானார்—எ-று. 30

கொன்றானுடன்வரு குழுவைச்சிலர்பலர் குறைகின்றாருடல் குலைகின்றார், பின்றாநின்றன ருதிரப்பெருநதி பெருகாநின்றன ர

நகாரும், நின்றார்நின்றிலர் தனிநின்றனெருநேமித்தேரொடு மவ னேரே, சென்றான்வன்றிற லயில்வாயம்புகடெரிகின்றான்விழி யெ ரிகின்றான்.

இ-ள். கொன்றான் — இப்படியாகவதைத்தார், உடன் வரு குழுவை- அட்சனுடனேவருகிற கூட்டத்தை, சிலர் குறைகின்றார் உடல் — அதிலே சிலர்கைகால்கள் குறைவுபடுகிறார்கள், பலர் குலைகின்றார் — பலர் உடல் நடு க்குகிறார்கள், பின்றாநின்றனர் — சிலர் பின்னிடுகிறார்கள், உதிரப்பெருநதி- பலர் ரத்தப்பிரவாகம் பெருகாநின்றனர் - உடலிலே உண்டாகுகிறார்கள், அருகு — அட்சன்பக்கத்திலே, நின்றார் — சிலர் நின்றார்கள், ஆரும் - பலரில் யாரேனுமொருவரும், நின்றிலர் - நில்லாதோடினார்கள், தனி நின்றான்- தானொருவனே நிற்பதானான் அட்சன், ஒரிநேமித்தேரொடும் — உருளையை யுடைய ஒருதேருடனே தனிநின்றான், அவன்நேரே — அப்படி நிற்கிறவன் அனுமாருக்குமுன்னே, வன்றிறல்-மிகவும் வலிமையுள்ள, அயில்வாய் - கூர் மைபொருந்தின, அம்புகள் - பாணங்களை, தெரிகின்றான் - விட்டுக் கொண்டு, விழி — கண்கள், எரிகின்றான் - எரிகிறவனாக, சென்றான்-போயி னான் — எ-று. 31

உற்றானிந்திர சித்துக்கிளையவ னொருகாலேபல ருயிருண்ணக், கற்றானும்முக வெதிர்வைத்தானது கண்டார்விண்ணவர் கசிவுற்றார், எற்றாமாருதி நிலையென்பாரினி யிமையாவிழியினை யிவையொன் றோ, பெற்றாமல்லது பெற்றாமென்றனர் பிறியாதெதிரெதிர் செறி கின்றார்.

இ-ள். இந்திர சித்துக்கிளையவன் — மேக நாதனுடையதம்பி, உற்றான்- நேரேவந்தான், ஒருகாலே — ஒருமூக்களவிலே, பலர்-அநேகருடைய, உயிர்- உயிர்களையும், உண்ணக்கற்றானும் — கொல்லவல்ல அனுமார், முகம் — தமது முகத்தை, எதிர்வைத்தான் — அவன்முன்னே திரும்பினார், அதுகண்டார்- அதைப்பார்த்த, விண்ணவர் - தேவர்கள், கசிவுற்றார் - மனமிளகினவர்க ளாய், இனிமாருதி நிலை — இனி அனுமாருடையவீரம், எற்றாம் - எத்தன் மையதாகும், என்பார் — என்னுமவராய், விழியினையிமையா - கண்களைமூ டாத. இவை ஒன்றோ — இவ்வளவோ, பெற்றாம் - பெற்றிருக்கிறோம், அல் லது — கூசிக்கண்கள் மூடுகிறதையே, பெற்றாம் — பெற்றனோம், என்றனர்- என்றுசொல்லி, பிறியாது - ஒருவரை யொருவர்விடாமல், எதிர் எதிர்- ஒருவருக்குமுன்னே ஒருவர், செறிகின்றார் - நெருங்குகிறார்கள் ஓடுகிறார் கள் — எ-று. 32

பய்தான்வாளிக ளெரிவாயுமிழ்வன விசைமிழுதிசைபை பார் சோரப், பொய்தான்மணியெமு வொன்றலன்றது பொடியாயுதிர் வுற வடிவாளி, வெய்தாயினபல விட்டான்வீரனும வெசேறார்படை

யிலன் மாறுமெங், கைதானேபொரு படையாகத்தொடர் காலார் தேரதன் மேலானுன்.

இ-ள். எய்தான்வாளிகள் – அம்புகளைவிட்டான், எரி – அவ்வம்புகள் நெருப்பை, வாய் உமிழ்வன்-தம்வாய்வழியே சிந்துமவைகள், ஈரேழ்-அவை ஒன்றல்ல பதினன்குமாகிய, அவை – அவ்வம்புகள், எதிர் – அட்சனுக்கு முன்னே, பார்சோர – பூமியிலே, உதிர, மணியெழுவொன்ருல் – ஒருகறுத்த எழுத்தடியினலே, பொய்தான் – தடுத்தார், அன்று – அப்போது, அது – அந்த எழுத்தடி, பொடியாய் – தூள்தூளாய், உதிர்வுற – சிந்துதலாக, வடிவாளி – கூரிய அம்புகள், வெய்தாயின – வெப்பமுள்ளவைகளாக, பலவிட்டான் – அனேகம்விட்டாறுத்தான், வீரனும் – அனுமாரானவர், வேருேர் – வேறே ஒரு, படையிலன் – ஆயுதங்களுமில்லாதவராய், மாரு – ஓயாத, வெங்கைதானே – வெவ்வியகைகளே, பொருபடையாக – பொருதும் ஆயுதங்களாகக்கொண்டு, தொடர் – தம்மைத்தொடர்கிற, கால்ஆர் – உருளைகள் பொருந்தின, தேரதன்மேல் – அவன் தேர்மேலே, ஆனுன் – ஏறினர். 33

தேரிற்சென்றெதிர் கோல்கொள்வானுயிர் தின்ருனப்பொரு செறிதிண்டேர், பாரிற்சென்றது பரிபட்டனவவன் வரிவிற்சிந்திய பகழிக்கோல், மார்பிற்சென்றன சிலபொற்ருேளிடை மறைவுற்றனசில மறவோனும், நேரிற்சென்றவன் வயிரக்குனிசிலே பற்றிக்கொண்டெதி ருறநின்ருன்.

இ-ள். தேரிற்சென்று – தேர்மேலேறி, எதிர் – முன்னே, கோல்கொள்வான் – சாட்டிக்கோலையுடையசாரதிதன், உயிர்தின்ருன் – உயிரைப்போக்கினர், அப்பொரு – அந்தப்பொருதுதலான, செறிதிண்தேர் – வலிமைமிகுத்த தேரானது, பாரிற்சென்றது – இவர் கனத்தாலே பூமியிலே அழுந்திற்று அதுடனே, பரிபட்டன – குதிரைகளுமிறந்தன, அவன் – அந்த அட்சன், வரிவில் – வரிந்தவில்லாலே, சிந்திய – பெய்த, பகழிக்கோல் – அம்புகள் அனுமார், சில மார்பிற்சென்றன – சில மார்பிலே பதிந்தன, சில பொற்ருேளிடை – சில அழகிய தோள்களிலே, மறைவுற்றன – அழுந்தலாயின, மறவோனும் – அப்போது மகாவீரனை அனுமார், நேரிற்சென்று – அவன் முன்னேபோய், அவன் – அவனுடைய, வயிரக்குனிசிலே – பலமாக வளைந்த வில்லே, பற்றிக்கொண்டு – பிடித்துக்கொண்டு, எதிருறநின்ருன் – அவனுக்கெதிராக நின்ருர்—எ-று. 34

ஒருகையாலவன் வயிரத்திண்சிலே யுற்றுப்பற்றலு முரவோனும், இருகையாலிவன் வலியாமுன்னம திற்ருேடியதிவர் பொற்ருேளான், சுரிகையாலவ னுருவிக்குத்தலு மதனைச்சொற்கொடு வருதூதன், பொருகையாலிடை பிதிர்வித்தான்முதிர் பொறியோடும்படி யறியாவே.

இ-ள். உரவோனும் — அதிகபலாட்டியரான அனுமார், ஒரு கையாலே-தமதொரு கையினாலே, அவன் — அந்த அட்சனுடைய, வயிரத்திண்சிலை-வயிரம்போற் கெட்டியான வில்லை, உற்றுப்பற்றலும் — நெருங்கிப்போய் பிடித்த அளவில், இவன் — இந்த அக்ஷன், இருகையால் — தன் இரண்டு கைகளாலும், வலியாமுன்னம் — கொடாமலிழுக்குமுன்னே, அது — அந்தவில், இற்றொடியது — முறிந்துபோயிற்று, இவர் — உயர்வான, பொற்றோளான்-அழகிய தோள்களுள்ள அனுமாரை, சுரிகையால் — சிறுபாங்கினாலே, உருவி-உறையினின்றெடுத்து சுரிகையால், அவன் — அந்த அட்சன், குத்தலும்-குத்தினபோது, அதனை — அந்தச் சுரிகையை, சொற்கொடு — ராமன் சொல்லைக்கொண்டு, வருதூதன் — வந்த தூதனானவர், பொருகையால் — சண்டைபண்ணுகிற கையினாலே, இடை — குத்தின இடத்தினின்றும், பிதிர்வித்தான் — பிதுங்கப்பண்ணினார், முதிர் — முதிர்ந்த, பொறியோடும்படி-பொறிகள் தெறிக்கும்படி, பறியா — பிடுங்கிப்பிதிர்வித்தான் — எ-று. 35

வாளாலேபொர லுற்றானிற்றது மண்சேராமுனம் வயிரத்திண், தோளாலேபொர முடுகிப்புக்கிடை தழுவிக்கோடலு முடல் முற்றும், நீளாரயிலென மயிர்தைத்திடமணி நெடுவாலவனுடனிமிர்வுற்று, மீளாவகைபுடை சுற்றிக்கொண்டது பற்றிக்கொண்டனன் மேலானன்.

இ-ள். வாளாலே — உடைவாளையுருவிக்கொண்டு, பொரலுற்றான்-சண்டைசெய்யத் தொடங்கினான், இற்று அது — அவ்வாள் முறிந்து, மண் சேராமுனம் — பூமியிலே விழுமுன்னே, வயிரத்திண் — வயிரம்போற்பலமுள்ள, தோளாலே — தோள்களாலே, பொர — சண்டைசெய்ய, இடை — அப்போது, முடுகிப்புக்கு — விரைந்துபோய், தழுவிக்கோடலும் — அவனைக் கட்டிப் பிடிக்குமளவில், உடல் முற்றும் — இவருடம்பெல்லாம், நீளார்-நெடியனவாயிருக்கிற, அயிலென — வேல்போல், மயிர்தைத்திட — உரோமங்கள் குத்த, மணிநெடுவால் — மணிகட்டின நீண்டவாலானது, அவனுடல்-அவன் தன்னுடம்பை, நிமிர்வுற்று — நிமிர்த்துக்கொண்டு, மீளாவகை — போகாதபடி, புடை — அவனுடம்பெல்லாம், சுற்றிக்கொண்டது — சூழ்ந்துகொண்டதாயிற்று, மேலானன் — அவன்மேற்கொண்டு, பற்றிக்கொண்டனன்-பிடித்துக் கொண்டார் — எ-று. 36

பற்றிக்கொண்டவன் வடிவாளெனவொளிர் பல்லிற்றுகடிமிர் படாரகையால், எற்றிக்கொண்டலி னிடைநின் றுமிழ்சுடரினமின்னினம்விழு வனவென்ன, முற்றிக்குண்டல முதலாமணியுக முறைநாலாவிவர் குடர்நாலக், கொற்றத்திண்சுவல் வயிரக்கைகொடு குத்திப்புடையொரு குதிகொண்டான்.

இ-ள். பற்றிக்கொண்டு — அப்படிப் பிடித்துக்கொண்டு, அவன் — அந்த அட்சனுடைய, வடிவாளென — கூறியவாள்போல், ஒளிர் — விளங்குகின்ற,

பல் இற்று உக — பல்களுடைந்து உதிர, கிமிர் — கிமிர்ச்சியாய், படர் மேலே செல்லுகிற, கையால் — கையாலே, எற்றி — ஒரு அடி அடித்து கொண்டலினிடை - மேகத்திலே, நின்று உமிழ் — இருந்து உதிருகிற, சுடரின் — ஒளிவிளங்குதலான, மின்னினம் — மின்னல்கள், விழுவனவென்ன சிந்துவனபோல், முற்றி — உடைந்து, குண்டலமுதல் ஆம் — குண்டலமுதலேயுள்ள, மணி உக - ரத்நங்களுதிர, முழைநாலா — அக்குண்டலங்கள் புகுந்திருந்த தொண்டிகளுந் தொங்குதலாகி, இவர் குடர்நால — உயர எறின குடலுந்தொங்க, கொற்றம் — வெற்றியுள்ள, திண்சுவல் — அவனது வலிய பிடரியிலே, வயிரக்கைகொடு — வயிரம்போன்ற கையாலே, குத்தி — ஒரு குத்துக்குத்தி, புடை — அப்பிடரினிடத்தே, ஒருகுதிகொண்டார் — ஒருகுதி குதித்தார்—எ-று. முதல் - எழனுருபு. 37

நீத்தாயோடின வுதிரப்பெருநதி நீராகச்சிலை பாராகப், போய்த்தாழ்செறிதசை யரிசிந்தினபடி பொங்கப்பொருமுயிர் போகாமுன், மீத்தாகிமிர்சுடர் வயிரக்கைகொடு பிடியாவிண்ணொடு மண் காணத், தேய்த்தானூழியி னுலகேழ்தேயினு மொருதன்புகழிறை தேயாதான்.

இ-ள். நீத்து ஆய் - நீந்துதலாகி, உதிரப்பெரு நதி — ரத்தப்பிரவாகம், ஓடின — ஓடலாயின, நீராக — அந்தரத்தமேஜலமாகவும், சிலை — அம்மிக்கல், பாராக - பூமியாகவும், போய்த்தாழ் - நீண்டு தங்கின அவனது, செறிதசை - நெருங்கின இறைச்சியே, அரிசிந்தினபடி - ஊறலரிசிகளை வைத்தபடியாக, பொங்க — மேன்மேற்குவியவும், பொரும் உயிர் — சண்டைபண்ணுகிற அவனுடைய உயிர், போகாமுன் — போமுன்னே உயிரோடவனைக் குழவிபோலாக, மீத்தா — மேலேதாவுகிற, கிமிர் சுடர் — அதிககாந்தியுள்ள, வயிரக்கைகொடு — வயிரம்போன்ற கைகளாலே, பிடியா — இருபுறமும் பிடித்து, விண்ணொடு — விண்ணுலகத்தாருடனே, மண் — மண்ணுலகத்தாரும், காண - பார்க்க, தேய்த்தான் — அரைத்தார், ஊழியின் — யுகமுடிவிலே, உலகேழ் - ஏழுலகங்களும், தேயினும் — தேய்ந்தாலும், ஒரு தன்புகழ் — ஒப்பற்ற தமது புகழ், இறை - கொஞ்சமேனும், தேயாதான் - தேய்வுபடாத அனுமார். 38

புண்டாழ்குருதியின் வெள்ளத்துயிர்கொடு புக்கார்சிலர்சிலர் பொதியேயின், பண்டாரத்திடை யிட்டார் தமுடல் பட்டார்சிலர் சிலர் பயமுந்தத், திண்டாடித்திசை யறியாமறுகினர் செற்றார்சிலர் சிலர் செலவற்றார், கண்டார்கண்டதோர் திசையேவிசைகொடு கால் விட்டார்படை கைவிட்டார்.

இ-ள். புண்தாழ் - காயங்களிலேதங்கிவருகிற, குருதியின்வெள்ளத்து- ரத்தப்பிரவாகத்திலே, உயிர்கொடு — உயிர்போகாமல், புக்கார் சிலர் — சிலர் விழுந்தொளிந்தார்கள், பொதி - நெருங்கின, பேயின் — பசாசுகளினது, பண்டாரத்திடை - உணவாகியபிணமலைகளிலே, தம்முடல் — தங்களுடலைப்

பிணமென்றுகிளைக்க, இட்டார்சிலர் — சிலர் விழக்கிடத்தினார்கள், பயமுந்த-பயம் அதிகமாகி, பட்டார்சிலர் — சிலரிறந்தார்கள், செற்றார் சிலர் — பகைவரான சிலர், திண்டாடி — தடுமாறுதலாகி, திசையறியா — திக்குத் தெரியாமல், மறுகினர் — மயங்கினார்கள், சிலர் செலவு அற்றார் — சிலர் போகமாட்டாமல்நின்றார்கள், கண்டார் - இவற்றைக்கண்டசிலர், கண்டது — பார்த்தான, ஓர்திசையே — ஒரு அவ்விடத்திலேதானே, விசைகொடு — வேகங்கொண்டு, படை — ஆயுதங்களை, கைவிட்டார் — கையினின்றும் விடுதல் செய்தாராய், கால்விட்டார் — ஓடலானார்கள்—எ-று. 39

*மீனாய்வேலையை யுற்றார்சிலர்சிலர் பசுவாய்வழிதொறு மேய்வுற்றார், ஊனார்பறவையின் வடிவுற்றார்சிலர் சிலர்நான்மறையவ ருருவானார், மானார்கண்ணிள மடவாராயினர் முன்னே தங்குழல் வகிர்வுற்றார், ஆனார்சிலர்சில ரையாநின்சர ணென்றார்நின்றவ ரரியென்றார்.*

இ-ள். மீனாய் — மீனுருவாகி, வேலையையுற்றார் சிலர் — சிலர் கடலிலே போய் விழுந்தார்கள், சிலர்பசுவாய் — சிலர்பசுவுருக்கொண்டு, வழிதொறும்-வழியெல்லாம், மேய்வுற்றார் — மேய்வதானார்கள், ஊனார் — அங்கேஇறைச்சிதின்னவந்த, பறவையின் வடிவுற்றார் சிலர் - பட்சிவடிவானார்கள் சிலர், சிலர் நான்மறையவர் — சிலர்பிராமணருடைய, உருவானார் — உருவங்கொண்டார்கள், மானார் — சிலர் மான்போன்ற, கண் இளம் - கண்களுள்ள இளமையான, மடவாராயினர் — பெண்ணுருக்கொண்டார்களாய், முன்னே — அனுமார்முன்னே, தங்குழல் — தமதுகூந்தலை, வகிர்வுற்றார் — நடுவே வகிர்ந்துகொண்டு நின்றார்கள், ஆனார்சிலர் — ஆயினார்கள்சிலர், சிலர்ஐயா — சிலர் சுவாமி, நின்சரண் - உமதடைக்கலம், என்றார் — என்றார்கள், நின்றவர்-இப்படியாக நின்றவரிற்சிலர், அரியென்றார் — அரியென்று விஷ்ணுநாமத்தைச் சொன்னார்கள்—எ-று. 40

*தந்தாரமுமுறு கிளையுந்தமையெதிர் தழுவுந்தொறுநும தமரல்லேம், வந்தேம்வானவ ரென்றேகினர்சிலர் சிலர்மானுயரென வாய்விட்டார், மந்தாரங்கிளர் பொழில்வாய் வண்டுகளானார் சிலர்சிலர் மருள்கொண்டார், இந்தாரெயிறுக ளிறுவித்தார் சிலரெரிபோற்குஞ் சியையிருள் வித்தார்.*

இ-ள். தந்தாரமும் — தம்மனைவியரும், உறுகிளையும்-மிக்கவுறவினரும், எதிர் — முன்வந்து, தழுவுந்தொறும் — கிட்டுமளவில், நும — உங்களுடைய, தமர் - உறவினர், அல்லேம் — நாங்களல்லோம், வந்தேம் — இங்குவந்தோயாம், வானவரென்று — தேவர்களென்று, ஏகினர்சிலர் — போனார்கள்சிலர், சிலர் மானுயரென — சிலர் மனிதர்போல், வாய்விட்டார் — பேசினார்கள் , மந்தாரம் — மந்தாரவிருக்ஷ முதலியவைகள், கிளர் - வளர்வனவாகிய, பொழில்வாய் — சோலைகளிலே, வண்டுகளானார்சிலர்-சிலர் வண்டுருவானார்கள், சிலர்

மருள்கொண்டார்-சிலர் மயங்கினர்கள், இந்துஆர்-பாதிச்சந்திரன்போன்ற, எயிறுகள்—பற்களை, இறுவித்தார் சிலர்—ஒடித்துக்கொண்டார்கள் சிலர், எரிபோல்-நெருப்புநிறமான, குஞ்சியை—தலைமயிரை, இருள்வித்தார்-கருமையாகச் செய்துகொண்டார்கள் சிலர்—எ-று. 41

வேறு

குண்டலக்குழைமுகக்குங்குமக்கொங்கையார்
வண்டலைத்தெழுகுழற்கற்றைகால்வருடவாய்
விண்டலத்தகவிரைக்குமுதவாய்விரிதலால்
அண்டமுற்றுளதவூரழுதபேரமலையே.

இ-ள். குண்டலம்—பொன்னோலையும், குழை—அதன்மேல வளைவுமுள்ள, முகம்—முகங்களையுடைய, குங்குமம்—செஞ்சாந்துபூசின, கொங்கையார்—தனங்களுள்ள பெண்கள், வண்டு—வண்டுகள், அலைந்து—அலைதலாகி, எழு—கிளம்புகிற, குழற்கற்றை—கூந்தலின்திரள்வு, கால்வருட—காலிலேவிழ, வாய்விண்டு—வாயைத்திறந்து, அலத்தகம்—செம்பஞ்சினிறமும், விரை—பரிமளமுமுள்ளதான, குமுதம்-செவ்வல்லிமலர்போல், வாய்விரிதலால்—வாய்திறந்தழுதலாலே, அவ்வூர்—அப்படி அந்த இலங்கையிலுள்ளவர்கள், அழுத—அழுது பிரலாபித்த, பேரமலை—பெருங்குரலோசை, அண்டமுற்றுளது—தேவருலகம்போய் முட்டியது, அவ்வூரிலுள்ள குங்குமக்கொங்கையா ரழுதலாகிய பேரமலை அண்டமுற்றுளதென்க—எ-று. குழற்கற்றை கால்வருடலாவது தலைமயிரவிழ்ந்து காலளவுந்தொங்க யுத்தகளத்துக்குவந்து கணவர்மேல் விழுந்தழுகிறார்களெனக்கொள்க. அவ்வூரிலே பெண்களழுத பேரமலையெனவுமாம், அலைத்து எனவலித்தல் விகாரம். 42

கதிரெழுந்தனையசெந்திருமுகக்கணவர்மா
டெதிரெழுந்தடிவிழுந்தழுதுசோரிளநலார்
அதிநலங்கோதைசேரோதியோடன்றவூர்
உதிரமுங்தெரிகிலாதிடைபரந்தொழுகியே.

இ-ள். கதிர்—சூரியன், எழுந்தனைய-உதயமானதுபோலிருக்கிற, செந்திரு—ரத்தம்பெருகிச் சிவந்த அழகுள்ள, முகம்—முகங்களையுடைய, கணவர்மாடு—நாயகரிடத்திலே, எதிரெழுந்து-முன்னேநின்று, அடிவிழுந்து-அவர்கள் காலின்மேலேவிழுந்து, அழுதுசோர்—அழுதுசோர்கின்ற, இளநலார்—இளம்பெண்களுடைய, அதிநலம்-மிகுந்த அழகுள்ள, கோதைசேர்-மாலைமுடித்த, ஓதியோடு—கூந்தலுடனே, அன்று—அப்போதுசிந்தின, அவூர்—அவ்விடத்துள்ள, உதிரமும்—ரத்தமும், இடை—அவ்விடத்திலே, பரந்தொழுகி—பரவிநீளுதலாலும், தெரிகிலாது—சிவந்த நிறமுடைமையாலும் வேறுபாடு தோன்றவில்லை—எ-று. 43

தாவில்வெஞ்செருநிலத்திடையுலந்தவர்தமேல்
ஓவியம்புரைநலார்விழுதொறுஞ்சிலருயிர்ந்

தேவுகண்களுமிமைத்திலர்களாமிதுவெலாம்
ஆவியொன்றுடலிரண்டாயதாலேகொலாம்.

இ-ள். தாஇல் - கெடுதலில்லாத, வெம் - வெப்பமுள்ள, செருநிலத்திடை - யுத்தபூமியிலே, உலந்தவர்தமேல் - இறந்தவர்கள்மேலே, ஓவியம் - சித்திரத்தை, புரை - ஒப்பான, நலார் - பெண்கள், விழுதொறு - விழும்போது, சிலர் - சில புருஷர்கள், உயிர்த்து - உயிருளராகி, ஏவு - அப்பெண்கள் மேலேவுவனவான, கண்களும் - நேத்திரங்களும், இமைத்திலர்கள் - சிமிட்டாமற் பின்னுமுயிர்போயினர்கள், ஆம் - ஆகிய, இதுவெலாம் - இப்படியாகிற இத்தன்மைகள் முழுதும், ஆவியொன்று - உயிரொன்று, உடலிரண்டு - தேகமிரண்டு, ஆயதாலேகொல் - ஆனபடியினலேயோ—எ-று. தாஇல்பூமி - கெட்டியானதரை, ஏவுதல் - பார்த்தல். 44

ஓடினருயிர்களுடல்கள்போலுதவியால்
வீடினர்வீடினர்மிடையுடற்குவைகள்வாய்
நாடினர்மடநலார்நவையிலாநண்பரைக்
கூடினருடினரும்பர்வாழ்கொம்பனர்.

இ-ள். உயிர்கள்நாடு - உயிரைத்தேடுகிற, உடல்கள்போல் - உடம்பைப்போல், வீடினர் - இறந்தவர்களுடைய, மிடை - நெருங்கின, உடற்குவைகள்வாய் - பிணக்குப்பல்களிடத்தே, ஓடினர் - அரக்கிகளோடிவந்து, உதவியால் - அப்புருஷர்கள் பேருதவியையெண்ணி, வீடினர் - தாமுங்கூட இறந்தார்கள், மடநலார் - அப்படியிறந்த இளம்பெண்கள், நவையிலா - யாதொரு தோஷமுமில்லாத, நண்பரை - நாயகருயிரை, நாடினர் - தேடினவர்களாய், கூடினர் - கண்டு கூடினர்கள், உம்பர் - வீரசுவர்க்கத்திலே, வாழ் - வந்தவருடனே வாழ்கிற, கொம்பு - பூங்கொம்பை, அனர் - ஒத்த அரம்பையர், ஊடினர் - அதுகண்டு பிணங்கினர்கள்—எ-று. இந்த புருஷருயிருடனே பெண்களுயிருங் கூடிற்றென்பது கருத்து. 45

தீட்டுவாளனையகட்டெரிவையோர்திருவனள்
ஆட்டிநின்றயர்வதோரறுதலைக்குறையினைக்
கூட்டிநீயோருயிர்த்துணைவனெங்கோவினைக்
காட்டுவாயாதியென்றழுதுகைகூப்பினள்.

இ-ள். தீட்டு - தீட்டின, வாள்அனைய - வாளையொத்த, கண் - கண்களையுடைய, தெரிவை - பெண்ணனை, ஓர் - திரு, திருஅனள் - லட்சுமிபோலும் அழகுள்ளவள், ஆடிநின்று - நிலைகொண்டு கூத்தாடி, அயர்வது - சோர்ந்துவிழுகிற, ஓர் - ஒரு, அறுதலை - தலையற்றதான, குறையினை - முண்டத்தை கலந்தத்துடனே, கூட்டி - அதன் றலையைச் சேர்த்துவைத்து, நீ - ஒருயிர்த்துணைவன் - நீயோ என்னுயகனுக்கு ஒரு பிராண சகாயனகையாலே, எங்கோவினை - எனதுநாயகனை, காட்டுவாயாதி - காட்டக்கடவை, என்று - அழுது, கைகூப்பினள் - கை

குவித்தாள்—எ-று. தன் தோழிமாரைக்கூட்டி எங்கோவென்றுளென்க. ஆட்டிஎன ஒரொற்று விரிதல் செய்யுள் விகாரம். 46

ஏந்தினுடலையையோரெழுதருங்கொம்பனாள்
காந்தனின்றுடுவானுயர்கவந்தத்தினை
வேந்தனீயலசினாய்விடுதியானடமெனப்
பூந்தளிர்க்கைகளான்மெய்யுறப்புல்லினாள்.

இ-ள். எழுதரும் – எழுதப்படாத அழகுள்ள, ஓர் கொம்பு அனாள்-கொம்புபோன்ற ஒருத்தி, தலையையேந்தினாள்—அற்றதலையைக் கையிலே கொண்டு, நின்றுடுவான் – நின்று ஆடுகிறவனாகிய, காந்தன் – நாயகனுடைய, உயர் – நீண்டுள்ள, கவந்தத்தினை – தலைக்குறையைப்பார்த்து, வேந்தன்-அரசனே, நீ அலசினாய் – ஆடி இளைத்தாய், நடம்விடுதியெனா – இனி ஆடுதலை நிறுத்தென்று, பூந்தளிர் – அழகிய தளிர்போன்ற, கைகளால் – தன் கைகளாலே, மெய் – அவனுடலிலே, உற – அவன்தலை ஒட்ட, புல்லினாள்-சேர்த்தாள் ஒரு கொம்பனாள்—எ-று. 47

நாடினார்நாடியேநனைவருங்கொம்பனார்
வாடினார்கணவர்தம்மார்புறத்தழுவியே
வீடினாரவ்வயின்வெருவிவிண்ணவர்கடாம்
ஓடினாரரசன்மாடணுகிநின்றுரைசெய்வார்.

இ-ள். நாடினார் – இப்படித்தேடினார்கள், நாடி—தேடி, நனைவரும்-அரும்புகள் தோன்றுகிற, கொம்பு அனார் — கொம்பையொத்தபெண்கள், வாடினார் - இளைத்தவர்களாய், கணவர் தம் - நாயகருடைய, மார்பு - மார்பை, உறத்தழுவி – இறுகப் பிடித்துக்கொண்டு, வீடினார் – சிலரிறந்தேபோனார்கள், அவ்வயின் – அப்போது, விண்ணவர்கள் - சோலைகாக்கும் தேவர்கள், வெருவி – பயந்து, ஓடினார் – ஓடிப்போய், அரசன் – இராவணனுடைய, மாடணுகி – சமீபத்திலே நெருங்கி, நின்றுரை செய்வார் – நின்று சொல்லுகிறார்கள்—எ-று. ஏ ஏ தாம் அசைகள் அப்போது. 48

வேறு

கயன்மகிழ்கண்ணிணைகலுழிகான்றுகப்
புயன்மகிழ்புரிகுழல்பொடியளாவுற
அயன்மகன்மகன்மகனடியின்வீழ்ந்தனள்
மயன்மகள்வயிறலைத்தலறிமாழ்கினாள்.

இ-ள். கயல் – கண்டோர்கயலென்று, மகிழ் – சந்தோஷிப்பதான, கண்ணிணை – இரண்டு கண்களிலும், கலுழி – நீர்பெருகுதலாய், கான்று உக-மிகுந்து சிந்த, புயல் – மேகமென்று, மகிழ் – சந்தோஷிப்பதான, புரிகுழல்-கொண்டையிட்ட கூந்தல், பொடி—அவிழ்ந்து பூதூளியிலே, அளாவுற-படிந்து புரள, அயன் – பிரமனுடைய, மகன் – மகனான புலத்தியனுடைய,

மகன் - மகனான விச்சிரவாவினுடைய, மகன் - மகனான இராவணனுடைய, அடியின் காலிலே, வீழ்ந்தனன் - விழுந்து, மயன் மகள் - மயன் புத்திரியான மண்டோதரி, வயிறலைத்து - தன் வயிற்றைப்பிசைந்துகொண்டு, அலறி - கூச்சலிட்டு, மாழ்கினள் - வருந்தினள் — எ-று. 49

தாவருந்திருநகர்த்தையலார்முதல்
ஏவருமிடைவிழுந்திரங்கியேங்கினர்
காவலன்கான்மிசைவிழுந்துகாவன்மாத்
தேவருமழுதனர்களிக்குஞ்சிந்தையார்.

இ-ள். தா அரும் - அழிதலில்லாத, திருநகர் - அழகுள்ள - அவ்வூரிலுண்டான, தையலார்முதல் - பெண்கள் முதலான, எவரும் - எல்லாரும், இடைவிழுந்து - அவள் காலிலேவிழுந்து, இரங்கி ஏங்கினர் - அழுது பிரலாபித்தார்கள், காவலன்கால்மிசை - அப்போதிராவணன்காலிலே, விழுந்து - காவல்மா வணங்காக்கும் பெருமையுள்ள, தேவரும் - தேவர்களும், அழுதனர் - அழுதார்கள், களிக்கும் - சந்தோஷிப்பதான, சிந்தையார் - மனமுடையவராய் இராவணனுக்காக அழுதனர், இராவணனும் - இனி அழிவது கருதிக் களித்தனரென்பது கருத்து — எ-று. 50

அட்சயகுமாரன்வதைப்படலம் முற்றிற்று

ஆ படலம் - 11 - க்கு திருவிருத்தம் - 983

கம்பநாட்டாழ்வார் திருவடிகளே சரணம்

பன்னிரண்டாவது

# பாசப்படலம்

அவ்வழியவ்வுரைகேட்டவாண்டகை
வெவ்விழியெரியுகவெகுளிவீங்கினன்
எவ்வழியுலகமுங்குலையவிந்திரத்
தெவ்வழிதாவுயர்விசயச்சீர்த்தியான்.

இ-ள். அவ்வழி – அப்போது, அவ்வுரை-அந்தத்தம்பி இறந்தசொல்லை. கேட்ட ஆண்தகை – ஆண்மையிற்சிறந்த மேகநாதன், வெவ்விழி – வெவ்விய கண்களிலே, எரிஉக - நெருப்புச்சிந்த, வெகுளி - கோபம், வீங்கினன்- அதிகமானன், எவ்வழி – எந்த இடங்களிலுமுள்ள, உலகமும் – லோகங்களும், குலைய – நடுங்க, இந்திரத்தெவ் - இந்திரனுகியபகை, அழிதா – கலங்க, உயர் - உயர்ந்த, விசயம் - வெற்றிகொண்ட, சீர்த்தியான் – சிறப்பின்மிக்கவன்—எ-று. 1

அரஞ்சுடர்வேற்றனதனுசனிற்றசொல்
உரஞ்சுடவெரியுயிர்த்தொருவனேங்கினன்
புரஞ்சுடவரிசிலைப்பொருப்புவாங்கிய
பரஞ்சுடரொருவனைப்பொருவும்பான்மையான்.

இ-ள். அரம் - அரத்தாலராவி, சுடர் – விளங்குகின்ற, வேல் – வேலைக்கொண்ட, தனதனுசன - தனதுதம்பி, இற்றசொல் – இறந்தானென்னும் வார்த்தை, உரஞ்சுட - தன்மனத்தைக் கொதிப்புச்செய்ய, எரியுயிர்த்து- நெருப்பைக் கக்கிக்கொண்டு, ஒருவன் — தானொருவனுகவே, ஏங்கினன்- எழுந்தான், புரஞ்சுட – திரிபுரத்தையெரிக்கிறதற்கு, வரிசிலை – வரிந்தவில்லாக, பொருப்பு – மேருமலையை, வாங்கிய – வளைத்த, பரஞ்சுடர் - பரஞ்சோதியான, ஒருவனை – ஒப்பற்றசிவனை, பொருவும் – ஒப்பான, பான்மையான் - ஆக்ஞையையுடையவன்—எ-று. 2

ஏறினன்விசும்பினுக்கெல்லைகாட்டுவ
ஆறிருநூறுபேய்பூண்டவாழித்தேர்
கூறினகூறினசொற்கள்கோத்ததால்
பீறினநெடுந்திசைபிளந்ததண்டமே.

இ-ள். விசும்பினுக்கு – ஆகாயத்தினுயர அளவை, எல்லை – இவ்வளவேயென்று, காட்டுவ – காட்டத்தக்க, ஆறிருநூறு - 1200 — ஆயிரத்திருநூறு, பேய்பூண்ட – பசாசுகட்டின, ஆழித்தேர் – உருளைகளுள்ள தேரின்மேல், ஏறினன் – ஏறினன், கூறினகூறின - அவ்வவருஞ்சொன்ன, சொற்கள்-

இந்திரசித்துத் தேரேறினானென்னும் வார்த்தைகள், கோத்ததால் - ஒருசேரக்கூடி மோதுகிறதினாலே, நெடுந்திசை – நீண்டதிக்குகள், பீறின – கிழிந்தன, அண்டம்பிளந்தது – ஆகாயமுங் கிழிந்தது—எ-று. 3

வேறு

ஆர்த்தனகழலுந்தாரும்பேரியுமசனியஞ்ச
வேர்த்துயிர்குலையமேனிவெதும்பினனமரர்வேந்தன்
சீர்த்ததுபோருமென்னாத்தேவர்க்குந்தேவராய
மூர்த்திகடாமுந்தத்தம்யோகத்தின்முயற்சிவிட்டார்.

இ-ள். கழலுந்தாரும் — வீரக்கழல்களுங் கிங்கிணிமாலைகளும், பேரியும்-முரசங்களும், அசனி – இடியும், அஞ்ச - அஞ்சுவதாக, ஆர்த்தன - எங்குமுழங்கின, வேர்த்து – உடம்பெல்லாம் வேர்த்து, உயிர்குலைய – உயிரும் நடுங்க, மேனி – உடம்பு, வெதும்பினன் – கொதிப்புக்கொண்டான், அமரர் வேந்தன் - தேவராசன், போரும் - இனிச்சண்டையும், சீர்த்தது என்னா-கனமாயிற்றென்று, தேவர்க்கும் - தேவர்களுக்கும், தேவராய் – தேவர்களான, மூர்த்திகள் – மும்மூர்த்திகள், தாமும் – தாங்களும், தத்தம் – தங்கள் தங்கள், யோகத்தின் - கூட்டத்திலே, முயற்சி — முயன்றிருத்தலை, விட்டார் — விட்டிட்டார்கள்—எ-று. தார் – சேனையெனவுமாம். 4

தம்பியையுன்னுந்தோறுந்தாரைநீர்ததும்புங்கண்ணான்
வம்பியல்சிலையைநோக்கிவாய்மடித்துருத்திநக்கான்
கொம்பியன்மாயவாழ்க்கைக்குரங்கினாற்குரங்காவாற்றல்
எம்பியோதேய்ந்தானெந்தைபுகழன்றோதேய்ந்ததென்றான்.

இ-ள். தம்பியை – தன் தம்பியான அட்சனை, உன்னுந்தோறும் - நினைக்க நினைக்க, தாரைநீர் – தாரை தாரையாக நீரானது, ததும்பும் - துளும்புகின்ற, கண்ணான் – கண்களையுடைய அவன், வம்பு – அம்புகள் தொடுப்பதில்லாமல் வியர்த்தமாக, இயல் – இருக்கிற, சிலையைநோக்கி – வில்லைப் பார்த்து, வாய்மடித்து - இதழைமடித்துக்கடித்து, உருத்து-கோபங்கொண்டு, நக்கான் – சிரித்து, கொம்பு - மரக்கொம்புகளிலே, இயல் – சஞ்சரிப்பதாய், மாயவாழ்க்கை – நமக்கு மறைந்து திரிகிற வாழ்வையுடைய, குரங்கினால்-இந்த ஒரு குரங்காலே, குரங்கா – கோணாத, ஆற்றல் - சாமர்த்தியமுள்ள, எம்பியோ - எனது தம்பியா, தேய்ந்தான் - தேய்வுபட்டான் அன்று, எந்தை-எனது தந்தையினுடைய, புகழன்றோ – கீர்த்தியல்லவோ, தேய்ந்தது-தேய்வுபட்டது, என்றான் - என்று நினைந்தான்—எ-று. 5

வேறிரண்டனவும்வில்லுமிடைந்தவும்வெற்பென்றாலும்
கூறிரண்டாக்கும்வாழ்ககைக்குழவையுங்குணிக்கலாற்றேம்
சேறிரண்டருகுசெய்யுஞ்செறிமதச்சிறுகண்யானை
ஆறிரண்டஞ்சுநூற்றினிரட்டிதேர்த்தொகையுமஃதே.

இ-ள். வேல் — வேலாளிகளாக, திரண்டனவும் — கூடியவைகளையும், வில்லு — வில்லாளிகளாக, மிடைந்தவும் — கூடியவைகளையும், வெற்பென்று லும் — மலையேயானாலும், கூறிரண்டு — இரண்டுதுண்டாக, ஆக்கும் - வெட்டத்தக்க, வாள் — வாளாயுதங்களை, கை — கைகளிலேகொண்ட, குழுவையும் — கூட்டங்களையும், குணிக்கல் — அளவுசெய்தற்கு, ஆற்றேம் - எம்மாலாகா, இரண்டருகு — இருபுறத்திலும், சேறுசெய்யும் — சேறுபண்ணுகின்ற, செறிமதம் — மதச்செறிவையும், சிறுகண் - சிறுகண்களையுமுடைய, யானை — யானையினளவு, ஆறிரண்டு - பனிரண்டுகூடின, அஞ்சுநூற்றினிரட்டி — ஆயிரம், தேர்த்தொகையும் — தேரினளவும், அஃதே — அந்தப் பன்னீராயிரமேயாம் — எ-று. 6

ஆயமாத்தானைதான்வந்தண்மியதண்மவேனைத்
தீயவாணிருதர்வேந்தர்சேர்ந்தவர்சேரத்தேரின்
ஏயெனுமளவின்வந்தானிராவணனிருந்தயாணர்
வாயிறோய்கோயில்புக்கானருவிசோர்வயிரக்கண்ணான்.

இ-ள். ஆய — அப்படிப்பட்ட, மாத்தானை — பெருஞ்சேனைகள், வந்து அண்மியது — வந்துகூடிற்று, அண்ம — கூடவே, ஏனை — மற்ற அந்த, தீய - பொல்லா, வாள் — கத்திகளையுடைய, நிருதர்வேந்தர் — ராக்ஷதராஜர்களில், சேர்ந்தவர்சேர — கூடினவர்கள்கூட, தேரின் — தேருடனே, ஏயெனுமளவில் - உம்மென்னுமளவில், வந்தான் — வந்து, இராவணனிருந்த - இராவணனிருக்கிற, யாணர் — அழகான, வாயில்தோய் - முன்முகப்பையுடைய, கோயில் — கோயிலுக்குள்ளே, புக்கான் — போனான், அருவி — அருவிபோற்கண்ணீர், சோர — ஒழுகாநின்ற, வயிரக்கண்ணான் — கோபக்கண்களையுடைய இந்திரசித்து — எ-று. 7

தாளிணைவிழுந்தான்றம்பிக்கிரங்கினன்றறுகணனும்
தோளிணைபற்றியேந்தித்தழுவினனழுதுசோர்ந்தான்
வாளிணைநெடுங்கண்மாதர்வயிறலைத்தலறிமாழ்க
மீளிபோன்மொய்ம்பினனும்விலக்கினன்விளம்பலுற்றான்.

இ-ள். தாளிணை — இராவணனுடைய இரண்டுகால்மேலும் விழுந்தான் விழுந்து, தம்பிக்கு — தம்பிக்காக, இரங்கினன் — அழுதான்அதுகண்டு, தறுகணனும் — அஞ்சாதராவணன், தோளிணை — மகனிரண்டு தோள்களையும், பற்றியேந்தி — பிடித்துத்தூக்கி, தழுவினன் — ஆலிங்கனஞ்செய்து, அழுது சோர்ந்தான் — தானும் அழுது பிரலாபித்தான், வாளிணை - அப்போதிரண்டு வாள்கள்போன்ற, நெடுங்கண் — நீண்டகண்களையுடைய, மாதர் - அட்சனது தேவிகள், வயிறலைத்து - வயிற்றிலடித்துக்கொண்டு, அலறிமாழ்க — அழுது துக்கிக்க, மீளிபோல் — சிங்கம்போன்ற, மொய்ம்பினனும் — புஜபலமுள்ள இந்திரசித்து, விலக்கினன் — அவர்களைப் போகச்சொல்லி, விளம்பலுற்றான் — சொல்லலானான் தந்தையைப்பார்த்து — எ-று. 8

ஒன்றுநீயுறுதியோராயுற்றிருந்துளேயகிற்றி
வன்றிறற்குரங்கினாற்றன் மரபுளியுணர்ந்துமன்னா
சென்றுநீர்பொருதிரென்றுதிறத்திறஞ்செலுத்தித்தேயக்
கொன்றனைநீயேயன்றோவரக்கர்தங்குழுவையென்றான்.

இ-ள். ஒன்றநீ — ஐயாநீர் ஒருவகையாலும், உறுதி — பலாபலங்களை, ஓராய் — எண்ணுதிருக்கிறீர், உற்றிருந்து — துன்பம்வந்தபின்பு, உளேயகிற்றி- வருந்துகிறீர், வன்திறல் — வலியசாமர்த்தியமுள்ள, குரங்கின் — குரங்கினு டைய, ஆற்றல் — சாமர்த்தியத்தை, மரபுளி — கிரமமாகவே, உணர்ந்தும்- தெரிந்திருந்தும், மன்னா — அரசனே, நீர்சென்று — நீங்கள்போய், பொருதி ரென்று — சண்டைபண்ணுங்களென்று, திறத்திறம் — வரிசை வரிசையாக, செலுத்தி — போகச்செய்து, தேய — பின்பு அட்சனுந்தேயும்படி, கொன்ற னைநீயே — நீரேகொல்லும்படிசெய்தீர், அன்றோ — அல்லவோ, அரக்கர்தங் குழுவை — ராட்சதர் கூட்டங்களை, என்றான் — என்றுசொன்னான்—எ-று.

கிங்கரர்சம்புமாலிகேடிலாவைவரன்றிப்
பைங்கழலரக்கரோடுமுடன்சென்றபகுதிச்சேனை
இங்கொருவருமீண்டார்தாமில்லையேற்குரங்கதெந்தாய்
சங்கரனயன்மாலென்பார்தாமெனுந்தகையதாமே.

இ-ள். கிங்கரர் — ஊழியக்காரர்களும், சம்புமாலி — சம்புமாலியும், கே டிலா — அழிவுபடாத, ஐவர் — பஞ்சசேனாபதிகளும், என்று — என்றுசொல் கிற, இ — இவ்விதமான, பைங்கழல் — பசிய பொற்கழல்கட்டின, அரக்கரோ டும் — ராட்சதர்களுடனே, உடன்சென்ற — கூடப்போன, பகுதிச்சேனை- பிராதானியமுள்ள சேனைகளில், இங்கு — இங்கே, ஒருவரும் — யாரேனுமொ ருவரும், மீண்டார்தாம் — திரும்பினவர்கள், இல்லையேல் — இல்லையேயா னால், குரங்கு அது — அந்தக்குரங்கு, எந்தாய் — என் ஐயனே, சங்கரன்- சிவன், அயன் — பிரமன், மால் என்பார் — விஷ்ணு ஆகிய, தாம் எனும்- இம்மூவரிலொருவனுமென்னும், தகையது — பெருமையுள்ளது, ஆமே- ஆமல்லவோ—எ-று. 10

திக்கயவலியுமேனாடிரிபுரந்தீயச்செற்ற
முக்கணன்கைலையோடுமுலகொருமூன்றும்வென்றாய்
அக்கனைக்கொன்றுநின்றகுரங்கினையாற்றல்கண்டி
புக்கினிவென்றுமென்றாற்புலம்பன்றிப்புலமைத்தாமோ.

இ-ள். திக்கயவலியும் — திக்கியானைகளின் பலமும், மேனாள் — முன் னாளிலே, திரிபுரம் — முப்புரமும், தீய — வேவும்படி, செற்ற — எரித்த, முக் கணன் — சிவனுடைய, கைலையோடும் — வெள்ளி மலையுடனே, உலகொரு மூன்றும் — திரிலோகமும், வென்றாய் — செயித்தீர், அக்கனை — இப்போது அட்சனை, கொன்றுநின்ற — கொன்றிருக்கிற, குரங்கினது-குரங்கினுடைய,

ஆற்றல்—பலப்பரிக்ஷையை, காண்டி – பார்க்கிறீர், புக்கு இனி – இனிப் போய், வென்றும் – வென்றேமே, என்றால் – ஆனால், புலம் புஅன்றி – நாம் வியசனப்படுகிறதேயம்லாமல், புலமைத்து-நாம் புத்தியுள்ளதன்மையோம், ஆமோ – ஆவோமோ—எ-று. 11

ஆயினுமையநொய்தினாண்டொழிற்குரங்கையானே
ஏயெனுமளவிற்பற்றித்தருகுவெனிடரென்றொன்றும்
நீயினியுழக்கற்பாலையல்லைநீடிருத்தியென்னப்
போயினனமரர்கோவைப்புகழொடுகொண்டுபோந்தான்.

இ-ள். ஆயினும் – ஆனாலும், ஐய – ஐயனே, நொய்தின் – விரைவிலே, ஆண்தொழில் – ஆண்மைத்தொழில் செய்கிற, குரங்கை – இந்தக்குரங்கை, யானே – நானேபோய், ஏயெனுமளவில் – உம்மென்னுமளவிலே, பற்றித் தருகுவென் – பிடித்துக்கொண்டு வருகிறேன், இடரென்று – துன்பமென் கிற, ஒன்றும் – ஒன்றைமாத்திரம், நீ இனி – இனிமேல் நீ, உழக்கற்பாலை – வருந்தத்தக்கனை, அல்லை – அல்லனாகுக, நீடு – எக்காலமும் இடர் அல்லை யாக, இருத்தியென்ன – இருவென்று சொல்லிக்கொண்டு, போயினன் – போனான், அமரர்கோவை – இந்திரனை, புகழொடு – வெற்றிகொண்டவ னாகி அவன் கீர்த்தியுடனே, கொண்டு – கட்டிக்கொண்டு, போந்தான் – வந்தவனான மேகநாதன் இந்திரசித்து—எ-று. நீடு இடரென்றொன்று நீ யினி உழக்கற்பாலை யல்லையெனக் கூட்டுக. 12

உடைந்தவலிருணோற்றுப்பலுருக்கொடக்கதிர்க்குழாங்கள்
மிடைந்தனமிலைச்சியாங்குமெய்யணிபலவுமின்னக்
குடைந்துவெம்பகைவருன்றோய்கொற்றப்போர்வாள்வில்வீச
அடைந்தகாரரக்கர்தானையகலிடமிடமின்றென்ன.

இ-ள். உடைந்த — முன்னே தோற்றுப்போன, வல்லிருள் — வலிய இருளானது, நோற்று – சூரியனை வெல்லத் தவஞ்செய்து, பல் உருக்கொடு – பலரூபங்கொண்டு வென்று, அக்கதிர்க்குழாங்கள் – அந்தச் சூரியனொளிக் கூட்டங்களை, மிடைந்தன – நெருக்கமுள்ளனவாக, மிலைச்சியாங்கு – சூட் டிக்கொண்டாற்போல், மெய் – இருள்போன்ற உடம்பிலே, அணி – சூரிய னொளிபோன்ற ஆபரணங்கள், பலவும் – பலவகைகளும், மின்ன – பிரகா சிக்க, குடைந்து — அழுந்தி, வெம்பகைவர் – வெவ்விய பகைவருடைய, உளன் – சரீரத்திலே, தோய் – பதிவதான, கொற்றம் - வெற்றியுள்ள, போர் வாள் – வலிய கத்திகள், வில்வீச – ஒளிவிட, கார் அரக்கர் – கரிய ராட்ச தர்கள் கூடின, சேனை — சேனைகள், அகலிடம் – அந்த அகன்றயுத்த பூமி யானது, இடம் இன்றென்ன – இடம் போதாதென்னும்படி, அடைந்த- வந்தன—எ-று. 13

ஆழியந்தேறுமாவுமரக்கருமுருக்குஞ்செங்கட்
சூழிவெங்கோபமாவுந்துவன்றியநிருதர்சேனை

ஊழிவெங்கடலிற்சுற்றவொருதனிநடுவணின்ற
பாழிமாமேருவொத்தான்வீரத்தின்பான்மைதீர்ப்பான்.

இ-ள். ஆழி – உருளையையுடைய, அம்தேரும் – அழகிய தேர்களும், மாவும் — குதிரைகளும், அரக்கரும் – ராக்ஷதர்களும், உருக்கும் – கோபிக்கத் தக்க, செங்கண் – சிவந்தகண்களையுடைய, சூழி — முகபடாமணிந்த, வெங் கோபமாவும் – வெவ்விய கோபமுள்ள யானைகளும், அவன்றிய – ஆகக் கூடின, நிருதர்சேனை – ராக்ஷத சேனைகளெல்லாம் வந்து, ஊழி — பிரளய காலத்து, வெங்கடலில் – கொதிப்புள்ள கடல்போல், சுற்ற — சூழ, ஒருதனி- தானொன்றாகவே, நடுவண் – அக்கடலினடுவிலே, நின்ற – நிற்கிற, பாழிமா- மிகப்பெரிதான, மேரு – மேருமலையை, ஒத்தான் – ஒப்பாயினன், வீரத் தின் – தனது வீரத்தன்மையினது, பான்மை – முறையை கடனை, தீர்ப் பான் – தீர்க்கவல்ல இந்திரசித்து—எ-று. வீரரென்றுள்ளோரை வெல்ல வல்லோனெனவுமாம் தம்பி பழிவாங்க வல்லான் என்பது கருத்து. 14

சென்றனனென்பமன்னோதிசைகளோடுலகமெல்லாம்
வென்றவனிவனென்றாலும்வீரத்தேநின்றவீரன்
அன்றதுகண்டவாழிமநுமனையமரினாற்றல்
நன்றெனவுவகைகொண்டான்யாவருநடுக்கமுற்றார்.

இ-ள். திசைகளோடு – எட்டுத்திக்குகளுடனே, உலகம்யாவும் – எல்லா வுலகங்களையும், வென்றவன் – ஜயங்கொண்டவன், இவனென்று – இவனே யென்று, ஆலும் – கொண்டாடும்படியான, வீரத்தே – வீரத்தன்மையிலே, நின்ற — நிலைபெற்றுள்ள, வீரன் – வீரனை இந்திரசித்து, சென்றனன்- இப்படியாகப்போனான், அன்று – அப்போது, அதுகண்ட — அவ்வகை செய்த, வாழி – ஜயத்தையுடைய, அனுமனை – திருவடியைப்பார்த்து, அமரி னாற்றல் — இவனது போர்வல்லமை, நன்றென – மிகவும் அருமைதா னென்று, உவகைகொண்டான் – சந்தோஷப்பட்டான், யாவரும் – அது கண்ட எல்லாரும், நடுக்கமுற்றார் – அனுமானை என்செய்வனோவென்று பய மடைந்தார்கள்—எ-று. என்ப – மன்னோ – அசைகள். 15

இலைகுலாம்பூணினானுமிரும்பிணக்குருதியிரத்
தலகில்வெம்படைகடெற்றியளவிடற்கரியவாகி
மலைகளுங்கடலும்யாறுங்கானமும்பெற்றுமற்றோர்
உலகமேயொத்ததம்மாபோர்ப்பெருங்களமென்றன்று.

இ-ள். இலைகுலாம் – தகட்டுவடிவாக விளங்குகிற, பூணினானும் – ஆபர ணங்களையுடைய இந்திரசித்து, இரும்பிணம் – பெரிதான பிணத்திலுள்ள, குருதியிரத்து – ரத்தப்பிரவாகத்தினாலும், அலகில் – கணக்கில்லாத, வெம் படைகள் – வெவ்விய ஆயுதங்கள், தெற்றி – தேறுதலாகி தடுப்பனவாய், அளவிடற்கு – அளவுசெய்யவும், அரியவாகி – அருமையுள்ளனவாய், மலை களும் – பிணங்களானமலைகளும், கடலும் – குருதியாகிய கடலும், யாறும்—

ஈரமாகிய ஆறும், கானமும் — வெம்படைகளாகிய காடும், பெற்று — உள்ளதாய், மற்றோருலகமே ஒத்தது - வேறேயொரு இடம்போல்வதே ஆயிற்று, போர்ப்பெருங்களமென்று — பெரிய யுத்தபூமியென்று, உன்னு — நினைத்து- எ-று. ஈரம் - கரைபுரண்டு மேல்வழிந்தோடுவது. 16

வெப்படைகில்லாநெஞ்சிற்சிறியதோர்விம்மல்கொண்டான்
அப்படைவேலையன்னபெருமையாராற்றலோடும்
ஒப்படைகில்லாரெல்லாமுலந்தனர்குரங்குமொன்றே
எப்படைகொண்டுவெல்வதிராமன் வந்தெதிர்க்கினென்றான்.

இ-ள். வெப்பு - அடைகில்லா கோபங்கொள்வதில்லாமல், நெஞ்சில்- மனத்திலே, சிறிய ஓர் - ஒருபடி கொஞ்சம், விம்மல்கொண்டான் - ஓய்வுள்ளவனுனான், அப்பு அடை - ஜலமயமான, வேலையன்ன - கடலே போன்ற, பெருமையர் — பெருமையுள்ள வீரர்கள், ஆற்றலோடும் — தமது வல்லமைக்கு, ஒப்பு அடைகில்லார் — சமானமில்லாதவர்கள், எல்லாம் உலந்தனர் - எல்லோரும் அழிந்தார்கள், குரங்குமொன்றே — ஒரு குரங்கினாலே யானால், இராமன் வந்து - அந்த இராமனைவன் வந்து, எதிர்க்கின் — எதிரிடும்போது, எப்படைகொண்டு — இனி எந்தச்சேனைகளைக்கொண்டு, வெல்வது - ஜயங்கொள்ளலாவது, என்றான் — என்றெண்ணினான்—எ-று. 17

கண்ணனருயிரேயொப்பார்கைப்படைக்கலத்திற்காப்பார்
எண்ணலாந்தகைமையில்லாரிறந்திடைக்கிடந்தார்தம்மை
மண்ணுளேநோக்கிநின்றுவாய்மடித்துருத்துமாயாப்
புண்ணுளேகோலிட்டன்னமானத்தாற்புழுங்குகின்றான்.

இ-ள். கண் அனார் - தமக்குகண்போல்வாரும், உயிரே அன்னார் - உயிரேபோல்வாரும், கை - தமதுகையிலேயுள்ள, படைக்கலத்தில் — ஆயுதம் போல், காப்பார் — காப்பவரும் ஆக, எண்ணலாம் — அளவுசெய்யலாகிய, தகைமையில்லார் — தகுதியில்லாதவர்கள், இறந்து — செத்து, இடை — அவ்விடத்தே, கிடந்தார் தம்மை — கிடக்கிறவர்களை, மண்ணுளே — அந்த யுத்தபூமியிலே, நோக்கிநின்று — பார்த்து அங்கங்கே நின்று, வாய்மடித்து- இதழைமடித்துக் கடித்து, உருத்து — கோபங்கொண்டு, மாயா — ஆறாத, புண்ணுளே — புண்ணிலே, கோலிட்டன்ன — கோலாற்குத்தினாற்போல், மானத்தால் — ரோஷத்தினாலே, புழுங்குகின்றான் — வெப்பங்கொள்ளுகிறான்—எ-று. 18

கானிடையத்தைக்குற்றகுற்றமுங்கரனார்பாடும்
யானுடையெம்பிவீந்தவிடுக்கணும்பிறவுமெல்லாம்
மானிடரிருவரானும்வானரமொன்றினானும்
ஆனிடத்துளவென்வீரமழகிற்றேயம்மவென்றான்.

இ-ள். கானிடை — காட்டிலே, அத்தைக்கு — சூர்ப்பநகைக்கு, உற்ற- உண்டான, குற்றமும் — பழிப்பும், கரனார்பாடும் — காதூஷணாதிகள் பட்ட

தும், யானுடை — என்னுடைய, எம்பி வீந்த — தம்பி யிறந்த, இடுக்கணும்- துன்பமும், பிறவும் — மற்றவைகளும், எல்லாம் — முழுதும் வனமழிந்தது முதலானவையெல்லாம், மானிடர் — மனிதர், இருவராலும் — இரண்டுபேர் களாலும், வானரமொன்றினுலும் - ஒரு குரங்கினுலும், ஆனிடத்து — ஆன போதில், உளஎன்வீரம் - என்னிடத்துள்ள சாமர்த்தியம், அழகிற்றே — மிக நன்றானதே, அம்ம — இதாச்சரியம், என்றான் - என்றெண்ணினுன்—எ-று.

நீப்புண்டவுயிரவாகிநெருப்புண்டநிறத்திற்றோன்றி
ஈப்புண்டற்கரியவாயபிணக்குவடிடறச்செல்வான்
தேய்ப்புண்டதம்பியாக்கைசிவப்புண்டகண்கடீயில் [ன்.
காய்ப்புண்டசெம்பிற்றோன்றக்கறுப்புண்டமனத்தன்கண்டா

இ-ள். உயிர் நீப்புண்டவாகி — உயிர்போனதாய், நிறநெருப்புண்டதில்- நிறமானது நெருப்பாலெரிகிறதுபோல், தோன்றி - காணலாய், ஈப்புண்டற்கு — அசைத்தற்கு, அரிய ஆய — அருமையான, பிணக்குவடு - பிணமலைகள், இடற — தடுக்கும்படியாக, செல்வான் — போகிற இந்திரசித்து, தேய்ப்புண்ட - அரைப்பட்ட, தம்பியாக்கை — தன் தம்பிசரீரத்தை, சிவப்புண்ட- சிவந்த, கண்கள் — கண்களானவை, தீயில் — நெருப்பிலே, காப்புண்ட- காய்ச்சின, செம்பில் — செம்பைப்போல், தோன்ற — தெரியவிளங்க, கறுப்புண்ட — வயிரமுளதான, மனத்தன் — மனமுள்ளவனுகி, கண்டான்- பார்த்தான்—எ-று. 20

தாருகன்குருதியன்னகுருதியிற்றனிமாச்சீயம்
கூருகிர்கிளைத்தகொற்றக்கனகன்மெய்க்குழம்பிற்றோன்றத்
தேருகக்கையின்வீரச்சிலையுகவயிரச்செங்கண்
நீருகக்குருதிசிந்தநெருப்புகவயிர்த்துநின்றான்.

இ-ள். தாருகன் — தாருகாசுரனது, குருதியன்ன — ரத்தம்போன்ற, குருதியில் — ரத்தத்திலே, தனிமா - ஒப்பில்லாத பெருமையுள்ள, சீயம் - நரசிங்கத்தினது, கூருகிர் — கூரிய நகத்தாலே, கிளைத்த — வகிரலாய், கொற்றம் - கொல்லப்பட்ட, கனகன் — இரணியனுடைய, மெய்க்குழம்பில் — உடம்பு குழம்பிக் கிடப்பதுபோல், தோன்ற — தம்பியாக்கைதெரிய, தேர்உக- அவ்விடத்தே தேருமழுந்த, கையின் - கையிலிருந்து, வீரம் — வெற்றியைத் தருவதான, சிலைஉக — வில்லு நழுவ, வயிரம் — வீரம்பொருந்தின, செங்கண்- சிவந்தகண்களிலே, நீர்உக — ஜலமுமொழுக, குருதிசிந்த — ரத்தமுஞ்சிந்த, நெருப்புஉக — நெருப்புமுதிர, வயிர்த்து — முழுதும் வயிரங்கொண்டு, நின்றான் — நின்று நோக்கினுன்—எ-று. 21

வெவ்விலையயில்வேலுந்தமெய்மையைக்கருதிநோக்கி
வவ்வுதல்கூற்றுமாற்றான்மாறுமாறுலகின்வாழ்வார்
அவ்வுலகத்துளாருமஞ்சுவரொளிக்கவையா
எவ்வுலகத்தையுற்றுயெம்மைநீத்தெளிதினந்தாய்.

இ-ள். வெவ்விலே—வெற்றிலேபோலும், அயில்வேல் — கூரியவேலே யுடைய, உந்தை—உனது தந்தையினது, வெம்மையை—கோபத்தை, கருத் நோக்கி — எண்ணிப்பார்த்து, வவ்வுதல் - உன் உயிர் பற்றுதற்கு, கூற்றும் யமனும், ஆற்றான்—அஞ்சுவான், மாறுமாறு — இன்னம் வெவ்வேறான உலகின் — உலகத்திலே, வாழ்வார்—வாழ்வார்களான, அவ்வுலகத்துளாரும் அந்த அந்த வுலகத்துள்ளவர்களும், ஐயா — ஐயனே, அஞ்சுவர் — பயப்படு வார்கள், ஒளிக்க — உன்னை மறைக்க, அஞ்சுவர் — நீ எங்களுக்குக் காணமல் எவ்வுலகத்தை—எந்தவுலகத்தை, உற்றாய் — அடைந்தாய், எம்மைநீத்து· எங்களைவிட்டிட்டு, எளிதின் — அதிசுலபத்திலே, எந்தாய்—என் ஐயனே.

ஆற்றலனனையனாகியறிவழிந்தயரும்வேலை
சீற்றமென்றொன்றுதானேமேனிமிர்செலவிற்றாகித்
தோற்றியதுன்பநோயையுள்ளுறத்துரந்ததம்மா
ஏற்றஞ்சாலாணியாணியெதிர்செலக்கடாயதென்ன.

இ-ள். ஆற்றலன் — பொறுதவனாய், அனையனாகி — அப்படியானவன் அத்தன்மையனாகி, அறிவழிந்து—புத்திமயங்கி, அயரும்வேலை—சோரும் போது, சீற்றமென்றொன்றுதானே — கோபமென்பதொன்றுமே, மேல் நிமிர் — மேலேகிளருகிற, செலவிற்று ஆகி - செல்கையையுடையதாய், தோற்றிய - அங்குண்டான, துன்பநோயை - துக்கமானபிணியை, உள் உற- உள்ளே அடங்க, துரந்தது — அழுத்தியது, ஏற்றஞ்சால் — முன்னே தைத் திருந்த, ஆணி — ஆணிமேல், ஆணி — மற்றோராணி, எதிர்செல — அவ்வாணி உள் அடங்க, கடாயதென்ன - அறைந்தாற்போல் உள்உறத் துரந்தது— எ-று. எதிர்செலக்கடாவுதல் கடாவுமணிக்குமுன் செல்லச்செய்தல் எனவே துன்பம் அடங்கிக் கோபம் அதிகமாயிற்றென்க. 23

வேறு

ஈண்டிவைநிகழ்வுளியிரவிதேரெனத்
தூண்டுறுதேரின்மேற்றோன்றுந்தோன்றலை
மூண்டுமுப்புரஞ்சுடமுடுகுமீசனின்
ஆண்டகைவனைகழலநுமனோக்கினான்.

இ-ள். ஈண்டு - இங்கே, இவை — இவ்வகைகள், நிகழ்வுழி — நடக்கச் செய்தே, இரவி - சூரியனுடைய, தேரென — தேரைப்போல், தூண்டுறு- செலுத்தவருகிற, தேரின்மேல் — தேரின்மேலே, தோன்றும் — காணப்படு கிற, தோன்றலை - இந்திரசித்தை, மூண்டு — கோபம் அதிகமாய், முப்புரம்- திரிபுரத்தை, சுட — தகிக்க, முடுகும் — விரைவுகொள்கின்ற, ஈசனின்- சிவன்போன்ற, ஆண்தகை — புருஷசிரேஷ்டராய் ஆண்மையிற்சிறந்த, வனைகழல் — கட்டின வீரக்கழலையுடைய, அனுமன் — அனுமார், நோக்கி னான் — பார்த்தார்—எ-று. 24

வேறு

வென்றேனிதன்முன்சிலவீரரையென்னும்வெம்மை
அன்றேமுடுகிக்கடிதெய்தவழைத்ததம்மா
ஒன்றேயினிவெல்லுதறோற்பதடுத்ததுள்ள
தின்றேசமையுமிவனிந்திரசித்துவென்பான்.

இ-ள். இதன்முன் — இதற்குமுன்னே, சிலவீரரை — சிலவீரர்களை, வென்றேன் - ஜெயங்கொண்டேன், என்னும் - என்பதான, வெம்மையன்றே—கோபமல்லவா, முடுகிக்கடிது—மிகவும்விரைவாக, எய்த - இவண் வரும்படி, அழைத்தது - கூப்பிட்டதாயிற்று, ஒன்றே இனி - இனி ஒரு காரியமே, வெல்லுதல் - ஜயங்கொள்ளுதல் அல்லது, தோற்பது - தோல்வியடைதலே, அடுத்தது — இனிவரலானதாக, உள்ளது — இருக்கின்றது, இன்றே — இப்போதே, சமையும் — வெற்றி தோல்வியென்னு மிரண்டிலொன்று முடிவுபெறும், இவன் — இப்போதுவருகிற இவனே, இந்திரசித்து - மேகநாதன், என்பான் - என்று சொல்லப்படுமவன்—எ-று. வெல்லுதல் தோற்பதிலொன்றே இனி அடுத்ததுள்ளது எனக்கூட்டுக ஆகையால்.

கட்டேறுநறுங்கமழ்கண்ணியிக்காளையென்கைப்
பட்டாலதுவேயவ்விராவணன்பாடுமாகும்
கெட்டோமெனவெண்ணியக்கேடருங்கற்பினாளை
விட்டேகுமதன்றியரக்கரும்வெம்மைதீர்வார்.

இ-ள். கட்டேறு — கட்டுதல் கூடின, நறும் கமழ் — மணம்பரிமளிக்கின்ற, கண்ணி — மாலையையணிந்த, இக்காளை — இந்தவீரன், என்கை — என்கையாலே, பட்டால் — இறந்தால், அதுவே — அவ்விறப்பே, அவ்விராவணன் பாடும் - அந்த இராவணனிடத்திலும், ஆகும் - உண்டாகும், கெட்டேமென — புத்திகெட்டோமென்று, எண்ணி - நினைத்து, அ — அந்த, கேடு அரும் — கெடுதலில்லாத, கற்பினாளை — மகாபதிவிரதையை, விட்டேகும்- விட்டுவிடுவான் இராவணன், அதன்றி — அதுவேயல்லாமல், அரக்கரும்- இந்த ராக்ஷதர்களும், வெம்மை — தங்கள் கொடுஞ்செய்கைகளை, தீர்வார்- விட்டுவிடுவார்கள்—எ-று. விட்டேகும் - விட்டுப்போவான், நறுங்கள்- தேறு — தெளிவு - கமழென்பதுமாம். 26

ஒன்றோவிதனுன்வருமூதியமொண்மையானைக்
கொன்றேனெனினிந்திரனுந்துயர்கோளுநீங்கும்
இன்றேகடிகெட்டதரக்கரிலங்கையானே
வென்றேனவிராவணன்றன்னையும்வேரொடென்றான்.

இ-ள். ஒன்றோ — இது ஒருவகைதானோ, இதனுன் — இவனைக் கொன்றதனாலே, வரும்—வருவதாகிய, ஊதியம் — இலாபம், ஒண்மையானை- இந்தமகாவீரனை, கொன்றேனெனில்—கொன்றேனேயானால், இந்திரனும்-

தேவராஜனுங்கூட, துயர்க்கோளும் - துன்பங்கொண்டிருப்பதுவும், நீங்கும் — தீர்வான், அரக்கரிலங்கை - ராக்ஷதர்களுள்ளஇந்தவூர், இன்றே — இப்போதே, கடிகெட்டது — காவலழிந்ததாம், அ — இராவணன் றன்னையும் அந்த இராவணனையுங்கூட, வேரொடு — அவன் வம்சத்துடனே, யானே வென்றேன் — நானே வென்றவனுவேன் என்றெண்ணினர்—எ-று. 27

அக்காலையரக்கருமானையுந்தேருமாவும்
முக்காலுலகமொருமூன்றையும்வென்றுமுற்றிப்
புக்கானின்முன்புக்குயர்பூசல்பெருக்கும்வேலை
மிக்கானும்வெகுண்டோர்மராமரங்கொண்டுமிக்கான்.

இ-ள். அக்காலை — அப்போது, அரக்கரும் — ராக்ஷதர்களும், ஆனையும் - யானைகளும், தேரும் — இரதங்களும், மாவும் — குதிரைகளும், உலகம் ஒரு மூன்றையும் — ஒரு மூன்றுலகத்தையும், முக்கால் — மூன்றுதரம், வென்று - ஜயங்கொண்டு, முற்றிப்புக்கானின் - முடித்துவந்தவனுக்கு இந்திராஜித்துக்கு, முன்புக்கு — முன்னேவந்து, உயர்பூசல் — மிகுந்த சண்டையை, பெருக்கும் வேலை — அதிகரிக்கும்போது, மிக்கானும் — முன்னேவென்றுமிக்க அனுமாரும், வெகுண்டு — கோபங்கொண்டு, ஓர் மராமரம் — ஒரு நீண்டமரத்தை, கொண்டு — கையிலேகொண்டு, மிக்கான் — சண்டையில் அதிகரித்தார்-எ-று, அக்காலையரக்கருமானையுந் தேருமாவுமுன்புகெனக்கூட்டுக. 28

வேறு

உதைப்புண்டனயானையுருண்டனயானையொன்றோ
மிதிப்புண்டனயானைவிழுந்தனயானைமேன்மேல்
புதைப்புண்டனயானைபுரண்டனயானைபோரால்
வதைப்புண்டனயானைமறிந்தனயானைமண்மேல்.

இ-ள். உதைப்புண்டன — உதைபட்டனவாகி, யானை — சிலயானைகள், உருண்டன — கீழே உருளுதலாயின, யானைஒன்றோ — அந்த யானைகள் ஒருவிதத்தினுலோ, மிதிப்புண்டன — மிதிபட்டனவாகி, யானை — சிலயானைகள், விழுந்தன — விழலாயின, யானை — பின்னும் யானைகளே, மேன்மேல் - மேலுமேலும், புதைப்புண்டன — புதைபடலாயின, யானை — சிலயானைகள், புரண்டன — புரளுதலாயின, யானை — சிலயானைகள், போரால் — அனுமார் பொருதலாலே, வதைப்புண்டன — வதைபடலாயின, யானை — சிலயானைகள், மறிந்தன — முகங்கொடாதுசென்றன, யானை — சிலயானைகள், மண்மேல்- அந்த யுத்தபூமியிலே—எ-று. 29

வேறு

முடிந்ததேர்க்குலமுறிந்தனதேர்க்குலமுரணிற்
றிடிந்ததேர்க்குலமிற்றனதேர்க்குலமச்சிற்
றொடிந்ததேர்க்குலமுக்கனதேர்க்குலநெக்குப்
படிந்ததேர்க்குலம்பறிந்தனதேர்க்குலம்படியில்.

இ-ள். முடிந்த — முழுதுமுடிதலாயின, தேர்க்குலம் — சில தேர்வகைகள், முறிந்தன — முறிதலாயின, தேர்க்குலம் — சில தேர்வகைகள், முரண் இற்று - தமது பலங்குறைந்து, இடிந்த — இடிபடலாயின, தேர்க்குலம் - சில தேர்வகைகள், இற்றன — அச்சிறுதலாயின, தேர்க்குலம் — சில தேர்வகைகள், அச்சிற்று - அப்படி அச்சுகளிறுதலாய், ஒடிந்த — எல்லாம் ஒடிதலாயின, தேர்க்குலம் — சில தேர்வகைகள், உக்கன — பொடிப்பொடியாயுதிர்தலாயின, தேர்க்குலம் — சில தேர்வகைகள், நெக்கு — கட்டுகள்விட்டு, படிந்த- கீழேபடிதலாயின, தேர்க்குலம் — சில தேர்வகைகள், பறிந்தன — மீண்டு செல்லலாயின, தேர்க்குலம் — சில தேர்வகைகள், படியில் - அந்த யுத்தபூமியிலே, பறிதல் — அனுமாருக்குத்தெரியாமல் மீண்டுபோதல்—எ-று. 30

சிரனெரிந்தவுங்கண்மணிசிதைந்தவுஞ்செறிதாட்
டரனெரிந்தவுமுதுகுலச்சாய்ந்தவுந்தார்ப்பூண்
உரனெரிந்தவுமுதிரங்களுமிழ்ந்தவுமொண்பொற்
குரனெரிந்தவுங்கொடுங்கழுத்திழந்தவுங்குதிரை.

இ-ள். சிரன் - தலைகள், நெரிந்தவும்-சில நெரிந்தவைகளும், கண்மணி- கண்களிலுள்ளமணிகள், சிதைந்தவும்-சில அழிந்தவைகளும், செறி — நெருங்கின, தாள் — கால்களின், தரன் — வலிகள், நெரிந்தவும் - சில நெரிந்தவைகளும், முதுகுஇற — முதுகொடிய, சாய்ந்தவும் — சில சாய்ந்தவைகளும், தார்ப்பூண் — மாலைகளான ஆபரணங்களுள்ள, உரன் — நெஞ்சு, நெரிந்தவும்- சில நெரிந்தவைகளும், உதிரங்கள் - ரத்தங்களை, உமிழ்ந்தவும் — சில கக்கினவைகளும், ஒண் — அழகிதான, பொன் — பொற்சதங்கைகளணிக்த, குரன்- குளம்புகள், நெரிந்தவும் — சில நெரிந்தவைகளும், கொடும் — கோணலான, கழுத்து - கழுத்துகள், இழந்தவும் — சில போனவைகளும், குதிரை — குதிரைகளாயின—எ-று. 31

பிடியுண்டார்களும்பிளத்தலுண்டார்களும்பெருந்தோள்
ஒடியுண்டார்களுந்தலையுடைந்தார்களுமுருவக்
கடியுண்டார்களுங்கழுத்திழந்தார்களுங்கரத்தால்
அடியுண்டார்களுமச்சமுண்டார்களுமரக்கர்.

இ-ள். பிடியுண்டார்களும் — பிடிபட்டார்கள்சிலர், பிளத்தலுண்டார்களும் — பிளவுபட்டார்கள்சிலர், பெருந்தோள் — பெரியதோள்கள், ஒடியுண்டார்களும் — ஒடிபட்டார்கள்சிலர், தலை — தலைகள், உடைந்தார்களும்-உடைபட்டார்கள்சிலர், உருவ — முழுதும், கடியுண்டார்களும் — கடிபட்டார்கள் சிலர், கழுத்து — கழுத்துகள், இழந்தார்களும் — போனார்கள்சிலர், கரத்தால்- கையினாலே, அடியுண்டார்களும் — அடிபட்டார்கள்சிலர், அச்சமுண்டார்களும் - பயப்பட்டோடினார்கள்சிலர், அரக்கர் - காலாள்களான ராக்ஷதர்களில்.

வட்டவெஞ்சிலையோட்டியவாளியும்வயவர்
விட்டவிட்டவெம்படைகளும்வீரன்மேல்வீழ்ந்த

சுட்டவல்லிரும்படைகளைச்சுடுகலாதனபோல்
பட்டபட்டன திசையொடும்பொறியொடும்பரந்த.

இ-ள். வட்டம் — வளைவாகிய, வெஞ்சிலை — வெவ்வியவில்லினின்றும், ஓட்டிய — செல்லவிட்ட, வாளியும் — அம்புகளும், வயவர் — வீரர்கள், விட்ட விட்ட — அடிக்கடி விடுதலான, வெம்படைகளும் — வெவ்விய ஆயுதங்களும், வீரன்மேல் — அனுமார்மேலே, வீழ்ந்த — விழலானவைகளெல்லாம், சுட்ட — காய்ச்சின, வல்லிரும்பு — வலிய இரும்புகள், அடைகளை — பட்டடையை, சுடுகலாதனபோல் — சுடாதபடியேபோல், பட்டபட்டன — அவ்வகைகள் படலான, திசையொடும் — இடமெல்லாம், பொறியொடும் — நெருப்புப்பொறியுடனே, பரந்த — பரவிப்போயின—எ-று. 33

சிகையெழுஞ்சுடர்வாளிகளிந்திரசித்து
மிகையெழுஞ்சினத்தநுமன்மேல்விட்டனவெந்து
புகையெழுந்தனவெரிந்தனகரிந்தனபோக
நகையெழுந்தனவழிந்தனவானுளோர்நாட்டம்.

இ-ள். சிகையெழும் — சுவாலைகளுண்டாகுகிற, சுடர் — ஒளிபொருந்தின, வாளிகள் — அம்புகளை, இந்திரசித்து — மேகநாதனெனவன், மிகையெழும் — அதிகமாக மூளுகிற, சினத்து — கோபமுள்ள, அனுமன்மேல்- அனுமார்மேலே, விட்டன — விட்டவைகளெல்லாம், வெந்து — வேவுதலாய், புகையெழுந்தன — புகைகளுண்டாயினசில, எரிந்தன — நெருப்பா யெரிந்தனசில, கரிந்தன — கரிந்துபோயினசில, போக — இப்படியாகப்போகவே, நகையெழுந்தன — இந்திரசித்துக்குச் சிரிப்புண்டாயின சிரிக்கவே, வானுளோர் — அதுகண்ட தேவர்களுடைய, நாட்டம் — கண்கள், அழிந்தன- கலங்கலாயின—எ-று. 34

தேரும்யானையும்புரவியுமரக்கருஞ்சிந்திப்
பாரின்வீழ்தலுந்தானொருதனிநின்றபணைத்தோள்
வீரவீரனுமுறுவலும்வெகுளியும்வீங்க
வாரும்வாருமென்றழைக்கின்றவநுமன்மேல்வந்தான்.

இ-ள். தேரும் — இரதங்களும், யானையும் — யானைகளும், புரவியும்- குதிரைகளும், அரக்கரும் — ராக்ஷதர்களும் காலால்களும், சிந்தி — அழிந்து, பாரின் — மண்மேலே, வீழ்தலும் — விழுமளவில், தான் — தானே, ஒருதனி நின்ற — ஒருவனாக நிற்கிற, பணைத்தோள் — பெருத்த தோள்களையுடைய, வீரவீரனும் — வீரர்களிலே சிறந்த இந்திரசித்தானவனுக்கு, முறுவலும்- சிரிப்பும், வெகுளியும் — கோபமும், வீங்க — அதிகமாக, வாரும் வாருமென்று — வாருங்கள் விரைந்தென்று, அழைக்கின்ற — கூப்பிடுகிற, அனுமன்மேல் — அனுமார்மேலே, வந்தான் — வந்து நெருங்கினன்—எ-று. 35

புரந்தரன்றனைபொதிரெறிந்திடப்புயல்வானில்.
பரந்தபல்லுருமேற்றினம்வெறித்துயிர்பதைப்ப

நிறந்தரந்தலைநெடுநிலஞ்சுமந்தபேருரகன்
சிரந்துளங்கிடவரக்கன்வெஞ்சிலையைநாண்டெறித்தான்.

இ-ள். புரந்தரன் — இந்திரனுடைய, தலை — சிரசு, பொதிரெறிந்திட — நடுங்குதலாகிய, புயல்வானில் — பெய்கிற மேகங்களிலே, பாந்த — பரவியிருக்கிற, பல் — அநேகம், உருமேற்றினம் — இடியேற்றின் கூட்டங்கள், வெறித்து — மயக்கங்கொண்டு, உயிர்பதைப்ப — மனநடுங்குவதாக, நிரந்தரம் — எப்போதும், தலை — தன் றலைகளாலே, நெடுநிலம் — நெடியவுலகை, சுமந்த — தாங்குகின்ற, பேருரகன் — பெரிய ஆதிசேடனுடைய, சிரந்துளங்கிட — தலைகளுநடுங்க, அரக்கன் — இந்திரசித்தானவன், வெஞ்சிலையை — தனது வெவ்விதான வில்லினது, நாண் — நாணை, தெறித்தான் — இழுத்துப்பார்த்தான் குணத்தொனி செய்தான் — எ-று. 36

ஆண்டநாயகன்றூதனுமயனுடையண்டம்
கீண்டதாமெனக்கிரியுகநெடுநிலங்கிழிய
நீண்டமாதிரம்வெடிபடவவனெடுஞ்சிலையில்
பூண்டநாணிறத்தன்னெழிற்றோள்களைப்புடைத்தான்.

இ-ள். ஆண்ட — ஈ மம அடிமைகொண்டருளுகிற, நாயகன் தூதனும் — ஸ்ரீராமதூதனும் அவ்வொலிக்கெதிரே, அயனுடையண்டம் — இந்தப் பிரமாண்டம், கீண்டதாமென — கிழிந்ததென்னும்படி, கிரி உக — மலைகளும் பொடியாக, நெடுநிலம் — நீண்டபூமியும், கிழிய — பிளக்கவும், நீண்டமாதிரம் — நெடியதிசைகள், வெடிபட — வெடிக்கவும், அவன் — அந்த இந்திரசித்தினது, நெடுஞ்சிலையில் — நீண்டவில்லிலே, பூண்டநாண் — பூட்டுகிறகயிறு, இற — அற்றுப்போக, தன் — தனது, எழில் — அழகிதான, தோள்களை — புஜங்களை — புடைத்தான் — கொட்டினூர் — எ-று. 37

நல்லைநல்லையிஞ்ஞாலத்துணின்னொக்கநல்லார்
யில்லையில்லையாலெழுழ்வலிக்கியாரொடுமிகல
வல்லைவல்லையின்றருகுநீபடைத்துளவாழ்நாட்
கெல்லையெல்லையென்றிந்திரசித்துமிசைத்தான்.

இ-ள். நல்லை நல்லை — நீ மிகவும் சமர்த்தனே, இஞ்ஞாலத்துள் — இந்தவுலகத்திலே, நின்னொக்க — உன்னை ஒப்பாக, நல்லார் — சமர்த்தர்கள், இல்லை இல்லை — கிடையவே கிடையாது, எழுழ்வலிக்கு — மிருந்த பலத்தினாலே, யாரொடும் — எல்லாருடனும் எப்படிப்பட்டவர்களானாலும், இகல் — சண்டைசெய்ய, வல்லை வல்லை — நீமிகவும் வல்லவனே ஆனாலும், நீபடைத்துள — நீ பெற்றிருக்கிற, வாழ்நாட்கு — ஆயுளுக்கு, எல்லை எல்லை — முடிவானாவு, இன்றருகும் — இன்றே ஆம், என்று — என்பதாய், இந்திரசித்துவும் — அநுமார் தோள்கொட்டினதுகண்டு இந்திரசித்து, இசைத்தான் — சொன்னூர் — எ-று. 38

நாளுக்கெல்லையுநிருதராயுலகத்தைநலியும்
கோளுக்கெல்லையுங்கொடுந்தொழிற்கெல்லையுங்கொடியீர்
வாளுக்கெல்லையும்வந்தனவகைகொண்டுவந்தேன்
தோளுக்கெல்லையொன்றில்லையென்றநுமனுஞ்சொன்னான்.

இ-ள். நாளுக்கு — உங்கள் வாழ்நாளுக்கு, எல்லையும் — முடிவும், நிருதராய் — ராக்ஷதர்களாகி, உலகத்தை — உலகமெல்லாம், நலியும் — வருத்தப்படுத்துகிற, கோளுக்கு — உங்கள் கொள்கைக்கு, எல்லையும் — முடிவும், கொடுந்தொழிற்கு — உங்கள் கொடிய செய்கைக்கு, எல்லையும் — முடிவும், கொடியீர் — ஓ பொல்லாதவர்களே, வாளுக்கு — உங்கள் வாளாயுதமுதலியவைகளுக்கு, எல்லையும் — முடிவும், வந்தன - வரலாயின, வகைகொண்டு - அந்த வருதலையே காரியமாக, வந்தேன் — நான் வரலானேன், தோளுக்கு - என் புஜபலத்துக்கு, எல்லை - முடிவு, ஒன்றில்லை — ஒருகாலத்து முளதாகாது, என்று — என்பதாய், அனுமனும் — திருவடி அவன் மொழிக்கெதிர், சொன்னான் - சொல்லினார்—எ-று. 39

இச்சிரத்தையைத்தொலைப்பெனென்றிந்திரன்பகைஞன்
பச்சிரத்தம்வந்தொழுகிடவானவர்பதைப்ப
வச்சிரத்தினும்வலியனவயிரவான்கணைகள்
அச்சிரத்தினுமார்பினுமழுத்தனுமநுமன்.

இ-ள். இச்சிரத்தையை — இந்தத்திடமான நம்பிக்கையை, தொலைப்பெனென்று — இதோ அழித்துவிடுகிறேனென்று, இந்திரன்பகைஞன் - இந்திரசித்தானவன், பச்சிரத்தம் — அனுமாருடம்பிலே பசியரத்தம், வந்து ஒழுகிட — ஊறிவழியவும், வானவர் — தேவர்களெல்லாம், பதைப்ப — நடுங்கவும், வச்சிரத்தினும் — வயிரத்தைப்பார்க்கிலும், வலியன — பலமுள்ள, வயிரம் — உறுதிகொண்ட, வான்கணைகள் — பெரிய அம்புகளை, அச்சிரத்தினும் - அவர்தலையிலும், மார்பினும் — நெஞ்சிலும், அழுத்தலும் — அழுந்த எய்த போது, அனுமன் — திருவடியானவர்—எ-று. 40

குறிதுவாஎனென்றுகுறைந்திலனெடுஞ்சினங்கொண்டான்
மறியும்வெண்டிரைமாகடலுலகெலாம்வழங்கிச்
சிறியதாய்சொன்னதிருமொழிசென்னியிற்சூடி
நெறியினின்றதன்னையகன்புகழெனநிமிர்ந்தான்.

இ-ள். குறிதுவாஎனென்று — ஆகாயம் உயர்வுபோதாதென்று, குறைந்திலன் — இவர் உயர்வு குறுகாதவராகி, நெடுஞ்சினம்-அதிககோபம், கொண்டான் — கொண்டு, மறியும் — மடங்குகின்ற, வெண்திரை — வெள்ளை அலைகளையுடைய, மாகடல் — பெரிய கடல்சூழ்ந்த, உலகெலாம் — உலகமுழுதும், வழங்கி — தம்பிக்கேகொடுத்து, சிறியதாய் — கைகேசியானவள், சொன்ன திருமொழி — சொன்ன திருவார்த்தையை, சென்னியில்சூடி — தமது தலை

மேற்கொண்டு, நெறியில் – தபோமார்க்கத்திலே, நின்ற - நிலைகொண்ட, தன்னுயகன் – தமதாண்டானது, புகழென - கீர்த்திபோல், நிமிர்ந்தான்- உயர்ந்தார்—எ-று. 41

பாகமல்லதுகண்டிலனநுமனைப்பார்த்தான்
மாகவன்றிசைபத்தொடும்வரம்பிலாவுலகிற்
கேகநாதனையெறுழ்வலித்தோள்பிடித்தீர்த்த
மேகநாதனுமயங்கினனுமெனவியந்தான்.

இ-ள். அனுமனை – திருவடியை, பார்த்தான் - இந்திரசித்துப்பார்த்து, பாகமல்லது – அவருருவிலே பாதியே அல்லாமல், கண்டிலன் – முழுதுந் தெரியாதவனாய், மாகம் - பெரிதான, வன்திசை – வலிதானதிக்குகள், பத்தொடும் – பத்துடனே, வரம்பிலா - அளவில்லாத, உலகிற்கு – உலகத்திற்கு, ஏகநாதனை – ஒருவனான இந்திரனுடைய, எறுழ்வலி - மிகவும் வலியனவான, தோள்பிடித்து - தோள்களைப்பற்றி, ஈர்த்த-இழுத்த, மேகநாதனும்- இந்திரசித்தும், மயங்கினன் – திகைத்தான், ஆமென-ஆகுமென்றுசொல்ல, வியந்தான் – அதிசயித்தான்—எ-று. 42

நீண்டவீரனுநெடுந்தடங்கைகளைநீட்டி
ஈண்டுவெஞ்சரமெய்தனவெய்திடாவண்ணம்
மீண்டுபோய்விழவீசியாங்கவன்மிடற்றடந்தேர்
பூண்டமாவொடுசாரதிதரைப்படப்புடைத்தான்.

இ-ள். நீண்ட – அப்படி உயர்ந்த, வீரனும் – அனுமாரானவர், நெடுந்தடம்—மிகவுநீண்டுள்ள, கைகளை – தம்முடையகைகளை, நீட்டி – நீளவிட்டு, ஈண்டு – மேன்மேலாய்வருகிற, வெஞ்சரம் - வெவ்வியஅம்புகள், எய்தன- அவன்விட்டவைகளிலொன்றேனும், எய்திடாவண்ணம் – தம்மேற்படாதபடி, மீண்டு – திரும்பி, போய் – அவன்மேலேபோய், விழ-விழும்படி, வீசி- தட்டிவிட்டு, அவன் – அவனுடைய, மிடல்தடம்-பலமும் பருமையுமுள்ள, தேர் – தேரிலே, பூண்ட – கட்டின, மாவொடு – குதிரைகளுடனே, சாரதி- சாரதியும், தரைப்பட – கீழேவிழுந்திறக்க, புடைத்தான் – அடித்தார்-எ-று. புதைத்தான் என்று பாடமானால் பூமியிலே அழுந்தச் செய்தாரென்க, ஆங்கு - அசை. 43

ஊழிக்காற்றன்னவொருபரித்தேரவணுதவப்
பாழித்தோளவனத்தடந்தேர்மிசைப்பாய்ந்தான்
ஆழிப்பல்படையனையனவளப்பருஞ்சரத்தால்
வாழிப்போர்வலிமாருதிமேனியைமறைத்தான்.

இ-ள். ஊழிக்காற்று – பிரசண்டவாயுவை, அன்ன – ஒப்பான, ஒரு பரித்தேர் - குதிரைகள்பூண்ட மற்றொருதேர், அவண் – அவ்விடத்திலப்போது, உதவ - உதவியாகவர, பாழி – அகன்ற பெருமையுள்ள, தோளவன்-

தோள்களையுடைய இந்திரசித்தானவன், அத்தடம் — அந்தப் பெரிதான, தேர்மிசை — தேர்மேலே, பாய்ந்தான் — தாவியேறி, ஆழிப்பல்படை - அநேகஞ்சக்கராயுதங்களை, அனையன — ஒப்பான, அளப்பரும்-அளவிடலரிதான, சரத்தால் — அம்புகளாலே, வாழி — குறைவுபடாத, போர்வலி — யுத்தபலத்தையுடைய, மாருதிமேனியை — அனுமார் சரீரமெல்லாம், மறைத்தான்— மூடினன்—எ-று. 44

உற்றவாளிகளுரத்தடங்கினவுகவுதருக்
கொற்றமாருதியனையவன்றேர்மிசைக்குதித்துப்
பற்றிவன்கையாற்பறித்தெழுந்துலகெலாம்பலகால்
முற்றவென்றபோர்மூரிவெஞ்சிலையினைமுறித்தான்.

இ-ள். உற்றவாளிகள் - பட்டஅம்புகள், உரத்தடங்கின — நெஞ்சிலே பதிந்தவைகளெல்லாம், உக — கீழே சிந்திவிழ, உதரு — உதறி, கொற்ற மாருதி — வெற்றிகொண்ட திருவடியானவர், அனையவன் — அவனுடைய, தேர்மிசை - தேரின்மேலேபோய், குதித்து - குதிகொண்டு, பற்றிவன்கையால் - தமது வலிதான கையினாலே பிடித்து, பறித்து — பிடுங்கி, எழுந்து- மேலேகிளர்ந்து, உலகெலாம் — முன்னே உலகமெல்லாம், பலகால் - பலதரமும், முற்ற — முடிய, வென்ற — ஜெயம்பண்ணின, போர் - பலத்தினாலே, மூரி — பெரிதான, வெஞ்சிலையினை — வெவ்வியவில்லை, முறித்தான்-ஒடித்துவிட்டார்—எ-று. உற்ற - பட்ட, உரத்தடங்கின வாளிகளெனக்கூட்டுக.

முரிந்தவில்லின்வல்லோசைபோய்முடிவதன்முன்னர்
மறிந்துபோரிடைவழிக்கொள்வான்வயிரவாட்படையால்
செறிந்தவான்பெருமலைகளைச்சிறகறச்செயிரா
எறிந்தவிந்திரனிட்டவார்சிலையினையெடுத்தான்.

இ-ள். முறிந்த — அப்படி ஒடிந்த, வில்லின் — வில்லினது, வல்லோசை போய் — வலியசத்தம்நீண்டு, முடிவதன்முன்னம்-ஒயுமுன்னே, போரிடை- முன்சண்டையிலே, மறிந்து - தோற்றுமீண்டு, வழிக்கொள்வான்-ஓடுகிறவனாகிய, வயிரவாள்படையால் — வச்சிராயுதத்தினாலே, செறிந்த-நெருங்கின, வான்பெருமலைகளை — மிகப்பெரியமலைகளினுடைய, சிறகுஅற - இறகுகளற்றுப்போக, செயிரா - கோபங்கொண்டு, எறிந்த — வெட்டின, இந்திரன்-தேவராஜன், இட்ட — போட்டுவிட்ட, வார்சிலையினை - நீண்டவில்லை, எடுத்தான் — கையிலேகொண்டான் இந்திரசித்து, வழிக்கொள்வானென இந்திரனிட்ட எனக்கூட்டுக—எ-று. போகவிட்டிட்ட என்க. 46

நூறுநூறுபோர்வாளியோர்தொடைதொடுத்துநொய்தின்
மாறில்வெஞ்சினத்திராவணன்மகன்சிலைவளைத்தான்
ஊறுதன்னெடுமேனியிற்பலபடவொல்கி
ஏறுசேவகன்றாதனுஞ்சிறிதுபோதிருந்தான்.

இ-ள். நூறுநூறு - பதினாயிரம், போர்வாளி - பலமுள்ள அம்புகளை, ஓர்தொடைகொடு — ஒருதொடைப்பிலேகொண்டு, நொய்தின் - விரைவிலே, மாறில் - நிகரில்லாத, வெஞ்சினத்து — வெவ்விய கோபத்தையுடைய, இராவணன்மகன் - இந்திரசித்தானவன், சிலைவளைத்தான் - வில்லைவளைத்து எய்தான், தன்னெடுமேனியில் — தமது நெடிய சரீரத்திலே, ஊறுபலபட-அநேககாயங்களுண்டாக, ஒல்கி - அதனாலே தளர்ந்து, ஏறு — சிங்கம்போன்ற, சேவகன்றூதன்-ஸ்ரீராமதூதனானவர், சிறிதுபோது-கொஞ்சநேரம், இருந்தான் — ஓய்ந்திருந்தார்—எ-று. வளைத்தானென்பதை வளைத்தெய்தானெனக் கூட்டுக. உம் — அசை. 47

ஆர்த்தவானவராவலங்கொளீஇயறிவழிந்தார்
பார்த்தமாருதிதாருவொன்றங்கையிற்பற்றித்
தூர்த்தவாளிகண்முறைமுறைதுணிபடச்சுற்றிப்
போர்த்தபொன்னெடுமணிமுடித்தலையிடைப்புடைத்தான்.

இ-ள். ஆவலங்கொளீஇ - கர்வங்கொண்டு, ஆர்த்த - கெர்ச்சித்த,வானவர் - தேவர்களெல்லாம், அறிவழிந்தார் - புத்திமயங்கினார்கள், பார்த்த-அதுகண்ட, மாருதி - அனுமாரானவர், தாருஒன்று - ஒருமரத்தை, அங்கையிற்பற்றி - தமது கையிலேகொண்டு, தூர்த்த — அவன்பொழிகிற, வாளிகள்-அம்புகளெல்லாம், முறைமுறை - வரிசைவரிசையாக, துணிபட — துண்டுதுண்டாய்விழ, சுற்றி - அந்தமரத்தைச் சுழற்றிவீசி, பொன்னெடு - பொன்னாலாகி நெடிதான, மணிமுடி — ரத்நகிரீடம், போர்த்த — கவித்திருக்கிற, தலையிடை — அவன் தலைமேலே, புடைத்தான் — சுழற்றி அடித்தார்—எ-று.

பாரமாமரமுடியுடைத்தலையிடைப்படலும்
தாரையின்னெடுங்கற்றைகள்சொரிவனதயங்க
ஆரமால்வரையருவியினழிகொழுங்குருதி
சோரநின்றுடறுளங்கினனமரரைத்தொலைத்தான்.

இ-ள். பாரம் — அந்தக்கனமான, மாமரம் - பெரிய மரத்தடியானது, முடியுடை - கிரீடமணிந்த, தலையிடை — தலைமேலே, படலும் — பட்டஅளவில், தாரையின் - ரத்ததாரைகளின், நெடுங்கற்றைகள் — நீண்டதிரட்சிகள், தயங்கச்சொரிவன — மிகவுந் தெரியச்சிந்துகின்றன அப்படி, ஆர - நிரம்ப, மால்வரை - பெரிய மலையிலிருந்துவருகிற, அருவியின் — அருவிபோல், அழி - ஓடிவருதலான, கொழுங்குருதி — சிவந்தரத்தம், சோர — ஒழுகிவழிய, நின்று — தேர்மேலிருந்துகொண்டே, உடல் — தன்னுடம்பு, துளங்கினன்-நடுங்கலானான், அமரரை — முன்னே தேவர்களை, தொலைத்தான் — வென்ற இந்திரசித்து—எ-று. 49

நின்றுபோதம்வந்துறுதலுநிறைபிறையெயிற்றைத்
தின்றுதேவருமுனிவருமவுணருந்திகைப்பக்

குன்றுபோனெடுமொருதியாகமுங்குலுங்க
ஒன்றுபோல்வனவாயிரம்பகழிகோத்துய்த்தான்.

இ-ள். நின்று—அப்படிச் சிறிதிருந்து, போதம்—தன்னினைவு, வந்துறுதலும்—வந்துகூடின அளவில், நிறை-நிறைந்த, பிறை-பிறைபோன்ற, எயிற்றை—பற்களை, தின்று-கடித்து, தேவரும்-தேவர்களும், முனிவரும்-ருஷிகளும், அவுணரும்—அசுரர்களும், திகைப்ப—மயங்க, குன்றுபோல்-மலைபோலுள்ள, நெடுமாருதி—நீண்ட அனுமாருடைய, ஆகமும்-மார்பும், குலுங்க—நடுநடுங்க, ஒன்றுபோல்வன—ஒரேசீரான, ஆயிரம்பகழி—ஆயிரம் அம்புகள், கோத்து—தொடுத்து, உய்த்தான்—விட்டான்—எ-று. 50

உய்த்தவெஞ்சரமுரத்தினுங்கரத்தினுமொளிப்பக்
கைத்தசிந்தையன்மாருதிநனிதவகனன்றான்
வித்தகன்சிலைவிடுகணைவிசையினுங்கடுகி
அத்தடம்பெருந்தேரொடுமெடுத்தெறிந்தார்த்தான்.

இ-ள். உய்த்த—அப்படி அவன்விட்ட, வெஞ்சரம்—வெவ்விய அம்புகள், உரத்தினும்-அனுமார் மார்பிலும், கரத்தினும்—கைகளிலும், ஒளிப்ப—பதிய, கைத்த—வெறுத்தலான, சிந்தையன்மாருதி-மனமுள்ள அனுமார், நனிதவ—அதிகமதிகமாக, கனன்றான்—கோபங்கொண்டாராய், வித்தகன்-ஸ்ரீராமனுடைய, சிலை—கோதண்டத்தினின்றும், விடு—எய்கிற, கணை-அம்பினது, விசையினும்—வேகத்தைப்பார்க்கிலும், கடுகி—விரைந்து, அத்தடம்—அந்தப் பெதான, பெருந்தேரொடும்-பெரிய தேரோடவனை, எடுத்தெறிந்து—தூக்கிமேலே எறிந்து, ஆர்த்தான்—கெர்ச்சித்தார்—எ-று. 51

கண்ணின்மீச்சென்றவிமையிடைகலப்பதன்முன்னை
எண்ணின்மீச்சென்றவெறுழ்வலித்திறலுடையிகலோன்
புண்ணின்மீச்சென்றுபொழிபுனல்பசும்புலால்பொடிப்ப
விண்ணின்மீச்சென்றுதேரொடும்பார்மிசைவீழ்ந்தான்.

இ-ள். கண்ணின்மீ—கண்ணுக்குமேலே, சென்ற—செல்லுவதான, இமை—இமைகள், இடை-கீழிமையிலேவந்து, கலப்பதன்முன்னம்—கூடுவதன்முன்னே, என்றால்—இமைக்குமுன்னே, எண்ணின்மீ—அளவுக்குமேலே, சென்ற—செல்லுவதான, எறுழ்வலி—மிக்க வலிமைபெற்ற, திறலுடை—சாமர்த்தியமுள்ள, இகலோன்—திடசித்தனை இந்திரசித்து, புண்ணின்மீச்சென்று—காயங்களுக்குமேற்பட்டு, பொழிபுனல்—சிந்துகிற ரத்தமானது, பசும்புலால்—பசியபுலால்வீச்சுடனே, பொடிப்ப—ஒழுக, விண்ணின்—ஆகாயத்தின், மீச்சென்று—மேலேபோய், தேரொடும்—தேருடனே, பார்மிசை—பூமியிலே வீழ்ந்தான்—எ-று. 52

விழுந்துபாரடையாமுனமென்னெனுமெயிற்றான்
எழுந்துமாவிசும்பெய்தினனிடையவன்படையில்

செழுந்தண்மாமணித்தேர்க்குலம்யாவையுஞ்சிதைய
இழுந்துபேர்வதன்முன்னெடுமாருதியுதைத்தான்.

இ-ள். விழுந்து - கீழேவிழுந்து, பார் - பூமியிலே, அடையாமுனம் - சேருதற்குமுன்னே, மின்னெனும் - பளிரென்னும்படியான, எயிற்றான் - பற்களையுடைய இந்திரசித்து, எழுந்து - தேரினின்றெழுந்து, மா - சுறுத் திருக்கிற, விசும்பு - ஆகாயத்தை, எய்தினன் - சேர்ந்தான், இடை - அவ்விடத்திலப்போது, அவன்படையில் - அவனுடைய சேனையினுள்ள, செழும் - அழகான, தண் - நிழலிடங்களுள்ள, மாமணி - பெரிய ரத்நமயமான, தேர்க்குலம் - தேர்க்கூட்டங்கள், யாவையும் - எல்லாம், சிதைய - அழிவாக, உழுந்து - ஒருஉழுந்து, பேர்வதன்முன் - உருளுதற்குமுன்னே, நெடுமாருதி - நீண்டஅனுமார், உதைத்தான் - உதைத்தழித்தார்—எ-று. 53

ஏறுதேரிலனெதிர்நிற்குமுரணிலனெரியிற்
சீறுவெஞ்சினந்திருகுகின்றான்றிரிவானும்
வேறுசெய்வதோர்வினைபிறிதின்மையின்விரிஞ்சன்
மாறிலாப்பெரும்படைக்கலந்தொடுப்பதாய்மதித்தான்.

இ-ள். ஏறு - தானேறிவருவதற்கும், தேரிலன் - தேரில்லாதவனுகி, எதிர் - அனுமார் முன்னே, நிற்கும் - நிற்கத்தக்க, முரணிலன் - பலமுமில்லாதவனுய், எரியில் - நெருப்பைப்போல், சீறும் - சுவாலிப்பதான, வெஞ்சினம் - வெவ்வியகோபம், திருகுகின்றான் - மூளுகிறவனுமாய், திரிவானும் - உலாவுகின்றவன், வேறு - அப்போது வேறே, செய்வது - செய்யத்தக்க, ஓர்வினை - ஒருசெய்கையும், இன்மையின் - இல்லாததினலே, பிறிது மாறிலா - வேறோரொப்புமில்லாத, விரிஞ்சன் பெரும்படைக்கலம் - பெருமையுள்ள பிரமாஸ்திரத்தை, தொடுப்பதாய் - தொடுத்து விடுவதாக, மதித்தான் - எண்ணினன்—எ-று. 54

பூவும்பூநிறவயினியுந்தீபமும்புகையும்
தாவில்பாவனையாற்கொடுத்தருச்சனைசமைத்தான்
தேவியாவையுமுலகுமுந்திருத்தியதெய்வக்
கோவினான்முகன்படைக்கலந்தடக்கையிற்கொண்டான்.

இ-ள். பூவும் - புஷ்பமும், பூநிறம் - பூநிறமுள்ள, அயினியும் - பிரசாதமும் வெண்சோறும், தீபமும் - கர்ப்பூர விளக்கும், புகையும் - சாம்பிராணிப் புகையும், தாவில் - கலங்குதலில்லாத, பாவனையால் - நினைவினலே, கொடுத்து - உபசரித்துத்தந்து, அருச்சனை - அர்ச்சனைசெய்வதும், சமைத்தான் - செய்தானுகி, தேவியாவையும் - முப்பத்துமூன்று தேவர்களையும், உலகமும் - உலகங்களையும், திருத்திய - சிருஷ்டித்த, தெய்வம் - தெய்வத்தன்மையாகிய, கோவில் - திருவுந்திக்கமலமான பெரிய வீட்டிலிருக்கிற, நான்முகன் படைக்கலம் - பிரமாஸ்திரத்தை, தடக்கையில் - தனது நீண்ட

கையிலே, கொண்டான் — எடுத்தான்—எ-று. தெய்வத்தன்மையாவது இரணியகர்ப்பம். 55

கொண்டகொற்றவெஞ்சிலைநெடுநாணொடுகூட்டிச்
சண்டவேகத்தமாருதிதோளொடுஞ்சாத்தி
மண்டுளங்கிடமாதிரந்துளங்கிடமதிதோய்
விண்டுளங்கிடமேருவுந்துளங்கிடவிட்டான்.

இ-ள். கொண்ட — இடக்கையிலேபிடித்த, கொற்றம் — வெற்றிபொருந்தின, வெஞ்சிலை - வெவ்வியவில்லினது, நாணொடும் — நாணுடனே, கூட்டி - சேர்த்து, சண்டவேகத்த - அதிக வேகமுள்ள, மாருதி - அனுமாருடைய, தோளொடும் — தோள்களை, சாத்தி — குறித்து, மண் துளங்கிட - பூமியுநடுங்க, மாதிரம் துளங்கிட — திசைகளுநடுங்க, மதிதோய் — சந்திரன் பொருந்தின, விண் துளங்கிட — ஆகாயமுநடுங்க, மேருவும் — மேருமலையும், துளங்கிட — நடுங்க, விட்டான் - பிரயோகித்தான்—எ-று. நெடுநாண்-நீண்டநாரி. 56

தணிப்பரும்பெரும்படைக்கலந்தழலுமிழ்தறுகட்
பணிக்குலங்களுக்கரசினதுருவினைப்பற்றித்
துணுக்கமுற்றுயர்கலுழனுநடுக்குறச்சுற்றிப்
பிணித்ததப்பெருமாருதிதோள்களைப்பிறங்க.

இ-ள். தணிப்பு — நீக்குதற்கு தடுத்தற்கு, அரு — கூடாத, பெரும்படைக்கலம் — பெருமையுள்ள பிரமாஸ்திரமானது, தழல் உமிழ் — நெருப்பைக் கக்குகிற, தறுகண் — கொடுங்கண்களையுடைய, பணிக்குலங்களுக்கு — பாம்புக் கூட்டங்களுக்கு, அரசனது — ராஜாவானவனுடைய, உருவினைப்பற்றி- உருவைக்கொண்டு, துணுக்கமுற்று — திகிலடைந்து, உயர் — உயர்ந்த, கலுழனும் — பட்சிராஜனும், நடுக்குற — நடுங்கும்படி, சுற்றி — வந்துசூழ்ந்து, பிணித்தது — கட்டியது, அ — அந்த, பெரு — பெரியவுருவுள்ள, மாருதி - அனுமாருடைய, தோள்களை — புஜங்களை, பிறங்க — தன் வடிவுதோன்ற சுற்றிப் பிணித்தது—எ-று. 57

திண்ணென்யாக்கையைத்திசைமுகன்படைசென்றுதிருக
அண்ணன்மாருதியன்றுதன்பின்சென்றவறத்தின்
கண்ணினீரொடுங்கனகதோரணத்தொடுங்கடைநாள்
தண்ணென்மாதிகோளொடுஞ்சாய்ந்தெனச்சாய்ந்தான்.

இ-ள். திண்ணென் — கெட்டியென்பதான, யாக்கையை — அனுமாருடம்பை, திசைமுகன் - பிரமாவினுடைய, படைசென்று — அஸ்திரம் போய், திருக - சூழ்ந்துகட்டவே, அண்ணல் - பெருமைகொண்ட, மாருதி- அனுமாரானவர், அன்று — அப்போது, தன்பின் — தம்பின்னே, சென்ற- வந்த, அறத்தின் - தருமத்தினது, கண்ணினீரொடு — கண்ணீரொடு, கன

கம் — சுவர்ணமயமான, தோரணத்தொடும் —தோரணகம்பத்துடன்கூட, கடைநாள் — முடிவுகாலத்திலே, தண்ணெனன் — குளிர்ச்சியுள்ளதென்கிற, மாமதி — பெரிய சந்திரனானவன், கோளொடும் — ராகுவென்கிற பாம்புடனே, சாய்ந்தென — கீழேவிழுந்தாற்போல், சாய்ந்தான் — சாய்ந்து விழுந்தார்—எ-று. 58

சாய்ந்தமாருதிசதுமுகன்படையெனுந்தன்மை
ஆய்ந்துமற்றிதனுணையையவமதித்தகறல்
ஏய்ந்ததன்றெனவெண்ணினன்கண்முகிழ்த்திருந்தான்
ஓய்ந்ததாமிவன்வலியெனவரக்கன்வந்துற்றான்.

இ-ள். சாய்ந்த - அப்படிக் கீழேவிழுந்த, மாருதி — அனுமாரானவர், சதுமுகன் — பிரமாவினுடைய, படையெனுந்தன்மை — அஸ்திரமென்கிற பெருமையை, ஆய்ந்து - தெரிந்து, மற்றிதன் — இந்த அஸ்திரத்தினுடைய, ஆணையை — ஆக்ஞையை, அவமதித்து — அசட்டைபண்ணி, அகறல் - போகுதல், ஏய்ந்தது — தக்கது, அன்றென — அல்லவென்று, எண்ணினன் — நினைத்தாராய், கண்முகிழ்த்தது — கண்களை மூடிக்கொண்டு, இருந்தான் — கிடந்தார், இவன்வலி — இந்தக் குரங்கின் பலமானது, ஓய்ந்தது — அடங்கியது, ஆமென — மெய்யென்று தெரிந்து, அரக்கன் — இந்திரசித்து, வந்துற்றான் - வந்து பார்த்தான்—எ-று. 59

உற்றகாலையினுயிர்கொடுதிசைதொறுமொதுங்கி
அற்றநோக்கினர்நிற்கின்றவாளெயிற்றரக்கர்
சுற்றும்வந்துடல்சுற்றியதொளையெயிற்றரவைப்
பற்றியீர்த்தனரார்த்தனர்தெழித்தனர்பலரால்.

இ-ள். உற்றகாலையின் — அப்படி அவன் வந்தபோது, உயிர்கொடு - தம்முயிர்தப்பி, திசைதொறும் — நான்குதிக்குகளிலும், ஒதுங்கி — மறைந்து, அற்றம் — அதன் சோர்வை, நோக்கினர் — பார்த்து, நிற்கின்ற - நிற்கிற, வாள் — கத்திபோலும், எயிறு — பற்களையுடைய, அரக்கர் — ராக்ஷதர்கள், சுற்றும் வந்து — சுற்றிலுமிருந்து வந்து, உடல் சுற்றிய — அனுமாருடம்பைச் சூழ்ந்திருக்கிற, தொளை — துவாரம் பொருந்தின, எயிற்று — பற்களையுடைய, அரவை - அந்தப் பாம்பை, பற்றி — பிடித்து, ஈர்த்தனர் — இழுத்தார்கள் சிலர், தெழித்தனர் — அதட்டினார்கள் சிலர், ஆர்த்தனர் - கர்ச்சித்தார்கள், பலர் - அநேகர்—எ-று. 60

குரக்குநல்வலங்குறைந்ததென்றுவலங்கொட்டி
இரைக்குமாநகரெறிகடலொத்ததெம்மருங்கும்
திரைக்குமாசுணம்வாசுகியொத்ததுதேவர்
அரக்கரொத்தனர்மந்தரமொத்தனனநுமன்.

இ-ள். குரக்கு — இந்தக் குரங்கினுடைய, நல்வலம் — மிகுந்தவலிமை, குறைந்ததென்று — அடங்கிற்றென்று, ஆவலம் — கர்வத்தினாலே, கொட்டி-

தோள்களைத் தட்டிக்கொண்டு, இரைக்கும் – சத்திக்கின்ற, மாநகர் – அந்தப் பட்டணமானது, எறிகடல் – அலைமோதுகிறகடலை, ஒத்தது – ஒப்பாயிற்று, எம்மருங்கும் – எவ்விடத்திலும், திரைக்கும்-சூழ்ந்திருக்கிற, மாசுணம், அஸ் திரமானபாம்பு, வாசுகி – வாசுகியென்னும்பாம்பை, ஒத்தது – ஒப்பாயிற்று, தேவர் – அதைப்பற்றியிழுத்ததேவதை, அரக்கர் – ராக்ஷதர்கள், ஒத்தனர்- ஒப்பாயினர்கள், மந்தரம் – மந்தரமலையை, ஒத்தவன் – ஒப்பாயினர், அனு மன் – அனுமார்—எ-று. 61

கறுத்தமாசுணங்கனகமாமேனியைக்கட்ட
அறத்துக்காங்கொருதனித்துணையாநின்றவநுமன்
மறத்துமாருதம்பொருதநாள்வாளராவரசு
புறத்துச்சுற்றியமேருமால்வரையையும்போன்றான்.

இ-ள். கறுத்த – கருநிறமுள்ள, மாசுணம் – அந்தப்பாம்பு, கனகம்- சுவர்ணமயமான, மாமேனியை – பெரிய தமதுடம்பை, கட்ட – சூழ்ந்தத னாலே, அறத்து - தருமத்துக்கு, ஆங்கு – அங்கே, ஒருதனி – ஒருதானே, துணையாய்நின்ற – சகாயமாயிருந்த, அனுமன் – அனுமாரானவர், மறத்து- வீரத்துடனே, மாருதம் – வாயுவானது, பொருதநாள் - வீசும்போது, வாள்- பல்லாகிய வாளையுடைய, அராஅரசு – சர்ப்பராஜனாலே, புறத்து – சுற்றி லும், சுற்றிய – சூழ்ந்த, மேருமால்வரையையும் - பெரிய மேருமலையையும், போன்றான் – ஒப்பாயினர்—எ-று. அனுமாருடல் ரத்தத்தால் சிவந்திருத் தலாலே செம்பொன்மா மேருவென்றார். 62

வந்திரைத்தனர்மைந்தருமகளிருமழைபோல்
அந்தரத்தினும்விசும்பினுந்திசைதொறுமார்ப்பார்
முந்தியுற்றதோருவகைக்கோர்கரையிலைமொழியின்
இந்திரன்பிணிப்புண்டநாளொத்ததவ்விலங்கை.

இ-ள். வந்து இரைத்தனர் - அப்போதங்குவந்து சத்தித்தார்கள், மைந் தரும் – புருஷர்களும், மகளிரும் – பெண்களும், மழைபோல் – மேகங்கள் போல், அந்தரத்தினும் - ஆகாயத்திலும், விசும்பினும் – மேகமண்டலத்தி னும், திசைதொறும் – மற்ற எந்தத் திக்குகளிலும், ஆர்ப்பார் - முழங்கலா னார்கள், முந்தி – அவர்கள் துன்பத்துக்குமுன்னே, உற்றது – வந்ததான, ஒருவகைக்கு - ஒரு சந்தோஷத்துக்கு, ஓர் கரையிலை – ஒரு அளவுமில்லை, மொழின் – சொல்லுமிடத்திலே, இந்திரன் – முன்னே தேவராஜன், பிணிப் புண்டநாள் – கட்டுப்பட்டநாளிலுண்டான சந்தோஷத்தை, ஒத்தது - ஒப் பாகச் சந்தோஷிக்கலாயிற்று, அவ்விலங்கை – அந்தவூர்—எ-று. அந்தரத் தினும் அவ்விடத்திலும் விசும்பிலும் ஆகாயத்திலுமெனவுமாம். 63

பாசப்படலம் முற்றிற்று
ஆ படலம் - 12 – க்கு திருவிருத்தம் – 1046
கம்பநாட்டாழ்வார் திருவடிகளே சரணம்

பதின்மூன்றாவது

# பிணிவீட்டு படலம்

## அனுமாரைக் கட்டினது விடுதல்

வேறு

எய்யுமினீருமினெறிமின்போழுமின்
கொய்யுமின்குடரினைக்கூறுகூறுகள்
செய்யுமினுலகிடைத்தேய்மின்றின்னுமின்
உய்யுமேலில்லைநம்முயிரென்றோடுவார்.

இ-ள். எய்யுமின் — அம்பாலெய்யுங்கள், ஈருமின் - கத்தியால் வெட்டுங்கள், எறிமின் — ஈட்டியாற்குத்துங்கள், போழுமின் — குடாரியாற் பிளவுங்கள், கொய்யுமின் — சுரிகையாலறுங்கள், குடரினை - இதன்குடலை, கூறுகூறுகள் — துண்டுதுண்டுகளாக, செய்யுமின் - பண்ணுங்கள், உலகிடை-மண்ணிலேகிடத்தி, தேய்மின் — அரையுங்கள், தின்னுமின் — கொய்து கொய்து தின்னுங்கள், உய்யுமேல் - இனி இது பிழைக்குமானல், நம் உயிர் — நம்முடைய உயிர்கள், இல்லை — இல்லையாம், என்று — என்றுசொல்லி, ஓடுவார்-சிலர் ஓடிவருவார்கள்—எ-று. 1

மைத்தடங்கண்ணியர்மைந்தர்யாவரும்
பைத்தலையரவெனக்கனன்றுபைதலை
இத்தனைபொழுதுகொண்டிருப்பதோவெனு
மொய்த்தனர்கொலைசெயமுயல்கின்றார்சிலர்.

இ-ள். மை — மையிட்ட, தடம் — விசாலமான, கண்ணியர் — கண்களையுடைய பெண்களும், மைந்தர் — புருஷர்களுங்கூடி, யாவரும் — எல்லாரும், மொய்த்தனர் — நெருங்கினவர்களாக, பை - படத்தை, தலை — தலையிலேயுடைய, அரவென — பாம்புபோல், கனன்று — கோபங்கொண்டு, பைதலை- இந்தக் குரங்குப்பையலை, இத்தனை பொழுதுகொண்டு - இந்நேரமும் வைத்துக்கொண்டு, இருப்பதோ எனு — இருக்கலாமாவென்று, கொலைசெய-கொல்ல, முயல்கின்றார் சிலர் — சிலர் யுத்தஞ்செய்கிறார்கள்—எ-று. 2

நச்சடைபடைகளானலியுமீட்டதோ
வச்சிரமுடன்மறிகடலின்வாய்மடுத்
துச்சியினழுத்துமினுருத்ததின்றெனிற்
கிச்சிடையிடுமெனக்கிளக்கின்றார்சிலர்.

இ-ள். நச்சு அடை — விஷஜலத்தைக்கொண்ட, படைகளால் — அஸ்திரசஸ்திரங்களாலே, நலியும் — வருத்திக்கொல்லத்தக்க, ஈட்டதோ — தகுதி

யுள்ளதோ, வச்சிரமுடன் — தலையிலேசேர்த்த வச்சிராயுதத்துடனே, மறிகடலின் — அலைமடங்குகிறகடலின், வாய்மடுத்து — இடத்திலேதள்ளி, உச்சியின்-உச்சந்தலையிலே, அழுத்துமின் - எல்லாருங்கூடி அழுத்துங்கள், இன்று இப்போது, உருத்தது — கோபங்கொண்டிருப்பதே, எனின் — என்றால், கிச்சிடை — நெருப்பிடை, இடுமென - போகவிடுங்களென்று, கிளக்கின்றார்கிலர் — சிலர் சொல்லுகிறார்கள்—எ-று. 3

எந்தையையெம்பியையெம்முனோர்களைத்
தந்தனைபோகெனத்தடுக்கின்றார்பலர்
அந்தரத்தமரர்தமாணையாலிவன்
வந்ததென்றுயிர்கொளமறுகினார்பலர்.

இ-ள். எந்தையை — என் தந்தையையும், எம்பியை-என் தம்பியையும், எம்முனோர்களை — எனக்கு முன்பிறந்தவர்களையும், தந்தனை — கொன்றபழியைத் தந்தாயாகில், போகென — போவென்று, தடுக்கின்றார்பலர் — பலருந் தடுப்பதானார்கள், அந்தரத்து — ஆகாயத்திலுள்ள, அமரர்தம் — தேவர்களுடைய, ஆணையால் — உத்தரவினால், இவன் - இந்தக்குரங்கு, வந்ததென்று- இங்குவந்தகாரியமென்று, உயிர்கொள - அவருயிரைவதைக்க, மறுகினார்பலர்- பலரும் எண்ணி மயங்குகிறார்கள்—எ-று. 4

ஓங்கலம்பெருவலியுயிரினன்பரை
நீங்கலமின்றொடுநீங்கினோமினி
ஏங்கலமிவன்சிரத்திருந்தலாற்றிரு
வாங்கலமென்றழுமாதரார்பலர்.

இ-ள். ஓங்கல்-மலைபோல்வதான, பெருவலி-மகா பலத்தைக்கொண்ட, உயிரின் - நமக்குயிர்போன்ற, அன்பரை — நாயகரை, நீங்கலம் — இன்றளவும் பிரியாதிருந்தோம், இன்றொடு — இன்றுமுதலாக, நீங்கினோம் - பிரிவதாயினோம், இனி — பிரிந்ததற்காக இனி, ஏங்கலம் — அழமாட்டோம் ஏனென்றால், இவன் - இந்தக் குரங்கினது, சிரத்து - தலைமேல், இருந்தலால் - இருந்து தாலியறுக்கிறதே அல்லாமல், திருவாங்கலம் - தாலி அறுக்கமாட்டோம், என்று — என்பதாக, அழும் — அழுகிற, மாதரார்பலர் — பெண்கள்பலர்-எ-று.

கொண்டனரெதிர்செலுங்கொற்றமாநகர்
அண்டமுற்றதுநெடிதார்க்குமார்ப்பது
கண்டமுற்றுளவருங்கணவர்க்கேங்கிய
குண்டலமுகத்தியர்க்குவகைகூரவே.

இ-ள். கொண்டனர் - இழுத்துக்கொண்டுபோகிறவர்கள், எதிர் - முன்னே, செலும் — வேடிக்கைபார்க்கவருகிற, கொற்றம் - வெற்றியுள்ள அந்த, மாநகர் — பெரிய வூரிலுள்ளவர்கள், நெடிது - அதிகமாக, ஆர்க்கும் — கொர்ச்சிக்கிற, ஆர்ப்பது — சத்தமானது, அண்டமுற்றது - ஆகாசம்போய் முட்ட

லாயிற்று, கண்டமுற்றுள - கண்டதுண்டப்பட்டிறந்த, அருங்கணவர்க்கு- அருமையான நாயகர்களுக்கு, ஏங்கி - அழுகிற, குண்டலம் - பொன்னேலை யணிந்த காதுகளுள்ள, முகத்தியர்க்கு - முகமுள்ள பெண்களுக்கு, உவகை- சந்தோஷம், கூர - அதிகமாக, ஆர்ப்பது - அண்டமுற்றது—எ-று. 6

வடியுடைக்கனற்படைவயவர்மால்கரி
கொடியுடைத்தேர்பரிகொண்டுவீசலின்
இடிபடச்சிதைந்தமால்வரையினில்லெலாம்
பொடிபடக்கிடந்தனகண்டுபோயினன்.

இ-ள். வடியுடை - கூர்மையுள்ள, கனல் - அக்கினிச் சுவாலையோடு கூடின, படை - அஸ்திரசஸ்திரங்களுள்ள, வயவர் - வீரர்களும், மால்கரி- பெரிய யானைகளும், கொடியுடை - கொடிகளைக்கொண்ட, தேர் - தேர்க ளும், பரி - குதிரைகளும், கொண்டு - கையிலேகொண்டு, வீசலின் - தாம் எறிந்ததனலே, இடிபட - இடிந்து, சிதைந்த - தகர்ந்துள்ள, மால்வரையின்- பெரிய மலைபோன்ற, இல்லெலாம் - வீடுகளெல்லாம், பொடிபடக்கிடந்தன- தூள் தூளாகிக்கிடப்பதை, கண்டு - பார்த்துக்கொண்டு, போயினன் - அனு மார் போகலானர்—எ-று. 7

முயிறலைத்தெழுமுதுமரத்தின்மொய்ம்புதோள்
கயிறலைப்புண்டதுகண்டுகாண்கிலா
தெயிறலைத்தெழுமிதழரக்கரேழையர்
வயிறலைத்திரியலின்மயங்கினர்பலர்.

இ-ள். முயிறு - ஒருவகைச் செவ்வெறும்புகள், அலைத்து - சூழ்ந்து மொய்த்து, எழும் - சஞ்சரிப்பதான, முதுமரத்தின் - பெரிய மரம்போல், மொய்ம்புதோள் - தோள்களும் தோட்புறமும், கயிறு-இந்திரசித்தன் பாசத் தாலே, அலைப்புண்டது - இறுகியிருப்பதை, கண்டு - பார்த்து பின்னும், காண்கிலாது பார்க்கஅஞ்சி, எயிறு - பற்கள், அலைத்து - மோதுதலாய்வந்து, எழும் - வெளியேதோன்றுகிற, இதழ் - இதழ்களையுடைய, அரக்கரேழை யர் - ராக்ஷதப்பெண்கள், வயிறு - தங்கள் வயிற்றை, அலைத்து - பிசைந்து கொண்டு, இரியலின் - ஓடுகிறதினலே, மயங்கினர்பலர் - சோர்ந்துள்ள பெண்கள் அநேகர்—எ-று. 8

ஆர்ப்புறவஞ்சினரடங்கினர்பலர்
போர்ப்புறச்செயலினைப்புகல்கின்றார்பலர்
பார்ப்புறப்பார்புறப்பயத்தினற்பதைத்
தூர்ப்புறத்திரியலுற்றோடுவார்பலர்.

இ-ள். ஆர்ப்புற - அதட்டிப்பேச, அஞ்சினர் - பயந்தவர்களாய், அடங் கினர்பலர் - அடங்கிப்போனர்கள் பலபெண்கள், போர்ப்புறம் - சண்டை யிலேநடந்த, செயலினை - அனுமார் செய்கைகளை, புகல்கின்றார்பலர்-சொல்

றுகிறார்கள் அநேகர், பார்ப்புறப்பார்புற - அனுமாரைப் பார்க்கிறபோது, பயத்தினால் - பயமிகுதியாலே, பதைத்து - அடிதுடித்து, ஊர்ப்புறத்து - ஊருக்குவெளியே, இரியலுற்று - செல்லுதலாகி, ஓடுவார்பலர் - ஓடுகிறவர்கள் அநேகர்—எ-று. 9

காந்துறுகதழெயிற்றரவின்கட்டொரு
பூந்துணர்சேர்த்தெனப்பொலியும்வாண்முகம்
தேர்ந்துறுபொருள்பெறவெண்ணிச்செய்யுமின்
வேந்துறல்பழுதெனவிளம்புவார்சிலர்.

இ-ள். காந்துறு - சீறுகின்ற, கதழ் - அசைதலையுடைய, எயிற்று - பற்களோடுகூடின, அரவின்கட்டு - பாம்பாலே கட்டியிருக்கிறது, ஒரு பூந்துணர் - ஒரு பூமாலையாலே, சேர்த்தென - கட்டினதுபோல, வாள்முகம் - இந்தக்குரங்கினதொளியுள்ளமுகம், பொலியும் - விளங்குகின்றது ஆகையால், தேர்ந்து - ஆலோசித்து, உறுபொருள் - இனி நாம் பெறுங்காரியத்தை, பெற - பெறுதற்கும், எண்ணி - ஆலோசித்து, செய்யுமின் - செய்யுங்கள், வேந்து - அரசனிடத்தே, உறல் - இதைக்கொண்டுபோய்விடுகிறது, பழுதென - வியர்த்தமேயென்று, விளம்புவார்சிலர் - சிலர் சொல்லுகிறார்கள்.

ஒளிவருநாகத்துக்கொல்கியன்றுதன்
இளிவரவின்றுபின்னெண்ணம்வேறெனக்
களிவருசிந்தையாற்காண்டிநங்களைச்
சுளிகலையாமெனத்தொழுகின்றார்சிலர்.

இ-ள். ஒளிவரும் — ஒளியோடுகூடின, நாகத்துக்கு - கட் நாகபாசத்துக்கு, ஒல்கியன்று — தளர்ந்ததல்ல, தன் - இக்குரங்கு தன்னுடைய, இளிவரல் - எளியதன்மை, இன்று - எவ்வளவுமில்லாதிருக்கின்றது, பின் - பின்பு, எண்ணம் - தனது நினைவு, வேறென - வேறேயென்று, களிவரு - இதன் சந்தோஷத்துடனே கூடிவருகிற, சிந்தையால் - மனதினிடத்திலுலே எண்ணம்வேறென்று தெரிந்து, காண்டி நங்களை - ஐயா எங்களைத் தயவுகொண்டு பாரும், சுளி கலையென - கோபஞ் செய்யாதிருப்பீராக வென்று, தொழுகின்றார் சிலர் - சிலர் கும்பிடுகிறார்கள்—எ-று. ஆம்-சாரியை. 11

பைங்கழலநுமனைப்பணித்தபாந்தளைக்
கிங்கரரொருபுடைகிளர்ந்துபற்றினர்
ஐம்பதினாயிரராளவிலாற்றலர்
மொய்ம்பினிற்னெறுழ்வலிக்கருளன்மும்மையார்.

இ-ள். பைங்கழல் - பசியதான வீரக்கழலையுடைய, அனுமனை - அனுமாரை, பிணித்த — கட்டியிருக்கிற, பாந்தளை - பாம்பை, கிங்கரர் — இராவணனூழியகாரர்கள், ஒருபுடை — ஒருபக்கத்திலேகூடி, கிளர்ந்து - மேன்மே

லாகி, பற்றினர் — பிடித்திழுக்கலானார்கள் அவர்களோ, ஐம்பதினுயிரர் — ஐம்பதினுபிரம் பேர்களான, அளவில் — கணக்கில்லாத, ஆற்றலர் — பலமுள்ளவர்கள், மொய்ம்பினின் — தங்கள்புஜபலத்தினாலே, எறுழ்வலி — மிக்கவலிமையுள்ள, கருளன் — கருடனிலும், மும்மையார் — மூன்றுபங்கதிகமானவர்கள்—எ-று. ஒருபுடை யென்றதனானே மற்றொருபுடைக்கு மவ்வளவினரே யென்பது கொள்க. 12

திண்டிறலரக்கர்தஞ்செருக்குச்சிந்துவான்
தண்டலிறன்னுருக்கரந்ததன்மையான்
மண்டமர்தொடங்கினன்வானரத்துருக்
கொண்டனனந்தகன்கொல்லென்றார்பலர்.

இ-ள். திண்திறல் — மிக்கபலமுள்ள, அரக்கர்தம் — ராக்ஷதர்களுடைய, செருக்கு — மனக்களிப்பை, சிந்துவான் — போக்குதற்கு, தண்டலில் — நீங்குதலில்லாத, தன் உரு — தன் வடிவை, கரந்த — மறைத்துள்ள, தன்மையான் — குணமுள்ளவனாகி, மண்டு அமர் — நெருங்கின இந்தச்சண்டையை, தொடங்கினன் — ஆரம்பித்துச் செய்தவன், வானரத்துரு — குரங்குவடிவை, கொண்டனன் — கொண்டுவந்தவனே, அந்தகன் கொல் — ஆனலிவன் யமன் தானோ, என்றார்பலர் — என்று பலருஞ்சொல்லலானார்கள்—எ-று. 13

அரமியத்தலந்தொறுமம்பொன்மாளிகைத்
தரமுறுநிலைதொறுஞ்சாளரந்தொறும்
முரசெறிகடைதொறுமிரைத்துமொய்த்தனர்
நிரைவளைமகளிருநிறைந்தமைந்தரும்.

இ-ள். அரமியத்தலந்தொறும் — நிலாமுற்றங்களிலும், அம்பொன் — அழகானபொன்மயமான, மாளிகை — வீடுகளின், தரமுறு — இடமுள்ள தகுதியுள்ள, நிலைதொறும் — நிலைவாயில்களிலும், சாளரந்தொறும் — சன்னல்களிலும், முரசுஎறி — பேரிகையடிக்கிற, கடைதொறும் — இடங்களிலும், இரைத்து — சத்தித்தவர்களாக, மொய்த்தனர் — வேடிக்கைபார்க்கக் கூடினார்கள், நிரை — வரிசையான, வளை — வளையல்களணிந்த, மகளிரும் — பெண்களும், நிறைந்த — வரிசை வரிசையாகக் கூடின, மைந்தரும் — புருஷர்களும்—எ-று. 14

கயிலையிலொருதனிக்கணிச்சிவானவன்
மயிலியற்சீதைதன்கற்பின்மாட்சியால்
எயிலுடைத்திருநகர்சிதைப்பவெய்தினன்
அயிலெயிற்றொருகுரங்காயென்பார்பலர்.

இ-ள். கயிலையின் — வெள்ளிமலையிலிருக்கிற, ஒருதனி — ஒப்பில்லாத ஒருவரான, கணிச்சிவானவன் — சூலபாணியான மகாதேவர், மயிலியல் — மயிற்சாயலைக்கொண்ட, சீதைதன் — சீதாபிராட்டியினுடைய, கற்பின்

மாட்சியால் - பதிவிரதாசிலேயின் பெருமையினுலே, எயிலுடை - மதில்களை யுடைய, திருநகர் - இந்த இலங்கையை, சிதைப்ப - அழிக்க, எய்தினன் - வந்தார், அயில் - கூரிய, எயிற்று - பற்களையுடைய, ஒரு குரங்காய் - ஒரு குரங்குவடிவாக, என்பார்பலர் - என்றுசொல்கிறவர்களநேகர் — எ-று. 15

அரம்பையர்விஞ்சைநாட்டளகவல்லியர்
நரம்பினுமினியசொனுகநாடியர்
கரும்பியல்சித்தியரியக்கர்கன்னியர்
வரம்பறுசும்மையர்தலைமயங்கினுர்.

இ-ள். அரம்பையர் - ரம்பைகளும், விஞ்சைநாட்டு — வித்தியாதரர் நாட்டிலேயுள்ள, அளகம் - கூந்தலைக்கொண்ட, வல்லியர் - கொடிபோன்றவர்களும், நரம்பினும் - வீணுகானத்திலும், இனியசொல் - இன்சொற்களைக் கொண்ட, நாகநாடியர் - நாகலோகத்துக் கன்னிகளும், கரும்பு இயல் - கரும்புபோல் அனுபவரசமுள்ள, சித்தியர் - சித்தகன்னிகளும், இயக்கர் கன்னியர் - யக்ஷகன்னிகளும், வரம்பு அறு - அளவற்ற, சும்மையர் - சத்தமுள்ளவர்களாகி, தலை - எவ்விடங்களிலும், மயங்கினுர் - வந்து கூடினுர்கள் — எ-று. 16

நீரிடைக்கண்டுயிலெனெடியநேமியும்
தாருடைத்தனிமலருலகின்றுதையும்
ஒருடற்கொண்டுதம்முருவமாற்றினர்
பாரிடைப்புகுந்தனர்பகைத்தென்பார்பலர்.

இ-ள். நீரிடை - ஜலத்திலே, கண்துயில் - நித்திரைசெய்கிற, நெடிய - நீண்டுயர்ந்த, நேமியும் - சக்கராயுதக்கடவுளும், தாருடை - தண்டுநீளுதலுடைய, தனிமலர் - ஒரு பூவிலேயிருக்கிற, உலகின்தாதையும் - லோகசிருஷ்டியஞன பிரமாவும், ஒருடற்கொண்டு - ஒரேசரீரமாகி, தம் உருவம் - தங்கள் வடிவை, மாற்றினர் - மறைத்தவர்களாக, பாரிடை - இந்த இலங்கையிலே, புகுந்தனர் - வந்தார்கள், பகைத்து - நம்மோடு பகைகொண்டு, என்பார் பலர் - என்று சொல்லுகிறவர்களநேகர் — எ-று. 17

அரக்கருமரக்கியர்குழாமுமல்லவர்
கரக்கிலர்நெடுமழைக்கண்ணினீரது
விரைக்குழற்சீதைதன்மெலிவுநோக்கியோ
இரக்கமோ:றத்தினதெண்மையேகொலோ.

இ-ள். அரக்கரும் - ராக்ஷதர்களும், அரக்கியர் குழாமும் - ராக்ஷதிகள் கூட்டமும், அல்லவர் - அல்லாதமற்றையோர்களும், நெடு - நீண்ட, மழை - மழைபோன்ற, கண்ணினீர் — கண்களினீரை ஒழுகவிடுதலை, கரக்கிலர் - இல்லாதிருக்க இல்லை, அது - அழவேண்டாதவர்களும் அழுகிறது, விரை - மணம்பொருந்தின, குழல் - கூந்தலையுடைய, சீதைதன் - சீதர்பிராட்டியின்,

மெலிவு - இளைத்தலை, நோக்கியோ - குறித்தோ, இரக்கமோ - அனுமார்மே லுள்ள இரக்கத்தினாலோ, அறத்தினது - தருமத்துக்குண்டான, எண்மையே கொல் - எளிவரவைக்குறித்தோ—எ-று. ராக்ஷதர்களும் - ராக்ஷதிகளும் அழுகிறது ராக்ஷதர்களிறந்ததைக் குறித்து மற்றையோரும் அழுகிறது இராவணனுக்கு மெய்க்காட்ட என்பது கருத்து, அதாவது இராவணனிடத்தில் அன்புள்ளவர்களென்று அவனெண்ண. 18

ஆண்டொழிலநுமனுமவரோடேகினன்
மீண்டிலன்வேறிலன்விரும்பலுற்றிலன்
ஈண்டிதுவேதொடர்ந்திலங்கைவேந்தனைக்
காண்டலேநலனெனக்கருத்தினெண்ணினன்.

இ-ள். ஆண்டொழில் - ஆண்மைத்தொழிலிற் சிறந்த, அநுமனும்- அனுமாரானவர், அவரோடு - அவர்களுடன்கூட, ஏகினன் - ஒன்றுஞ் செய்யாது போகிறவராய், மீண்டிலன் - வாரேனென்று திரும்புதலுமில்லையாய், வேறிலன் - வேறொன்றுஞ் செய்வதில்லையாய், விரும்பலுற்றிலன்- தம்மைக்கட்டிக்கொண்டு போகிறதற்கும் சந்தோஷமில்லையாய், ஈண்டு- இப்போது செல்லுகிற, இதுவே - இந்தச் செல்லுகையே காரணமாக, தொடர்ந்து - இவர்கள் கூடப்போய், இலங்கைவேந்தனை - இராவணனை, காண்டலே - கண்டுபேசுகிறதே, நலனென - நல்லகாரியமென்று, கருத்தின் - தமதுள்ளத்திலே, எண்ணினன் - நினைத்தார்—எ-று. 19

எந்தையதருளினுமிராமன்சேவடி
சிந்தைசெய்நலத்தினுஞ்சீதைவானவர்
தந்துளவரத்தினுந்தறுகட்பாசமும்
சிந்துவெனயர்வுறுசிந்தைசீரிதால்.

இ-ள். எந்தையது - என்பிதாவினுடைய, அருளினும் - தயவினாலும், இராமன் - ஸ்ரீராமனுடைய, சேவடி - சிவந்த பாதங்களை, சிந்தைசெய்- தியானிக்கின்ற, நலத்தினும் - நன்மையினாலும், சீதை - சீதாபிராட்டியும், வானவர் - தேவர்களும், தந்துள - கொடுத்திருக்கிற, வரத்தினும், - வர பலத்தினாலும், தறுகண் - என்னைக்கட்டியிருக்கிற கொடுமையுள்ள, பாசமும் - கயிற்றையும், சிந்துவென் - அறம்பண்ணுவேன் ஆனாலும், அயர்வுறு- இந்த வேளையி லிப்பாசத்துக்காக இளைத்தவனாகி யிருக்கிற, சிந்தை - மன நினைவே, சீரிது - நன்றானது—எ-று. 20

வளையெயிற்றரக்கனையுற்றுமந்திரத்
தளவுறுமுதியருமறியவாணையால்
விளைவினைவிளம்பினன்மிதிலைநாடியை
இளகினனெனவயினீதலையுமால்.

இ-ள். வளையெயிறு - வளைந்தபற்களையுடைய, அரக்கனை-ராவணனை, உற்று - போய்க்கொண்டு, மந்திரத்து - அவனாலோசனையில், அளவுறு-

அடங்குதலான, முதியரும் - விருத்தர்களும், அரிய - தெரிவதாக, ஆணையால் - சுக்கிரீவன் சொன்னதாக, விளைவினை - நடக்கப்போகிறதை, விளம்பினல் - நான் சொன்னல், மிதிலைநாடியை - சீதாபிராட்டியை, இளகினன்-மனந்திருந்தினவனாகி, என்வயின் - என்வசமாகவே, ஈதலேயும் - கொடுப்பதும் கூடும் - எ-று. 21

அல்லதூஉவவனுடைத்துணைவராயினர்க்
கெல்லையுந்தெரிவுறுமெண்ணுந்தேறலாம்
வல்லவனிலைமையுமனமுந்தேறலாம்
சொல்லுகமுகமெனுந்தூதுசொல்லவே.

இ-ள். அல்லதூஉம் - அதை அல்லாதனும், அவனுடை - அவனுடைய, துணைவர் - உதவியானவர்களாக, ஆயினர்க்கு - கூடியிருப்பவர்களுடைய, எல்லையும் - அளவும், தெரிவுறும் - தெரிவதாகும், எண்ணும் - அவனினைவும், தேறலாம் - தெரிந்துகொள்ளலாம், வல்லவன் - வல்லவனான அவனுடைய, நிலைமையும் - சுவபாவமும், மனமும் - மனோதிடமும், தேறலாம் - தெளிந்துகொள்ளலாம், முகம் - ராவணன் முன்னே, சொல்லுக எனும் - சொல்லக்கடவையென்கிற, தூது சொல்லவே - தூதுசொல்லுதலாலே. 22

வாலிதன்னிறுதியுமாத்துக்குற்றதும்
கூலவெஞ்சேனையின்குணிப்பிலாமையும்
மேலவன்காதலன்வலியுமெய்ம்மையான்
நீனிறத்திராவணனெஞ்சினிற்குமால்.

இ-ள். வாலிதன் - வாலியினுடைய, இறுதியும் - சாவும், மாத்துக்கு - மராமரத்துக்கு, உற்றதும் - துவாரமானதும், கூலம் - வால்களுள்ள குரங்குகளின், வெஞ்சேனையின் - வெவ்விய சேனைகளுடைய, குணிப்பில்லாமையும், அளவில்லாதமையையும், மேலவன் காதலன் - சூரியகுமாரனான சுக்கிரீவனுடைய, வலியும் - பலமும், மெய்ம்மையால் - மெய்யாகவே, நீலநிறத்து - கரிய நிறமுள்ள, இராவணன் - இராவணனுடைய, நெஞ்சில் - மனத்திலே, நிற்கும் - நிலைபெறுவனவாம் - எ-று. 23

ஆதலானரக்கனையெய்தியாற்றலும்
நீதியுமனக்கொளநிறுவிநின்றவும்
பாதியின்மேற்செலநூறிபைப்பையப்
போதலேகருமமென்றநுமன்போயினன்.

இ-ள். ஆதலான் - ஆகையால், அரக்கனையெய்தி - ராவணனைக்கண்டு, ஆற்றலும் - ஸ்ரீராமனுடைய பலமும், நீதியும் - அவருடைய நன்மார்க்கமும், மனக்கொள - அவன் மனத்திலேபட, நிறுவி - நிலைபெறச்செய்து, நின்றதும் - சாவாதிருக்கிற சேனைகளிலே, பாதியின்மேற்செல - பாதிக்கு மேலாக, பையபைய நூறி - கொஞ்சங் கொஞ்சமாக அழித்துவிட்டு, போதலே,

போகிறதே, கருமமென்று — காரியமென்று யோசித்துக்கொண்டு, அனுமன் போயினன் — அனுமார் போனர்—எ-று. 24

கடவுளர்க்கரசனைக்கடந்ததோன்றலும்
புடைவரும்பெரும்படைப்புணரிபோர்த்தெழ
விடைபிணிப்புண்டதுபோலும்வீரனைக்
குடைகெழுமன்னனிற்கொண்டுபோயினன்.

இ-ள். கடவுளர்க்கு — தேவர்களுக்கு, அரசனை — ராஜனை இந்திரனை, கடந்த — வென்ற, தோன்றலும் — மேகநாதன், புடைவரும் — தன் கூடவருகிற, பெரும்படை — பெரிய சேனைகளின், புணரி — கடலானது, போர்த்தெழ — சூழ்ந்துவர, விடை — ஒருருஷபம், பிணிப்புண்டது — கட்டுப்பட்டது, போலும்வீரனை — போன்ற அனுமாரை, குடைகெழு — பூச்சக்கிரக்குடையையுடைய மன்னனில் - அரசனை ராவணனிடம், கொண்டுபோயினன் - கொண்டுபோனன்—எ-று. 25

தூதுவரோடினர்தொழுதுதொல்லைநாள்
மாதிரங்கடந்தவற்குறுகிமன்னநின்
காதலன்மறைமலர்க்கடவுள்வாளியால்
ஏதில்வானரம்பிணிப்புண்டதாமென்றார்.

இ-ள். தூதுவர் ஓடினர் - தூதரோடிப்போய், தொழுது — ராவணனை வணங்கி, தொல்லைநாள் — முன்னாளிலே, மாதிரம் — திசைகளையெல்லாம், கடந்தவன் — ஜெயித்தராவணனை, குறுகி — பார்த்து, மன்ன — அரசனே, நின் காதலன் — உன் புத்திரனுடைய, மறைமலர்க்கடவுள் வாளியால் — பிரமாஸ்திரத்தினலே, ஏதில் - நம்மில் வேறன, வானரம் — குரங்கு, பிணிப்புண்டது - கட்டுப்பட்டது, ஆமென்றார் - மெய்யேயென்றார்கள்—எ-று.

கேட்டலுங்கிளர்சுடர்க்கேட்டவானென
வீட்டிருள்விழுங்கியமார்பின்யானையின்
கோட்டெதிர்பொருதபேராரங்கொண்டெதிர்
நீட்டினனுவகையினிமிர்ந்தநெஞ்சினன்.

இ-ள். கேட்டலும் — அச்சொற்கேட்டவுடனே, கிளர் — விளங்குகிற, சுடர் — சூரியசந்திரர்களை, கேட்ட - இல்லாதிருக்கிற, வானென — ஆகாயம்போல், ஈட்டிருள் — செறிந்தஇருளை, விழுங்கிய — கபளீகரித்த, மார்பில் - கரியமார்பிலே, யானையின்கோட்டு - திக்கியானைகளின் கொம்புக்கு, எதிர் — முன்னே, பொருத — பொருதவிட்டணிந்த, பேராரம் — பெரிய முத்துமாலையை தன் மார்பின்மாலையை, கொண்டு — கழற்றி, எதிர் — சொன்னவர்களுக்குமுன்னே, நீட்டினன் — வெகுமானமாகக் கொடுத்தான், உவகையில் - சந்தோஷத்தினலே, நிமிர்ந்த — உயர்ந்த, நெஞ்சினன்-மனமுள்ளவன் மார்பிரிருணிறத்தை விழுங்கிய பேராரமெனக்கூட்டுக—எ-று. 27

எல்லையிலுவகையாலிவர்ந்ததோளினன்
புல்லுறமலர்ந்தகட்குமுதப்பூவினன்
ஒல்லையினோடிநீருரைத்தென்னாணையால்
கொல்லலிர்தருகெனக்கூறுவீரென்றான்.

இ-ள். எல்லையில் — அளவில்லாத, உவகையால் — சந்தோஷத்தினாலே, இவர்ந்த — உயர்ந்த, தோளினன் — தோள்களையுடைய ராவணன், புல்லுற-அந்தக் குரங்கைக்காண, மலர்ந்த — விகசிதமான, கண் — கண்கள், குமுதப் பூவினன் - செவ்வல்லிப்பூப்போற் சிவந்தவனாகி, ஒல்லையின் — விரைவிலே, ஓடிநீர் — நீவிரோடிப்போய், உரைத்து — சொல்லி, என் ஆணையால் — என் உத்தரவின்படியே, கொல்லலீர் — கொல்லாமல்நீவிர், தருகென - கொண்டு வாருங்களென்று, கூறுவீர் என்றான் — சொல்லக்கடவீர்களென்றான்-எ-று.

அவ்வுரைதூதருமாணையால்வரும்
தெவ்வுரைநீக்கினனறியச்செப்பினார்
இவ்வுரைநிகழ்வுழியிருந்தசீதையாம்
வெவ்வுரைநீங்கினணிலைவிளம்புவாம்.

இ-ள். அவ்வுரை — அந்தச்சொல்லை, தூதரும் — தூதர்கள்போய், ஆணையால் — ஆச்ஞையுடனே, வரும் — வருகிற, தெவ் உரை — சத்துருவென்னும் சொல்லை, நீக்கினன் — போக்கடித்த இந்திரசித்துக்கு, அறிய-தெரிய, செப்பினார் — சொன்னார்கள், இவ்வுரை — அனுமார்பிடிபட்ட இந்தச்சொல், நிகழ்வுழி - எங்கும்பிரசித்தமானபோது, இருந்த — சிறையிலிருந்த, சீதையாம்-சீதாபிராட்டியான, வெவ்வுரை — கொடுஞ்சொற்களை, நீங்கினள் — சொல்லாதிருக்கிறவள், நிலைவிளம்புவாம் — நிலையைச் சொல்லக்கடவோம்—எ-று. கோபங்கொண்டு — சாபமிடாதிருக்கிறவளென்க. 29

இறுத்தனன்கடிபொழிலெண்ணிலோர்பட
ஒறுத்தனனென்றுகொண்டுவக்கின்றாளுயிர்
வெறுத்தனள்சோர்வுறவீரற்குற்றதைக்
கறுத்தலில்சிந்தையாள்கவன்றுகூறினாள்.

இ-ள். கடிபொழில் — இந்தக் காவலுள்ள சோலையை, இறுத்தனன்-ஒடித்தழித்தான், எண்ணிலோர்பட — அளவற்றவர்கள்சாவ, ஒறுத்தனன்-கொன்றான், என்றுகொண்டு — என்று சொல்லக்கேட்டு, உவக்கின்றாள்-சந்தோஷிக்கிற பிராட்டி, உயிர்வெறுத்தனள் — தன் உயிரை வேண்டாளாகி, சோர்வுஉற - தளர்ச்சி அதிகமாக, வீரற்கு — அனுமாருக்கு, உற்றதை - வந்த ஆபத்தையெண்ணி, கறுத்தலில் — பின்னும் கோபித்தலில்லாத, சிந்தையாள்-மனமுள்ளவளாய், கவன்று - அதிக துன்பங்கொண்டு, கூறினாள் — சொல்லலானாள்—எ-று. 30

வேறு

ஓவியம்புகையுண்டதுபோலொளிர்
பூவின்மெல்லியன்மேனிபொடியுறப்
பாவிவேடன்கைபார்ப்புறப்பேதுறும்
தூவியன்னமன்னுளிவைசொல்லினாள்.

இ-ள். ஓவியம் - சித்திரமானது, புகையுண்டதுபோல் - புகையிற்படிந் தாற்போல், ஒளிர் - விளங்குகின்ற, பூவில் - புஷ்பம்போன்ற, மெல்லியல்-மிருதுவே சுவபாவமாகவுள்ள, மேனி - திருமேனியானது, பொடிஉற-மண் தூளியிலேவிழ, பாவி - கொலைசெய்கிற பாவியான, வேடன்கை - ஒருவேடன்கையிலேதன், பார்ப்புற - குஞ்சு அகப்பட்டுக்கொள்ள, பேதுறும்-அதனாலே வருத்தப்படுகிற, தூவி - இறகையுடைய, அன்னம் - அன்னபட்சியை, அன்னாள் - ஒப்பானவளாகி, இவை - இவ்வார்த்தைகளை, சொல்லினாள் - சொல்லலானாள்—எ-று. குஞ்சைப் பிடிகொடுத்த அன்னம்போற் புலம்புகிறாளென்று கருத்து. 31

உற்றுண்டாயவிசும்பையுருவினாய்
முற்றுண்டாய்கலையாவையுமுற்றுறக்
கற்றுண்டாயொருகள்ளவரக்கனால்
பற்றுண்டாயிதுவோவறப்பான்மையே.

இ-ள். உற்று - என்னிடம்வந்து, உண்டாய - அளவில்லாதிருக்கிற, விசும்பை - ஆகாயவரையும், உருவினாய் - அளவின்றவனாகி, முற்றுண்டாய் - முழுது நீயேயாய், கலையாவையும் - கலைஞானங்களெல்லாம், முற்றுற - நிரம்ப, கற்றுண்டாய் — கற்றறிந்தவனுமான நீ, ஒருகள்ளம் - ஒரு திருட்டுத்தனமுள்ள, அரக்கனால் - ராட்சதனாலே, பற்றுண்டாய் - பிடிபடலானாய் ஆனால், அறப்பான்மை - தருமநிலை, இதுவோ - இவ்வளவுதானோ, என்றால் - தருமநிலை சரியல்லவென்றபடி—எ-று. 32

கடர்கடந்துபுகுந்தனைக்கண்டகர்
உடர்கடந்துநின்னூழிகடந்திலை
அடர்கடந்ததிரள்புயத்தையநீ
இடர்கடந்தனைவந்திடர்மேலுமே.

இ-ள். கடர்கடந்து - கடலைக்கடந்து, புகுந்தனை - வந்தாய், கண்டகர் - ஹிம்சகருடைய, உடர் - சரீரதிடமெல்லாம், கடந்தும் - வெல்லலாகியும், நின்னூழி - உனது நெடுங்கால அளவை, கடந்திலை - போக்கிக்கொள்ளலை, அடர்கள் - ஜயங்களையே, தந்த — செய்துக்கொண்டுகின்ற, திரள் - திரண்ட, புயத்து - புஜங்களையுடைய, ஐயநீ - என் அப்பனேநீ, இடர் - என் துன்பமெல்லாம், கடந்தனை - போக்கினாய், மேலும் - பின்னும் எனக்கு, இடர்வந்து - துன்பம் வரலாயிற்று, கடர் - உடர் - அடர் - என்

பவைகளினிறுதி லகரம் ரகரமாதல்போலி — வந்தது என்பதில் ஒருயிர் மெய்தொகுத்தல் — ஊழிகடந்திலே என்பது உன் ஆயுளுக்கு ஒரு குறைவு மில்லாதிருக்கிறு யென்று துணிவு—எ-று. 33

ஆழிகாட்டியென் னுருயிர்காட்டினுய்க்
கூழிகாட்டுவனென் றுரைத்தேனது
வாழிகாட்டுமென் றுண்டுன்வரைப்புயப்
பாழிகாட்டியரும்பழிகாட்டினுய்.

இ-ள். ஆழிகாட்டி — பெருமாள் மோதிரத்தை நான் காணக்கொடுத்து, என் ஆருயிர் - எனதருமையான வுயிரை, காட்டினுய்க்கு - என்னுடலிலே நிலைபெறச்செய்த வுனக்கு, ஊழிகாட்டுவென் — சிரஞ்சீவியான நிலைதந்தேன், என்றுரைத்தேன் - என்று வாழ்த்தினேன், அது - அப்படி நான் வாழ்த்தினது, வாழிகாட்டுமென்று — உனக்குச் சாவாத நிலையையே தருமென்பது, உண்டு - தவருகாது ஆனல், உன்வரை - உனது மலைபோன்ற, புயப்பாழி - புஜபலத்தை யாவரும், காட்டி — தெரியச்செய்து, அரும்பழி- முடிவிலே அரிதான பழிப்பை, காட்டினுய் - அடைதலாலுய்—எ-று. இதற்கென் செய்கேன். 34

கண்டுபோயினைநீணெறிகாட்டிட
மண்டுபோரினரக்கனைமாய்த்தெனைக்
கொண்டுமன்னவன்போமெனுங்கொள்கையைத்
தண்டினுயெனக்காருயிர்தந்தநீ.

இ-ள். நீள்நெறி - இப்போது நீண்ட வீதிமார்க்கத்தை, காட்டிட — நீ காணக்கட்டி யிழுத்துக்கொண்டுபோக, கண்டுபோயினை — நீ பார்த்துக் கொண்டே போவதானுய் ஆதலால், அரக்கனை - இந்தராவணனை, மண்டு போரில் — நெருங்கின சண்டை செய்கிறதினுலே, மாய்த்து — அழித்துக் கொன்று, எனைக்கொண்டு - என்னைக் கூட்டிக்கொண்டு, மன்னவன் — சக்ரவர்த்தித்திருமகன், போமெனுங்கொள்கையே — போவாரென்று நான் திடங்கொண்டிருப்பதை, தண்டினுய் — நீபிடிபடுதலாலே தடைசெய்தாயானுய், எனக்கு — தனியேயிருக்கிற எனக்கு, ஆருயிர் — அருமையான பிராணவுதவி, தந்தநீ — செய்த நீராமனிடம் போகாமல் தண்டினுயென்று கருத்து—எ-று.

ஏயப்பன்னினளின்னனதன்னுயிர்
தேயக்கன்றுபிடியுறத்தீங்குறு
தாயைப்போலத்தளர்ந்துமயர்ந்தனள்
தீயைச்சுட்டதொர்கற்பெனுந்தீயினுள்.

இ-ள். இன்னன - இப்படிப்பட்டவைகளைச்சொல்லி, ஏயப்பன்னினள் — அதிகமாகப்புலம்பினுள், தன் உயிர் — தன்பிராணன், தேய — குறைவுபாடாகப் பன்னினள், கன்று — தன் கன்றுனது, பிடியுற — ஒருவன்கையி

லகப்படுதலாகவே அதனலே, தீங்குஉற — துன்பமிகுதியாகுகின்ற, தாயைப்போல - தாய்ப்பசுவைப்போல். தளர்ந்தும் — தளர்ச்சியானதேயன்றி, அயர்ந்தனள் — மூர்ச்சையுமாயினுள், தீயை — நெருப்பையும், சுட்டது - சுடலானதான, ஓர் — ஒரு, கற்பெனும் - பதிவிரதாநிலை யென்கிற, தீயினுள் - நெருப்பையுடையவள்—எ-று. 36

பெருந்தகைப்பெரியோனைப்பிணித்தபோர்
முருந்தன்மற்றையுலகொருமூன்றையும்
அருந்தவப்பயனலாசாள்கின்றுன்
இருந்தவப்பெருங்கோயில்சென்றெய்தினன்.

இ-ள். பெருந்தகைப்பெரியோனை — பெரியதகுதியுள்ள அனுமாரை, பிணித்த - கட்டின, போர்முருந்தன — சமர்த்தினுலே பிரசித்தனுன இந்திரசித்து, மற்றையுலகொரு மூன்றையும் — திரிலோகத்தையும், அருந்தவப்பயனல் — அரிதானதபோபலத்தினுலே, அரசாள்கின்றுன் — அரசாளுகிற ராவணன், இருந்த — கொலுவிருக்கிற, அப்பெருங்கோயில் — அந்தப்பெரிய சபாமண்டபத்தை, சென்றெய்தினன் — போய்ச்சேர்ந்தான், முருந்து வெண்மை — புகழ்—எ-று. 37

வேறு

தலங்கண்மூன்றிற்கும்பிறிதொருமதிதழைத்தென்ன
அலங்கல்வெண்குடைதண்ணிழலவிரொளிபரப்ப
வலங்கொடோளினன்மண்ணின்றுவானுறவெடுத்த
பொலன்கொண்மாமணிவெள்ளியங்குன்றெனப்பொலிய.

இ-ள். தலங்கள் மூன்றிற்கும் — ஒரு திரிலோகத்திற்கும், பிறிது ஒரு மதி — வேறே ஒரு சந்திரன், தழைத்தென்ன — உதயமானுற்போல், அலங்கல் — முத்துக் குஞ்சங்களசைகிற, வெண்குடை — வெள்ளைக்குடையானது, தண்நிழல் — குளிர்ந்த காந்தியாகிய, அவிரொளி — விளங்குமொளியை, பரப்ப — விரிக்கவும், வலங்கொள் - பலங்கொண்ட, தோளினன் — புஜங்களையுடைய அந்த ராவணன், மண்ணின்று — பூமியிலிருந்து, வான் உற - ஆகாயத்தைப் பொருந்த, எடுத்த - தூக்கின, பொலங்கொள் - பொன்னிலே கொண்ட, மாமணி — பெரிய ரத்நங்களையுடைய, வெள்ளியங்குன்றென- வெள்ளிமலைபோல் வெள்ளையாகவும், பொலிய — அவன் தலைக்குமேலே பூரணச்சந்திரன்போல் வட்டமாகவும் விளங்க—எ-று. மலையிலும் குடையிலும் பொன்னும் மணியும் உண்டென்பது கொள்க. 38

புள்ளுயர்த்தவின்றிகிரியும்புரந்தரனயினும்
தள்ளின்முக்கணன் கணிச்சியுந்தாக்கிய தழும்பும்
கள்ளுயிர்க்குமென்குழலியர்முகிழ்விரற்கதிர்வாழ்
வள்ளுகிர்ப்பெருங்குறிகளும்புயங்களின் வயங்க.

இ-ள். புள் உயர்ந்தவன் — கருடக்கொடியையுடைய விஷ்ணுவின் திகிரியும் — சக்கரமும், புரந்தரன் — இந்திரனுடைய அயிலும் — வச்சிராயுதமும், தள்ளில் — யாதொன்றாலும் தள்ளப்படாத, முக்கணான் — சிவனுடைய கணிச்சியும் — சூலாயுதமும், தாக்கிய — பட்டதனாலான, தழும்பும் - காயங்களும், கள் உயிர்க்கும் — தேனைப்பெறுவதான, மென் — மிருதுவான, குழலியர் — கூந்தலையுடைய பெண்களின், முகிழ் — தாமரை அரும்புபோன்ற விரல் — விரல்களிலுள்ள, கதிர்வாள் — ஒளியுள்ள கத்திபோன்ற, வள்-கூரியதான, உகிர் — நகங்களாலாகிய, பெருங்குறிகளும் — பெரிய சின்னங்களும், புயங்களில் - தோள்களிலே, வயங்க — விளங்க—எ-று. 39

துன்றுசெம்மயிர்ச்சுடர்நெடுங்கற்றைகள்சுற்றி
நின்றுதிக்குறநிரல்படக்கதிர்க்குழாநிமிர
ஒன்றுசீற்றத்தினுயிர்ப்பெனும்பெரும்புகையுயிர்ப்பத்
தென்றிசைக்குமோர்வடவனறிருத்தியதென்ன.

இ-ள். துன்று - நெருங்கின, செம்மயிர்-சிவந்த ரோமங்களின், சுடர்-பிரகாசமான, நெடுங்கற்றைகள் — நீண்ட திரட்சிகள், சுற்றி-சூழ்ந்து, நின்று-நிலைகொண்டு, திக்கு உற — திசைகளெல்லாந்தெரிய, நிரல்பட — வரிசைவரிசையாய், கதிர்க்குழாம் — சிவந்த ஒளிப்பிழம்பு, நிமிர — அவன் கருமேனிமேல் நிமிர்தலாக, ஒன்று — அவைகளுடனே கூடின, சீற்றத்தின் — கோபத்தினாலாகிய, உயிர்ப்பெனும் — சுவாமென்கிற, பெரும்புகை-மிகுந்தபுகைகள், உயிர்ப்ப — உண்டாக, மயிராலும் — சுவாசத்தாலும், தென்திசைக்கும் - தெற்குக்கடலுள்ளும், ஓர்வடவனவல்-ஒரு வடவாக்கினியை, திருத்தியதென்ன-சிருஷ்டித்துவைத்தாற்போல் விளங்க—எ-று. 40

மரகதக்கொழுங்கதிரொடுமாணிக்கநெடுவாள்
நரகதேயத்துணடுக்குருவிருளையுநக்கச்
சிரமனைத்தையுந்திசைதொறுந்திசைதோறுஞ்செலுத்தி
உரகர்கோனினிதரசுவீற்றிருந்தனனொப்ப.

இ-ள். மரகதக்கொழுங்கதிரொடு — மரகதமணியினது செழுமையான சோதியுடனே, மாணிக்கநெடுவாள் — மாணிக்கமணியினது நீண்ட சோதியானது, நரகதேயத்துள் — காகலோகத்திலே, நடுக்குரு-அஞ்சாதிருக்கின்ற, இருளையும் — இருட்டையும், நக்க - கபளீகரிக்கும்படி, சிரமனைத்தையும்—தலைகளையெல்லாம், திசைதொறுந் திசைதொறும் — நான்குதிக்குகளிலும், செலுத்தி — ஒளிகள் செல்லவிட்டு, உரகர்கோன் — சர்ப்பராஜன், இனிது-சந்தோஷமாக, அரசு — ராஜாங்கத்துடன், வீற்றிருந்தனன் — கொலுவிருப்பதை, ஒப்ப — சரியாவிளங்க—எ-று. 41

குவித்தபன்மணிக்குப்பைகள்கலையொடுங்கொழிப்பச்
சவிச்சுடர்க்கலனணிந்தபொற்றோளொடுதயங்கப்

வித்தடம்படர்மேருவைப்பொன்முடியென்னக்
வித்துமாலிருங்கருங்கடலிருந்ததுகடுப்ப.

இ-ள். குவித்த - கூட்டியமைத்திருக்கிற, பல்மணி - பலவிதரத்நங்களின், குப்பைகள் - கூட்டங்கள், கலையொடும் – பொன்னுலான அங்கவஸ்திரத்துடனே கூடி, கொழிப்ப – ஒளிவீச, சவிச்சுடர் – சூரியப்பிரகாசமான, கலன் அணிந்த — ஆபரணங்களைக்கொண்ட, பெற்றோளொடு – அழகான தோள்களோடுகூடி, தயங்க – விளங்க, புவி - பூமிமேலே, தடம்படர் - நெடியதாகப் பரவின, மேருவை – மேருமலையை, பொன்முடியென்ன — சுவர்ணகிரீடமாக, கவித்து — சூட்டிக்கொண்டு, மால் இரும் – மிகப் பெரிதான, கருங்கடல் – கரிய கடலானது, இருந்தது – கொலுவிருப்பதை, கடுப்ப ஒப்பதாக.

சிந்துராகத்தின்செறிதுகில்கச்சொடுசெரியப்
பந்திவெண்முத்தினணிகலன்முழுநிலாப்பரப்ப
இந்துவெண்குடைநீழலிற்றாரகையினம்பூண்
டந்திவானுடுததல்வீற்றிருந்ததாமென்ன.

இ-ள். சிந்து – புள்ளிபுள்ளிகளாகச் சிதறுதலுள்ள, ராகத்தின் – சிவப்பு நிறத்தை, செறி – பொருந்தின, துகில் – அரைவஸ்திரமானது, கச்சொடு- அரைக்கச்சுடனே, செறிய-கூடிவிளங்க, பந்தி - வரிசைவரிசையாக, வெண் முத்தின் – வெள்ளைமுத்துகளை, அணி – அலங்கரித்துள்ள, கலன் – ஆபரணமானது, முழுநிலா – பூரணச்சந்திரோதயம்போல், பரப்ப – விரிய, இந்து- சந்திரனுகிய, வெண்குடை – வெள்ளைக்குடையின், நீழலில் – நிழலிலே, தாரகையினம் – நக்ஷத்திரக்கூட்டங்களை, பூண்டு – ஆபரணமாகக்கொண்டு, அந்திவான் – செவ்வானமாகிய வஸ்திரத்தை, உடுத்து-கட்டிக்கொண்டு, அல்லு- இருளானது, வீற்றிருந்தது – கொலுவிருப்பதை, ஆமென்ன – நிகரென்ன.

வண்மைக்குந்திருமறைகட்கும்வானினும்பெரிய
திண்மைக்குந்தனியுறையுளாமுழுமுகந்திசையிற்
கண்வைக்குந்தொறுங்களிற்றொடுமாதிரங்காக்கும்
எண்மர்க்கும்மற்றையிருவர்க்கும்பெரும்பயமியற்ற.

இ-ள். வண்மைக்கும் — அவன் புகழுக்கும் அழகுக்கும், திருமறைகட்கும் – சிறந்த வேதங்களுக்கும், வானினும் – ஆகாயத்திலும், பெரிய – பெரிதான, திண்மைக்கும் – பலத்துக்கும், தனி – ஒப்பில்லாத, உறையுளாம்- இருப்பிடமான, முழுமுகம் – நிறைவுள்ள முகங்கொண்டு, திசையில் – ஒரு திக்கைகுறித்து, கண்வைக்குந்தொறும் – பார்க்கும்போதெல்லாம், களிற்றொடு - திக்கியானைகளுடனே, மாதிரம் – அந்தத்திக்கை, காக்கும் – பரிபாலனஞ்செய்கிற, எண்மர்க்கும் – எட்டுப்பேருக்கும், மற்றையிருவர்க்கும்-கீழுமேலும் பரிபாலிக்கிறசேடன் அருவனென்கிற இருவர்க்கும், பெரும்பயம்- பெரிய பயமானது, இயற்ற – உளதாக—எ-று.

ஏகநாயகன்றேவியையெதிர்ந்ததற்பின்னை
நாகர்வாழ்விடமுதலெனநான்முகன்வைகும்
மாகமால்விசும்பீறெனநடுவணவரைப்பில்
தோகைமாதர்கண்மைந்தரிற்றோன்றினர்சுற்ற.

இ-ள். ஏகநாயகன் — ஒன்றான ஸ்ரீராமனுடைய, தேவியை-தேவியான பிராட்டியை, எதிர்ந்ததன்பின்னை — கண்டபின்பு, நாகர் — சர்ப்பங்கள், வாழ்விடம் - வாழுதலான இடமும், முதலென — முதலாக, நான்முகன் — பிரமதேவன், வைகும் — இருப்பதான, மாகமால் — மிகவுமுயரமுள்ள, விசும்பு-ஆகாயமே, ஈறென — முடிவாக, நடுவண — நடுவிலுள்ள, வரைப்பில் — பூமண்டலத்திலுமுளராகிய, தோகைமாதர்கள் - மயில்போலும் அழகுள்ள பெண்களானவர்கள், மைந்தரில் — புருஷர்கள்போல், தோன்றினர் — அவன்கண்களுக்கு விருப்பமில்லாதவர்களாகத்தோன்றி, சுற்ற — சூழ—எ-று. ஏகநாயகன் — ஒன்றானகடவுள். 45

வானரங்களும்வானவரிருவருமனிதர்
ஆனபுன்றொழிலோரெனவிகழ்கின்றவவரும்
ஏனைநின்றவரிருடியர்சிலரொழிந்தியாரும்
தூநவின்றவேலரக்கர்தங்குழுவொடுசுற்ற.

இ-ள். வானரங்களும் — குரங்குகளோ, வானவர் — தமக்குத்தோற்றதேவர்களே, இருவருமனிதர் — மனிதரிருவரோ, ஆன — தமக்கிழிவான, புன்றொழிலோரென — அல்பச்செய்கை யுள்ளவர்களென்று, இகழ்கின்ற-இகழ்ச்சிபண்ணிக்கொண்டிருக்கிற, அவரும் — அந்தமந்திரி பிரதானிகளும், ஏனை — மற்றும், நின்றவர் — இருக்கிறவர்களில், இருடியர்சிலர் ஒழிந்து-சில மகருஷிகள்தவிர, யாரும் - எல்லாம், தூ — நவின்ற புலால்நாறுகிற, வேல்-வேலகளை யுடைய, அரக்கர்தம் - ராக்ஷதர்கள், குழுவொடு-கூட்டத்துடனே, சுற்ற — சூழ—எ-று. 46

நரம்புகண்ணகத்துள்ளுறைநறைநிறைநறைபாண்டில்
நிரம்புசில்லரிப்பாணியுங்குறடுநின்றிசைப்ப
அரம்பைமங்கையரமிழ்துகுத்தாலன்னபாடல்
வரம்பிலின்னிசைசெவிதொறுஞ்செவிதொறும்வழங்க.

இ-ள். நரம்பு — தந்தியை, கண் — கருதியழுத்துகிற, அகத்துள் — இடத்திலே, உறை — இருப்பதான, நறை — இசைத்தேனை, நிறை — நிறுத்துக்காட்டுகிற, பாண்டில் — பெரிய வட்டமானதாளமு, நிரம்பு — அவ்வோசையை நிரப்புகின்ற, சில்லரி — சிறியஅவாரங்களில்வருகிற, பாணியும் — பாட்டும், குறடும் — இந்தவாத்தியமும், நின்று — நிலைகொண்டு, இசைப்ப — சத்திக்க, அரம்பைமங்கையர் — ரம்பாஸ்திரீகள், அமிழ்து — அமிர்தத்தை, உகுத்தாலன்ன — சிந்தினாற்போன்ற, பாடல் — வாய்ப்பாடலிலுள்ள, வரம்பில் — ருசி

யாலளவில்லாத, இன்னிசை — இனியாாகமும், செவிதொறுஞ்செவிதொறும் — அவனிருபதுகாதுகளிலும், வழங்க - கேட்கச்செய்ய—எ-று. 47

கூடுபாணியினிசையொடுமுழவொடுங்கூடத்
தோடுசீறடிவிழிமனங்கையொடுந்தொடரும்
ஆடனோக்குறினருந்தவமுனிவர்க்குமமைந்த
வீடுமீட்குருமேனகைமேனகைவிளங்க.

இ-ள். கூடு — கூடின, பாணியின் — பாட்டினது, இசையொடு — இராகத்துடனே, முழவொடும் - மத்தளத்துவனியொடு, கூட — சேர, தோடு-தாமரையிதழையும், சீறு — கோபிப்பதான, அடி — கால்களும், விழி-கண்களும், மனம் — மனதும்கையொடு - கைகளுடனே, தொடரும் — சேர்வதான, ஆடல் — ஆட்டத்தை, நோக்குறின் - பார்த்தால், அருந்தவம் — அரியதவஞ்செய்கிற, முனிவர்க்கும் - ருஷிகளுக்கும், அமைந்த — உளதாகுகின்ற, வீடு-வீட்டின்பத்தையும்விட்டு, மீட்குறும் - தன்மேல் திரும்பப்பண்ணுகிற, மேனகைமேல் — மேனகையென்பவள்மேலே, நகைவிளங்க — சிரிப்புத்தோன்ற—எ-று. 48

ஊடினார்முகத்துறுநறையொருமுகமுண்ணக்
கூடினார்முகக்களிநறையொருமுகங்குடிப்பப்
பாடினார்முகத்தாரமுதொருமுகம்பருக
ஆடினார்முகத்தணியமுதொருமுகமருந்த.

இ-ள். ஊடினார்முகத்து - பிணங்கின பெண்கள்முகத்திலே, உறுநறை- உளதாகிய காமரசமானதேனை, ஒருமுகம் — ஒருமுகமானது, உண்ண-அனுபவிக்க, கூடினார்முகம் - கூடினபெண்களின் முகத்திலேயுள்ள, களிநறை-மயக்கத்தைத்தருகிறதேனை, ஒருமுகம் — ஒருமுகமானது, குடிப்ப — அனுபவிக்க, பாடினார்முகத்து — பாடின பெண்கள்முகத்து, ஆர்-நிரம்பின, அமுது-இங்கிதாசமான அமிர்தத்தை, ஒருமுகம் — ஒருமுகமானது, பயில — அனுபவிக்க, ஆடினார்முகத்து — ஆடினபெண்கள் முகத்திலேயுள்ள, அணியமுது-அபிநயமான அழகிய அமிர்தத்தை, ஒருமுகம்—ஒருமுகமானது, அருந்த-அனுபவிக்க—எ-று. 49

தேவரோடிருந்தரசியலொருமுகஞ்செலுத்த
மூவரோடுமாமந்திரமொருமுகமுயல
பாவகாரிகன்பாவகமொருமுகம்பயிலப்
பூவைசானகியுருவொடுமொருமுகம்பொருந்த.

இ-ள். தேவரோடு - தேவர்களுடனே, இருந்து — கூடி இருப்பதாய், அரசியல் — ராஜாங்கத்தை, ஒருமுகம் — ஒருமுகமானது, செலுத்த — நடத்த, மூவரோடு — ஆசாரியன் புரோகிதன் மந்திரிகளுடனே, மாமந்திரம்-பெரிய ஆலோசனையை, ஒருமுகம் — ஒருமுகமானது, முயல — முயற்சிக்க, பாவகா

ரிதன் - பாவியானதனது, பாவகம் - நினைவுகளை, ஒருமுகம் - ஒருமுகமானது, பயில - செய்ய, பூவை - பெண்களிற்சிறந்த, சானகி - சீதாபிராட்டியினுடைய, உருவொடும் - உருவெளியுடனே, ஒருமுகம் - ஒருமுகமானது, பொருந்த - கூட—எ-று. பூவை - நாகணவாய்ப்புள் சொல்லுக்குவமை. 50

காந்தண்மெல்விரற்சனகிதன்கற்பெனுங்கடலை
நீந்தியேறுவதெங்ஙனென்றொருமுகனினையச்
சாந்தளாவியகொங்கைநன்மகளிர்தற்சூழ்ந்தார்
ஏந்துமாடியினொருமுகமியல்புடனிலங்க.

இ-ள். காந்தள் - செங்காந்தளிதழ்போன்ற, மெல்விரல் - மெல்லியவிரல்களையுடைய, சனகிதன் - சீதையினது, கற்பெனுங்கடலை - பதிவிரதாநிலையானகடலை, நீந்தியேறுவது - கடந்துகரையேறுகிறது, எங்ஙனென்று - எப்படியென்று, ஒருமுக நினைய - ஒருமுகமெண்ண, சாந்து அளாவிய - சந்தனம் பூசின, கொங்கை - தனங்களையுடைய, நன்மகளிர் - அழகுள்ளபெண்கள், தற்சூழ்ந்தார் - தன்னைச் சூழ்ந்தவர்களாக, ஏந்தும் - கொண்டுகாட்டுகிற, ஆடியின் - கண்ணாடியிலே, ஒருமுகம் - ஒருமுகமானது, இயல்புடன் - அழகு காணுதலுடனே, இலங்க - விளங்க—எ-று. கற்பெனுங் கடலைநீந்துதல் அவள்மனவுறுதியைமாற்றிக் கூடவெண்ணுதல். 51

பொதும்பர்வைகுதேன்புக்கருந்துதற்ககம்புலரும்
மதம்பெய்வண்டெனச்சனகிமேன்மனஞ்செலமறுகி
வெதும்புவாரகம்வெந்தழிவாரகில்விழிநீர்
ததும்புவார்விழித்தாரைவேறோடோறுந்தாக்க.

இ-ள். பொதும்பர் - மரச்செறிவிலே, வைகு - இருப்பதான, தேன் - தேனை, புக்கு - போய், அருந்துதற்கு - சாப்பிடுதற்கு, அகம்புலரும் - மனம் வருந்துகிற, மதம்பெய் - தேனைக் கக்கிக்கொண்டிருக்கிற, வண்டென - வண்டுபோல, சனகிமேல் - சீதைமேலே, மனஞ்செல - மனம்போக அதுகண்டு, மறுகி - மயங்கி, வெதும்புவார் - உடம்பு வெப்பங்கொள்ளுகிறவர்களும், மனம்வெந்து - மனம் வேவதாகி, அழிவார் - கரைகிறவர்களும், நகில் - தனங்களிலே, விழிநீர் - கண்ணீர், ததும்புவார் - பெருக விடுகிறவர்களும் ஆகிய பெண்களுடைய, விழி - கண்களான தாரைவேல் - கூரிய வேல்கள், தோள்தோறும் தாக்க - அவன் தோளெல்லாம் படவும், மதுவாய்வழி ஒழுகும்போதும்—எ-று. பொதும்பர்வைகு தேனை விரும்புகிற வண்டுபோல் - தான் கூடுதற்குவேண்டிய பெண்களிருந்தும் சீதைமேல் மனம் செலுத்துகிறானென்பது கருத்து. 52

மாறளாவியமகரந்தநறவுண்டுமகளிர்
வீறளாவியமுகிழ்முலைமெழுகியசாந்தின்
சேறளாவியசிறுநறுஞ்சீகரத்தென்றல்
ஊறளாவியகடுவெனவுடலிடைநுழைய.

இ-ள். மாறு அளாவிய — ராவணனுக்கு விரோதமுண்டாகுதற்கு, மகரந்தநறவு — மிகுந்ததேனில், உண்டு — படிந்து, மகளிர் — பெண்களுடைய, வீரளாவிய — வெவ்வேறுயிருக்கிற, முகிழ்முலை — தாமரை யரும்புபோன்ற தனங்களிலே, மெழுகிய — பூசின, சாந்தின்சேறு — சந்தனச்சேற்றிலே, அளாவிய — கூடிக்கலந்த, சிறுநறும் — மெதுவும் மணமுமுள்ள, சீகரம் - குளிர்ச்சிமிகுந்த, தென்றல் - தென்றற்காற்றானது, ஊறளாவிய — கொல்லு தலைப் பொருந்தின, கடுவென — விஷம்போல, உடலிடை — அவன்தேகத்திலே, நுழைய — மோத — எ-று. மகரந்த நறவு - வாசனையுள்ளகள்ளைஉண்டு என்க, கட்குடித்தலாலே தெரியாமல் அவனுக்கு விரோதஞ்செய்வதாயிற்று.

திங்கள்வாணுதன் மடந்தையர்சேயரிக்கிடந்த
அங்கயற்றடர்ந்தாமரைக்கலரியோனுகி
வெங்கண்வானவர் தானவரென்றிவர்விரியாப்
பொங்குகைகளாந்தாமரைக்கிந்துவேபோன்று.

இ-ள். திங்கள் — பாதிசந்திரன்போன்ற, வாள் நுதல் - ஒளிபொருந்தின நெற்றியையுடைய, மடந்தையர் — பெண்களினது, சேயரிக்கிடந்த - செவ்வரிகள் தங்கின, அங்கயல் — அழகிய கயல்களுள்ளமுகமாகிய, தடம் — பெருமைகொண்ட, தாமரைக்கு - தாமரை மலர்களுக்கு, அலரியோனுகி — சூரியன்போலாய், வெங்கண் — இவன்மேற் கொடுமையுள்ள, வானவர் — தேவர்களும், தானவர் — அசுரர்களும், என்று — என்று சொல்லப்படுகிற, இவர் - இவர்களுடைய, விரியா — குவிந்துக்கொண்டிருக்கிற, பொங்கு — மிகுதியையுடைய, கைகளாம் — கைகளாகிய, தாமரைக்கு — தாமரைமலர்களுக்கு, இந்துவேபோன்று — சந்திரன்போல்லாய், இருந்த எண்டிசைக்கிழவனை எனத் தொடர்கூட்டி தலங்கள் மூன்றென்னும் பாட்டுமுதலிப் பாட்டளவும் ஒரே தொடராகுதல் காண்க. கயல்போலுங்கண்ணைக்கயலென்றதுருவகம். 54

இருந்தவெண்டிசைக்கிழவனைமாருதியெதிர்ந்தான்
கருந்திணுகத்தைநோக்கியகலுழனிற்கனன்றான்
திருந்துதோளிடைவீக்கியபாசத்தைச்சிந்தி
உருந்துநஞ்சுபோல்பவன்வயிற்பாய்வெனென்றுடன்றான்.

இ-ள். இருந்த — அப்படிக்கிருந்த, எண்திசை — அஷ்டதிக்குகளுக்கும், கிழவனை — அதிபனுன ராவணனை, மாருதி — அனுமாரானவர், எதிர்ந்தான் - கண்டார், கரும் திண் — கறுத்துப் பலமுள்ளதான, நாகத்தை — சர்ப்பத்தை, நோக்கிய — கண்ட, கலுழனில் — கருடன்போல், கனன்றான் — கோதிப்புக் கொண்டாராய், திருந்து — தமதிருத்தமுள்ள, தோளிடை — தோள்களிலே, வீக்கிய — கட்டியிருக்கிற, பாசத்தை — கயிற்றை, சிந்தி - அறப்பண்ணி, உருத்து — கோபங்கொண்டு, நஞ்சுபோல்பவன்வயின் - விஷம்போன்றவன் மேலே, பாய்வெனென்று — பாய்கிறேனென்று, உடன்றான் — கோபங் கொண்டார் ஆக்கிரமித்தார் — எ-று. 55

உறங்குகின்றபோதுயிருண்டல்குற்றமென்றொழிந்தேன்
பிறங்குபொன்மணியாசனத்திருக்கவும்பெற்றேன்
திறங்களென்பலசிந்திப்பதிவன்றலைசிதறி
அறங்கொள்கொம்பினைமீட்டுடனகல்வனென்றமைந்தான்.

இ-ள். உறங்குகின்றபோது - இவன் தூங்குகிறபோது, உயிருண்டல்- இவனைக்கொல்லுதல், குற்றமென்று - தோஷமென்று, ஒழிந்தேன் — விட்டு விட்டேன், பிறங்கு - விளங்காநின்ற, பொன்மணி — பொன்னாலுமணி யாலும் அமைந்த, ஆசனத்து - சிங்காசனத்தின்மேல், இருக்கவும் — விழித் துக்கொண்டிருக்கவும், பெற்றேன் — பெறுவதானேன் இப்படி நேர்கிடைத்த, லரிதென்பதுதோன்ற இருக்கவுமென்றது, பலதிறங்கள் — பலவிதங்க ளாக, என்சிந்திப்பது - யாதுகாரணமாக ஆலோசிக்கிறதுவேண்டா, இவன் தலையை உடைத்து, அறங்கொள் — பதிவிரதாதருமத்தையே நிலையாகக் கொண்டிருக்கிற, கொம்பினை — கொம்புபோன்ற பிராட்டியை அறமாகிய கொடி பற்றிக்கொள்வதான கொம்புபோல்வாளெனவுமாம், மீட்டு — சிறை மீட்டுக்கொண்டு, உடன் — இப்போதே, அகல்வெனென்று — போகிறே னென்று, அமைந்தான் — உத்தேசித்தார்—எ-று. 56

தேவர்தானவர்முதலினர்சேவகன்றேவி
காவல்கண்டிவணிருந்தவர்கட்புலன்கதுவப்
பாவகாரிதன்முடிதலைபறித்திலெனென்றால்
ஏவதியானினிமேற்செயுமாள்வினையென்றான்.

இ-ள். தேவர் — தேவரும், தானவர் — அசுரரும், முதலினர் - முதலான வர்களும், சேவகன் - ஸ்ரீராமனுடைய, தேவி — தேவியானபிராட்டி, காவல் — சிறையிலிருப்பதை, கண்டு - பார்த்துக்கொண்டே, இவணிருந்த வர் — இங்கிருப்பவர்களும், கட்புலன் — தங்கள் கண்களான அறிவாலே, கதுவ — தெரிய, பாவகாரிதன் — இந்தப்பாவியினுடைய, முடித்தலை — கிரீட மணிந்ததலைகளை, பறித்திலேன் — கிள்ளியெறியேன், என்றால் — ஆனால், யான் — நான், இனிமேற்செயும் — இனிமேற் செய்யப்போகிற, ஆள்வினை- அடிமைத்தொழில், ஏவது - யாதிருக்கின்றது, என்றான் — என்றெண்ணி னார்—எ-று. 57

மாடிருந்தமற்றிவன்புணர்மங்கையர்மயங்கி
ஊடிரிந்திடமுடித்தலைதிசைதொறுமுருட்டி
ஆடல்கொண்டுநின்றார்க்கின்றதுகொடிதம்மா
தேடிவந்ததோர்குரங்கெனும்வாசகஞ்சிறிதோ.

இ-ள். மாடிருந்த — இவன் பக்கத்திலே யிருப்பதான, மற்றிவன்புணர்- இவன்கூடத்தக்க, மங்கையர் — பெண்களெல்லாம், மயங்கி — மயங்குதலாகி, ஊடு — உட்புறத்துக்கு, இரிந்திட — ஓட, முடித்தலை — இவனது முடிகளை யுடைய தலைகளை, திசைதொறும் — எந்தத்திக்குகளிலும், உருட்டி — உருளப்

பண்ணி, ஆடல்கொண்டு — ஜயம்கொண்டு, நின்று — நிலைபெற்று, ஆர்க்கின்றது — ஆரவாரிக்கிறது, அது - ஆகிய அது, கொடிது - தகாது ஆகாது ஏனென்றால், ஓர்குரங்கு — ஒரு குரங்கல்லவோ, தேடிவந்தது - தேடிவாலானது, எனும்வாசகம் — என்னும்வார்த்தை, சிறிதோ — சிறிதன்று பிரபல்லியந்தானே அதனால், தேடிவந்த — ஒருகுரங்கு இவ்வளவுசெய்வது தகாது என்று கொள்ளுகிறார், குரங்கென்பது லோகப்பிரசித்தமாதலால் ஸ்ரீராமனே இது செய்யத்தக்கதென்கிறார் பின்னும்—எ-று. 53

நீண்டவாளெயிற்றரக்கனைக்கண்களினேரே
காண்டல்வேண்டியிவ்வுயிர்சுமந்தெதிர்சிலகழறி
மீண்டபோதுண்டுவசைப்பொருள்வென்றிலேனெனினும்
மாண்டபோதினும்புகழன்றிமற்றுமொன்றுண்டோ.

இ-ள். நீண்ட — நெடிதான, வாள் - வாள்போன்ற, எயிற்று - பற்களைக்கொண்ட, அரக்கனை — ராட்சதனை, கண்களில் — நம்கண்களுக்கு, நேரே-நேராக, காண்டல் - பார்ப்பதையும், வேண்டி - விரும்பி, இவ்வுயிர் - இந்த என்னுயிரையும், சுமந்து — உடலிலேபொறுத்து, எதிர்-இவனுக்குமுன்னே, சிலகழறி - சிலபேசி, மீண்டபோது — திரும்பினால், உண்டுவசைப்பொருள்-வசையானபொருளே சித்திப்பதாம், வென்றிலேன்-இவனை வெல்லவல்லேனல்லேன், எனினும் — என்றாலும், மாண்டபோதினும் — நான் இறந்தாலும், புகழன்றி — எனக்குக் கீர்த்திவருமேயல்லது, மற்றுமொன்றுண்டோ — வேறொன்று சித்திக்குமோ—எ-று. இவனை வெல்லமாட்டாமல் திரும்பிப்போனாலும் புகழுண்டென்கிறார் ஆதலாலவன்மேற்பாய வெண்ணுகிறாரென்பதிதன்கருத்து. 59

என்றுதோளிடையிறுக்கியபாசமிற்றேகக்
குன்றின்மேலெழுகோளரியேறெனக்குதியிற்
சென்றுகூடுவலென்பதுசிந்தனைசெய்யா
நின்றுகாரியமன்றெனநீதியினினைந்தான்.

இ-ள். என்று — என்றெண்ணி, தோளிடை - தமதுதோளிலே, இறுக்கிய - இருகக்கட்டியிருக்கிற, பாசமிற்று — பாசமறுபட்டு, ஏக — போக, குன்றின்மேல் — மலைமேலே, எழு — பாய எழுகிற, கோளரியேறென - ஆண்சிங்கம்போல, குதியிற்சென்று - ஒரு பாய்ச்சலிலேபோய் அவனிடம், கூடுவல்-சேருவேன், என்பது — என்பதை, சிந்தனைசெய்யாநின்று — ஆலோசித்து, காரியம் அன்றென - பின்னுமிது காரியமல்லவென்று, நீதியின் - தமது புத்திசாதுரியத்தினாலே முறையாக, நினைந்தான் — எண்ணுகிறார்—எ-று.

வேறு

கொல்லலாம்வலத்தனுமல்லன்கொற்றமும்
வெல்லலாந்தரத்தனுமல்லன்மேலைநாள்

அல்லெலாந்திரண்டனகிறத்தனாற்றலை
வெல்லலாமிராமனாற்பிறரும்வெல்வரோ.

இ-ள். கொல்லலாம் — என்னாலே கொல்லலாகிய, வலத்தனும் — இடத்திலிருக்கிறவனும், அல்லன் — அல்லனாயிருக்கிறான், கொற்றமும் — இவனது துணைவலியும், வெல்லலாம் — வெல்லுவதான, தரத்தனும் — தகுதியுள்ளவனும், அல்லன் — அல்லனாயிருக்கிறான், மேலைநாள் — இனிவருங்காலத்திலே, அல்லெலாம் — இருள்முழுதும், திரண்டன-திரண்டாற்போன்ற, கிறத்தன-கிறமுள்ள இவனுடைய, ஆற்றலை — பலத்தை, இராமனால் — ஸ்ரீராமனாலே, வெல்லலாம் — வெல்லக்கூடும், பிறரும் — ஸ்ரீராமனையல்லாத மற்றையோரும், வெல்வரோ - வெல்லவல்லாரோ மாட்டார்—எ-று. கொற்றம் அரசியலாகலால் அவ்வரசியலுக்குள்ள துணைவலியைக் கொற்றமென்றதாகுபெயர். தனியாகவுங்கிடைத்திலன் துணைவலியோமிகுந்திருக்கின்றதென்றுகருத்து. வலம் இடம், தரத்தனுமென்றது அதனொடு சார்த்தினத் திணைமுடிபென்பதனாற் கொள்க. 61

என்னையும்வெலற்கரிதிவனுக்கீண்டிவன்
தன்னையும்வெலற்கரிதெனக்குத்தாக்கினால்
அன்னவேகாலங்கள்கழியுமாதலால்
துன்னருஞ்செருத்தொழிறொடங்கறூயதோ.

இ-ள். தாக்கினால் — சண்டைசெய்தால், இவனுக்கு - இந்த ராவணனாலே, என்னையும் — என்னை, வெலற்கு — வெல்லுதற்கு, அரிது-முடியாது, ஈண்டு — இவ்வளவு துணைவலியோடுகூடின, இவன்றன்னையும் — இவனை, எனக்கு — என்னாலே, வெலற்கு — வெல்லுதற்கு, அரிது - முடியாது, அன்னவே - அசோகவனத்திலே நடந்ததுபோலவே இங்கும், காலங்கள் — அதிகநாள்கள், கழியும் - சென்றுபோம், ஆதலால் — ஆகையாலே, துன்னரும்-நெருங்குதற்கரிதான, செருத்தொழில் — சண்டையான செய்கையை, தொடங்கல் — ஆரம்பித்து நடத்துகிறது, தூயதோ - நல்லதோ நான் நன்றன்று-எ-று. துணைவலி — மந்திரிபிரதானி முதலாயினோர்கள். 62

ஏழுயருலகங்கள்யாவுமின்புறப்
பாழிவன்புயங்களோடரக்கன்பஃறலைப்
பூழியிற்புரட்டலென்பூணிப்பாமென
ஊழியான்விளம்பியவுரையுமொன்றுண்டால்.

இ-ள். ஏழுயர் — ஏழாகவுயர்ந்த, உலகங்கள்யாவும் - லோகங்களெல்லாம், இன்புற — சந்தோஷிக்க, பாழி — பெருமையுள்ள, வன்புயங்களோடு-தோள்களுடனே, அரக்கன் — இந்த ராவணனுடைய, பஃறலை — பலதலைகளையும், பூழியில் — மண்தூளியிலே, புரட்டல் — புரளப்பண்ணுகிறது, என்பூணிப்பு-எனக்குவிரதம், ஆமென — ஆமென்று, ஊழியான் - ஜயத்தாற் குறைவு

படாத ஸ்ரீராமன், விளம்பிய—சொன்ன, உரையும் - சொல்லும், ஒன்றாண்டு—ஒன்றுளதாயிருக்கின்றது, ஆகவாலும்—எ-று. 63

இங்கொருதிங்களேயிருப்பல்யானென
அங்கணுயகன்றன தாணைகூறிய
மங்கையுமின்னுயிர்துறத்தல்வாய்மையால்
பொங்குவெஞ்செருவிடைப்பொழுதுபோக்கினல்.

இ-ள். இங்கு—இந்த இலங்கையிலே, ஒருதிங்களே—ஒருமாதஅளவே, இருப்பல்யானென—நானிருப்பேனென்று, அங்கண்—அப்போது, நாயகன்றனது—ஸ்ரீராமனுடைய, ஆணை—நியமமாக, கூறிய—சொன்ன, மங்கையும்—சீதாபிராட்டியும், இன்னுயிர்—தமதினிதான உயிரை, துறத்தல்—ஒருமாதத்துக்கு மேல்விடுகிறது, வாய்மையால்—மெய்யாயிருத்தலாலும், பொங்கு—மிகுந்த, வெஞ்செருவிடை—வெவ்விய சண்டையிலே, பொழுது போக்கினல்—காலத்தைக் கழித்தால், இன்னுயிர்—துறத்தல்மெய்—எ-று. அங்கண் அழகிய கண்களையுடைய எனவுமாம். 64

ஆதலானமர்த்தொழிலழகிற்றன்றருந்
தூதனுந்தன்மையேதூய்தென்றுன்னினன்
வேதநாயகன்றனித்துணைவன்வென்றிசால்
ஏதில்வாளரக்கனதிருக்கையெய்தினன்.

இ-ள். ஆதலான்—மெய்யாகையாலே, அமர்த்தொழில்—சண்டைசெய்ய நினைத்தல், அழகிற்று அன்று—நன்மையுடையதல்ல, அரும்—அருமையாகவந்த, தூதனும் தன்மையே—தூதனுகிறகாரியமே, தூய்தென்று—நல்லதென்று, உன்னினன்—எண்ணினராகி, வேதநாயகன்—ஸ்ரீராமனுக்கு, தனி ஒருதுணைவன்—சகாயரான அனுமார், வென்றிசால்—ஜயமிகுந்த, ஏதில்—தமக்கன்னியனுன, வாள்—வாளையுடைய, அரக்கனது—ராவணனது, இருக்கை—கொலுவிருப்பை, எய்தினன்—போய்க்கண்டார்—எ-று. 65

நீட்டியவாளெனத்தெறுகட்டேவியர்
ஈட்டியகுழுவிடையிருந்தவேந்தற்குக்
காட்டினனுமனைக்கடலினாரமு
தூட்டியவும்பரையுலையவோட்டினன்.

இ-ள். நீட்டிய—கூராகத்தீட்டின, வாளென—வாள்போல், தெறுகண்—வெட்டுங்கண்களையுடைய, தேவியர்—தேவிமார்களுடனே, ஈட்டிய—கூடியிருக்கிற, குழுவிடை—கூட்டத்திலே, இருந்த—இருக்கிற, வேந்தற்கு—இராவணனுக்கு, அனுமனை—அனுமாரைகொண்டுபோய், காட்டினன்—காண்பித்தான், கடலின்—கடலிலுண்டான, ஆரமுது—அரிய அமிர்தத்தை, ஊட்டிய—உண்டவாலே சாவாதிருக்கிற, உம்பரை—தேவரை, உலைய—வருந்த, ஓட்டினன்—ஓடவென்ற இந்திரசித்து—எ-று. 66

புவனமெத்தனையவையனைத்தும்போர்கடந்
தவனையுற்றரியுருவானவாண்டகை
சிவனெனச்செங்கணனெனச்சேவகன்
இவனெனக்கூறிநின்றிருகைகூப்பினன்.

இ-ள். புவனமெத்தனை – உலகமெவ்வளவோ, அவையனைத்தும்-அவ்வளவும், போர்கடந்தவனை – போரில்வென்ற ராவணனை, உற்று – கண்டு, அரியுருவான – குரங்குவடிவாயிருக்கிற, ஆண்தகை – ஆண்மையிற் சிறந்தவனே, சிவனென – கண்டோர் சிவன் என்னவும், செங்கணனென்ன-திருமாலென்னவும், சேவகன் – வீரத்தன்மையுள்ளவனுன, இவனென-இவன் என்று, கூறி நின்று – சொல்லி நின்றுகொண்டு, இருகை – தனதிரண்டுகைகளேயும், கூப்பினன் – குவித்தான்—எ-று.

நோக்கியகட்பொறிநுவன்றவாய்களில்
தூக்கியபொறியொடுமயிர்சுறுக்கொளத்
தாக்கியவுயிர்ப்பொடுந்தவழவெம்புகை
வீக்கினனவ்வுடல்விசித்தபாம்பினே.

இ-ள். நோக்கிய – அனுமாரைப்பார்த்த, கட்பொறி – இருபதுகண்களானபொறிகள், நுவன்ற – பொறியென்றுசொன்ன, வாய்களில் – இடங்களிலே, தூக்கிய – கொண்டுளவாகிய, பொறியொடு – நெருப்புப்பொறிகளுடனேபோய், மயிர் – அனுமாருரோமமெல்லாம், சுறுக்கொள – சுறீரென்ன, தாக்கிய – மோதினவாகி அவன், உயிர்ப்பொடு – சுவாசத்துடனே, தவழ்படர்தலாக, வெம்புகை – அதுடனே வெவ்வியபுகையினுலும், அவ்வுடல்-அனுமாருடம்பை, விசித்த – கட்டியிருக்கிற, பாம்பின் – பாம்பைப்போல், வீக்கினன் – கட்டினன்—எ-று. கட்பொறிகளும் அவற்றிலுண்டான நெருப்புப்பொறிகளும் பெரிய சுவாசமும் புகையும் அனுமார்மேலே படுதலாயின என்பதுகருத்து கட்பொறி கண்ணுகிய அறிவு புகையு நெருப்புந்தோன்ற நெடுமூச்செறிந்து இருபதுகண்களாலும் அனுமாரைப் பார்த்தான் என்க. 68

அன்னவோர்வெகுளியனமராதியர்
துன்னியதுன்னலர்த்துணுக்கஞ்சுற்றுற
என்னிவண்வரவுநீயாரையென்றவன்
தன்மையைவினுயினன்கூற்றின்றன்மையால்.

இ-ள். அன்ன – அப்படிப்பட்ட, ஓர்வெகுளியன் – ஒருகோபமுள்ள ராவணன், அமரர் – தேவர்கள், ஆதியோர் – முதலினராக, துன்னிய-கூடியிருக்கிற, துன்னலர் – உட்பகைவரை, துணுக்கம் – பயம், சுற்றுற – சூழ்வதாக, இவண்வரவு – நீ இவிடம்வந்தது, என் – யாதுகாரணம், நீயாரை – நீ யாவன், என்று – என்பதாக, அவன்தன்மையை-அவர் சுவபாவத்தை, வினு

யினுன் - விசாரித்தான், கூற்றின்தன்மையான் - யமன்போலுஞ் செய்கை யுள்ளவன்—எ-று. 69

நேமியோகுலிசியோநெடுங்கணிச்சியோ
தாமரைக்கிழவனேதறுகட்பஃறலைப்
பூமிதாங்கொருவனேபொருதுமுற்றுற
நாமமுமுருவமுங்கரந்துநண்ணினுய்.

இ-ள். நேமியோ — சக்கராயுதமுவ்ளவனு, குலிசியோ — வச்சிராயுதமுள்ளவனு, நெடு - நீண்ட, கணிச்சியோ — சூலாயுதமுள்ளவனு, தாமரைக்கிழவனே - பிரமதேவனு, தறுகண் — கொடுங்கண்களும், பஃறலை — பலதலைகளுமுள்ளவனுகி, பூமிதாங்கு - உலகைச்சுமக்கிற, ஒருவனே - ஒருசேட்னு, பொருது - இங்கேவந்துசண்டைசெய்து, முற்றுற — சாவ, நாமமும்-பெயரும், உருவமும் - உருவும், கரந்து மறைத்து, நண்ணினுய் — வந்தநீ-எ-று.

நின்றசைத்துயிர்கவர்நீலக்காலனே
குன்றசைத்தயிலுரவெறிந்தகொற்றனே
தென்றிசைக்கிழவனேதிசைநின்றுட்சியர்
என்றிசைக்கின்றவர்யாருள்யாவனீ.

இ-ள். நின்றசைந்து — நிலைகொண்டிருந்து, உயிர் — யாவருயிரையும், கவர் - பிடிக்கிற, நீலக்காலனே — கருநிறமுள்ளகாலனு, குன்றசைந்து- மலைமேலேபட்டு, அயிலுற — வேல்புகுத, எறிந்த — குத்தின, கொற்றனே — வெற்றிமுருகனு, தென்றிசைக்கிழவனே - யமனு, திசைநின்று - திக்குகளிலேயிருந்து, ஆட்சியரென்று — ஆள்கிறவர்களென்று, இசைக்கின்றவர்-சொல்லப்படுகிறவர்கள், யாருள் - எம்மரிலுள், யாவன்நீ - நீ எவன்—எ-று. 71

அந்தணர்வேள்வியினுக்கியாணையின்
வந்துறவிடுத்ததோர்வயவெம்பூதமோ
முந்தொருமலருளோனிலங்கைமுற்றுறச்
சிந்தெனத்திருத்தியதறுகட்டெய்வமோ.

இ-ள். அந்தணர் - பிராமணர்கள், வேள்வியின் - யாகத்திலே, ஆக்கி-உண்டுபண்ணி, ஆணையின் - அவர்கள் மந்திரசக்தியினுலே, வந்துற - இங்கேவந்துபுகுத, விடுத்தது - அனுப்பினதான, வயவெம் — வீரமும். வெம்மையுமுள்ள, ஓர் பூதமோ - ஒரு பூதமா, முந்து - முன்னே, ஒரு மலருளோன்-ஒரு பூமேலிருப்பவனுன பிரமன், இலங்கைமுற்றுற - இந்த இலங்கை முழுதும், சிந்தென - அழித்துவிடென்று, திருத்திய — செய்தனுப்பின, தறுகண் - அஞ்சாத, தெய்வமோ - ஒருதேவனே—எ-று. 72

ஆரைநீயென்னையிங்செய்துகாரணம்
ஆருனைவிடுத்தவரறியவாணையால்

சோர்விலேசொல்லுதியென்னச்சொல்லினன்
வேரொடுமமரர்தம்புகழ்விழுங்கினன்.

இ-ள். ஆரைநீ — இவர்களில்யாவன்நீ, இங்கெய்து காரணம் - இங்கே வந்த நிமித்தம், என்னை - யாது, ஆர் உனை விடுத்தவர் — உன்னை அனுப்பின வனெவன், அரிய - நான்தெரிய, ஆணையால் — என் உத்தரவினலே, சோர்விலே — தளர்வில்லாதவனாக, சொல்லுதியென்ன — சொல்லென்று, சொல்லினன் - கேட்டான், வேரொடும் — வேருடனே, அமரர்தம் — தேவர்களுடைய, புகழ்-கீர்த்தியை, விழுங்கினன் - கபளீகரித்த ராவணன்—எ-று.

சொல்லியவனைவருமல்லென்சொன்னவப்
புல்லியவலியினேரேவல்பூண்டிலென்
அல்லியங்கமலமேயனையசெங்கணோர்
வில்லிதன்றூதனயானிலங்கைமேயினேன்.

இ-ள். சொல்லிய — நீசொன்ன, அனைவரும் — எல்லாரும் யாவரும், அல்லென் — நானல்லேன், சொன்ன — நீசொன்னவர்களான, அப்புல்லிய வலியினோர் - அந்த அல்பபலமுள்ளவர்கள், ஏவல் — ஏவுதலை, பூண்டிலேன்-கொண்டுவந்தேனல்லேன், அல்லியம் — அகவிதழும் அழகுமுள்ள, கமலமே-தாமரைப்புஷ்பமே, அனைய — ஒப்பான, செங்கண் — சிவந்த கண்களுள்ள, ஓர்வில்லிதன் — ஒரு வில்வீரனுடைய, தூதன்யான் — தூதுவனேநான், இலங்கைமேவினேன் - இந்த இலங்கைக்குவந்தேன்—எ-று. 74

அனையவன்யாரெனவறிதியாதியேல்
முனைவருமமரருமூவர்தேவரும்
எனையவரெனையவர்யாவர்யாவையும்
நினைவருமிருவினைமுடிக்கநின்றுளோன்.

இ-ள். அனையவன் — அந்தவில்வீரன், யாரென - இன்னானென்று, அறிதியாதியேல் — அறியவேண்டுவாயேயானால், முனைவரும் — ருஷிகளும், அமரரும் - தேவர்களும், மூவர்தேவரும் - மும்மூர்த்திகளும், எனையவர்-இன்னும் எவ்வளவு மேம்பாடுள்ளவர்கள், எனையவர் — எவ்வளவினர், யாவர்-அவ்வளவினரும், யாவையும் —எல்லாப் பொருள்களும், நினைவு அரும்-நினைக்க அரிதான, இருவினை — பெரிய காரியத்தை, முடிக்க — முடிவுபண்ண, நின்றுளோன் — அவதரித்துவந்தவன்—எ-று. 75

வேறு

ஈட்டியவலியுமேனுளியற்றியதவமும்யாணர்
கூட்டியபடையுந்தேவர்கொடுத்தநல்வரமுங்கோட்பும்
தீட்டியபிறவுமெய்தித்திருத்தியவாழ்வுமெல்லாம்
நீட்டியபகழியொன்றுன்முதலொடுநீக்கநின்றன்.

இ-ள். ஈட்டிய — நீ சம்பாதித்துள்ள, வலியும் — பலமானவைகளும், மேனாள் - முன்னாளிலே, இயற்றிய — நீ செய்திருக்கிற, தவமும் - தபோ பலமும், யாணர் — புதிதாக, கூட்டிய — நீ சேர்த்திருக்கிற, படையும்-சேனை களும், தேவர் — தேவர்கள், கொடுத்த — கொடுத்திருக்கிற, நல்வரமும் - நல்ல வரங்களும், கோட்பும் — இன்னம் நீ கொண்டுள்ளவைகளும், தீட்டிய — நீ எங்கும் எழுதிவைத்திருக்கிற, பிறவும் — கீர்த்தி முதலான மற்றவைகளும், எய்தி - அடைந்து, திருத்திய — பின்பு செய்துகொண்ட, வாழ்வும் — சம்பத் தும், எல்லாம் — சமஸ்தமும், நீட்டிய — நீளவிடலான, பகழியொன்றால்- ஒரு அம்பினாலே, முதலொடு — அடியோடே, நீக்க — போக்கடிக்க, நின்றான்- நிலைபெற்றுவந்தவன் அவன் யாரென்றால்—எ-று. 76

தேவரும்பிறருமல்லன்றிசைக்களிறல்லன்றிக்கிற்
காவலரன்னனீசன்கயிலையங்கிரியுமல்லன்
மூவருமல்லன்மற்றைமுனிவருமல்லனெல்லைப்
பூவலத்தையாண்டபுரவலன்புதல்வன்போலாம்.

இ-ள். தேவரும் — தேவர்களும், பிறரும் — அசுரரும் முனிவர்களும், அல்லன் - அல்லாதவன், திசைக்களிறு — திக்கியானைகளும், அல்லன் — அல் லாதவன், திக்கிற்காவலர் — திக்குப்பாலகர்களும், அல்லன் — அல்லாதவன், ஈசன் — சிவனுடைய, கைலையங்கிரியும் - வெள்ளிமலையும், அல்லன் — அல் லாதவன், மூவரும் — மும்மூர்த்திகளும், அல்லன் - அல்லாதவன், மற்றை முனிவரும் — மற்றச் சனகாதி முனிவர்களும், அல்லன் — அல்லாதவன், எல்லை - தன் ஊராளவாக, பூவலயத்தை பூமண்டலமுழுதும், ஆண்ட-ஆண்டு கொண்டிருந்த புரவலன் — தசரதமகாராஜனுடைய, புதல்வன் — புத்திரன் ஆம்—எ-று. 77

போதமும்பொருந்துகேள்விப்புரையறுபயனும்பொய்தீர்
மாதவஞ்சார்ந்ததீராவரங்களுமற்றுமுற்றும்
யாதவனினைந்தானன்னபயத்தனவேறுவேண்டின்
வேதமுமறனுஞ்சொல்லுமெய்யறமூர்த்திவில்லோன்.

இ-ள். போதமும் — ஞானமும், பொருந்து — ஞானத்தாலடைகிற, கேள்வி — கேள்விகளாலே, புரையறு — குற்றந்தீர்ந்த, பயனும் - பிரயோசன மும், பொய்தீர்-பொய்யில்லாத, மாதவம்-பெரியதவத்தை, சார்ந்த-கூடின, தீரா — நீங்காத, வரங்களும் — வேண்டியசித்திகளும், மற்றும் — இன்னம் வேண்டுமவைகளான, முற்றும் — எல்லாம் ஆகியவைகளில், யாது - எதை, அவன் — அந்த வில்வீரன், நினைந்தான் — எண்ணினானோ அதை, அன்ன- அவைகளையெல்லாம் அவனுக்கு, பயத்தன-பிரயோசனப்படுத்துமவைகளோ, ஏதுவேண்டின் — அப்படிப் போதமுதலியவைகள் பிரயோசனப்படுத்துதற் குக் காரணம் வேண்டினால், வேதமும் — வேதங்களும், அறனும் — தருமங்

களும், சொல்லும் — சொல்வதான, மெய் - மெய்யாகிய, அறமூர்த்தி - தரும சொரூபியே, வில்லோன் — அந்த வில்வீரன்—எ-று. 78

காரணங்கேட்டியாயிற்கடையிலாமறையின்கண்ணும்
ஆரணங்காட்டமாட்டாவறிவினுக்கறிவுமன்னோன்
போரணங்கிடங்கர்கவ்வப்பொதுநின்றுமுதலேயென்ற
வாரணங்காக்கவந்தானமரரைக்காக்கவந்தான்.

இ-ள். காரணம்கேட்டியாயில் — இதற்குமூலம் விசாரிப்பையேயானால், கடையிலா — முடிவுபடாத, மறையின்கண்ணும் — வேதங்களிலும், ஆரணம்- அங்குள்ள சாகைகளேனும், காட்டமாட்டா — தெரியச் சொல்லமாட்டாத, அறிவினுக்கு — ஞானத்துக்கு, அறிவும் — ஞானமானவனும், அன்னோன்- அவனே அவனோ, போர் — தனதுபலத்தாலே, அணங்கு — வருத்தஞ்செய்வதான, இடங்கர் — முதலையானது, கவ்வ — பற்றிக்கொள்ள அதனாலே, பொது நின்று — தேவர்கள்நடுவே நின்று, முதலேயென்ற — ஒருமூலமே யென்று கூப்பிட்ட, வாரணம் — யானையை, காக்க — ரக்ஷிக்க, வந்தான்-அக் காலத்துவந்தவனே, அமரரை — இக்காலத்திலே தேவரை, காக்க — ரக்ஷிக்க, வந்தான் — அவதாரஞ்செய்தருளினன்—எ-று. 79

மூலமுநடுவுமீறுமில்லதோர்மும்மைத்தாய
காலமுங்கணக்குநீத்தகாரணன்கைவில்லேந்திச்
சூலமுந்திகிரிசங்குங்கரகமுந்துறந்துதொல்லை
ஆலமுமலரும்வெள்ளிபொருப்பும்விட்டயோத்திவந்தான்.

இ-ள். மூலமும் — ஆதியும், நடுவும் — மத்தியமும், ஈறும் — அந்தமும், இல்லது — இலதாகி, ஓர் - ஒரு, மும்மைத்தாய — மூவகையான, காலமும்- காலங்களும், கணக்கும் — கணக்குகளும், நீத்த-கடந்து நிற்கிற, காரணன்- ஜகத்காரண பூதன் அவனோ, கை — தன்கையிலே, வில் ஏந்தி — ஒருவில்லைக் கொண்டு, சூலமும் — சூலத்தையும், திகிரி சங்கும் — சக்கர சங்குகளையும், கரகமும் — கமண்டலத்தையும், துறந்து — கைகளிலே கொள்ளாமல்விட்டு, தொல்லை — பழையதான, ஆலமும் - ஆலிலையையும், மலரும் — தாமரைமலரையும், வெள்ளிப்பொருப்பும் — கைலைமலையையும், விட்டு — நீங்கி, அயோத்தி — இவ்வூரேதனக்குப் பிறப்பிடமாக, வந்தான் - அவதாரஞ் செய்தருளினன்—எ-று. 80

அறந்தலைநிறுத்திவேதமருள்சுரந்தறைந்தநீதித்
திறந்தெரிந்துலகம்பூணச்செந்நெறிசெலுத்தித்தீயோர்
இறந்துகநூறித்தக்கோரிடர்துடைத்தேகவிண்டு
பிறந்தனன்றன்பொற்பாதமேத்துவார்பிறப்பறுப்பான்.

இ-ள். அறம் — தருமங்களையே, தலைநிறுத்தி-பிரதானமாகக்கொண்டு, வேதம் — வேதங்கள், அருள் சுரந்து — இரக்கமுள்ளவைகளாய், அறைந்த-

சொன்ன – நீதித்திறம் – நீதிவகைகளை, தெரிந்து – விவேகத்து, உலகம்-உலகத்தார், பூண அனுசரித்து நடக்க, செந்நெறி-செவ்வையானவழியிலே, செலுத்தி - போகவிட்டு, தீயோர் – நல்வழியிலே போகாதவர்கள், இறந்து உக - அழிந்துவிழ, நூறி - அழித்து, தக்கோர் – நல்லோர்களுடைய, இடர்-துன்பங்களை, துடைத்து – போக்கி, ஏக-தன்னுடைச் சோதிக்கெழுந்தருள, விண்டு – திருமாலே, பிறந்தனன் – அவதரித்தான் இன்னமும், தன்பொற்பாதம் - தனது பொன்னடிகளை, ஏத்துவார் - துதிப்பவர்களுடைய, பிறப்பு – பிறவிநோயையும், அறுப்பான் – போக்கியருளுவான்—எ-று. ஈண்டுப் பிறந்தனனென்றால் இவ்வுலகத்தவதரித்தான தன்பொற்பாதமேத்துவார் பிறப்பறுக்க வல்லவன் என்க. 81

அன்னவற்கடிமைசெய்வேனுமமுமநுமனென்பேன்
நன்னுதறன்னைத்தேடிநாற்பெருந்திசையும்போந்த
மன்னரிற்றென்பால்வந்ததானைக்குமன்னன்வாலி
தன்மகனவன்றன்றூதன்வந்தனெனன்றனியேனென்றான்.

இ-ள். அன்னவற்கு-அப்படிப்பட்ட ஒருவனுக்கு, அடிமைசெய்வேன்–நான் அடிமைசெய்கிறவன், நாமமும் – என்பெயரோ, அநுமனென்பேன்–அனுமானென்று சொல்லப்படுவேன், நன்னுதல்தன்னை – சீதாபிராட்டியை, தேடி – தேடிக்கொண்டு, நாற்பெருந்திசையும் – நான்கான பெரிய திக்குகளெல்லாம், போந்த – போன, மன்னரில் – தலைவர்களிலே, தென்பால்வந்த-தெற்குத்திசைக்குவந்த, தானைக்கு – சேனைகளுக்கு, மன்னன் – அரசனான, வாலிதன்மகன் – அங்கதனாகிய, அவன்றன் – அவனுடைய, தூதன் – தூதுவன்யான், வந்தனென் – இங்குவந்தேன், தனியேன்-நானொருவனே, என்றான் – என்றுசொன்னார் அனுமார்—எ-று. 82

என்றலுமிலங்கைவேந்தனெயிற்றினமெழிலிநாப்பண்
மின்றிரிந்தன்னநக்குவாலிசேய்விடுத்ததூத
வன்றிறலாயவாலிவலியன்கொலரசின்வாழ்க்கை
நன்றுகொலென்னலோடுநாயகன்றூதனக்கான்.

இ-ள். என்றலும் – என்றுசொன்னவுடனே, இலங்கைவேந்தன்-இராவணன், எயிற்றினம் – தன்பல்வரிசைகள், எழிலி நாப்பண் – மேகத்தினடுவே, மின் – மின்னலானது, திரிந்தன்ன – உலாவினாற்போலவிளங்க, நக்கு-சிரித்து, வாலிசேய் – வாலிபுத்திரன், விடுத்த – அனுப்பின, தூத-தூதனே, வன்திறலாய – மிகவும் பலமுள்ளவனான, வாலி – வாலியானவன், வலியன்கொல் – சுகமேயிருக்கிறானோ, அரசின்வாழ்க்கை – அவனதுராசாங்கம், நன்றுகொல் – நன்றாயிருக்கிறதோ, என்னலோடும் – என்றுகேட்டவுடனே, நாயகன் தூதன் – ஸ்ரீராமதூதனான அனுமார், நக்கான் – சிரித்தார்—எ-று.

அஞ்சலையரக்கபார்விட்டந்தரமடைந்தானன்றே
வெஞ்சினவாலிமீளான்வாலும்போய்விளிந்ததன்றே

அஞ்சனமேனியான்றனடிகணையொன்றான்மாழ்கித்
துஞ்சினனெங்கள்வேந்தன் சூரியன்றோன்றலென்றான்.

இ-ள். அரக்க – ஓராக்ஷதா, அஞ்சலை – பயப்படாதை, பார்விட்டு-இந்த வுலகத்தைவிட்டு, அந்தரம் – சுவர்க்கலோகம்போய், அடைந்தான் – சேர்ந்தான், அன்றே – சிலநாளுக்குமுன்னே, வெஞ்சினவாலி – வெவ்வியகோபமுள்ளவாலி, மீளான் - இனிவருவானல்லன் அவன்போனபோதே, வாலும் போய் – அவன்வாலும் அவன் கூடவேபோய், விளிந்தது – அழிந்தது, அன்றே – அல்லவோ, அஞ்சனம் – அஞ்சனம்போற்கரிய, மேனியான் றன்-நிறத்தையுடைய ஸ்ரீராமனது, அடிகணை ஒன்றால் – உன்னையுங்கொல்லவல்லவோரம்பினாலே, மாழ்கி – வருந்தி, துஞ்சினன் – மூடிந்தான், எங்கள்-இப்போதெங்களுக்கு, கோமான் – அரசனானவன், சூரியன்தோன்றல் – சூரியன் குமாரனான சுக்கிரீவன், என்றான் – என்றுசொன்னார்—எ-று. 84

என்னுடையீட்டினாலவ்வாலியையெறுழ்வாயம்பால்
இன்னுயிருண்டதிப்போதியாண்டையானிராமனென்பான்
அன்னவன்றேவிதன்னையங்கதனுடனுற்ற
தன்மையையுரைசெய்கென்னச்சமீரணன்றனயன்சொல்வான்.

இ-ள். அவ்வாலியை – அந்தவாலியை, என்னுடை – யாதினுடைய, ஈட்டினால் – நிமித்தத்தால், எறுழ்வாய் – மிகவலிமைகொண்ட, அம்பால்-அம்பினாலே, இன் உயிர் – அவனதினிய உயிரை, உண்டது - வாங்கியது, இப்போது – இக்காலத்தில், இராமனென்பான் – இராமனென்பவன், யாண்டையான் – எங்கிருக்கிறான், அன்னவன் – அந்த ராமனுடைய, தேவி தன்னை – மனைவியை, அங்கதன் – அந்தவாலிபுத்திரன், நாடலுற்ற – தேடலாகிய, தன்மையை - வகையை, உரைசெய்க – சொல்லுக, என்றான் – என்றுகேட்டான் ராவணன், சமீரணன் – வாயுவினுடைய, தநயன் - புத்திரனானவர், சொல்வான் – சொல்லலானார்—எ-று. 85

தேவியைநாடிவந்தசெங்கணாற்கெங்கள்கோமான்
ஆவியொன்றாகநட்டானருந்துயர்துடைத்தியென்ன
ஓவியர்க்கெழுதவொண்ணவுருவத்தனுருமையோடும்
கோவியற்செல்வமுன்னேகொடுத்துவாலியையுங்கொன்றான்.

இ-ள். தேவியை – தனதுநாயகியை, நாடிவந்த – தேடிக்கொண்டுவந்த, செங்கணாற்கு – சிவந்தகண்களுள்ள ஸ்ரீராமனுடனே, எங்கள்கோமான்-எங்களரசனான சுக்கிரீவன், ஆவி - இருவருக்குமுயிர், ஒன்றாக – ஒன்றேயென்னும்படி, நட்டான் – உறவாயினான், அருந்துயர் – எனதரிதானதுன்பத்தை, துடைத்தியென்ன – போக்கென்று சுக்கிரீவன்கேட்டுக் கொண்டதனாலே, ஓவியர்க்கு – சித்திரமெழுதவல்லாராலும், எழுத ஒண்ண – எழுதப்படாத, உருவத்தின் - அழகுள்ள ஸ்ரீராமன், உருமையோடும் – உருமையென்னுமவன்மனைவியுடனே, கோ இயல் – ராஜாங்கமாகப்பெற்ற, செல்வம்-செல

வத்தையும், முன்னேகொடுத்து — முன்பேபெறக்கொடுத்து, வாலியையும்- பின்புவாலியையும், கொன்றான் - வதைத்தார் ஸ்ரீராமன்—எ-று. 86

ஆயவன்றன்னொடாண்டோர்திங்களோர்நான்கும்வைகி
மேயவெஞ்சேனைசூழவீற்றினிதிருந்தவீரன்
போயினிநாடுமென்னப்போந்தனம்புகுந்ததீதென்
றேயவன்றூதன்சொன்னானிராவணனிதனைச்சொன்னான்.

இ-ள். ஆயவன்றன்னோடு — அந்தச் சுக்கிரீவனுடனே, ஆண்டு-அங்கே, ஓர்திங்கள் — ஒருமாதம்போல், ஓர் நான்கும் - ஒருநாலுமாத அளவும், வைகி- இருந்து, மேய — பின்பு கூடத்தக்க, வெஞ்சேனை — வெவ்வியசேனைகள், சூழ் - சூழ்வதாக, வீற்று - அவைகள் கூடுமளவும், தனியேவேறாக இனிது இருந்த - நன்றாகப்பொறுத்திருந்த, வீரன் - ஸ்ரீராமன், போய் இனி-இனி நீங்கள்போய், நாடுமென்ன — தேடுங்களென்றுசொல்ல, போந்தனம் - நாங்கள்தேடிவந்தோம், புகுந்தது — சீதை பிரிந்த பின்பு நடந்தகாரியம், ஈதென்று — இவ்வளவுதானென்று, ஏயவன் - ஏவிய அங்கதனுக்கு, தூதன்-தாம் தூதனாக, சொன்னான் — சொன்னார், இராவணன் — அதற்குத்தசக்கிரீவன், இதனைச்சொன்னான் - இந்தவார்த்தையைச் சொல்லலானான்—எ-று. 87

உங்குலத்தலைவன்றன்னோடொப்பிலாவுயர்ச்சியோனை
வெங்கொலையம்பிற்கொன்றாற்காட்டொழில்மேற்கொண்டீரேல்
எங்குலப்புறுநஞ்சீர்த்திநும்மொடுமியைந்ததென்றால்
மங்குலிற்பொலிந்தஞாலமாதுமையுடைத்துமாதோ.

இ-ள். உங்குலத்தலைவன்றன்னோடு — இப்போது உங்கள் குலத்துக்கரசனான சுக்கிரீவனுடனே, ஒப்பிலா — யாதோரொப்புமில்லாத, உயர்ச்சியோனை — உயர்வுள்ளவாலியை, வெங்கொலை — வெவ்விய கொலைசெய்வதான, அம்பில் — அம்பினாலே, கொன்றாற்கு — கொன்றராமனுக்கு, ஆள்தொழில் — அடிமைத்தனஞ்செய்ய, மேற்கொண்டீரேல் — உங்குலத்தலைவனோடு நீங்களொப்புக் கொள்வீர்களேயானால், நஞ்சீர்த்தி-உங்கள்பெருமை, எங்கு உலப்புறும் — எப்படிச்சொல்ல முடிவுபெறும் முழுதும் பழிப்பன்றோ முடிவுபெறும், நும்மொடும் — உங்களிடத்தே உங்களோடே, இயைந்ததென்றால் — இச்செய்கை கூடுவதேயானால், மங்குலில் - மேகவளத்தினாலே, பொலிந்த — நிறைவுபெறுகிற, ஞாலம் — இந்தவுலகமானது, மாதுமை — பெண்களிடத்துள்ள அறியாமையையே, உடைத்து — உடையதாயிற்று—எ-று. இந்த அறியாமையாலே ராஜத்துரோகம் உள்ளதானால் இனிமழையும் பெய்யுமாவென்பது கருத்து. 88

தம்முனைக்கொல்வித்தன்னார்கொன்றவற்கன்புசான்ற
உம்மினத்தலைவனேவயாதெனக்குணர்த்தலுற்ற
தெம்முனைத்தூதுவந்தாயிகல்புரிதன்மையன்னை
நும்முனைக்கொல்லாநெஞ்சமஞ்சலைநுவறியென்றான்.

இ-ள். தம்முனை — தனக்கு முத்தவனை, கொல்வித்து — கொல்லப் பண்ணி, அன்னான் — அந்தத்தமையனை, கொன்றவற்கு — கொன்ற ஒருவனுக்கு, அன்புசான்ற — அன்பமைந்த, உம்மினம்-உங்கள் கூட்டத்துக்கு, தலைவன் — தலைவனான ஒருவன், ஏவ — அனுப்ப, எனக்கு உணர்த்தலாவது எனக்கு நீசொல்லவந்தது, யாது - என்ன, எம்முனை - எங்களுக்குமுன்னே தூதுவந்தாய் — தூதுவந்தவனானநீ, இகல்புரி — சண்டைசெய்த, தன்மையென்னை — காரியமென்ன, நும்முனை - உங்களிலே தூதென்றுவந்த உன்னை கொல்லலாம் — கொல்லமாட்டோம், நெஞ்சம் - உன்மனத்திலே, அஞ்சலை பயப்படாதவனாகி, நுவல்தியென்றான் —சொல்லென்று கேட்டான் ராவணன்—எ-று. 89

வேறு

துணர்த்ததாரவன்சொல்லியசொற்களைப்
புணர்த்துநோக்கிப்பொதுநின்றநீதியை
உணர்த்தினலதுறுமெனவுன்னருங்
குணத்தினனுமினையனகூறினன்.

இ-ள். துணர்த்த — பூங்கொத்துகளாலான, தாரவன் — மாலையணிந்த ராவணன், சொல்லிய — சொன்ன, சொற்களை - வார்த்தைகளையெல்லாம், புணர்த்து - ஒன்றுசேர்த்து, நோக்கி — பார்த்து, பொது நின்ற — யார்க்கும் பொதுவான, நீதியை — நியாயத்தை, உணர்த்தினல் — சொன்னல், அது உறும் என — அதுதக்கதே யாமென்று, உன்னரும் - நினைத்துச்சொல்ல அரிதான, குணத்தினனும் - குணங்களுள்ள அனுமாரானவர், இனையன - இவ்வார்த்தைகளை, கூறினன் — சொல்லலானார்—எ-று. 90

தூதுவந்ததுசூரியன்கான்முளை
ஏதுவொன்றியநீதியினைந்தன
சாதுவென்றுணர்கிற்றியேற்றக்கன
கோதிறந்தனநின்வயிற்கூறுவாம்.

இ-ள். தூதுவந்தது — நான் தூதுசொல்லவந்தது, சூரியன்கான்முளை - சூரியன்குமாரனான சுக்கிரீவனுடைய, ஏதுவொன்றிய — நிமித்தத்தினாலானவையாம், நீதி — அவையோ நீதியோடு, இயைந்தன - கூடியவைகளாம், சாதுவென்று — நல்லவைகளென்று, உணர்கிற்றியேல்-நினைப்பாயேயானல், தக்கன — அவைகள் தகுதியானவைகளே, கோது — தோஷங்கள், இறந்தன - நீங்கின நன்மார்க்கங்களை, நின்வயின் — உனக்குமுன்னே, கூறுவாம் — யாம் சொல்லக்கடவோம், ஆம் என்னும் உளப்பாட்டுத் தன்மைப்பன்மை அந்தச் சுக்கிரீவனுடன் யானும் என்பது போதருதல் காண்க—எ-று. 91

வறிதுவீழ்த்தனைவாழ்க்கையைமன்னறம்
சிறிதுநோக்கலைதீமைதிருத்தினய்
இறுதியுற்றுளதாயினுமின்னுமோர்
உறுதிகேட்டியுயிர்நெடிதோம்புவாம்.

இ-ள். வாழ்க்கையை – உன்வாழ்வை, வறிது - வீணாக, வீழ்த்தனை-போகச்செய்தாய், மன்அறம் – ராஜதருமத்தை, சிறிதும் – கொஞ்சமேனும், நோக்கலை – நீ பாராதிருக்கிறாய், தீமை – கெடுதியையே, திருத்தினை-செய்தாய் அதனால், இறுதி - உனக்குமுடிவு, உற்றுளது - வந்திருக்கின்றது, ஆயினும் - ஆனாலும், இன்னும் - இன்னமும், ஒருறுதி – நாம் சொல்லுவதான நன்மையை, கேட்டி – கேட்கக்கடவை கேட்டாயானால், உயிர்-உன் உயிரை, நெடிது – நெடுங்காலமும், ஓம்புவாய் – உள்ளதாகக் காத்துக்கொள்வாய்.

போயிற்றீர்நும்புலன்வென்றுபோற்றிய
ஆயிற்றீர்வரிதாகியமாதவம்
காயிற்றீர்வருங்கேடருங்கற்பினாள்
தீயிற்றூயவளைத்துயர்செய்ததால்.

இ-ள். நும்புலன் – உமது விஷயவாசனைகளை, வென்று – ஜயித்து, போற்றிய – பாதுகாத்த, தீர்வு – நீங்குதல், அரிதாகிய - இல்லாத, மாதவம்-பெரியதவமெல்லாம், போய் – உங்களைவிட்டு நீங்குதலாக, இற்றீர் – அழிந்தீர்கள், ஆயில் – ஆராய்ந்து பார்க்குமிடத்தில், காயில் – உயிரேபோகிறதாக வருத்தினாலும், தீர்வுஅரும் – நீங்குதலில்லாத, கேடு அரும் – அழிவுபடாத, கற்பினாள் - பதிவிரதையாகிய சீதாபிராட்டியான, தீயில் - நெருப்பைப்போல், தூயவளை – பரிசுத்தமானவளை, துயர் – துன்பப்படும்படி, செய்ததால்-நீவிர் பண்ணினதினாலே—எ-று. 93

இன்றுவீந்ததுநாளைச்சிறிதிறை
நின்றுவீந்ததலானிறைநிற்குமோ
ஒன்றுவீந்ததுநல்லுணரும்பரை
வென்றுவீங்கியவீக்கமிகுத்ததால்.

இ-ள். இன்று - இன்றைத்தினமும், வீந்தது - கழிந்தது, நாளை - நாளைத்தினமும், சிறிதுஇறை – கொஞ்சநேரம், நின்று – நிற்பதாகி, வீந்தது - கழிந்ததே, அலால் – அல்லாமல், நிறை – முழுதும், நிற்குமோ-காலம் நிலைகொள்ளுவதாமோ, நல்லுணர் – நல்லவுணர்வாகிய, ஒன்று - ஒருபொருள், வீந்தது-உங்களிடத்தில்லாமற்போயிற்று என், உம்பரை - தேவர்களை, வென்று-ஜயங்கொண்டு, வீங்கிய – அதிகமான, வீக்கம் - பெருமை, மிகுத்ததால்-உங்களிடத்தில் அதிகமானதினாலே நல்லுணர்வு வீந்தது—எ-று. 94

தீமைநன்மையைத்தீர்த்தலொல்லாதெனும்
வாய்மைநீக்கினைமாதவத்தால்வந்த
தூய்மைதூயவடன்மையிற்றோன்றிய
நோய்மையாற்றுடைக்கின்றனைநோக்கலாய்.

இ-ள். தீமை – பாவமானது, நன்மையை – புண்ணியத்தை, தீர்த்தல்-வெல்லுதற்கு, ஒல்லாது – கூடாது, எனும்-என்பதான, வாய்மை-மெய்யை,

தீர்த்தனை – எண்ணுமல்விட்டாய், மாதவத்தால் – உனது பெரிய தவத், ஞலே, வந்த – வருதலான. தூய்மை – யோக்கியதையை, தூயவள் – நல் வளான பிராட்டி, தன்மையில் – விஷயத்திஞலே, தோன்றிய – உண்டான நோய்மையால் – காமநோயாலே, துடைக்கின்றனை — போக்கிக்கொள்ளு ருய், நோக்கலாய் – ஒன்றும் ஆலோசியாதவஞகி—எ-று. 9

திறந்திறம்பியகாமச்செருக்கிஞல்
மறந்துதத்தமதியின்மயங்கிஞர்
இறந்திறந்திழிந்தேறுவதேயலால்
அறந்திறம்பினராருளராயிஞர்.

இ-ள். திறம் — நல்வகைகளிலே, திறம்பிய – தப்புதலான, காமச்செரு கிஞல் – காமமயக்கத்திஞலே, மறந்து – நன்மைகளை மறந்து, தத்தம் — தங் கள் தங்களுடைய, மதியின் – புத்தி விசேஷத்திஞலே, மயங்கிஞர் – தப்பிப் போனவர்கள், இறந்து இறந்து – செத்துச்செத்து, இழிந்து – தாழ்ந்து ஏறுவதே – அத்தாழ்விலுயர்கிறதே, அல்லால் – அல்லாமல், அறந்திறம்பினர் தருமநிலையைத்தப்பி நடந்தவர்களில், உளராயிஞர் – புகழுள்ளவர்களேயான வர்கள், ஆர் – எவர்கள், அறந்திறம்பாதவர்களே புகழுள்ளவராவாரென்ற கருத்து—எ-று. 96

நாமத்தாழ்கடன்ஞாலந்தவிந்தவர்
ஈமத்தான்மறைந்தாரிளமாதர்பால்
காமத்தாலிறந்தார்களிவண்டுறை
தாமத்தாரினரெண்ணிஞஞ்சால்வரோ.

இ-ள். நாமத்து – பயப்படும்படியாக, ஆழ் – ஆழத்தையுடைய, கடல் – கடல்சூழ்ந்த, ஞாலத்து — உலகத்திலே, அவிந்தவர் – இறந்துபோனவர்கள் எல்லாம், ஈமத்தால் – சுடுகாடுபோய்ச் சேர்வதஞலே, மறைந்தார் – மறை வாயிஞர்கள், இளமாதர்பால் – யௌவநமுள்ள பெண்கள் விஷயமான, காமத்தால் – ஆசையிஞல், இறந்தார் – செத்துப்போனவர்கள் அதிகமான வர்கள், களிவண்டு – மயக்கத்தையுடைய வண்டுகள், உறை – சஞ்சரிப்ப தான, தாமம் – ஒளியுள்ள, தாரினர் – மாலைகளையுடைய வீரர்கள், எண்ணி ஞும் – கணக்கிலே, சால்வரோ – அமைவார்களோ அமையார்கள் பழியை யடைவார்கள்—எ-று. 97

பொருளுங்காமமுமென்றிவைபோக்கிவே
றிருளுண்டாமெனவெண்ணலரீதனும்
அருளுங்காதலிற்றீர்தறுமல்லதோர்
தெருளுண்டாமெனவெண்ணலர்சிறியோர்.

இ-ள். பொருளும் – திரவிய ஆசையும், காமமும் – பெண்களாசையும், என்றிவை – என்னுமிரண்டை, போக்கி – அல்லாமல், வேறு – வேறே,

இருள் — நரகம், உண்டாமென — உளதென்று, எண்ணலர் - நினையார்கள் சிரியோர்கள், ஈதலும் — வறியோர்க்குக் கொடுப்பதும், அருளும் — இரக்கமும், காதலில் — பொருளாசை பெண்ணாசையில், தீர்தலும் — நீங்கியிருத்தலும், அல்லது — அல்லாமல், ஓர் தெருளுண்டாமென — வேறே ஒரு சுவர்க்கமுண்டென்று, எண்ணலர் — நினையார்கள், சிரியோர் - நல்லோர்கள், தெருள் — சுவர்க்கம் சுகம்—எ-று. ஈதலும் அருளும் காதலிற்றீர்தலுமே சுவர்க்க சுகமென்று சிரியோர் கொள்வரென்று கருத்து. 98

இச்சைத்தன்மையினிற்பிறரில்லினை
நச்சிநாளுநகையுறநாணிலன்
பச்சைமேனிபுலர்ந்துபழிபடூஉம்
கொச்சையாண்மையுஞ்சீர்மையிற்கூடுமோ.

இ-ள். இச்சைத்தன்மையினில் - இச்சாகுணத்தினாலே, பிறரில்லினை-பிறர் மனைவியை, நச்சி — விரும்பி, நாளும் — எப்போதும், நகையுற - பிறருக்குச் சிரிப்புத்தோன்ற, நாண் இலன் - வெட்கமில்லாதவனாகி, பச்சைமேனி-பசுமையான சரீரம், புலர்ந்து — வற்றுதலாகி, பழிபடூஉம் — பழிப்பையடைகிற, கொச்சை — அறிவில்லாத, ஆண்மையும் — ஆண்மைத்தனமும், சீர்மையில் — யோக்கியமானவைகளிலே, கூடுமோ — சேருமோ சேராது—எ-று.

ஓதநீருலகாண்டவருன்றனைப்
போதநீதியராருளர்போயினர்
வேதநீதிவிதிவழிச்செல்வரும்
காதனீயறத்தெல்லைகடத்தியோ.

இ-ள். ஓதநீர் — கடல்சூழ்ந்த, உலகாண்டவர் — உலகத்தையாண்டவர்களில், உன்றனை — உன்னளவு, போதம் — ஞானமுள்ள, நீதியர் - நீதிதெரிந்தவர்கள், ஆருளர் — யாரிருக்கிறார்கள், போயினர் - எல்லாருமிறந்துபோனார்களே அல்லாதிருந்தவர்களில்லை, வேதநீதி — வேதநீதிதெரிந்து, விதிவழி-அது விதித்தபடியே, செல்வரும் — செல்லவல்லவர்களும், காதல் — விரும்பும்படி ஆயிரம் வேதந்தெரிந்த, நீ — தசக்கிரீவனே நீ, அறத்தெல்லை — தருமத்தினளவை, கடத்தியோ - கடந்து நடக்கலாமா—எ-று. 100

வெறுப்புண்டாயவொருத்தியைவேண்டினால்
மறுப்புண்டாயபின்வாழ்கின்றவாழ்வினின்
உறுப்புண்டாய்நடுவோங்கியநாசியை
அறுப்புண்டாலதழகெனலாகுமே.

இ-ள். வெறுப்பு — தன்மேல் பிரியமில்லாமையை, உண்டாய — உள்ளவளான, ஒருத்தியை — ஒருபெண்ணை, வேண்டினால் - விரும்பினால், மறுப்பு-அவள் வேண்டாவென்றுதள்ளுதல், உண்டாயபின் - உண்டானபின்பு, வாழ்கின்ற - அவளைப் பலாத்கரித்துக் கூடிவாழ்கிற, வாழ்வினில் — சுகத்

தைப்பார்க்கிலும், உறப்புண்டாய் - ஓரவயவமாகி, நடு - முகத்தினடுவே, ஓங்கிய - உயர்ந்திருக்கிற, நாசியை - மூக்கை ஒருவரால், அறுப்புண்டால் - அறுபடலானால், அது - அப்படி அறுபடுதலே, அழகெனலாகுமே - அழகென்று சொல்லப்படும், வாழ்வினில் - மூக்கறுபடுதலழகென்று சொல்லலாகும், என்றால் - மூக்கறுபடுதல் அழகன்று அதிலும் வேண்டாளைக் கூடுதலழகன்று என்றாயிற்று—எ-று. 101

பாரைஞ்ஞூறுவபற்பலபொற்புயம்
ஈரைஞ்ஞூறுதலையுளவென்னினும்
ஊரைஞ்ஞூறுங்கடுங்கனலுட்பொதி
சீரைஞ்ஞூறவைசேமஞ்செலுத்துமோ.

இ-ள். பாரை — உலகமெல்லாம், ஞூறுவ - அழிப்பனவாகிய, பற்பல - அநேகம், பொற்புயம் - அழகுள்ள தோள்களும், ஈரைஞ்ஞூறு - ஆயிரம், தலை - தலைகள், உளவென்னினும் - உண்டாயிருக்கின்றன ஆனாலும் சேமஞ்செலுத்தா, ஊரை - ஊர்முழுதும், ஞூறும் - அழிப்பதான, கடுங்கனல் - கடுமையாகியநெருப்பை, உட்பொதி - உள்ளேகொண்டுள்ள, சீரைஞ்ஞூறு - நூறுபுடவையானாலும், அவை - அந்த நூறுபுடவையும், சேமஞ்செலுத்துமோ - தாம் வெந்துபோகிறதையன்றிப் பிறருக்கு பத்திரத்தை யுண்டுபண்ணுமா - எ-று. நெருப்புச் சிறிதானாலும் அழிக்கும். 102

புரம்பிழைப்பருந்தீப்புகப்பொங்கியோன்
நரம்பிழைத்தனபாடலினல்கிய
வரம்பிழைக்குமறைபிழையாதவன்
சரம்பிழைக்குமென்றெண்ணுதல்சாலுமோ.

இ-ள். புரம் — திரிபுரத்திலும், பிழைப்புஅரும் — தப்புதற்குக்கூடாத, தீப்புக - நெருப்புவிழ, பொங்கியோன் - கோபங்கொண்ட சிவனாலே, நரம்பு இழைத்தன — உன்கைநரம்பே தந்தியாகக்கொண்டு நீபாடின, பாடலின் - பாட்டுக்காக, நல்கிய — கொடுக்கப்பட்ட, வரம் — வரபலமும் நீ மறைநெறி தப்புதலாலே, பிழைக்கும் — தப்பிப்போகும், மறைபிழையாதவன் - மறைநெறிதப்பாத ஸ்ரீராமனுடைய, சரம் — அம்பு, பிழைக்குமென்று - தப்பிப்போமென்று, எண்ணுதல் — நீ எண்ணியிருத்தல், சாலுமோ — கூடுமா கூடாதே—எ-று. 103

ஈறிலாணுகவெஞ்சலினற்றிரு
நூறிநொய்தினையாகிநுழைதியோ
வேறுமின்னுநகையாம்வினைத்தொழில்
தேறினர்பலர்காமிக்குஞ்செவ்வியோய்.

இ-ள். ஈறுஇல் - ஒருவனுக்குக் கெடாதிருக்கவேண்டிய, நாண் உக - வெட்கம்கெடுதலாக, எஞ்சல்இல் — குறைதலில்லாத, நல்திரு — நல்ல செல்

வத்தையும், நூறி - அழித்துக்கொண்டு, நொய்தினையாகி — எளியவனாகி, நுழைதியோ — வலியாரிடத்திலே செல்லக்கடவையோ, வேறும் - அதையல்லாமல், இன்னும் — இன்னமும், நகையாம் — பிறராலே பழிக்கப்படுதலாம், வினைத்தொழில் — தாம் செய்யுஞ் செய்கைகள், தேறினர்பலர் — இன்னவையாமென்று தெரிந்துள்ள பலராலும், காமிக்கும் — உன் தவச்செய்கையைக் கண்டு வேண்டுவதான, செவ்வியோய் — செவ்வையுள்ளவனே—எ-று. 104

பிறந்துளார்பிறவாதபெரும்பதம்
சிறந்துளார்மற்றுந்தேவர்க்குந்தேவராய்
இறந்துளார்பிறர்யாருமிராமனை
மறந்துளாருளராகிலர்வாய்மையால்.

இ-ள். பிறந்துளார் — உலகத்திலே பிறந்தவர்கள், பிறவாத — இனிப் பிறவாதிருக்கிற, பெரும்பதம் — பெரிய பதவியடைதலிலே, சிறந்துளார்- சிறப்புள்ளவர்களும், மற்றும் — இன்னமும், தேவர்க்கும் — தேவர்களுக்கும், தேவராய் - தேவராகி, இறந்துளார் — மேலானவர்களும், பிறர்யாரும் - உன்னையல்லாத மற்றெல்லோரும், இராமனை — ஸ்ரீராமனை, மறந்துளார் — மறந்தவர்களாய், உளராகிலர் - இருக்கின்றிலர்கள், வாய்மை - இதுமெய்யே.

ஆதலாற்றனரும்பெறற்செல்வமும்
ஓதுபல்கிளையுமுயிரும்பெறச்
சீதையைத்தருகென்றெனச்செப்பினன்
சோதியான்மகனிற்கெனச்சொல்லினன்.

இ-ள். ஆதலால் — ஆகையாலே, தன் — தனது, அரும்பெறல் — பெறுதற்கரிதான, செல்வமும் — பாக்கியமும், ஓது — இன்னஞ்சொல்வதான, பல்கிளையும் — பல உறவும், உயிரும் — பிராணனும், பெற — இறவாமலிணிப்பெறும்படி, சீதையை — சீதாபிராட்டியை, தருகென்று — விட்டுவிடுகவென்று, என — நான்சொல்லும்படி, செப்பினன் - சொன்னன், சோதியான்மகன்- சுக்கிரீவன், நிற்கென — உனக்கென்று, சொல்லினன் — சொன்னானுமார், உனக்குநான் சொல்லும்படி சோதியான்மகன் செப்பினனென்று அனுமார் சொன்னரெனக் கூட்டுக—எ-று. 106

என்றலும்மிவைசொல்லியதெற்கொரு
குன்றில்வாழுங்குரங்குகோலாமிது
நன்றுநன்றெனமாநகைசெய்தனன்
வென்றியென்றென்றுதானன்றிவேறிலான்.

இ-ள். என்றலும் — என்றுசொன்னவுடனே, இவை — இவ்வார்த்தைகள், சொல்லியது - சொன்னது, எற்கு — எனக்கு, ஒருகுன்றின் — ஒருமலையிலே, வாழும் — வாழ்வதான, குரங்குகோல் - குரங்கோ, ஆம் இது — ஆகிய இவ்வார்த்தை, நன்று — நன்றென், மாநகைசெய்தனன் — மிகவுநன்றாயிரு

தென்று மிகவும் சிரித்தானாகி, வென்றியென்றொன்று — ஜயமென்பதொன்றே, தானன்றி - அல்லாமல், வேறிலான்-எவ்விடத்தும்வேறொருதோல்வியை அடையாதராவணன்—எ-று. 107

குரக்குவார்த்தையுமானிடர்கொற்றமும்
இருக்கநிற்கநீயென்கொலடாவிரும்
புரத்தினுட்டருந்தூதுபுகுந்தபின்
அரக்கரைக்கொன்றதஃதுரையாயென்றான்.

இ-ள். குரக்கு - குரங்கினுடைய, வார்த்தையும் — சொல்லும், மானிடர் - மனிதருடைய, கொற்றமும் - வெற்றியும், இருக்கநிற்க - அவைகளிருக்க நீசொல்லவேண்டா, நீ என்கொலடா — நீ யாதுகாரணத்தினாலேயடா, இரும்புரத்தினுள் — இந்தபெரிய வூர்க்குள்ளே, தரும் - ஒருவர்சொல்லிவிடுவதான, தூதுபுகுந்தபின் - தூதுவந்தபின்பு, அரக்கரைக்கொன்றது — ராக்ஷதர்களைக் கொல்லலானது ஆன, அஃது — அதை, உரையாய் — சொல்லு, என்றான் - என்றுகேட்டான்ராவணன்—எ-று. குரக்கு — வார்த்தை, இருக்க — மானிடர், கொற்றம் நிற்க — எனக்கூட்டுக. 108

காட்டுவாரின்மையாற்கடிகாவினை
வாட்டினேனென்னைக்கொல்லவந்தார்களை
வீட்டினேன்பின்னுமென்மையினாலுன்றன்
மாட்டுவந்ததுகாணுமதியினால்.

இ-ள். காட்டுவார் - உன்னை எனக்குக்காட்டுகிறவர்கள், இன்மையால் - ஒருவரும் அகப்படாததினாலே, கடிகாவினை — பரிமளமுள்ளசோலையை, வாட்டினேன் - அழித்தேன், என்னை — அதுநிமித்தமாக என்னை, கொல்லவந்தார்களை — கொல்லவந்தவர்களையெல்லாம், வீட்டினேன்-கொன்றேன், பின்னும் - பின்பும், மென்மையினால் — நான் தூதுவந்தவனென்கிறஎளிமையினாலே, உன்றன்மாட்டு — உன்னிடத்துக்கு, வந்தது - நான்வரலானது, காணுமதியினால் — உன்னைக்கண்டு பேசவேணுமென்கிற கருத்தைக்கொண்டு—எ-று. 109

என்னுமாத்திரத்தீண்டெரிநீண்டுக
மின்னும்வாளெயிற்றன்சினம்வீங்கினான்
கொன்மினென்றனன்கொல்லியர்சேர்தலும்
நின்மினென்றனன்வீடணனீதியான்.

இ-ள். என்னுமாத்திரத்து — என்றுசொல்லுமுன்னே, ஈண்டு — மூளுகிற, எரிநீண்டு — கோபாக்கினி அதிகமாய், உக — பொறிகள்சிந்த, மின்னும் - மின்னுகின்ற, வாள் — கத்திபோலிருக்கிற, எயிற்றன் — பற்களுள்ளவன், சினம் வீங்கினான் - கோபமிக்கவனாகி, கொன்மினென்றனன் — இவனைக் கொல்லுங்களென்று உத்தரவுபண்ணினான், கொல்லியர் — கொல்லவல்லவர்கள், சேர்தலும் — அனுமாரைக்கிட்டும்போது, நீதியான் — நியாயந்தெரிந்தவ

ஞன, வீடணன் – விபீடணனவன், நின்மினென்றனன் — அக்கொலைசெய்யப்போனவர்களை நில்லுங்களென்றுதடுத்தான்—எ-று. 110

ஆண்டெழுந்து நின்றண்ணலரக்கனை
நீண்டகையன்வணங்கினனீதியான்
மூண்டகோபமுறையதன்றாமென
வேண்டுமெய்யுரைபையவிளம்பினான்.

இ-ள். ஆண்டு - அப்போதங்கே, எழுந்து நின்று — எழுந்திருந்துநின்று, அண்ணல்-மிகப்பெருமையுள்ள, அரக்கனை-ராவணனைப்பார்த்து, நீண்டகையன் — நீட்டினகையையுடையவனாகி, வணங்கினன் - வந்தனை செய்து, நீதியான் — நியாயந்தெரிந்த விபீடணன், மூண்ட - உயங்கிப்போதுண்டான, கோபம் - கோபமானது, முறையதன்று - நீதியுள்ளதல்ல, ஆமென-ஆமென்று, வேண்டும் - அவன்விரும்பலாகிய, மெய் உரை — மெய்யானவார்த்தைகள், பைய - அவன்கோபமடக்கும்படிமெள்ள, விளம்பினான் — சொல்லலானான்—எ-று. 111

வேறு

அந்தணனுலகமூன்றுமாதியினறத்திறாற்றல்
தந்தவனன்புக்கான்றதவநெறியுணர்ந்து தக்கோய்
இந்திரன்கருமமாற்றுமிறைவனீயியம்புதூது
வந்தனெனென்றபின்புங்கொல்வியோமறைகள்வல்லோய்.

இ-ள். அந்தணன் — பிராமணனாகி, உலகமூன்று — இந்தத்திரிலோகத்தையும், ஆதியின் — முன்னேதனது, அலத்திறாற்றல் — தருமபலத்தினாலே, தந்தவன் — சிருட்டித்தவன் உன்மேல், அன்புக்கு — பிரீதிகொள்வதாக, ஆன்ற — அமைவதான, தவநெறி — தபோமார்க்கங்களெல்லாம், உணர்ந்து-தெரிந்துசெய்து, தக்கோய் — தகுந்தவனாகி, இந்திரன்கருமம் - இந்திராதிபத்தியத்தையும், ஆற்றும்இறைவன் — செய்யவல்ல அரசன், நீ — நீயானால், இயம்புதூது — ஒருவர்சொல்லச் சொன்னதைச் சொல்லவந்தனென் — நான் வந்தேன், என்ற பின்பும் — என்றுசொன்னதைக்கேட்டும், மறைகள்வல்லோய் — வேதங்களில்வல்ல ராட்சதேந்திரா, கொல்வியோ — கொல்லுவது தகுமோ—எ-று. 112

பூதலப்பரப்பினண்டப்பொதுட்டினுட்புறத்துட்பொய்தீர்
வேதமுற்றியங்குவைப்பினைவேறுவேறிடத்துவேந்தர்
மாதரைக்கொலைசெய்தார்களுளரெனவரினுமவந்த
தூதரைக்கொன்றுளார்கள்யாவரேதொல்லைநல்லோர்.

இ-ள். பூதலப்பரப்பின் — இந்தப் பூமண்டலத்தளவிலும், அண்டப்பொதுட்டினுள் — அண்டமுடிவிலும், புறத்துள் — மற்றையிடங்களிலும், பொய்தீர் — மெய்யான, வேதமுற்று — வேதங்கள் நின்று, இயங்கு — வழங்குவன

வான, வைப்பின் - இடங்களிலும், வேறுவேறு - இன்னம்வெவ்வேறான, இடத்து - இடங்களிலுமுள்ள, வேந்தர் - அரசர்கள், மாதரை - பெண்களை, கொலைசெய்தார்கள் - கொன்றவர்கள், உளரென - உண்டென்று, வரினும் - சொல்வருவதானாலும், வந்த - ஒருவனனுப்பவந்த, தூதரை-தூதனை, கொன்றுளார்கள் - கொன்றவர்கள், தொல்லைநல்லோர்-முன்னுள்ளநீதிமான்களில், யாவர் - யாருண்டு ஒருவருமில்லை—எ-று. 113

பகைப்புலனணுகியுய்த்தார்பகர்ந்ததுபகர்ந்துபற்றார்
மிகைப்புலனடக்கிமெய்ம்மைவிளம்புதல்விரதம்பூண்ட
தகைப்புலக்கருமத்தோரைக்கோறலிற்றக்கார்யார்க்கும்
நகைப்புலன்பிறிதுண்டாமேநங்குலநவையுண்டாமே.

இ-ள். பகைப்புலன் - சத்துருக்ஷேத்திரத்துக்கு, நணுகி - வந்து, உய்த்தார் - தம்மை அனுப்பினவர்கள், பகர்ந்தது - சொன்னதை, பகர்ந்து - சொல்லி, பற்றார் - சத்துருக்கள், மிகைப்புலன் - அதிகமானபோது, அடக்கி - அவர்களை அடங்கப்பண்ணி, மெய்மை - உள்ளகாரியத்தை, விளம்புதல் - சொல்லுகிறதையே, விரதம்பூண்ட — தமக்கு உறுதிப்பொருளாகக் கொண்டுள்ள, தகைப்புலம் - பிறரிரங்குதற்குத்தகுதியான, கருமத்தோரை - காரியக்காரரான தூதரை, கோறலில் - கொல்லுதலைவிட, தக்கார்-நல்லோர்கள், யார்க்கும் - எல்லாருக்கும், நகைப்பலன் - சிரித்தற்கிடம், பிறிது - வேறே, உண்டானே - உள்ளதுண்டா, நங்குலம்-அப்படிக்கொல்ல நமதுகுலம், நவையிற்று - தோஷமுள்ளது, ஆமே - ஆகுமா, தோஷமில்லாத நாம் தோஷஞ்செய்யலாகாதென்கிறான் செய்தால் தோஷமுள்ளதாம் நமதுகுலமெனவுமாம்—எ-று. 114

முத்தலையெஃகன்மற்றைமுராந்தகன்முனிவன்முன்னா
அத்தலைநம்மைநோனுவமரர்க்குநகையுற்றுமால்
எத்தலையுலகங்காக்கும்வேந்தநீவேற்றோரேவ
இத்தலையெய்தினானைக்கொல்லுதலிழுக்கமின்னும்.

இ-ள். முத்தலை - மூன்றுதலையையுடைய, எஃகன் - சூலாயுதமுள்ள சிவனும், மற்றைமுராந்தகன் - மற்றொருவிஷ்ணுவும், முனிவன்-பிரமனும், முன்னா - முதலாக, அத்தலை - அந்தக்கட்சியில், நம்மை - நம்முடையசெல்வத்தைக்கண்டு, நோனு - பொறாமைகொள்ளுகிற, அமரர்க்கும் - தேவர்களுக்கும், நகையிற்றாம் - சிரித்தற்கிடமாம், எத்தலை - எவ்விடத்துமுள்ள, உலகை - உலகங்களையெல்லாம், காக்கும் - ஆளவல்ல, இறைவனீ-அரசனனீ, வேற்றோர் - நமக்கன்னியரானவர்கள், ஏவ - அனுப்ப, இத்தலை - இந்தநம்மிடத்துக்கு, எய்தினானை - வந்தவொருவனை, கொல்லுதல் - கொல்லுகிறது, இழுக்கம் - தவறும், இன்னும் - இன்னமும்—எ-று. 115

இளையவடன்னைக்கொல்லாதிருசெவிமூக்கொடீர்ந்து
விளைவுரையென்றுவிட்டார்வீரராய்மெய்ம்மையோர்வார்

களைதியேலாவிநம்பாலிவன்வந்துகண்ணிற்கண்ட
அளவுரையாமற்செய்தியாதியென்றமையச்சொன்னான்.

இ-ள். இளையவடன்னை — உன் தங்கையை, கொல்லாது — கொல்லாமல், இருசெவி — இரண்டுகாதுகளையும், மூக்கொடு — மூக்குடனே, ஈர்ந்து — அறுத்து, விளைவு — எங்களாலானதை, உரையென்று — சொல்லென்று, விட்டார் — அனுப்பினார்கள், வீரராய் — வீரத்தன்மையுள்ளவர்களாய், மெய்ம்மை — மேலுளதாவதை, ஓர்வார் — தெரியவேண்டின அவ்விருவர், ஆவி — இவனுயிரை, களைதியேல் — வாங்குவையேயானால், நம்பால் — நம்மிடத்தில், இவன்வந்து — இவனொருவனும்வந்து, கண்ணிற்கண்ட — கண்ணாலேகண்ட, அளவு — அளவை, உரையாமல் — இவன்போய்ச் சொல்லாமல், செய்தியாதி — செய்தாயாகிறாய், என்றமைய — என்றவன்கோபமடங்க, சொன்னான் — சொல்லினான் — எ-று. 116

வேறு

நல்லதுரைத்தாய்நம்பியிவனவைசெய்தானேயானாலும்
கொல்லல்பழுதேபோயிடைநீகூறிக்கொணர்திகடிதென்னாத்
தொல்லைவாலைமூலமறச்சுட்டுநகரைச்சூழ்போக்கி
எல்லைகடக்கவிடுமின்களென்றானின்றாரிரைத்தெழுந்தார்.

இ-ள். நல்லது — நல்லகாரியமே, உரைத்தாய் — சொன்னாய், நம்பி — உத்தமகுணமுள்ளவனே, இவன் — இந்தக்குரங்கானவன், நவைசெய்தானே — குற்றஞ்செய்தவனே, ஆனாலும் — ஆயினும், கொல்லல்பழுதே — கொல்லுகிறதுதோஷமே, போயிடைநீ — குரங்கேநீ உன்னிடத்துக்குப்போய், கூறி — அவ்விருவருக்குஞ்சொல்லி, கொணர்தி — கூட்டிக்கொண்டுவா, கடிது — விரைவில், என்னா — என்று, தொல்லை — இதனதுபழையதான, வாலை — வாலானதை, மூலமற — அடியோடுபோக, சுட்டு — நெருப்பாலேசுட்டு, நகரை — நம்மூரை, சூழ்போக்கி — சுற்றிவந்து, எல்லைகடக்க — நம்மூரளவுநீங்க, விடுமின்கள் — விடுங்கள், என்றான் — என்றுவிடைகொடுத்தானிராவணன், நின்றார் — அங்குநின்ற ஊழியக்காரர்கள், இரைத்து — ஆரவாரித்து, எழுந்தார் — எழுந்திருந்தார்கள் — எ-று. 117

ஆயகாலத்தயன்படையோடிருப்பலாகாதனலிடுதல்
தூயபாசமெனப்பலவுங்கொணர்ந்துபிணிமின்றோளென்னா
மேயதெய்வப்படைக்கலத்தைவிட்டானமரர்போர்வென்றான்
ஏயனாமுன்னிடைபுக்குத்தொடைவன்கயிற்றாற்பிணித்தீர்த்தார்.

இ-ள். ஆயகாலத்து — அப்போது, அயன்படையோடிருப்ப - பிரமாஸ்திரக் கட்டோடிருக்கச்செய்தே, அனலிடுதலாகாது — நெருப்பாற்சுடலாகாது, தூயபாசமென — நல்லகெட்டிக்கயிறென்று, பலவும் — கட்டத்தக்கவைகளெல்லாம், கொணர்ந்து — கொண்டுவந்து, தோள்பிணிமினென்ன - இதன்

தோள்களைக் கட்டுங்களென்று, மேய — அதைக்கட்டியிருக்கிற, தெய்வப் படைக்கலத்தை — பிரமாஸ்திரத்தை, விட்டான் — அவிழ்த்துக்கொண்டான்; அமரர்போர் — தேவர்கள் பலத்தை, வென்றான்-வென்றுவந்த இந்திரசித்து, ஏயெனுமுன் — உம்மென்னுமளவில், இடைபுக்கு — அனுமாரிடத்தில்வந்து, தொடைவன் கயிற்றால்-ஒன்றோடொன்று முடிந்த அநேகம் வலிய கயிற்றினாலே, பிணித்து — கட்டி, ஈர்த்தார் — இழுத்தார்கள்—எ-று. 118

நாட்டினகரினடுவுள்ளகயிறுநவிலுந்தகைமையவே
வீட்டினூசனெடும்பாசமற்றதேரும்விசிதுறந்த
மாட்டும்புரவியாயமெலாமருவிவாங்குந்தொடையழிந்த
பூட்டும்வல்லிமூட்டோடும்புரசையிழந்தபோர்யானை.

இ-ள். நாட்டில் — வெளிப்புறங்களிலும், நகரில் — உள்ளூரிலும், நடுவுள்ள — இன்னம் நடுயிடங்களிலுமுள்ள, கயிறு — கயிறுகளெல்லாம் முடிந்தாயிற்றென்று, நவிலும் — தகைமையவே சொல்லத்தக்கதும் வேணுமோ, வீட்டின் — வீடுகளிலுள்ள, ஊசனெடும்பாசம் — நீண்ட ஊசற்கயிறுகளெல்லாம், அற்ற — முடிந்தாயின, தேரும் — தேர்களும் அவற்றின், விசி — கட்டுக்கயிறுகள், துறந்த — முடிந்து இல்லாமையாயின, மாட்டும் — கட்டத்தக்க, புரவியாயமெல்லாம் — குதிரைப்பந்திகள் முழுதும், மருவிவாங்கும் — அவைகளைக்கட்டி அவிழ்க்கத்தக்க, தொடை — கயிறுகள், அழிந்த — முடிந்து இல்லையாயின, பூட்டும் — காலிலே பூட்டுகிற, வல்லி — கயிறும், மூட்டோடும் — விரியைச்சேர்த்து மூட்டுகிற கயிற்றுடனே, புரசை — கழுத்திலுள்ள கயிறுகளும், இழந்த-போதாமல் முடிதலாலே இழந்ததாயின, போர்யானை - வலியானைகள்—எ-று. 119

மண்ணிற்கண்டவானவரைவலியிற்கவர்ந்தவரம்பெற்ற
எண்ணற்கரியவேனையரையிகலிற்பறித்ததமக்கியைந்த
பெண்ணிற்கிசையுமங்கலத்திற்பிணித்தகயிறேயிடைபிழைத்த
கண்ணிற்கண்டவன்பாசமெல்லாமிட்டுக்கட்டினார்.

இ-ள். மண்ணிற்கண்ட — மண்ணுலகிலேகண்டுபறித்த கயிறுகளும், வானவரை — தேவர்களிடத்திலே, வலியில் — பலாத்கரித்து, கவர்ந்த - கொண்டைகயிறுகளும், வரம்பெற்ற — தாங்கள் வரத்தாலேபெற்ற கயிறுகளும், எண்ணற்கரிய - எண்ணுதற்குக்கூடாத, ஏனையரை - மற்றுமுள்ள அசுரர்கள் முதலியோர்கள், இகலில் — சண்டையிலே, பறித்த — பிடுங்கிக்கொண்டுவந்த கயிறுகளும், தமக்கு இயைந்த — தங்களுக்கு நேரான, பெண்ணிற்கு — பெண்களுக்கு, இசையும் — தகுதியான, மங்கலத்தில் - நன்மைக்காக, பிணித்த-கட்டின, கயிறே — தாலிக்கயிறே, இடைபிழைத்த — அப்போது தப்பினவை, கண்ணிற்கண்ட — தங்கள் கண்களிலேகண்ட, வன்பாசமெல்லாம் — வலிய கயிறுகள் முழுதும், இட்டு — சேர்த்து, கட்டினார் — அனுமாரைக் கட்டினார்கள்—எ-று. தாலிக்கயிறுதவிர முன்சொன்ன கயிறுகளெல்லாங்கொண்டு கட்டினார்களென்க. 120

கடவுட்படையைக்கடந்தறத்தினிலைகடந்தேனாகாமே
விடுவித்தளித்தார்தெவ்வரேவென்றேனன்றோவிவர்வென்றி
சுடுவிக்கின்றதிவ்வூரைச்சுடுகென்றுரைத்ததுணிவென்று
நடுவுற்றமையவுறநோக்கிமுற்றுமுவந்தானவையற்றான்.

இ-ள். கடவுட்படையை – திவ்வியாஸ்திரத்தை, கடந்து - அவமதித்து, அறத்தினிலை – தருமநிலையை, கடந்தேன் – தப்பிநடந்தேன், ஆகாமே- ஆகாமல், தெவ்வரே – பகைவர்தாமே, விடுவித்து – விடுதல்செய்து, அளித்தார் – எனக்குப் பலங்கொடுத்தார்கள், வென்றேனன்றோ-ஆகையால்நானே ஜெயங்கொண்டேனல்லவோ, இவர்வென்றி - இவர்கள் ஜெயங்கொண்டதாயென்னை, சுடுவிக்கின்றது – சுடும்படியெண்ணுகிறது, இவ்வூரை – இந்தவூர் முழுதும், சுடுகென்று – நீயே சுட்டுப்போவென்று, உரைத்த – எனக்குச் சொன்ன, துணிவென்று – தெளிவுபொருளென்று, நடுவுற்று - அவர்கள் நடுவேநின்று, அமைய – பொருந்த, உற – நன்றாக, நோக்கி — ஆலோசித்து, முற்றுமுவந்தான் – முழுதுஞ் சந்தோஷமாயினார், நவையற்றான் – ஒரு தோஷமுமில்லாத அனுமார்—எ-று. 121

நொய்யபாசம்புறம்பிணிப்பநோன்மையிலன்போலுடனுணங்கி
வெய்யவரக்கர்புறத்தலைப்பவீடுமுணர்ந்தேவிரைவில்லா
ஐயன்விஞ்சைதனையறிந்துமறியாதான்போல்விஞ்சையெனும்
பொய்யைமெய்போனடிக்கின்றயோகிபோன்றான்போகின்றான்.

இ-ள். நொய்ய – மிகவும் அல்பமான, பாசம் – கயிறுகளான ஆசாபாசம், புறம்பிணிப்ப — வெளியேசூழ, நோன்மையிலன்போல் – அப்பாசங்களை அறுத்துக்கொள்ளப் பலமில்லாதவன்போல், உடல்நுணங்கி – உடம்புதுவண்டு, வெய்ய அரக்கர் - கொடிய ராக்ஷதர்கள், புறத்தலைப்ப – வெளியே நின்று இவருடம்பெல்லாம் வருத்த, வீடும் — அவைகளை விடுவித்துக்கொள்ளவும், உணர்ந்தே – தெரிந்து, விரைவில்லா-அவசரப்படாமல், ஐயன்-அனுமாரானவர், விஞ்சைதனை — வித்தைகளையெல்லாம், அறிந்தும் – தெரிந்தவனாகியும், அறியாதான்போல் – தெரியாதவன்போல், அவிஞ்சையெனும்- அஞ்ஞானமென்கிற, பொய்யை – அநித்தியப்பொருளை, மெய்போல் - நித்தியப்பொருள்போலெண்ணி; நடிக்கின்ற - கூத்தாடுகிற, யோகிபோன்றான்- ஞானியேபோலாகி, போகின்றான் – இழுக்கிறவர்கள்பின் போகிறார்-எ-று. விஞ்சை – ஞானம். 12.

வேந்தன்கோயில்வாயிலொடுவிரைவிற்கடந்துவெள்ளிடையிற்
போந்துபுறநின்றிறைக்கின்றபொரைதீர்மறவர்புறஞ்சுற்ற
ஏந்துநெடுவால்கிழிசுற்றிமுற்றுந்தோய்த்தாரிழுதெண்ணெய்
காந்துகடுந்தீக்கொளுத்தினார்த்தாரண்டங்கடிகலங்க.

இ-ள். வேந்தன் – இராவணனுடைய, கோயில்வாயிலொடு – அரண்மனைவாசலும், விரைவில் – அதிசீக்கிரத்திலே, கடந்து – தாண்டி, வெள்ளி

டையில் — வெறு வெளியிடத்திலே, போந்து — வந்து, புறநின்று - வெளியே நின்று, இரைக்கின்ற — சத்திக்கிற, பொறைநீர் — பொறுமையில்லாத, மறவர் — வீரர்கள், புறஞ்சுற்ற - பக்கமெல்லாஞ்சூழ, எந்து — கயிறுசுற்றித் தூக்கிக்கொண்டுவருகிற, நெடுவால் - நீண்டவாலிலே, கிழிசுற்றி — சீலைகளைக் கிழித்துக்கயிற்றின்மேல்சுற்றி, இழுது-விளக்குநெய்யும், எண்ணெய்-எள்ளுநெய்யும், முற்றும் — வால்முழுதும், தோய்த்தார் - துவைத்தார்கள் பின்பு, காந்து — கொதிப்பதான, கடுந்தீ — கடியநெருப்பை, கொளுத்தினர் — பற்றவைத்தார்கள், அண்டம் — அண்டமுழுதும், கடிகலங்க — தமது நிலைகுலைவதாக, ஆர்த்தார் — கெர்ச்சித்தார்கள்—எ-று. 123

ஒக்கவொக்கவுடன்விசித்தவுலப்பிலாதவுரப்பாசம்
பக்கம்பக்கமிருகூறாய் நூறுயிரவர்பற்றினூற்
புக்கபடைஞர்புடைகாப்போர்புணரிக்கணக்கர்புறஞ்செல்வோர்
திக்கினளவாலயனின்றுகாண்போர்க்கெல்லைதெரிதரிதால்.

இ-ள், ஒக்க ஒக்க — கூடக்கூட, உடன்விசித்த — சேர்த்துக்கட்டின, உலப்பிலாத — அறாத, உரம் — பலமுள்ள, பாசம் — கயிற்றினை, பக்கம்பக்கம்- இரண்டு பக்கமும், இருகூறாய் — இரண்டுபிரிவாக, நூறுயிரவர்கள் - லட்சம் பேர்கள், பற்றினூர் — பிடித்திழுத்தார்கள், புக்க — அவர்களோடுகூடவந்த, படைஞர் — ஆயுதமுள்ளவர்களாக, புடை - அருகேநின்று, காப்போர்-காத்துவருகிறவர்கள், புணரிக்கணக்கர் — சமுத்திரமென்னும் ஓரளவுள்ளவர்கள், புறஞ்செல்வோர் — அவர்களைச் சூழ்ந்துவருகிறவர்கள், திக்கினளவு — அந்த வீதியினளத்தளவு, அயல்நின்று — தூரநின்று, காண்போர்க்கு — பார்ப்பவர்களுக்கு, எல்லை — அளவு, தெரிவு அரிது — தெரிந்துசொல்ல முடியாது-எ-று. சமுத்திரம் — பத்துலக்ஷங்கோடி. 124

அந்தநகருங்கடிகாவுமழிவித்தக்கன்முதலாயோர்
சிந்தநூறிச்சீதையொடும்பேசிமனிதர்திறஞ்செப்ப
வந்தகுரங்கிற்றதனைவம்மின்காணவம்மென்று
தந்தந்தெருவும்வாயிறொறும்யாருமறியச்சாற்றினூர்.

இ-ள். அந்தநகரும் - அந்தவூரையும், கடிகாவும் — காவலுள்ள சோலையையும், அழிவித்து — அழியச்செய்து, அக்கன் - அக்ஷன், முதலாயோர்- முதலானவர்களெல்லாம், சிந்த — அழிய, நூறி — அழித்து, சீதையொடும்- சீதையுடனும், பேசி — பேச்சாடி, மனிதர்திறம் — மனிதர் வல்லமையை, செப்பவந்த — சொல்லவந்த, குரங்கிற்கு — குரங்கானதுக்கு, உற்றதனை-உண்டானபடியை, காணவம்மின் — பார்க்கவாருங்கள், வம்மென்று - பார்க்கவாருங்களென்று, தந்தந்தெருவும் — தங்கள்தங்கள் வீதிகளிலும், வாயில்தொறும் — வாசல்களிலும்நின்று, யாருமறிய — எல்லாருமறிவதாக, சாற்றினூர்- பறையறைந்தார்கள்—எ-று. 125

ஆர்த்தாரண்டத்தப்புறத்துமறிவிப்பார்போலங்கோடிங்
கீர்த்தார்முரசமெற்றினாரிடித்தார்தெழித்தாரெம்மருங்கும்
பார்த்தாரோடிச்சானகிக்கும்பகர்ந்தாரவளுமுயிர்பதைத்தாள்
வேர்த்தாளுலந்தாள்விம்மினாள்விழுந்தாளழுதாள்வெய்துயிர்த்தாள்

இ-ள். ஆர்த்தார் — கெர்ச்சித்தார்கள், அண்டத்தப்புறத்தும் - இந்த அண்டத்துக்கப்பாலிலும், அறிவிப்பார்போல்-தெரியச் செய்வாரைப்போல், அங்கொடு— அந்த வீதியுடனே, இங்கு— இந்த வீதியிலும், ஈர்த்தார்-இழுத்தார்கள், முரசமெற்றினார் —பேரிகையடித்தார்கள், இடித்தார் - இடிபோல முழங்கினார்கள், தெழித்தார் — அதட்டினார்கள், எம்மருங்கும் – எந்தப் பக்கங்களும், பார்த்தார் — அனுமாரைக்கண்டவர்கள், ஓடி - ஓடிப்போய், ஜானகிக்கும்—சீதைக்கும், பகர்ந்தார்—தெரியச்சொன்னார்கள், அவளும் - அந்தச் சீதையும், உயிர்பதைத்தாள் — ஆவித்துள்ளினவளாகி, வேர்த்தாள் — உடம்பெல்லாம் வேர்த்தாள், உலந்தாள்—கொதித்தாள், விம்மினாள் — துக்கித்தாள், விழுந்தாள் — கீழேவிழுந்தாள், அழுதாள் — அழுதவளாகி, வெய்து வெப்பங்கொண்டு. உயிர்த்தாள் - சுவாசம்விட்டாள்—எ-று. 126

தாயேயனையகருணையான்றுணையேயேதுந்தகவில்லா
நாயேயனையவல்லரக்கர்நலியக்கண்டானல்காயோ
நீயேயுலகுக்கொருசான்றுநிற்கேதெரியுங்கற்பதனில்
றாயேனென்னிற்றொழுகின்றேனெரியேயவனைச்சுடலென்றாள்.

இ-ள். தாயே அனைய – தாய்க்கே ஒப்பாக என் விஷயத்திலே, கருணையான் – இரக்கமுள்ள அனுமானுக்கு, துணையே – சகாயமானவனே, ஏதும்-எவ்வளவேனும், தகவில்லா—யோக்கியதையில்லாத, நாயே அனைய - நாய்க்கே ஒப்பான, வல்லரக்கர் – வலியராட்சதர்கள், நலிய – உன் துணைவன் பிள்ளையை வருத்தஞ்செய்ய, கண்டால்—நீ கண்கொண்டுபார்த்தால், நல்காயோ — இரக்கஞ்செய்யமாட்டாயா, உலகுக்கு — இந்த உலகத்துக்கு, ஒரு சான்று – ஒருசாக்ஷி, நீயே —நீதானே, நிற்கே – உனக்கே, தெரியும் —என்னைத் தெரிவதாம் ஆகையால், கற்பதனில் — மனவுறுதியினாலே, தூயேனென்னில்— நான் பரிசுத்தையேயானால், தொழுகின்றேன் - இதோ உனக்கொருவணக்கஞ்செய்கிறேன், எரியே – ஓ அக்கினிதேவனே, அவனை-அந்த அனுமானை, சுடல் – சுடாதை, என்றாள் —என்று நியமித்தாள், அக்கினிக்குச் சகாயன் வாயுவாகலாலே வாயுபுத்திரனுக்கு நீ துணையாகவேண்டுமென்று துணையேயென்றாள் என்க—எ-று. 127

வேறு

வெளுத்தமென்னகையவள்விளம்புமேல்வையின்
ஒளித்தவெங்கனலவனுள்ளமுட்கினான்
தளிர்த்தனமயிர்புறஞ்சிலிர்ப்பத்தண்மையால்
குளிர்த்தவக்குரிசில்வாலெலன்புகூரவே.

இ-ள். வெளுத்த - வெள்ளையாய், மென் - மிருதுவான, நகையவள் - பல்வரிசைகளுள்ள சீதாபிராட்டி, விளம்பும் - அப்படிச்சொல்லுகிற, எல்லையின் - சமயத்திலே, ஒளித்த - ஒளியோடுகூடின, வெங்கனலவன் - வெவ்விய அக்கினிதேவன், உள்ளம் - தன்மனது, உட்கினன் - அஞ்சினனாக, தளித்தனமயிர் - அனுமாருரோமங்கள் கூச்சமுள்ளனவாகி, புறம் - உடம்பெல்லாம், சிலிர்ப்ப - சிலிர்த்தலுண்டாக, தண்மையால் - அந்த மிகுந்த சீதளத்தினாலே, அக்குரிசில் - அந்த அனுமாருடைய, வால் - வால்முழுதும், குளிர்த்த - குளிர்ந்ததாயின, என்பு - எலும்பளவும், கூர - அதிகமான குளிருண்டாயினது—எ-று. 128

வேறு

மற்றினிப்பலவென்வேலேவடவனல்புவியளாய
கற்றையங்கனலிமற்றைக்காயத்தீமுனிவர்காக்கும்
முற்றுறுமும்மைச்செந்தீமுப்புரமுருங்கச்சுட்ட
கொற்றவனெற்றிக்கண்ணின்வன்னியுங்குளிர்ந்தவன்றே.

இ-ள். மற்றினிப்பலஎன் - இன்னமுமினிப்பல சொல்லவேண்டுவதென்ன விருக்கின்றது, வேலே - கடலின்மேலுள்ள, வடவனல் - வடவாக்கினியும், புவியளாய - பூமியிலேகூடின, கற்றையங்கனலி - பௌமமென்னும் சுவாலாக்கினியும், மற்றை - அதையல்லாத, காயத்தி - ஔதாரியமென்னுமக்கினியும், முனிவர் - ருஷிகள், காக்கும் - பரிபாலிக்கின்ற, முற்றுறு - முடிவுபெற்றுள்ள, மும்மைச்செந்தீ - காருகபத்தியம் ஆகவநீயம் தெக்ஷணாக்கினியென்னு மூன்றக்கினியும், முப்புரம் - திரிபுரங்களும், முருங்க - வேவ, சுட்ட - தகித்த, கொற்றவன் - சிவனுடைய, நெற்றிக்கண்ணின் - நெற்றிக்கண்ணிலேயுள்ள, வன்னியும் - அக்கினியும், குளிர்ந்த - குளிர்ந்துபோயின—எ-று. 129

அண்டமுங்கடந்தானங்கையனலியுங்குளிர்ந்ததங்கிக்
குண்டமுங்குளிர்ந்தமேகத்துருமெலாங்குளிர்ந்தகொற்றச்
சண்டவெங்கதிரவாகித்தழங்கிருள்விழுங்குந்தாவில்
மண்டலங்குளிந்தமீளாநகரமுங்குளிர்ந்தமாதோ.

இ-ள். அண்டமும் - ஆகாயத்தையும், கடந்தான் - வென்ற சிவனுடைய, அங்கை - அழகிய கையிலுள்ள, அனலியும் - நெருப்பானமழுவும், குளிர்ந்தது - குளிர்ந்துபோயிற்று, அங்கிக்குண்டமும் - யக்கிய குண்டங்களெல்லாம், குளிர்ந்த - குளிர்ச்சியாயின, மேகத்து - மேகங்களிலுள்ள, உருமெலாம் - இடிகள் முழுதும், குளிர்ந்த - குளிர்ச்சியாயின, கொற்றம் - வெற்றியும், சண்டம் - வேகமுமுள்ள, வெங்கதிரவாகி - வெவ்விய கிரணமுடையதாகி, தழங்கு - சத்திக்கின்ற, இருள் - இருட்டை, விழுங்கும் - கபளீகரிக்கின்ற, தாவில் - அழிவில்லாத, மண்டலம் - சூரியமண்டலமும், குளிர்ந்த - குளிர்ந்ததாயிற்று, மீளா - ஆறுத, நரகமும் - நரகமுங்கூட, குளிர்ந்த - குளிர்ச்சியாயின—எ-று. கடத்தல் எட்டாதுசேறுதல் தழங்கல் மொய்த்தல். 130

வெற்பினுலியன்றதன்னமேனியைவிழுங்கிவெந்தீ
நிற்பினுஞ்சுடாதுநின்றநீர்மையைநினைவினேக்கி
அற்பினாருதசிந்தையநுமனுஞ்சனகன்பாவை
கற்பினுலியன்றதென்பான்பெரியதோர்களிப்பனுனன்.

இ-ள். வெற்பினுல் – மலையினுலே, இயன்றது - செய்ததை, அன்ன - ஒப்பான, மேனியை – அனுமாருடம்புமுழுதும், விழுங்கி – மறையமூடி, வெந்தீ – அந்த வெவ்வியநெருப்பு, நிற்பினும் – நின்றாலும், சுடாது – தம்மைச்சுடாமல், நின்ற - இருக்கிற, நீர்மையை – தன்மையைபடியை, நினைவில் – தமதெண்ணத்திலே, நோக்கி – தெரிந்து, அற்பின் — அன்பாகிய, நார் — கயிறு, அருத – அறுபடாத, சிந்தை - மனமுள்ள, அநுமனும் – அனுமார், சனகன்பாவை – சனககுமாரியான பிராட்டியினது, கற்பினுல் – பதிவிரதாநிலையினுலே, இயன்றது - இப்படிச் சுடாதிருக்கலாயிற்று, என்பான் - என்றெண்ணினராகி, பெரியதோர் – பெரிதான ஒப்பற்ற, களிப்பன் – சந்தோஷமுள்ளவர் ஆனன் — ஆயினன் — எ-று. 131

அற்றையவ்விரவிற்றான்றனறிவினுன்முழுதுமுன்னப்
பெற்றிலனெனினுமாண்டோன்றுள்ளதுபிழையுருமே
மற்றுறுபொறிமுன்செல்லமறைந்துசெல்லறிவுமானக்
கற்றிலாவரக்கர்தாமேகாட்டலிற்றெரியக்கண்டான்.

இ-ள். அற்றை அவ்விரவில் – அன்று அந்த ராத்திரியிலே, தான் - தாமே, தன் அறிவினுல் – தமது புத்தியினுலே, முழுதும் – அந்த ஊர்முழுதும், உன்னப்பெற்றிலன் – நிதானிக்கப்பெறுதலில்லாதவரே, எனினும் - என்றாலும், ஆண்டு – அவ்வூரிலப்போது, ஒன்றுளதானது, பிழையுருமே - தப்பாமல், மற்றுறு - வேறுபாடுள்ள, பொறி – இந்திரியங்கள், முன்செல - முன்னேபோக, மறைந்து – பின்னே மறைவாகி, செல-போகின்ற, அறிவு மான – அறிவுக்குநேராக, கற்றிலா – மூடர்களான, அரக்கர் – ராக்ஷதர்கள், தாமே — தாங்களே, காட்டலில் — ஊர்முழுதுங்காட்டுகிறதினுலே, தெரிய - நன்றாக, கண்டான் - பார்த்தார் — எ-று. 132

முழுவதுந்தெரியநோக்கிமுற்றுமூர்முடிவிற்சென்றான்
வழுவுறுகாலமீதென்றெண்ணினன்வலிதிற்பற்றித்
தழுவினனிரண்டுநூறாயிரம்புயந்தடக்கைதாம்போ
டெழுவெனநாலவண்மேலெழுந்தனன்விழுந்தவெல்லாம்.

இ-ள். முழுவதும் – அப்படி அந்த ஊர்முழுதும், தெரிய — தமக்குத் தெரிவதாக, நோக்கி – பார்த்து, முற்றும்-இனித் தம்மைவிடுகிறதை முடிக்கின்ற, ஊர்முடிவில் — அந்தவூர்க்கடையிடத்திலே, சென்றான் — போயின அனுமார், வழுவுறுகாலம் — இனி நீங்கிப்போங்காலம், ஈதென்று – இதுதானென்று, எண்ணினன் – தெரிந்தவராய், வலிதில் – தமது பலாத்காரத்தினுலே, பற்றி - இருபுறத்துக் கயிற்றையும்பிடித்து, தழுவினன் - இருபுற

விலாவிலுஞ் சேரக்கொண்டு, இரண்டு நூறுயிரம் – இரண்டுபிரிவானலட்சம், புயம் – அரக்கர்கள் தோள்களும், தடக்கை - நீண்டகைகளும், தாட போடும் - இருபுறத்துக்கயிற்றுடனே, எழுவென – எழுத்தடிபோல, நால தொங்க, விண்மேலெழுந்தனன் – ஆகாயத்திலே உயரக்கிளம்பினர், விழுந் எல்லாம் அப்படி எழுந்தவுடனே எல்லாம் கீழேவிழுந்தன—எ-று. 133

இற்றவாளரக்கர்நூறுயிரவருமிழந்ததோளார்
முற்றினுருலந்தாரையின்மெய்ம்பினேடுடலைமூழ்கச்
சுற்றியகயிற்றினேடுந்தோன்றுவானரவின்சுற்றம்
பற்றியகலுழனென்னப்பொலிந்தனன்விசும்பின்பாலான்.

இ-ள். இற்ற – இறந்துமுடிந்த, வாள் – கத்திகள்பிடிக்கிற, அரக்கர் ராக்ஷதர்கள், நூறுயிரவரும் - லட்சம்பேரும், இழந்த – ஒடிந்த, தோளார் தோள்களையுடையராய், முற்றினர் – முடிந்து, உலந்தார் – போனர்கள் ஐயன் - அனுமாருடைய, மொய்ம்பினேடு – தோள்களுடனே, உடலை - சரீரத்தையும், மூழ்க – நிரம்ப, சுற்றிய – சூழ்ந்துள்ள, கயிற்றினேடும் – கயிற்றுடனே, தோன்றுவான் – பிறருக்குக் காணப்படுகிறதெப்படியென்றால் அரவின்சுற்றம் – பாம்பினங்களெல்லாங்கூடி, பற்றிய - பிடித்துச்சூழ்ந்த கலுழனென்ன - கருடன்போல், பொலிந்தனன் – விளங்கினன், விசும்பின் பாலான் – ஆகாயத்திலே தோன்றுகிறதினலே—எ-று. 134

துன்னலர்புரத்தைமுற்றுஞ்சுடுதொழிற்றொல்லையோனும்
பன்னினபொருளுநாணப்பாதகரிருக்கைபற்ற
மன்னனைவாழ்த்திப்பின்னைவயங்கெரிமடுப்பனென்னுப்
பொன்னகர்மீதேதன்போர்வாலினைப்போகவிட்டான்.

இ-ள். துன்னலர்புரத்தை – பகைவர்திரிபுரத்தை, முற்றும் - முழுதும், சுடுதொழில் – எரிக்குஞ் செய்கையையுடைய, தொல்லையோனும் – பழைய பரமசிவனும், பன்னின – அச்சிவனலே எரிக்கப்பட்டதென்று சொல்லலான, பொருளும் – திரிபுரமும், நாண – வெட்கத்தையடையும்படி, பாதகர் – அந்தப் பாவிகளான ராக்ஷதர், இருக்கை – இருக்குமூரிலே, பற்ற- நெருப்புப்பிடிக்க, மன்னனை – ஸ்ரீராமனை, வாழ்த்தி – தோத்திரஞ்செய்து கொண்டு, பின்னை - பின்பு, வயங்கு – எரிகிற, எரி - நெருப்பை, மடுப்பெனென்று – மூட்டுகிறேனென்று, பொன்னகர்மீதே – அந்தப் பொன்மயமான ஊர்மேலே, தன்போர்வாலினை – தமது பலமானவாலை, போகவிட்டான் - நீள நீட்டினர்—எ-று. 135

தன்னிறைக்குறுகண்வெய்யோர்தாமியற்றலுங்கேட்டின்னே
அன்னவர்க்கிறுதியாகவணிநகரழிப்பலென்னுச்
செந்நிறைச்சிகையவெம்போர்மழுப்பின்னச்சேறலொக்கும்
அன்னிறத்தண்ணலாதனனல்கெழுகொற்றநீள்வால்.

இ-ள். தன்னிறைக்கு - தன்னை ஆளுகிற சிவனுக்கு, உறுகண் - மலையைப் பிடுங்குதல் முதலான துன்பங்கள், வெய்யோர்தாம் - ராக்ஷதரானவர்கள், இயற்றலும் - செய்துள்ளது முதலியவைகளை, கேட்டு - தெரிந்து, இன்னே - இப்போதே, அன்னவர்க்கு - அந்த ராக்ஷதர்களுக்கு, இறுதியாக - முடிவுண்டாக, அணிநகர் - அழகிதான அவ்வூரை, அழிப்பல் என்று - அழித்துவிடுகிறேனென்று, செந்நிறம் - சிவந்தநிறமுள்ள, சிகைய - சுவாலையையுடைய, வெம்போர் - வெப்பத்திலதிகபலமுள்ள, மழு - மழுவானது, பின்னர் - அனுமார்பின்தொடர்ந்து, சேறல் - செல்லுதலை, ஒக்கும் - ஒப்பென்னலாம், அல் - இருண்டமேகம்போன்ற, நிறத்து - நிறத்தையுடைய, அண்ணல் - ஸ்ரீராமனது, தூதன் - தூதனை அனுமாருடைய, அனல்கெழு - நெருப்புப்பற்றியிருக்கிற, கொற்றம் - வெற்றிச்செய்யவல்ல, நீள்வால் - நீண்டவால், மழுச்சேறலொக்கும்—எ-று. 136

அப்புறழ்வேலைகாறுமலங்குபேரிலங்கைதன்னை
எப்புறத்தளவுந்தீயவொருகணத்தெரித்தகோட்பால்
துப்புறழ்மேனியண்ணன்மேருவிற்குழையத்தோளால்
முப்புறத்தெய்தகோலேயொத்ததம்மூரிப்போர்வால்.

இ-ள். அப்பு - ஜலரூபமாக, உறழ் - முழுதுமொத்த, வேலைகாறும் - கடலளவும், அலங்கு - விளங்குவதான, பேர் இலங்கைதன்னை - பெரிய இலங்காபுரியை, எப்புறத்தளவும் - எங்கெங்கு இடஅளவும், தீய - எரிந்துகெட, ஒருகணத்து - ஒருக்ஷணப்பொழுதிலே, எரித்த - தகித்த, கோட்பால் - சூழ்வினாலே, துப்புஉறழ் - பவளத்தை ஒப்பான, மேனி - நிறத்தையுடைய, அண்ணல் - சிவனானவர், மேரு - மேருமலையான, வில்குழைய - வில்வளைய, தோளால் - தோள்கொண்டுவாங்கி, முப்புரத்து - திரிபுரத்தின்மேலே, எய்த - பிரயோகித்த, கோலே - அம்பே, ஒத்தது - ஒப்பாயிற்று, அ - அந்த, மூரி - பெரிதாய்நீண்ட, போர்வால் - பலமுள்ளவால் கோலொத்தது—எ-று. 137

உகக்கடையுலகம்யாவுமுணங்குறவொருதன்னாட்டம்
சிகைக்கொழுங்கனலைவீசுஞ்செயன்முனம்பயில்வான்போல
மிகைத்தெழுதீயராயோர்விரிநகர்வீயப்போர்வால்
தகைத்தலினோன்மைசாலுந்தனிவீரன்சேணிலுய்த்தான்.

இ-ள். உகக்கடை - யுகமுடிவிலே, உலகம்யாவும் - உலகமுழுதும், உணங்குற - எரிந்துபோக, ஒருதன் நாட்டம் - ஒருதமது நெற்றிக்கண்ணானது, சிகை - சுவாலையுள்ள, கொழுங்கனலை - செழியநெருப்பை, வீசுஞ்செயல் - மூளவிடுகிறசெய்கையை, முனம் - முன்னே ஒருதரம்சிவனானவர், பயில்வான்போல - பழகிக்கொள்ளுகிறதுபோல், மிகைத்து - அதிகரித்து, எழுவருகிற, தீயராயோர் - கெட்டராக்ஷதர், விரி - மிகுந்துள்ள, நகர்வீய - ஊரழிய, போர்வால் - பலங்கொண்டவாலை, தகைத்தலில் - யாராலுந்தடுத்தல் கூடாத, நோன்மைசாலும் - சாமர்த்தியம் அமைந்த, தனிவீரன் - ஏகவீரனான அனுமார், சேணில் - தூரத்திலேசெல்ல - உய்த்தான் - நீட்டினார்.

வெள்ளியிற்பொன்னினானாவிளங்குபொன்மணியின்விஞ்சை
தெள்ளியகடவுட்டச்சன்கைமுயன்றரிதிற்செய்த
தள்ளருமனைகடோறுமுறைமுறைதாவிச்சென்றான்
ஒள்ளரியோடுங்குன்றத்தூழிவீழுருமொடொப்பான்.

இ-ள். வெள்ளியில் - வெள்ளியாலும், பொன்னில் - பொன்னாலும், நாநா - பலநிறங்களாக, விளங்கு - பிரகாசிக்கின்ற, பொன் - அழகுள்ள, மணியில் - ரத்நங்களாலும், விஞ்சை - சிருட்டிக்கிறசெய்கையிலே, தெள்ளிய - தெளிந்தவனான, கடவுள்தச்சன் - தெய்வத்தச்சனானவன், கைமுயன்று - தன்கையால்வருந்தி, அரிதிற்செய்த - அருமையாகப்பண்ணின, தள்ளரு - அழித்தற்குக்கூடாத, மனைகடோறும் - வீடுகளெல்லாம், முறைமுறை - ஒவ்வொன்றாக, தாவிச்சென்றான் - குதித்துக் குதித்துப்போனார், ஒள் - ஒளிதங்கின, அரியோடும் - நெருப்புடனே, குன்றத்து - மலைமேலே, ஊழிவீழ் - முடிவுகாலத்திலேவிழுகிற, உருமொடு - இடியொடு, ஒப்பான் - சரியான அனுமார்—எ-று. 139

நீனிறநிருதரீண்டுநெய்பொழிவேள்விநீங்கிப்
பால்வருபசியனென்பான்மாருதிவாலைப்பற்றி
ஆலமுண்டவனன்றூட்டவுலகெலாமழிவினுண்ணும்
காலமேயென்னமன்னோகனலியுங்கடிதினுண்டான்.

இ-ள். நீல்நிறம் - கறுத்தநிறமுள்ள, நிருதர் - ராக்ஷதர்களாலே, ஈண்டு - கூட்டப்படுகிற, நெய்பொழி - நெய்வார்க்குகின்ற, வேள்வி - யாகங்களையும், நீங்கி - விட்டுவிடுதலாய், பால்வரு - முறையேயுண்டான, பசியனென்பான் - மிகவும்பசியுள்ளவனாகி, மாருதிவாலை - அனுமாருடையவாலை, பற்றி - தனக்காதரவாகக்கொண்டு, ஆலமுண்டவன் - விடமுண்டசிவன், அன்று - முடிவுகாலமான அப்போது, ஊட்ட - தன்னையுண்ணச்செய்ய, உலகெலாம் - உலகமுழுதும், அழிவின் - அழிந்துபோங்காலத்திலே, உண்ணுங்காலமே - உண்கிறநாளே, என்ன - என்றுசொல்லும்படி, கனலியும் - அக்கினிதேவனும், கடிதினுண்டான் - பசியனுண்டதுபோலுண்டான் எரித்தான், ராட்சதர்களாலே ஒருவரும் யாகஞ்செய்வதில்லை யாதலால் அக்கினிக்குப் பசியுண்டாயிற்றென்க—எ-று. 140

பிணிவீட்டுபடலம் முற்றிற்று

ஆக படலம் - 13 - க்கு திருவிருத்தம் - 1186

கம்பநாட்டாழ்வார் திருவடிகளே சரணம்

# இலங்கையெரியூட்டுபடலம்

கொடியைப்பற்றிவிதானங்கொளுத்தித்தான்
நெடியதூணைத்தழுவிநெடுஞ்சுவர்
முடியசுற்றிமுழுதுமுருக்கிற்றால்
கடியமாமனைதோறுங்கடுங்கனல்.

இ-ள். கொடியை-முன்னேகொடிமரங்களிலே, பற்றி – பிடித்து, விதா
ாம் – மேற்கட்டிகளை, கொளுத்தி – எரித்துவேவச்செய்து, நெடியதூணை-
ின்புநீண்டதூண்களிலே, தழுவி – சேர்ந்துபிடித்து, நெடுஞ்சுவர் – நீண்ட
சுவர்கள், முடிய – முழுதும், சுற்றிமுழுதும் – சூழ்ந்தஎல்லாம், முருக்கிற்று-
ரித்தழித்தது, கடிய – சுற்றுச்சுவர்களைக் காவலாகவுடைய, மாமனைதோ
வம் – பெரியவீடுகளெல்லாம், கடுங்கனல் – கடிதானநெருப்பு, கடியமாமனை
தோறும் கடுங்கனல் கொடியைப்பற்றியெனக்கூட்டுக—எ-று. 1

வாசலிட்டவெரிமணிமாளிகை
மூசமுட்டிமுழுதுமுருக்கலால்
ஊசலிட்டனவோடியுலைந்துளைப்
பூசலிட்டவிரியற்புரமெலாம்.

இ-ள். வாசலிட்ட – வாசல்களைக்கொண்ட, எரிமணி – நெருப்புநிறமா
ா ரத்நங்கள்பதித்த, மாளிகை – வீடுகளில், மூச – நெருங்க, முட்டி – இந்த
நெருப்புப்பட்டு, முழுதும் – எல்லாம், முருக்கலால் – எரித்தழிக்கிறதினாலே,
ஊசலிட்டு அன – ஊசலாடுகிறதுபோல, ஓடி – போகிறதும் வருகிறதுமாக
வோடி, உலைந்து – வருந்தி, உளைப்பூசல் – கத்துகிற கூக்குரல், இட்ட-இட
ாயின, இரியல் – ஓடுதலையுடைய, புரமெலாம்-அந்த ஊராரெல்லாம்-எ-று.
நெருப்புக்குபயந்து வெளியேபோகிறதும் பிள்ளைமுதலியவைகளை நினைந்து
திரும்பவருகிறதுமாயின என்க. 2

மணியிழையவயங்கொளிமாளிகை
பிணியிற்செஞ்சுடர்க்கற்றைபெருக்கலால்
திணிகொடீயுற்றதுற்றிலதேர்கிலார்
அணிவளைக்கைநல்லாரலமந்துளார்.

இ-ள். மணியிழைய – ரத்நங்கள் பதித்துள்ளதான, வயங்கு ஒளி – மிகு
ந்த பிரகாசமுள்ள, மாளிகை – வீடுகளின், பிணியில் — கட்டுப்பாடுகளெல்
லாம், செஞ்சுடர் – சிவந்தநெருப்பினது, கற்றை-சுவாலைகள், பெருக்கலால்-
அதிகமாயெரிதலாலே, திணிகொள் – திரண்டதிண்மையைக்கொண்ட, தீ
உற்றது – நெருப்புப் பிடித்தெரிகிறதும், உற்றில – நெருப்புப்பிடியாததும்,

தேர்கிலர் - தெரியாதவர்களாய், அணிவளை - வளையல்களணிந்த, கை — கைகளையுடைய, நல்லார் — பெண்கள், அலமந்துளார் — மிகவுந்துன்பமுறுதலை ஞர்கள்—எ-று. நெருப்பு நிறம்போல் ரத்த நிறமிருப்பதனாலே நெருப்புப் பற்றினதென்றும் பற்றிலதென்றுந் தெரிகிலரென்க. 3

வானகத்தைநெடும்புகைமாய்த்தலால்
போனதிக்கறியாதுபுலம்பினர்
தேனகத்தமலர்பலசிந்திய
கானகத்துமயிலன்னகாட்சியார்.

இ-ள். வானகத்தை-ஆகாயத்தையெல்லாம், நெடும்புகை - நீண்டபுகைகள்கம்மி, மாய்த்தலால் — மறைத்ததினாலே, போனதிக்கு - தாங்கள்வந்த திசை, அறியாது - தெரியாமல், புலம்பினர்-பிரலாபித்தார்கள், தேன் அகத்த—தேனை உள்ளேயுடைய, மலர்பல - பலவானபுட்பங்களை, சிந்திய-உதிர்த்துக்கொண்டு நிற்கிற, கானகத்து—செம்முருக்கமரங்களுள்ள காட்டிலகப்பட்ட, மயிலன்ன - மயில்போன்றவர்களாய், காட்சியார் - தோற்றப்படுகிறார்கள்—எ-று. நெருப்பு நிறமுள்ளது செம்முருக்கமலர் - காட்சியார் புலம்பினரெனக் கூட்டுக. 4

கூய்க்கொழுங்கனல்குஞ்சியிற்கூந்தலில்
மீச்சொரிந்தனமாதரும்வீரரும்
ஏய்த்ததன்மையினலெரியின்மையும்
தீக்கொளுந்தினவுந்தெரிகின்றிலர்.

இ-ள். கூய் — ஒருவருக்கொருவர் கூப்பிட்டுக்கொண்டு, கொழுங்கனல்-செழியநெருப்பு, மீச்சொரிந்தன —மேலேகொட்டினாற்போன்ற,குஞ்சியின்-குடுமிகளையும், கூந்தலின் - கூந்தல்களையுமுள்ள, வீரரும் — புருடர்களும், மாதரும் - பெண்களும், ஏய்த்த-மயிரும் நெருப்புமொத்திருக்கிற, தன்மையினல்—படியினாலே, எரியின்மையும் - நெருப்புப் பிடியாததலையென்றும், தீக்கொளுந்தினவும்—நெருப்புப் பிடித்ததலையென்றும், தெரிகின்றிலர்-தெரியாமல் கூவிக்கொண்டலைகிறார்களென்க, எனவேசுடுகிறதினாலே, தெரிகிறார்களென்பது போதரும்—எ-று. 5

இல்லிற்றங்குவயங்கெரியாவையும்
சொல்லிற்றீர்ந்தனபோல்வனதொல்லுருப்
புல்லுக்கொண்டனமாயைப்புணர்ப்பறக்
கல்வித்தம்மியல்பெய்துங்கருத்தர்போல்.

இ-ள். இல்லில் — அவரவர் வீடுகளிலே, தங்கு - தங்கின, வயங்கு எரி-எரிகிற நெருப்புகள், யாவையும் — எல்லாம், சொல்லில் - இராவணன் ஆக்கினையிலே நின்றும், தீர்ந்தனபோல்வன - கடந்தனபோலாயின, தொல்லுரு-பழையதம்முருவை, புல்லுக்கொண்டன — கூடிக்கொண்டதாயின, மாயைப்

புணர்ப்பு — மாயாசம்பந்தம், அற — தீர, கல்வி-தாமுணர்ந்தஞானத்தினலே, தம் இயல்பு — தமதுசொரூப சுவபாவத்தை, எய்தும் — அடைகிற, கருத்தர்போல் — மனேவிருத்தி ஞானமுள்ளவர்கள்போல்—எ-று. அக்கினிகட்டுக்கடங்காததாய் வீட்டுநெருப்பும் அனுமார்வாலினெருப்போடு கூட்டுக்கொண்டது எப்படியென்னில் கிதாபாசநீங்கித் ததாகாரமான ஆத்ம சுவரூபமாறைற்போல் என்க. 6

ஆய தங்கொர்குறளுருவாயடித்
தாயளந்துலகங்கடரக்கொள்வான்
மீயெழுந்தகரியவன்மேனியில்
போயெழுந்துபரந்ததுவெம்புகை.

இ-ள். வெம்புகையாயது — வெவ்வியபுகையானது, அங்கு — மாபலிகாலமான அப்போது, ஒர்குறளுருவாய் - ஒருவாமனவடிவாகி, அடி — தமது காலாலே, தாய் — தாவி, அளந்து — அளவிட்டு, உலகங்கள் — உலகமுழுதும், தர — மஹாபலிகொடுக்க, கொள்வான் — கொண்டதிரிவிக்கிரமனுய், மீயெழுந்த — மேலே உயர்ந்த, கரியவன் - நீனிறநெடுமால், மேனியில் — உருப்போல், போய் — நீண்டு, எழுந்து — உயர்ந்து, பரந்தது — பரவலாயிற்றுவெம்புகை எனவே, அவ்வூரினின்றும் — உயர்ந்து, ஓங்கியது புகையென்க-எ-று.

நீலநின் றநிறத்தனகீழ்நிலை
மாலின்வெஞ்சினயானையைமானுவ
மேல்விழுந்தெரிமுற்றும்விழுங்கலால்
தோலுரிந்துகழன் றனதோலெலாம்.

இ-ள். கீழ் நிலை - கிழக்குதிக்கிலேயுள்ள, மாலின் — இந்திரனுடைய, வெஞ்சினம் — வெவ்வியகோபமுள்ள, யானையை — ஐராவதத்தை, மானுவ - ஒப்பாயின, மேல்விழுந்து — உடம்பின்மேலேவிழலாகி, எரி-அனுமார் வாலினெருப்பானது, முற்றும் — யானை உடம்புமுழுதும். விழுங்கலால்-பிடித்து எரித்ததனுலே, தோல் — மேற்றேலெல்லாம், உரிந்து — உரிதலாகி, கழன்றன - நீங்குதலான அவ்வூரிலுள்ள, தோலெலாம் — யானைகளெல்லாம், நீலநின்ற — முன்னேசருமைதங்கின, நிறத்தன-நிறமுள்ளவைகள், இப்போது-தோலுரிந்துகழன்று, வெளுப்பாயின — ஆதலாலே, இந்திரன்-வெள்ளானைபோலாயினவென்றூர்—எ-று. 8

மீதிமங்கலந்தாலன்னவெம்புகை
சோதிமங்கலத்தீயொடுசுற்றலால்
மேதிமங்குலின்வீழ்புனல்வீழ்மட
வோதிமங்களின்மாதரொதுங்கினர்.

இ-ள். மீது — மேலே, இமங்கலந்தாலன - பனிமொய்த்தாற்போல், வெம்புகை — வெவ்விய புகையானது, சோதி — ஒளியுள்ள, மங்கலத்தீயொடு-

அவரவர்வீட்டிலே நன்மைசெய்கிற நெருப்புடனேகூடி, சுற்றலால்-சூழ்ந்து கொள்ளுதலாலே அந்தப்புகையையும் நெருப்பையுமஞ்சி, மங்குலின்-மேகங்களாலே, வீழ் - விழுதலான, புனல் — கடலிலேபோய், வீழ் - நன்னீரிலே விழுகிற, மடவோதிமங்களின் - இளமையான அன்னங்கள் விழுகிறது போல், மேதி - எருமைமாடுகள்போல், மாதர் - ராக்ஷதப்பெண்கள், ஒதுங்கினுர் - விழுந்தார்கள், அன்னங்கள் விழுவதாற்றிலே எருமைகள்போன்ற ராக்ஷதிகள்விழுவது கடலிலே எனக்கொள்க—எ-று. 9

பொடித்தெழுந்துபெரும்பொறிபோவன
இடிக்குலங்களின்வீழ்தலுமெங்கணும்
வெடித்தவேலைவெதும்பிடமீன்குலம்
துடித்துவெந்துபுலர்ந்துயிர்சோர்ந்தவால்.

இ-ள். பொடித்து - பொடிப்பொடியாய், எழுந்து — உண்டாகி, போவன - போவனவாகிய, பெரும்பொறி - பெரிய நெருப்புப்பொறிகள், இடிக்குலங்களின் - இடிக்கூட்டங்கள்போல், எங்கணும் - எவ்விடத்தும், வீழ்தலும் - விழும்போது, வேலைவெதும்பிட - கடல்கொதிப்பாக, வெடித்த-விழுந்த இடங்களில் வெடிப்பதாயின, மீன்குலம் — அக்கடலிலுள்ள சலசரங்களெல்லாம், துடித்து - துள்ளுதலாகி, வெந்து - எரிந்து, புலர்ந்து - காய்ந்து, உயிர்சோர்ந்த - உயிர்கள்போயின—எ-று. 10

பருகுதீமடுத்துள்ளுறப்பற்றலால்
அருகுநீடியவாடகத்தாரைகள்
உருகிவேலையினூடுபுக்குற்றன
திருகுபொன்னெடுந்தண்டிற்றிரண்டவால்.

இ-ள். பருகு - நீரையுறுஞ்சுகிற, தீமடுத்து — நெருப்புவிழுந்து, உள் உற — வீடுகளுக்குள்ளே அதிகமாக, பற்றலால் - பிடித்துக்கொள்ளுதலாலே, அருகு — பக்கத்திலே, நீடிய - அந்தப் பொன்வீடுகள் வெந்து நீளுவதான, ஆடகத்தாரைகள் — பொன்ஒழுகுதல், உருகி — உருகுதலாகி, வேலையினூடு-கடலுக்குள்ளே, புக்குற்றன - போய்ச்சேர்ந்தவைகள் நீரினுலே குடுதணிந்து, திருகு — பின்பு, பொன் - உருகிவந்த அந்தப்பொன் ஒழுங்கு, நெடுந்தண்டில்-நீண்டதடிபோல, திரண்ட — திரளாயின—எ-று. 11

உரையின்முந்துலகுண்ணுமெரியதால்
வரைநிவந்தனபன்மணிமாளிகை
நிரையினீணெடுஞ்சோலையினிற்குமோ
தரையும்வெந்ததுபொன்னெனுந்தன்மையால்.

இ-ள். உரையின்முந்து — சொல்லுமுன்னே, உலகு — உலகமெல்லாம், உண்ணும் - எரிப்பதான எரிநெருப்பு, அதால் — அதுவானதினுலே, வரை-மலைகள்போல், நிவந்தன - உயர்வுள்ளனவான, பல் - அநேகமாகிய, மணி

மாளிகை — அழகிய வீடுகளின், நிரையின் — வரிசைகளிலும், நீள்நெடும் - நீண்ட நெடிதான, சோலையின் - சோலைகளிலும், நிற்குமோ - அந்தநெருப்பு அடங்குவதாமோ, பொன்னெனும் — இலங்கைபொன்னென்கிற, தன்மையால் — படியினலே, தரையும் — அந்தநிலமுங்கூட, வெந்தது — வேவுதலாயிற்று, சோலைகள் — வீடுகள் எல்லாம் வேகின்றனவெனக்கொள்க—எ-று.

கல்வினும்வலிதாம்புகைக்கற்றையால்
எல்லிபெற்றதிமையவர்நாடியல்
வல்லிகோலிநிவந்தனமாமணிச்
சில்லியோடுந்திரண்டனதேரெலாம்.

இ-ள். கல்வினும் — கல்லைக்காட்டிலும், வலிதாம் — கெட்டியானதான, புகைக்கற்றையால் — புகையினது திரட்சியினலே, இமையவர்நாடு — தேவருலகமெல்லாம், எல்லிபெற்றது — இருளாயிருண்டது, இயல் — பொருந்தத்தக்க, வல்லிகோலி — அளவுபடச்செய்து, நிவந்தன — உயர்ந்துள்ளதான, மா — பெரிய, மணி — அழகிதான, சில்லியொடும்-உருளைகளுடனேசேர்ந்து, தேரெலாம் — இரதங்கள்முழுதும் வெந்து, திரண்டன - ஒரே திரள்வாய்க் கட்டியாயின—எ-று. 13

பேயமன்றினினின்றுபிறங்கெரி
மாயருண்டநறவுமடுத்ததால்
தூயரென்றவர்வைகிடந்துன்னினல்
தீயரன்றியுந்தீமையுஞ்செய்வரால்.

இ-ள். பேய — பசாசுகள்சூழ்ந்துள்ள, மன்றினில்-பொதுவிடங்களிலே, நின்று — நிலைகொண்டு, பிறங்கு — விளங்குகின்ற, எரி-நெருப்பானது, மாயா- அந்தமாயை செய்பவர்களான ராக்ஷதர்கள், உண்ட - சாப்பிடலான, நறவும்-கள்ளையும், மடுத்தது — சாப்பிடலாயிற்று, தூயரென்றவர் — நல்லோரென்பவர்கள், வைகிடம் — தீயவரிருக்குமிடத்தை, துன்னினல் — சேரலானல், தீயர் — அந்தத் தீயவராகுதலே, அன்றியும் — அல்லாமலும், தீமையும் — தீய பாபங்களையும், செய்வர் — செய்வார்கள், ஆல் — இது ஆச்சரியம்—எ-று. 14

தழுவிலங்கைதழங்கெரிதாய்ச்செலீஇ
வழுவில்வேலையுலையின்மறுகின
எழுமெழுஞ்சுடர்க்கற்றைசென்றெய்தலால்
குழுவுதண்புனன்மேகங்கொதித்தவே.

இ-ள். தழுவுஇலங்கை — அந்த இலங்கையிலேபற்றின, தழங்கு — கொதிப்பதான, எரி — நெருப்பானது, தாய் — தாவி, செலீஇ - சென்றுபற்றுதலாலே, வழுஇல் — குறைவுபடுதலில்லாத, வேலை — கடலானது, உலையின்- உலைநீர்போல், மறுகின - கொதிப்பதாயின, எழும்எழும் - அடிக்கடி மேலே கிளம்புகிற, சுடர்க்கற்றை — நெருப்புச் சுவாலையானது, சென்றுஎய்தலால்-

போய்கூடுகிறதினாலே, குழுவு — ஆகாயத்திலேகூடின, தண்புனல் - குளிர்ந்த நீர்பொருந்தின, மேகம் — மேகங்களும், கொதித்த — கொதிப்பனவாயின- 15

ஊனிலோடுமெரியொடுயங்குவார்
கானிலோடுநெடும்புனல்காணெனு
வானிலோடுமகளிர்மயங்கினர்
வேனிலோடருந்தேரிடைவீழ்ந்தனர்.

இ-ள். ஊனில் — உடம்பிலே, ஓடும் — தாவுவதான, எரியொடு — நெருப்புடனே, உயங்குவார் — வருந்துவாராகி, வானில் - ஆகாயத்திலே, ஓடும்-தாவிப்போகிற, மகளிர் — பெண்கள், மயங்கினர்-மயங்கினராகிதிகள், கானில்-காட்டிலே, ஓடும் — ஓடுவதான, நெடும்புனல் என — நீண்டஜலமென்று, வேனில் — வெப்பத்துடனே, ஓடு — நீண்டுதோற்றுகிற, அருந்தேரிடை — ஜலமல்லாததாயும் ஜலமாகத்தோற்றுகிற பேய்த்தேராகிய நீரிலே, வீழ்ந்தனர்-விழுந்தார்கள்—எ-று. காண் முன்னிலையசை. 16

தேனவாம்பொழிறீப்படச்சிந்திய
சோனைமாமலர்த்தும்பிதொடர்ந்தயல்
போனதீச்சுடர்புண்டரிகத்தடங்
கானமாமெனவீழ்ந்துகரிந்தவே.

இ-ள். தேன் — தேனைக்கண்டு, அவாம் — விரும்பத்தக்க, பொழில்—சோலைகளிலே, தீப்பட — நெருப்புவிழ அதனாலே, சிந்திய - அழிந்த, சோனை — விடாமல் தேனைப்பெய்கிற, மா — மிகுதியுள்ள, மலர்-பூக்களிலே மொய்த்த, தும்பி — வண்டுகள், தொடர்ந்து — அந்தச் சோலைகளைத்தொடர்ந்து, அயல் — அப்பாலும், போன - வேவச்செய்துகொண்டுபோன, தீச்சுடர் - நெருப்புச் சுவாலையைக்கண்டு, புண்டரிகம் — தாமரைகள்பூத்த, தடங்கானம் — பெரியகாடுகளே, ஆமென — ஆகுமென்று, வீழ்ந்து — அந்தத் தீச்சுடரிலேவிழுந்து, கரிந்த - தீந்துபோயின—எ-று. 17

நற்கடனிதுநம்முயிர்நாயகன்
மற்கடந்தெறமாண்டனன்வாள்விலம்
இற்கடந்தினியேகலம்யாமெனு
விற்கடந்தநுதர்சிலர்வீடினர்.

இ-ள். நற்கடனிது — இதுவே நல்லகாரியமென்று, நம்முயிர் - நமதுயிர்போன்ற, நாயகன் — புருஷன், மற்கடம்-ஒருகுரங்கு, தெற — கொல்ல, மாண்டனன் — இறந்துபோனான், வாழ்வு இலம்-ஆகையாலினிச்சுகம் அனுபவித்தல்செய்யேம், இற்கடந்து - நமதுவீடும்விட்டு, இனியேகலம் — இனி வெளியே போகுதல்செய்யேம், யாமெனு — நாமென்று, விற்கடந்த — வில்லுருவைவெல்லலான, நுதல் — நெற்றியுள்ளபெண்களிலே, சிலர்வீடினர்-சிலரிப்படியெண்ணிவீடுகளிலே இறந்தார்கள்—று.எ 18

பூக்கரிந்துமுறிபொறியாயடை
நாக்கரிந்துசினைநறுஞ்சாம்பராய்
மீக்கரிந்துநெடும்பணைவேருறக்
காக்கரிந்துகருங்கரியானவே.

இ-ள். பூக்கரிந்து — மலரெல்லாந்தீந்து, முறி — தளிரெல்லாம், பொறியாய் — பொறிப்பொறியாய், அடை — இலைகளும், நா — அதனடுவுள்ளவைகளும், கரிந்து — தீந்து, சினை — கிளைகள் எல்லாம், நறுஞ்சாம்பராய் — நல்ல சாம்பலாய்வெந்து, மீக்கரிந்து — அதன்மேலுள்ள வைகளுந்தீந்து, நெடும்பணை — நீண்டகிளைகளும், வேர் — வேர்களும், உற — அதிகமாக, கா — சோலைகளெல்லாம், கரிந்து — தீந்து, கருங்கரி — மிகவுங்கரிகளே, ஆன — ஆயின.

கார்முழுக்கவெங்கனற்கற்றைபோய்
ஊர்முழுக்கவெதுப்பவுருகின
சோரொழுக்கமறுமையிற்றுன்றுபொன்
வேர்விடுப்பதுபோன்றனவிண்ணெலாம்.

இ-ள். கார்முழுக்க — மேகங்களுமுழுதும்படி, எழும் — மேலேகிளருகின்ற, கனற்கற்றை — நெருப்புச்சுவாலைகள், போய் — நீண்டுசென்று, ஊர்முழுக்க — பொன்னுலகமுழுவதையும், வெதுப்ப — சுட்டெரித்த அதனல், உருகின — உருகலானதாய், சோர் — ஒழுகுகின்ற, ஒழுக்கம்-ஒட்டமானது, அறுமையில் — நீங்காமையினலே, துன்று — வேவுதலான, பொன் — பொன்னுனது, வேர்விடுப்பது — வேரைத்தொங்கவிடுகிறது, போன்றன-ஒப்பாயின, விண்ணெலாம் — ஆகாயமுழுதும்—எ-று. 20

நெருக்கமீமிசையொக்கநெருப்பெழச்
செருக்கும்வெண்கதிர்த்திங்களைச்சென்றுற
உருக்குமெய்யினமுதமுகுத்தலால்
அரக்கருஞ்சிலராவிபெற்றுரரோ.

இ-ள். நெருக்கம் — நெருங்குதலுள்ள, மீமிசை — மிகவுமேலே, ஒக்க-ஒருசேர, நெருப்பெழ — நெருப்புச்சுவாலை உண்டாக, செருக்கும்-ஒளியால் மிகுதியான, வெண்கதிர் — வெள்ளைநிலவுள்ள, திங்களை — சந்திரனை, சென்று — கிட்டி, உற உருக்கும் — மிகவுமுருகச்செய்கிற, மெய்யின் — அச்சந்திரனுடம்பினின்றும், அமுதம் — அமிர்தம், உகுத்தலால் — சிந்துகிறதினலே, அரக்கரும் சிலர் — சிலராட்சதர்கள், ஆவிபெற்றுர் — சாவாமலுயிருள்ளவர்களானர்கள்—எ-று. அரோ — அசை. 21

பரிதிபற்றுநிமிர்ந்தெழுபைங்கனல்
கருகிமுற்றுமெரிந்தெழுகார்மழை
அருகுசுற்றுமிருந்தையதாயதின்
உருகுபொற்றிரளொத்தனஞெண்கதிர்.

இ-ள். பரிதிபற்றி — சூரியனைப்பிடித்து, கிமிர்ந்து — உயர்ந்து, எழு-எழுகிற, பைங்கனல் — சுவாலைவிரிதலான நெருப்பினாலே, கருதி — தீர்ந்து, முற்றும் — முழுதும், எரிந்து - வெந்து, எழு — போகிற, கார்மழை — கரியமேகங்கள், அருகு — பக்கமெல்லாம், சுற்றும் — சூழ்ந்திருக்கிற, இருந்தையதாய்-கரிகளாக, அதின் — அக்கரிக்குள்ளே, உருகு - இளகுகின்ற, பொற்றிரள்-பொன்னினதுதிரட்சி, ஒத்தனன் — ஒப்பதானான், ஒண்கதிர் — ஒளிமிகுந்த சூரியன்—எ-று. 22

தளைகொளுத்திய தாவெரி தாமணி
முளைகொளுத்திமுகத்திடைமொய்த்தபேர்
உளைகொளுத்தவுலந்துலைவுற்றன
வளைகுளப்பின் மணிநிறவாசியே.

இ-ள். தளை — பின்காற்கயிற்றை, கொளுத்திய-பிடித்துவேவச்செய்த, தா - பின்பு சுவாலைதாவுகிற, எரி - நெருப்பானது, தாமணி — கழுத்திற் கயிற்றுடனே, மூளை — கட்டுமுளையையும், கொளுத்தி — வேவப்பண்ணி, முகத்திடை — முகத்திலே, மொய்த்த — நெருங்கியுள்ள, பேர் உளை — அதிகமான முன்மயிரை, கொளுத்த — வேவச்செய்ய, உலந்து — செத்து உயிர்போய், உலைவுற்றன — வருந்தலாயின, வளை — வளைந்த, குளம்பின்-குளம்புகளைக் கால்களிலேகொண்ட, மணிநிறம் — நல்ல நிறமுள்ள, வாசி-குதிரைகள்—எ-று. 23

எழுந்துபொற்றலத்தேறலினீள்புகைக்
கொழுந்துசுற்றவுயிர்ப்பிலர்கோளுமுற்
றழுந்துபட்டுளரொத்தயர்ந்தாரழல்
விழுந்துமுற்றினர்கூற்றைவிழுங்குவார்.

இ-ள். எழுந்து — மேலேஉயர்ந்து, பொற்றலத்து - பொன்னுலகத்தை நோக்கி, ஏறலின் — செல்லும்போது, நீள் — மேலே உயருகின்ற, புகைக்கொழுந்து — புகைத்திரட்சி, சுற்ற — சூழஅதனாலே, உயிர்ப்பிலர் - மூச்சுவிடமாட்டாமல், கோளுமுற்று — அப்புகையை வாயால் விழுங்கலாகி, அழுந்துபட்டுளார் — புகைக்குள் அழுந்தினவர்களாய், ஒத்து — அப்புகையேயாக, அயர்ந்தார் — சோர்தலானார்கள் பின்பு, அழல்விழுந்து - நெருப்பிலேவிழுந்து, முற்றினர் — முடிந்தார்கள், கூற்றைவிழுங்குவார் - யமனையும் விழுங்கவல்ல ராட்சதர்கள்—எ-று. 24

கோசிகத்துகிலுற்றகொழுங்கனல்
தூசினுத்தரிகத்தொடுசுற்றுறு
வாசமைக்குழல்பற்றிமயங்கினார்
பாசிழைப்பரவைப்படரல்குலார்.

இ-ள். கோசிகத்துகில் - பட்டுச்சீலையிலே, உற்ற — பிடித்த, கொழுங்கனல் — அவியாதநெருப்பு, தூசின் — இடைவஸ்திரமும், உத்தரிகத்தொடு-

மார்புச்சீலையும், சுற்றுரு — சூழ்ந்து, வாசம் — பரிமளமுள்ள, மைக்குழல்-கரியகூந்தலிலும், பற்ற - பிடித்துக்கொள்ள, மயங்கினுர் - மயங்கியிறந்தார்கள், பாசு இழைய - பசுமையான ஆபரணங்களுள்ள, பரவை — விரிதலாக, படர் - கீழ்மேலு நீண்டுதோற்றுகிற, அல்குலார் — குறியுள்ளபெண்கள். 25

வேறு

நிலவிளங்கியதுகிலினைநெருப்புணநிருதர்
இலவினுஞ்சிலமுத்துளவெனுநகையனையார்
புலவியின்கரைகண்டவரமுதுகப்புணரும்
கலவியின்கரைகண்டிலர்மண்டினர்கடன்மேல்.

இ-ள். நிலவு — சந்திரிகைபோல் வெண்மையாய், இலங்கிய - விளங்குகின்ற, துகிலினை — வஸ்திரத்தை, நெருப்புண - நெருப்பு வேவச்செய்யவே, நிருதர் - அரக்கர்கள், எழு இலவினும் - இலவிதழிலும், சிலமுத்துள எனும்-சில முத்துகளுண்டென்னும்படியான, நகை — பல்வரிசைகளுள்ள, அனையார் — அப்பெண்களுடைய, புலவியின்கரை — பிணக்கின் அளவை, கண்டவர் — தெரிந்தவராகி, அமுதுஉக — அமுதமொழுக, புணரும் — கூடுகின்ற, கலவியின்கரை - சுகத்தினளவை, கண்டிலர் - காணுதவர்களாய், கடல்மேல் மண்டினர் - கடலிலேபோய் விழுந்தார்கள், பய—எ-று. 26

பஞ்சரத்தொடுபசுநிறக்கிளிவெருவுபதைப்ப
அஞ்சனக்கணினருவிநீர்முலைமுன்றிலலைப்பக்
குஞ்சரத்தனகொழுநரைத்தழுவுறுங்கொதிப்பால்
மஞ்சுறப்புகுமின்னெனப்புகையிடைமறைந்தார்.

இ-ள். பஞ்சரத்தொடு — கூட்டுடனே, பசுநிறக்கிளி — பசிய நிறமுள்ள கிளிப்பிள்ளை, வெருவுபதைப்ப - வெந்துதுடிக்க அதுகண்டு, அஞ்சனக்கணின் - மையிட்ட கண்களிலே, அருவிநீர் - ஓடிவருகிறஜலம், முலைமுன்றில் — முலைமுகட்டிலே, அலைப்ப — பெருகுதலாக, குஞ்சரத்து — யானையை, அன — ஒப்பான, கொழுநரை — நாயகரிடம்போய், தழுவுறும் — கூடவேண்டின, கொதிப்பால் — ஆத்திரத்துடனே, மஞ்சு — மேகத்துக்குள்ளே, உறப்புகும் - மிகவுமறைகிற, மின்னென — மின்போல், புகையிடை - புகைக்குள்ளே, மறைந்தார் - முழுகினுர்கள்—எ-று. 27

வரையினைப்புரைமாடங்களெரிபுகமகளிர்
புரையில்பொற்கலன்விசும்பிடைவில்லிடப்போவார்
கரையுனுட்புகைப்படலையிற்கறிந்தனர்கலங்கித்
திரையினுட்பொலிசித்திரப்பாவையின்செயலார்.

இ-ள். வரையினைப்புரை — மேகத்தை ஒப்பான, மாடங்கள் — வீடுகளிலே, எரிபுக — நெருப்புப்பட, மகளிர் - பெண்கள் தம்முடைய, புரையில்-தோஷமில்லாத, பொற்கலன் - பொன்னுபரணங்கள், விசும்பிடை — ஆகா

யத்திலே, வில்விட — ஒளிவீச, போவார் — செல்லும்போது அவர்கள், கரையினுள் — அளவிலேகவிந்த, புகைப்படலையில் — புகைமூட்டத்தினுலே, கரிந்தனர் — தீர்ந்தாராகி, கலங்கிக் கரிந்தனர் — கலங்குதலாய்த் தீய்ந்தார்கள், திரையினுள் — திரைமறைவுக்குள்ளே, பொலி — தோற்றுகின்ற, சித்திரப் பாவையின் — சித்திரப்பதுமைகளினது, செயலார் — செய்கைபோல் காணப் படுகிறார்கள்—எ-று. 28

அகருமஞ்ஞுறுஞ்சாந்தமுமுதலியவநேகம்
புகரினன்மரத்துறுவெறியுலகெலாம்போர்ப்பப்
பகருமூழியிற்காலவெங்கடுங்கனல்பருகும்
மகரவேலையில்வெந்தனநந்தனவனங்கள்.

இ-ள். அகரும் — அகில்விருட்சங்களும், அந்நறும் — அந்த நல்ல பரிமளமுள்ள, சாந்தமும் — சந்தனவிருட்சங்களும், முதலிய — முதலான, அநேகம் - பலவகைகளுள்ள, புகர் இல் — தோஷமில்லாத, நன்மரத்து — நல்ல விருக்ஷங்களிலே, உறு — பொருந்தின, வெறி - பரிமளமானவை, உலகெலாம் — உலக முழுதும், போர்ப்ப — கவிய, பகரும் — எல்லாருஞ் சொல்லப்படுகிற, ஊழியில் - யுகமுடிவிலே, காலவெங்கடுங்கனல் — வெவ்விய காலாக்கினியாலே, பருகும் — குடிக்கப்படுகிற, மகரவேலையில் — மகரமீன்களுள்ள கடல்போல், நந்தனவனங்கள் — சோலைகளெல்லாம், வெந்தன - வேவலாயின - எ-று. 29

மிளைப்பரந்தெழுகொழுஞ்சுடருலகெலாம்விழுங்க
நினைப்பருப்பெருந்திசையுறவிரிகின்றநிலையால்
சினைப்பரந்தெரிசேர்ந்திலநின்றவுஞ்சிலவும்
கனற்பரந்தவுந்தெரிகிலகற்பகக்கானம்.

இ-ள். மிளைப்பரந்து — ஒளியை விரித்துக்கொண்டு, எழு — கிளருகிற, சொழுங்கனல் — செழிய நெருப்பு, உலகெலாம் - உலகமுழுதும் அந்த ஊர் முழுதும், விழுங்க — கபளீகரிக்கலாய், நினைப்ப அரும் — எண்ணமுடியாத, பெருந்திசையுற — பெரிய திக்குகள்முழுதும், விரிகின்ற நிலையால் - பரவுகிற படியினுலே, சினைப்பரந்து - கிளைகளிலே பிடித்து, எரிசேர்ந்தில — நெருப்புக்கூடாதவைகளாய், நின்றவும் — நிற்பவைகளும், சிலவும் - கொஞ்சம்பற்றியெறிய நிற்பவைகளும், கனல்பரந்தவும்-முழுது நெருப்புப்பிடித்து வேவனவும் கற்பகக்கானம் — அதுசெம்பொன்மயமான கற்பகக்காடாகலாலே, தெரிந்தில — தோற்றாதுநிற்கின்றன—எ-று. 30

மூளும்வெம்புகைவிழுங்கவிற்சுற்றுறமுழுநீர்
மாளும்வண்ணமாமலைநெடுந்தலைதொறுமயங்கிப்
பூளைவீயன்னபோவனபுணரியிற்புனன்மீன்
மீளயாவையுந்தெரிந்திலமுகிற்கணமிசைய.

இ-ள். முழுநீர் — கடலினீரெல்லாம், மாளும்வண்ணம் — வற்றும்படி, சுற்றுற — அவ்வூரைச் சூழ்வதாய், மூளும் — மூளுவதான, வெம்புகை — வெவ்

வியபுகையானது, விழுங்கவில் – கடலைக்கவிந்து கொண்டதனாலே, மீன்யாவையுமீள – மீன்களெல்லா மோடுவனவாக, புணரியிற்புனல் – கடலினீரை, முகிற்கணம் – மேககூட்டங்கள் எழு, மிசைய – குடிக்கநீர்நிறம், தெரிந்தில – தெரியாமல், மாமலை – பெரிய மலைகளின், நெடும் – நீண்ட, தலைதொறும் – சிகரங்களெல்லாம், மயங்கி – ஒரு சேர்க்கையாய், பூளைவீ — பூளைப்பூவை, அன்ன – ஒப்பானவைகளாய், போவன — செல்வனவாயின, பய—எ-று.

மிக்கவெம்புகைவிழுங்கலின்வெள்ளியங்கிரியும்
ஒக்கவெற்பினோடன்னமுங்காக்கையினுருவ
பக்கவேலையின்படியதுபாற்கடன்முடிவி
றிக்கயங்களுங்கயங்களும்வேற்றுமைதெரியா.

இ-ள். மிக்க – மிகுதியான, வெம்புகை – வெவ்விய புகைகள்போய், விழுங்கலின் — கவிந்துகொண்டதனாலே, வெள்ளியங்கிரியும் – கைலைமலையும், வெற்பினோடு – மற்றமலைகளுடனே, ஒக்க – ஒப்பாகவும், அன்னமும் – வெண்ணிறமான அன்னங்களும், காக்கையினுருவ – காகவடிவாயின, பாற்கடல் – திருப்பாற்கடலும், பக்கம் – அதன்பக்கலிலேயுள்ள, வேலையின்படியது – கடல்களின்வடிவாயிற்று, முடிவில் – நிறம் அழிதலில்லாத, திக்கயங்களும் – ஐராவதமுதலான திக்கியானைகளும், கயங்களும் – மற்றயானைகளும், வேற்றுமை – நிறவேறுபாடு, தெரியா – தெரிந்து சொல்லக் கூடாவாயின—எ-று. 32

கரிந்துசிந்திடக்கடுங்கனறொடர்ந்துடல்கதுவ
உரிந்தமெய்யினரோடினர்நீரிடையொளிப்பார்
விரிந்தகூந்தலுங்குஞ்சியுமிடைதலிற்றாழும்
எரிந்துவேகின்றலொத்தனவெறிதிரைப்பரவை.

இ-ள். கடுங்கனல் – கடிதானநெருப்பு, தொடர்ந்து – கூடி, உடல் கதுவ – தேகத்திலேபொருந்த அதனாலே, கரிந்துசிந்திட – தீந்துகழல, உரிந்த – தோலுரிதலான, மெய்யினர் — சரீரமுள்ளவர்களாய், ஓடினர் — ஓடிப்போய், நீரிடை – சமுத்திரத்திலே முழுகி, ஒளிப்பார் – மறைகிறவர்கள், விரிந்த – விரிதலான, கூந்தலும் – பெண்கள்மயிரும், குஞ்சியும் – புருடர்கள்மயிரும், மிடைதலில் – நீர்மேலே பரவித்தோற்றுகிறதினாலே, பரவைதாமும் – கடல்களும், எரிந்துவேகின்றது – எரிந்து வேவுகிறதை, ஒத்தன – ஒப்பாயின, எறிதிரை – அலைகளைவீசுகிற, பரவை – கடல்கள்—எ-று. 33

மருங்கின்மேலொருமகவுகொண்டொருதனிமகவை
அருங்கையாற்பற்றிமற்றொருமகவு பின்னரற்ற
நெருங்கினரோடுநெறிகுழல்சுறுகலொளநீக்கிக்
கருங்கடற்றலைவீழ்ந்தனராக்கியர்கதறி.

இ-ள். மருங்கின்மேல் — இடையிலே, ஒருமகவுகொண்டு – ஒருபிள்ளையையிடுக்கி, ஒருதனிமகவை – இன்னமொருபிள்ளையை, அருங்கையாற்பற்றி –

தமதருமையுள்ள கையாலேபிடித்து, மற்றொருமகவு-இன்னமொருபிள்ளை, பின் அரற்ற — பின்தொடர்ந்து அழ, நெருங்கினாரொடு - கூடிப்போகிற பெண்களுடனே கூடி, நெறிகுழல் - நடுவாகுள்ள கூந்தலிலே, சுறுக்கொள-சுறீரென்ன நெருப்புப்பிடிக்க, நீககி - அதைத்துடைத் தவித்துக்கொண்டு, கருங்கடற்றலை - கரியகடலிலேபோய், அரக்கியர் — ராட்சதப்பெண்கள், கதறிவீழ்ந்தனர் - கத்திக்கொண்டு விழுந்தார்கள்—எ-று. தனிகைப்பிள்ளையைநோராகாத. 34

வில்லும்வேலும்வெங்குந்தமுமுதலியவிறகாய்
எல்லுடைச்சுடரெனப்புகரெஃகெலாமுருகித்
தொல்லைநன்னிலைதொடர்ந்துபேருணர்வன்னதொழிலாற்
சல்லியுண்டையிற்றிரண்டனபடைக்கலச்சாலை.

இ-ள். வில்லும் — விற்களும், வேலும் - வேல்களும், வெங்குந்தமும்-வெவ்விய எறியீட்டிகளும், முதலிய — முதலானஆயுதங்களே, விறகாய்-விறகாக, எல்லுடை — ஒளியையுடைய, சுடர் என் — சூரியனென்னும்படி, புகர்-காந்தியுள்ள, எஃகெலாம் — ஆயுதவகைகளெல்லாம், உருகி — இளகி, தொல்லை — பழைய, நன்னிலை — தமது இரும்புவடிவானவற்றை, தொடர்ந்து-கொண்டு, பேருணர்வு — ஒருபோறிவை, அன்ன — ஒப்பான, தொழிலால்-யோகமுயற்சியினாலே, சல்லியுண்டையில் — இரும்புப்பாளங்களாக, திரண்டன - கட்டியாயின, படைக்கலச்சாலை — ஆயுதச்சாலைகளில், சிதாபாசநீங்கி யோக முயற்சியினாலே கூடஸ்தனானாற்போல் ஆயுதவடிவுபோய் இரும்புக்கட்டிவடிவாயின என்க ஆயுதங்களோடுகூடின மாவடிவுகள் விறகாகவென்க.

செய்தொடர்க்கழல்வல்லியும்புரசையுஞ்சிந்தி
நொய்தினிட்டவன்றறிபறித்துடலெரிநுழைய
மொய்திடற்செவிநிறுத்திவான்முதுகினின்முறுக்கிக்
கையெடுத்தழைத்தோடினவோடைவெங்களிமா.

இ-ள். கழல் — கால்களிலே, தொடர்செய் — பூட்டுதல்செய்த, வல்லியும் — தளையாகிய கயிறுகளும், புரசையும் — கழுத்திற்கயிறுகளும், சிந்தி-வெந்தழிந்து, நொய்தின் — விரைவிலேசிந்துதலாகி, இட்டவன் — கட்டியிருக்கிற வலிய, தறிபறித்து — தூணைப் பிடுங்கிக்கொண்டு, உடல் — உடம்பிலே, எரிநுழைய — நெருப்புப் பிடிக்கவே, மொய் - உரோமங்கள்மொய்த்த, தடச்செவி — பெரியகாதுகளை, நிறுத்தி — அசையாமற்கொண்டு, வால் — வாலை, முதுகினில் — முதுகின்மேலே, முறுக்கி — முறுக்கிநீட்டி, கையெடுத்து-கையைத் தூக்கிக்கொண்டு, அழைத்து — கூப்பிட்டுக்கத்தி, ஓடை-முகபடாமணிகிற, வெங்களிமா - வெவ்விய மதச்செருக்குள்ளயானைகள், ஓடின — ஓடலாயின—எ-று. 36

வெருளும்வெம்புகைப்படலையின்மேற்செலவெருவி
இருளும்வெங்கடல்விழுந்தனவிழுந்திலபறவை

மருளின்மீன்கணம்விழுங்கிடவுலந்தனமனத்தோர்
அருளில்வஞ்சரைத்தஞ்சமென்றடைந்தவரனைய.

இ-ள். வெருளும் — பயங்கொள்ளத்தக்க, வெம்புகைப்படலையின்-வெவ்விய புகைப்படர்ச்சியினாலே, மேற்செல — ஆகாயத்திலேபோக, வெருவி-பயந்து, இருளும் — இருண்டிருக்கிற, வெங்கடல் - வெப்பமான கடலிலே போய், பறவை — பட்சிகள், விழுந்தன — விழலாயின, எழுந்தில - பின்பெழாதிருக்கின்றன, மருளில் - அப்பறவைகளை மயக்கங்கொள்ளாதிருக்கிற, மீன்கணம் — மீனினங்கள், விழுங்கிட — பற்றி மொய்த்துத்தின்ன, உலந்தன- இறந்துபோகலாயின, மனத்து — மனத்திலே, ஓர் அருளில் - ஒருவகையிரக்கமுமில்லாத, வஞ்சரை — கபடிகளை, தஞ்சமென்று — தமக்காதாரமாகக் கொண்டு, அடைந்தவர் — சேர்ந்தவர்களை, அனைய — ஒப்பாக உலந்தன, மருளின் — மயங்குதலையுடைய—எ-று. 37

நீரைவற்றிடப்பருகிமாநெடுநிலந்தடவித்
தாருவைச்சுடுமலைகளைத்தழற்செய்துதனிமா
மேருவைப்பற்றியெரிகின்றகாலவெங்கனல்போல்
ஊரைமுற்றுவித்திராவணன்மனைபுக்கதுயர்தீ.

இ-ள். நீரைவற்றிட — நீரைவற்றும்படி, பருகி - குடித்து, மாநெடுநிலம் — பெரிதாய் நீண்டுள்ள இடங்களெல்லாம், தடவி — உலாவி, தாருவை — மரங்களையெல்லாம், சுட்டு - வேவச்செய்து, மலைகளை — மலைகளையெல்லாம், தழற்செய்து - கொதிக்கப்பண்ணி, தனிமாமேருவை - ஒப்பில்லாத பெரிய மேருமலையை, பற்றி - பிடித்து, எரிகின்ற - எரிகிற, காலவெங்கனல்போல்- வெவ்விய காலாக்கினியைப்போல், ஊரைமுற்றுவித்து - ஊர்முழுதும்வேவ எரித்து, இராவணன் — தசக்கிரீவனுடைய, மனை — வீட்டிலே, புக்கது-புகுந்தது, உயர்தீ — உயர்ந்துதாவுகிற நெருப்பு—எ-று. 38

வானமாதருமற்றுளமகளிருமறுகிப்
போனபோனதிக்கறிகிலரனைவரும்போனார்
ஏனைநின்றவரெங்கணுமிரிந்தனரிலங்கைக்
கோனவானவர்பதிகொண்டநாளெனக்குலைந்தார்.

இ-ள். வானமாதரும் — ஆகாயத்துப்பெண்களும், மற்றுளமகளிரும்- இன்னமுள்ளபெண்களும், மறுகி — மயங்கி, போனபோன — போயினபோயின, திக்கறிகிலர் — திசைதெரியாதவர்களாய், அனைவரும் — எல்லாரும், போனார் - ஓடிப்போயினார்கள், ஏனைநின்றவர் — மற்றுமுள்ளவர்கள் எல்லாம், எங்கணும் — எவ்விடங்களிலும், இரிந்தனர் — ஓடினார்கள், இலங்கைக்கோன — இலங்கேசனான ராவணன், அவ்வானவர்பதி - அந்தத் தேவருலகை, கொண்டநாளென — தன் வசமாகக்கொண்ட காலம்போல், குலைந்தார் — நிலைகெட்டார்கள்—எ-று. போனபோன ஒவ்வொருத்தியும் ஒவ்வொரு திசைகளிலேபோய்ப் புகைக்கம்மலாலே இன்னதிசைவந்தோமென்றறிந்திலரென்க. 39

நாவியுந்நறுங்கலவையுங்கற்பகநக்க
பூவுமாரமுமகிலுமென் றினையனபுகையத்
தேவுதேன்மழைசெறிபெருங்குலமெனத்திசையிற்
பாவைமார்நறுங்குழல்களும்பரிமளங்கமழ்ந்த.

இ-ள். நாவியும் – மான்மதமும், நறுங்கலவையும் – நல்ல கூட்டுவர்க்கங்களும், கற்பகம் – கற்பகமரத்திலே, நக்க – விளங்கின, பூவும் – புஷ்பங்களும், ஆரமும் – சந்தனவகைகளும், அகிலும் – அகிற்சந்தனமும், என்று இனையன – என்று சொல்லலான இவைகளெல்லாம், புகைய – நெருப்புப் பிடித்துப் புகைகிறதினாலே, தேவு – தெய்வீகமான, தேன் – அத்தராகிய வற்றைப்பெய்கிற, மழை – மேகமான, செறி – நெருங்கின, பெருங்குல மென – பெரிய கூட்டமென்று சொல்லும்படி, திசையிற்பாவைமார் – திக்குப்பாலகருடைய மனைவிகள், நறுங்குழல்களும் – விசேஷவகையான கூந்தல்களெல்லாம், பரிமளம் – அவ்வகைப்புகைவாசமே, கமழ்ந்த – பரிமளிக்கலாயின, எனவேபுகை – திசைகளெல்லாம்போய் மண்டினவென்றாயிற்று-எ-று. நறுங்குழல் இயற்கைமணமுள்ளகூந்தல். 40

சூழும்வெஞ்சுடர்தொடர்ந்திடயாவருந்தொடா
வாழிவெஞ்சினத்தாண்டொழிலிராவணன் மனையின்
ஊழிவெங்கனலுண்டிடவுலகமென் றுயர்ந்த
ஏழும்வெந்தனவெரிந்தனநெடுநிலையேழும்.

இ-ள். சூழும் – எங்குஞ் சூழ்ந்தெரிக்கிற, வெஞ்சுடர் – வெவ்விய நெருப்பு, தொடர்ந்திட – போய்த்தாவுதலாலே, யாவரும் – எவரும், தொடா – கிட்டக்கூடாத, வாழி – மாறுபடாத, வெஞ்சினத்து - வெவ்விய கோபத்தையுடைய, ஆண்தொழில் – ஆண்மைத்தொழிலிற்சிறந்த, இராவணன் – இராவணனுடைய, மனையின் – வீட்டிலே, ஊழி - ஊழிகாலத்துண்டாகிற, வெங்கனல் – வெவ்வியநெருப்பு, உண்டிட – எரிப்பதுபோலெரிக்க உலகமென்று, உயர்ந்த – உயர்வுள்ள, ஏழும் – ஓரேழும், வெந்தன – வெந்தாற்போல, நெடு- நீண்ட, நிலையேழும் – எழடுக்குமெத்தையும், வெந்தன – எரிதலாயின-எ-று.

பொன்திருத்தியதாயதாலிராவணன்புரைதீர்
குன்றமொத்துயர்தடநெடுமாநிலைக்கோயில்
நின்றதுற்றெரிபருகிடநெரிவுறவுருகித்
தென்றிசைகருமோர்மேருவுண்டாமெனத்தெரிந்த.

இ-ள். பொன் - பொன்னாலே, திருத்தியது – செய்திருப்பது, ஆய தால் – ஆனபடியினாலே, இராவணன் – இராவணனுடைய, புரைதீர் - குற்றமில்லாத, குன்றம் – மலையை, ஒத்து – ஒப்பாய், உயர்-உயர்ந்த, தடநெடுமா-விசாலமாய்நீண்டுபெரிதான, நிலை-எழடுக்குள்ள, கோயில்-வீடானது, நின்றது – நிற்பதன்மேல், உற்று – பொருந்தி, எரிபருகிட – நெருப்புப்பிடித்துக் கொள்ள, நெரிவுற - அந்த அடுக்குகள் நெரிந்தழுந்த, உருகி - வெந்து இளகி

தென்றிசைக்கும் — தெற்குத்திக்கிலும், ஓர் மேருவுண்டாமென — ஓர் மேரு மலையுண்டென்னும்படி, தெரிந்த-தோற்றலாயின—எ-று. 42

அணையகாலையினரக்கனுமரிவையர்குழுவும்
புணைமணிப்பொலிபுட்பகவிமானத்துப்போனார்
நினையுமாத்திரையாவருநீங்கினர்நினையும்
வினையிலாமையில்வெந்ததவ்விலங்கல்மேலிலங்கை.

இ-ள். அணையகாலையின் — அப்படி வேகிறபோது, அரக்கனும் — இராவணனும், அவனுடைய அரிவையர்குழுவும் — பெண்கள் கூட்டமும், புணை மணி — ரத்நங்களிழைத்ததுடனே, பொலி — விளங்குகின்ற, புட்பகவிமானத்து — புட்பகவிமானத்தின்மேலேறிக்கொண்டு, போனார் — தூரப்போய் விட்டார்கள், நினையுமாத்திரை — எண்ணுமளவில், யாவருநீங்கினர் — மற்றெல்லாரும் ஓடிப்போனார்கள், நினையும் வினையிலாமையின் — ஆலோசிக்கலாவதொன்றுமில்லாததினாலே வெந்தது — வேவலாயிற்று, அவ்விலங்கல் மேல் — அந்தமலைமேலுள்ள, இலங்கை — இலங்காபுரியானதுதானே அவிப்போருமில்லையாகவெந்தது—எ-று. 43

ஆழித்தேரவனரக்கரையழலெழநோக்கி
ஏழுக்கேழெனவடுக்கியவுலகங்களெரியும்
ஊழிக்காலம்வந்துற்றதோபிறிதுவேருண்டோ
பாழித்தீச்சுடவந்ததென்னகரெனப்பகர்ந்தான்.

இ-ள். ஆழி — உருளையையுடைய, தேரவன் — தேருள்ளசூரியன்போல் மேலே புட்பகவிமானத்தினின்றும் இராவணனானவன், அரக்கரை — தன் கண்ணுக்குத்தோற்றின ராட்சதர்களை, அழலெழ-நெருப்புத்தோன்ற, நோக்கி — பார்த்து, ஏழுக்கு — மேலுலகங்களேழுக்கு நிகராக, ஏழென — இதுவுமோ ரேழென்றுசொல்ல, அடுக்கிய — அடுக்குள்ளதான என்வீடும், உலகங்கள் — அந்தவுலகங்களேழும், எரியும் — எரிந்துபோவதான, ஊழிக்காலம்-முடிவுகாலம், வந்துற்றதோ — வந்துகூடிற்றோ, பிறிதுவேறு — வேறேயாதேனும், உண்டோ — உண்டாயிற்றோ, பாழித்தீ-இப்படிப்பெருநெருப்பு, நகர்-கமதுரை, சுடவந்தது — சுடலாகியது, என் என — யாதுகாரணமென்று, பகர்ந்தான் — கேட்டான்—எ-று. 44

கரங்கள்கூப்பினர்தங்களைதிருவொடுங்காணார்
இரங்குகின்றவல்லரக்கரீதியம்பினரிறையோய்
தரங்கவேலையினெடியதன்வாலிட்டதழலால்
குரங்குசுட்டதீயென்றனுமிராவணன்கொதித்தான்.

இ-ள். கரங்கள் — கைகளை, கூப்பினர் — குவித்துக்கொண்டவர்களாகி, தங்களை — தமது உறவினரை, திருவொடும்-சம்பத்துடனேகூட, காணார்-ஒன்றும்போனவகைதெரியாமல், இரங்குகின்ற — அழுதுகொண்டுதிரிகிற, வல்ல

ரக்கர் — வலியராட்சதர்கள், ஈது - இப்படி, இயம்பினர் - சொன்னார்கள், இறையோய் - ஓ அரசனே, தரங்கம் — அலைகளையுடைய, வேலையின் — கடலிலும், நெடிய — நீண்ட, தன்வாலிட்ட — தனது வாலிலேகொளுத்தின, தழலால் — நெருப்பினாலே, குரங்கு - குரங்கானது, சுட்டது ஈது — இப்படிச் சுடலாயிற்று, என்றலும் — என்றுசொன்னவுடனே, இராவணன் — தசக்கிரீவன், கொதித்தான் — கொதிப்புக்கொண்டான்—எ-று. நெடியது நீண்டதுவான குரங்கெனவுமாம். 45

என்றுகொல்குரங்கன்ன திவ்வலியுள திலங்கை
நின்றுவெந்துமாநீறெழுகின்றது நெருப்புத்
தின்றுதேக்கிடுகின்றதுதேவர்கள்சிரிப்பார்
நன்றுநன்றுபோர்வலியென விராவணனக்கான்.

இ-ள். என்றுகொல் - எப்போதிலோ, குரங்கு அன்னது — ஒருகுரங்கு போல்வது, இவ்வலியுளது — இப்படிச் சாமர்த்தியமுள்ளதாக என்றேனுங் கண்டதுண்டா, இலங்கை — இந்த இலங்காபுரியில், நின்று — நெருப்பு நிலைகொண்டு, வெந்து — வேவுதலாகி, மாநீறு — பெரிதானசாம்பலாய், எழுகின்றது — பறக்கின்றது இப்படி என்றுகொல், நெருப்பு — அக்கினியும், தின்று — எரித்துச்சாப்பிட்டு, தேக்கிடுகின்றது — ஏப்பமிடுகிறது, தேவர்கள் — இது கண்டாலோதேவர்கள், சிரிப்பார் — நகைப்பார்கள், போர்வலி — அந்தக்குரங்கினதுமிக்கபலம், நன்று நன்று — மிகவு நன்றாயிருந்தது, என-என்று, இராவணன் — தசக்கிரீவனானவன், நக்கான் — சிரித்தான்—எ-று. 46

வேறு

உண்டநெருப்பைக்
கண்டனர்பற்றிக்
கொண்டணைகென்றான்
அண்டரைவென்றான்.

இ-ள். உண்ட - இப்படி எரித்த, நெருப்பை-அக்கினியை, கண்டனர்-பற்றி — கண்டுபிடித்து, கொண்டு அணைகென்றான் — கொண்டுவாருங்களென்று சொன்னான், அண்டரைவென்றான் — தேவரைவென்ற ராவணன்.

உற்றகலாமுன்
கற்றகுரங்கைப்
பற்றுமினென்றான்
முற்றுமுனிந்தான்.

இ-ள். உற்று — நீங்கள்போய், அகலாமுன் அது ஓடிப்போமுன்னே, கற்ற — இவ்வளவுவலியுள்ள, குரங்கை — அந்தக்குரங்கையும், பற்றுமின்-பிடியுங்கள், என்றான் — என்றுசொன்னான், முற்றும் - மேன்மேலும், முனிந்தான் - கோபங்கொண்டவனாகி—எ-று. 48

சாரயனின்றார்
வீரர்விரைந்தார்
நேருதுமென்றார்
தேரினர்சென்றார்.

இ-ள். சார் அயல் — அவனைச்சார்ந்தபக்கத்திலே, நின்றார் — நின்றமெய்காப்பாளரான, வீரர் — வீரர்கள், விரைந்தார் - விரைவுகொண்டாராகி, நேருதும் — அப்படியே பிடித்துவருகிறோம், என்றார் — என்று, தேரினர்-தேர்களின்மேலேறிக்கொண்டு, சென்றார் — போயினார்கள்—எ-று. 49

எல்லையிகந்தார்
வில்லர்வெகுண்டார்
பல்லதிகாரத்
தொல்லர்தொடர்ந்தார்.

இ-ள். எல்லையிகந்தார் — அளவற்றபேர்கள், வில்லர் — வில்லாளிகளாய், வெகுண்டார் — கோபங்கொண்டு, பல் அதிகாரம் — பலவித உத்தியோகஸ்தர்களான, தொல்லர் — பழையோர்களெல்லாம், தொடர்ந்தார் — அந்தத் தேர்வீரரைப் பின்பற்றிப் போனார்கள்—எ-று. 50

வேறு

நீர்கெழுவேலைநிமிர்ந்தார்
தார்கெழுதானைசமைந்தார்
போர்கெழுமாலைபுனைந்தார்
ஓரெழுவீரருயர்ந்தார்.

இ-ள். நீர்கெழு — ஜலரூபமான, வேலை — கடல்போல், நிமிர்ந்தார்-பொங்கினவர்களாய், தார்கெழு — தும்பைமாலையணிந்த, தானை — சேனைகளுடனே, சமைந்தார் - போர்க்கோலமாகி, போர்கெழு — போருக்குரிய, மாலைபுனைந்தார் — மாலையணிந்துகொண்டு, ஓரெழுவீரர் - ஒரு எழுவீரர்கள், உயர்ந்தார் — மேலே யெழுந்தார்கள்—எ-று. 51

விண்ணினைவேலைவிளிம்பார்
மண்ணினையோடிவளைந்தார்
அண்ணலைநாடியணைந்தார்
கண்ணினின்வேறயல்கண்டார்.

இ-ள். விண்ணினை — ஆகாயத்தையும், வேலை — கடலானது, விளிம்பு-ஓரத்திலே, ஆர்-பொருந்துவதான, மண்ணினை - பூமியையும், ஓடி - விரைந்து வந்து சேனைவீரர்கள், வளைந்தார் — சூழ்ந்தவர்களாய், அண்ணலை - அநுமாரை, நாடி — தேடி, அணைந்தார் — வந்தவர்கள், கண்ணினின் — தங்கள்கண்களாலே, வேறயல் - வேறே ஒருபுறத்தில், கண்டார் — பார்த்தார்கள் - எ-று.

பற்றுதிர்பற்றுதிரென்பார்
எற்றுதிரெற்றுதிரென்பார்
முற்றினர்முற்றுமுனிந்தார்
கற்றுணர்மாருதிகண்டான்.

இ-ள். பற்றுதிர் — பிடியுங்கள், பற்றுதிர் - பிடியுங்கள், என்பார் — என்பார்கள்சிலர், எற்றுதிர் — அடியுங்கள், எற்றுதிர் - அடியுங்கள், என்பார்-என்பார்கள் சிலர், முற்றினர் — இப்படிச் சூழ்ந்தவர்களாய், முற்றும் — முழுதும், முனிந்தார் — கோபங்கொண்டவர்களை, கற்றுணர் — கற்றறிந்த, மாருதிகண்டான் — அனுமாரும் பார்த்தார்—எ-று. 53

ஏல்கொடுவஞ்சரெதிர்ந்தார்
கார்கொடுகைகொடுகார்போல்
வேல்கொடு ¹காவினர்வெந்தீ
வால்கொடுதானும்வளைந்தான்.

இ-ள். ஏல்கொடு — அப்படிச் சூழ்ந்த கொடுமையுள்ள, வஞ்சர் - வஞ்சகரான ராட்சதர்கள், எதிர்ந்தார் — அனுமாருக்கு முன்னேவந்தார்கள், கால்கொடு — அவர்கள் அனுமாரைக் காலாலும், கைகொடு — கையாலும், வேல்கொடு — வேலாலும், கார்போல் - மேகம்போல், கோலினர் — சூழ்ந்தார்கள் அவர்களை, வெந்தீ - வெவ்விய நெருப்புமூளுகிற, வால்கொடு — தமது வாலாலே, தாமும் - தாமுமவரைப்போல், வளைந்தான் — சூழ்ந்தார்—எ-று. 54

பாதவமொன்றுபகுத்தான
மாதிரம்வாலின்வளைத்தான்
மோதினன்மோதமுனிந்தார்
எதியுநாளுமிழந்தார்.

இ-ள். பாதவமொன்று — ஒருமரத்தை, பகுத்தான் - பிடிங்கிக்கொண்டு, மாதிரம் — அவர்கள்சூழ்ந்த திசையெல்லாம், வாலின் — தமது வாலினாலே, வளைத்தான் — வளைத்துக்கொண்டு, மோதினன் — அந்த மரத்தாலடித்தார் அப்படி, மோத - அடிக்கிறதினாலே, முனிந்தார் — கோபங்கொண்டுவந்த அரக்கர்கள், எதியும் - தங்களாயுதங்களும், நாளும் — ஆயுளும், இழந்தார்- போனார்கள்—எ-று. 55

நூறிடமாருதிநொந்தார்
ஊறிடவூனிடுபுண்ணீர்
சேறிடவூரடுசெந்தீ
ஆறிடவோடினதாறாய்.

இ-ள். மாருதிநூறிட - அனுமார் அப்படி அடிக்க, நொந்தார் — நொந்தவர்களாய், ஊறிட — காயங்களும் புண்களுமாக, ஊனிடு - அவர்களுடம்பிலிருந்தொழுகிற, புண்ணீர் - ரக்தஜலமானதுபெருகி, சேறிட — மண்ணெல்

லாஞ்சேருக அதனாலே, ஊர் — அந்தவூரை, அடு — சுடுகிற, செந்தீ — சிவந்த நெருப்பு, ஆறிட — தணிவதாக, ஆறாய் — ஆறாகி, ஓடினது — ஓடலாயிற்று.

தோற்றினர்துஞ்சினரல்லார்
ஏற்றிகல்வீரரெதிர்ந்தார்
காற்றின்மகன்கலைகற்றான்
கூற்றினுமும்மடிகொன்றான்.

இ-ள். தோற்றினர் — அனுமார் கண்முன்னே காணலானவர்களிலே, துஞ்சினர் — இறந்தவர்களை, அல்லார் — அல்லாத ராட்சதர்கள், ஏற்று-ஆண் சிங்கங்கள்போல், இகல் — பலமுள்ள, வீரர் — சிலவீரர்கள், எதிர்ந்தார் — முன் வந்தார்கள், காற்றின்மகன் — வாயுபுத்திரனை, கலைகற்றான் - நவவியாகரண பண்டிதர், கூற்றிலும் — யமனிலும், மும்மடி — மூன்றுபங்கதிகமாக, கொன்றான் — அவர்களை வதைசெய்தார்—எ-று. 57

மஞ்சுறழ்மேனியர்வன்றாள்
மொய்ம்பினவீரர்முடிந்தார்
ஐம்பதினாயிரரல்லார்
பைம்புனல்வேலைபடிந்தார்.

இ-ள். மஞ்சுறழ் — மேகத்தையொத்த, மேனியர்-நிறமுள்ளவர்களாய், வன்தாள் — வலியனவான கால்களும், மொய்ம்பின — தோள்களுமுள்ள, ஐம்பதினாயிரம்வீரர் — இவ்வளவு வீரர்களும், முடிந்தார் — இறந்தார்கள், அல்லார் — சாவாதவர்களெல்லாம், பைம்புனல் — பசியநிறமுள்ள நீர்மயமான, வேலை - கடலிலே, படிந்தார் — முழுகிப்போனார்கள்—எ-று. 58

தோய்ச்சினன்வாலதிதோயாக்
காய்ச்சினவேலைகலந்தார்
போய்ச்சிலர்பொன்றினர்போனார்
ஏச்செனமைந்தரெதிர்ந்தார்.

இ-ள். தோய்ச்சினன்வாலதி — அப்போதனுமார் தமது வாலைக் கடலிலே நனைத்தார், தோயா — அப்படி நனைத்ததினாலே, காய்ச்சின — கொதிப்புண்டான, வேலை — கடலிலே, கலந்தார்போய் — முன்னேபோய் விழுந்தவர்களில், சிலர் பொன்றினர் - சிலரிறந்தார்கள், போனார் — கூடப்போனவர்களான, மைந்தர் — எழுவீரர்களும், ஏச்சென - இது நமக்கு மிகவும் இகழ் வென்று, எதிர்ந்தார் - அனுமாருக்கு முன்னே வந்தார்கள்—எ-று. 59

சுற்றினதேரினர்தோலா
விற்றொழில்வீரம்விளைந்தார்
எற்றினன்மாருதிபெற்ற
உற்றொழுவோருமுலந்தார்.

இ-ள். சுற்றின — அனுமாரைச் சூழ்ந்த, தேரினர் — தேர்களுள்ளவர்களாய், தோலா — தோற்பாகாத, விற்றொழில் — வில்லினது வித்தையாகிய, வீரம் — சாமர்த்தியங்களை, விளைத்தார் — செய்தார்கள், மாருதி எற்றினன் - அவர்களையும் அனுமாரடித்தார், எற்ற உற்று — அடிக்க அடிபட்டு, எழுவோரும் — அந்த எழுபேர்களும், உலந்தார் — இறந்தார்கள்—எ-று. 60

விட்டுயர்விஞ்சையர்வெந்தீ
வட்டமுலைத்திருவைகும்
புட்டிரள்சோலைபுறத்தும்
சுட்டிலதென்பதுசொன்னர்.

இ-ள். விட்டு — ஆகாயத்திலே, உயர் - உயர்ந்துபோகிற, விஞ்சையர் - வித்தியாதரர்கள் அனுமாரைப்பார்த்து, வெந்தீ-உமதுவாலினெருப்பானது, வட்டமுலை — வட்டமான தனங்களுள்ள, திரு — லட்சுமியான பிராட்டி, வைகும் — இருப்பதான, புள்திரள் - பட்சிகள் கூடுகிற, சோலை — சோலையையல்லது, புறத்தும் — அதன் பக்கங்களிலுங்கூட, சுட்டிலது - சுடாமல்விட்டது, என்பது — என்னுமதிசயத்தை, சொன்னர் — சொல்லினர்கள்-எ-று. விண்டு விட்டு எனவலித்தல். 61

வந்தவர்சொல்லமகிழ்ந்தான்
வெந்திறல்வீரன்வியந்தான்
உய்ந்தனனென்னவுயர்ந்தான்
பைந்தொடிதாள்கள்பணிந்தான்.

இ-ள். வந்தவர் — ஆகாயத்திலேவந்த, விஞ்சையர்கள், சொல்ல — சொல்லக்கேட்டு, மகிழ்ந்தான் — சந்தோஷித்தாராய், வெந்திறல் — வெவ்விய சாமர்த்தியமுள்ள, வீரன்-மகாவீரனை அனுமார், வியந்தான்-அதிசயித்து, உய்ந்தனன் - நன்றாயினேன், என்ன உயர்ந்தான் — என்றுமேலே கிளர்ந்து நோக்கி, பைந்தொடி — பிராட்டியினுடைய, தாள்கள் - பாதங்களை, பணிந்தான் — வணங்கினர்—எ-று. 62

பார்த்தனள்சானகிபாரா
வேர்த்தெரிமேனிகுளிர்ந்தாள்
வார்த்தையென்வந்தனையென்னப்
போர்த்தொழில்மாருதிபோனன்.

இ-ள். பார்த்தனள்சானகி — பிராட்டியுங்கண்டு, பாரா — அனுமாரைக் கண்டவுடனே, வேர்த்து — முன்னேவேர்வைகொண்டு, எரி — எரிகின்ற கொதிக்கிற, மேனி - சரீரமெல்லாம், குளிர்ந்தாள் — குளிர்ச்சியையடைந்தாள், வார்த்தையென் — தாயே உன்சொற்படியேபோய்ச் சொல்லவேண்டின எனது, வந்தனை என்ன — கும்பிடுதலைக் கண்டுகொளென்று, போர்த்

தொழில் - சண்டைசெய்கையி லுத்தியோகித்திருந்த, மாருதி — அனுமார், போனன் - போயினர்—எ-று. 63

தெள்ளியமாருதிசென்றான்
கள்ளவரக்கர்கள்கண்டால்
எள்ளுவர்பற்றுவரென்று
ஒள்ளெரியோனுமொளித்தான்.

இ-ள். தெள்ளிய - அப்படித் தெளிவுகொண்ட, மாருதி — அனுமாரானவர், சென்றான் - போனர் ஆகலாலே, கள்ளம் - வஞ்சனைசெய்கிற, அரக்கர்கள் - ராட்சதர்கள், கண்டால்—பார்த்தால், எள்ளுவர் — நம்மையிகழ்ந்து, பற்றுவரென்று — பிடித்துக் கொள்ளுவார்களென்று, ஒள் — ஒளி பொருந்தின, எரியோனும் — அக்கினிதேவனும், ஒளித்தான் — மறைந்து போனன்—எ-று. 64

இலங்கையெரியூட்டுபடலம் முற்றிற்று

ஆ படலம் - 14 – க்கு திருவிருத்தம் - 1250

கம்பநாட்டாழ்வார் திருவடிகளே சரணம்

# திருவடிதொழுதபடலம்

நீங்குவென்விரைவினென்னுநினைவினன்மருங்குநின்ற
தாங்கொருகுடுமிக்குன்றையருக்கனினணைந்தவையன்
வீங்கினனுலகையெல்லாம்விழுங்கினனென்னவீரன்
பூங்கழறொழுதுவாழ்த்திவிசும்பிடைக்கடிதுபோனன்.

இ-ள். நீங்குவென்விரைவின் - சீக்கிரத்திலே இவ்வூரைவிட்டுப்போவேன் போகவேண்டும், என்னு நினைவினன்-என்கிற எண்ணமுடையராய், மருங்கு நின்றது — பக்கத்தே நிற்பதான, ஆங்கு ஒரு— அங்கே ஒரு, குடுமிக்குன்றை - சிகரமுள்ளமலையை, அருக்கனின் — சூரியன்போல், அணைந்த ஐயன் - போய்க்குதித்த அனுமார், வீங்கினன் — தமதுபெரியவடிவைக்கொண்டவராய், உலகையெல்லாம் — அந்த ஊர்முழுதும், விழுங்கினனென்ன - மறைத்தாரென்னும்படிபருத்து, வீரன் — ஸ்ரீராமனுடைய, பூங்கழல் — அழகிய திருவடிகளை, தொழுது — கும்பிட்டு, வாழ்த்தி — துதித்து, விசும்பிடை- ஆகாயமார்க்கத்திலே, கடிதுபோனன் — விரைவிலே சென்றார்—எ-று. 1

மைந்நாகமென்னநின்றகுன்றையுமரபினெய்திக்
கைந்நாகமனையோனுற்றதுணர்த்தினன்கணத்தின்காலைப்
பைந்நாகநிற்கும்வீரர்தன்னெடுவரவுபார்க்கும்
கொய்ந்நாகநறுந்தேன்சிந்துங்குன்றிடைக்குதியுங்கொண்டான்.

இ-ள். மைந்நாகமென்ன நின்ற — இப்பெயர் கொண்டதாய் வழியிலே நிற்பதான, குன்றையும் — மலையையும், மரபின் - தாம் அம்மலைக்குமுன் சொன்னபடியே அதனிடத்தில், எய்தி — வந்து, கை-துதிக்கையையுடைய, நாகம் அனையோன் — யானையேநேரான அனுமார், உற்றது - தாம்போய்ச் சீதாபிராட்டியைக்கண்டுவந்ததை, உணர்த்தினன் — சொல்லி ஆனபின்பு, கணத்தின்காலை — ஒருக்ஷணப்பொழுதிலே, நிற்கும்பைந்நாகம் - படமெடுத்துக்கொண்டு நிற்கும்பாம்புகள்போல், வீரர் — அங்கதன் முதலானோர்கள், தன்நெடு — தாம்மீளவுருவாக, வரவு — வருகிறதை, பார்க்கும் — பார்த்துக் கொண்டே நிற்பதான, கொய் — மலர்கள்பறிக்கத்தக்க, நாகம் — புன்னை மரங்கள், நறுந்தேன் - நல்லதேனை, சிந்தும் — வழியவிடுகிற, குன்றிடை — மயேந்திர மலைமேலே, குதியுங்கொண்டான் — குதித்தார், உம்-அசை—எ-று. 2

போய்வருங்கருமமுற்றிற்றென்பதோர்பொம்மல்பொங்க
வாய்வெரீஇநின்றவென்றிவானரவீரர்மன்றே

பாய்வருநீளத்தாங்கணிருந்தனபறவைப்பார்ப்புத்
தாய்வரக்கண்டதன்னவுவகையிற்றளிர்த்தாரம்மா.

இ-ள். போய்வரும் - அனுமார் போய்வருவதான. கருமம் - காரியம், முற்றிற்று - முடிவுபெற்றது, என்பது — என்பதான, ஓர்பொம்மல் - ஒப்பில்லாத மகிழ்வு, பொங்க — அதிகமாக, வாய்வெரீஇ - வாய்குழறி, நின்ற- நிற்றலான, வென்றி - ஜயம்பெறவல்ல, வானரவீரர் - வானரத்தலைவர்கள், பாயவரு - தாங்கள் பரவி யுலாவுவதான, நீளத்து - கூட்டிலே, ஆங்கண் பாய்வரு நீளத்து - அங்கே பரவியுலாவுவதான கூட்டிலே, இருந்தன இருந்த, பறவைப்பார்ப்பு - பட்சிக்குஞ்சுகள், தாய் — தாய்ப்பட்சி, வரக்கண்டது - இரைமேய்ந்து வரக்கண்டதை. அன்ன - ஒப்பான, உவகையில் - மகிழ்விலே, தளிர்த்தார் - அதிகரானூர்கள் —எ-று. 3

அழுதனர்சிலவர்முன்னின்றார்த்தனர்சிலவரண்மித்
தொழுதனர்சிலவராடித்துள்ளினர்சிலவரள்ளி
முழுதுறவிழுங்குவார்போன்மொய்த்தனர்சிலவர்சுற்றும்
தழுவினர்சிலவர்கொண்டுசுமந்தனர்சிலவர்தாங்கி.

இ-ள். அழுதனர்சிலவர் - சில வீரர்களழுதார்கள், முன்னின்று - அனுமார் முன்னேநின்று, ஆர்த்தனர்சிலவர் - சிலவீரர்கள் கெர்ச்சித்தார்கள், அண்மி — கிட்டவந்து, தொழுதனர் சிலவர் - சிலவீரர்கள் வணங்கினார்கள், ஆடி - கூத்தாடி, துள்ளினர் சிலவர் - சிலவீரர்கள் துள்ளினார்கள், அள்ளி- தங்கள் கையாலெடுத்து, முழுதுஉற — அனுமாரை முழுதும்சேர, விழுங்குவார்போல் - பொசிப்பவர்களைப்போல், மொய்த்தனர் சிலவர் - சிலவீரர்கள் மொய்த்துச் சூழ்ந்துகொண்டார்கள், சுற்றும் — சுற்றிலும்வந்து, தழுவினர்- சிலவர் - ஆலிங்கனம் பண்ணினார்கள் சிலவீரர்கள், சிலவர்தாங்கி - சிலவீரர்களெடுத்து, சுமந்தனர் - சுமந்துகொண்டு வந்தார்கள் —எ-று. கொண்டு-கூட்டிக்கொண்டுவந்து தழுவினர். 4

தேனொடுகிழங்குங்காயுநறியனவரிதிற்றேடி
மேன்முறைவைத்தேமண்ணலுகர்ந்தனைமெலிவுதீர்தி
மானவாண்முகமேநங்கட்குரைத்ததுமாற்றமென்று
தானுயர்சாகமெல்லாமுறைமுறைசிலவர்தந்தார்.

இ-ள். தேனொடு - தேனுடனே, கிழங்கும் - கிழங்குகளும், காயும்-காய் கனிகளும், நறியன - இன்னம் நல்லவுணவுகளை, அரிதில் — வருத்தப்பட்டு, தேடி — சம்பாதித்துவந்து, மேல் - முன்னேதானே, முறை-உமக்குத் தகுதியாக, வைத்தேம் - வைத்திருக்கிறோம், அண்ணல் - ஓ பெருமையிற் சிறந்தவரே, நுகர்ந்தனை — சாப்பிட்டீராகி, மெலிவுதீர்தி — உமதிளைப்புத்தீரும், மானம் — பெருமையுள்ள, வாள் - ஒளிகொண்ட, முகமே - உமது முகந்தானே, நங்கட்கு — எங்களுக்கு, உரைத்தது — சொல்லியது, மாற்றம் — நீர் எங்களுக்குச்சொல்வதை, என்று - என்றுகொண்டாடி, தான் உயர் - தானே

தானே உயர்கொண்ட, சாகம் — தேக்கிலைகளிலே, எல்லாம் — முன்சொன்னவைகளையெல்லாம், முறைமுறை-வரிசைவரிசையாக, சிலவர் - சிலவானரங்கள், தந்தார் — கொண்டுவந்து வைத்தார்கள்—எ-று. சாகம் — இலைக்காகலால் முதலாகுபெயரென்க. 5

தாள்களின்மார்பிற்றோளிற்றலைகளிற்றடக்கைதம்மின்
வாள்களின்வேலிற்கோலின்மழையினின்வகுத்தபுண்கள்
நாள்கண்மேலுலகிற்சென்றவெண்ணனநம்பிக்கண்ண
ஊழ்கொளநோக்கிநோக்கியுயிருகவுளைந்துயிர்த்தார்.

இ-ள். தாள்களில் — கால்களிலும், மார்பில் — மார்பிலும், தோளில்-தோள்களிலும், தலைகளில் — தலையினிடங்களிலும், தடக்கைதம்மில் - நீண்டகைகளிலும், வாள்களில் - கத்திகளாலும், வேலில்-வேல்களாலும், கோலில் - அம்புகளாலும், மழையினில் — மழைத்தாரைகள் பட்டாற்போல், வகுத்த-பட்டிருக்கிற, புண்கள் — காயங்களானவை, மேலுலகில் — ஆகாயத்திலே தோன்றுகிற, நாள்கள் — நக்ஷத்திரங்களுக்கும், சென்ற — அதிகமான, எண்ணன — கணக்குள்ளவைகளாக, நம்பிகண்ண - வானரசிரேஷ்டருடைய உடம்பிலுள்ளவைகளை, ஊழ்கொள - ஒவ்வொன்றாக, நோக்கிநோக்கி-பார்த்துப்பார்த்து, உயிர் — தங்களுயிர், உக — போவனவாக, உளைந்து — வருந்தி, உயிர்த்தார் — நெடுமூச்சுவிட்டார்கள்—எ-று. 6

வாலிகாதலனைமுந்தைவணங்கினனெண்கின்வேந்தைக்
காலுறப்பணிந்துபின்னைக்கடன்முறைகடவோர்க்கெல்லாம்
மேலுறவியற்றியாங்கணிருந்திவணிருந்தோர்க்கெல்லாம்
ஞாலநாயகன்றன்றேவிசொல்லினனன்மையென்றான்.

இ-ள். வாலிகாதலனை — அங்கதனை, முந்தி — முன்னே, வணங்கினன்-தொழுதுகொண்டு, எண்கின் வேந்தை — சாம்பனை, காலுற — அவர்காலிலே விழுந்து, பணிந்து — சேவித்துக்கொண்டு, பின்னை — பின்பு, கடன்முறை-செய்யும் உபசாரப்படி, கடவோர்க்கெல்லாம் — செய்யத்தக்கவர்களுக்கெல்லாம், மேலுற — அவரவர்களும் கொண்டாடிக்கொள்ள, இயற்றி - செய்து உபசரித்து, அங்கண் — அவ்விடத்திலே, இருந்து-தாமொருபுறத்திலிருந்து, இவண் — இங்கே, இருந்தோர்க்கெல்லாம் - இருந்த உங்களுக்கெல்லாம், ஞாலநாயகன் — ஜகநாதனான ஸ்ரீராமனுக்கு, தன்தேவி — உரியபத்தினியார், நன்மைசொல்லினள் — மங்களஞ்சொன்னார், என்றான் என்றுசொன்னானனுமார்—எ-று. 7

என்றனுங்கரங்கள்கூப்பியெழுந்தனரிறைஞ்சித்தாழா
நின்றனருவகைபொங்கவிம்மலானிமிர்ந்தநெஞ்சர்
சென்றதுமுதலாவந்ததிறுதியாச்செப்பற்பாலை
வன்றிறலுரவோவென்னச்சொல்லினன்மருத்தின்மைந்தன்.

இ-ள். என்றலும் — என்றுசொன்னவுடனே, கரங்கள்கூப்பி — கைகள் குவித்து, எழுந்தனர் — எழுந்து, இறைஞ்சி — குனிந்து, தாழா நின்றனர்-வணங்குகின்ற வானரவீரர்கள், உவகைபொங்க — சந்தோஷம் அதிகமாக, விம்மலால் — பெருகுதலினாலே, கிமிர்ந்தநெஞ்சர் — கிறைவுகொண்ட மன முள்ளவர்கள், சென்றதுமுதலா — கீர் போனதுமுதலாக, வந்தது — திரும்பி வந்தது, இறுதியா — முடிவாக, செப்பற்பாலை — நீர் சொல்லவேண்டும், வன் திறல் — வலிய சாமர்த்தியமுள்ள, உரவோய் — திடசித்தரே, என்ன — என்று கேட்க, சொல்லினன் — சொன்னார், மருத்தின்மைந்தன் — வாயுபுத்திரனான அனுமார்—எ-று. 8

ஆண்டகைதேவியுள்ளத்தருந்தவமமையச்சொல்லிப்
பூண்டபேரடையாளங்கைக்கொண்டதும்புகன்றுபோரில்
நீண்டவாளரக்கரோடுநிகழ்ந்ததுநெருப்புச்சிந்தி
மீண்டதும்விளம்பான்றான்றன்வென்றியையுரைப்பவெள்கி.

இ-ள். ஆண்தகை — புருஷசிரேஷ்டரான ஸ்ரீராமனுடைய, தேவி-மனைவியான பிராட்டியின், உள்ளத்து — மனத்திலுள்ள, அருந்தவம் — அரிதான தவமுழுதும், அமைய — தெரிய, சொல்லி — சொன்னாராகி, பூண்ட-பிராட்டி அணிந்திருந்த, பேர் அடையாளம்-பெரிய அடையாளத்தை, கைக் கொண்டதும் — தாம் கையிலே பெற்றுவந்ததையும், புகன்று — சொல்லி, போரில் — சண்டையிலே, நீண்ட — அதிகமான, வாள் — கத்திகள்கொண்ட, அரக்கரொடு — ராட்சதர்களுடனே, நிகழ்ந்ததும் — தாம் சண்டைசெய்ததும், நெருப்புச்சிந்தி — அவ்வூரிலே நெருப்புவைத்துத் தாம், மீண்டதும் — திரும்பினதும், உரையான் — சொல்லாதொழிந்தார், தான்தன் — தாமேதமது, வென்றியை — ஜயத்தை, உரைப்ப — சொல்ல, வெள்கி — நாணி உரையார்.

பொருதமைபுண்ணேசொல்லவென்றமைபோந்ததன்மை
உரைசெயவூர்தீயிட்டதோங்கிரும்புகையேயோதக்
கருதலர்பெருமைதேயுமீண்டிலாச்செயலேகாட்டத்
தெரிதரவுணர்ந்தேம்பின்னரென்னினிச்செய்துமென்றார்.

இ-ள் பொருதமை — நீர் அங்கே சண்டைபண்ணினதை, புண்ணே-உம் முடம்பிற் காயங்களே, சொல்ல — தெரியச்சொல்லுதலாலும், வென்றவை-நீர் வென்றீரென்பதை, போந்ததன்மை — மீண்டுவந்ததே, உரைசெய்-எமக்குச் சொல்லுதலாலும், ஊர் — அந்த ஊரிலே நீர், தீயிட்டது — நெருப்பை வைத்துவந்தது, ஓங்கு — உயர்ந்தெழுந்த, இரும்புகையே — புகைக்கம்மலே, ஓத — சொல்லுதலாலும், கருதலர் — அந்தப்பகைவரது, பெருமை — அதிகமானதை, தேவி — சீதாபிராட்டி, மீண்டிலா — திரும்பாதிருக்கிற, செயலே-செய்கையே, காட்ட — தெரியச்செய்தலாலும், தெரிதர — நீர் போய்வந்த தெல்லாம் எங்களுக்குத் தெரியம்படி, உணர்ந்தேம்-தெரிந்துகொண்டோம், பின்னர் — இனிமேல், என் இனி — யாதுகாரியம் இங்கிருந்து, செய்தும்-செய்யக்கடவோம், என்றார் — என்று யூகித்தார்கள்—எ-று. 10

யாவையுமினிவேறெண்ணல்வேண்டுவதிறையுமில்லைச்
சேவகன்றேவிதன்னைக்கண்டமைவிரைவிற்செப்பி
ஆவதவ்வண்ணலுள்ளத்தருந்துயராற்றலேயாம்
போவதுபுலமையென்னுப்பொருக்கெனவெழுந்துபோனர்.

இ-ள். இனியாவையும் – இனியெல்லாம், வேறு – வெவ்வேறான யோசனைகள், எண்ணல்வேண்டுவது – ஆலோசிக்கவேண்டுவது, இறையுமில்லை கொஞ்சமேனும் இல்லை, சேவகன் - ஸ்ரீராமனுடைய, தேவிதன்னை - மனைவியான பிராட்டியை, கண்டமை – கண்டுவந்ததை, விரைவில் - சீக்கிரத்திலே போய், செப்பி – சொல்லி, ஆவது – நாம் செய்யவேண்டுவது – அவ்வண்ணல் – அந்த ஸ்ரீராமனுடைய, உள்ளத்து – மனத்திலுள்ள, அருந்துயர் - அரிதான துக்கத்தை, ஆற்றலே – தீரச்செய்தலே, ஆம் – நாம் செய்யவேண்டுவது, போவது-இனிப்போகிறதே, புலமையென்று-அறிவுடைமையென்று பொருக்கென – திடீரென்று விரைவிலே, எழுந்துபோனர் – அவிடம்விட்டுப்பெயர்ந்துபோயினர்கள், யாவையும் – இனிச்செய்யவேண்டுமவைகளெல்லாம் எண்ணல்வேண்டுவதிறையுமில்லையெனக் கூட்டுக—எ-று. 11

போயினர்களிப்பினோடும்புங்கவன்சிலையினின்றும்
ஏயினபகழியன்னவெழுந்துவிண்படர்ந்துதாவிக்
காய்கதிர்க்கடவுள்வானத்துச்சிசென்றிருக்குங்காலத்
தாயனவீரரும்போய்மதுவனமதிலிருத்தார்.

இ-ள். களிப்பினோடும் – சந்தோஷத்துடனே, போயினர் – போனர்கள், புங்கவன் – ஸ்ரீராமனுடைய, சிலையினின்றும் - வில்லிலிருந்து, ஏயின-தொடுத்துவிட்ட, பகழிஅன்ன – அம்புபோல், எழுந்து – மேலேகிளர்ந்து, விண்படர்ந்து – ஆகாயமார்க்கமாகச்சென்று, தாவி – பாய்ந்து, காய் – சுடுகிற, கதிர்க்கடவுள் – சூரியபகவான், வானத்து-ஆகாயத்தின், உச்சிசென்று-உச்சியிலேவந்து, இறுக்குங்காலத்து – சேரும்போது, ஆயன் – அப்படிப்பட்ட, வீரரும் – மகா வீரர்களெல்லாம், போய் – விரைவிலேபோய், மதுவனமதில் – மதுவனத்திலே, இறுத்தார் – போய்ச்சேர்ந்தார்கள், ஆயன வீரர் – ஆகாசமார்க்கமாகப் போகத்தக்க வீரர்கள்என்க—எ-று. 12

ஏதுநாளிறந்தசாலவென்பதோர்வருத்தநெஞ்சத்
தாதலாலுணர்வுதீர்ந்துவருந்தினமளியமெம்மைச்
சாதறீர்த்தளித்தவீரதந்தருளுணவுமென்னப்
போதுநாம்வாலிசேய்பாலென்றுடனெழுந்துபோனர்.

இ-ள். ஏது – இனி எப்படி, நாள் இறந்தசால – கெடுவுள்ளகாலம் மிகவுங் கழிந்துபோயின, என்பது – என்பதான, ஓர் – ஒரு, வருத்தம் – துன்பம், நெஞ்சத்து - மனத்திலே, ஆதலான் – எங்களுக்கு உண்டானதினலே, உணர்வுதீர்ந்து - புத்திமயங்கி, வருந்தினம் – வருத்தப்பட்டோம், அளியம்-உம்முடைய தயவுக்குப் பாத்திரரான நாங்கள் ஆதலால், எம்மை - எங்களை

யெல்லாம், சாதல் – சீதையைக் காணமையாலே நாமெல்லா மறிந்துபோ கலாமென்பதை, தீர்த்து – நீர்போய்க்கண்டு அவ்விறந்துபோவதைநீக்கி, அளித்த – ரட்சித்தருளின, வீர – மகாவீரனை அனுமாரே, உணவும் – எங்களுக்கு வேண்டின பொசிப்பையும், தந்தருள்-நீரே கொடுத்தருளவேணும், என்ன – என்று வானரவீரர்கள்கேட்க அதற்கு, நாம்போதும் – நாம்போய்க் கேட்போம், வாலிசேய்பால் – வாலிபுத்திரனிடத்தே, என்றுடன் – என்று யோசித்துடனே, எழுந்துபோனர் – எழுந்திருந்து போயினர்கள், உணர்வு சேர்ந்தென்றல் – பொசிப்பில்லாமலெனக—எ-று. 13

அங்கதன்றன்னையண்மியனைவருமிருகைகூப்பிக்
கொங்குதங்கலங்கன்மார்பநின்னுடைக்குரக்குச்சேனை
வெங்கதமொழிந்துசாலவருந்தினவேடையோடி
இங்கிதற்களித்தல்வேண்டுமிறாலுமிழ்பிரசமென்றான்.

இ-ள். அங்கதன்றன்னை – வாலிகுமாரனை, அண்மி – அடுத்து, அனைவரும் – எல்லாரும், இருகைகூப்பி - தம் இரண்டுகைகளுங்குவித்து, கொங்கு தங்கு - மணந்தங்கின, அலங்கல் – மாலையணிந்த, மார்ப - மார்பையுடையவனே, நின்னுடை – உன்னுடைய, குரக்குச்சேனை – வானரச்சேனைகள், வெங்கதம் – தங்கள் வெவ்விய ஆணவச்செய்கைகளெல்லாம், ஒழிந்து - தீர்ந்து, சாலவருந்தின - மிகவும் வருத்தத்தையடைதலாயின, வேடையோடி- நடுமிகுந்துவருந்தின அதனாலே, இங்கிதற்கு – இங்கேவந்துசேர்ந்த இந்த வானரங்களுக்கு, இறால்உமிழ்-தேன்கூட்டிலிருந்து தானே ஒழுகிப்போகிற, பிரசம் – மதுவை, அளித்தல்வேண்டும் – நீர் உண்ணும்படி உத்தரவு செய்தருளவேணும், என்றான் – என்று அனுமார்சொன்னார்—எ-று. உண்பாரில்லாமையாலே ஒழுகிக்கொண்டிருக்கிறது மதுவனம் என்க. 14

நன்றெனவவனுநேர்ந்தானரலையுநடுங்கவார்த்துச்
சென்றுறுபிரசந்தூங்குஞ்செழுவனமதனினூடே
ஒன்றின்முன்னொன்றுபாயுமொடிக்குமென்பிரசமெல்லாம
தின்றுதின்றுவகைகூருந்தேனுகரளியின்மொத்தே.

இ-ள். நன்றென – இது நல்லகாரியந்தானென்று, அவனும்-அனுமார் போலவே அங்கதனும், நேர்ந்தான் – உடன்பாடாயினன், நரலையும் – அப்போது கடலும், நடுங்க – கலங்கும்படி, ஆர்த்து – வானரங்கள்கர்ச்சித்து, சென்று உறு – அந்த மதுவனத்துக்குப்போய் அங்கே அதிகமான, பிரசம்- தேனகியமது, தூங்கும் – தங்கிக்கிடக்கிற, செழுவனமதனினூடே – செழித்த அந்த மதுவனத்துக்குள்ளே, ஒன்றின்முன் -ஒருவானரத்துக்குமுன்னே, ஒன்றுபாயும் – மற்றொருவானரந்தாவும், மென்பிரசமெல்லாம் – மெல்லிதானமதுவின் கூடுகளெல்லாம், ஒடிக்கும் – கொம்புகளோடொடிக்கும், தின்றுதின்று – அம்மதுவைப் பருகிப்பருகி, உவகை கூறும் – சர்தோஷமிகுதிகொள்ளும், தேன் – தேனை, நுகர் – பருகுகிற, அளியின் – வண்டுகள் போல், மொய்த்து – நெருங்கின—எ-று. 15

ஒருவர்வாய்க்கொள்ளுந்தேனையொருவருண்டெளிதிற்போவார்
ஒருவர்கைக்கொள்ளுந்தேனையொருவர்கொண்டோடிப்போவார்
ஒருவரோடொருவரொன்றத்தழுவுவர்விழுவரோடி
ஒருவர்மேலொருவரேறியோகையென்றுவகைகூர்வார்.

இ-ள். ஒருவர் — ஒருவானரம், வாய்க்கொள்ளும் — வாயிலேகொண்டிருக்கிற, தேனை — மதுவை, ஒருவர் - மற்றொருவானரம், கொண்டு — பறித்துக்கொண்டு, ஓடிப்போவார் - ஓடிப்போய், ஒருவரோடொருவர் - ஒருவானரத்துடனே மற்றொருவானரம், ஒன்ற — சந்தோஷ ஒருமையினாலே, தழுவுவர் — கட்டிக்கொள்ளும், விழுவர் — கீழேவிழுந்துபுரளும், ஓடி — ஓட்டங்கொண்டு, ஒருவர்மேல் - ஒருவானரத்தின்மேலே, ஒருவர் — மற்றொருவானரம், ஏறி — ஏறிக்கொண்டு, ஓகையென்று - இப்படியேறுதலே சந்தோஷமென்று, உவகை கூறுவார் — களிப்பிலே அதிகமாகும்—எ-று. 16

இன்னனநிகழுங்காலையெரிவிழித்தெழுந்துசீறி
அந்நெடுஞ்சோலைகாக்கும்வானரரவரைநோக்கி
மன்னெடுங்கதிரோன்மைந்தனாணையைமறுத்துநீவிர்
என்னினைந்தென்செய்தீர்மன்னும்முயிர்க்கிறுதியென்ன.

இ-ள். இன்னன — இவ்வகைகள், நிகழுங்காலை - நடக்கும்போது, எரிவிழித்து — நெருப்புப்போல் கண்களைத்திறந்து, எழுந்துசீறி - மேலெழுந்து கோபங்கொண்டு, அந்நெடுஞ்சோலை — அந்தநெடிதான மதுவனத்தை, காக்கும்வானரர் — காக்கின்ற வானரவீரர்கள், அவரைநோக்கி-அவ்வானரங்களையெல்லாங்கண்டு, மன்னெடும் - நிலையான ஆதிக்கியத்திலே நெடிதான, கதிரோன்மைந்தன் — சூரிய குமாரனான சுக்கிரீவனுடைய, ஆணையைமறுத்து-ஆக்ஞையைக்கடந்து, நீவிர் - நீங்களெல்லாம், என்-யாதுபயனை, நினைந்து-எண்ணி, என்செய்தீர் — என்னகாரியஞ் செய்யலானீர்கள், மன் — மிகவும், நும் உயிர்க்கு — உங்களுயிர்களுக்கு, இறுதி - முடிவேயாம், என்ன — என்று வனங்காக்கும் வானரங்கள்சொல்லி—எ-று. 17

முனியுமாலெம்மையெங்கோனென்றவர்மொழிந்துபோந்து
கனியுமாமதுவனத்தைக்கட்டழித்திட்டதிந்து
நனிதருகவியின்றானைநண்ணலார்செய்கைநாண
இனியெம்மாற்செயலின்றென்னுத்ததிமுகற்கியம்பினாரே.

இ-ள். எம்மை — எங்களை, எங்கோன் — எங்களுக்குத்தலைவனானவன், முனியும் - கோபிப்பான் ஆகலால், என்று அவர் — என்று அந்தவானரங்கள், மொழிந்துபோந்து — சொல்லிவிட்டுப்போய், கனியும் — மிகவும் பழுத்துமுதிர்ந்த, மாமதுவனத்தை — பெரியமதுவனமெல்லாம், கட்டழித்திட்டது-கட்டுக்குலையப்பண்ணிவிட்டது, இன்று - இப்போது, நனிதரு - மிகவுமதிகமான, கவியின்றானை — வானரசேனைகள் கட்டழித்திட்டது, நண்ணலார்-நமக்குப் பகைவர்கள், செய்கை - செய்கிறதுகூட, நாண - இப்படிச்செய்

யார்களென்ன கட்டழித்திட்டது, இனி — இனிமேல், எம்மால்-எங்களாலே, செயல் - செய்யத்தக்கது, இன்றென்னா-வேறே ஒன்றுமில்லையென்று, ததி முகற்கு — ததிமுகனான தலைவனுக்கு, இயம்பினர் — சொன்னார்கள்—எ-று.

கேட்டவன்யாவரேயம்மதுவனங்கேடுசூழ்ந்தார்
காட்டிரென்றெழுந்தானன்னான்வாலிசேய்முதலகற்றோர்
ஈட்டம்வந்திறுத்ததாகவங்கதனேவறன்னால்
மாட்டினகவியின்றானைமதுவளருலவையீட்டம்.

இ-ள். கேட்டவன்-அப்படிச் சொல்லக்கேட்ட ததிமுகனானவன், அம் மதுவனம் — அந்தமதுவனத்தை, கேடு சூழ்ந்தார் — கெடுத்தழித்தவர்கள், யாவரே — யார், காட்டிரென்று — காட்டுங்களென்று, எழுந்தான் அன்னான்- எழுந்துவந்தான் அந்தத்ததிமுகன், வாலிசேய்முதல் — அங்கதன்முதலான, கற்றோரீட்டம் — தெரிந்த அதிவீரர்கள் கூட்டமே, வந்திறுத்தது — வந்திறங்கியது, ஆக — இறங்குதல் ஆகவே, அங்கதன் — வாலிபுத்திரனுடைய, ஏவல் தன்னால் — உத்தரவினாலே, மதுவளர் — மதுக்கட்டியிருக்கிற, உலவை யீட்டம் - மரங்களின் கூட்டமெல்லாம், கவியின்றானை-வானரசேனைகள், மாட்டின — ஒடித்தழித்தன அதுகண்டு நாங்கள்—எ-று. 19

உரங்கிளர்மதுகையான்றனாணையாலுறுதிகொண்டே
குரங்கினந்தம்மையெல்லாம்விலக்கினங்கொடுமைகூறிக்
கரங்களாலெற்றநொந்தேங்காவலோயென்னலோடும்
தரங்கிளர்தாதைபட்டதறிந்திலன்றனயன்போலும்.

இ-ள். உரங்கிளர் — பலமிகுதியான, மதுகையான்றன் - சுக்கிரீவனுடைய, ஆணையால் உறுதிகொண்டு — உத்தரவின் பலங்கொண்டு, குரங்கினந் தம்மையெல்லாம் — வானரங்களையெல்லாம், விலக்கினம் — நாங்கள் தடை செய்தோம், கொடுமை கூறி — அவ்வானரங்கள் கொடுஞ்சொற்கள்சொல்லி, கரங்களால் — தங்கள்கைகளாலே, எற்ற — எங்களை அடிக்க, நொந்தேம் - மிகவும் வருந்தினோம், காவலோய் — எங்களைக்காக்குந்ததிமுகனே, என்னலோடும் — என்றுசொன்ன அளவிலே, தரங்கிளர்-மலைபோல்விளங்கின, தாதை- இந்த அங்கதனுடைய தந்தையான அந்தவாலி, பட்டது - பட்டுமுடிந்ததை, தநயன் — புத்திரனான அங்கதன், அறிந்திலன் — தெரிந்துகொள்ளாதவனானான், போலும் — என்பது சரியே—எ-று. 20

எனவுரைத்தனலிற்பொங்கியெழுந்திரைத்திரண்டுகோடி
கனைகழற்கவியின்சேனைகல்லெனக்கலந்துபுல்லப்
புனைமதுச்சோலைபுக்கான்மதுநுகர்புனிதச்சேனை
அனகனைவாழ்த்தியோடியங்கதனடியின்வீழ்ந்த.

இ-ள். என உரைத்து-என்றுசொல்லி, அனலில் — நெருப்பைப்போல், பொங்கி — சுவாலித்து, எழுந்து — மூண்டு, இரைத்து — சத்தித்து, இரண்டு

கோடி — இரண்டுகோடி அளவுள்ள, கனைகழல் — சத்திக்கும் வீரக்கழலையு டைய, கவியின்சேனை — வானரசேனைகள், கல்லென - கல்லென்றொலித்து, கலந்து — கூடி, புல்ல — தன்னொடுகூட, புனைமது — தேனைக்கொண்டுள்ள, சோலை - தென்னஞ்சோலை பனஞ்சோலையாயவைக்குள்ளே, புக்கான் — வந்தான் அவன்வந்த அளவிலே, மதுநுகர் — மதுவைக்குடித்துக்கொண்டிருக்கிற, புனிதம் — நல்ல களிப்புள்ள, சேனை — வானரசேனைகள், அனகனை - ஸ்ரீராமனை, வாழ்த்தி — வாழ்த்திக்கொண்டு, ஓடி - ஓடிப்போய், அங்கதன் - வாலிபுத்திரனுடைய, அடியில் — பாதத்திலே, வீழ்ந்த — விழுதலாயின-எ-று.

இந்திரன்வாலிக்கீந்தவின்சுவைமதுவின்கானம்
அந்தரத்தவர்க்குநோக்கற்கரியவென்னாணைதன்னைச்
சிந்தினைகதிரோன்மைந்தன்றிறலினையறிதியன்றே
மந்தரமனையதோளாயிற்றதுன்வாழ்க்கையின்றே.

இ-ள். இந்திரன் — தேவேந்திரனானவன், வாலிக்கு — வாலியென்பவனுக்கு, ஈந்த — கொடுத்த, இன்சுவை — இனியசுவையையுடைய, மதுவின் கானம் - இந்த மதுவனமானது, அந்தரத்தவர்க்கும் — ஆகாசவாசிகளுக்கும், நோக்கற்கு — பார்த்தற்கு, அரிய — கூடாததான, என் ஆணைதன்னை — என தாக்ஞையை, சிந்தினை — அவமதித்தாய், கதிரோன்மைந்தன் — சுக்கிரீவனுடைய, திறலினை — சாமர்த்தியத்தை, அறிதியன்றே — நீ அறிந்ததுதானல்லவோ, மந்தரம் — மந்தரகிரியை, அனைய — ஒப்பான, தோளாய் — தோள்களுள்ள அங்கதா, உன்வாழ்க்கை - உனதுவாழ்நாள், இற்றது - முடிவாயிற்று, இன்றே - இன்றைத்தினமே—எ-று. 22

மதுவனந்தன்னையின்னேமாட்டுவித்தனைநீயென்னாக்
கதுமெனவாலிசேய்மேலெறிந்தனன்கருங்கற்பாறை
அதுதனைப்புறங்கையாலேயகற்றியங்கதனுஞ்சீறித்
ததிமுகன்றன்னைப்பற்றிக்குத்தினன்றடக்கைதன்னால்.

இ-ள். மதுவனந்தன்னை — இந்த மதுவனத்தை, இன்னே - இன்றொருபொழுதிலே, மாட்டுவித்தனை - அழிவுபடச்செய்தாய், நீயென்னா — நீயேயென்று, கதுமென — சீக்கிரமாக, வாலிசேய்மேல் — அங்கதன்மேலே, கருங்கற்பாறை — ஒரு கறுத்த கல்லுப்பாறையை, எறிந்தனன் — எடுத்து வீசினன், அதுதனை — அந்த கல்லுப்பாறையை, புறங்கையாலே — தன் புறங்கையினாலே, அகற்றி — நீங்கவிலக்கி, அங்கதனும் — அங்கதனானவன், சீறி - கோபங்கொண்டு, ததிமுகன்றன்னை — அந்தத்ததிமுகனானவனை, பற்றி-பிடித்து, தடக்கைதன்னால் — தனது நீண்ட கையினாலே, குத்தினன் - குத்தினனென்க—எ-று. 23

வாய்வழிகுருதிசோரமணிக்கையான்மலங்கமோதிப்
போய்மொழிகதிரோன்மைந்தற்கென்றவன்றன்னைப்போக்கித்

தீயெழும்வெகுளிபொங்கமற்றவன்சேனைதன்னைக்
காய்கனல்மொழியுங்கையாற்குத்துதிர்கட்டியென்றான்.

இ-ள். வாய்வழி — ததிமுகன்வாயிலே, குருதிசோர — ரக்தமொழுக, மணிக்கையால் - தனது அழகிய கையினாலே, மலங்க-அவன்வருந்த. மோதி-அடித்து, கதிரோன்மைந்தற்கு — சுக்கிரீவனுக்கு, போய்மொழி — நீயேபோய்ச்சொல்லு, என்று — என்றுசொல்லி, அவன்றன்னை — அந்தத்ததிமுகனை-போக்கி — போகவிட்டு, தீயெழும் — நெருப்புப்பறப்பதான, வெகுளிபொங்க-கோபமதிகமாக, மற்றவன் சேனைதன்னை - அந்தத் ததிமுகனுடைய சேனைகளையெல்லாம், கட்டி — கொடிகளாலே பிணித்து, காய்கனல் — சுடுகிறநெருப்பை மொழியும் — சிந்துகின்ற, கையால் — உங்கள் கைகளாலே, குத்துதிர் — குத்துங்களென்று சொன்னான் — எ-று. 24

படித்தனர்கொடிகடம்மாற்பிணித்தனர்பின்னுமுன்னும்
இடித்தனரசனியஞ்சவெறுழ்வலிக்கரங்களோச்சித்
துடித்தனருடலஞ்சோர்ந்தார்சொல்லும்போய்நீருமென்னப்
படித்தனன்வாலிமைந்தன்பயத்துடனவரும்போனார்.

இ-ள். கொடிகள் தம்மால் — நீண்ட கொடிகளாலே, பிடித்தனர் - அவர்களைப் பிடித்து, பிணித்தனர் — கட்டினார்கள், பின்னுமுன்னும் — நெஞ்சிலும் முதுகிலும், இடித்தனர் - இடித்தார்கள், அசனியஞ்ச — இடியும்பயப்பட, வெறுழ்வலி - மிகுந்த பலமுள்ள, கரங்கள் — கைகளை, ஓச்சி - ஓங்கியடித்தனர், துடித்தனர் - அந்தத் ததிமுகன் சேனைகள் துடித்தார்கள், உடலம் சோர்ந்தார் — உடம்பெல்லாமிளைத்தாராகித் துடித்தனர், நீரும் - இப்போது நீங்களும, போய் — சென்று, சொல்லும் - சொல்லுங்கள், என்ன — என்று படித்தனன் - சொன்னான், வாலிமைந்தன் — அங்கதன். அவரும் — அவர்களும், பயத்துடன் - அச்சத்துடனே, போனார் போயினார்கள் — எ-று. 25

அலைபுனல்குடையுமாபோன்மதுக்குடைந்தாடித்தத்தம்
தலைவர்கட்கினியதேனுங்கனிகளும்பிறவுந்தந்தே
உலைவுறுவருத்தந்தீர்ந்திட்டுபவனத்திருந்தாரப்பால்
சிலைவளைத்துலவுந்தேரோன்றெறும்வெயிறணிவுபார்த்தே.

இ-ள். அலைபுனல் — அலையையுடையநீரிலே, குடையுமாபோல்-முழுகுகிறதுபோல், மதுக்குடைந்து — மதுபானத்திலேமுழுகி, ஆடி - உண்டாடி, தத்தம் — தங்கள் தங்களுடைய, தலைவர்கட்கு — எஜமான்களுக்கு, இனியனன்றான. தேனும் — ரசமும், கனிகளும் - பழங்களும், பிறவும் — மற்றும் வேண்டியவைகளெல்லாம், தந்து — கொண்டுவந்துகொடுத்து, உலைவுறு-தாங்கள் வருந்தலான, வருத்தம் — இளைப்பெல்லாம், தீர்ந்திட்டு-ஆறிக்கொண்டு, உபவனத்திருந்தார் — மற்றொரு சோலையிலே கூடியிருந்தார்கள், அப்பால்-அதற்குமேல். சிலை — மகாமேருவானமலையை, வளைத்து — சூழ்ந்து, உலவும்—

சஞ்சரிப்பதான, தேரோன்-தேரையுடைய சூரியன், தெறும்வெயில்-சுடுஞ்சூடு, தணிவுபார்த்து - குறையுமளவு பார்த்துக்கொண்டிருந்தார்களப்பால்.

முத்தலையெஃகினாற்குமுடிப்பருங்கருமமுற்றி
வித்தகன் றூதுமீண்டதிறுதியாய்விளைந்ததன்மை
அத்தலையறிந்தவெல்லாமறைந்தனமாழியான்மாட்
டித்தலைநிகழ்ந்தவெல்லாமியம்புவானெடுத்துக்கொண்டாம்.

இ-ள். முத்தலை - மூன்றுகவருள்ள, எஃகினாற்கும் - சூலபாணியனான சிவனாலும், முடிப்பரும் - முடிக்க அரிதான, கருமம் - காரியத்தை, முற்றி-முடித்து, வித்தகன்றூதன் - அனுமார், மீண்டது - திரும்பினது, இறுதியாய் - முடிவாக, விளைந்ததன்மை - நடந்தவைகளையெல்லாம், அத்தலை-முன்னே, அறிந்தவெல்லாம் - எம்மாற் றெரிந்தவரையும், அறைந்தனம்-சொன்னோம், ஆழியின்மாட்டு - ஸ்ரீராமனிடமான, இத்தலை - இங்கே, நிகழ்ந்தவெல்லாம் - நடந்தவைகளையெல்லாம், இயம்புவான் - சொல்லுதற்கு, எடுத்துக்கொண்டாம் - ஆரம்பித்தோம்—எ-று. அத்தலை அவ்விடத்திலே இலங்கையிலே. 27

வேறு

சேற்றிளமரைமலர்த்திருவைத்தேர்கெனக்
காற்றின்மாமகன்முதற்கவியின்சேனையை
நாற்றிசைமருங்கினுமேவிநாயகற்
றேற்றினனிருந்தனன்கதிரின்செம்மலே.

இ-ள். சேற்று - சேற்றிலேபிறக்கிற, இளம்-இளையதான, மரைமலர்-தாமரைமலரை இடமாகவுடைய, திருவை - லட்சுமியான சீதையை, தேர்கென - தெரிந்துவாருங்களென்று, காற்றின்மாமகன் - அனுமாரே, முதல்-முதலாக, கவியின்சேனையை - வானரசேனைகளை, நாற்றிசை - நான்குதிக்கின், மருங்கினும் - இடங்களிலும், ஏவி - போகவிட்டு, நாயகன்-ஸ்ரீராமனை, தேற்றினன் - தேறுதல்செய்துகொண்டு, கதிரின்செம்மல் - சுக்கிரீவன், இருந்தனன் - இருந்தான்—எ-று. 28

கார்வரையிருந்தனன்கதிரின்காதலன்
சீரியசொற்களிற்றெருட்டச்செங்கணான்
ஆருயிராயிரமுடையனுமெனச்
சோர்தொறுஞ்சோர்தொறுமுயிர்த்துத்தோன்றினான்.

இ-று. கதிரின்காதலன் - சுக்கிரீவன், கார்வரை - அந்த நீலநிறமான மலைமேலே, இருந்தனன் - இருந்துகொண்டு, சீரிய - சிறந்த, சொற்களில்-சொற்களைக்கொண்டு, தெருட்ட - தெளிவுசெய்துகொண்டிருக்கச்செய்தே, செங்கணான் - சிவந்தகண்களுள்ள ஸ்ரீராமனானவர், ஆருயிர் - அருமையான உயிர்கள், ஆயிரம் - பத்துநூறு, உடையன்-உடையவன், ஆமெனு-ஆமென்

னும்படி, சோர்தொறும் சோர்தொறும் – மயங்கமயங்க, உயிர்த்து – பின்னு மூயிருள்ளவனுகி, தோன்றினன் – இருக்கலானுர்—எ-று. 29

தண்டலினெடுந்திரைமூன்றுந்தாயினர்
கண்டிலர்மடந்தையையென்னுங்கட்டுரை
உண்டுயிரகத்தெனவொறுக்கவும்முளன்
திண்டிறலநுமனைநினையுஞ்சிந்தையான்.

இ-ள். தண்டலில் – தடையில்லாமல், நெடுந்திசை – நீண்டதிக்குகள், மூன்றும் – மூன்றுக்கும்தேட, தாயினர் – போனவர்கள், மடந்தையை-பிராட்டியை, கண்டிலர் – காணுதவர்களானுர், என்னுங்கட்டுரை – என்பதான மெய்மொழியானது, உண்டு உயிர் – உயிருமுள்ளது, அகத்து என – உள்ளேயென்னும்படி, ஒறுக்கவும் – வருத்தப்படுத்தவும், உளன் – உயிருள்ளவனுக இருக்கிறுர் ஸ்ரீராமன், திண்திறல் – மிக்க சாமர்த்தியமுள்ள, அநுமனை – அநுமாரை, நினையும் – எண்ணுகிற, சிந்தையான் – மனமுடையவராய்—எ-று. 30

ஆரியனருந்துயர்க்கடலினுழ்பவன்
சீரியதன்றுநஞ்செய்கைதீர்வரும்
பூரியவெம்பழிபொடித்ததாமெனச்
சூரியன்சிறுவனைநோக்கிச்சொல்லினன்.

இ-ள். அருந்துயர் – நீங்குதற்கரிதான துன்பமென்னும், கடலின்-கடலிலே, ஆழ்பவன் – முழுகுபவரான, ஆரியன் – ஸ்ரீராமனுனவர், நஞ்செய்கை – நமதுசெய்வினை, சீரியதன்று – சிறந்ததாயிருக்கவில்லை, தீர்வு அரும்-நீங்குதலில்லாத, பூரிய – இழிவுள்ள, வெம்பழி – வெவ்விய நிந்தையானது, பொடித்தது – கொஞ்சக் கொஞ்சமாய்வளர்ந்தது, ஆமென – மெய்யேயென்று, சூரியன் – சூரியனுடைய, சிறுவனை – பத்திரனை சுக்கிரீவனை, நோக்கி – பார்த்து, சொல்லினன் – சொல்லலானுர்—எ-று. 31

குறித்தநாளிகந்தனகுன்றத்தென்றிசை
வெறிக்கருங்குழலியைநாடன்மேயினர்
மறுத்திவண்வந்திலர்மாண்டுளார்கொலோ
பிறித்தவர்க்குற்றுளதென்னைபெற்றியோ.

இ-ள். குறித்தநாள் - நாம்கெடுப்பண்ணி அனுப்பினநாளும், இகந்தன-கழிந்துபோயின, குன்றம் – நாமிருக்குமலைக்கு, தென்றிசை – தெற்குமுகத்திலே, வெறி-வாசனையுள்ள, கருங்குழலியை - கரிய கூந்தலுள்ள சீதையை, நாடல்மேயினர் – தேடப்போனவர்கள், மறித்து – மீண்டு, இவண் - இவ்விடம், வந்திலர் – இன்னம்வராதிருக்கிறுர்கள், பிறிது – வேறே, அவர்க்கு-அவர்களுக்கு, உற்றுளது - வந்தது, என்னை – யாது, பெற்றியோ - பெறுதலாயிற்றே, மாண்டுளார்கொலோ – இறந்துபோனுர்களோ வேறேயாதோ.

மாண்டனளவளிவண்மாண்டவார்த்தையை
மீண்டவர்க்குரைத்தலின்விளிதனன்றெனுப்
பூண்டதோர்துயர்கொடுபொன்றினுர்கொலோ
தேண்டினரின்னமுந்திரிகின்றுர்கொலோ.

இ-ள். அவள்மாண்டனள் – அந்தச் சீதையிறந்துபோயினுள், இவண் ஆகையாலிங்கே, மாண்ட – அவளிறந்த, வார்த்தையை — சொல்லை, மீண்டு திரும்பிப்போய், அவர்க்கு – அந்தராமனுக்கும் லட்சுமணனுக்கும், உரைத்த லின் - சொல்லுகிறதைப்பார்க்கிலும், விளிதல் — நாமிறந்துபோகிறதே, நன்றெனு — நல்லதென்று, பூண்டது – தங்களைச்சேர்ந்ததான, ஓர்துயர்கொடு ஒருதுன்பத்தையேகருதி, பொன்றினுர்கொலோ — இறந்துபோனுர்களோ சுக்கிரீவனே உன்கருத்தென்ன, தேண்டினர் — தேடினவர்களாகவே, இன்னமும் திரிகின்றுர்கொலோ – இன்னம் அலைகிறுர்களோசொல்—எ-று.33

கண்டனரரக்கரைக்கருவுகைமிக
மண்டமர்தொடங்கினுர்வஞ்சர்மாயையால்
விண்டலமதனின்மேயினர்கொல்வேறிலாத்
தண்டலிநெடுஞ்சிறைத்தளைப்பட்டார்கொலோ.

இ-ள். கண்டனர் அரக்கரை - அந்த ராட்சதர்களைக்கண்டு, கறுவு-மன விரோதம், கைமிக — அதிகமாக, மண்டு அமர் – மிகுந்த சண்டைகளை, தொடங்கினுர் — செய்து, வஞ்சர்மாயையால் – அந்தவஞ்சகரான ராட்சதர்கள் மயக்கஞ்செய்வதனுலே, விண்டலமதனின் — இறந்து சுவர்க்கலோகம், மேயினர்கொல் — போனுர்களோ, வேறிலா - வேறென்றுமில்லாமல், தண்டலில் — தடையில்லாது, நெடுஞ்சிறை – நீளமாகச் சிறையிற்கிடத்தலான, தளைப்பட்டார்கொல் – விலங்கிலகப்பட்டார்களோ பெற்றியென்னை-எ-று.

கூறினநாளவரிருக்கைகூடலம்
ஏறலஞ்சுதுமெனவின்பதுன்பங்கள்
ஆறினரருந்தவமயர்கின்றுர்கொலோ
வேறவர்க்குற்றதென்விளம்புவாயென்றுன்.

இ-ள். கூறின நாள் – கெடுவைத்தனுப்பின நாளுக்குள்ளே, அவர்- அந்தராமன்முதலியோர், இருக்கை-இருக்குமிடத்தை, கூடலம் — சேராதே போனேம், ஏறல் – இனி அங்குப்போகிறதற்கு, அஞ்சுதுமென - பயப்படுதலானேமென்று, இன்பதுன்பங்கள் – சுகதுக்கங்களை, ஆறினர் - தணிந்தார்களாகி, அருந்தவம் – அரிதானதவத்தை, அயர்கின்றுர்கொலோ-செய்யப்போயினுர்களோ, வேறு - இன்னம்வேறே, அவர்க்கு-தென்றிசைக்குப் போனவர்களுக்கு, உற்றது – வந்துள்ளது, என் — யாதாயிருக்கும், விளம்புவாய் – உன்யோசனைக்குத் தோன்றினதைச் சொல்லவேண்டும், என்றுன்- என்று ஸ்ரீராமன்சொன்னுர்—எ-று. 35

என்றுரைத்திடருழந்திருக்கும்வேலையில்
வன்றிறற்றதிமுகன்வானரேசன்முன்
தன்றலைப்பொழிதருகுருதிதன்னெடும்
குன்றெனப்பணிந்தனனிருகைகூப்பியே.

இ-ள். என்றுரைத்து - என்றுசொல்லி, இடர்-துன்பத்தினலே, உழந்து — வருந்திக்கொண்டு, இருக்கும்வேலையில்-இருக்கும்போது, வண்திறல்-மிக்கவலிமையுள்ள, ததிமுகன் - ததிமுகனெனவன், வானரேசன்முன்-சுக்கிரீவனுக்குமுன்னே, தன்தலை — தனது தலையிலே நின்றும், பொழிதரு-சிந்துவதான, குரிதிதன்னெடும் — ரத்தப் பிரவாகத்துடனே, இருகை கூப்பி-இரண்டுகைகளுங் குவித்துக்கொண்டு, குன்றென - ஒரு மலைபோல் வந்து விழுந்து, பணிந்தனன் — தண்டம்பண்ணினன் சுக்கிரீவனுக்கு—எ-று. 36

எழுந்துநின்றையகேளின்றுநாளையோ
டழிந்ததுமதுவனமடையவென்றலும்
வழிந்திடுகுருதியின்வதனநோக்கியே
மொழிந்திடங்கியாரதுமுடித்துளோரென.

இ-ள். எழுந்து நின்று — பின்னுமெழுந்திருந்து நின்று, ஐயகேள் — அரசனேகேளும், இன்று — இன்றைத்தினமே அல்லது, நாளையோடு — நாளையத்தினமே முடிவாக, மதுவனமழிந்தது — உமது மதுவனம் அழிந்தேபோகும், அடைய - முழுதும், என்றலும் — என்றவுடனே, வழிந்திடு-ஒழுகுகிற, குருதியின் — ரத்தத்தையுடைய, வதனம் - அவன்முகத்தை, நோக்கியே-பார்த்து, மொழிந்திடு — உள்ளதுசொல், அங்கு — அங்கே, யாவர் — எவர், அது — அந்த மதுவனத்தை, முடித்துளோர் — அழித்தவர்கள், என — என்று கேட்க—எ-று. 37

நீலனுங்குமுதனுநெடியகுன்றமே
போலுயர்சாம்பனும்புணரிபோர்த்தென
மேலெழுசேனையும்விரைவின்வந்துருச்
சால்புடைமதுவனந்தனையழிப்பவே.

இ-ள். நீலனும் குமுதனும் — இவ்விருவருடனே, நெடிய — நீண்ட, குன்றமே — மலையே, போல் உயர் — போல் உயர்ந்த, சாம்பனும் — இவனும், புணரி — கடல்வந்து, போர்த்தென - கவிந்தாற்போல், மேல்-மேன்மேலாகி, எழு — வருகிற, சேனையும் — சேனைகளுமாகி, விரைவின்-அதிசீக்கிரத்திலே, வந்துரு - வந்துகூடி, சால்புடை — உமதுபெருமையை உடையதான, மதுவனந்தனை — மதுவனத்தை, அழிப்ப - குலைத்தழிவுசெய்ய அதுகண்டு. 38

தகைந்தவச்சேனையைத்தள்ளிநின்னையும்
இகழ்ந்துரைத்திடைந்தனன்வாலிசேயமக்

குகந்தன புகன்றவவ்வுரைபொறுமையே
புகைந்தொருபாறையின்புணர்ப்புநீக்கியே.

இ-ள். தகைந்த – தடுத்த, அச்சேனையை-அந்தச்சேனைகளையெல்லாம், தள்ளி – அடித்துத்துரத்தி, நின்னையும் – உம்மையும், இகந்து – அசட்டை பண்ணி, உரைத்து – அவமதித்துப்பேசி, வாலிசேய் — அங்கதனவன், இயைந்தனன் – வனமழிக்கச் சம்மதித்தானாகி, எமக்கு – எங்களைநோக்கி, உகந்தன – மனோரதமானவைகளாக, புகன்ற – அவன்சொன்ன, அவ்வுரை-அந்தவார்த்தை, பொறுமையே – நான்பொறுமல், புகைந்து – கோபங்கொண்டு, ஒருபாறையின் புணர்ப்பு – ஒருகற்பாறையின் கீழ்வேரை, நீக்கி-அசைத்துப்பிடுங்கி—எ-று. உகந்தனபுகலல் – தனது, களிப்புத்தோன்றச் சொல்லுதல் – களிப்பு, அவன்செய்கைக்கஞ்சாமை. 39

இமைத்தன்முன்வாலிசேயெழில்கொள்யாக்கையைச்
சமைத்தியென்றெறிதரப்புறங்கையாற்றகைந்
தமைத்தருகனலெனவழன்றெற்பற்றியே
குமைத்துயிர்பதைப்பநீகூறுபோயென்றான்.

இ-ள். இமைத்தல்முன் – ஒருமாத்திரையளவிலே,வாலிசேய் – அங்கதனுடைய, எழில்கொள் – அழகுகொண்ட, யாக்கையை – தேகத்தை, சமைத்தியென்று — அழித்துவிடென்று, எறிதர-நான்வீச அவன், புறங்கையால்-தன்புறங்கையாலே, தகைந்து – தட்டிவிட்டு, அமைத்தரு-மூங்கிலிலேயுண்டான மூங்கிலானதுதருகிற, கனலென — நெருப்புப்போல், அழன்று-கோபங்கொண்டு, எற்பற்றி – என்னைப்பிடித்து, குமைத்து-அடித்துக்குத்தி, உயிர்பதைப்ப – என்னுயிர் துள்ளக்குமைத்து, நீபோய்க்கூறு-நீபோய்ச்சொல்லு, என்றான் – என்றுசொன்னான்—எ-று. 40

ஏமபலோடெழுந்துநின்றிரவிகான்முளை
பாம்பணையமலனைவணங்கிப்பைந்தொடி
மேம்படுகற்பினளென்னுமெய்ம்மையைத்
தாம்புகன்றிட்டதிச்சலமென்றேதினன்.

இ-ள். ஏம்பலோடு – அச்சொற்கேட்டு சந்தோஷத்துடனே, எழுந்து நின்று – எழுந்திருந்து நின்று, இரவிகான்முளை – சூரிய குமாரனை சுக்கிரீவன், பாம்பு அணை – சேஷ சயனத்தையுடைய, அமலனை – தோஷரகிதனைராமனை, வணங்கி – பணிந்து, பைந்தொடி – சீதாபிராட்டி,மேம்படு-மேலான, கற்பினள் — கற்புடையளாயிருக்கிறார், என்னும் – என்பதான, மெய்ம்மையை – உண்மையை, புகன்றிட்டது – சொல்லுதலாயிருக்கிறது, இச்சலம் — இந்த அங்கதன்கோபம், என்றோதினன் – என்றுசொன்னான் சுக்கிரீவன், தாம் சாரியை—எ-று. 41

பண்டருகிளவியாடன்னைப்பாங்குறக்
சண்டனாரன்னதோர்களிப்பினலவர்

வண்டுறைமதுவனமழித்துமாந்திய
தண்டநாயகவினியவலந்தீர்கென.

இ-ள். பண்தரு— இராகத்தை நேரான, கிளவியாள் தன்னை-சொற்களையுடையபிராட்டியை, பாங்குற— நன்ருக, கண்டனர் — கண்டார்களே ஆகையால், அன்னது — அப்படிப்பட்டதான, ஓர் களிப்பினல் - ஒரு சந்தோஷத்தினலே, அவர் —பிராட்டியைக்கண்ட அவர்கள், வண்டுறை— வண்டுகள் தங்கின, மதுவனம் — மதுவனத்தை, அழித்து — கெடுத்து, மாந்தியது - மதுவுண்ணலானது ஆதலால், அண்டநாயக - ஓ ஜகதீசா, இனி - இனிமேல், அவலம் — உமது துன்பத்தை, தீர்கென — விடக்கடவீரென் றுசொல்ல-எ-று.

வந்தனர்தென்றிசைவாவிஞரெனப்
புந்திநொந்தென்னைகொல்புகலற்பாலரென்
றெந்தையுமிருந்தனனிரவிகான்முளை
நொந்தவத்ததிமுகன்றன்னைநோக்கியே.

இ-ள். தென்றிசைவாவிஞர் — தெற்குத்திசைக்குப் போனவர்கள், வந்தனரென — வந்தார்களென்று சுக்ரீவன்சொல்லவே, புந்திநொந்து - வந்தவர்கள் மனம்வருந்தி, என்னைகொல் — யாதோ, புகலற்பாலரென்று — சொல்லுவார்களென்று, எந்தையும் — எமதாண்டவனை ஸ்ரீராமன், இருந்தனன்- ஒன்றுஞ்சொல்லாதிருந்தார் அப்போது, இரவிகான்முளை — சுக்கிரீவன், நொந்த - மனம்வருந்திவந்த, அத்ததிமுகன்றன்னை — அந்தத்ததிமுகனை, நோக்கி — பார்த்து—எ-று. 43

யாரவணிறுத்தவரியம்புவாயென
மாருதிவாலிசேய்மயிந்தன்சாம்பவன்
சோர்வறுபதினெழுவோர்கடுன்னிஞர்
ஆர்கலிநாணவந்தார்க்குஞ்சேனையார்.

இ-ள். அவண்யார் — அங்கேயாரார், இறுத்தவர் - வந்திறங்கினவர்கள், இயம்புவாயென — சொல்லென்றுகேட்க அதற்கு, மாருதி - அனுமார், வாலிசேய் - அங்கதன், மயிந்தன் — மயிந்தன், சாம்பவன் — சாம்பன் முதலான, சோர்வுஅறு — தளர்ச்சியற்ற, பதினெழுவோர்கள் — பதினேழுபடைத்தலைவர்களும், துன்னிஞர் — வந்திறங்கிஞர்கள், ஆர்கலி-கடலும், நாண-வெட்கியஞ்ச, வந்து — கிட்டிவந்து, ஆர்க்கும் - கெர்ச்சிப்பதான, சேனையார்-சேனைகளோடுகூடித் துன்னிஞர்—எ-று. 44

என்றவனுரைத்தபோதிரவிகாதலன்
வன்றிறற்றதிமுகன்வதனநோக்கியே
ஒன்றுனக்குணர்த்துவதுளதுவாலிசேய்
புன்றொழிற்செய்கைசேர்புணர்ப்பனல்லனல்.

இ-ள். என்று அவன் — என்று அந்தத்ததிமுகன், உரைத்தபோது-சொன்ன அளவிலே, இரவிகாதலன் — சூரியகுமாரனுன சுக்கிரீவன், வன்திறல்-வலியதிடமுள்ள, ததிமுகன் — ததிமுகனுடைய, வதனநோக்கி - முகத்தைப் பார்த்து, ஒன்று உனக்கு — உனக்கு ஒன்று, உணர்த்துவது — நான் சொல்லத்தக்கது, உளது — உண்டு, வாலிசேய் — அங்கதனுனவன், புன்றொழில்-அல்பகாரியங்களை, செய்கை — செய்வதில், சேர் — கூடின, புணர்ப்பன்-சேர்க்கையுள்ளவன், அல்லன் - அல்லாதவனுகையாலே—எ-று. 45

கொற்றவன் பணிதலைக்கொண்டுதெண்டிரை
சுற்றிய திசையெலாந்துருவித்தோகையைப்
பற்றியபகைஞரைக்கடிந்துபாங்கர்வந்
துற்றனரவரையாமுரைப்பதென்னையே.

இ-ள். கொற்றவன் — ஸ்ரீராமனுடைய, பணி — காரியத்தை, தலைக்கொண்டு — சிரசாவகித்து, தெண்திரை — தெளிந்த அலைகளுள்ளகடல், சுற்றிய — சூழ்ந்த, திசையெல்லாம் — திக்குகள்முழுதும், துருவி — தேடி, தோகையை — சீதாபிராட்டியை, பற்றிய — கொண்டுபோன, பகைஞரை — சத்துருக்களை, கடிந்து — கொன்று, பாங்கர்வந்து — நமது சமீபத்திலேவந்து, உற்றனர் — சேர்ந்தார்கள், அவரை — அப்படி வந்தவர்களை, யாம் உரைப்பது-நாம் கடிந்துபேசுவது, என்னை — எப்படி—எ-று. 46

அன்றியும்வாலிசேயரசதாதலின்
பின்றுதலரிதரோபிணங்குஞ்சிந்தையாய்
ஒன்றுநீயுணரலையுறுதிவேண்டுமேல்
சென்றவன்றனைச்சரண்சேர்தியீண்டெனை.

இ-ள். அன்றியும் — அதையல்லாமலும், வாலிசேய் - அங்கதனுனவன், அரசு அது — ஆளுகையையுடையது அந்தமதுவனம், ஆதலின் — ஆனபடியினலே, பின்றுதல் - அவன் சொல்லுக்குப் பின்சொல்லுகிறது, அரிது — குற்றமேயாம், பிணங்கும் -- அவனேடு மாறுபாடுகொண்ட, சிந்தையாய் — மனமுள்ளததிமுகனே, ஒன்று நீ — நீ ஒருகாரியமும், உணரலை — ஆலோசிக்கிறுயில்லை, உறுதிவேண்டுமேல் — உனக்கு நன்மைவேணுமேயானல், சென்று-நீபோய், அவன்றனை - அந்த அங்கதனுடைய, சரண்சேர்தி — பாதத்தை அடைதி, ஈண்டு — இப்போதே, என — என்று சுக்கிரீவன்சொல்ல-எ-று. 47

வணங்கியசென்னியன்மறைத்தவாயினன்
உணங்கியசிந்தையனெடுங்குமேனியன்
கணங்களொடேகியகானநண்ணினன்
மணங்கிளர்தாரினன்மறித்தும்வந்தரோ.

இ-ள். வணங்கிய — வளைந்த குனிந்த, சென்னியன் — தலையையும், மறைத்த - ஒருகையால்மூடின, வாயினன் — வாயையும், உணங்கிய — வருந்

தின, சிந்தையன் — மனத்தையும், ஒடுங்கும் — அடங்கின, மேனியன் — சரீரத்தையும் உடையவனாய், கணங்களோடு - தன் கூட்டங்களுடனே, ஏகி- போய், அக்கானம் — அந்தக்காடான மதுவனத்துக்கு, நண்ணினன் — வந்து சேர்ந்தான், ஏகிநண்ணினன் — போய்ச்சேர்ந்தான், மணங்கிளர் - வாசனை பரிமளிக்கிற, தாரினன்-மாலையையணிந்த ததிமுகன், மறித்துவந்து-மீண்டு வந்து கானநண்ணினனென்க—எ-று. 48

கண்டனன் வாலிசேய்கறுவுகைமிக
விண்டவனம்மெதிர்மீண்டுளானெனின்
உண்டிடுகுதுமுயிரென்னவுன்னினன்
தொண்டெனத்ததிமுகன்றொழுதுதோன்றினன்.

இ-ள். கண்டனன்வாலிசேய் — அதை அங்கதன்கண்டு, கறுவுகைமிக- கோபம் மேன்மேலாக, விண்டவன் — வனத்தை விட்டோடிப்போனவன், நம் எதிர் - நமக்குமுன்னே, மீண்டுளானெனில் — திரும்பியும் வருவானே யானபோதும், உயிர் — அவனுயிரை, உண்டிடுகுதும் — வாங்கிவதைப்போம், என்னஉன்னினன் - என்றெண்ணினன் அப்போது, ததிமுகன் — ததிமுகனவன், தொண்டென — உனக்கடிமையென்று, தொழுது - கும்பிட்டுக் கொண்டு, தோன்றினன் - வந்தான்—எ-று. 49

போழ்ந்தனயான்செய்தகுறைபொறுக்கென
வீழ்ந்தனனடிமிசைவீழவாலிசேய்
தாழ்ந்துகைபற்றிமெய்தழீஇக்கொண்டும்மையான்
சூழ்ந்ததும்பொறுக்கெனமுதன்மைசொல்லினன்.

இ-ள். போழ்ந்தன — கத்திவெட்டுப்போல், யான்செய்த — நான் பண்ணின, குறை — குற்றத்தை, பொறுக்கென — பொறுத்துக்கொள்ளென்று, அடிமிசை — அங்கதன்கால்மேலே, வீழ்ந்தனன் — விழுந்தான், வீழ — அப்படியவன் விழுமளவில், வாலிசேய் — அங்கதனவன், தாழ்ந்து — குனிந்து, கைபற்றி — அவன் கையைப்பிடித்துத்தூக்கி, மெய் - அவனுடம்பை, தழீஇக் கொண்டு — ஆலிங்கனஞ் செய்துகொண்டு, உம்மை — உங்களையான் சூழ்ந்ததும் நான் பண்ணினதையும், பொறுக்கென — பொறுங்களென்று, முதன்மைசொல்லினன் — அவனுக்கே பிராதானியமுண்டாகச் சொன்னன். 50

யாமுதற்குறித்தநாளிறத்தலெண்ணியே
ஏமுறத்துயர்துடைத்தளித்தவேற்றம்போல்
தாமரைக்கண்ணவன்றுயரந்தள்ளநீர்
போமெனத்தொழுதுமுன்னறுமன்போயினன்.

இ-ள். யாம் — பின்புநாங்கள், முதல் - முன்னே, குறித்தநாள் - கெடுப் பண்ணிவிட்டநாளளவு, இறத்தல் — கடந்துபோனதைக்குறித்து, எண்ணி- ஆலோசித்து, ஏமுற - நாங்கள் கவலைப்பட, துயர்துடைத்து — அத்துன்பத்

தைப்போக்கி, அளித்த – எங்களைக்காத்த, எற்றம்போல் – உயர்வைப்போல வே, தாமரைக்கண்ணவன் – ஸ்ரீராமனுடைய, வன்துயரம் - வலியதுன்பத்தை, தள்ள - போக்க, நீர்போமென - நீரே முன்னேபோமென்று அங்கதன் சொல்ல, தொழுது – அங்கதனை வணங்கிக்கொண்டு, முன் - முன்னே. அனுமன்போயினன் – அனுமாரானவர்போனார்—எ-று. 51

வன்றிறற்குரிசிலுமுனிவுமாறினன்
வென்றிகொள்கதிருந்தன்வெம்மையாறினன்
என்றுகொண்டியாவருமெழுந்துபோதலே
நன்றெனவேகினர்நவைக்கணீங்கினர்.

இ-ள். வன்திறல் – மிகவும் வலிமையுள்ள, குரிசிலும் – அங்கதனும், முனிவும் – கோபமும், ஆறினன் – தணிந்தான், வென்றிகொள் – இருளை வெற்றிகொள்ளத்தக்க, கதிரும் – சூரியனும், தன்வெம்மை – தனதுவெப்பம், ஆறினன் - தணிந்தான், என்றுகொண்டு – என்றுநினைத்து, யாவரும் - எல்லாரும், எழுந்துபோதலே - இனியெழுந்துசெல்லுதலே, நன்றென-நல்ல காரியமென்று, நவைக்கண் – தோஷங்களினின்றும், நீங்கினர் – நீர்ந்த வானரவீரர்கள், ஏகினர் – போனார்கள்—எ-று. 52

இப்புறத்திராமனுமிரவிசேயினை
ஒப்புறநோக்கிவந்துற்றதானையர்
தப்புறக்கண்டனமென்பரோதகா
தப்புறத்தென்பரோவுரைதியாலென்றான்.

இ-ள். இப்புறத்து – இங்கே, இராமனும் – ஸ்ரீராமனானவர், இரவிசேயனை - சுக்கிரீவனை, ஒப்புற – சரியாக நோக, நோக்கி-பார்த்து, வந்துற்ற- வந்துகூடின, தானையர் – சேனைபதிகள், தப்புஅற – குற்றமில்லாமல் சந்தேகந்தீர, கண்டனம் – பார்த்தோம், என்பரோ - என்று சொல்வார்களோ, தகாது – அப்படிச் சொல்லமாட்டாமல், அப்புறத்து – இதற்கப்பாலுள்ள அண்டத்தில், என்பரோ - போய்த்தேடவேணுமென்பார்களோ, அறைதியென்றான் – சொல்லென்று கேட்டார்—எ-று. 53

என்புழியனுமனுமிரவியென்பவன்
தென்புறத்துளனெனத்தெரியதாயினன்
பொன்பொழிதடக்கையைப்பொருவில்வீரனும்
அன்புறுசிந்தையனமையநோக்கினன்.

இ-ள். என்புழி – என்றுசொல்லுமிடத்தில், அனுமனும் – அனுமாரானவர், இரவியென்பவன் – சூரியனானவன், தென்புறத்து – தெற்குத்திசையிலும், உளனென – உளனென்னும்படி, தெரிவது – தோன்றுவது, ஆயினன் – ஆனார், பொன்பொழி – அழகொழுகுகின்ற, தடக்கை – நீண்ட கைகளையுடைய, அ - அந்த, பொருவில் – ஒப்பில்லாத, வீரனும் – ஸ்ரீராம

னானவர், அன்புஉறு — அன்பு மிகுதியான, சிந்தையன் — மனமுள்ளவராகி, அமைய - அனுமார்வருவதைப்பொருந்த, நோக்கினான் — பார்த்தார்—எ-று. அமைய என்பது குறிப்புத்தோன்ற எனக்கொள்க. 54

எய்தினனநுமனுமெய்தியேந்தறன்
மொய்கழறொழுகிலன்முளரிநீங்கிய
தையலைநோக்கியதலையின்கையினன்
வையகந்தழீஇநெடிதிறைஞ்சிவாழ்த்தினான்.

இ-ள். எய்தினன் — வந்துசேர்ந்தார், அனுமனும் — அனுமார், எய்தி- வந்து, ஏந்தல்தன் — ஸ்ரீராமனுடைய, மொய்கழல் — விரல்கள்மொய்த்த திருவடிகளை, தொழுகிலன் - தொழாதவராய், முளரிநீங்கிய — தாமரைமலரினின்றுநீங்கின, தையலை — சீதாபிராட்டியை, நோக்கிய - இருக்கும் திசையைக்குறித்த, தலையன்-முகமுடையராகி, கையினன்-தலைமேற்கைகுவித்து, வையகந்தழீஇ - பூமியிலேபடிந்து, நெடிதுஇறைஞ்சி - நீண்டுவிழுந்துவணங்கி, வாழ்த்தினான் — வடிவாய்கின் வலமார்பினில் வாழ்கின்ற மங்கையும் பல்லாண்டென்றுசொன்னார் அனுமார்—எ-று. 55

திண்டிறலவன்செயறெரியநோக்கினான்
வண்டிறலோதியும்வலியள்மற்றிவன்
கண்டதுமுண்டவள்கற்புநன்றெனக்
கொண்டனன்குறிப்பினாலுணருங்கொள்கையான்.

இ-ள். திண்டிறல் — மிக்க சாமர்த்தியமுள்ள, அவன்செயல் — அந்த அனுமாருடைய செய்கையை, தெரிய — விளங்க, நோக்கினான் — பார்த்த ஸ்ரீராமனானவர், வண்டு — வண்டுகள், இறல் — தங்குதலுள்ள, ஓதியும் - கூந்தலையுடையசீதை, வலியள் — சுகமேயிருக்கிறாள் அவளை, மற்றிவன் — இந்த அனுமன், கண்டதுமுண்டு — பார்த்ததுமுண்டு, அவள் — அந்தச் சீதையினுடைய, கற்பும் — பதிவிரதாசீலையும், நன்றுஎன — கலங்கவில்லையென்று, கொண்டனன் — தெரிந்தார், குறிப்பினால் — அனுமார் செய்கையினாலே, உணரும்கொள்கையான் — தெரிந்துகொள்ளத்தக்கவர்—எ-று. 56

ஆங்கவன்செய்கையேயளவையாமெனா
ஓங்கியவுணர்வினால்விளைந்ததுன்னினான்
வீங்கினன்றோள்புனல்கண்கள்விம்மினான்
நீங்கியதருந்துயர்காதனீண்டதே.

இ-ள். ஆங்கவன் — அந்தஅனுமார், செய்கையை — சீதையிருக்கிறதிக்குநோக்கி வந்தனஞ்செய்ததையே, அளவையாமெனா — கண்ட துண்டென்பதற்குப் பிரமாணமானதென்று, ஓங்கிய — உயர்வுள்ள, உணர்வினால் — தமது புத்தியினாலே, விளைந்தது — அனுமார்கண்டுவந்ததை, உன்னினான் — தெரிந்துகொண்டு, தோள்வீக்கினன் - புஜங்கள் பூரித்தார், கண்கள் — இரண்டு

கண்களிலும், புனல்விம்மினன் — நீர்பெருகுதலாய், அருந்துயர் — நீங்க அரி தான துன்பம், நீங்கியது — நீங்கிப்போயிற்று, காதல்-சீதைமேலாசை, நீண்டது - அதிகமாயிற்று அப்போது—எ-று. 57

கண்டனேன்கற்பினுக்கணியைக்கண்களால்
தெண்டிரையலைகடலிலங்கைத்தென்னகர்
அண்டர்நாயகவினித்துறத்தியையமும்
பண்டுளதுயருமென்றநுமன்பன்னுவான்.

இ-ள். கற்பினுக்கு - பதிவிரதா நிலைக்கு, அணியை — ஆபரணமான பிராட்டியை, கண்களால் — என்கண்களாலே, கண்டனேன் — பார்த்தேன், தெண் — தெளிந்த, திரை அலை — அலைகளையுடையதா யலைகின்ற, கடல்-தென் கடலினடுவேயிருக்கிறது, இலங்கை — இலங்கையென்கிற, தென்நகர்-அழகானபட்டணம், அண்டர் நாயக - ஒதெய்வ நாயகனே, இனி - இனிமேல், ஐயமும் - சீதா பிராட்டிக்குயிருண்டோ இல்லையோவென்கிற சந்தேகத்தையும், பண்டு உள — முன்னே நீருடையதான, துயரும் — துன்பத்தையும், துறத்தி — விட்டுவிடும், என்று — முன்னேசொல்லி, அநுமன்பன்னுவான் — அநுமார்பின்னும் சொல்லலானார்—எ-று. 58

வேறு

உன்பெருந்தேவியென்னுமுரிமைக்குமுன்னைப்பெற்ற
மன்பெருமருகியென்னும்வாய்மைக்குமிதிலைமன்னன்
தன்பெருந்தனையையென்னுந்தகைமைக்குந்தலைமைசான்றாள்
என்பெருந்தெய்வமையாவின்னமுங்கேட்டியென்பான்.

இ-ள். உன் — உமது, பெருந்தேவியென்னும் - பெருமைக்கேற்றதேவியென்கிற, உரிமைக்கும் — பாத்தியதைக்கும், உன்னைப்பெற்ற-உம்மைஈன்ற, மன் — அரசனான சக்கரவர்த்திக்கு, பெருமருகியென்னும் - முதல்மருமகளென்கிற, வாய்மைக்கும் — மெய்க்கும்சொல்லுக்கும், மிதிலைமன்னன்தன்-ஜனகமகாராஜனுடைய, பெருந்தனையையென்னும் - பிரதானபுத்திரியென்கிற, தகைமைக்கும் — பெருமைக்கும், தலைமைசான்றாள் - யோக்கியதையமைந்திருக்கிறார், என்பெருந்தெய்வம் - எனதுபெரியதெய்வமான பிராட்டியார், ஐயா — சுவாமி, இன்னமும்கேட்டி — இன்னம்நான் சொல்வதெல்லாங் கேட்டருளவேணும், என்பான் — என்றுசொல்வாராயினார்—எ-று. 59

பொன்னலதில்லைப்பொன்னையொப்பெனப்பொறையினின்றாள்
தன்னலதில்லைத்தன்னையொப்பெனத்தனக்குவந்த
நின்னலதில்லைநின்னையொப்பெனநினக்குநேர்ந்தாள்
என்னலதில்லையென்னையொப்பெனவெனக்குமீந்தாள்.

இ-ள். பொன்னை — சுவர்ணத்தை, ஒப்பென — நிகரென்றுசொல்ல, பொன் அலது — அந்தச்சுவர்ணமே அல்லாமல், இல்லை — வேறே இல்லை,

பொறையின் – பொறுமைக்குணத்திலே, நின்றாள்தன்னை - நிலைபெற்றுள்ள பிராட்டியாரை, ஒப்பென நிகரென்றுசொல்ல, தன் அலது — அந்தப் பிராட்டியாரை அல்லாமல், இல்லை—வேறே ஒருவருமில்லை, தனக்குவந்த - அந்த பிராட்டியாருக்குப் பிரியமான, நின்னை — உம்மை, ஒப்பென - நிகரென்று சொல்ல, நின் அலது – உம்மையல்லாமல், இல்லை - வேறே ஒருவருமில்லை, நினக்கு-உமக்கு, நேர்ந்தான்-அடிமையாக வுடன்பாடானவனுகிய, என்னை-அடியேனை, ஒப்பென – நிகரென்றுசொல்ல, என் அலது – என்னையல்லாமல், இல்லை—வேறே ஒருவருமில்லை, எனக்கும் - இப்படிப்பட்டயோக்கியதையை எனக்கும், ஈந்தாள் – கொடுத்தருளினர்—எ-று. 60

உன்குலமுன்னதாக்கியுயர்புகழ்க்கொருத்தியாய
தன்குலந்தன்னதாக்கித்தன்னையித்தனிமைசெய்தான்
வன்குலங்கூற்றுக்கீந்தவ்வானவர்குலத்தைவாழ்வித்
தென்குலமெனக்குத்தந்தாளென்னினிச்செய்வதெம்மோய்.

இ-ள். உன்குலம் – உமதுகுலத்தை, உன்னதாக்கி – உமக்கே உரியதாகச்செய்து, உயர்புகழ்க்கு – உயர்ந்த கீர்த்திக்கு, ஒருத்தியாய — தாமொருதாயே ஒப்பில்லாதவ ரென்னலான, தன்குலம்-தமதுகுலத்தை, தன்னதாக்கி— தமக்கே உரியதாகச்செய்து, தன்னை — ஜெகன்மாதாவானதம்மை, இத்தனிமைசெய்தான் – இப்படித் தனியாகும்படி பிரித்தாாவணனுடைய, வன்குலம் —வலியகுலத்தை, கூற்றுக்கு-யமனுக்கு, ஈந்து - கொடுத்து, அவ்வானவர்குலத்தை – அந்தத்தேவர் கூட்டத்தை, வாழ்வித்து – வாழச்செய்து,என்குலம் – எனதுகுலத்தையும், எனக்குத்தந்தாள் — எனக்கே உரியதாகச்செய்தார், எம் ஓய் - எமதுதாயானபிராட்டி, இனிச்செய்வது என் – இன்னஞ் செய்யவேண்டுவ தென்னிருக்கின்றது-எ-று. என்றால், பிராட்டியினுடைய கலங்கா நிலையினுலே ராட்சதர்களுக்கழிவும் மற்றெல்லாருக்கு நன்மையுமே உண்டாயிற்றென்று கருத்து. 61

விற்பெருந்தடந்தோள்வீரவீங்குநீரிலங்கைவெற்பின்
நற்பெருந்தவத்தளாயநங்கையைக்கண்டேனல்லேன்
இற்பிறப்பென்பதொன்றுமிரும்பொறையென்பதொன்றும்
கற்பெனும்பெயரதொன்றுங்களிநடம்புரியக்கண்டேன்.

இ-ள். வில் – வில்லேந்தின, பெருந்தடந்தோள் — மிகவும் பெரிதான புயத்தையுடைய, வீர – மகா வீரரானசுவாமி, வீங்குநீர் — பெருகிற நீர்சூழ்ந்த, இலங்கை — இலங்கையாகிய, வெற்பின் — மலையிலே, நற்பெரு – நல்ல பெரிதான, தவத்தளாய — உமதுதவபத்தினியான, நங்கையை – பதிவிரதாயிற்சிறந்த தாயைமாத்திரம், கண்டேனல்லேன் – நான்பார்த்திலேன், இற்பிறப்பென்பதொன்றும் – குடிப்பிறப்பென்கிற ஒருகுணமும், இரும்பொறை — பெரிதானபொறுமை, என்பதொன்றும் – என்கிறகுணமும், கற்பெனும் – பதிவிரதையென்கிற, பெயரது — பெயருள்ளதான, ஒன்றும் – ஒருகு

ணமும்கூடி, களிநடம் - சந்தோஷமானநடனத்தை, புரிய - செய்துகொண்டிருக்க, கண்டேன் — பார்த்தேன்—எ-று. 62

கண்ணினுமுளைநீதையல்கருத்தினுமுளைநீவாயின்
எண்ணினுமுளைநீகொங்கையிணைக்குவைதன்னினொவ்வா
தண்ணல்வெங்காமனெய் தவலரம்புதொளைத்தவாறாப்
புண்ணினுமுளைநீநின்னைப்பிரிந்தமைபொருந்திற்றாமோ.

இ-ள். தையல் — அந்தப் பிராட்டியாருடைய, கண்ணினும் — நேத்திரங்களிலும், உளைநீ - நீரிருக்கிறீர், கருத்தினும் — உள்ளத்திலும், உளைநீ - நீரிருக்கிறீர், வாயின் — வாயினாலே, எண்ணினும் - பேசுமிடத்திலும், உளைநீ - நீரிருக்கிறீர், கொங்கை-தனங்களான, இணைக்குவைதன்னின்-இரண்டுகுவியல்களிலும், ஒவ்வாது - மனத்திலே சம்மதியில்லாமல், அண்ணல்-பெருமையுடைய, வெம்காமன் — விருப்பத்தையுண்டுபண்ணுகிற மன்மதன், எய்த - பிரயோகித்த, அலர் அம்பு - புட்பபாணங்கள், தொளைத்த — துவாரஞ்செய்த, ஆறாப்புண்ணினும் - உலராதபுண்களிலும், உளைநீ — நீரிருக்கிறீர் ஆனால், நின்னை - உம்மைப்பிரிந்தது பிரிந்திருக்கிறதென்பது, பொருந்திற்று — சரியானது, ஆமோ — ஆகுமோ ஆகாது—எ-று. பிராட்டி உம்மைப் பிரியவில்லையென்கிறார். 63

வேலையுளிலங்கையென்னும்விரிநகரொருசார்விண்டோய்
காலையுமாலைதானுமில்லதோர்கனகக்கற்பச்
சோலையங்கதனினும்பிபுல்லினாற்றொடுத்ததூய
சாலையினிருந்தாளைய தவஞ்செய்ததவமாந்தையல்.

இ-ள். வேலையுள் — கடலில்,ஒருசார் — ஒருபுறத்திலே, இலங்கையென்னும் — இப்பெயருள்ளதாய், விரிநகர் — விசாலமானபட்டணம் அதில், விண்தோய் - ஆகாயத்தையளாவுவதான, காலையும் — பகலும், மாலைதானும்-இராவும், இல்லது — தெரியாதிருப்பதான, ஓர் — ஒரு, கனகம்-சுவர்ணமயமுள்ள, கற்பகச்சோலை - விண்தோய்கற்பகச்சோலையென்பதொன்றிருக்கிறது, அங்கதனின் — அங்குள்ள அந்தச்சோலையிலே, உம்பி — உமதிளவலானவர், புல்லினால் - புல்லாலே, தொடுத்த — வேய்ந்தமைத்த, தூயசாலையில் — சுத்தமானபன்னசாலைக்குள்ளேதான், இருந்தாள் - இருப்பதானாள், ஐய - சுவாமி, தவஞ்செய்த — தவவேநோற்றுப்பெற்ற, தவமாம் — தவவடிவான, தையல் — உமக்குமனோரம்மியமான எங்கள் பிராட்டி—எ-று. 64

மண்ணொடுங்கொண்டுபோனான்வானுயர்கற்பினாடன்
புண்ணியமேனிதீண்டவஞ்சுலானுலகம்பூத்த
கண்ணகன்கமலத்தண்ணல்கருத்திலாட்டொடுதற்கெண்ணின்
எண்ணருங்கூறாய்மாய்தியென்றதோர்மொழியுண்டென்பான்.

இ-ள். மண்ணொடும் - மண்ணுடனே, கொண்டுபோனான் - எடுத்துக்கொண்டுபோனான், வான்உயர் — மிகப்பெரிய, கற்பினாள் — மகாபதிவிரதை

பானபிராட்டியுடைய, புண்ணியமேனி-பரிசுத்தசரீரத்தை, தீண்ட-தொட, அஞ்சுவான் – பயந்தவனாகி ஏனென்றால், உலகம்பூத்த – உலகமெல்லாம் சிருஷ்டித்த, கண் அகன் — இடமகன்ற, கமலத்து – தாமரைமலரின்மேலிருக்கிற, அண்ணல் – பிரமதேவனானவர், கருத்து-கூடுகிற எண்ணம், இலாள்-இல்லாதயாரேனும் ஒருத்தியை, தொடுதல் எண்ணில்—தொடுதற்கு நீ எண்ணினால், எண் அரும் – எண்ணுதற்கரிதான, கூறாய் – தூள்களாகி, மாய்தி- அழிந்துபோவாய், என்றது – என்றிட்டசாபமாகிய, ஓர்மொழியுண்டு – ஒரு சொல்லுண்டு, என்பான் — என்றுபின்னுஞ்சொல்லுவார் அனுமார்—எ-று.

தீண்டிலனென்னும்வாய்மைதிசைமுகன்செய்தமுட்டை
கீண்டிலதநந்தனுச்சிகிழிந்திலதெழுந்துவேலை
மீண்டிலசுடர்கள்யாவும்விழுந்திலவேதஞ்செய்கை
மாண்டிலதென்னுந்தன்மைவாய்மையானுணர்திமன்னோ.

இ-ள். தீண்டிலன் – அவன்தொடாதிருக்கிறான், என்னும் – என்பதான, வாய்மை – எனதுசொல்லினை, திசைமுகன் – பிரமாவினாலே, செய்த – சிருஷ்டிக்கப்பட்ட, முட்டை — இந்த அண்டமானது, கீண்டிலது-கிழியாதிருக்கிறதும், அநந்தன் — ஆதிசேடனுடைய, உச்சி – தலையானது, கிழிந்திலது – பிளவாதிருக்கிறதும், எழுந்து – பொங்கி, வேலை-கடல்கள், மீண்டில – வராதிருக்கிறதும், சுடர்கள்யாவும் – சூரிய சந்திரர்முதலான தேஜோராசிகளெல்லாம், விழுந்தில – கவிழ்ந்து விழாதிருக்கிறதும், வேதம் – வேதங்களை, செய்கை – அப்பியசித்தல், மாண்டிலது – போகாதிருக்கிறதும், என்னுந்தன்மை – என்பதான இப்படிகள், வாய்மையான் – மெய்யாயிருத்தல் கண்டு, உணர்தி – நம்பக்கடவீர்—எ-று. 66

சோகத்தாளாயநங்கைகற்பினாற்றொழுதற்கொத்த
மாகத்தார்தேவிமாரும்வான்சிறப்புற்றார்மற்றைப்
பாகத்தாளிப்போதீசன்மகுடத்தாள்பதுமத்தாளும்
ஆகத்தாளல்லண்மாயனாயிரமௌலிமேலாள்.

இ-ள். சோகத்தாள் ஆய் — துக்கமுள்ளவளான, நங்கை – குணபூர்ணையான பிராட்டியின், கற்பினால் – பதிவிரதா நிலையைக்கண்டு, தொழுதற்கு- வணங்குதற்கு, ஒத்த – உடன்பாடான, மாகத்தார் – ஆகாசவாசிகளுடைய, தேவிமாரும் – மனைவியர்களெல்லாம், வான்சிறப்பு – இப்போது பெருஞ்சிறப்பை, உற்றார் — தந்தம் புருஷர்களாலே, அடைவதானார்கள், மற்றைப் பாகத்தாள் – இடப்புறத்துள்ள பார்வதிதேவி, இப்போது – பிராட்டி மகிமைவிளங்குகிற இக்காலத்திலே, ஈசன் – பரமசிவனாலே, மகுடத்தாள் —சிரசாவகிக்கலானாள் சிவன்தலைமே லிருக்கலானாள், பதுமத்தாளும்-பூமகளான இலட்சுமிதேவியும், ஆகத்தாள் — திருமால்மார்பிலுள்ளவள், அல்லள்-அல்லளாதி, மாயன் – அந்த ஆச்சரியகுண சேஷ்டிதனுடைய, ஆயிரமௌலி மேலாள் – ஆயிரந்தலைகள் மேலுமிருப்பதானாள்—எ-று. 67

இலங்கையைமுழுதுநாடியிராவணனிருக்கையெய்திப்
பொலங்குழைபவரையெல்லாம்பொதுவுறநோக்கிப்போந்தேன்
அலங்குதண்சோலைபுக்கேனவ்வழியணங்கனாளைக்
கலங்குதெண்டிரையிற்றூயகண்ணினீர்க்கடலிற்கண்டேன்.

இ-ள். இலங்கையை — இலங்காபுரியை, முழுதுநாடி — முழுதுஞ்சுற்றிப் பார்த்து, இராவணன் — பின் பிராவணனுடைய, இருக்கையெய்தி — வீட்டிற்குப்போய், பொலங்குழையவரையெல்லாம் — அவன்மனைவிகளையெல்லாம், பொதுவுற — சமதிருஷ்டியாக, நோக்கி — பார்த்துக்கொண்டு, போந்தேன் - போயினேன் பின்பு, அலங்கு - ஒளி அசைதலான, தண்சோலை — குளிர்ந்த சோலைக்குள்ளே, புக்கேன் - போயினேன், அவ்வழி — அவ்விடத்திலே, அணங்கு அனாளை — எனது குலதெய்வம்போல்வாளை, கலங்கு - காற்றாலே கலங்குதலாகி, தெண்டிரையில் — தெளிந்த அலைகள்போல், தூய — மோதி வழிகிற, கண்ணினீர் — கண்களினீர்ப் பிரவாகமான, கடலில் — கடலுக்குள்ளேமுழுகி யிருக்கக்கண்டேன் தரிசித்தேன்—எ-று. 68

அரக்கியரளவற்றூருமலகையின்குழுவுமஞ்சச்
செருக்கினல்கண்டுசெய்யமெய்க்கனநீக்கச்சீர்த்த
இரக்கமென்றொன்றுதானேயேந்திழைவடிவமெய்தித்
தருக்கியசிறையுற்றன்னதகையளத்தமியளம்மா.

இ-ள். அரக்கியர் — ராட்சதிகள், அளவற்றூரும் - அளவில்லாதபேர்களும், அலகையின்குழுவும் — பசாசுக் கூட்டங்களும், அஞ்சு-பயப்படும்படி, செருக்கு — கர்வித்துச்செய்கிற, இனல் - துன்பங்களையெல்லாம், கண்டு-பார்த்துப் பொறுமையுடனே, செய்ய - தமதுசிவந்த, மெய்க்கனல் — சரீரத்துள்ள பதிவிரதாக்கினி, நீக்க — அவர்களைச்சுட, சீர்த்த — உமதுபெருமைக்கேற்றதான, இரக்கமென்றொன்றுதானே — இரக்கமென்கிற, ஒருபொருளே, ஏந்திழைவடிவமெய்தி - ஒருபெண்வடிவுகொண்டு, தருக்கிய, ஒளிவருமுழுநலமென்றூற்போல் உமது காருண்ணியமொளி யுறுதற்கு களித்திருத்தற்கு, சிறை — ஒருவன்காவலிலே, உற்றன்ன — அகப்பட்டிருந்தாற்போலும், தகையள் — தகுதியுள்ளவர், அத்தமியள் — அங்குப் பிரிந்தொருவராயிருக்கிற ஜகன்மாதா—எ-று. 69

மாண்பிறந்தமைந்தகற்பின்வாணுதனின்பால்வைத்த
சேண்பிறந்தமைந்தகாதல்கண்களிற்றெறிவிட்டித்தீராக்
காண்பிறந்தமையானீயேகண்ணகன்ஞாலந்தன்னுள்
ஆண்பிறந்தமைந்தசெல்வமுண்டனையாதியன்றே.

இ-ள். மாண்பிறந்து — நாண்முதலிய பெருமைகளுளவாகி, அமைந்த- உமக்குப் பாரியையான, கற்பின் — கலங்காநிலையுள்ள, வாணுதல் — சீதாபிராட்டியானவர், நின்பால்வைத்த — உம்மிடத்திலேகொண்டுள்ள, சேண்பிறந்து — உயர்வுள்ளதாய், அமைந்த - இருக்கிற, காதல் - பிரேமத்தை ஆசை

யை, கண்களில் - உம்முடைய கண்களாலே, தெவிட்டி - முழுதுங்கண்டனு பவித்தும், தீரா - போதாமல், காண் - இன்னமுங் கண்டுகொண்டிருக்கவே, பிறந்தமையால் — நீரவதரித்தருளினதினலே, நீயே — நீர்தாமே நீரொரு வரே, கண்அகன் - இடமகன்ற, ஞாலந்தன்னுள் - இந்தவுலகத்திலே, ஆண் பிறந்து — ஆண்மகனுக அவதரித்து, அமைந்த — இருப்பதான, செல்வம்- பாக்கியத்தை, உண்டனையாதி — அனுபவித்தவராகிறீர்—எ-று. மாண்பு மாண் காணகாண் — தொகுத்தெனக்கொள்க. 70

அயிர்ப்பிலர்காண்பார்முன்னுமறிந்திலரெனினுமைய
வெயிற்புனையிலங்கைமூதூரிந்திரன்யாக்கைக்கேற்ற
மயிற்புனையியலினருமைந்தருநாளுமங்கே
உயிர்ப்பொடுமுயிரினேடுமூசனின்றுடுவாரும்.

இ-ள். ஐய — சுவாமி, எயில்புனை — மதிலாலே சூழப்பட்டிருக்கிற, இல ங்கைமூதூர்-இலங்காபுரியிலே, இந்திரன்-தேவேந்திரனுடைய, யாக்கைக்கு- சரீரத்துள்ள ஆயிரங்கண்களுக்கும் — ஆயிரங்கண்களாலும், ஏற்ற — பார்க்கத் தகுதியான, மயில்புனை - மயில்போலுஞ் சாயலைக்கொண்ட, இயல்பினரும்- அழகுள்ளபெண்களும், மைந்தரும் - இந்திரன் முதலான புருஷர்களும், ஆங்கே — அவ்வூரிலே, உயிர்ப்பொடும் — சுவாசம்விடுதலுடனே, உயிரின்- காற்றைப்போல்வேகமாக, ஓடும் — ஓடப்பட்ட, ஊசல் - ஊழியஞ்செய்தற்கு ஊசலைப்போல், நின்று — நிலைகொண்டு, ஆடுவாரும் - போகிறதும் வருகிறது மாயிருக்கிற யாவரும், எனினும் - யான் கண்டறிந்ததிலும், அயிர்ப்புஇலர்- சந்தேகமில்லாதவர்களாய், காண்பார் — கண்டுகொண்டிருக்கிறார்கள், முன் னும் — முற்காலத்திலும், அறிந்திலர் — பிராட்டி தவநிலையைப்போலுள்ள வேறொருவரையுங் கண்டறியார்கள் — எ-று. இந்திரனியற்கைக்கென்று பாடமானல் அவன் பெருமைக்கேற்ற என்க. 71

தையலைவணங்கற்கொத்தவிடைபெறுந்தன்மைநோக்கி
ஐயயானிருந்தகாலையலங்கல்வேலிலங்கைவேந்தன்
எய்தினனிரந்துகூறியிறைஞ்சினனிருந்துநங்கை
வெய்துரைசொல்லச்சீறிகோறன்மேற்கொண்டுவிட்டான்.

இ-ள். தையலை — பிராட்டியை, வணங்கற்கு — கண்டுவணங்குதற்கு, ஒத்த — நேரான, இடைபெறும் — சமயம்பெறுவதான, தன்மைநோக்கி, கா லம்பார்த்து, ஐய — சுவாமி, யானிருந்தகாலை — நான் காத்திருக்கிறபோது, அலங்கல் - வெற்றிமாலையணிந்த, வேல் — வேலாயுதத்தையுடைய, இலங்கை வேந்தன் — இராவணன், எய்தினன் - அங்குவந்தான்வந்து, இரந்து - பிராட் டிக்கிதமானவார்த்தைகளை, கூறி - சொல்லி, இறைஞ்சினன்-வணங்கினன், இருந்து — அது கேட்டிருந்துகொண்டு திடமாக, நங்கை — பிராட்டியானவர், வெய்துரை — கொடுஞ்சொற்கள், சொல்ல — சொல்லக்கேட்டு, சீறி - கோபங் கொண்டு, கோறல் — கொல்லுதற்கு, மேற்கொண்டு - உடன்பாடாகி, விட் டான் — விட்டுப்போயினன்—எ-று. 72

ஆயிடையணங்கின்கற்புமையநின்னருளுஞ்செய்ய
தூயநல்லறனுமென்றிங்கினையனதொடர்ந்துகாப்பப்
போயினனரக்கிமாரைச்சொல்லுமின்பொதுவினென்றுங்
கேயினனவரெலாமென்மந்திரத்துறங்கியிற்றூர்.

இ-ள். ஆயிடை — அப்போது, அணங்கின் — தெய்வமாதாவான பிராட்டியினது, கற்பும் — பதிவிரதாநிலையும், ஐய — சுவாமி, நின்னருளும் — உமது கிருபையும், செய்ய — செவ்வையாகிய, தூய — பரிசுத்தமுள்ள, நல் அறனும் — நல்லதருமமும், என்று — இங்கு என்று இவ்வுலகிலே சொல்லலான, இனையன — இவைகளெல்லாம், தொடர்ந்து — என்னை அனுசரித்து, காப்ப — பிராட்டிக்குக் காவலாகநிற்க, அரக்கிமாரை - ராட்சதிகளைப்பார்த்து, பொதுவிற் சொல்லுமினென்று — நடுநிலையாகச் சொல்லுங்களென்று, ஏயினன் - விடைகொடுத்தவனுகி, போயினன் — போய்விட்டான், அவரெல்லாம் - அந்த ராட்சதிகளெல்லாம், என் மந்திரத்து — எனது மந்திரபலத்தினுலே, உறங்கியிற்றூர் — தூங்கிப்போனூர்கள்—எ-று. தனக்கும் பிராட்டிக்கும் நடுநிலையென்றது மத்தியஸ்தராக என்க. 73

அன்னதோர்பொழுதினங்கையாருயிர்துறப்பதாக
உன்னினள்கொடியொன்றேந்திக்கொம்பொடுமுறைப்பச்சுற்றித்
தன்மணிக்கழுத்திற்சார்த்துமளவையிற்றடுத்துநாயேன்
பொன்னடிவணங்கிநின்றுநின்பெயர்புகன்றபோதில்.

இ-ள். அன்னது — அப்படியாகிய, ஓர்பொழுதில் — ஒருகாலத்திலே, நங்கை — பிராட்டியானவர், ஆர் உயிர் — தமதரியவுயிரை, துறப்பதாக — விடுகிறதாக, உன்னினள் — எண்ணி, கொடியொன்று — ஒருகொடியை, ஏந்தி - கையிலேகொண்டு, கொம்பொடும் — ஒரு மரக்கொம்பிலே, உறைப்ப - அழுத்தமாக, சுற்றி - சூழக்கட்டி, தன்மணி — தனதழகிதான, கழுத்தில் — கழுத்திலே, சார்த்தும் — சேரப்பூட்டுகிற, அளவையில் — சமயத்திலே, நாயேன் தடுத்து — நான்போய்த் தடைசெய்து, பொன்னடி — தேவியது பொன்னடிகளை, வணங்கிநின்று — கும்பிட்டு நின்றுகொண்டு, நின்பெயர் — உமது திருநாமத்தை, புகன்றபோதில் — சொன்ன அளவிலே—எ-று. 74

வஞ்சனையரக்கர்செய்கையிதுவெனமனக்கொண்டேயும்
அஞ்சனவண்ணத்தான்றன்பெயருரைத்தளியையென்பால்
துஞ்சுறுபொழுதிற்றந்தாய்துறக்கலென்றுவந்துசொன்னுள்
மஞ்செனவனமென்கொங்கைவழிகின்றமழைக்கணீராள்.

இ-ள். வஞ்சனை — கபடரான, அரக்கர் - ராட்சதர்களுடைய, செய்கை - மாயாகாரியமே, இதுவென — இவன் சொல்லுகிறதென்று, மனக்கொண்டேயும் - திருவுள்ளத்திலே தெரிந்தும், அஞ்சனம் — மைபோலும், வண்ணத்தான்றன் - நிறமுள்ள ராமபிரானுடைய, பெயர்உரைத்து — திருநாமத்தைச்சொல்லி, என்பால் — என்னிடத்திலே, அளியை — இரங்கத்தக்கநீ,

அஞ்சுறுபொழுதில் — நான்காமளவில், அறக்கல்தந்தாய் " அச்சாதலை விடுதல் செய்தாய், என்று உவந்து - என்று மகிழ்ந்து, சொன்னாள் — சொல்லினாள், மஞ்சென — மலைமேற்பெய்கிற மேகமென்னும்படி, வனம் — அழகுள்ள, மென்கொங்கை — மெல்லியதனங்களிலே, வழிகின்ற — சிந்துகிற, மழை- குளிர்ச்சியுள்ள, கண் — கண்களிலே, நீரான் — ஜலப்பிரவாகமுள்ளவள் -எ-று.

அறிவினிற்றேறிச்சொன்னபேரடையாளம்யாவும்
செறிவுறநோக்கிநாயேன்சிந்தையிற்றிருக்கமின்மை
முறிவரவெண்ணிவண்ணமோதிரங்காட்டக்கண்டாள்
இறுதியினுயிர்தந்தீயுமருந்தொத்ததனையதெந்தாய்.

இ-ள். அறிவினில் — தமது புத்திக்குள்ளே, தேறி — என்னை நம்புதலால், சொன்ன - நான்சொன்ன, பேர் அடையாளம் — பெரிதான அடையாளங்களை, யாவும் — எல்லாம், செறிவுற - தமதுமனத்துக்குப்பொருந்த, நோக்கி - பார்த்து, நாயேன் — நாய்போன்ற எனது, சிந்தையில் — மனத்திலே, திருக்கமின்னம் - தோஷ மில்லாமையை, முறிவு அற — ஒடிதலில்லாமல், எண்ணி — ஆலோசித்து, வண்ணம் — அழகுள்ள, மோதிரம் — மோதிரத்தையும், காட்ட — நான்காணச்செய்ய, கண்டாள் - பார்த்தாள், இறுதியின்- உயிர்போங்காலத்திலே, உயிர்தந்து-உயிரைப்போகாமல் நிலைநிறுத்தி, ஈயும்- ரட்சிப்பதான, மருந்து — அமிழ்தத்தை, ஒத்தது - ஒப்பாயிற்று, அனையது- அந்தமோதிரம், எந்தாய் — என்சுவாமி—எ-று. 76

ஒருகணத்திரண்டுகண்டேனொளிமணியாழியான்ற
திருமுலைத்தடத்துவைத்தாள்வைத்தலுஞ்செல்வநின்பால்
விரகமென்பதனின்வந்தவெங்கொழுந்தீயினால்வெந்
துருகியதுடனேயாறிவலித்ததுகுளிர்ப்புள்ளூற.

இ-ள். ஒருகணத்து — ஒருக்ஷணப்பொழுதிலே, இரண்டு - இரண்டு செய்கையை, கண்டேன் - நான்பார்த்தேன், ஒளி-காந்தியுள்ள, மணியாழி- ரத்நமோதிரத்தை, ஆன்ற — அமைந்துள்ள, திருமுலைத்தடத்து — அழகான முலைமுகட்டின்மேலே, வைத்தாள் — சேர்த்தினாள், வைத்தலும் — சேர்த்தவுடனே, செல்வ — ஓமஹாப்பிரபு, நின்பால் — உமதிடத்துள்ள, விரகமென்பதனின் — ஆசையென்பதனாலே, வந்த — உண்டான, வெம் — வெப்பமுள்ள, கொழும் - செழிய, தீயினால் — நெருப்பினாலே, வெந்து - வேவுதலாகி, உருகியது — அம்மோதிரம் உருகலாயிற்று, உடனே — அப்போதே, ஆறி — அச்சூடுதணிந்து, வலித்தது - கெட்டியாயிற்று, குளிர்ப்பு — சந்தோஷமானகுளிர்ச்சி, உள்ளூற — உள்ளேபெருகுதலால்—எ-று. 77

வாங்கியவாழிதன்னைவஞ்சரூர்வந்ததாமென்
றேங்குயர்மழைக்கணீராலாயிரங்கவசமாட்டி
ஏங்கினளிருந்ததல்லாலியம்பலளெய்த்தமேனி
வீங்கினள்வியந்ததல்லாலிமைத்திலளுயிர்ப்புவிண்டாள்.

இ-ள். வாங்கிய — என்கையிலிருந்துகொண்ட, ஆழிதன்னை — அந்த மோதிரத்தை, வஞ்சரூர் — வஞ்சகரான ஈனர்களுடைய ஊரிலே, வந்தது ஆமென்று — வரலாயிற்றேயென்று, ஆங்கு-அப்போது, உயர் — உயர்ந்துள்ள மிகுந்த, மழைக்கண் — குளிர்ந்தகண்களின், நீரால் — ஜலத்தினாலே, ஆயிரம் — ஆயிரமளவுள்ள, கலசம் — கலசநீரால், ஆட்டி — அதை ஆடச்செய்து, ஏங்கினள் — அழுதாளாகி, இருந்தது — பேசாதிருந்ததை, அல்லால் — அல்லாமல், இயம்பலள் — ஒன்றும்பேசாதவளாகி, எய்த்த — முன் இளைத்திருந்த, மேனி — சரீரமானது, வீங்கினள் — பூரித்தாள், வியந்தது — பின்னும் அதிசயித்திருந்ததை, அல்லால் — அல்லாமல், இமைத்திலள் — கண்சிமிட்டாதவளாய், உயிர்ப்பு — சுவாசமும், விண்டாள் — நீங்கியிருந்தாள்—எ-று. 78

அன்னவர்க்கடியேனெனிற்பிறந்தபினடுத்தவெல்லாம்
சொன்முறையறியச்சொல்லித்தோகைநீயிருந்தசூழல்
இன்னதென்றறிகிலாமேயித்தனைதாழ்த்ததென்றே
மன்னநின்வருத்தப்பாடுமுணர்த்தினெனுயிர்ப்புவந்தாள்.

இ-ள். அன்னவர்க்கு — அப்படியிருந்த ஜகந்மாதாவுக்கு, அடியனேன்-அடியேனானநான், நிற்பிரிந்தபின் — உம்மை அந்தமாதா பிரிந்தபின்பு, அடுத்தஎல்லாம் — நடந்தவைகள் முழுதும், சொன்முறை — நான்சொல்லும் படியே, அறிய — அவர்தெரிந்துகொள்ள, சொல்லி — சொல்லியானபின், தோகை — தாயே, நீயிருந்த சூழல் — நீர் பிரிந்திருக்குமிடம், இன்னதென்று-இவ்விடமென்று, அறிகிலாமே — தெரியாமல், இத்தனை — இவ்வளவுகாலம், தாழ்த்தது — தாமதமாயிற்று, என்றே — என்பதாகவேசொல்லி, மன்ன — ஓ சக்கிரவர்த்தித்திருமகனே, நின்வருத்தப்பாடும் — நீர் வருத்தப்படுகிறதெல்லாம், உணர்த்தினென் — தெரியச்சொன்னேன், உயிர்ப்பு — அப்படிநான் சொல்லக்கேட்டபின்புதான் சுவாசம், வந்தாள் — உண்டாயினாள்—எ-று.

இங்குளதன்மையெல்லாமியைபுளியையக்கேட்டாள்
அங்குளதன்மையெல்லாமடியனுக்கறியச்சொன்னாள்
திங்களொன்றிருப்பெனின்னே திருவுளந்தீர்ந்தபின்னை
மங்குவெனுயிரோடென்றுன்குரைகழற்றலைக்கண்வைத்தாள்.

இ-ள். இங்குள — இங்கேயுண்டான, தன்மையெல்லாம் — செய்கைகளெல்லாம், இயைபுளி — கிரமப்படியே, இயைய — நான்பொருந்தச்சொல்ல, கேட்டாள் — கேள்விகொண்டு, அங்குள — அங்கேயிருக்கிற, தன்மையெல்லாம் — செய்கைகளெல்லாம், அடியனுக்கு — அடியேனுக்கு, அறிய — தெரிவதாக, சொன்னாள் — சொல்லினார், திங்களொன்று — ஒருமாத அளவுதான், இருப்பென் — உயிரோடிருப்பேன், இன்னே — இப்போதே, திருவுள்ளம்-உமக்குத்தயவு, தீர்ந்தபின்னை — என்மேலில்லாதபோது, உயிரொடுமங்குவென — இந்தவுடம்புடனே கரைந்துபோவேன், என்று — என்றுசொல்லி, உன்குரைகழல்-உமது திருவடியைக் குறித்துவணங்கி, தலைக்கண்-தமது தலைமேல், வைத்தாள் — மானசீகமாகக் கொண்டருளினார்—எ-று. 80

வைத்தபின் றுகிலின் வைத்தமாமணிக்கரசைவாங்கிக்
கைத்தலத்தினி தினீர்தாடாமரைக்கண்களார
வித்தககாண்டியென் றுகொடுத்தனன் வேதநன் னூல்
உய்த்துளகாலமெல்லாம்புகழொடுமொக்கநிற்பான்.

இ-ள். வைத்தபின் — அப்படித்தலைமேற்கொண்டபின்பு, துகிலின்-தம துமுன்தானையிலே, வைத்த — முடிந்திருந்த, மா — பெருமையுள்ள, மணிக் கரசை — சூடாமணியை, வாங்கி - அவிழ்த்தெடுத்து, கைத்தலத்து - என்கையி லே, இனிதின் — உமக்குச் சந்தோஷமாக, ஈந்தார் — கொடுத்தருளினூர், தா மரை — தாமரைமலர்போலும், கண்கள் - உம்முடைய நேத்திரங்கள், ஆர- நிரம்ப, வித்தக — ஓ ஞானசுவரூபி, காண்டியென்று — பாருமென்று, கொடு த்தனன் – கொடுத்தாரனுமார், வேத நன்னூல் — நல்ல வேதசாஸ்திரங்கள், உய்த்துள - வழங்குதலான, காலமெல்லாம் — காலதத்துவமுள்ள அளவும், புகழொடும் — ஸ்ரீராமனுடைய கீர்த்தியுடனே, ஒக்க – சேர்ந்தவராக, நிற் பான் — நிலைபெறலானவர்—எ-று. 81

பையையப்பயந்தகாமம்பரிணமித்துயர்ந்துபொங்கி
மெய்யுறவெதும்பியுள்ளமெலிவுறுநிலையைவிட்டான்
ஐயனுக்கங்கிமுன் னரங்கையாற்பற்றுநங்கை
கையெனலாயிற்றன்றேகைபுக்கமணியின் காட்சி.

இ-ள். பையைய — மெள்ளமெள்ள, பயந்த — உண்டான, காமம்-ஆசை யானது, பரிணமித்து — வளர்ந்து, உயர்ந்து — உயர்ச்சியாய், பொங்கி -மேன் மேலாகி, மெய்உற-தேகமுழுதும் அதிகமாக, வெதும்பி - வெப்பங்கொண்டு, உள்ளம் — மனசு, மெலிவுறு — இளைக்கிற, நிலையை — சுவபாவத்தை, விட் டான் — ஸ்ரீராமன் நீங்கினூராகி, ஐயனுக்கு — அந்த ஸ்ரீராமனுக்கு, அங்கி முன்னர் — அக்கினி சாட்சியாக, அங்கையால் — தமதழகியகையினுலே, பற் றும் — பிடித்ததான, நங்கை — சீதாபிராட்டியினுடைய, கையெனல் - கையே யென்று சொல்லுதற்கு, ஆயிற்று — சரியாயிருந்தது, அன்றே — அல்லவோ, அக்கை — அவர்கையிலே, புக்க - புகுதலான, மணியின் — சூடாமணியினது, காட்சி — தோற்றம்—எ-று. 82

பொடித்தனவுரோமம்போந்துபொழிந்தனகண்ணீர்பொங்கித்
துடித்தனமார்புந்தோளுந்தோன்றினவியர்வின்றுள்ளி
மடித்ததுமணிவாயாவிவருவதுபோவதாகித்
தடித்ததுமேனியென்னேயாருளர்தன்மைதேர்வார்.

இ-ள். பொடித்தனஉரோமம் — மயிர் சிலிர்த்தலாயின, போந்து — வழி ந்து, பொழிந்தனகண்ணீர் — கண்களினீரானவை சிந்தலாயின, பொங்கி- பூரித்து, மார்பும் — நெஞ்சும், தோளும் — புஜங்களும், துடித்தன — துள்ளலா யின, வியர்வின் துள்ளி — வேர்வைகளின் றுளிகள், தோன்றின — மிகவும்

தோன்றலாயின, மணிவாய் – அழகிய வாயானது, மடித்தது – தானே மடிப்பதாயிற்று, ஆவி – உயிரானது, வருவது-வெளியேவருகிறதும், போவது-உள்ளேபோகிறதும், ஆகி – உள்ளதாய், மேனி - உடம்பெல்லாம், தடித்தது-விம்முவதாயிற்று, என்னே – இப்படியாகிறது என்ன ஆச்சரியம், தன்மை-அவ்வித சுவபாவங்களை, தேர்வார் - தெரிந்துசொல்லவல்லவர்கள், யாருளர்-யாரிருக்கிறார்கள்—எ-று. 83

ஆயிடைக்கவிகளோடுமங்கதன்முதலினோர்
மேயினர்வணங்கிப்புக்கார்வீரனைக்கவியின்வேந்தைப்
போயினர்கருமமுற்றிப்புகுந்ததோர்பொம்மறன்னால்
சேயிருமதியமென்னத்திகழ்தருமுகத்தரானார்.

இ-ள். ஆயிடை – அப்போது, கவிகளோடும் - வானரவீரர்களுடனே, அங்கதன் – வாலிகுமாரனே, முதலினோர்-முதலான வானரங்கள், மேயினர் - வந்துகூடி, வீரனை – ஸ்ரீராமனையும், வணங்கிப்புக்கார் – வணங்கிக்கொண்டுபோய் பின்பு, கவியின்வேந்தை – சுக்கிரீவனையும், போயின - தாங்கள்போன, கருமம் – காரியம், முற்றிற்று – முடிந்தது, என்பது-என்பதான, ஓர் பொம்மல்தன்னால் – ஒரு சந்தோஷத்தினாலே, சேயிரு – மிகப் பெரியதான, மதியமென்ன – சந்திரன்போல், திகழ்தரு – விளங்குகின்ற, முகத்தரானார் – முகமுள்ளவர்களானார்கள்—எ-று. 84

ஆண்டையினருக்கன்மைந்தனையகேளரிவைநம்பால்
காண்டலுக்கெளியளானாளென்றலுங்காலந்தாழ
ஈண்டினுமிருத்திபோலாமென்றனனென்றலோடும்
தூண்டிரண்டனையதோளான்பொருக்கெனவெழுந்துசொன்னான்.

இ-ள். ஆண்டையின் – அப்போது, அருக்கன்மைந்தன், சுக்கிரீவனானவன், ஐயகேள் – சுவாமி கேட்பீராக, அரிவை – பிராட்டியாரானவர், நம்பால் – நம்மாலே, காண்டலுக்கு – காணுதற்கு, எளியளானாள் – சுலபையாயினார், என்றலும் – என்றுசொன்ன அளவில் ஸ்ரீராமனானவர், காலந்தாழ-காலவிளம்பாக, ஈண்டு – இங்கேதானே, இனும் – இன்னமும், இருத்திபோலாம் – இருக்கிறகாரியம், என்றனன் - என்றுசொன்னார், என்றலோடும்-அவரப்படிச்சொன்ன அளவிலே, தூண் - தூணானது, திரண்டனைய-திரண்டிருப்பதுபோலான, தோளான் – தோள்களையுடைய சுக்கிரீவன், பொருக்கென – திடீரென்று, எழுந்துசொன்னான் – எழுந்திருந்து உத்தரவுபண்ணினான்—எ-று. 85

எழுகவெம்படைகளென்றானேயெனுமளவிலெங்கும்
முழுமுறைசொற்றக்கொற்றவள்ளுவர்முடுகமுந்திப்
பொழிதிரையன்னவேலைபுடைபரந்தென்னப்பொங்கி
வழுவலில்வெள்ளத்தானைதென்றிசைவளர்ந்ததன்றே.

இ-ள். ஏயெனுமளவில் - உம்மெனுமளவிலே, எம்படைகள் — எமது சேனைகள் எல்லாம், எழுக என்ருன் — எழுந்து சொல்லக்கடவதென்று சொன்னுன் அப்போது, கொற்றவள்ளுவர் - வெற்றிவேண்டிப்பறையறைவோர், முந்தி — முன்னே, முடுக — விரைந்துசெல்லுவதாக, முழுமுறை- பூரணமாக வரிசைப்படியே, எங்கும்-எங்குமுலாவி, சொற்ற-பறையறைந்து சொல்ல உடனே, பொழிதிரை — அலைகளை வீசுகிற, அன்னவேலை-அந்தக் கடலானது, புடை — தானிருக்குநிலையைவிட்டு, பரந்தென்ன — வெளியே பரவினுற்போல், பொங்கி - எழுந்து, வழுவல்இல் - தவருதலாகாத, வெள்ளத்தானை — இருபதுவெள்ளஞ்சேனையும், தென்றிசை — தெற்குத்திசையை நோக்கி, வளர்ந்தது - செல்லலாயிற்று—எ-று. 86

வையகமதனின்மாக்கண்மயங்குவர்வயவெஞ்சேனை
எய்திடினென்பதுன்னியிராகவனினிதினேவப்
பெய்கனிகிழங்குதேனென்றினையனபெறுதற்கொத்த
செய்யமால்வரையேயாருச்சென்றனதகைப்பில்சேனை.

இ-ள். வையகமதனின் — உலகத்துள்ள, மாக்கள் - மனிதர்கண்டால், மயங்குவார் — இது யாதென்று திகைப்பார்கள், வயவெம் — வீரமும் வெப்பமுமுள்ள, சேனை — சேனைகள், எய்திடின் — செல்லக்கண்டால் மயங்குவார், என்பது - என்னுமதை, உன்னி — நினைத்து, இராகவன் — ஸ்ரீராமனவர், இனிதின் - சந்தோஷமாக, ஏவ - உத்தரவுசெய்ய, பெய் - ரசம் சிந்துவதான, கனி - கனிகளும், கிழங்கு — கிழங்குகளும், தேன் — தேனும், என்று - என்றுசொல்லுகிற, இனையன — இவைகள், பெறுதற்கு — கிடைப்பதற்கு, ஒத்த - சரியான, செய்ய — செவ்வையுள்ள, மால்வரையே - உயர்ந்த மலைகளே, ஆரு — வழியாக, சென்றன — செல்லலாயின, தகைப்புஇல் - ஒருவராலும் தடுத்தல்கூடாத, சேனை — சேனைகள்—எ-று. 87

வீரரும்விரைவிற்போனுர்விலங்கன்மேலிலங்கைவெய்யோர்
சோர்விலாக்காவற்பாடும்பெருமையுமாணுஞ்சொற்ற
கார்நிறத்தரக்கரென்போர்முதலியகணிப்பிலாத
வார்கழலநுமன்சொல்லவழிநெடிதெளிதிற்போனுர்.

இ-ள். வீரரும் — வானரவீரர்களும், விரைவில்-அதிசீக்கிரத்திலே, போனுர் - சென்ருர்கள், விலங்கன்மேல் — அந்தமலைமேலுள்ள, இலங்கை- இலங்கா புரியிலிருக்கிறகிற, வெய்யோர் — பொல்லாத அரக்கர்கள், சோர்விலா — தளராமல், காவற்பாடும் — காத்துக்கொண்டிருப்பதும், பெருமையும் — அதிகமாயிருப்பதும், அரணும் - மதில்கள் சூழ்ந்திருப்பதும், சொற்ற- முன்சொன்ன, கார் நிறத்து - கரு நிறத்தையுடைய, அரக்கரென்போர்- ராட்சதரென்ன லானவர்கள், முதலிய - முதலாக, கணிப்பிலாத — அளவு செய்யப் படாதவைகளும் எல்லாம், வார் — நீண்ட, கழல்-கால்களையுடைய, அனுமன் — அனுமாரானவர், சொல்ல — தெரியச்சொல்லக்கேட்டுக்கொண்டு,

வழிநெடிது – நெடிதானவழியெல்லாம், எளிதில் – சுலபமாக, போனார் சென்றார்கள்—எ-று.

அந்நெறிநெடிதுசெல்லவரிக்குலத்தரசனோடு
நன்னெறிக்குமரர்போகநயந்துடன்புணர்ந்தசேனை
இந்நெடும்பழுவக்குன்றிற்பகலெலாமிறுத்தபின்னர்
பன்னிருபகலிற்சென்றுதென்றிசைப்பரவைகண்டார்.

இ-ள். அந்நெறி – அந்தமலைவழியே, நெடிது — முழுதும்சேனைக..., செல்ல – செல்லுவதாக, அரிக்குலத்து அரசனோடு-சுக்கிரீவனுடனே, நன்னெறி – நல்லவழியைப்பற்றி, குமரர்-இராமலட்சுமணர்கள், போக - செல்... சுவாமிகாரியத்திலே, நயந்து — விரும்புதலாகி, உடன்-சுக்கிரீவனுடனேகூட... சேனை - சேனைகளெல்லாம், இந்நெடும் – இந்தநெடிதான, பழுவக்குன்றி... சோலைகள் சூழ்ந்த தங்கள்மலைபோல் வழிநடையிலுள்ள பழுவக்குன்றுக... லும் பெய்கனிகிழங்கு தேனென்றினையன பெற்றுநடந்து, பகலெலாம்-... னொருநாளும், இறுத்தபின்னர் – கழிந்தபின்பு, பன்னிருபகலில் — பன்... ரண்டாநாள், தென்றிசைப்பறவை-தெற்குத்திசையிலுள்ளகடலை, சென்... கண்டார் - போய்ச்சேர்ந்தார்கள்—எ-று.

திருவடிதொழுதபடலம் முற்றிற்று

ஆ படலம் – 15 – க்கு திருவிருத்தம் – 1339

சுந்தரகாண்டம் முற்றிற்று

கம்பநாட்டாழ்வார் திருவடிகளேசரணம்

# படல அட்டவணை.